உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# மூன்றாம் திருமுறை



கொட்ட மேகம முங்கொள்ளம் பூதூர்
நட்டம் ஆடிய நம்பனை யுள்கச்
செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
நல்கு மாறருள் நம்பனே.



அற்றன்றி யந்தண் மதுரைத் தொகை யாக்கினானும்
தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்
பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்
பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே.

*உ*

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

திருஞானசம்பந்த சுவாமிகள்

அருளிச்செய்த

தேவாரத் திருப்பதிகங்கள்

# மூன்றாம் திருமுறை

(பண்முறை)


பதிப்பாசிரியர்

**டாக்டர் இராச.வசந்தகுமார்**

வேந்தர்

கற்பகம் பல்கலைக்கழகம்



**பன்னிரு திருமுறை ஆய்வு மையம்**

## கற்பகம் பல்கலைக்கழகம்

ஈச்சநாரி, கோவை - 21

## நூற்குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் வகை | : | **மூன்றாம் திருமுறை** |
| ஆசிரியர் | : | **திருஞானசம்பந்தர்** |
| நூல் வகை | : | செய்யுள் நூல் (பண் முறை) |
| வெளியீடு | : | **பன்னிரு திருமுறை ஆய்வுமையம்**<br>**கற்பகம் பல்கலைக்கழகம்** |
| வெளியீடு எண் | : | **40** |
| முதற்பதிப்பு | : | **2015** ஏப்ரல் |
| பக்கங்கள் | : | 510 |
| தாள் | : | மேப்லித்தோ 80 gsm |
| அளவு | : | கிரவுன் 1/8 |
| அச்சகம் | : | செஞ்சுடர் அச்சகம்<br>கோ.வா.பாளையம்,<br>போத்தனூர், கோவை – 23.<br>செல் : 98431 74238 |




உ

*சிவமயம்*

*திருச்சிற்றம்பலம்*

திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிய

தேவாரத் திருப்பதிகங்கள்

# மூன்றாம் திருமுறை

## வழிபாட்டுக் கருத்தரங்கம்



## பதிப்புரை

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லியமணொடு தேரரை
வாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே
பாதி மாதுட னாய பரமனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே (3.108.1)

மதுரைப் பாண்டிய மன்னனின் பட்டத்தரசியான மங்கையர்க்கரசியார், அமைச்சர் குலச்சிறையார் ஆகியோரின் வேண்டுகோளுக்கிணங்கி திருஞானசம்பந்தர் சைவத்தை நிலைநாட்டுவதற்காகவும், திருநீற்று நெறியைப் பரப்புவதற்காகவும், வேந்தன் கூன்பாண்டியனை நெறிப்படுத்துவதற்காகவும் திருமறைக் காட்டிலிருந்து கோளறுபதிகம் பாடிவிட்டு, திருநாவுக்கரசரிடம் விடைபெற்றுக்கொண்டு, மதுரை ஆலவாய் அண்ணலை அணையவரும்போது ஊர் எல்லையிலேயே கோபுரங்களைப் பார்த்து, அதிகாலை பூபாள இராகத்தில், புறநீர்மைப் பண்ணில் “இதுதான் ஆலவாய்” என்று கீழ்க்காண் பாடலைப் பாடுகிறார்.

மங்கையர்க்கரசி வளவர்கோன்பாவை வரிவளைக் கைம்மட மானி
பங்கயச்செல்வி பாண்டிமாதேவி பணிசெய்து நாடொறும்பரவப்
பொங்கழ லுருவன் பூதநாயகன் நால்வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடுமமர்ந்த ஆலவாயாவதும் இதுவே.

(3.120.1)

பிறகு ஆலவாய் அண்ணலைத் தரிசித்துவிட்டு மதுரை மக்களுக்கு நல்லாசி வழங்கிப் பதிகங்கள் வழங்கி வரும் நன்னாட்களில், சமணர்களோடு வாதுசெய்ய வேண்டிய நிலை ஏற்பட, வாதிற்குச் செல்வதற்கு முன் இறைவனின் திருவுள்ளச் சம்மதம் பெறுவதற்காக, ஆலவாய் அண்ணல் முன்பு நின்று. "வேதவேள்வியை" என்ற பதிகம் பாடுகிறார். இறைவனின் முழு அருளாசி பெற்றிருந்தாலும் எக்காரியத்தைச் செய்வதற்கு முன்னும் நாமும் அவருடைய திருவுள்ளக் கிடக்கை அறியாமல் செய்யக்கூடாது என்பதற்கு முன்னுதாரணமாகத் திருஞானசம்பந்தர் விளங்குகிறார். வேதவேள்வியை என்ற பாடலுடன் பழம்பஞ்சுரப் பண்ணில் தொடங்கும் அப்பதிகம் முழுவதையும் நாலடிமேல் வைப்பு என்ற இலக்கிய வகையில் பாடி நிறைவு செய்கிறார். இவ்வகையான செம்மொழியியலின் பாடல் வகைகளுக்கு இது மூல இலக்கியமாக அமைகிறது. இதற்கு முன் யாரும் செய்யாததைத் தமிழ் மூலம் நிலை நாட்டுகிறார். நாலடிமேல் வைப்பு என்ற இப்பாடலில், பாடலின் வழக்கமான நான்கடிகளுக்கு மேல் மேலும் இரண்டடிகளை இயற்றுகிறார். அவ்வடிகளில் தாம் சொல்ல விரும்பியதை அழுத்தந்திருத்தமாகச் சொல்லுகிறார். பாடல்தோறும் சொல்லுகிறார். பத்துப் பாடல்களிலும் முதல் நான்கடிகள் மாறும். ஆனால் இறுதி இரண்டு அடிகள்

"ஞாலம் நின்புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே" என்றே வரும்.

(அதிகாலை எழுந்தவுடன் இப்பாடலைப் பாடவேண்டும். திருத்தொண்டின் முனைப்பு நெறிக்காக நான் பாடுகிறேன். முடிந்த அளவு அந்தந்த நேரங்களில் அந்தந்த பண்களை நமது பணிகளைச் செய்துகொண்டே பாட முயற்சிக்க வேண்டும் 12.00 மணியளவில் சாதாரி பாடுவேன்).

சொல்லவேண்டிய கருத்தை ஆணித்தரமாகச் சொல்வதற்கு நாலடிமேல் வைப்பு என்ற யாப்பு முறையைக் கையாளுகிறார். மிக மிக முக்கியமான, கடினமான, அரிய செயல்களைச் செய்வதற்கு மட்டும் இந்த நாலடி மேல்வைப்பைப் பயன்படுத்துகிறார்.

இந்த நாலடிமேல்வைப்பை அவர் பயன்படுத்தும் மற்றொரு இடம் திருவாவடுதுறை. தம் தந்தையின் வேள்விக்குப்பொன் வேண்டிய கட்டாயத்தில் இதை நாலடி மேல் வைப்பாக பாடல்தோறும் பாடுகிறார். அந்தப் பாடல்

இடரினும் தளரினும் எனதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்த நஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோ எமை ஆளுமாறு ஈவதொன்றெமக் கில்லையேல்
அதுவோ உனது இன்னருள் ஆவடுதுறை அரனே (3.4.1)

நாலடிமேல் வைப்பு மகுடத்தைப் பாடல்தோறும் ஒரே மகுடமாகப் பாடி நிறைவு செய்கிறார். ஞாலத்தில் அவர் புகழே நிலைக்கவேண்டும். பொன்பொருள் பெற்றேயாக வேண்டும் என்ற சூழல்களில் பாடும்போது ஒரே கருத்து நாலடி மேல் வைப்பு மகுடமாக வருகிறது. சாதாரணமான சூழ்நிலைகளில் பாடும்போது பதிகத்தின் ஒவ்வொரு பாடலிலும், மேல்வைப்பு மகுடம் மாறுகிறது. உதாரணமாக திருப்புகலி (3.3.1) பதிகத்தை எடுத்துக் கொள்ளலாம்.

இயலிசை எனும் பொருளின் திறமாம்
புயலன மிடறுடைப் புண்ணியனே
கயலன வரி நெடுங் கண்ணியொடும்
அயல் உலகடிதொழ அமர்ந்தவனே

கலனாவது வெண்டலை கடிபொழிற் புகலிதன்னுள்
நிலன் நாள்தொறும் இன்புற நிறைமதி அருளினனே

நிர்ப்பந்தம் இல்லாதபோது ஒவ்வொரு பாடலிலும் மேல்வைப்பு மகுடம் மாறுகிறது.

ஓட்டுபவனுமில்லாமல், துடுப்புமில்லாமல் நாவலமாகிய பாடலே ஓடத்தைச் செலுத்திக் கூவிளம்பூதூராகிய கொள்ளம்பூதூர் இறைவனின் ஆசியைப் பெறச் செல்லும்போது "கொட்டமேகமழும் கொள்ளம்பூதூர்" என்ற ஈரடி மேல் வைப்புத் திருப்பதிகத்தைப் பாடுகிறார்.

கொட்டமே கமழுங் கொள்ளம்பூதூர்
நட்டமாடிய நம்பனை யுள்கச்
செல்லவுந்துக சிந்தையார் தொழ
நல்குமாறருள் நம்பனே (3.6.1)

"செல்லவுந்துக" என்ற மேல்வைப்பை பத்துப்பாடல்களிலும் பாடுகிறார். ஓடம் கடந்தாக வேண்டும் இறைவனைத் தரிசித்தாக வேண்டும் என்ற கட்டாயம் உந்துகிறபோது மேல்வைப்பு வருகிறது. எல்லாப் பாடல்களிலும் அதே மகுடமாக வருகிறது.

இன்னொரு ஈரடிவைப்புப் பதிகமான "தக்கன் வேள்வி தகர்த்தவன்" (3.5.1) என்பதில் மேல் வைப்புப்பாடல் மகுடம் பாடல்தொறும் மாறுகிறது. இதிலிருந்து பாடல்தோறும் மாறாமல் வரும் மகுட முக்கியத்துவமான கருத்துக்களை நாம் சிரமேல் கொண்டு திருவருட்பணி ஆற்றவேண்டும் என்ற அரிய செய்தியைப் பெறுகிறோம்.

அப்படிப்பட்ட ஒரு கருத்துத்தான் "ஞாலம் நின்புகழே மிக வேண்டும்". தன் புகழ் மிகுவதற்காகப் பிறந்த நாளையும், 60, 80ஆவது ஆண்டு விழாக்களையும் கொண்டாடக்கூடாது. அவர் புகழைப்பாட எல்லா நலனையும் பெறலாம் என்பதைச் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கீழ்க்கண்ட பாடல் மூலம் நிலை நாட்டுகிறார்.

தம்மையே புகழ்ந்து இச்சை பேசினும் சார்கினும் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மையேதரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம்
அம்மையே சிவலோகம் ஆள்வதற்கு யாதும் ஐயுறவு இல்லையே

ஞாலத்தில் அவர் புகழை நிலைநாட்ட ஒவ்வொரு உயிரும் முயற்சி செய்யவேண்டும். தலையாய கடமையாகக் கொண்டு ஓம்பவேண்டும். எப்படி ஓம்புவது?

| | | |
|---|---|---|
| அறிதல் – அறிவித்தல்; | உணர்தல்–உணர்வித்தல்; | கற்றல்–கற்பித்தல்; |
| ஒழுகுதல்–ஒழுகுவித்தல்; | ஓதுதல்–ஓதுவித்தல்; | ஓம்புதல்–ஓம்புவித்தல் |

பெறற்கரிய மானுடப் பிறவியை நாம் பெற்றிருக்கிறோம் என்பதை அறிய வேண்டும். "யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" என்று அதன் முக்கியத்துவத்தை எல்லோருக்கும் எடுத்தியம்ப வேண்டும். மானுடயாக்கை கிடைத்ததே இறைபணிக்காக என்றுணர்ந்து மற்றவர்களுக்கும் உணர்த்தவேண்டும்.

1. இறைவன் ஒருவன் உளன் என்பதற்கான பிரமாணத்தையும்
2. அம்முதல்வனுக்குண்டான பொதுவும், சிறப்புமாகிய இலக்கணங்களையும்

3. அவனை வழிபட இன்றியமையாத சாதனங்களையும்

4. அவனையுணர்ந்து வழிபடு முறைகளை அறிந்து வழிபடுவோர் அடையும் இன்பங்களையும்

நாம் உணர்ந்து மற்றவர்களுக்கு உணர்த்தினால் "ஞாலம் நின் புகழே மிக வேண்டும்; தென் ஆல வாயில் உறையும் எம் ஆதியே" என்ற திருஞானசம்பந்தர் வாக்கை நிறைவேற்றும் பேற்றைப் பெற்றவர்களாவோம்.

### 1. இறைத்தன்மைப் பிரமாணம் - சிவபரத்துவம்

நமது இல்லங்களிலே மாவு அரைக்கும் இயந்திரம் (வெட் கிரைண்டர்) வைத்துள்ளோம். அந்தக் கல்லைச் சுழற்றுவதற்கு அதன் அளவைப் பொறுத்து அரை எச்பி முதல் 10 எச்பி வரை என்றும் சொல்லப்படுகின்ற மோட்டாரின் சக்தி தேவைப்படுகிறது. ஒரு சிறிய மாவு இயந்திரத்தைச் சுழற்றுவதற்கே இவ்வளவு சக்தி தேவைப்படுகிறது. இந்த பூலோக உருண்டை எவ்வளவு பெரியது? அதன் எடை எவ்வளவு? அதைச் சுழல்விக்க எவ்வளவு பெரிய மோட்டார் வேண்டும்? அதற்கு எவ்வளவு மின்சாரம் வேண்டும்? இந்த பூலோக உருண்டை தன்னைத்தானே சுற்றிக்கொண்டு, சூரியனையும் குறிப்பிட்ட பாதையில் மிகத் துல்லியமாக எப்படிச் சுற்றி வருகிறது? இதை வடிவமைத்து இயக்கிக்கொண்டு இருப்பது யார்? பூமி என்ற ஒரு உருண்டை மட்டுமா பிரபஞ்ச வெளியில் சுற்றிக் கொண்டிருக்கிறது? இது மாதிரி பல உருண்டைகள்

அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந்தன்மை வளப்பருங்காட்சி
ஒன்றனுக்கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேல்பட விரிந்தன

என்பது திருவாசகத்தில் திருவண்டப்பகுதியில் மாணிக்கவாசகர் வாக்கு. எல்லா உருண்டைகளையும், உருட்டி விளையாடிக் கொண்டிருப்பது யார்?

செவ்வாய்க் கிரகத்துக்கும் பூமிக்கும் இடையே உள்ள தூரம் பல மில்லியன் கி.மீட்டர்கள். கடந்த ஆண்டு மங்கள்யான் விண்கலம் 11 மாதங்கள் 1 மணிக்கு 860-900 கி.மீ வேகத்தில் தொடர்ந்து பிரயாணம் செய்து செவ்வாய் மண்டலத்தை அடைந்துள்ளது. அந்த விஞ்ஞானிகளைப் பாராட்ட வேண்டும். அவ்வுலக உயிர்களை நிழல்படம் எடுக்குமளவு ஞானத்தை பூவுலக விஞ்ஞானிகளுக்கு இறைவன் இன்னும் கொடுக்கவில்லை. அந்த விண்கலத்துக்கு டீசல், பெட்ரோல் போன்ற எரிபொருள் கொடுக்க பங்குகள் என்று சொல்லப்படும் எரிபொருள் நிரப்பி நிலையங்கள் விண்வெளியில் இல்லை. சூரியனிடமிருந்து சக்தியைப் பெற்றே செல்லுகின்றன. ஒரு யுனிட் மின்சாரம் ரூ.6-7க்கு வாங்குகிறோம். 710 கோடி மக்களை உள்ளடக்கிய 84 லட்சம் யோனிபேதங்கள் மற்றும் 224 புவனங்களுக்கும் ஒளியையும், எரிசக்தியையும் அளிக்கும் சூரியனின் வாட்டேஜ், எச்பி குதிரை சக்தி எவ்வளவு? அதை வடிவமைத்து நமக்குக் கொடுத்துள்ள சிவப்பரம்பொருளுக்கு எவ்வளவு நன்றி சொல்வது? பணமாகவோ, பொருளாகவோ கொடுத்து நிறைவு செய்ய முடியுமா? தனு, கரண, புவன போகங்களைப் படைத்து அத்தனை கோடி உயிர்களுக்கும் அளித்துள்ளான். ஒரு நெல் மணியின் அளவு எவ்வளவு என்று யோசித்துப் பாருங்கள். ஒரு நெல் கதிரில் அத்தனை மணிகள் ஒரு உயிருக்கு எத்தனை மணிகள் தேவை? அத்தனை கோடி உயிர்களுக்கும் படி அளக்கிறார். இது சாதாரண பணியா? விஞ்ஞானமும் செயற்கைக் கோளும் அவரை அடைய முடியாது. ஆனால் அடியார்களாகிய நம்மால் அடைய முடியும். இறைவனை நினையாமல் எந்தக் காரியமும் செய்ய நினைக்கக்கூடாது. நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டவன். நினைத்துக்கொண்டேயிருந்தால் மனம் கோயிலாகிறது. மனக் கோயிலில் இறைவன் குடியேறுகிறான். நாம் அவ்வளவு மண்டலங்களைக் கடந்து போக வேண்டியதில்லை. அவன் வந்துவிடுவான். உள்ளக் கோயிலில் குடிகொண்ட இறைவனை அன்பு,

பொறையுடைமை, இரக்கமுடைமை, அருளுடைமை, தவம், வாய்மை, கொல்லாமை, அறிவு ஆகிய எண்வகை மலர்களால் அர்ச்சித்துக் கொண்டே அவன் பெருமைகளை மக்களுக்கும் உணர்த்திக் கொண்டேயிருக்க வேண்டும்.

## II. அம்முதல்வனுக்குண்டான பொது, சிறப்பு இலக்கணங்கள்

நம்மால் நேரிழையைக் கலந்திருந்தே புலன்கள் ஐந்தையும் வெல்ல முடியுமா? மங்கையோடிருந்து யோகு செய்ய முடியுமா? அனைத்திலும் கலந்திருப்பது பொது இலக்கணம். அனைத்தையும் கடந்தும் அனைத்துமாக இருப்பது சிறப்பிலக்கணம்.

> வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன் மிக நல்ல வீணை தடவி
> மாசறு திங்கள் கங்கைமுடி மேலணிந்து என் உளமே புகுந்த அதனால்

எனத்தொடங்கும் கோளறு பதிகத்தில் எல்லாப் பாடல்களிலும் முதலிரண்டு அடிகளில் இறைவனின் திருவுருவத்தை வர்ணிக்கிறார். **அப்படிப்பட்ட திருவுருவை என் உள்ளத்திலே நான் வாங்கிக் கொண்டதால் என்னை கோள்கள் அணுகினும் நல்லதையே** செய்யும் என்கிறார். கோளறு பதிகத்தை வெறுமனே உச்சாடனம் செய்து கொண்டிருப்பதைக் காட்டிலும் இறைவனின் திருவுருவை மனதில் வாங்கிக்கொண்டு பாராயணம் செய்தால் பலன் நிச்சயம். திருவுருவை மனதில் வாங்கித் தோத்திரம் செய்வதைத்தான் “தியான சுலோகம்” என்று வடமொழியில் சொல்லுவார்கள். சிவப்பரம்பொருளின் திருவுருவை பாதம் முதல் திருமுடிவரை தியானித்தால் பாதாதிகேசம் என்று சொல்லுவார்கள். இறைவன் ஒருவன் உளன் என்பதற்கு பிரமாணமாக அவன் எப்படிப்பட்டவன் என்பதற்காக இந்த தியான சுலோகத்தைத் தினமும் எத்தனை முறை முடியுமோ, அத்தனை முறை உருவேற்றிக் கொள்ளவேண்டும். கேசாதிபாதமாக அவர் திருமுடியிலே மிகப்பிரம்மாண்டமான செஞ்சடையை வைத்திருக்கிறார். சடை என்றால் அது சாதாரண சடையல்ல. பூலோக கங்கை, ஆகாச கங்கை ஆகிய இரண்டையும் தாங்கிய விரிசடை. சீறும் பாம்பையும் பிறையையும் தாங்கிக் கொண்டிருக்கிறார். பிறை கங்கைச் சடையில் ஓடம் மிதப்பது போலத் தெரிகிறது. கொன்றை, வன்னி, மத்தம். வில்வம் போன்ற பூ, இலை, தழைகளை அணிந்து கொண்டிருக்கிறார். தேளும் வைத்திருப்பதாக ஒரு பாடலில் வருகிறது. நெற்றி நிறைய நீறு. சடைக்கு கீழே நெற்றியில் நெற்றிக்கண். திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளின் நெற்றிக்கண்ணிலிருந்து முருகன் அவதாரம். காமனை எரித்த கண். உலகுக்கு ஒளி கொடுக்கும் கண். சூரியன் சந்திரனாகிய மற்ற இரு கண்கள் அகலவாக்கில் (Horizontal) இருக்கும். நெற்றிக்கண் உயரவாக்கில் (Vertical) இருக்கும். தண்ணொளி என்றும் சொல்லுவர். இடது காதில் தோடு (பெண்ணுரு). வலது காதில் ஆடவர் அணியும் குழை (சங்கால் ஆனவை). கம்பளன், அசுவதன் என்ற இரண்டு கந்தர்வர்கள் அணிகலன்களாய் இரண்டு காதிலும் அமைந்து இசைத்துக்கொண்டே இருப்பார்கள். இக்காலத்து இளைஞர்கள் தங்கள் இரு காதுகளில் அலைபேசி ஒலிப்பெருக்கிகளை சூடிக்கொண்டு இசை கேட்பது சிவபெருமானின் மரபணுத் தாக்கத்தினாலோ என்று யோசிக்க வேண்டியுள்ளது. விடமுண்ட கண்டம், ஆலகால நஞ்சால் கறுத்துப்போன மிடறு. முற்றிய ஆமை ஓடு, இளநாகம், பன்றியின் பற்களால் ஆன மாலை ஆகியவற்றைக் கழுத்தில் அணிந்துள்ளார். கொன்றை மாலையும், உருத்திராக்க மாலையும் அணிந்துள்ளார். மார்பிலே நீறு, யானைத்தோல் போர்த்தியுள்ளார். வலது திருக்கரங்களில் டமருகம், கயிறு, அபயம், மழு, இடது திருக்கரங்களில் நெருப்பு, சூலம், வரதம், மான் வைத்திருப்பார். வலது கரத்தில் பாம்புக் கங்கணம் கட்டியிருப்பார். இடையில் புலித்தோல் அணிந்து அதன் மேலும் ஒரு பாம்பை அணிந்திருப்பார். வலது காலில் கழலும், இடது காலில் சிலம்பும் அணிந்திருப்பார். உமைஅம்மை இடப்பாகம் வீற்றிருப்பார். காளை வாகனத்தில் அமர்ந்திருப்பார் என்று கேசாதிபாத வர்ணனையை முடிந்த போதெல்லாம் நினைத்துக்கொள்ள வேண்டும். மற்றவர்களுக்கும் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும்.

பரம கருணாநிதியாக அவர் நமக்காக எண் குணங்களை உடையவராகச் சித்தரிக்கப்படுகிறார். சிவமாயிருக்கும் அவர் உயிர்கள் மாட்டுக்கொண்ட கருணையால் சத்தியாகிறார். ஆற்றல் உடைமைத் தன்மையரான அவரிடமிருந்து வெளிவரும் ஆற்றல் சத்தியாகிறது. நாமெல்லாம் உய்வதற்காக தனு, கரண, புவன, போகங்களை உருவாக்குகிறார். அவற்றின் இயக்கத்திற்காக பிரம்ம, விட்டுணு, உருத்திரர்களை அனுட்டித்துத் தொழில்படுத்துகிறார். ஐந்தொழில் இயக்கத் தத்துவத்தின் மூலம் அனைத்து அண்டங்களையும் நிர்வகிக்கிறார்.




என்று இவர்களை எல்லாம் பணியில் அமர்த்தியுள்ளார். நமது பூலோகத்தைப் போல ஏராளமான உருண்டைகளை வடிவமைத்துள்ளார். எதை நினைத்தாலும் சங்கற்ப மாத்திரையிலே (நினைத்த அளவிலே) முடிப்பார். அணுவைவிட சிறியதாக – பாக்டீரியாவை விட பலமடங்கு நுண்மையும் அடைவார். சூரியனுக்கும், பூமிக்கும் விஸ்வரூபமாயும் நிற்பார்.

யாரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை
யாரறிவார் இந்த அகலமும் நீளமும்
பேரறியாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறியாமை விளம்புகின்றேனே

**வழிபட இன்றியமையாத சாதனங்கள் – பெறும்பேறு**

சிவனடியார் நிலைக்கு நம்மை உயர்த்திக் கொள்ளவேண்டும். அடியார் என்பர் யார்? மற்ற தெய்வங்களைப் பற்றிச் சிறிதும் நினையாமல் சிவமே பரம்பொருள் என்றுணர்ந்து முழுச் சிவச்சிந்தனைகளுடன் திருநீற்றினை நிறையப் பூசி, உருத்திராக்கமே அணிந்து, எந்நேரமும் திருவைந்தெழுத்தை உச்சரித்துக்கொண்டு சிவனடியார் சேர்க்கையோடு யார் விளங்குகிறார்களோ அவர்கள்தாம் அடியார்கள். பூலோகத்திற்கு நாம் சிவபரம்பொருளினால் குறிப்பிட்ட பணிக்காக அனுப்பப்பட்டுள்ளோம் அதை முறையாகச் செய்து முடிக்காமல் இந்த உயிர் அவரிடம் போனால் முறையான வரவேற்பில்லாமல் மறுபிறப்பு உட்பட பல அவலங்களையும் சந்திக்க நேரிடும். எனவே சிவபூசை உட்படச் சிவப்பணிகளைச் சீரோடும் சிறப்போடும் செய்வதற்குத் திட்டம் வகுத்துக்கொண்டு அதற்காகச் செயல்படவேண்டும். ஞாலத்தில் நம் புகழ் நிலைப்பதைப் பற்றி நினையாமல் அவர் புகழ் நிலைக்கத் தொண்டாற்றுவோம். அவரை அடைவோம். இந்த உணர்வுகளை ஓயாமல் ஊட்டிக் கொண்டிருப்பதற்காகத்தான் சுவாமி திருமுறைகளை நமக்காக நல்கினார். கற்காலத்திலிருந்து இன்றைய அண்டை மொழியாள மானுட வர்க்கம் வரை யாருக்குமே கிடைக்காத பேறு தமிழ்த்திருமுறை அமுதம் மூலம் நமக்குக் கிடைத்துள்ளது. அதையெல்லாம் நாம் பயன்படுத்தி உய்ய வேண்டுமென்று பன்னிரு திருமுறைகளுக்கு இரண்டு மாதத்துக்கு ஒருமுறை ஒரு திருமுறைக்கென்று ஒரு கருத்தரங்கு நடத்தி அந்த நூலை வெளியிடத் திருவருள் கூட்ட, மூன்றாம் திருமுறைக் கருத்தரங்கம் வரும் ஏப்ரல் மாதம் 18, 19 தேதிகளில் நிகழ்ச்சி நிரல்படி நடைபெறும்.

| | | | | |
|---|---|---|---|---|
| முதல் திருமுறை | 136 | 1469 | திருஞானசம்பந்தர் | டிசம்பர் 27, 28, 2014 |
| இரண்டாவது திருமுறை | 122 | 1331 | திருஞானசம்பந்தர் | பிப்ரவரி 21, 22, 2015 |
| மூன்றாம் திருமுறை | 122 | 1368 | திருஞானசம்பந்தர் | ஏப்ரல் 18, 19, 2015 |

இரண்டு மாத இடைவெளியில் சுமார் 1500 பாடல்கள் கொண்ட ஒரு திருமுறையை முறையாகப் படித்து, அச்சுப்பிழை பலமுறை பார்த்து கடின உழைப்பின் பயனாக நூலை வெளியிடும் திருமதி **ப. தமிழரசி**யைத் தலைவியாகக் கொண்டு செயல்படும் தமிழ்த்துறையின் திரு. **இரா. மதன்குமார்**, திருமதி **ச. கவிதா**, திரு. **பு. பிரபுராம்,** திரு. **பூபதி கிருஷ்ணன்** ஆகியோருக்கும், கணினி நிபுணர்களான திரு. **மு. மகேஷ்**, திரு. **சசி** அவர்களுக்கும், நூலைச் சிறப்பாக வெளியிடும் செஞ்சுடர் அச்சகத்தார்க்கும், மனமுவந்த நன்றிகள். அவர்கள் இம்மை, மறுமை இன்பம் பெறுவார்களாக.

மென்னூல் வடிவம் http://www.pannniruthirummurai.org என்ற விலாசத்தில் உள்ளது. அன்பர்கள் படித்தும், படியெடுத்தும், தாங்கள் பெற்ற இன்பத்தை மற்றவர்க்கு எடுத்துரைத்தும் இன்புற அன்புடன் அழைக்கும்,

அன்பன்,

**இராச. வசந்தகுமார்**
வேந்தர்
கற்பகம் பல்கலைக்கழகம்
கோவை – 21

II : II II

## மூன்றாம் திருமுறை - வழிபாட்டுக் கருத்தரங்கு

## மார்ச் 2015 : நிகழ்ச்சி நிரல்

| வ.எண் | நாள்/நேரம் | சொற்பொழிவாளர் | அமர்வு பொருள் |
|---|---|---|---|
| 1. | 18.04.2015 சனிக்கிழமை காலை 9.00 மணி - 11.00 மணி | மகாவித்துவான் மயிலம் **வே.சிவசுப்பிரமணியம்** அவர்கள் | மூன்றாம் திருமுறையில் காந்தார பஞ்சமப் பண்ணில் 18 திருப்பதிகங்கள் |
| 2. | 18.04.2015 சனிக்கிழமை நண்பகல் 11.00 மணி - 01.00 மணி | பேராசிரியர் **ம.வே. பசுபதி** அவர்கள் | மூன்றாம் திருமுறையில் கொல்லிப் பண்ணில் 18 திருப்பதிகங்கள் |
| 3. | 18.04.2015 சனிக்கிழமை பிற்பகல் 02.00 மணி - 4.00 மணி | பேராசிரியர் **புரிசை நடராசன்** அவர்கள் | மூன்றாம் திருமுறையில் கௌசிகப் பண்ணில் 16 பதிகங்கள். கொல்லிகௌவாணத்தில் 1 பதிகம் = 17 திருப்பதிகங்கள் |
| 4. | 18.04.2015 சனிக்கிழமை மாலை 4.00 மணி - 07.00 மணி | முனைவர் **கோ.ப. நல்லசிவம்** அவர்கள் தஞ்சாவூர் | மூன்றாம் திருமுறைப் பண்களான காந்தார பஞ்சமம், கொல்லி, கொல்லிக் கௌவாணம், கௌசிகம், பஞ்சமம், சாதாரி, பழம் பஞ்சுரம், புறநீர்மை, அந்தாளிக்குறிஞ்சி ஆகிய பண்களின் இசை, பக்க வாத்தியங்களுடன் நடைபெறும். |
| 5. | 19.04.2015 ஞாயிற்றுக்கிழமை காலை 9.00 மணி - 11.00 மணி | சைவத்திரு **சிவ. காந்தி** அவர்கள் | மூன்றாம் திருமுறையில் பஞ்சமம்-10, சாதாரிப்பண்கள் - முதல் 8 = 18 திருப்பதிகங்கள் |
| 6. நண்பகல் | 19.04.2015 ஞாயிற்றுக்கிழமை 11.00 - 01.00 மணி | **திரு. சு. குஞ்சிதபாதம்** அவர்கள் | மூன்றாம் திருமுறையில் சாதாரி அடுத்த 18 திருப்பதிகங்கள் |
| 7. | 19.04.2015 ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 02.00 - 04.00 மணி | திரு. **சொ.சொ.மீ. சுந்தரம்** அவர்கள் | மூன்றாம் திருமுறையில் சாதாரி-7, பழம்பஞ்சுரம்-12 = 19 திருப்பதிகங்கள் |
| 8. | 19.04.2015 ஞாயிற்றுக்கிழமை மாலை 04.00 - 06.00 மணி | முது முனைவர் **ந.இரா. சென்னியப்பனார்** அவர்கள் | மூன்றாம் திருமுறையில் பழம்பஞ்சுரம்-5, காந்தாரபஞ்சமம்-6, புறநீர்மை-6, அந்தாளக்குறிஞ்சி-2 = 19 திருப்பதிகங்கள் |

# மூன்றாம் திருமுறைக்கு இதுவரை வெளிவந்துள்ள நூல்கள்

| வ. எண் | ஆண்டு | நூலின் பெயர் | வெளியீட்டாளர் / பதிப்பகத்தார் / அச்சகம் | ஆசிரியர் | கொடையாளர் | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1. | 1864 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | அப்பாவுப்பிள்ளை நமச்சிவாய முதலியார் | திருவாவடுதுறை ஆதீனப் பிரதிகள், தேசிகர்கள் எழுதிய ஓலைச்சுவடிகள் ஆதாரம் |
| 2. | 1866 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | ஏழு திருமுறைகளாகப் பண்முறையில் வெளியிடப்பட்டது |
| 3. | 1876 | மூவர் தேவாரம் (பண்முறை) | திருமயிலை சுப்பராய ஞானியார் குமாரய்யர் அச்சுக்கூடம் | காஞ்சிபுரம் வித்துவான் சபாபதி முதலியார் | மூன்று தனி நூல்கள் | மறுபதிப்பு |
| 4. | 1881 | தலமுறைத் தேவாரம் | மதுரை இராமசாமிப்பிள்ளை, சென்னை புஷ்பரத செட்டியார் அச்சுக்கூடம் | துறைசை ஆதீன அப்பு ஓதுவார் | பனசை காசிவாசி ஸ்ரீமத் இராமலிங்க சாமிகள் | மதுரை, துறைசை ஆதீனப் பிரதிகள் ஒப்பு |
| 5. | 1894 | தலமுறைத் தேவாரம் | திருமயிலை செந்தில்வேல் முதலியார் சென்னை விக்டோரியா ஜுபிலி அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி ஸ்ரீமத் சாமிநாத சாமிகள் | |
| 6. | 1898 | பண்முறைத் தேவார அடங்கல் | சண்முக முதலியார் சென்னை ஆறுமுகவிலாச அச்சுக்கூடம் | வேங்கட நாயுடு | | மூன்றாம் முறை மறுபதிப்பு |
| 7. | 1905 | தலமுறைத் தேவாரம் | சென்னை கலாரத் நாகர அச்சுக்கூடம் | மறுபதிப்பு | திருப்பனந்தாள் காசிவாசி ஸ்ரீமத் சாமிநாத சாமிகள் | |

| 8. | 1906 | பண்முறை தேவார அடங்கல் | எஸ்.பி இராஜாராம், ஸன் ஆப் இந்தியா அச்சகம், சென்னை | திருமயிலை வித்வான் சண்முகம் | | மறுபதிப்பு |
|---|---|---|---|---|---|---|
| 9. | 1907 | தேவாரம் | பங்காளம் அப்புபிள்ளை சென்னை நேஷனல் அச்சுக்கூடம் | | | |
| 10. | 1911 | தலைமுறை மூவர் தேவாரம் | யாழ்ப்பாண வண்ணநகர்ச் சுவாமிநாத பண்டிதர், சென்னை வித்தியா நுட்பாலன அச்சுக்கூடம் | | | |
| 11. | 1917 | பண்முறை தேவார அடங்கல் | நமச்சிவாய முதலியார் நிரஞ்சன விலாஸ் அச்சகம், சென்னை | | | மறுபதிப்பு |
| 12. | 1917 | தேவார வேதசாரம் | சைவ சித்தாந்த மகாசமாஜம் இலங்கை | செந்தில்நாதய்யர், இலங்கை | மங்கையர்க்கரசி ஏகாம்பர முதலியார் | |
| | 1996 மறுபதிப்பு | | கலா சம்ரஷ்ண சங்கம், தஞ்சாவூர் | | மாதுஸ்ரீ பாலம் அம்மையார் | |
| 13. | 1927 | திருஞானசம்பந்தர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 14. | 1929 – 31 | திருஞானசம்பந்தர் தேவாரம் பண்முறை | சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | கயப்பாக்கம் சதாசிவ செட்டியார் | | |
| 15. | 1931 | திருஞானசம்பந்தர் மூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகங்கள் 1,2,3 திருமுறைகள் | சைவ சித்தாந்த மகாசமாஜம் இலங்கை | | நூல் | முதல் பதிப்பு |
| 16. | 1953 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் பதிப்பு | - | - | - |

| 17. | 1955 | திருஞானசம்பந்தர் 3ஆம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம் தருமபுரம் | ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் பதிப்பாசிரியர் மூலமும் முழு உரையும் | தருமையாதீனம் 25வது குருமகா சந்நிதானம் | திரு. பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை, தமிழாசிரியர், ஆதீனத் தேவார பாடசாலை, தருமபுரம் குறிப்புரை ஆசிரியர் |
|---|---|---|---|---|---|---|
| 18. | 1961 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 19. | 1968 | மூவர்தேவாரம் (தலமுறை) | திருப்பனந்தாள் காசித்திருமடம் | மூலப் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 20. | 1971 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | இரண்டாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 21. | 1972 | பன்னிரு திருமுறை வரலாறு (இரண்டு தொகுதிகள்) | அண்ணாமலைப் பல்கலைக்கழகம் (காசித் திருமட நிதிய வெளியீடு) | வித்துவான் க. வெள்ளை வாரணர் | | 2412 பக்கங்கள் கொண்ட பெரிய வரலாற்று நூல் |
| 22. | 1979, 82, 92, 96 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 3, 4, 5, 6 ஆம் பதிப்புகள் | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 23. | 1997 | மறுபதிப்பு திருஞான சம்பந்தர் மூன்றாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிகம் - காந்தளகம் மயிலாடுதுறை, சென்னை | தண்டபாணி தேசிகர் குருசாமி தேசிகர் | தருமையாதீனம் 26வது குருமகா சந்நிதானம் | மறுபதிப்பு (மூலம் 1955) மூலமும் முழு உரையும் |
| 24. | 1998 | தேவாரம் அடங்கன் முறை | மயிலைக்கிழார் இளமுருகனார் மறுபதிப்பு | | | |
| 25. | 2001 | திருஞானசம்பந்தர் தேவாரம் வரலாற்று முறை | சிவகாசி சிவனடியார் அறக்கட்டளை | பதிப்பாசிரியர் கு. சுந்தரமூர்த்தி | | |
| 26. | - | தேவாரம் மூன்று தொகுதிகள் | பிரெஞ்சு நிறுவனம் | கல்விக்கடல் கோபாலய்யர் | | |
| 27. | 2001 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | ஏழாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 28. | 2003 | திருஞானசம்பந்தர் தேவாரம் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | வ.த. இராம சுப்பிரமணியம் | அருட்செல்வர் மகாலிங்கம் | ஐந்தாம் பதிப்பு மூலமும், தெளிவுரையும் 12 திருமுறைகள் |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 29. | 2004, 2006 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | 8, 9 ஆம் பதிப்புகள் | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | ஒவ்வொரு பதிப்பிலும் 3000 படிகள் மூலம் மட்டும் |
| 30. | 2007 | திருஞானசம்பந்தர் சுவாமிகள் திருக்கடைக்காப்பு | கைலாஷ் அச்சகம் | | | மூலம் மட்டும் 2500 படிகள் 1,2,3 திருமுறைகள் தலமுறை |
| 31. | 2007, 2012 மறுபதிப்பு | பன்னிரு திருமுறை | மெய்யப்பனார் மணிவாசகர் அச்சகம் / பதிப்பகம் வெளியீடு | பதிப்பு ஆசிரியர் முனைவர் ச.வே. சுப்பிரமணியம் தமிழூர் | | மூலம் மட்டும் |
| 32. | 2008 | திருஞானசம்பந்தர் தேவாரம் | திருப்பனந்தாள் காசித்திருமடம் | பத்தாம் பதிப்பு | பன்னிரு திருமுறைப் பதிப்புநிதி | 3000 படிகள் மூலம் மட்டும் |
| 33. | 2008 | பன்னிரு திருமுறை | சதுராபதிப்பகம் | தொகுப்பாசிரியர் சதுரா J.C. முரளி | | மூலமும், உரையும் ஒன்று முதல் ஆறு திருமுறை வரை |
| 34. | 2008 | மூவர் தேவாரம் | சதுராபதிப்பகம் | பதிப்பாசிரியர் சதுரா. ஜி.ச. முரளி | | 7 திருமுறைகள் மூலம் மட்டும் |
| 35. | 2010 | பன்னிரு திருமுறைகள் | வர்த்தமானன் பதிப்பக வெளியீடு | உரைஆசிரியர் வ.த. இராம சுப்பிரமணியம் | அருட் செல்வர் மகாலிங்கம் | மூலமும், உரையும் |
| 36. | 2011 | மூன்றாம் பதிப்பு திருஞானசம்பந்தர் மூன்றாம் திருமுறை | ஞானசம்பந்தம் பதிப்பகம். முதலிரண்டு பதிப்புகள் 1955, 1997 | | | மூலமும், உரையும் |
| 37. | 2015 | 3ஆம் திருமுறை திருஞானசம்பந்தர் தேவாரம் | கற்பகம் பல்கலைக்கழகம் | பன்னிரு திருமுறை ஆய்வு மையம் | கற்பகம் அறக்கட்டளை | மூலமும், உரையும் |

- ✶ திருப்பனந்தாள் காசித் திருமடம் பத்துப் பதிப்புகளாக 30,000 படிகளை மூலமாக அடக்க விலையில் வெளியிட்டுப் பெரும்பணி செய்துள்ளார்கள்.
- ✶ வர்த்தமானன் பதிப்பகத்தார் சுருக்கமான உரையுடன் மூலத்தை ஏழு பதிப்புகளாகப் பல தொகுதிகளாக 12 திருமுறைகளையும் அருட்செல்வர் மகாலிங்கம் அருட்கொடையுடன் வெளியிட்டுத் திருமுறைகளுக்குச் சிறப்புச் செய்துள்ளார்கள்.
- ✶ இதுவரை வெளிவந்துள்ள உரைகளிலேயே மிக விரிவானது, விளக்கமானது 1955, 1997, 2011 ஆண்டுகளில் வெளிவந்த தருமையாதீன உரைதான். குருமகா சந்நிதானம் அவர்கள் தண்டபாணி தேசிகர், குருசாமி தேசிகர் போன்ற உரையாசிரியர்களைக் கொண்டு வெளியிட்டருளினார்கள். அவற்றின் மறுபதிப்பு காந்தளகம் அச்சகத்தின் மூலம் வெளியிட்டுள்ளார்கள்.
- ✶ நமது மூன்றாம் திருமுறை நூலை வெளியிட மேற்காண் நூல்களின் தொகுப்புகள் மிக உதவியாக இருந்தன. அனைத்து குரு மகா சந்நிதானங்களுக்கும், நூல் வெளியீட்டாளர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அப்பதிப்புகளின் கொடையாளர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகள்.



# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

## அருள் வரலாறு

திருஞானசம்பந்தர் பனிரெண்டு பெயர் கொண்ட சீகாழியில் சிவபாதவிருதயர்க்கும் பகவதிக்கும் கௌணிய கோத்திர சிகாமணியாய்த் தோன்றியவர். மூன்றாவது வயதில், திருக்குளக்கரையில், திருத்தோணியப்பர் அம்மையுடன் எழுந்தருளி நல்கிய ஞானப்பால் உண்டதால் திருஞானசம்பந்தர் ஆனார். "தோடுடைய செவியன்" எனத் தொடங்கிய திருப்பதிகம் பாடிச் சுட்டுதற்கு எட்டாத கடவுளைச் சுட்டிக் காட்டினார். திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்றார். 22 பண்களில், 385 பதிகங்களில், 4169 பாடல்களில் 220 தலங்களை அடைந்து தரிசித்துப் பாடியுள்ளார். திருநீலகண்டப்பெரும்பாணர்க்குத் தம் அருட்பாக்களை யாழில் அமைத்து இசைக்கும் வரங்கொடுத்தவர். திருநெல்வாயில் அரத்துறையில் முத்துப்பல்லக்கு, முத்துக்குடை, முத்துச்சின்னங்கள் பெற்றார். உபநயனம் புரியுங்கால், ஓதியுணர்ந்த அந்தணர்க்கு ஓதாதுணர்ந்த நம் பெருமானார் ஐயம்திரிபகற்றி, ஐந்தெழுத்தின் பெருமையெல்லாம் உபதேசித்தருளினார். தன்னைத் தமிழன், தமிழாகரன், தமிழ் விரகன் என்று சொல்லிக் கொள்ளுவதைப் பெரும் பேறென நினைத்தவர்.

திருநாவுக்கரசரொடு கூடியிருந்தார். அவர்க்கு அப்பர் என்ற திருப்பெயர் உண்டானது, இவர் அழைத்ததால் தான். திருப்பாச்சிலாச்சிரமத்தில் கொல்லிமழவன் புதல்வியைப் பற்றிய முயலகன் என்னும் நோயை நீக்கினார். திருக்கொடிமாடச்செங்குன்றூரில் நச்சுக்காய்ச்சலைத் தவிர்த்து அடியாரைக்காத்தார். திருப்பட்டீச்சரத்தில் முத்துப் பந்தரைப் பெற்றார். திருவாவடுதுறையில் உலவாக்கிழியாக ஆயிரம் பொன் பெற்று தந்தைக்கு வேள்வி செய்ய அளித்தார். திருத்தருமபுரத்தில் யாழ்மூரிப் பதிகம் பாடி, அருட்பாடல் கருவியில் அடங்காத சிறப்பைப் புலப்படுத்தினார். சொல்லணியியலுக்கு இயமகம், மேல்வைப்பு, எழுகூற்றிருக்கை, கூடற்சதுக்கம், வழிமொழித்திருவிராகம் என்று பல மூல இலக்கியங்களை அருளியுள்ளார்.

திருமருகலில், பாம்புக்கடித்திறந்த வணிகனை உயிர்த்தெழச்செய்து, பெருவாழ்வுநல்கி, அவனையே நம்பியிருந்த திக்கில்லாதவளுக்குத் தெய்வத்துணையானார். திருச்செங்காட்டங்குடியையும், திருப்புகலூரையும் தரிசித்தார். சிறுத்தொண்டர், முருகர் முதலிய நாயனாரைச் சிறப்பித்துப் பாடினார். அங்கும் அப்பரைக் கூடினார். திருவாரூரில் திருவாதிரை சிறப்புரைத்தார். திருவீழிமிழலையில் படிக்காசு பெற்றுப் பஞ்சத்தை ஒழித்தார். திருமறைக்காட்டில் அப்பருடன் கூட, பாடித் திருக்கதவைத் திறந்து மூடுஞ் சீருடையதாக்கினார். கோளறு பதிகம் பாடினார். இயற்கை வளங்களை அப்படி வர்ணித்துள்ளார்.

திருமதுரையில் சென்று, மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும் சிறப்பித்தார். அரசன் வெப்பு நீங்கித் தப்பும்படி திருநீற்றுப் பதிகத்தை அருளினார். அங்கு, தம் மடத்தில் இட்ட தீயை அரசனுக்கு வெப்புநோயாக்கினார். தீயில் இட்ட ஏட்டைப் பச்சையாக்கிக் காட்டினார். நீரிலிட்ட ஏடு எதிரேறிச் செல்லும்பாட்டினார் ஆனார். "**வேந்தனும் ஓங்குக**" என்று வாழ்த்திப் பாண்டியன் கூன் நிமிரச் செய்தார். பாண்டிநாடு, புறச்சமய

இருளின் நீங்கித் திருநீற்றொளியொடு விளங்கித் திருநெறியில் ஒழுகிற்று. அவர்தம் அவதார நோக்கம் நிறைவுற்றது.



கொள்ளம்பூதூரில் ஓடம்போக்கினார். போதிமங்கையில் எதிர்த்த புத்தநந்தியின் தலைமேல் இடிவிழ வைத்த நந்தியாயினார். சிவிகையைத் தாங்கிய அப்பரைப்போற்றிச் சின்னாள் திருப்பூந்துருத்தியில் இருந்தார். ஒருவரையொருவர் உசாவிப் பாண்டிநாடு தொண்டைநாடுகளின் தரிசன விசேடங்களை அறிந்தனர். திருவோத்தூரில் ஆண் பனைகளைப் பெண் பனைகளாக்கினார். திருமயிலாப்பூரில், தமக்கென்றிருந்து பாம்பு கடித்திறந்த பூம்பாவையின் எலும்பைக்கொண்டு, திருப்பதிகம் பாடி, உயிருடைய உருவமாக்கியருளினார். வீட்டையும் காட்டினார். திருநல்லூர்ப்பெருமணத்தில் நம்பாண்டார்நம்பிகள் திருமகளை மணம்புரியுங்கால், இவளொடும் சிவனடி சேர்வன் என்று திருக்கோயிலை உற்றுத் திருப்பதிகம் பாடினார். திருமணம் காணவந்தார எல்லாரும் அருள்மணம் புரிந்து அழியா இன்பம் அடைகின்றனர். காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பாடிய திருவைந்தெழுத்தின் பெருமையே எல்லா நலங்களுக்கும் காரணம். நமச்சிவாய வாழ்க.

திருஞானசம்பந்தர் திருவடி வாழ்க.

# வித்துவான் க. வெள்ளைவாரணர் ஆக்கிய பன்னிருதிருமுறை வரலாற்று நூலிலிருந்து தேர்வு செய்யப்பட்ட கட்டுரை

## ஆளுடைய பிள்ளையார் பதிகப்பெருவழி

(திருஞானசம்பந்தரின் எல்லாப் பதிகங்களிலும் 8 ஆவது திருப்பாட்டு இராவணனைப் பற்றியும்,
ஒன்பதாவது திருப்பாட்டு பிரமன், மால் பற்றியும்,
பத்தாவது பாட்டு சமண, புத்தர் பற்றியும் வருவதற்கான காரணம்)

(இது ஒரு சாதாரண செய்தியே அல்ல. மிகமிக அரிய செய்தி. மூன்றாவது வயதில் ஞானப்பால் அருந்தியவுடன் பாடிய முதல் பதிகமான தோடுடைய செவியனிலேயே 8, 9, 10, 11 பாடல்கள் பாடப்பட்டுவிட்டன. நிறைவுப் பதிகமான நல்லூர்ப் பெருமணம் வரை பயணம் இதே பாதையில் தொடர்கிறது. இது திருஞானசம்பந்தர் கருத்தா? எனதுரை தனதுரையாக என்று இலம்பையங்கோட்டூர் தேவாரத்தில் திருஞானசம்பந்தர் பதிவு செய்தபின் நமக்கெதற்கு வேறு ஐயப்பாடு? நூறு விழுக்காடு இது சிவபெருமான் கட்டளை. இப்படித்தான் பாடவேண்டும். உய்வதற்கான வழி இதுதான் என்று ஞானப்பால் மூலம் சொல்லிவிட்டார். நாமும் ஓதி உணர்வோமாக!!)

அருளின் நீர்மைத் திருத்தொண்டினை நன்குணர்ந்த சிவஞானச் செம்மலராகிய ஆளுடைய பிள்ளையார், தாம் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களில் இறைவனுடைய திருவருட்டிறங்களாகக் குறிக்கத் தக்கவற்றுள் மூன்று கருத்துக்களைச் சிறப்பாகத் தெரிந்தெடுத்து அம்மூன்றினையும் தாம் பாடிய திருப்பதிகங்கள் தோறும் தவறாது விரித்துரைத்தலைக் கடமையாகக் கொண்டுள்ளார்.

ஒவ்வொரு பதிகத்திலும் ஒன்று முதல் ஏழு வரையுள்ள திருப்பாடல்கள், அவ்வப் பதிகத்திற்குரிய திருத்தலங்களின் இயற்கை வனப்பினையும், அங்கே கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவன் வானோர்க்கும் அரியனாய் விளங்கும் அருமையினையும், தன்னடியார்களுக்கு எளிவந்தருளும் எளிமைத் திறமாகிய பெருமையினையும், உலகெலாம் படைத்தளித்தழிக்கும் வரம்பிலாற்றலுடமை முதலிய திருவருட் பண்புகளையும், அவ்வத்தலங்களிலிருந்து இறைவனை வழிபட்டு செய்து மகிழும் அடியார்களது திருத்தொண்டின் திறத்தையும் விரித்துரைக்கும் முறையில் அமைந்துள்ளன.

தென்னிலங்கை வேந்தனாய இராவணன், முன் அறியாமையினாற் கயிலாய மலையினை எடுக்க முயன்று, அம்மலையின் கீழ் அகப்பட்டுத் தலைகளும், தோள்களும் நசுங்கி, அங்கிருந்தும் மீளமுடியாது, அல்லலுழப்பவன் தன் தவறுணர்ந்து, அதனைப் பொறுத்தருளும்படி இறைவனை வேண்டி இசைப் பாடல்களால் பாடித் துதிக்கச் சிவபெருமான், அவனுக்கு அருள்புரிந்த ஆக்கப்பாட்டினை அறிவுறுத்துவது எட்டாந் திருப்பாடலாகும். படைத்தற் கடவுளாகிய நான்முகனும், காத்தற் கடவுளாகிய திருமாலும், தாம் தாம் பெரியர் எனத் தம்முள் மாறுகொண்டு அன்னமாகியும், ஏனமாகியும் இறைவனது முடியும் அடியும் தேட முயன்று பெரிதும் அல்லற்பட்டுக் காணமுடியாது, பின் இறைவனது திருவருளால் திருவைந்தெழுத்தோதியுய்ந்த செய்தியை உணர்த்துவது ஒன்பதாந் திருப்பாட்டு, வேதநெறியாம் சைவநெறிகளைப் பழித்துரைக்கும் புறச்சமயத்தார்களாகிய சமணர், புத்தர் ஆகியோர், 'தெய்வம் உண்டு' என்னும் தெளிவான ஞானமில்லாதவராதலின், அன்னோர் கொண்ட நெறிகள் அவர்க்கும் பிறர்க்கும் பயன்படாது பழிவிளைக்குங் குற்றமுடையனவே என்பதனை எடுத்துரைப்பது பத்தாந் திருப்பாடலாகும்.

இங்ஙனம் ஒவ்வொரு திருப்பதிகத்தினையும் பத்துப் பத்துப் பாடல்களால் நிறைவித்த ஆளுடைய பிள்ளையார், அத்திருப்பதிகங்களைப் பத்தியுடன் பயின்று பாடும் உலகமக்கள் அடையும் நற்பயன்களை விளக்கும் முறையில், பதிகத்தின் கடைசித் திருப்பாடலாகப் பதினோராம் பாடலை அமைத்துள்ளார். இவ்வாறு பதிகந்தோறும் அவ்வப்பதிகப் பயன்கூறும் முறையிற் பாடியருளிய திருப்பாடலைத் "திருக்கடைக்காப்பு" என்ற பெயராற் சேக்கிழாரடிகள் குறித்துள்ளார். பதிகங்களின் இறுதியிலுள்ள திருக்கடைக்காப்புச் செய்யுட்கள் அவ்வப் பதிகங்களைப் பாடுவோராய அன்பர்களுக்குச் சிறிதும் இடர்நேராமற் காக்கும் அருள் நோக்கத்துடன் திருஞானசம்பந்தரால் அருளிச் செய்யப்பெற்ற திருவுடைய செழும்பாடல்களாதலின் திருக்கடைக்காப்பு என வழங்கப்பெறுவனவாயின.

### எட்டாந்திருப்பாடல் (இராவணன் பாட்டு)

இலங்கையர் மன்னனாகிய இராவணன் அளகை வேந்தனாகிய குபேரனை வென்று, அவனிடமிருந்து பெற்ற புட்பக விமானத்தில் அமர்ந்து வான்வழியே செல்பவன், தனது போக்குக்குத் தடைவிளைக்கும் முறையில் திருக்கயிலாயமலை குறுக்கிட்டு நின்றதனைக் கண்டு வெகுண்டு, அதனைப் பெயர்த்தெடுக்கத் தலைப்பட்டான். ஆற்றல்மிக்க அரக்கனாகிய அவன் சிவபெருமானை வழிபடும் திறமுடையவனாக இருந்தும் ஆன்மாவுக்கு இயல்பாக அமைத்த ஆணவ மலத்தின் விளைவாக அவன் மனத்தே செருக்கு மேலிட்டதனால், இறைவன் வீற்றிருக்கும் சிறப்புடைய திருமலை திருக்கயிலாயம் என்பதனைக் கருத்திற்கொள்ளாது, ஏனைய மலைகளைப் போல் அதனையும் எளிதாக எண்ணி இகழ்ந்து அதனைத் தூக்க முயன்றான். அவனது முயற்சி தவறானது, தீமை விளைவிப்பது என்பதனையுணர்ந்த தேர்ப்பாகன், கடவுள் வீற்றிருக்கும் திருமலையாகிய கயிலையைப் பெயர்த்தெடுத்தல் அடாத செயல் என இராவணனுக்கு எடுத்துக்காட்டியும், அவன் அச்சொல்லை மதியாமல் இகழ்ந்து கூறி வெகுண்டு தருக்கினால் கயிலாயத்தைப் பெயர்த்தெடுக்கிறான். அந்நிலையில் அருளாளனாகிய இறைவன், அரக்கனது தருக்கினை ஒழிக்கத் திருவுளங்கொண்டு தனது திருவடிப் பெருவிரலொன்றினால் அம்மலையின் மீது ஊன்றியமுத்தினான். மலையும் அழுந்தியது. அப்பொழுது இருபது கைகளாலும் கயிலாயத்தைப் பெயர்த்தெடுத்த இராவணன், தன்னுடைய பத்துத் தலைகளும் மலையிடையிற் சிக்கி, அழுந்த வருத்தமுற்று ஆற்றாது அழுதான். பின் சிறிது தெளிவுபெற்றுத் தன், தலைகளுள் ஒன்றை வெட்டியெடுத்துப் பத்தராக அமைத்து, முன்கை நரம்பினை அம்பாகக் கட்டி, வீணை யென்னும் இசைக்கருவியினை அமைத்துக் கொண்டு சாமவேதமாகிய இசைப்பாடல்களைப் பாடி இறைவனைப் போற்றினான். அரக்கனது இசைத் திருத்தொண்டுக்குத் திருவுளமிரங்கிய அருளாளனாகிய சிவபெருமான், அரக்கனாகிய அவனுக்கு தனது பிழை நினைத்து அழுதரற்றியவன் என்ற பொருள்பட "இராவணன்" என்ற பெயரையும், போரில் வெற்றியளிக்கும் கொற்றவாள் ஒன்றையும், முக்கோடி வாழ்நாளையும் யாண்டும் விரைந்து செல்லும் சிறந்த தேரொன்றையும் கொடுத்தருளினார் என்பது புராண வரலாறு. இச்செய்திகள் ஆளுடையபிள்ளையார் அருளிய திருப்பதிகங்களில் எட்டாந் திருப்பாடலில் விரித்துரைக்கப் பெற்றுள்ளன.

இராவணனைப் பற்றிய இச்செய்தியினைப் பதிகந்தோறும் எடுத்துரைப்பதன் நோக்கமாவது, சிலவாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராக இவ்வுலகில் வாழும் மக்கள், தமது அறியாமையால், பல குற்றங்களைச் செய்தல் இயல்பு. இவ்வாறு அறியாமை காரணமாகப் பல குற்றங்களைச் செய்தாலும். அப்பிழையினால் இடர்ப்பட்டு வருந்தும் துன்பகாலத்தே தாம் முன்செய்த பிழையினை யெண்ணி மனம்வருந்தித் தம் பிழைகளைப் பொருத்தருள்க என இறைவனைப் பணிந்து குறையிரந்து வேண்டுவாராயின், கண்ணுதலானாகிய இறைவனது பெருங்கருணை அவர்களைத் துன்பக் கடலிலிருந்தெடுத்துக் காப்பாற்றுதல் உறுதி. சிலவாழ்நாட் பல்பணிச் சிற்றறிவினராய மக்கள் செய்த குற்றங்களைப் பொறுத்தருளும் இறைவனது திருவருட் பெருமையினை உலகத்தார்க்கு எடுத்துரைக்கும் நோக்கத்தினாலேயே ஞானசம்பந்தர் இராவணனைப் பற்றிய பதிகந்தோறும்

எட்டாவது திருப்பாடலில் தவறாது குறித்தருள்கின்றார். இந்நுட்பத்தினை

> "மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற்
> கண்ணுதலான் பெருங்கருணை கைக்கொள்ளும் எனக்காட்ட
> எண்ணமிலா வல்லரக்கன் எடுத்துமுறித் திசைபாட
> அண்ணலவற் கருள்புரிந்த ஆக்கப்பாடருள் செய்தார்"  1975

எனவரும் பாடலில் சேக்கிழாரடிகள் தெளிவாக விளக்கியுள்ளமை காணலாம்.

தவறுகள் செய்யும் உயிர்கள் இறைவனை அணுகினால் அவன் அருள் கிட்டும். சிவபூசை செய்து தவ வலிமை பெறுபவர்கள் எக்காலத்தும் திருவருளை மறந்து விநாடியேனும் ஆணவம் கொள்ளக்கூடாது. மறந்தும் பிறன் கேடு நினையாமல் சிவாலய வழிபாட்டையும், சிவபூசையையும் தொடர்ந்து முதல்வன் அவனே என்று செய்து கொண்டிருக்க வேண்டும். பாதை கடுகளவு விலகினாலும் மல வாசனையும் மற்றவையும் வந்துவிடும்.

### ஒன்பதாந் திருப்பாடல் (மாலயன் அடிமுடி தேடிய பாட்டு)

குறையுணர்வாகிய பசுஞானத்தாலும், பாச ஞானத்தாலும் ஞானமேயுருவாகிய இறைவனியல்பினை உயிர்கள் உணர்தல் இயலாது. முற்றறிவினனாகிய முதல்வனை உள்ளவாறு கண்டு வழிபட விரும்புவோர், அவனது திருவடி ஞானத்தால், தன்னறிவிலே ஆராய்ந்து தெளிதற்குரியர். யாண்டும் நீக்கமறக் கலந்து விளங்கும் இறைவனை, அவனருளே கண்ணாகக் கொண்டு காணுமிடத்து, ஆன்மா பாசப் பிணிப்பினின்றும் நீங்கித் தூய்மை பெறும். இங்ஙனம் உயிர்தூய்மை பெற்ற நிலையிற் பெறத்தக்க கடவுட்காட்சி உள்ளத்தே நீங்காது நிலைபெறுதல்பொருட்டுத் திருவைந்தெழுத்தை விதிப்படி எண்ணுதல்வேண்டும். இவ்வாறு வழிபடும் நெறியுணர்ந்து வழிபடுவோர்க்கே சிவபெருமான் எளிவந்து அருள்புரிவன் என நூல்கள் கூறும். இவ்வுண்மையினை யுணர்ந்து இறைவனைத் தொழுது நலம்பெற முயலாது, பிரமன் நான் என்ற கல்விச் செருக்குடனும், திருமால் எனது என்ற செல்வச் செருக்குடனும், தாமே தலைவர் என்னும் முனைப்புடன் தம்முள் இகலிப் பன்றியுருவும் அன்னத்தின் உருவும் கொண்டு முறையே மண்ணினை அகழ்ந்து உள்புக்கும் விண்ணின் மேற் பறந்துசென்றும் இறைவனுடைய அடியும் முடியும் தேடிக் காணப்புக்குக் காணமாட்டாது அல்லற்பட்டு அயர்ந்து விழுந்தனர். அங்ஙனம் விழும் அவர்கள் ஈசனருள் கூடுதலால் உள்ளத்தே தெளிவு பெற்றுத் திருவைந்தெழுத்தினையோதி இறைவனருள் பெற்றுய்ந்தனர். இச்செய்தியினைப் பிள்ளையார் ஒவ்வொரு பதிகத்திலும் ஒன்பதாந் திருப்பாடலில் விரித்துரைத்துள்ளார். ஒன்பதாம் பாடலிலமைந்த இப்பொருட் குறிப்பினை,

> "தொழுவார்க்கே யருளுவது சிவபெருமான் எனத்தொழார்
> வழுவான மனத்தாலே மாலாய மாலயனும்
> இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாய் எய்தாமை
> விழுவார்கள் அஞ்செழுத்துந் துதித்துய்ந்தபடி விரித்தார்"  1976

எனவரும் செய்யுளில் அருண்மொழித்தேவர் குறித்துள்ளார். அகங்காரத்தால் இறைவனைக் காண முடியாது. பணிந்து தொழுதால்தான் அருள்கிட்டும் என்பதை ஒவ்வொரு பதிகத்தின் ஒன்பதாம் பாட்டின் செய்தியாக திருஞானசம்பந்தர் நமக்குத் தெரிவிக்கிறார்.

### பத்தாம் திருப்பாடல் (சாக்கியச் சமண்பாட்டு)

ஐம்பொறி வழியாகச் செல்லும் ஐந்து அவாவையும் அடக்கியாளும் உள்ளத்திண்மை, பொறிவாயில் ஐந்தவித்தானாகிய இறைவன் அருளிய ஒழுக்கநெறியினைக் கடைபிடித்தொழுகுவார்க்கே எளிதில் வாய்க்கும்.

இதனையுணர்ந்து இறைவன் திருவருளைச் சிந்தித்து அதன்வழி யடங்கியொழுகுதலே அறிவுடைய நன்மக்கள் மேற்கொள்ளுதற்குரிய நல்லொழுக்க நெறியாகும். அந்நெறியினைப் பின்பற்றி நடவாது தமது சிற்றறிவொன்றையே முதன்மையாகக் கொண்டு தாம் தாம் நன்றெனக்கண்ட தெளிவற்ற கொள்கைவழியே நலம் பெற முயலும் புத்தர், சமணர் என்னும் புறச்சமயத்தார் மேற்கொண்ட செயல்முறைகள், இம்மை, மறுமையாகிய இருமையினும் துயர்விளைக்கும் பழிச்செயல்களே என்பதனைத் தமிழ் மக்கள் தெளிவாக உணரும்வண்ணம், பதிகந்தோறும் பத்தாம் பாடலில் பிள்ளையார் வற்புறுத்தியருள்கின்றார். சிவநெறியைப் பின்பற்றாத பிற சமயங்களை நாம் நினைத்துக்கூடப் பார்க்கக்கூடாது.

"வேதகா ரணராய வெண்பிறைசேர் செய்யசடை
நாதனெறி யறிந்துய்யார் தம்மிலே நலங்கொள்ளும்
போதமிலாச் சமண்கையர் புத்தர்வழி பழியாக்கும்
ஏதமே யெனமொழிந்தார் எங்கள்பிரான் சம்பந்தர்" 1977

எனவரும் பெரியபுராணச் செய்யுள் இந்நுட்பத்தை விளக்குதல் காணலாம்.

இவ்வாறு ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகந்தோறும் 8, 9, 10–ஆம் பாடல்களாகிய மூன்று திருப்பாடல்களிலும் முறையே 1) உயிர்கள் தம் பிழை நினைந்து உணருதல் 2) பாசஞானத்தாலும், பசுஞானத்தாலும் காண்டற்கரியன் பரன் என்றுணர்தல் 3) இறைவனருளிய மெய்ம்மையான ஒழுக்கநெறியன்றிச் சிற்றறிவுடைய மக்கள் தம் ஆன்ம போதம் ஒன்றினாலேயே அமைத்துக்கொண்ட பிறசமயச் செயல்கள் புன்னெறியிற் செலுத்துவனவே எனவுணர்ந்து அவற்றை விலகியொழுகுதல் ஆகிய இவை மூன்றும் கடவுள் வழிபாட்டிற்கு இன்றியமையாத சாதனங்களாக அறிவுறுத்தப்பட்டன.

திருப்பதிகந்தோறும் இறுதிப்பாடலாக அமைந்த திருக்கடைக்காப்புச் செய்யுட்கள் யாவும், சிவபரம்பொருளைத் திருப்பதிகப் பாமாலையாற் போற்றி வழிபாடு செய்யும் அன்பர்கள் எல்லா நலன்களும் பெற்று எல்லாப் பேரின்ப வாழ்வில் திளைக்கவேண்டும் என்னும் பெருங்கருணைத் திறத்தால் நிறைமொழிமாந்தராய ஆளுடைய பிள்ளையார் ஆணையிற் கிளந்த மறைமொழிகளாகத் திகழ்கின்றன.

நடுவிரு ளாடுமெந்தை நனிபள்ளியுள்க
வினைகெடுதல் ஆணை நமதே 2-84-11

ஆனசொன் மாலையோதும் அடியார்கள்
வானில் அரசாள்வர் ஆணைநமதே 2-85-11

சிந்தைசெய வல்லவர்கள் நல்லவர்கள்
என்னநிகழ் வெய்தியிமையோர்
அந்தவுல கெய்தியரசாளு மதுவே
சரதம் ஆணை நமதே 3-78-11

வானிடை வாழ்வர் மண்ணிடைப்பிறவார்
மற்றிதற் காணையும் நமதே 3-118-11

எனவரும் வாய்மொழிகள், ஞானசம்பந்தர் உலகநன்மை கருதித் தம்மீது ஆணையிட்டுக்கூறிய தமிழ் மந்திரங்களாகத் திகழ்தல் அறியத்தக்கதாகும். இவ்வாறு தெய்வத்தின் திருவருளை உலக மக்கள் இம்மை வாழ்வில் தெளிவாக உணர்ந்து மகிழ்தல் வேண்டும் என்னும் அருட்குறிப்புடன் அடியார்களுக்குத் தம் வாய்மொழியில்

உறுதியான நம்பிக்கையுண்டாகும் வண்ணம் பிள்ளையார் ஆணையிட்டுக் கூறிய திறத்தை,

"முத்திப் பகவன் முதல்வன் திருவடியை
அத்திக்கும் பத்தரெதிர் ஆணைந மதென்னவலா"

என நம்பியாண்டார் நம்பி இனிது விளக்கியுள்ளார்.

பிள்ளையாரருளிய இவ்வுறுதியுரையின் மெய்ம்மையினையுணர்ந்த பெருமக்கள் இவரை "ஆணை நமதென்ற பெருமாள்" எனப் பாராட்டிப் போற்றியதுடன் இப்பெயரை மக்களுக்கு இட்டும் வழங்கியுள்ளார்கள் எனத் தெரிகிறது.

"ஞாலம் நின்புகழே மிகவேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே'

என இறைவன்பால் முறையிட்ட சிவஞானச் செம்மலார், இவ்வாறு தாம் பாடிய ஒவ்வொரு திருப்பதிகத்தின் முடிவிலும் அத்திருப்பதிகத்தைப் பாடிய தமது பெயரையும், அப்பதிகத்தினை அன்புடன் நெஞ்சு நெக்குருகி ஓதுவார் பெறும் நலங்களையும் தவறாமல் உடன் அருளிச் செய்திருப்பதன் நோக்கம், குறித்த ஒவ்வொரு திருப்பதிகத்தையேனும் கற்றுப்பாடுவோரும் தாம் பெற்ற சிவாநுபவப் பயனை எளிதிற்பெற்று இன்புற வேண்டுமென்னும் பெருங்கருணையே என்பர் பெரியோர்.

இவ்வாறு திருஞான சம்பந்தர் அருளிய திருப்பதிகங்கள் யாவும், இறைவன் ஒருவனுளன் என்பதற்குரிய பிரமாணங்களையும், அம்முதல்வனுக்குரிய பொதுவும் சிறப்புமாகிய இலக்கணங்களையும் இறைவனை வழிபடுதற்கு இன்றியமையாத சாதனங்களையும், அங்ஙனம் உணர்ந்து வழிபாடு செய்யும் அன்பர்கள் பெறும் பேரின்ப வாழ்வாகிய நற்பயனையும் அறிவுறுத்தும் முறையில் அமைந்திருத்தல் உணர்ந்து இன்புறத்தக்கதாகும்.



## மூன்றாம் திருமுறையில்

## தேவாரம் "பாடியவாறு" அட்டவணை

| வ. எண் | திருத்தலம் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | மூன்றாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 1. | வலம்புரம் | 120 | கொடியுடைமும் மதில் | 103 |
| 2. | பல்லவனீச்சரம் | 121 | பரசுபாணியர் | 112 |
| 3. | மயேந்திரப்பள்ளி | 129 | திரைதரு பவளமும் | 31 |
| 4. | குருகாவூர் வெள்ளடை | 129 | சுண்ண வெண்ணீறணி | 124 |
| 5. | கலிக்காமூர் | 129 | மடல்வரையின் மது | 105 |
| 6. | வெண்காடு | 129 | மந்திர மறையவை | 15 |
| 7. | சிதம்பரம் (கோயில்) | 164 | ஆடினாய் நறு நெய்யொடு | 1 |
| 8. | கழிப்பாலை | 167 | வெந்தகுங்கிலியப்புகை | 44 |
| 9. | முதுகுன்றம் | 183 | முரசதிர்ந்தெழு தரு | 99 |
| 10. | முதுகுன்றம் | 183 | வண்ணமாமலர் கொடு | 34 |
| 11. | நெல்வெண்ணெய் | 229 | நல்வெணெய் விழுதுபொய் | 96 |
| 12. | விசயமங்கை | 239 | மருவமர் குழலுமை | 17 |
| 13. | வைகாவூர் | 240 | கோழைமிடறாக கவி | 71 |
| 14. | பனந்தாள் | 249-50 | கண்பொலி நெற்றி | 62 |
| 15. | பந்தணைநல்லூர் | 250 | இடறினார் கூற்றை | 121 |
| 16. | ஓமாம்புலியூர் | 251 | பூங்கொடிமடவாள் | 122 |
| 17. | நாரையூர் | 253 | காம்பினைவென்ற | 102 |
| 18. | நாரையூர் | 253 | கடலிடை வெங்கடு | 107 |
| 19. | தோணிபுரம் (பொது) | 266 | துஞ்சலும் துஞ்ச (அஞ்செழுத்து) | 22 |
| 20. | தோணிபுரம் | 273 | சங்கமரு | 81 |
| 21. | பூந்தராய் | 275 | பந்துசேர் | 2 |
| 22. | கழுமலம் | 275 | மடன்மலி | 118 |
| 23. | சீகாழி | 286 | யாமாமாநீ (மாலைமாற்று) | 117 |
| 24. | பிரமபுரம் | 276 | சுரருலகு | 67 |
| 25. | பிரமபுரம் | 276 | வரமதே கொளா | 110 |
| 26. | பூந்தராய் | 276 | தக்கன் வேள்வி | 5 |
| 27. | புகலி | 276 | இயலிசையெனும் | 3 |
| 28. | புறவம் | 277 | பெண்ணியல் | 84 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | மூன்றாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 29. | சண்பைநகர் | 277 | எந்தமது சிந்தை | 75 |
| 30. | வெங்குரு | 277 | விண்ணவர்தொழு | 94 |
| 31. | துருத்தியும் வேள்விக்குடியும் | 291 | ஓங்கிமேல் உழிதரு | 90 |
| 32. | திருந்துதேவன்குடி | 295 | மருந்து வேண்டில் | 25 |
| 33. | இன்னம்பர் | 297 | எண்டிசைக்கும் | 95 |
| 34. | வடகுரங்காடுதுறை | 28 | கோங்கமே | 91 |
| 35. | மழபாடி | 306 | அங்கையாரழல் | 48 |
| 36. | மழபாடி | 307 | காலையார் வண்டினம் | 28 |
| 37. | பைஞ்ஞீலி | 322 | ஆரிடம் பாடிலர் | 14 |
| 38. | ஆனைக்கா | 345 | வானைக்காவில் | 53 |
| 39. | ஆனைக்கா | 346 | மண்ணது வுண்டரி | 109 |
| 40. | காட்டுப்பள்ளி | 350 | வாருமன்னும் | 29 |
| 41. | கண்டியூர் | 352 | வினவினேனறி | 38 |
| 42. | வேதிகுடி | 357 | நீறுவரி | 78 |
| 43. | சக்கரப்பள்ளி | 362 | படையினார் | 27 |
| 44. | நல்லூர் | 370 | வண்டிரிய | 83 |
| 45. | கருகாவூர் | 372 | முத்திலங்கு | 46 |
| 46. | தென்குடித்திட்டை | 373 | முன்னைநாள் | 35 |
| 47. | அவளிவணநல்லூர் | 384 | கொம்பிரிய | 82 |
| 48. | பரிதிநியமம் | 357 | விண்கொண்ட | 104 |
| 49. | வலஞ்சுழி | 283 | பள்ளமதாய | 106 |
| 50. | பட்டீச்சரம் | 397 | பாடன்மறை | 73 |
| 51. | அரதைப் பெரும்பாழி | 403 | பைத்தபாம்போ | 30 |
| 52. | சேறை | 403 | முறியுறுநிற | 86 |
| 53. | குடமூக்கு | 407 | அரவிரிகோடல் | 59 |
| 54. | கருக்குடி | 410 | நனவிலும் கனவிலும் | 21 |
| 55. | ஆவடுதுறை | 429 | இடரினும் தளரினும் | 4 |
| 56. | வைகல்மாடக் கோயில் | 433 | துளமதியுடை | 18 |
| 57. | மயிலாடுதுறை | 439 | ஏனவெயிறு | 70 |
| 58. | வேட்டக்குடி | 443 | வண்டிரைக்கும் | 66 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | மூன்றாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 59. | கோட்டாறு | 459 | வேதியன் விண் | 12 |
| 60. | சாத்தமங்கை | 464 | திருமலர்க் கொன்றை | 58 |
| 61. | செங்காட்டங்குடி | 470 | பைங்கோட்டு | 63 |
| 62. | ஆரூர் | 507 | அந்தமாய் உலகு | 45 |
| 63. | அம்பர் மாகாளம் | 532 | படியுளார் | 93 |
| 64. | அம்பர்பெருந்திருக் கோயில் | 532 | எரிதரவனல் | 19 |
| 65. | கடவூர் | 534 | சடையுடையான் | 8 |
| 66. | சிறுகுடி | 538 | திடமலிமதி | 97 |
| 67. | வீழிமிழலை | 561 | கேள்வியர் நாடொறு | 9 |
| 68. | வீழிமிழலை | 561 | சீர்மருவு | 80 |
| 69. | வீழிமிழலை | 561 | மட்டொளி | 85 |
| 70. | வீழிமிழலை | 561 | வெண்மதி | 98 |
| 71. | வீழிமிழலை | 561 | வேலினேர்தரு | 111 |
| 72. | வீழிமிழலை | 561 | துன்றுகொன்றை | 116 |
| 73. | வீழிமிழலை | 561 | புள்ளித் தோலாடை | 119 |
| 74. | பெருவேளூர் | 573 | அண்ணாவும் | 64 |
| 75. | விளமர் | 573 | மத்தகமணிபெற | 88 |
| 76. | தேவூர் | 574 | காடுபயில் | 74 |
| 77. | கொள்ளிக்காடு | 574 | நிணம்படுசுடலை | 16 |
| 78. | வெண்டுறை | 575 | ஆதியன் ஆதிரையன் | 61 |
| 79. | சிற்றேமம் | 575 | நிறைவெண்டிங்கள் | 42 |
| 80. | தண்டலை நீணெறி | 575 | விரும்புந் திங்களும் | 50 |
| 81. | மறைக்காடு (வேதவனம்) | 575 | கற்பொலிசு | 76 |
| 82. | திருவுசாத்தானம் | 624 | நீரிடைத் துயின்றவன் | 33 |
| 83. | ஆலவாய் (ஊர்ப்புறத்தே) | 663 | மங்கையர்க்கரசி | 120 |
| 84. | ஆலவாய் (திருமடத்தில்) | 704 | செய்யனே திருஆலவாய் | 51 |
| 85. | ஆலவாய் (இறைவர்திருமுன்) | 739 | காட்டுமாவுரி | 47 |
| 86. | ஆலவாய் (,,) | 739 | வேதவேள்வி | 108 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | மூன்றாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 87. | ஆலவாய் (அரசமாளிகை) | 760 | மானினேர்விழி | 39 |
| 88. | ஆலவாய் (நள்ளாறை நினைத்து) (அரசமாளிகை) | 784 | தளிரிள வளரொளி | 87 |
| 89. | ஆலவாய் (பாசுரம், பொது) (வைகை ஆற்றுக்கரை) | 818 | வாழ்க அந்தணர் | 54 |
| 90. | ஆலவாய் (திருவேடகம்) | 849-50 | வன்னியும் மத்தமும் | 32 |
| 91. | ஆலவாய் திருமுன் | 865 | வீடலாலவாயிலாய் | 52 |
| 92. | ஆலவாய் திருமடம் | 870 | ஆலுநீழலு | 115 |
| 93. | ஆலவாய் (கழுமலத்தை நினைத்து) திருமடம் | 881 | மண்ணில் நல்ல வண்ணம் | 24 |
| 94. | பூவணம் | 886 | மாதமர் மேனியனாகி | 20 |
| 95. | கானப்பேர் | 886 | பிடியெலாம் | 26 |
| 96. | நெல்வேலி | 887 | மருந்தவை | 92 |
| 97. | இராமேச்சுரம் | 888 | அலைவளர்தண்மதி | 10 |
| 98. | இராமேச்சுரம் | 888 | திரிதருமாமணி | 101 |
| 99. | கோணமலை (இராமேச்சுரத்தில் இருந்தபடி) | 890 | நிரைகழல் | 123 |
| 100. | புனவாயில் | 891 | மின்னியல் செஞ்சடைவெண் | 11 |
| 101. | கொள்ளம்பூதூர் (ஓடத்தில்) | 898 | கொட்டமேகமழும் | 6 |
| 102. | கழுமலம் | 954 | உற்றுமை சேர்வது | 113 |
| 103. | மாணிகுழி | 962 | பொன்னியல் | 77 |
| 104. | வக்கரை | 964 | கறையணி மாமிடற் | 60 |
| 105. | மாகறல் | 984 | விங்குவிளை | 72 |
| 106. | கச்சியேகம்பம் | 999 | பாயுமால்விடை | 114 |
| 107. | கச்சியேகம்பம் | 999 | கருவார்கச்சி | 41 |
| 108. | கச்சிநெறி காரைக்காடு | 1000 | வாணரவு முலை | 65 |
| 109. | விற்கோலம் | 1005 | உருவினார் உமை | 23 |
| 110. | காளத்தி | 1020 | வானவர்கள் தானவர்கள் | 69 |
| 111. | காளத்தி (வடகயிலை நோக்கி) | 1026 | வாளவரி கோளபுலி | 68 |
| 112. | காளத்தி (கோகரணம் நோக்கி) | 1027 | என்றுமரியான் | 79 |

| வ. எண் | திருத்தலமும் பாடிய இடமும் | திருத்தொண்டர் புராணச் செய்யுள் எண் | பதிக முதற் குறிப்பு | மூன்றாம் திருமுறை பதிக எண் |
|---|---|---|---|---|
| 113. | காளத்தி | 1028 | சந்தமார் | 36 |
| 114. | ஒற்றியூர் | 1031 | விடையவன் | 57 |
| 115. | வான்மியூர் | 1125 | விரையார் கொன்றை | 55 |
| 116. | பிரமபுரம் | 1154 | கரமுனம் மலரால் | 37 |
| 117. | பிரமபுரம் | 1154 | இறையவன் ஈசன் | 56 |
| 118. | புகலி | 1154 | கண்ணுதலானும் | 7 |
| 119. | தோணிபுரம் | 1154 | கரும்பமர் | 100 |
| 120. | பூந்தராய் | 1154 | மின்னவெயிறு | 13 |
| 121. | காழி | 1154 | சந்தமார் | 43 |
| 122. | கொச்சைவயம் | 1154 | திருந்துமா | 89 |
| 123. | பொது | 1154 | கல்லானீழல் | 40 |
| 124. | நல்லூர்ப் பெருமணம் | 1245 | கல்லூர்ப் பெருமணம் | 125 |
| 125. | பொது (நமச்சிவாய பதிகம்) | 1248 | காதலாகிக் கசிந்து | 49 |



# மூன்றாம் திருமுறையில் சொல்லணியியலின் மூல இலக்கியம்

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிக முதற் குறிப்பு | இலக்கிய வகை |
|---|---|---|---|---|
| 1 | புகலி | 3 | இயலிசை எனும் பொருளின் திறம் | நாலடி மேல் வைப்பு |
| 2. | ஆவடுதுறை | 4 | இடரினும் தளரினும் | நாலடி மேல் வைப்பு |
| 3. | ஆலவாய் | 108 | வேதவேள்வியை நிந்தனை | நாலடி மேல் வைப்பு |
| 4. | பூந்தராய் | 5 | தக்கன் வேள்வி தகர்த்தவன் | ஈரடி மேல் வைப்பு |
| 5. | கொள்ளம்பூதூர் | 6 | கொட்டமே கமழும் | ஈரடி மேல் வைப்பு |
| 6. | பொது | 40 | கல்லானீழல் | திருவிருக்குக்குறள் |
| 7. | கச்சியேகம்பம் | 41 | கருவார்கச்சி | திருவிருக்குக்குறள் |
| 8. | திருவாலவாய் | 52 | வீடலால வாயிலாய் | திருவிராகம் |
| 9. | திருவானைக்கா | 53 | வானைக்காவில் வெண்மதி | திருவிராகம் |
| 10. | பிரமபுரம் | 67 | சுரருலகு நரர்கள் | வழிமொழித் திருவிராகம் |
| 11. | கயிலாயம் | 68 | வாளவரி கோளபுலி | வழிமொழித் திருவிராகம் |
| 12. | காளத்தி | 69 | வானவர்கள் தானவர்கள் | திருவிராகம் |
| 13. | மயிலாடுதுறை | 70 | ஏனவெயிறாடர | திருவிராகம் |
| 14. | வைகாவூர் | 71 | கோழைமிடறாக | திருவிராகம் |
| 15. | மாகறல் | 72 | விங்குவிழை கழனிமிகு | திருவிராகம் |
| 16. | பட்டீச்சரம் | 73 | பாடன் மறைசூடன் | திருவிராகம் |
| 17. | தேவூர் | 74 | காடுவயில் வீடுமுடை | திருவிராகம் |
| 18. | சண்பைநகர் | 75 | எந்தமது சிந்தை | திருவிராகம் |
| 19. | வேதவனம் | 76 | கற்பொலிசு ரத்தினெரி | திருவிராகம் |
| 20. | மாணிகுழி | 17 | பொன்னியல் பொருப்பறையன் | திருவிராகம் |
| 21. | வேதிகுடி | 78 | நீறுவரியாடர வொடு | திருவிராகம் |
| 22. | கோகரணம் | 79 | என்றுமரியான் | திருவிராகம் |
| 23. | வீழிமிழலை | 80 | சீர்மருவு தேசினொடு | திருவிராகம் |
| 24. | தோணிபுரம் | 81 | சங்கமரு முன்கை | திருவிராகம் |
| 25. | அவளிவணல்லூர் | 82 | கொம்பிரிய வண்டுலவு | திருவிராகம் |
| 26. | நல்லூர் | 83 | வண்டிரிய விண்டமலர் | திருவிராகம் |
| 27. | புறவம் | 84 | பெண்ணியல் உருவினர் | திருவிராகம் |
| 28. | வீழிமிழலை | 85 | மட்டொளி விரிதரு | திருவிராகம் |
| 29. | திருச்சேறை | 86 | முறியுறு நிறமல்கு | திருவிராகம் |
| 30. | நள்ளாறு | 87 | தளிரிள வளரொளி | திருவிராகம் |

| வ. எண் | தலம் | பதிக எண் | பதிக முதற் குறிப்பு | இலக்கிய வகை |
|---|---|---|---|---|
| 31. | விளமர் | 88 | மந்தகமணிபெற | திருவிராகம் |
| 32. | வெங்குரு | 94 | விண்ணவர் தொழுதெழு | திருமுக்கால் |
| 33. | இன்னம்பர் | 95 | எண்டிசைக்கும் புகழ் | திருமுக்கால் |
| 34. | நெல்வெண்ணெய் | 96 | நல்வெணெய் விழுதுபொய் | திருமுக்கால் |
| 35. | சிறுகுடி | 97 | திடமலி மதிலணி | திருமுக்கால் |
| 36. | வீழிமிழலை | 98 | வெண்மதி தவழ் மதில் | திருமுக்கால் |
| 37. | முதுகுன்றம் | 99 | முரசதிர்ந்தெழுதரு | திருமுக்கால் |
| 38. | ஆனைக்கா | 109 | மண்ணது வுண்டரி | கூடற்சதுக்கம் |
| 39. | பிரமபுரம் | 110 | வரமதே கொளா | ஈரடி |
| 40. | வீழிமிழலை | 111 | வேலினேர் தரு | ஈரடி |
| 41. | பல்லவனீச்சரம் | 112 | பரசு பாணியர் | ஈரடி |
| 42. | கழுமலம் | 113 | உற்றுமை சேர்வது | திருவியமகம் |
| 43. | ஏகம்பம் | 114 | பாயுமால் விடை | திருவியமகம் |
| 44. | ஆலவாய் | 115 | ஆலநீழலுகந்த திருக்கையே | திருவியமகம் |
| 45. | வீழிமிழலை | 116 | துன்று கொன்றை | திருவியமகம் |
| 46. | சீகாழி | 117 | யாமாமாநீ யாமாமா | மாலைமாற்று |

## திருஇருக்குக்குறள்

குறள் வடிவில் இரண்டு அடிகளில் அமைந்தது இந்த இலக்கிய வகை. ஆனால் திருக்குறள் யாப்பிலிருந்து மாறுபட்டது. குறள் யாப்பு ஏழு சீர்களுடன் நின்று விடும். ஆனால் சம்பந்தரின் இருக்குக் குறள் முதலடியும் இரண்டாம் அடியும் ஒன்று போல முறையே நான்கு சீர்களுடன் அமையும். இது இருக்கு வேதம் போலச் சமயத் தத்துவத்தைச் சுருக்கமாகக் கூறுவதால் இருக்குக் குறள் என்று பெயர் பெற்றுள்ளது. மந்திரத்தன்மை உடையதால் இருக்கு என்று இது பெயர் பெறுகிறது. ‘‘தமிழ் இருக்குக்குறள்’’ என்று சேக்கிழார் (பெரியபுராணம் 2174) இதைக் குறிப்பிடுகிறார். இவ்வகையில் சம்பந்தர் முதல் திருமுறையில் ஏழும், மூன்றாம் திருமுறையில் இரண்டுமாக ஒன்பது பதிகங்கள் பாடியுள்ளார்.

1. ‘‘வாசி தீரவே காசு நல்குவீர்<br>மாசில் மிழலையீர் ஏசல் இல்லையே’’ - முதல் திருமுறை

2. ‘‘கொன்றை சூடி, நின்ற தேவை<br>அன்றியொன்று, நன்றிலோமே’’ - மூன்றாம் திருமுறை

என்பன இதற்குச் சான்று.

## ஈரடி மேல்வைப்பு

செய்யுளில் முதல் இரு அடிகள் ஒரு அமைப்பாகவும் அடுத்த இரு அடிகள் மற்றொரு

அமைப்பாகவும் அமையப் பாடுவது. முதல் இரண்டு அடிகள் ஈரடி எனவும், பின் இரு அடிகள், ஈரடிகளின் மேல் சந்தமும் பொருளும் மாறாமல் பாடலின் பொருளை முடித்துக் கூறும் வண்ணம் தனியாக மேல் ஒட்டி வைத்தால் போல அமைவதால் மேல் வைப்பு என்றும் பெயர் பெறுகின்றன. மேல் வைப்பாக வரும் பின் இரு அடிகள் பதிகம் முழுவதிலும் ஒரே மாதிரியாகவும், பாடல் தோறும் வேறு வேறாகவும் அமையும் இரண்டு முறைகளில் சம்பந்தர் இவ்வமைப்பில் இரு பதிகங்கள் பாடியுள்ளார். “கொட்டமே கமழும்” (சம்பந்தர் III(6)) என்று திருக்கொள்ளம்பூதூர் தலத்தில் ஓடம் ஓடுவதற்காகப் பாடிய பதிகம் 10 பாடல்களிலும் மேல் வைப்பு ஒரே மாதிரியாக அமைந்துள்ளது. 11-ஆம் பாடலில் அது மாறியுள்ளது. சீர்காழியில் (பூந்தராய்) பாடிய “தக்கன் வேள்வி தகர்த்தவன்” என்னும் பதிகத்தில் (சம்பந்தர் தேவாரம் III(5)) 11 பாடல்களிலும் ஒவ்வொரு பாடலிலும் வெவ்வேறான மேல்வைப்பு அமைந்துள்ளது. ஈரடி மேல் வைப்பாக அமைந்த இவ்விரு பதிகங்களும் காந்தார பஞ்சமம் என்னும் ஒரே பண்ணில் அமைந்துள்ளன. ஓடம் நதியைக் கட்டாயம் கடந்தாக வேண்டுமென்ற நிர்ப்பந்த நிலை இருந்ததால் மேல் வைப்பில் 10 பாடல்களிலும் ஒரே மாதிரி பாடுகிறார். பூந்தராயில் அந்த நிர்ப்பந்தம் இல்லாத போழ்து மேல் வைப்பு பாடல்தோறும் மாறுகிறது.

## நாலடி மேல்வைப்பு

பாடலின் முதல் 4 அடிகள் ஓர் அமைப்பிலும், மேல் வைப்பாக வரும் 2 அடிகள் வேறொரு அமைப்பிலும் அமைந்திருக்கும். மேல் வைப்பான இரண்டு அடிகள் சந்தமும் பொருளும் ஒன்றாக அமையப்பெற்று பாடலின் பொருளை முடித்துக்கூறும் வண்ணம் 4 அடிகளுக்கு மேல் கூடுதலாக ஒட்டி வைத்தது போல இருக்கும். கூடுதலாக இருப்பதால் மேல் வைப்பு என்று பெயர் பெறுகிறது. சம்பந்தர் மூன்றாம் திருமுறையில் மூன்று பதிகங்களை இவ்வகையில் பாடியுள்ளார். புகலியில் “இயல் இசை எனும்” (சம்பந்தர் தேவாரம் III(3)), திருவாவடுதுறையில் “இடரினும் தளரினும்” (சம்பந்தர் தேவாரம் III(4)), மதுரையில் “வேத வேள்வியை” (சம்பந்தர் தேவாரம் III(108)) என்பன அவை. இவற்றில் “இடரினும் தளரினும்”, “வேத வேள்வியை” ஆகிய இரு பதிகங்களிலும் முதல் 10 பாடல்களிலும் மேல் வைப்பு ஒன்று போல உள்ளது. இடரினும் தளரினும் பதிகத்தில் 11-ஆம் பாடலில் மேல் வைப்பு இடம்பெறவில்லை. இயல் இசை எனும் பதிகத்தில் 11 பாடல்களிலும் பாடல் தோறும் மேல் வைப்பு மாறி அமைந்துள்ளது. ஆலவாயில், சமணர்களை வெல்ல வேண்டும்; அதற்கு இறைவர் திருஉள்ளம் தேவை. ஆவடுதுறையில் தந்தையார் வேள்விக்குப் பொருள் வேண்டிப்பாட வேண்டும். இவ்விரு சூழ்நிலை நிர்ப்பந்தங்களினால் மேல்வைப்பு 10 பாடல்களிலும் ஒரே மாதிரியாக பொருளை அழுத்திக் கூறுவது போலப் பாடியுள்ளார். புகலியில் அந்த நிலை இல்லாததால் பாடல்தோறும் மேல்வைப்பு மாறுகிறது. கவிதை இரண்டடிகள் அல்லது 4 அடிகள் கொண்டு அமைவது இயல்பு. கூடுதலாக இடம்பெறும் 2 அடிகள் மேல்வைப்பு என்ற புதிய இலக்கிய வகையாகப் பெயர்பெறுகிறது. சம்பந்தர் தம் பாடல்களில் இப்பெயர்களைக் குறிப்பிடவில்லை. சேக்கிழார், ஈரடி மேல் வைப்பு, நாலடி மேல் வைப்பு என்பவற்றைக் கூறுகிறார். (பெரியபுராணம் 2174, 2175) சம்பந்தரின் சமகாலத்தவரான அப்பர் இரண்டு பதிகங்களில் “சுண்ணவெண் சந்தனச்சாந்து”, “மாதர் பிறைக்கண்ணியானை” என நான்கு அடிக்குக் கூடுதலாக மேல் வைப்பு வகையைப் பின்பற்றியுள்ளார்.

## திரு இயமகம்

யமகம் என்பது ஓரடியில் முன் வந்த சொல்லோ, தொடரோ வேறொரு பொருள்பட மீண்டும் அதே அடியில் மடக்கி வருவது. இதனை மடக்கு எனவும் வழங்குதல் உண்டு. யமகம் என்பது வடசொல்

அதன் முதலெழுத்தாகிய யகரம் தமிழியல் முறைப்படி மொழிக்கு முதலில் வாராது. ''யவ்விற்கு இய்யும்'' என்னும் நன்னூல் சூத்திரப்படி இகரத்தை முதலில் பெற்று இயமகம் என வழங்கப்பெறும். ஈண்டு அது திரு என்னும் சிறப்புடை அடைமொழி பெற்றுத் திரு இயமகம் என வழங்கப்பெற்றது.

உதாரணம் - உற்றுமை சேர்வது மெய்யினையே உணர்வது நின்னருள் மெய்யினையே - III (113).

இந்தப்பாடலில் ''மெய்'' மடக்கி வருகிறது. முதல் மெய், ''உடம்பு'' என்ற பொருளிலும், இரண்டாவது மெய், உண்மைத்தன்மை என்ற பொருளிலும் ஆளப்பட்டுள்ளது.

''துன்று கொன்றைநஞ் சடையதே தூய கண்ட நஞ்சடையதே''

முதல் - நஞ்சடையதே - நம் சடையாகிய இடத்தைக் குறித்தது
இரண்டாவது - நஞ்சடையதே - நஞ்சு அடையப் பெற்றதைக் குறித்தது.

இவ்வாறே இப்பதிகங்களில் உள்ள பாடல்களின் அடிதோறும் ஒரு சொல்லோ, தொடரோ மடக்கி வந்து இயைபு என்னும் தொடை நலம் பொருந்த ''யமகம்'' என்னும் சொல்லணிக்கு மூல இலக்கியமாய் அமைந்தமையால், ''திரு இயமகம்'' எனப் பெயர் பெறுவனவாயின.

### கூடற்சதுக்கம்

ஆனைக்காவில், ''மண்ணது உண்ட அரி'' (சம்பந்தர் தேவாரம் III (109)) என்னும் பதிகம் பாடினார். இது கூடற்சதுக்கம் என்னும் இலக்கிய வகையாகும். மயேந்திரம், கயிலாயம், ஆரூர், ஆனைக்கா ஆகிய நான்கு தலங்களும் ஒவ்வொரு பாடலிலும் இணைந்து வருமாறு இப்பதிகம் பாடப்பட்டுள்ளது. நான்கு தலங்கள் ஒன்றாகக் கூடி வருமாறு அமைக்கப்பட்டதால் இவ்வாறு பெயர் பெற்றது. சதுக்கம் என்பது நான்கு இடம் கூடுவது என்னும் பொருள் படும்படியாக (சதுர்த்தம் - நான்கு) இப்பெயர் அமைந்துள்ளது. ஆனால், சம்பந்தர் பதிகத்திற்குள் இப்பெயரைச் சொல்லவில்லை. ஒவ்வொரு பாடலிலும் திருமாலும், பிரமனும் காண முடியாதவர் என்று குறிக்கப்படுகிறது. நான்கு தலங்களையும் சொன்னபோதிலும், ஒவ்வொரு பாசுரமும் ''ஆனைக்காவே'' என்று முடிகிறது.

## திருவிராகம்

நெகிழ்ந்த ஓசையாலாகிய நெட்டெழுத்துக்கள் விரவாது, குற்றெழுத்துக்களால் இயன்று இடையறவுபடாது, பாடல் முழுவதும் தொடர்ந்து முடியும் நிலையில், முடுகிய ஓசையினையுடையதாய் வரும் பாடல், ''அராகம்'' எனப்படும். இங்ஙனம் முடுகியலாய் வரும் பாவின் ஓசையமைப்பினை ''உருட்டுவண்ணம்'' என்பர் தொல்காப்பியர். ''மேன்மைநடையின் முடுகு மராகம்'' எனச் சேக்கிழார் கூறுதலை நோக்குங்கால், ''முடுகிய நடையினை உடைமைபற்றியே - முடுகியலாகிய அராகமாய் வருதலின் திருவராகம்'' எனப் பெயர் பெற்று, பிற்காலத்தில் திரிந்து, ''திருவிராகம்'' எனப் பெயர் பெற்றது. (முடுகு - விரைவு)

## வழிமொழித் திருவிராகம்

''சுரருலகு நரர்கள்பயில் தரணிதல முரணழிய அரணமதில்முப்'' என்ற பதிக முதற்குறிப்புக் கொண்ட மூன்றாம் திருமுறையின் பிரமபுரத்து 67-ஆம் பதிகத்தின் திருக்கடைக்காப்பில்,

திருஞானசம்பந்தர், ‘‘தமிழ் விரகன் வழிமொழிகள்’’ என்று குறிப்பிடுகிறார். இப்பதிகத்தின் பாடல்கள் குற்றெழுத்துப் பயின்று முடுகியலாய், அடி முதற்சீரின் இரண்டாமெழுத்து சீர்தோறும் ஒன்றி, வழியெதுகையாய், எல்லா அடிச்சீர்களிலும் வந்தமையால், இது, ‘‘வழிமொழித் திருவிராகம்’’ என்னும் பெயர்த்தாயிற்று. எடுத்துக்காட்டாக சுரருலகு என்று தொடங்கும் 67-ஆம் பதிகத்து முதல் பாடலில், ஒவ்வொரு சீரின் இரண்டாமெழுத்தும் ‘‘ர’’ வெனவரும். இந்தப் பதிகத்தின் நிறைவுப்பாடல் ‘‘ஒழுகலரி தழிகலியி லுழியுலகு பழிலெருகு வழியைநினையா’’ என அமையும் எல்லாச் சீர்களிலும் இரண்டாமெழுத்து ‘‘ழ’’ கரமாக வரும். 21 ‘‘ழ’’ கரங்கள் இப்பாடலில் உள்ளன. இப்பதிகத்தில் 12 பாடல்கள் சீகாழியின் 12 பெயர்களுக்காகப் பாடப்பட்டுள்ளன.

### திருமுக்கால்

விண்ணவர்தொழுதெழு வெங்குரு மேவிய
சுண்ண வெண் பொடியணி வீரே
சுண்ண வெண் பொடியணி வீரும தொழுகழல்
எண்ண வல்லா ரிடரிலரே.

மேற்காண் பாடல் சீகாழியின் 12 பெயர்களில் ஒரு பெயரான வெங்குருவின் மேல் சாதாரிப் பண்ணில் திருஞானசம்பந்தர் (III (94)) பாடிய பாடலாகும். இப்பதிகத்தின் எல்லாப் பகுதிகளிலும் இவை போன்ற பதிகங்களிலும் முதலடியும், மூன்றாமடியும் நாற்சீர் கொண்ட அளவடியாக அமைய, இரண்டாமடியும், நான்காமடியும் முச்சீர் கொண்ட சிந்தடியாகிய முக்கால் அடியால் முடிந்தமையின் திருமுக்கால் என வழங்கப் பெறுவனவாயின. இரண்டு, மூன்றாம் அடிகளின் முதல் மூன்று சீர்கள் ஒரே மாதிரி வருவதைப் பார்த்தும் தமிழ் விளையாட்டை அனுபவிக்கலாம். வெங்குரு, இன்னம்பர், சிறுகுடி, நெல்வெண்ணெய், வீழிமிழலை, முதுகுன்றம் ஆகிய ஆறு தலங்களுக்கு இவ்வகையான சாதாரிப் பண் பாடலை திருஞானசம்பந்தர் பாடியுள்ளார். அவ்வப்பதிக்குரிய அனைத்துப் பாடல்களிலும் முதலடியிலேயே அவ்வூரின் திருநாமத்தை இயம்பியே செய்யுள் செய்துள்ளார். முதலிரண்டு அடிகளில் இறைவனை வர்ணித்துவிட்டு, அடுத்த இரண்டு அடிகளில் இப்படிப்பட்ட இறைவனைத் தொழுவார் பெறும் பயன்களைக் குறிப்பிடுகிறார்.

### மாலைமாற்று

யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா

சீகாழிப்பதியின் மேல் திருஞானசம்பந்தர் பாடிய மூன்றாம் திருமுறையின் 117-ஆவது பதிகப்பாடல் இதுவாகும். இப்பாடலின் முதலடியின் முதலெழுத்திலிருந்து இறுதி அடியின் இறுதி எழுத்துவரை படித்தால் அமையும் பாடலே இறுதியிலிருந்து முதல் வரை படிப்பினும் அமைவது. முதலடியை இறுதி தொடங்கி வாசித்தால் அ∴து இரண்டாமடியாக அமைதலும், இரண்டாமடியை இறுதி தொடங்கி வாசித்தால் அது முதலடியாக அமைதலும், இவ்விரண்டடிகளையுமே முதலிலிருந்து வாசித்தாலும் இறுதியிலிருந்து வாசித்தாலும் ஒரே பாடலாக அமைதலும் காணலாம். ஒரு மாலைக்கு அமைந்த இரு தலைப்புக்களுள், எதனை முதலாகக் கொண்டு நோக்கினாலும், அம்மாலை ஒரே தன்மையதாய்த் தோன்றுதற் போல, ஒரு செய்யுளை முதலிலிருந்து வாசித்தாலும், அன்றி இறுதி தொடங்கி வாசித்தாலும், அதே செய்யுளாக அமையும்படி ஒத்த எழுத்துக்களை நிரலே பெற்றிருப்பது, ‘‘மாலை மாற்று’’ என்னும் சித்திரக்கவியாகும். இதைச் சிறுவர்கட்குக் குடகு, விகடகவி என்று கூறிக்

காட்டுவர். சொல்லணியில் கூடற்சதுக்கம், கோமூத்திரி, சுழிகுளம், மாலைமாற்று இவைகளை மிறைக்கவி என்பர். எளிதில் பொருள் காணமுடியாது என்பது அதன் பொருள். மாதவச்சிவஞான சுவாமிகள் காஞ்சிப் புராணத்திலும், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை திரு நாகைக் காரோண புராணத்திலும் இவை போன்ற கவிதைகளை அமைத்துள்ளனர்.

## அற்புதத் திருப்பதிகங்கள்

| வ. எண் | பதிக எண் | பதிக முதற் குறிப்பு | பெற்ற பயன் |
|---|---|---|---|
| 1. | 4 | இடரினும் தளரினும் | தந்தையார் வேள்விக்குப் பொன் வேண்டிப் பாடிய உலவாக்கிழித் திருப்பதிகம் |
| 2. | 51 | செய்யனே திருஆலவாய் | தீயை ஏவல் கொண்டு சமணர்கள் இட்டதீ அவர்களையே பற்றுமாறு மதுரையில் ஏவிப்பாடியது |
| 3. | 108<br>47 | அ. வேதவேள்வியை<br>ஆ. காட்டுமாவது | வாது செய்ய ஆலவாய்ப் பெருமான் திருவுள்ளக் குறிப்பை நாடியது (திருவுள்ளமறியாது எதையும் செய்யக்கூடாது) |
| 4. | 87 | தளிரிள வளரொளி | பச்சைப் பதிகம் அனல் வாதத்தில் இட்ட "போகமார்ந்த பூண் முலையாள்" ஏடு வேகாதிருக்கப் பாடியது |
| 5. | 54 | வாழ்க அந்தணர் | புனல்வாதப் பாடல் |
| 6. | 6 | கொட்டமே கமழும் | கொள்ளம்பூதூர் நாவலமே கோலாக் கொண்டு ஓடம் செலுத்தியது |
| 7. | 22 | துஞ்சலும் துஞ்சலிலாத | உபநயனச் சடங்குகள்போது பாடிய பஞ்சாக்கரத் திருப்பதிகம் |
| 8. | 49 | நல்லூர்ப்பெருமணம் | நமச்சிவாயத் திருப்பதிகம் நல்லூர்ப் பெருமணத்தில் சோதியில் கலந்தபோது |

மூன்றாம் திருமுறையில் குறிப்பிடப்பட்டுள்ள தலங்கள் = 84 +2

மொத்தப் பதிகங்கள் (121 தலப் பதிகங்கள் + 4 பொது) = 125 +2

2 பிற்சேர்க்கை திருவிடைவாய் + கிளியன்னவூர் = 125 +2

## பண் வரிசைப்படி பதிகங்கள்

1. காந்தார பஞ்சமம் - 23
2. கொல்லி - 18 + 1
3. கொல்லிக் கௌவாணம் - 1
4. கௌசிகம் - 13 + 1

5. பஞ்சமம் - 12
6. கொல்லி - 33
7. கொல்லிக் கௌவாணம் - 17
8. புறநீர்மை - 6
9. அந்தாளிக்குறிஞ்சி - 2

125+2

| வ.எண். | தலம் | பதிகங்கள் |
|---|---|---|
| 1. | காழி | 20 |
| 2. | வீழிமிழலை, ஆலவாய் ஒவ்வொன்றுக்கும் ஏழு பதிகங்கள் 2 x 7 | 14 |
| 3. | இராமேச்சுரம், கச்சிஏகம்பம், காளத்தி, நாரையூர், மழபாடி, முதுகுன்றம், கயிலாயம் ஒவ்வொன்றுக்கும் இரண்டு பதிகங்கள் 6 x 2 | 14 |
| 4. | மற்ற தலங்கள் 77க்கு தலா ஒரு பதிகம் 77 x 1 | 75 |
| 5. | பொது | 4 |
| | மொத்த தலங்கள் = 85 மொத்தப் பதிகங்கள் | 127 |

மொத்தப் பாடல்கள் 1369

# மூன்றாம் திருமுறை

## பண்முறைத் தலங்கள் பட்டியல்

### I. காந்தார பஞ்சமம்

1. கோயில்
2. பூந்தராய்
3. புகலி
4. ஆவடுதுறை
5. கொள்ளம்பூதூர்
6. கடவூர் வீரட்டம்
7. வீழிமிழலை
8. இராமேச்சுரம்
9. புனவாயில்
10. கோட்டாறு
11. பைஞ்ஞீலி
12. வெண்காடு
13. கொள்ளிக்காடு
14. விசயமங்கை
15. வைகல்
16. அம்பர்மாகாளம்
17. பூவணம்
18. கருக்குடி
19. விற்கோலம்

### II. கொல்லி

1. கழுமலம்
2. திருந்துதேவன்குடி
3. கானப்பேர்
4. சக்கரப்பள்ளி
5. மழபாடி
6. மேலைத்திருக்காட்டுப் பள்ளி
7. அரதைப் பெரும்பாழி
8. மகேந்திரப்பள்ளி
9. ஏடகம்
10. உசாத்தானம்
11. முதுகுன்றம்
12. தென்குடித்திட்டை
13. காளத்தி
14. பிரமபுரம்
15. கண்டியூர்
16. ஆலவாய்
17. கச்சியேகம்பம்

### III. கொல்லிக் கௌவாணம்

1. சிற்றேமம்

### IV. கௌசிகம்

1. காழி
2. கழிப்பாலை
3. ஆரூர்
4. கருகாவூர்
5. ஆலவாய்
6. மழபாடி
7. தண்டலைநீணெறி
8. ஆனைக்கா

### V. பஞ்சமம்

1. வான்மியூர்
2. பிரமபுரம்
3. ஒற்றியூர்
4. சாத்தமங்கை
5. குடமூக்கு
6. திருவக்கரை
7. வெண்டுறை
8. பனந்தாள்
9. செங்காட்டங்குடி
10. பெருவேளூர்
11. கச்சிநெறி காரைக்காடு
12. வேட்டக்குடி

### VI. சாதாரி

1. பிரமபுரம்
2. கயிலாயம்
3. காளத்தி
4. மயிலாடுதுறை
5. வைகாவூர்
6. மாகறல்
7. பட்டீச்சரம்
8. தேவூர்
9. சண்பைநகர்
10. மறைக்காடு
11. மாணிகுழி
12. வேதிகுடி
13. கோகரணம்
14. வீழிமிழலை
15. தோணிபுரம்
16. அவளிவணல்லூர்.
17. நல்லூர்
18. புறவம்
19. சேறை
20. நள்ளாறு
21. விளமர்
22. கொச்சைவயம்
23. துருத்தி
24. வேள்விக்குடி
25. வடகுரங்காடுதுறை
26. நெல்வேலி
27. அம்பர்மாகாளம்
28. வெங்குரு
29. இன்னம்பர்
30. நெல்வெண்ணெய்
31. சிறுகுடி
32. முதுகுன்றம்

**VII. பழம்பஞ்சுரம்**

1. தோணிபுரம்
2. இராமேச்சுரம்
3. நாரையூர்
4. வலம்புரம்
5. பரிதிநியமம்
6. கலிக்காமூர்
7. வலஞ்சுழி
8. ஆலவாய்
9. ஆனைக்கா
10. பிரமபுரம்
11. வீழிமிழலை
12. பல்லவனீச்சுரம்
13. கழுமலம்
14. ஏகம்பம்

**VIII. புறநீர்மை**

1. கழுமலம்
2. வீழிமிழலை
3. ஆலவாய்
4. பந்தணைநல்லூர்
5. ஓமாம்புலியூர்
6. கோணமலை

**IX. அந்தாளிக் குறிஞ்சி**

1. குருகாவூர் வெள்ளடை
2. நல்லூர்ப் பெருமணம்

## மூன்றாம் திருமுறையில் திருக்கடைக் காப்பு

மூன்றாம் திருமுறையில் அமைந்த 125 திருப்பதிகங்களின் திருக்கடைக் காப்புகளும் பட்டியலிடப்பட்டு திருஞானசம்பந்தர் இயம்பிய பதிகப் பயன்களில் எந்தப் பதிகப் பயனுக்கு அவர் மிக அதிக முக்கியத்துவம் கொடுத்துள்ளார் என்று ஆராய்ந்து தொகுத்தளிக்கப்படுகிறது.

| பதிக எண் | திருக்கடைக்காப்பு - தலம், பதிகப்பயன் |
|---|---|
| | **I. காந்தார பஞ்சமம்** |
| 1. | கோயில் (சிதம்பரம்) - இசையாற் சொன்ன பத்திவை கூறுமாறு வல்லார் உயர்ந்தாரொடும் கூடுவரே. |
| 2. | திருப்பூந்தராய் - முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன் ஒண்டமிழ் மாலை கொண்டாம்படி இவை ஏத்த வல்லார்க்கு அடையா வினையே. |
| 3. | திருப்புகலி - அருந்தமிழ் பத்தும் வல்லார் நடலையவை இன்றிப்போய் நண்ணுவர் சிவனுலகம் இடராயின இன்றித்தாம் எய்துவர் தவநெறியே. |
| 4. | திருவாவடுதுறை - விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார் வினையாயின நீங்கிப்போய் விண்ணவர் வியனுலகம் நிலையாக முன்னேறுவார் நிலமிசை நிலையிலரே. |
| 5. | திருப்பூந்தராய் - ஞானசம்பந்தன் மாலை கொண்டேத்தி வாழும் நும்பந்தமார் வினை பாறிடுமே. |
| 6. | திருக்கொள்ளம்பூதூர் - ஞானசம்பந்தன் இன்று சொன்மாலை கொண்டேத்த வல்லார் போய் என்றும் வானவரோ டிருப்பாரே. |
| 7. | திருப்புகலி - இசை வல்லார் ஓங்கமராவதியோர் தொழச் செல்வது முண்மையே. |
| 8. | திருக்கடவூர் வீரட்டம் - சந்தம் எல்லாம் அடிச்சாத்த வல்ல மறை ஞானசம்பந்தன் செந்தமிழ் பாடியாடக் கெடும்பாவமே. |
| 9. | திருவீழிமிழலை - ஞானசம்பந்தன் ஆய்ந்தோதிய வொண்டமிழ் பத்திவையுற்றுரை செய்பவர் பாடியாடக் கெடும்பாவமே. |
| 10. | திருவிராமேச்சுரம் - ஞானசம்பந்தன் சொன்ன தமிழ் புந்தியால் அகலிட மெங்கு நின்றேத்த வல்லார்க் கில்லை அல்லலே. |
| 11. | திருப்புனவாயில் - நற்றமிழ் ஞானசம்பந்தன் சொன்ன தமிழ் நன்மையால் அற்றமில் பாடல் பத்தேத்த வல்லார் அருள் சேர்வரே. |
| 12. | திருக்கோட்டாறு - ஞானசம்பந்தன் சொல் படியிவை பாடிநின்றாட வல்லார்க்கில்லை பாவமே. |
| 13. | திருப்பூந்தராய் - பரவிய பந்தன் மெய்ப்பாடல் வல்லவர் சிரமலி சிவகதி சேர்தல் திண்ணமே. |

| | |
|---|---|
| 14. | திருப்பைஞ்ஞீலி - பைஞ்ஞீலி பாடுவார் உண்பின உலகினில் ஓங்கி வாழ்வாரே. |
| 15. | திருவெண்காடு - சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லார் அல்லலோடு அருவினை அறுதல் ஆணையே. |
| 16. | திருக்கொள்ளிக்காடு - சொற்றமிழ் இன்னிசைமாலை சோர்வின்றிக் கற்றவர் கழலடி காண வல்லரே. |
| 17. | திருவிசயமங்கை - பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர் புண்ணியர் சிவகதி புகுதல் திண்ணமே. |
| 18. | திருவைகல் மாடக் கோயில் - ஞானசம்பந்தன் தமிழ்கெழு பாடல் பத்திவை சிந்தை செய்பவர் சிவலோகஞ் சேர்வரே. |
| 19. | திருஅம்பர் பெருந்திருக்கோயில் - நீலகண்டரை ஓதுவீர் கொண்மின் தமிழ்கெழு விரகினன் தமிழ் செய்மாலையே. |
| 20. | திருப்பூவணம் - நண்ணிய அருமறை ஞானசம்பந்தன் பண்ணிய தமிழ் சொலப்பறையும் பாவமே. |
| 21. | திருக்கருக்குடி - மெய்ஞ்ஞானசம்பந்தன் சொல்லிய ஊனமில் மொழிவலார்க் குயருமின்பமே. |
| 22. | பொது - பஞ்சாக்கரத் திருப்பதிகம் - அஞ்செழுத்துற்றன வல்லவர் உம்பராவரே. |
| 23. | திருவிற்கோலம் - தமிழ் ஞானசம்பந்தன் பாடல் வல்லார்களுக்கு இல்லை பாவமே. |
| | **II. கொல்லி** |
| 24. | திருக்கழுமலம் - அருந்தமிழ் ஞானசம்பந்தன் செந்தமிழ் விரும்புவாரவர்கள் போய் விண்ணுலகாள்வரே. |
| 25. | திருந்துதேவன்குடி - தமிழ் ஞானசம்பந்தன் பாடல் பத்தும் வல்லார்க்கில்லையாம் பாவமே. |
| 26. | திருக்கானப்பேர் - ஞானசம்பந்தன் பாட்டகத்திவை வலார்க்கு இல்லையாம் பாவமே. |
| 27. | திருச்சக்கரப்பள்ளி - செந்தமிழ் ஞானசம்பந்தன் சொல் பண்ணிய விவை சொலப் பறையும் மெய்ப்பாவமே. |
| 28. | திருமழபாடி - ஞானசம்பந்தன் சொல் கோலத்தால் பாடுவார் குற்றமற்றார்களே. |
| 29. | மேலைத்திருக்காட்டுப்பள்ளி - பரவிய தமிழ் சொல்லப் பறையு மெய்ப்பாவமே. |
| 30. | திரு அரதைப்பெரும்பாழி - ஞானசம்பந்தன் செய் ஏரினார் தமிழ் வல்லார்க் கில்லையாம் பாவமே. |
| 31. | திருமயேந்திரப்பள்ளி - ஞானசம்பந்தன் சொல் நமபரவிதுவென நாவினா னவில் பவர் உம்பரார் எதிர்கொள வுயர் பதி யணைவரே. |
| 32. | திருவேடகம் - ஏடு சென்றணைதரு ஏடகத்தொருவனை நாடுதென் புகலியுண் ஞானசம்பந்தன் பாடல் பத்திவை வல்லார்க்கில்லை பாவமே. |
| 33. | திருவுசாத்தானம் - சம்பந்தன் ஒண்தமிழ் வல்லார் நரைதிரையின்றியே நன்னெறி சேர்வரே. |

| | |
|---|---|
| 34. | திருமுதுகுன்றம் - ஞானசம்பந்தன் சொல் எண்ணினார் ஈரைந்து மாலையும் இயலுமாப் பண்ணினாற் பாடுவார்க்கில்லையாம் பாவமே. |
| 35. | தென்குடித்திட்டை - ஞானமார் ஞானசம்பந்தன் செந்தமிழ் பானலார் மொழிவலார்க் கில்லையாம் பாவமே. |
| 36. | திருக்காளத்தி - சிட்ட நான் மறைவல ஞானசம்பந்தன்சொல் இட்டமாப் பாடுவார்க்கில்லையாம் பாவமே. |
| 37. | திருப்பிரமபுரம் - ஞானசம்பந்தன் வாய்நவின்றெழு மாலைகள் பொய்த்தவம் பொறி நீங்க இன்னிசை போற்றி செய்யுமெய்மாந்தரே. |
| 38. | திருக்கண்டியூர் வீரட்டம் - ஞானசம்பந்தன் செப்பிய செந்தமிழ் ஒருத்தராகிலும் பலர்களாகிலும் உரைசெய்வார் உயர்ந்தோர்களே. |
| 39. | திருஆலவாய் - புகலிக்கு மன்றமிழ் நாதன் ஞானசம்பந்தன் வாய் ஒக்கவே உரைசெய்த பத்து முரைப்பவர்க் கிடரில்லையே. |
| 40. | பொது - அந்தண் காழிப்பந்தன் சொல்லைச் சிந்தை செய்வோர் உய்ந்துளோரே. |
| 41. | திருக்கச்சியேகம்பம் - கொச்சை வேந்தன், கச்சிக்கம்பம் மெச்சுஞ் சொல்லை, நச்சும் புகழே. |
| 42. | **III. கொல்லிக் கௌவாணம்**<br>திருச்சிற்றேமம் - நல்லவாய வின்றமிழ் நவிலு ஞானசம்பந்தன் செல்வனூர் சிற்றேமத்தைப் பாடல் சீரார் வல்லவராகி வாழ்த்துவார் அல்லலின்றி வாழ்வரே. |
| 43. | **IV. கௌசிகம்**<br>சீகாழி - ஞானசம்பந்தன் சொல்லிய நற்றமிழ் மானமாக்கும் மகிழ்ந்துரை செய்யவே. |
| 44. | திருக்கழிப்பாலை - சிந்தையாற் சொன்ன செந்தமிழ் வல்லவர் முந்தி வானுலகாடன் முறைமையே. |
| 45. | திருவாரூர் - ஞானசம்பந்தன் வாய்ப்பண்ணு பாடல் வல்லார்க்கில்லை பாவமே. |
| 46. | திருக்கருகாவூர் - ஞானசம்பந்தன் செந்தமிழ் சொலவலாரவர் தொல்வினை தீருமே. |
| 47. | திருஆலவாய் - சந்தமார் தமிழ் கேட்ட மெய்ஞ்ஞான சம்பந்தன் சொற்பகரும் பழி நீங்கவே. |
| 48. | திருமழபாடி - ஞானசம்பந்தன் மாலைவல்லார்க்கில்லை பாவமே. |
| 49. | பொது - நமச்சிவாயப் பதிகம் - தமிழ் ஞானசம்பந்தன் சொல் சிந்தையால் மகிழ்ந்து ஏத்தவல்லாரெல்லாம் பந்த பாசம் அறுக்க வல்லார்களே. |
| 50. | திருத்தண்டலை நீணெறி - ஞானசம்பந்தன் றமிழ்வலார் மாற்றில் செல்வர் மறப்பர் பிறப்பையே. |
| 51. | திருவாலவாய் - ஞானசம்பந்தன் உரைபத்தும் செப்பவல்லவர் தீதிலாச் செல்வரே. |

| | |
|---|---|
| 52. | திருவாலவாய் - ஆய சொல்லின் மாலைகொண்டு ஆலவாய் அண்ணலைத் தீயதீர எண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே. |
| 53. | திருவானைக்கா - காழி ஞானசம்பந்தன் கருதிச் சொன்ன பத்திவை வாழியாகக் கற்பவர் வல்வினைகள் மாயுமே. |
| 54. | பொது. வாழ்க அந்தணர் - பாசுரம் - பல்லார்களும் மதிக்கப்பாசுரஞ் சொன்ன பத்தும் வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்லரன்றே. |
| | **V. பஞ்சமம்** |
| 55. | திருவான்மியூர் - சென்றார் தம்மிடர் தீர் திருவான்மியூர் அதன்மேல் குன்றாதேத்த வல்லார் கொடுவல்வினை போயறுமே. |
| 56. | திருப்பிரமபுரம் - சம்பந்தன் பத்தும் வல்லார் விரைதரு விண்ணுலகம் மெதிர் கொள்ள விரும்புவரே. |
| 57. | திருவொற்றியூர் - பண்புனை பாடல் பத்தும் பரவிப்பணிந்தேத்த வல்லார் விண்புனை மேலுலகம் விருப்பெய்துவர் வீடெளிதே. |
| 58. | திருச்சாத்தமங்கை - முறைமை யாலேத்த வல்லார் இமையோர் உலகில் முந்துவரே. |
| 59. | திருக்குடமூக்கு - தமிழ் பத்தும் வல்லார் விண்புடை மேலுலகம் வியப்பெய்துவர் வீடெளிதே. |
| 60. | திருவக்கரை - தமிழ் ஞானசம்பந்தன் சொன்ன பண்புடை பாடல் வல்லார் அவர்தம் வினை பற்றறுமே. |
| 61. | திருவெண்டுறை - ஞானசம்பந்தன் சொன்ன பண்ணமர் பாடல் வல்லார் வினையாயின பற்றறுமே. |
| 62. | திருப்பனந்தாள் - நண்ணிய செந்தமிழான் மிகுஞானசம்பந்தன் நல்ல பண்ணியல் பாடல் வல்லாரவர் தம் வினை பற்றறுமே. |
| 63. | திருச்செங்காட்டங்குடி - சந்தங்கொள் சம்பந்தன் தமிழுரைப்போர் தக்கோரே. |
| 64. | திருப்பெருவேளூர் - நம்பன்றன் கழல்பரவி நவில்கின்ற மறைஞான சம்பந்தன் தமிழ் வல்லார்க்கு அருவினைநோய் சாராவே. |
| 65. | திருக்கச்சி நெறிக் காரைக்காடு - தமிழ் ஞானசம்பந்தன் பண்ணாருந் தமிழ் வல்லார் பரலோகத் திருப்பாரே. |
| 66. | திருவேட்டக்குடி - உணர்ந்தேத்த வல்லார் போய் உண்டுடுப்பில் வானவரோடுயர் வானத்திருப்பாரே. |
| | **VI. சாதாரி** |
| 67. | திருப்பிரமபுரம் - பழுதிலிறை யெழுதுமொழி தமிழ் விரகன் வழிமொழி கண் மொழி தகையவே. |
| 68. | திருக்கயிலாயம் - சந்தமொடு செந்தமிழிசைந்த புகலிப்பந்தனுரை சிந்தை செய வந்த வினை நைந்து பரலோக மெளிதே. |

| | |
|---|---|
| 69. | திருக்காளத்தி - ஞானசம்பந்தனுரை நல்ல தமிழின் பாடலொடு பாடுமிசை வல்லவர் கணல்லர் பரலோக மெளிதே.<br><br>70. திருமயிலாடுதுறை - மயிலாடுதுறையைப் புணர்ந்த தமிழ் பத்து மிசையால் உரை செய்வார் பெறுவர் பொன்னுலகமே. |
| 71. | திருவைகாவூர் - தமிழ் வல்லவ ருருத்திரரெனப் பெற்றமரலோகம் மிக வாழ்வர் பிரியாரவர் பெரும்புகழோடே. |
| 72. | திருமாகறல் - உடைய தமிழ் பத்து முணர்வார் அவர்கள் தொல்வினைகள் ஒல்குமுடனே. |
| 73. | திருப்பட்டீச்சரம் - ஞானசம்பந்தனணியார் செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல தொண்டர் வினை நிற்பதிலவே. |
| 74. | திருத்தேவூர் - சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை வல்லவர்கள் சங்கையிலரே. |
| 75. | திருச்சண்பைநகர் - சீரின்மலி செந்தமிழ்கள் செப்புமவர் சேர்வர் சிவலோக நெறியே. |
| 76. | திருவேதவனம் - பந்தனுரை கொண்டு மொழிவார்கள் பயில்வார்கள் உயர் வானுலகமே. |
| 77. | திருமாணிகுழி - ஞானசம்பந்தனது சொல் முந்தியிசை செய்து மொழிவார்களுடையார் கணெடு வானநிலனே. |
| 78. | திருவேதிகுடி - இமையோர் அந்தவுலகெய்தி யரசாளுமதுவே சரதம் - ஆணை நமதே. |
| 79. | திருக்கோகரணம் - ஞானசம்பந்தன் மொழிகள் பாடவல்ல பத்தரவர் எத்திசையும் ஆள்வர் பரலோகமெளிதே. |
| 80. | திருவீழிமிழலை - சித்திர விமானமமர் செல்வ மலிகின்ற சிவலோக மருவி அத்தகு குணத்தவர்களாகி அனுபோகமொடி யோகமவரதே. |
| 81. | திருத்தோணிபுரம் - இசை மொழிந்தவடியார்கள் தடுமாற்றம் வஞ்சமிலர் நெஞ்சிருளு நீங்கியருள் பெற்று வளர் வாரே. |
| 82. | திருஅவளிவணநல்லூர் - ஞானமொழி மாலைபல நாடுபுகழ் ஞானசம்பந்தன் தேனமொழி மாலை புகழ்வார் துயர்கள் தீயதிலர் தாமே. |
| 83. | திருநல்லூர் - தமிழ் ஞானசம்பந்தன் இசைமாலை மொழிவார் போய் விரை செய் மலர் தூவ விதி பேணுகதி பேறு பெறுவாரே. |
| 84. | திருப்புறவம் - ஓதிய ஒருபது உரியதொர் இசைகொள உரைசெயும் நீதியரவர் இருநிலனிடை நிகழ்தரு பிறவியே. |
| 85. | திருவீழிமிழலை - ஞானசம்பந்தன் வண்டமிழ் சொன்னவர் துயரிலர் வியனுலகுறுகதி பெறுவரே. |
| 86. | திருச்சேறை - ஞானசம்பந்தன் சொற்றக வுறமொழி பவரழி விலர்துயர் தீருமே. |
| 87. | திருநள்ளாறு - சொற்றெரி யொருபது மறிபவர் துயரிலர் தூயரே. |
| 88. | திருவிளமர் - ஞானசம்பந்தன் மொழியிவை யுரை செயுமவர் வினை பறையுமே. |

| | |
|---|---|
| 89. | திருக்கொச்சைவயம் - ஞானசம்பந்தன் சொன்ன வாய்ந்தவிம் மாலைகள் வல்லவர் நல்லர் வானுலகின் மேலே. |
| 90. | திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் - ஞானசம்பந்தன் சொன்ன பண்ணுலா மருந்தமிழ் பாடுவார் ஆடுவார் பழியிலரே. |
| 91. | திருவடகுரங்காடுதுறை - ஞானசம்பந்தன் கருதுபாடல் கோழையா வழைப்பினுங் கூடுவார் நீடுவானுல கினூடே. |
| 92. | திருநெல்வேலி - ஞானசம்பந்தன் சொன்ன அருந்தமிழ் மாலைகள் பாடியாடக் கெடு மருவினையே. |
| 93. | திருஅம்பர் மாகாளம் - ஞானசம்பந்தன் சொன்ன நம்பி நாண் மொழிபவர்க் கில்லையாம் வினைநலம் பெறுவார்தாமே. |
| 94. | திருவெங்குரு - திருக்கடைக்காப்பு நிறைவடையவில்லை. |
| 95. | திருவின்னம்பர் - நாடமர் ஞானசம்பந்தன் நற்றமிழ் பாடவல்லார் பழியிலரே. |
| 96. | திருநெல் வெண்ணெய் - நலமல்கு ஞானசம்பந்தன் செந்தமிழ் சொலமல்குவார் துயரிலரே. |
| 97. | திருச்சிறுகுடி - மானமர் கரமுடை யீருமை வாழ்த்திய ஞானசம்பந்தன் தமிழே. |
| 98. | திருவீழிமிழலை - சண்பையுண் ஞானசம்பந்தன தமிழிவை ஒண்பொருளுணர்வது முணர்வே. |
| 99. | திருமுதுகுன்றம் - நாடிய ஞானசம்பந்தன செந்தமிழ் பாடிய அவர் பழியிலரே. |
| | **VII. பழம்பஞ்சுரம்** |
| 100. | திருத்தோணிபுரம் - ஞானசம்பந்தன் சொன்ன பாமரும் பாடல்கள் பத்தும் வல்லார் பார்முழுதாள்பவரே. |
| 101. | திருஇராமேச்சுரம் - ஞானசம்பந்தன் நல்ல மொழியான் நவின்றேத்தும் பாவியன் மாலைவல்லார் அவர்தம் வினையாயின பற்றறுமே. |
| 102. | திருநாரையூர் - பாடல் பத்தும் பயின்றார் வினை போகி மண்மதியாது போய் வான் புகுவர் வானோர் எதிர் கொளவே. |
| 103. | திருவலம்புரம் - பாடல்கள் பத்தும் சொல்லவல்லவர் தொல்வினை போய்ச் செல்வன சேவடி சென்றணுகிச் சிவலோகஞ் சேர்வாரே. |
| 104. | திருப்பரிதி நியமம் - புனைந்த பத்தும் பரவிப் புகழ்ந்தேத்த ஐயுறவில்லை. பிறப்பறுத்தல் அவலம் அடையாவே. |
| 105. | திருக்கலிக்காமூர் - ஞானசம்பந்தன் சொன்ன தமிழால் கலிக்காமூர் வாழி எம்மானை வணங்கியேத்த மருவா பிணிதானே. |
| 106. | திருவலஞ்சுழி - தமிழ்மாலை ஆழியிவ் வையத்தேத்த வல்லாரவருக்குந் தமருக்கும் ஊழியொரு பெருமின்ப மோர்க்கும் உருவும் முயர்வாமே. |
| 107. | திருநாரையூர் - பாடிய தண்டமிழ் மாலை பத்தும் பரவித் திரிந்தாக வாடிய சிந்தையினார்க்கு நீங்கு மவலக்கடல் தானே. |

| | |
|---|---|
| 108. | திருஆலவாய் - மாடக்காழிச் சம்பந்தன் மதித்தவிப்பாடல் வல்லவா் பாக்கியவாளரே. |
| 109. | திருக்கயிலாயமும் - திருவானைக்காவும் - திருமயேந்திரமும் - திருவாரூரும் கூடற்சதுக்கம் - ஆனைக்காவை ஞானசம்பந்தன்றமிழ் சொல்லுமே. |
| 110. | திருப்பிரமபுரம் - கழுமலத்தினுட் கடவுட்பாதமே கருது ஞானசம்பந்தரின் இன்தமிழ் முழுதும் வல்லவா்க் கின்பமே தரு முக்கணெம் மிறையே. |
| 111. | திருவீழிமிழலை - சண்பை ஞானசம்பந்தன் வாய்நவில் பந்தமாா் தமிழ் பத்தும் வல்லவா் பத்த ராகு வரே. |
| 112. | திருப்பல்லவனீச்சரம் - ஞானசம்பந்தன் நற்றமிழ் சொல்லவல்லவா் நல்லவரே. |
| 113. | திருக்கழுமலம் - மருவிய தமிழ் விரகன மொழியே வல்லவா் தம்மிடா் திடமொழியே. |
| 114. | திருவேகம்பம் - பந்தன் இன்னியல் பாடிய பத்துமே பாடவல்லவ ரா யினபத்துமே. |
| 115. | திருஆலவாய் - நான் உரைத்தன செந்தமிழ் பத்துமே வல்லவா்க் கிவை நற்றமிழ் பத்துமே. |
| 116. | திருவீழிமிழலை - காயவா்க்க சம்பந்தனே காழிஞானசம்பந்தனே வாயுரைத்த தமிழ் பத்துமே வல்லவா்க்கு மிவை பத்துமே. |
| | **IV. கௌசிகம் (மாலை மாற்று)** |
| 117. | சீகாழி - நோ் அகழ் ஆம் இதய ஆசு ஆழி தாய் ஏல் நன்நீயே<br>நன்நீள் ஆய் உழிகா<br>காழி உளான் இன் நையே நினையே, தாழ் இசையா<br>தமிழாகரனே |
| | **VIII. புறநீா்மை** |
| 118. | திருக்கழுமலம் - வானிடை வாழ்வா் மண்மிசைப் பிறவாா் மற்றிதற்கு ஆணையும் நமதே. |
| 119. | திருவீழிமிழலை - தூமொழி ஞானசம்பந்தன் வாய்ந்த பாமாலை வாய்நவில்வாரை வானவா் வழிபடுவாரே. |
| 120. | திருஆலவாய் - ஞானசம்பந்தன் செந்தமிழ் இவை கொண்டின்னலம் பாடவல்லாா் இமையோரேத்த வீற்றிருப்பா் இனிதே. |
| 121. | திருப்பந்தணை நல்லூா் - பந்தணை நல்லூா் சொல்லிய பாடல் பத்தும் வல்லவா் மேல் தொல்வினை சூழகிலாவே. |
| 122. | திருஓமாம்புலியூா் - ஞானசம்பந்தன் அளிதரு பாடல்பத்தும் வல்லாா்கள் அமரலோகத்திருப்பாரே. |
| 123. | திருக்கோணமலை - உரைப்பவா், கேட்பவா், உயா்ந்தோா் சுற்றமுமாகித் தொல்வினை அடையாா் தோன்றுவா் வானிடைப் பொலிந்தே. |
| | **IX. அந்தாளிக் குறிஞ்சி** |
| 124. | திருக்குருகாவூா் வெள்ளடை - திருக்கடைக்காப்பு நிறைவடையவில்லை. |
| 125. | திருப்பெருமணநல்லூா் - நறும்பொழிற் காழியுண் ஞானசம்பந்தன் உறும்பொருளாற் சொன்ன வொண்டமிழ் வல்லாா்க் கறும்பழி பாவ மவல மிலரே. |

| வ.எண் | பதிகப்பயன் | பதிகங்களின் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | வான், விண், இமையவர், பேறு பெறுவர் | 27 |
| 2. | இடர், பாவம், துயர் நீங்குவர் | 38 |
| 3. | வீடுபேறு, சிவகதி | 18 |
| 4. | வினைநீக்கம் | 21 |

| | |
|---|---|
| 126. | திருஇடைவாய் - நாறும் பொழிற்கா ழியர்ஞானசம்பந்தன் கூறுந் தமிழ் வல்லவர் குற்றமற்றோரே. |
| 127. | திருக்கிளியன்னவூர் - ஞானசம்பந்தன் சொல் சீரினை - அறைய நின்றன பத்தும் வல்லார்க்குமே குறை இலாது, கொடுமை தவிர்வரே. |



## திருஞானசம்பந்தர் தேவாரம்

### பண்களின் அட்டவணை

| வ. எண் | பண்கள் | பதிக எண்கள் | மொத்த பதிகம் | | |
|---|---|---|---|---|---|
| | | | முதல் திருமுறை | இரண்டாம் திருமுறை | மூன்றாம் திருமுறை |
| 1. | நட்டபாடை | 1-22 | 22 | | |
| 2. | தக்க ராகம் | 23-46 | 24 | | |
| 3. | பழந்தக்க ராகம் | 47-62 | 16 | | |
| 4. | தக்கேசி | 63-74 | 12 | | |
| 5. | குறிஞ்சி | 75-103 | 29 | | |
| 6. | வியாழக் குறிஞ்சி | 104-128 | 25 | | |
| 7. | மேகராகக் குறிஞ்சி | 129-135 | 7 | | |
| 8. | யாழ்மூரி | 136 | 1 | | |
| 9. | இந்தளம் | 1-39 | | 39 | |
| 10. | சீகாமரம் | 40-53 | | 14 | |
| 11. | காந்தாரம் | 54-82 | | 29 | |
| 12. | பியந்தைக் காந்தாரம் | 83-96 | | 14 | |
| 13. | நட்டராகம் | 97-112 | | 16 | |
| 14. | செவ்வழி | 113-122 | | 10 | |
| 15. | காந்தார பஞ்சமம் | 1-23 | | | 23 |
| 16. | கொல்லி | 24-41 | | | 18 |
| 17. | கொல்லிக்கௌவாணம் | 42 | | | 1 |
| 18. | கௌசிகம் | 43-54, 117 | | | 13 |
| 19. | பஞ்சமம் | 55-66 | | | 12 |
| 20. | சாதாரி | 67-99 | | | 33 |
| 21. | பழம்பஞ்சுரம் | 100-116 | | | 17 |
| 22. | புறநீர்மை | 118-123 | | | 6 |
| 23. | அந்தாளிக் குறிஞ்சி | 124-125 | | | 2 |
| | **ஆக** | | **136** | **122** | **125** |

### பிற்சேர்க்கை (மூன்றாம் திருமுறை)

1. கொல்லி - திருவிடைவாய் - 1
2. கௌசிகம் - கிளியன்னவூர் - 1

**ஆக** **2**

## திருஞானசம்பந்தரின்
## திருநாட்டுத் தலப்பதிக அட்டவணை

| வ. எண் | நாடு விபரம் | தலங்கள் எண்கள் | பதிகங்களின் எண்ணிக்கை | | | மொத்த பதிகங்கள் |
|---|---|---|---|---|---|---|
| | | | முதல் திருமுறை | இரண்டாம் திருமுறை | மூன்றாம் திருமுறை | |
| 1. | தொண்டை நாடு | 25 | 15 | 6 | 10 | 31 |
| 2. | நடு நாடு | 15 | 11 | 8 | 4 | 23 |
| 3. | காவிரி வடகரை | 54 | 47 | 45 | 42 | 134 |
| 4. | காவிரி தென்கரை | 100 | 52 | 51 | 47 | 150 |
| 5. | பாண்டிய நாடு | 13 | 7 | 3 | 14 | 24 |
| 6. | கொங்கு நாடு | 4 | 1 | 3 | - | 4 |
| 7. | துளுவ நாடு | 1 | - | - | 1 | 1 |
| 8. | வடநாடு | 5 | 2 | 3 | 2 | 7 |
| 9. | ஈழநாடு | 2 | - | 1 | 1 | 2 |
| 10. | பொது | 7 | 1 | 2 | 4 | 7 |
| | **ஆ க** | **226** | **136** | **122** | **125** | **383** |

### புதிதாகக் கிடைக்கப் பெற்றவை

1. திருவிடைவாய் - காவிரி தென்கரைத் தலம் 1
2. கிளியன்னவூர் - காவிரி தென்கரைத் தலம் 1

இரண்டும் மூன்றாந் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன **385**

## முதல் மூன்று திருமுறைகள் ஒப்புநோக்கு

| வ. எண் | பொருளடக்கம் | முதல் திருமுறை | இரண்டாம் திருமுறை | மூன்றாம் திருமுறை |
|---|---|---|---|---|
| **I. புள்ளி விவர ஆய்வு** | | | | |
| 1. | பாடப்பட்ட தலங்கள் | 88 | 90 | 84 + 2 |
| 2. | பாடப்பட்ட பதிகங்கள் | 136 | 122 | 125 + 2 |
| 3. | பாடப்பட்ட பாடல்கள் | 1469 | 1331 | 1368 |
| 4. | அற்புதப் பதிகங்கள் | 7 | 7 | 9 |
| 5. | பொதுப் பதிகங்கள் | 1 | 2 | 4 |
| 6.அ) | பாடப்பட்ட பண்கள் | நட்டபாடை - 22<br>தக்கராகம் - 24<br>பழந்தக்கராகம்-16<br>தக்கேசி-12<br>குறிஞ்சி-29<br>வியாழக் குறிஞ்சி-25<br>மேகராகக் குறிஞ்சி-7<br>யாழ்மூரி-1 | இந்தளம் - 39<br>சீகாமரம் -1 4<br>காந்தாரம்-29<br>பி.காந்தாரம்-14<br>நட்டராகம் -16<br>செவ்வழி-10 | காந்தார பஞ்சமம்-23<br>கொல்லி-18 + 1<br>கொல்லிக் கௌவாணம்-1<br>கௌசிகம் -15 + 1<br>பஞ்சமம்-10<br>சாதாரி-33<br>பழம்பஞ்சுரம்-17<br>புறநீர்மை-6<br>அந்தாளிக்குறிஞ்சி-2 |
| ஆ) | மிக அதிகமான பதிகம் கொண்ட பண் | குறிஞ்சி-29 | இந்தளம்-39 | சாதாரி-33 |
| **II. திருக்கடைக்காப்பும் பயன்களின் தொகுப்பும்** | | | | |
| 1. | இமையோர், வானுலகம் பெறுவர் | 30 | 36 | 27 |
| 2. | இடர், துன்பம், பாவம் கெடும் | 21 | 29 | 38 |
| 3. | சிவகெதி பெறுவர் | 19 | 20 | 18 |
| 4. | வினை அகலும் | 16 | 16 | 21 |
| **III. அற்புதப்பதிகங்கள்** | | | | |
| 1. | அதிசயம் நிகழ்ந்தபின் பாடியது (திருஞானசம்பந்தர் கேட்காமலே இறைவன் கொடுத்தது) | (தோடுடைய செவியன்) ஞானப்பால் உண்டபின் பாடியது) (மடையில் வாளை) பொற்றாளம் பெற்றுப் பாடியது | (எந்தையீசன் ஏறமர் கடவுள் முத்துச்சிவிகை, குடை, சின்னம் பெற்றபின் பாடியது | |

| வ. எண் | பொருளடக்கம் | முதல் திருமுறை | இரண்டாம் திருமுறை | மூன்றாம் திருமுறை |
|---|---|---|---|---|
| 2. | பொன், பொருள் பெற பாடியது (தமக்காக அல்ல) | (வாசி தீரவே காசு நல்குவீர்) மக்கள் பஞ்சம் தீரப் பாடியது | | (இடரினும் தளரினும்) தந்தையார் வேள்விக்குப் பொன் வேண்டிப் பாடியது |
| 3. | நோய் தீர்த்தல் | (துணிவளர் திங்கள்) முயலகன் நோய் தீர்த்தல் | | |
| 4. | இயற்கைக்கு மாறான விளைவுகள் புரிதல், பஞ்சபூதங்கள் சிறுபணித் தெய்வங்களை ஏவுதல் | (போகமார்த்த பூண்முலையாள்) பச்சைப் பதிகம், அனல்வாதத்தில் வேகாதிருந்த ஏடு | (சதுரம் மறை) திருக்கதவம் அடைத்தல் | (செய்யனே - பையவே சென்று பாண்டியற்காகவே) தீயை ஏவுதல் சமணர் இட்ட தீ அவர்களையே பற்றுமாறு ஏவுதல் (தளிரிள வளரொளி) பச்சைப்பதிகம் அனல் வாத ஏடு வேகாதிருத்தல் - அப்போது பாடியது (வாழ்க அந்தணர்) புனல்வாதப் பாடல். (கொட்டமே கமழும்) ஓடம் செலுத்தியது |
| 5. | இறைவன் திருவுள்ளக் குறிப்பறிதல் | | | (வேதவேள்வியை) (காட்டுமாவது) திருவுள்ளமறியாது எதையும் செய்யக் கூடாது |
| 6. | இறந்தவர்களை எழுப்புவது | | சடையாயெனுமால் (திருமருகல்) மட்டிட்ட (பூம்பாவை) | |

| வ. எண் | பொருளடக்கம் | முதல் திருமுறை | இரண்டாம் திருமுறை | மூன்றாம் திருமுறை |
|---|---|---|---|---|
| 7. | சாதனங்கள் (திருவடியை அடைய) | | (மந்திரமாவது நீறு) வேயுறுதோளி | (துஞ்சலும், துஞ்சலிலாத) ஐந்தெழுத்துப் பதிகம் (காதலாகிக் கசிந்து) நமச்சிவாயப் பதிகம் சோதியில் கலந்த போது பாடியது |
| **IV.** | **சொல்லணியியலின் மூல இலக்கியம்** | | | |
| 1. | வினாவுரை | 3 | 4 | |
| 2. | திருவிராகம் | 10 | 5 | 22 |
| 3. | பல்பெயர்ப்பத்து | 1 | | |
| 4. | திருஇருக்குக்குறள் | 7 | | 2 |
| 5. | மொழிமாற்று | 1 | | |
| 6. | தாளச்சதி | 1 | | |
| 7. | ஏகபாதம் | 1 | | |
| 8. | எழுகூற்றிருக்கை | 1 | 1 | |
| 9. | சக்கரமாற்று | | 1 | |
| 10. | கோமூத்திரி அந்தாதி | | 1 | |
| 11. | நாலடிமேல் வைப்பு | | | 3 |
| 12. | ஈரடிமேல் வைப்பு | | | 2 |
| 13. | ஈரடி | | | 3 |
| 14. | வழிமொழித் திருவிராகம் | | | 2 |
| 15. | திருமுக்கால் | | | 6 |
| 16. | கூடற்சதுக்கம் | | | 1 |
| 17. | இயமகம் | | | 4 |
| 18. | மாலைமாற்று | | | 1 |
| | **மொத்த சித்திரக் கவிகள்** | **25** | **12** | **46** |

# முதல் மூன்று திருமுறைகளில் சில ஒப்புநோக்குச் செய்திகள்

(சு. குஞ்சிதபாதம், திருவாவடுதுறை ஆதீனப் பள்ளி)

முதல் மூன்று திருமுறைகளில் சில அம்சங்களை ஒப்பிடுதல் இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## 1. பாடல்தோறும் பலன்

பதிகத்தின் இறுதியில் 'திருக்கடைக்காப்பு' வைத்துப் பதிகத்தை ஓதுதலால் கிடைக்கும் பயனை உரைத்தருள்வார் சம்பந்தப்பெருமான். சில பதிகங்களில் பாடல்தோறுமோ அல்லது பெரும்பாலான பாடல்களிலோ சிவவழிபாட்டின் பயனை உரைத்தருளிச் செல்லும் பாங்கினைக் காணலாம். இம்முறைமையானது வழிபாட்டு நெறியில் நிற்போருக்கு மிகுந்த ஊக்கத்தினை அருள்வதாக உள்ளது. இத்தகைய பதிகங்களை முதல் மூன்று திருமுறைகளிலும் காணலாம். சில சான்றுகள் வருமாறு.

### முதல் திருமுறை

"மறை வல்லானையே – பேணப்பறையும் பிணிகளானவே"
"தொழலார் பக்கல் துயரமில்லையே"
"நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே"

– திருக்கோலக்கா

"சடையான் கழலேத்த சாரா வினைதானே"
"எந்தை கழலேத்த இடர்வந் தடையாவே"
"ஈசன் என்பார்கட்கு இல்லை இடர்தானே"

– திருஅம்பர்மாகாளம்

"புரமூன்று எரிசெய்த சரவா என்பார் தத்துவ ஞானத்தலையாரே"
"ஐயா என்பார்க்கு அல்லல்களான அடையாவே"

– சீர்காழி – உரவார் கலையின்

"அன்புபட்ட மனத்தார்கள் அறியார் பாவமே"
"அடிநீழல் தங்கும் மனத்தார்கள் தடுமாற்று அறுப்பாரே"

– திருநல்லூர்

எதிர்மறையில் வைத்து வழிபாட்டினை வலியுறுத்தி அருள்தலும் காணத்தக்கது.

"சேராதவர் மேற்சேரும் வினைகளே
ஓராதவர்மேல் ஒழியா ஊனமே"

– திருச்செம்பொன்பள்ளி

### இரண்டாந் திருமுறை

"அலங்கல் சூட்ட வல்லார்க்கு அடையா அருநோயே"
"பேராயிரமும் பிதற்றத்தீரும் பிணிதானே"

– சீர்காழி – நலங்கொள்முத்தும்

"பற்றானைப் பற்றி நின்றார்க்கு இல்லை பாவமே"
"நம்பானை நண்ணவல்லார் வினை நாசமே"

– சீர்காழி – நல்லானை

"அடிதொழும் அடியவர் வினையொடும் பொருந்தாரே"
"ஆணிப் பொன்னினை அடிதொழும் அடியவர்க்கு
அருவினை அடையாவே"

– திருச்சிரபுரம் – அன்னமென்னடை

"அண்ணலார் அடியார் அருளாலுங் குறைவிலரே"

(எனவே பொருளாலும் குறைவிலராய்த் திகழ்வர் என்பது பெறப்படுகின்றது)

"வாழ்த்தி ஏத்திய மாந்தர் தம்வினை விண்டல்
அங்கு எளிதாம், அது நல்விதியாமே"

(வழிபாடு நல்ஊழிற்கு வகை செய்யும் என்கிறது)

"நினைந்திருந்து இசைபாடுவார்
வினைசெற்ற மாந்தர் எனத் தெளிமின்கள் சிந்தையுளே"

– சீர்காழி – பண்ணின்நேர்மொழி

"மணஞ்சேரிப் பயில்வானைப் பற்றி நின்றார்க்கு இல்லை பாவமே"
"மணஞ்சேரிப் பெண்ணானைப் பேச நின்றார் பெரியோர்களே"

– திருமணஞ்சேரி

"பெருமானடி ஞானமாகந் நினைவார் வினையாயின நையுமே"

– திருச்சிக்கல்

"கோட்டூர்நற் கொழுந்தே என்றெழுவார்கள்
சாலநீள்தலம் அதனிடைப் புகழ்மிகத் தாங்குவர் பாங்காலே"

"நிலவு செல்வத்தராகி நீள் நிலத்திடை நீடிய புகழாரே"

– திருகோட்டூர்

"காறாயில் ஊரானே என்பவர் ஊனம் இலாதாரே"
"காறாயில் நிலையானே என்பவர்மேல் வினை நில்லாவே"

– திருக்காறாயில்

"மன்னே என வல்வினை மாய்ந்தறுமே"
"அறவா என வல்வினை ஆசறுமே"

– திருநாகேச்சரம்

## மூன்றாந் திருமுறை

"நீதியால் நினைந்தேத்தி உள்கிடச்
சாதியா வினையான தானே"

வணங்கிட.....

நுந்தம் மேல்வினை ஓடவீடுசெய்
எந்தையாய எம் ஈசன் தானே

– திருப்பூந்தராய் – தக்கன் வேள்வி

"நாதனை அடிதொழ நன்மையாகுமே"

"பெருந்தகை அடிதொழப் பீடையில்லையே"

– திருப்பூவணம்

"தங்கையால் தொழுவார் தகவாளரே"

"நாடினார்க்கில்லை நல்குர வானவே"

– திருமழபாடி – அங்கை ஆரழலன்

இத்திருப்பதிகத்தின் 2–ஆம் திருப்பாடல் வார்த்தைக்கு வார்த்தை பயன் கூறுவதாகும்.

"தம் அடிபோற்றி என்பார்கட்கு அணியரே"

"இன்பங் கொடுப்பர், தொழக் குறைவில்லையே"

– திருவீழிமிழலை – கேள்வியர்

இத்திருப்பதிகத்தின் 4–ஆம் திருப்பாடல் சிவசாரூபப்பயன் கூறுதல் சிறப்பான ஒன்று.

"ஆல நீழலின் மேவினான் அடிக்கு அன்பர் துன்பிலரே"

"மிழலையான் அடி"

சிரக்கொள் பூவென ஒருக்கினார்புகழ்
பரக்கும் நீள்புவியே வேலின் நேர்தரு

– திருவீழிமிழலை

இவ்வாறு பாடல்தோறும் பயன்கூறும் பொருளில் மூன்று திருமுறைகளிலிருந்தும் சில பதிகங்களின் சில தொடர்களே சான்றாகக் காட்டப்பட்டுள்ளன.

## 2. உபதேசம்

உயிர்க்கு உறுதி பயக்கும் பல உபதேசங்களை ஞானசம்பந்தப் பெருமான் பரங்கருணையுடன் அருளிச் செய்துள்ளார். அவ்வுபதேசங்களை மூன்று திருமுறைகளிலும் ஆங்காங்குக் காணலாம். அவற்றுள் சில,

## முதல் திருமுறை

"குழகன் சேவடி தொழுது வாழ்மினே"

"சோதி நாமமே ஓதி உய்ம்மினே"

"மறையுளான் கழற்கு உறவு செய்ம்மினே"

– திருஅன்னியூர்

"ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை உடைத்தாய வாழ்க்கை ஒழியத்தவம்
அடங்கும் இடங்கருதி நின்றீரெல்லாம் அடிகள் அடிநிழற்கீழ் ஆளாம் வண்ணம்
கிடங்கும் மதிலுஞ் சுலாவி எங்கும் கெழுமனைகள் தோறும் மறையின்ஒலி
தொடங்குங் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே"

– திருத்தூங்கானைமாடம்

## இரண்டாந் திருமுறை

"நம் பொருள் நம்மக்களென்று நச்சி இச்சை செய்துநீர்
அம்பரம் அடைந்துசால அல்லலுய்ப்பதன்முனம்
உம்பர்நாதன் உத்தமன் ஒளிமிகுந்த செஞ்சடை
நம்பன்மேவு நன்னகர் நலங்கொள்காழி சேர்மினே"

– சீர்காழி

"பண்டுசெய்த வல்வினை பற்றறக் கெடும்வகை
உண்டுமக்(கு) உரைப்பன்நான் ஒல்லைநீர் எழுமினோ
மண்டுகங்கை செஞ்சடை வைத்துமாதொர் பாகமாக்
கொண்டுகந்த மார்பினான் கோடிகாவு சேர்மினே"

– திருக்கோடிகா

"ஏற்றானை ஏத்துமின் நும்மிடர் ஏகவே"

"உடையானை உள்குமின் உள்ளங்குளிரவே"

– திருக்கோழம்பம்

நெஞ்சிற்கு உரைப்பதாகப் பாடியருளப் பெற்ற உபதேசப் பாடல்களும் உள்ளன.

"எந்தநாள் வாழ்வதற்கே மனம் வைத்தியால் ஏழை நெஞ்சே
அந்தண் ஆரூர்தொழு துய்யலாம் மையல் கொண்டு அஞ்சல் நெஞ்சே"

– திருவாரூர் – பவனமாய்

"நீ நாளும் நன்னெஞ்சே நினைகண்டாய்"

– திருச்சாய்க்காடு

## மூன்றாந் திருமுறை

"அரவரை அழகனை அடியிணை பணிமினே"

"அந்தமில் அழகனை அடிபணிந்(து) உய்ம்மினே"

"யோகணைந்தவன்கழல் உணர்ந்திருந்து உய்ம்மினே"

– திருமயேந்திரப்பள்ளி

இத்திருப்பதிகம் திருவடிச் சிந்தனை செய்யுமாறு உரைத்தருளும் உபதேசத்தினை மகுடமாக உடைய பெருஞ்சிறப்புக்குரியது.

"வள்ளல் வலஞ்சுழி வாணன்என்று மருவி நினைந்தேத்தி
உள்ளம் உருக உணருமின்கள் உறுநோய் அடையாவே"

– திருவலஞ்சுழி

நெஞ்சத்திற்கு அறிவுறுத்தி நெறிப்படுத்தும் நீர்மையினைப் பிரமாபுரப் பதிகத்தின் பின்வரும் திருப்பாடலில் கண்டு போற்றலாம்.

"ஊடினால்இனி ஆவதென்உயர் நெஞ்சமே! உறுவல்வினைக்(கு)
ஓடிநீஉழல்கின்றதென் ? அழல் அன்று தன்கையில் ஏந்தினான்
பீடுநேர்ந்தது கொள்கையான்பிர மாபுரத்துறை வேதியன்
ஏடுநேர்மதி யோடுஅராவணி எந்தையென்று நின்று ஏத்திடே"

– திருப்பிரமபுரம்

### 3. பதி இயல்பு

## முதல் திருமுறை

"விளையாததொர் பரிசில்வரு பசுபாசவே தனைஒண்
தளையாயின தவிரவ்வருள் தலைவன்..............."

– திருமுதுகுன்றம்

"ஈறாய்முதல் ஒன்றாய்இரு பெண்ஆண் குணம் மூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம் அவை ஐந்தாய்
ஆறார்சுவை ஏழோசையொடு எட்டுத்திசை தானாய்
வேறாய்உடன் ஆனான்இடம் வீழிம்மிழலையே"

– திருவீழிமிழலை

## இரண்டாந் திருமுறை

"விரிந்தனை குவிந்தனை விழுங்குயிர் உமிழ்ந்தனை"

– திருப்புறம்பயம்

"விரிந்தனை" என்றமையால் சர்வவியாபகமும், "குவிந்தனை" என்றமையால் உயிர்க்குயிராய் விளங்கும் நுட்பமும், விழுங்குயிர் உமிழ்ந்தனை என்றமையால் ஒடுக்கிய உயிர்களுக்கு மீண்டும் பிறவி அருளும் கருணைத்தொழில்களும் குறிக்கப்பெற்றன.

"முன்னிய கலைப்பொருளும் மூவுலகில் வாழ்வும்
பன்னிய ஒருத்தர்......"

"முன்னம்இரு மூன்று சமயங்களவையாகிப்
பின்னைஅருள் செய்த பிறையாளன்"

"நல்குரவும் இன்பமும் நலங்களவை யாகி
வல்வினைகள் தீர்த்தருளும் மைந்தனிடம் என்பர்"

– திருப்புகலி

"குற்றம் அறியாத பெருமான்" – திருக்கருப்பறியலூர் (10)

இத்தொடர் இயல்பாகவே பாசங்களின் நீங்கியிருத்தல் என்னும் குணத்தினைக் குறிக்கின்றது.

### மூன்றாந் திருமுறை

"பரசுபாணியர் பாடல்வீணையர் பட்டினத்துறை பல்லவனீச்சரத்(து)
அரசுபேணிநின்றார் இவர் தன்மை அறிவாரார்"

– திருப்பல்லவனீச்சரம்

".............காடுறை வாழ்க்கையாராயினும்
பெரியர் ஆரறிவார் அவர் பெற்றியே"

"எந்தையார் அவர் எவ்வகையார் கொலோ"

– திருப்பாசுரம்

தடத்தஇலக்கணத்தோடு அதற்கு அப்பாற்பட்ட சொரூப இலக்கணமும் உடையவராகப் பெருமான் விளங்கியருளும் மேன்மையினை மேற்காண் பகுதிகள் இனிதே காட்டுகின்றன.

பதியியல்பு கூறும் திருப்பாடல்கள் ஏராளமாக இருப்பினும் சித்தாந்தவளம் வெளிப்படையாக விளங்கும் திருப்பாடல்களுள் சில மட்டுமே இங்குக் காட்டப்பெற்றுள்ளன.

## 4. அடியார் பெருமை

### முதல் திருமுறை

"அச்சம்இலர் பாவம் இலர் கேடும்இலர் அடியார்
நிச்சம்உறு நோயும்இலர்"

– திருநின்றியூர்

"சாவாதவர் பிறவாதவர் தவமேமிகவுடையார்
மூவாதபன் முனிவர்தொழும் முதுகுன்றடைவோமே"

– திருமுதுகுன்றம் – மத்தாவரை

**இரண்டாந்திருமுறை**

"**.........**ஐந்து – புலநீர்மை புறங்கண்டார்,
பொக்கம்செய்யார், போற்றோவார், சலநீதர்அல்லாதார்
தக்கோர்"

– திருத்தலைச்சங்காடு – 6

"சுற்றமொடு பற்றவை துயக்கற அறுத்துக்
குற்றமில் குணங்களொடு கூடும் அடியார்கள்"

– திருக்கருப்பறியலூர்

"**...........**தீதில் கச்சித் திருஏகம்பம்
மேயானை மேவுவார் என்தலை மேலாரே"

– திருக்கச்சிஏகம்பம் – மறையானை

"**...........**போற்றுவார் ஆற்றல் உடையாரே"

– திருவெண்ணியூர் (8)

**மூன்றாந் திருமுறை**

"அஞ்சுபுலன் வென்றறு வகைப்பொருள் தெரிந்தெழு இசைக்கிளவியால்
வெஞ்சினம் ஒழித்தவர்கள் மேவிநிகழ் கின்றதிரு வேதிகுடியே"

– திருவேதிகுடி (10)

"சலத்தினால் பொருள்கள் வேண்டுதல் செய்யாத் தன்மையார்
நன்மையால் மிக்க உலப்பில்பல் புகழார் "

– திருவோமாம்புலியூர் (5)

**5. கோள்களினால் நேர்ந்திடும் விளைவுகளினின்றும் உய்ந்திட வழிகாட்டி அருளல்**

**முதல் திருமுறை**

நாளாய போகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாய அன்பு செய்வோம் மடநெஞ்சே! அரன்நாமம்
கேளாய்நம கிளைகிளைக்கும் கேடுபடாத் திறம்அருளிக்
கோளாய நீக்குமவன் கோளிலிஎம் பெருமானே

– திருக்கோளிலி

## இரண்டாந் திருமுறை

கோள்களால் ஏற்படும் விளைவுகள் யாவும் அடியார்களுக்கு மிக நல்லனவாகவே விளங்கும் என்று ஆணையிட்டு உரைக்கும் கோளறு திருப்பதிகம் இரண்டாம் திருமுறையில் விளங்குகின்றது.

## மூன்றாந் திருமுறை

சிவபிரானிடத்து வரம் பெற்றிருந்த இராவணன், கோள்களைச் சிறைவைக்கும் அளவுக்கு ஆற்றல் அருளப்பெற்றமை,

"சனிபுதன் ஞாயிறு வெள்ளிதிங் கள்பல தீயன
முனிவது செய்துகந்தானை"

– திருஇராமேச்சுரம் (7)

என்னும் தொடரால் பெறப்படுகின்றது.

## 6. அடியார்களுக்கு அருளும் பொருட்டு வேண்டுதல்

முதல் திருமுறையில் திருநெடுங்களத் திருப்பதிகமும், இரண்டாந் திருமுறையில் 'திருப்புறவார் பனங்காட்டூர் திருப்பதிகமும் அடியார்களின் பொருட்டு வேண்டிப் பாடியருளப் பெற்றவையாகும்'.

மூன்றாம் திருமுறையில் தம்மையும் உடன்சேர்ந்து,

"அருளாய் சுருங்களம தொல்வினையே"

– (கோயில் – ஆடினாய்....

"தவநெறி அருள்எமக்கே"

– திருப்புகலி 3 – இயலிசை

முதலான தொடர்கள் காணப்பெறுகின்றன.

முதல் மூன்று திருமுறைகளையும், சிற்சில கருத்துகளை மையமாக வைத்து ஒப்புநோக்கும் அரிய வாய்ப்பினை வழங்கிய சிவமார் திருமிகு வேந்தர் ஐயா அவர்களுக்கு என் நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

**திருச்சிற்றம்பலம்**

# ஏழு தேவாரத்திருமுறைகள் ஒப்புநோக்கு

திருமுறையே சைவநெறிக் கருவூலம் தென்தமிழின் தேன்பாகாகும்
திருமுறையே கயிலையின்கண் சிவபெருமான் செவிமடுத்த சீர்சால் வேதம்
திருமுறையே நடராசன் கரம்வருந்த எழுதியருள் தெய்வநூலாம்
திருமுறையே சொக்கேசன் மதிமலிவாய் மலர்ந்தருளும் சிறப்பிற்றாமால். - சிதம்பரத்தலத் தனிப்பாடல்

அன்புடையீர், வணக்கம்.

நாமெல்லாம் உய்வதற்காகப் பெருமான் தேவார முதலிகள் உள்ளிட்ட அருளாளர் பெருமக்களை இப்பூவுலகுக்கு அனுப்பி, வற்றாத திருமுறைச் செல்வங்களை வாரி வழங்கியுள்ளார். அவர்கள் பாடி அருளிய 8261 பாடல்களை உள்ளடக்கிய முதல் ஏழு திருமுறைகளையும் கீழ்க்கண்டவாறு பட்டியலிட்டுத் தங்களின் பார்வைக்காக வைக்கிறோம்.

## திருமுறைகள்

(அடைப்புக்குறி எண்கள் - பதிக எண்ணிக்கையைக் குறிக்கும்)

| வ. எண். | திருமுறைத்தலங்கள் | திருமுறைகள் | | | | | | | தலம் - கூடுதல் பதிகம் | மூவர் பாடல் | தி.ஞா.ச. + அப்பர் | தி.ஞா.ச. + சுந்தரர் | அப்பர் + சுந்தரர் | தி.ஞா.ச. மட்டும் | அப்பர் மட்டும் | சுந்தரர் மட்டும் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | | | | | | | | |
| 1. | திரு அகத்தியான்பள்ளி | | 1 | | | | | | 1 | | | | | 1 | | |
| 2. | அச்சிறுபாக்கம் | 1 | | | | | | | 1 | | | | | 2 | | |
| 3. | திரு அஞ்சைக்களம் | | | | | | | 1 | 1 | | | | | | | 1 |
| 4. | திரு அண்ணாமலை | 2 (2) | | | 1 | 1 (2) | | | 5 | | 1 | | | | | |
| 5. | திரு அதிகை | 3 | | | 2(9) | 2(2) | 1(4) | 2 | 17 | 1 | | | | | | |
| 6. | திரு அநேகதங்காவதம் | | 2 | | | | | | 1 | | | | | 3 | | |
| 7. | திரு அம்பர் பெருந் திருக்கோயில் | | | 1 | | | | | 1 | | | | | 4 | | |
| 8. | திரு அம்பர் மாகாளம் | 4 | 3 | 2 | | | | | 3 | | | | | 5 | | |
| 9. | திரு அரசிலி | | 4 | | | | | | 1 | | | | | 6 | | |
| 10. | திரு அரதைப் பெரும்பாழி | | | 3 | | | | | 1 | | | | | 7 | | |
| 11. | திரு அரிசிற்கரைப்புத்தூர் | | 5 | | | 3 | | 3 | 3 | 2 | | | | | | |
| 12. | திரு அவளிவணல்லூர் | | | 4 | 3 | | | | 2 | | 2 | | | | | |
| 13. | அவிநாசி | | | | | | | 4 | 1 | | | | | | | 2 |
| 14. | திரு அழுந்தூர் | | 6 | | | | | | 1 | | | | | 8 | | |

| வ. எண். | திருமுறைத்தலங்கள் | திருமுறைகள் | | | | | | | தலம் - கூடுதல் பதிகம் | மூவர் பாடல் | தி.ஞா.ச. + அப்பர் | தி.ஞா.ச. + சுந்தரர் | அப்பர் + சுந்தரர் | தி.ஞா.ச. மட்டும் | அப்பர் மட்டும் | சுந்தரர் மட்டும் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | | | | | | | | |
| 15. | திரு அறையணிநல்லூர் | | 7 | | | | | | 1 | | | | | 9 | | |
| 16. | திரு அன்பிலாலந்துறை | 5 | | | | 4 | | | 2 | | 3 | | | | | |
| 17. | திரு அன்னியூர் | 6 | | | | 5(2) | | | 3 | | 4 | | | | | |
| 18. | திரு ஆக்கூர் | | 8 | | | | 2 | | 2 | | 5 | | | | | |
| 19. | திரு ஆடானை | | 9 | | | | | | 1 | | | | | 10 | | |
| 20. | திரு ஆப்பனூர் | 7 | | | | | | | 1 | | | | | 11 | | |
| 21. | திரு ஆப்பாடி | | | | 4 | | | | 1 | | | | | | 1 | |
| 22. | திரு ஆமாத்தூர் | | 10 (2) | | | 6 | 3 | 5 | 5 | 3 | | | | | | |
| 23. | திரு ஆரூர் | 8 (2) | 11 (2) | 5 | 5 (9) | 7 (2) | 4 (10) | 6 (7) | 33 | 4 | | | | | | |
| 24. | திரு ஆரூர் அரநெறி | | | | 6 | | 5 | | 2 | | | | | | 2 | |
| 25. | திரு ஆரூர் - பரவையுள்மண்டலி | | | | | | | 7 | 1 | | | | | | | 3 |
| 26. | திரு ஆலங்காடு | 9 | | | 7 | | 6 | 8 | 4 | 5 | | | | | | |
| 27. | திரு ஆலம்பொழில் | | | | | | 7 | | 1 | | | | | | 3 | |
| 28. | திரு ஆலவாய் | 10 | 12 | 6 (7) | 8 | | 8 | | 11 | | 6 | | | | | |
| 29. | திரு ஆவடுதுறை | | | 7 | 9 (2) | 8 | 9(2) | 9 (2) | 8 | 6 | | | | | | |
| 30. | திரு ஆவூர் பசுபதீச்சரம் | 11 | | | | | | | 1 | | | | | 12 | | |
| 31. | திரு ஆனைக்கா | | 13 | 8 | | 9 (2) | 10 | 10 | 6 | 7 | | | | | | |
| 32. | திரு இடும்பாவனம் | 12 | | | | | | | 1 | | | | | 13 | | |
| 33. | திரு இடைச்சுரம் | 13 | | | | | | | 1 | | | | | 14 | | |
| 34. | திரு இடைமருதூர் | 14 (5) | 14 | | 10 | 10 (2) | 11 (2) | 11 | 12 | 8 | | | | | | |
| 35. | திரு இடையாறு | | | | | | | 12 | 1 | | | | | | | 4 |
| 36. | திரு இடைவாய் | | | 9 | | | | | 1 | | | | | 15 | | |
| 37. | திரு இந்திரநீலப்பருப்பதம் | | 15 | | | | | | 1 | | | | | 16 | | |
| 38. | இராமனதீச்சரம் | 15 | | | | | | | 1 | | | | | 17 | | |
| 39. | திரு இராமேச்சுரம் | | | 10 (2) | 11 | | | | 3 | | 7 | | | | | |
| 40. | திரு இரும்பூளை | | 16 | | | | | | 1 | | | | | 18 | | |
| 41. | திரு இரும்பை மாகாளம் | | 17 | | | | | | 1 | | | | | 19 | | |

| வ. எண். | திருமுறைத்தலங்கள் | திருமுறைகள் | | | | | | | தலம் - கூடுதல் பதிகம் | மூவர் பாடல் | தி.ஞா.ச. + அப்பர் | தி.ஞா.ச. + சுந்தரர் | அப்பர் + சுந்தரர் | தி.ஞா.ச. மட்டும் | அப்பர் மட்டும் | சுந்தரர் மட்டும் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | | | | | | | | |
| 42. | திரு இலம்பையங்கோட்டூர் | 16 | | | | | | | 1 | | | | | 20 | | |
| 43. | திரு இன்னம்பர் | | | 11 | 12 (2) | 11 | 12 | | 5 | | 8 | | | | | |
| 44. | திரு ஈங்கோய்மலை | 17 | | | | | | | 1 | | | | | 21 | | |
| 45. | திரு உசாத்தானம் | | | 12 | | | | | 1 | | | | | 22 | | |
| 46. | திரு ஊறல் | 18 | | | | | | | 1 | | | | | 23 | | |
| 47. | திரு எதிர்கொள்பாடி | | | | | | | 13 | 1 | | | | | | | 5 |
| 48. | திரு எருக்கத்தம்புலியூர் | 19 | | | | | | | 1 | | | | | 24 | | |
| 49. | திரு எறும்பியூர் | | | | | 12 | 13 | | 2 | | | | | | 4 | |
| 50. | திரு ஏடகம் | | | 13 | | | | | 1 | | | | | 25 | | |
| 51. | திரு ஐயாறு | 20 (3) | 18 (2) | | 13 (8) | 13 (2) | 14 (2) | 14 | 18 | 9 | | | | | | |
| 52. | திரு ஒற்றியூர் | | | 14 | 14 (3) | 14 | 15 | 15 (2) | 8 | 10 | | | | | | |
| 53. | திரு ஓணகாந்தன்தளி | | | | | | | 16 | 1 | | | | | | | 6 |
| 54. | திரு ஓத்தூர் | 21 | | | | | | | 1 | | | | | 26 | | |
| 55. | திரு ஓமாம்புலியூர் | | | 15 | | | 16 | | 2 | | 9 | | | | | |
| 56. | திரு கச்சி-<br>அனேகதங்கா வதம் | | | | | | | 17 | 1 | | | | | | | 7 |
| 57. | திரு கச்சி ஏகம்பம் | 22 | 19 | 16 (2) | 15 (3) | 15 (2) | 17 (2) | 18 | 12 | 11 | | | | | | |
| 58. | திரு கச்சிநெறிக்<br>காரைக்காடு | | | 17 | | | | | 1 | | | | | 27 | | |
| 59. | திரு கச்சி மேற்றளி | | | | 16 | | | 19 | 2 | | | | 1 | | | |
| 60. | திரு கச்சூர் | | | | | | | 20 | 1 | | | | | | | 8 |
| 61. | திரு கஞ்சனூர் | | | | | | 18 | | 1 | | | | | | 5 | |
| 62. | திரு கடம்பந்துறை | | | | | 16 | | | 1 | | | | | | 6 | |
| 63. | திரு கடம்பூர் | | 20 | | | 17 (2) | | | 3 | | 10 | | | | | |
| 64. | திரு கடவூர் | | | 18 | 17 (2) | 18 | | 21 | 5 | 12 | | | | | | |
| 65. | திரு கடவூர் மயானம் | | 21 | | | 19 | | 22 | 3 | 13 | | | | | | |
| 66. | திரு கடிக்குளம் | | 22 | | | | | | 1 | | | | | 28 | | |
| 67. | திரு கடுவாய்க்<br>கரைப்புத்தூர் | | | | | 20 | | | 1 | | | | | | 7 | |

வல்லிஒருத் திக்கிசைகள் வாய்ப்பஅளித் தோம்" என்று
சொல்லஅவள் தனை அழைத்துச் சுருதிவழிப் பண்தழுவும்
நல்லிசையின் வழிகேட்டு நம்பிஇறை உள்மகிழ்ந்தார். (32)

"ஆங்கவளை அம்பலத்துள் ஆடுவார் திருமுன்பே
பாங்கினுடன் கொடுவந்து பண்ணடைவு பயில்பாடல்
ஓங்கருளால் முறைபணித்தற் கொக்கும் என ஓரோசை
நீங்கரிய வானின்கண் நிகழஅர சன்கேட்டான். (33)

மன்னனுக்கும் நம்பிக்கும் மறையவர்மூ வாயிரவர்
பன்னரிய திருத்தொண்டர் பலதுறையோர்க் குங்கேட்க
இன்னருள்முன் வியந்துரைத்த இவள்முதலா இசைத்தஇசை
தென்னிலமேல் மிகத்தோன்றத் திருவருளால் தோன்றியதாம் (34)

சொல்நட்ட பாடைக்குத் தொகைஎட்டுக் கட்டளையாம்
இன்னிசையால் தருந்தக்க ராகத்தேழ் கட்டளையாம்
பன்னுபழந் தக்கரா கப்பண்ணின் மூன்றுளதாம்
உன்னரிய தக்கேசிக் கோரிரண்டு வருவித்தார். (35)

மேவுகுறிஞ் சிக்கஞ்சு, வியாழக்குறிஞ் சிக்காறு
பாவுபுகழ் மேகரா கக்குறிஞ்சிப் பாலிரண்டு
தேவுவந்த இந்தளத்தன் செய்திக்கு நான்கினிய
தாவில்புகழ்க் காமரத்தின் தன்மைதனக் கிரண்டமைத்தார். (36)

காந்தார மாகிய பியந்தையாங் கட்டளைக்கு
வாய்ந்தவகை மூன்றாக்கி வன்னட்ட ராகத்திற்(கு)
ஏய்தவகை இரண்டாக்கிச் செவ்வழியொன் றாக்கிஇசைக்
காந்தார பஞ்சமத்தின் கட்டளைமூன் றாக்கினார். (37)

கொல்லிக்கு நாலாக்கிக் கவுசிகத்துக் கூறும்வகை
சொல்லிரண் டாக்கிமிகு தூங்கிசைநேர் பஞ்சமத்திற்(கு)
ஒல்லையினில் ஒன்றாக்கிச் சாதாரிக் கொன்பதாப்
புல்லும்இசைப் புறநீர்மைக் கொன்றாகப் போற்றினார். (38)

அந்தாளிக் கொன்றாக்கி வாகீசர் அருந்தமிழின்
முந்தாய பலதமிழுக் கொன்றொன்றாம் மொழிவித்து
நந்தாத நேரிசையாங் கொல்லிக்கு நாட்டிலிரண்(டு)
உந்தாடுங் குறுந்தொகைக்கோர் கட்டளையா விரித்துரைத்தார். (39)

தாண்டகமாம் பாவுக்கோர் கட்டளையாத் தாபித்தங்(கு)
ஆண்டகையார் தடுத்ததாண்டஜயர் அருள் துய்ய முறைக்(கு)
ஈண்டிசைசேர் இந்தளத்துக் கிரண்டாக எடுத்துரைத்து
நீண்டதக்க ராகத்துக் கிரண்டாக நிகழ்வித்தார். (40)

கூறரிய நட்டரா கத்திரண்டு கொல்லிக்கு

வேறுவகை மூன்றாக மிகுத்தபழம் பஞ்சுரத்துக்(கு)
ஏறும்வகை இரண்டாக்கி இன்னிசைதேர் தக்கேசிப்
பேறிசை ஆறாக்கியதிற் காந்தாரம் பிரித்திரண்டாம். (41)

ஒன்றாகுங் காந்தார பஞ்சமத்துக் கோரிரண்டாம்
நன்றான சீர்நட்ட பாடைக்கு நவின்றுரைக்கில்
குன்றாத புறநீர்மைக் கிரண்டாகுங் கூறுமிசை
ஒன்றாகக் காமரத்துக் கொன்றாகப் போற்றினார். (42)

உற்றஇசைக் குறிஞ்சிக்கோர் இரண்டாக வகுத்தமைத்துப்
பற்றரிய செந்துருத்திக் கொன்றாக்கிக் கவுசிகப்பால்
துற்றஇசை இரண்டாக்கித் தூயஇசைப் பஞ்சமத்துக்
கற்றஇசை ஒன்றாக்கி அரனருளால் விரித்தமைந்தார். (43)

இந்தவகை சிவன்செவிப்பால் எக்கண்ணுந் தழைத்தோங்க
அந்தமிலா அறுபத்து மூவரருள் அம்புவிமேல்
நந்தியிட மும்மலமும் நல்லுலகோர் நீங்கிடச்
சிந்தைஅருட் சிவமாகத் தெளிவித்தான் அருட்சென்னி. (44)

சீராருந் திருமுறைகள் கண்டதிறற் பார்த்திபனாம்
ஏராரும் இறைவனையும் எழிலாரும் நம்பியையும்
ஆராத அன்பினுடன் அடிபணிந்தங் கருள்விரவச்
சோராத காதல்மிகுந் திருத்தொண்டர் பதந்துதிப்பாம் (45)

திருப்பனந்தாள் காசிமடம் திருப்பெருந்திரு காசிவாசி எஜமான் சுவாமிகளின் அருளாணையின் வண்ணம் 18.5.1982 அன்று, 26ஆவது வெளியீடாக வெளியிடப்பட்ட நூலின் நகலாக இப்பதிவு வெளிவருகிறது. அன்னாரது பத்தாண்டு ஆட்சி நிறைவையொட்டி அரசு சகாய விலையில் அளித்த காகிதத்தாளில் இப்புராணமும், சேக்கிழார் புராணமும் பதிப்பிக்கப்பட்டு, 75 காசுகளுக்கு அன்பர்களுக்கு அளிக்கப்பட்டது. பெரும்பணி. சுவாமிகளை வணங்குகிறோம்.

**மூன்றாம் திருமுறைப் பதிகங்கள் - பண்கள் - கட்டளைகள் அட்டவணை**

| வ. எண் | பண் | பதிகங்கள் | பதிக எண்கள் | கட்டளைகள் | பண்களின் சுவை (அடைவு) | தற்போதைய இராகம் | கால வரையறை (நாழிகை) |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | காந்தார பஞ்சமம் | 23 | 1-23 | 3 | உவகை, மருட்கை | கேதார கௌளை | 24-27 பகல் |
| 2. | கொல்லி | 18 | 24-41 | 2 | அவலம், மருட்கை | நாத நாமக் கிரியை | 37½-41½ இரவு |
| 3. | கொல்லிக் கௌவாணம் | 1 | 42 | 1 | பெருமிதம், மருட்கை | இச்சிச்சி | 3-6 பகல் |
| 4. | கௌசிகம் | 13 | 43-54, 117 | 3 | மருட்கை | இச்சிச்சி | 3-6 பகல் |
| 5. | பஞ்சமம் | 12 | 55-66 | 2 | உவகை, மருட்கை | பந்து வராளி | 15-18 பகல் |
| 6. | சாதாரி | 33 | 67-99 | 1 | மருட்கை | எதுகுல காம்போதி | பொது |
| 7. | பழம்பஞ்சுரம் | 17 | 100-116 | 1 | மருட்கை | சங்கரா பரணம் | 21-24 பகல் |
| 8. | புறநீர்மை | 6 | 118-123 | 1 | உவகை, மருட்கை | ஸ்ரீகண்டி | 0-3 பகல் |
| 9. | அந்தாளிக் குறிஞ்சி | 2 | 124-125 | 1 | சமநிலை | சைலதே சாட்சி | 56d-60 இரவு |
| | | 125 | 125 | | | | |

பிற்சேர்க்கை + 2 127 127. திருவிடைவாய் - கொல்லி கிளியன்னனூர் - கௌசிகம்

## மூன்றாம் திருமுறைப் பதிகங்களின் கட்டளை - யாப்பு வகைகள்

### மூன்றாம் திருமுறையில் முதற்பண் காந்தார பஞ்சமம்

1 முதல் 23 வரையுள்ள முதல் 23 பதிகங்கள் இப்பண்ணுக்குரியன இப்பதிகங்களில் காணப்படும் யாப்பு விகற்பங்கள் ஐந்தாகும்.

**யாப்பு – I**

ஆடினாய் - நறு - நெய்யொடு பால்தயிர் அந்தணர் - பிரி-யாதசிற் றம்பலம்
தானனா தன தானன தானனா தானனா தன தானன தானனா

பாடவேண்டிய பதிகங்கள்

நாடினாய் இடமா - நறுங் - கொன்றை நயந்தவனே
தானனா தனனா தன தான தனதனனா 1 - 2

**யாப்பு – II** (நாலடி மேல் வைப்பு)

| | | | | |
|---|---|---|---|---|
| இயலிசை | யெனும்பொரு | ளின்றிறமாம் | | |
| புயலன | மிடறுடைப் | புண்ணியனே | | |
| கயலன | வரிநெடுங் | கண்ணியொடும் | | |
| அயலுல | கடிதொழ | அமர்ந்தவனே | | |
| தனதன | தனதன | தானதனா | | |
| கலனாவது | வெண்டலை | கடிபொழிற் | கச்சிதன்னுள் | |
| நிலனாடொறு | மின்புற | நிறைமதி | யருளினனே | |
| தனனாதன | தானன | தனதன | தானதனா | (3-4) |

இப்பதிகம் முச்சீரடி நான்கினால் இயன்ற செய்யுளாய் அதன்மேல் நாற்சீர்களால் இயன்ற அடியிரண்டினை வைப்பாகப் பெற்று வந்தமையால் நாலடி மேல் வைப்பு என்னும் பெயர்த்தாயிற்று. இரண்டடியாக வைக்கப்பெற்ற இவ்வுறுப்பு முன்னுள்ள பாடலின் பொருளை முடித்துக் கூறுவதாகும். இவ்விரண்டடி உறுப்பு நாலடிச் செய்யுளின் மேல் வரின் நாலடி மேல் வைப்பு எனவும், ஈரடிச் செய்யுளின் மேல்வரின் ஈரடிமேல் வைப்பு எனவும் வழங்கப்பெறும்.

**யாப்பு – III** (ஈரடி மேல் வைப்பு)

| | | | | |
|---|---|---|---|---|
| தக்கன் | வேள்வி | தகர்த்தவன் | பூந்தராய் | |
| மிக்க | செம்மை | விமலன் | வியன்கழல் | |
| தான | தான | தனதனா | தானனா | |
| தான | தான | தனனா | தனதனா | |
| சென்று | சிந்தையில் | வைக்க | மெய்க்கதி | |
| நன்ற | தாகிய | நம்பன் | தானே | |
| தான | தானன | தான | தானன | |
| தான | தானன | தானா | தானா | (5-6) |

**யாப்பு – IV**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கண்ணுத | லானும்வெண் | ணீற்றினா | னுங்கழ | லார்க்கவே | |
| தானன | தானானா | தானனா | தானன | தானனா | (7-12) |

**யாப்பு – V**

| | | | | |
|---|---|---|---|---|
| மின்னன | எயிறுடை | விரவ | லோர்கடந் | |
| தானான | தனதன | தனன | தானனா | (13-23) |

| | |
|---|---|
| முதற்கட்டளை | **I, II, III** யாப்பு விகற்பங்கள் ஒத்த ஓசையுடையன |
| இரண்டாம் கட்டளை | **IV** யாப்பு விகற்பம் |
| மூன்றாம் கட்டளை | **V** யாப்பு விகற்பம் |

“காந்தார பஞ்சமத்தின் கட்டளை மூன்றாக்கினார்” திருமுறைகண்ட புராணம் - 37. இந்நூலின் 83ஆம் பக்கம் பார்க்கவும்.

## II. கொல்லி

“கொல்லிக்கு நான்காக்கி” திருமுறை கண்ட புராணம், 24-41 வரையுள்ள 18 பதிகங்கள் கொல்லிப் பண்ணுக்குரியன.

**கட்டளை - I**

| மண்ணினல் | லவண்ணம் | வாழலாம் | வைகலும் | |
|---|---|---|---|---|
| தானனா | தானனா | தானனா | தானனா | (24-36) |

**கட்டளை - II**

| கரமு | னம்மல | ராற்பு | னல்மலா் | தூவி | யேகலந் | தேத்துமின் | |
|---|---|---|---|---|---|---|---|
| தனன | தானன | தான | தானன | தான | தானனா | தானனா | (37-39) |

**கட்டளை - III**

இரண்டாங்கட்டளையில் ஏழுசீர்களாகப் பிரிந்திசைக்கும் யாப்பினை நான்கு சீராகப் பிரித்திசைத்தல் மூன்றாம் கட்டளை ஆகும்.

| கரமுனம் | மலராற்புனல் | மலா்தூவியே | கலந்தேத்துமின் | |
|---|---|---|---|---|
| தனதனா | தனதானனா | தனதானனா | தனதானனா | (37-39) |

**கட்டளை - IV**

| கல்லால் | நீழல் | |
|---|---|---|
| தானா | தானா | (40-41) |

இருசீர்க் குறளடி நான்கினால் இயற்றப்பட்ட திருப்பாடல்களை உடைய இப்பதிகங்கள் திரு இருக்குக்குறள் என வழங்கப்படும்.

## III. கொல்லி கௌவாணம்

மூன்றாம் திருமுறையில் நிறைவெண்டிங்கள் என்று தொடங்கும் 42-ஆவது பதிகம் மட்டும் இப்பண்ணுக்குரியதாகும்.

| நிறைவெண் | டிங்கள் | வாண்முக | மாதா் | பாட | நீள்சடை | |
|---|---|---|---|---|---|---|
| தனன | தான | தானன | தான | தான | தானன | (42) |

## IV. கௌசிகம்

"கவுசிகத்துக்கு கூறும் வகை சொல்லி இரண்டாக்கி" என்ற திருமுறை கண்ட புராணம் கூறுகிறது. இரண்டு கட்டளைகள் உள்ள கௌசிகப் பண்ணில் 43 முதல் 54 வரை 12 பதிகங்களும் 117ஆவது பதிகமான மாலை மாற்றுப் பதிகமும் இடம்பெற்றுள்ளன.

**கட்டளை - I**

| சந்த | மாா்முலை | யாடன | கூறனாா் | |
|---|---|---|---|---|
| தான | தானன | தானன | தானனா | (43-51) |

**கட்டளை - II**

| வீடலால | வாயிலாய் | விழுமியாா்கள் | நின்கழல் | |
|---|---|---|---|---|
| தானதான | தானனா | தனனதான | தானனா | (52-54), (117) |

### V. பஞ்சமம்

"தூங்கிசை சேர் பஞ்சமத்திற்கு ஒல்லையினில் ஒன்றாக்கி" திருமுறை கண்ட புராணம். இந்த கட்டளைக்கு 3 வகையான யாப்பு விகற்பங்கள் 55 முதல் 66 வரையுள்ள 12 பதிகங்கள்.

**யாப்பு - I**

| விரையார் | கொன்றையினாய் | விட | முண்ட | மிடற்றினனே | |
|---|---|---|---|---|---|
| தனனா | தானதனா | தன | தான | தனதன னா | (55) |

**யாப்பு - II**

| இறையவன் | ஈசனெந்தை | இமை | யோர்தொழு | தேத்தநின்ற | |
|---|---|---|---|---|---|
| தனதன | தானதானா | தன | தானன | தான தானா | (56-62) |

இயல்வகையொன்றே பற்றி நோக்குமிடத்து இப்பதிகங்கள் கட்டளைக் கலித்துறை யாப்பில் அமைந்திருப்பதை அறியலாம்.

**யாப்பு - III**

| பைங்கோட்டு | மலர்ப்புன்னைப் | பறவைகாள் | பயப்பூரச் | |
|---|---|---|---|---|
| தேமாங்காய் | புளிமாங்காய் | புளிமாங்காய் | புளிமாங்காய் | (63-66) |

என காய்ச்சீர் நான்கு பெற்று வந்த தரவுக் கொச்சக்கலிப்பா.

### VI. சாதாரி

67 முதல் 99 வரையுள்ள 33 பதிகங்கள் 1 கட்டளை மற்றும் ஐந்து யாப்பு விகற்பங்களில் அமைந்துள்ளன.

**யாப்பு - I**

| சுரருலகு | நரர்கள்பயில் | தரணிதல | முரணழிய | அரண | மதில்மூப் | |
|---|---|---|---|---|---|---|
| தனனதன | தனனதன | தனனதன | தனனதன | தனன | தனனா | (67-80) |

இப்பதிகப் பாடல்கள் குற்றெழுத்துப் பயின்று முடுகியலாய், அடி முதற்சீர் இரண்டாமெழுத்து சீர்தோறும் ஒன்றி வழியெதுகையால் வந்தமையால் இப்பதிகம் வழிமொழித்திருவிராகம் எனப் பெயர்த்தாயிற்று. இப்பதிகத்தின் நிறைவுப் பாடலில் திருஞானசம்பந்தரே இதைப் பதிவு செய்கிறார்.

ர எழுத்தை நோக்கவும்.

**யாப்பு - II**

| சங்கமரு | முன்கைமட | மங்கையொரு | பாலுடன்வி | ரும்பி | |
|---|---|---|---|---|---|
| தந்ததன | தந்ததன | தந்ததன | தானதன | தானா | (81-83) |

**யாப்பு - III**

| பெண்ணிய | லுருவினர் | பெருகிய | புனல்விர | வியபிறை | |
|---|---|---|---|---|---|
| தந்தன | தனதன | தனதன | தனதன | தனதன | (84-88) |

**யாப்பு - IV**

திருந்துமா களிற்றின மருப்பொடு திரண்மணிச் சந்தமுந்தி
தனதனா தனதனா தனதனா தனதனா தந்ததானா (89-93)

**யாப்பு - V** (திருமுக்கால்)

விண்ணவர் தொழுதெழு வெங்குரு மேவிய
தானன தனதன தானன தானன

சுண்ணவெண் பொடியணி வீரே
தானன தனதன தானா (94-99)

இப்பதிகங்களின் பாடல்கள், முதல் அடியும், மூன்றாம் அடியும் நாற்சீர் கொண்ட அளவடியாக அமைய இரண்டாமடியும், நான்காமடியும் முச்சீர் கொண்ட சிந்தடியாக முக்காலடியால் முடிந்தமையின் திருமுக்கால் என வழங்கப்படுவதாயின. இச்செய்யுள் வகை ஆசிரியத்துறை எனவும் வழங்கப்படும்.

## VII. பழம்பஞ்சுரம்

100 முதல் 116வரையுள்ள திருப்பதிகங்கள் 5 யாப்பு விகற்பங்களாக ஒரு கட்டளையில் அமைந்துள்ளன.

"பஞ்சுரமாம் பழைய திறம் கிழமை கொள்ளப் பாடினார்" என்பது சேக்கிழார் வாக்கு.

**யாப்பு - I**

கரும்பமர் வில்லியைக் காய்ந்து காதற் காரிகை மாட்டருளி
தனதன தானன தான தான தானன தானதன (100-107)

**யாப்பு - II** (நாலடிமேல் வைப்பு)

வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
தான தானன தானன தானனா (108)

**யாப்பு - III**

மண்ணது வுண்டரி மலரோன் காணா
தானன தானன தனனா தானா (109)

**யாப்பு - IV**

வரம தேகொளா வுரம தேசெயும் புரமெ ரித்தவன் பிரமநற்புரத்
தனன தானனா தனன தானனா தனன தானனா தனனதானனா

தரன் னாமமே பரவு வார்கள்சீர் விரவு நீள் புவியே
தனன தானனா தனன தானனா தனன தான தனா (110-111)

112 ஆம் பதிகத்தின் முதலடி இவ்வியாப்பினையே ஒக்கும். ஈற்றடியில் மட்டும் வேறுபாடு உண்டு. பரசுபாணியர் பதிகத்தின் ஈற்றடி

அரசு பேணி நின்றார் இவர் தம்மை அறிவாரார்
தனன தான தானா தன தானா தனதானா (112)

**யாப்பு - V (திரு இயமகப் பதிகங்கள்)**

யமகம் என்பது ஓரடியில் முன்வந்த சொல்லோ தொடரோ வேறொரு பொருள்பட மீண்டும் அதே அடியில் மடக்கிவருவது. இதனை மடக்கு என வழங்குதல் உண்டு. யமகம் என்பது வடசொல்.

**அறுசீரடிப் பதிகம்**

| உற்றுமை | சேர்வது | மெய்யினையே | உணர்வது | நின்னருள் | மெய்யினையே | |
|---|---|---|---|---|---|---|
| தானன | தானன | தானதனா | தனதன | தானன | தானதனா | 113 |

**எண்சீரடிப் பதிகம்**

| பாயு | மால்விடை | மேலோரு | பாகனே | பாவை | தன்னுரு | மேலொரு | பாகனே | |
|---|---|---|---|---|---|---|---|---|
| தான | தானன | தானன | தானனா | தான | தானன | தானன | தானனா | 114 |

| ஆல | நீழ | லுகந்த | திருக்கையே | யான | பாட | லுகந்த | திருக்கையே | |
|---|---|---|---|---|---|---|---|---|
| தான | தான | தனன | தனதனா | தான | தான | தனன | தனதனா | 115 |

**ஆறுசீரடி**

| துன்றுகொன்றைநஞ் | சடையதே | தூய | கண்டநஞ் | சடையதே | |
|---|---|---|---|---|---|
| தான | தானனா | தனதனா | தான | தானனா | தனதான | 116 |

## VIII. புறநீர்மை

118 முதல் 123 வரையுள்ள பதிகங்கள் புறநீர்மைப் பண்ணில் அமைந்துள்ளன. புல்லும் இசைப்புற நீர்மைக்கு ஒன்றாகப் போற்றினார் எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் இவை ஆறும் ஒரே கட்டளையாற்படும்.

| மடல்மலி | கொன்றை | துன்றுவா | ளெருக்கும் | வன்னியும் | மத்தமுஞ் | சடைமேல் | |
|---|---|---|---|---|---|---|---|
| தனதன | தானா | தானனா | தனனா | தானனா | தானனா | தனனா | (118-123) |

## IX. அந்தாளிக் குறிஞ்சி

'அந்தாளிக்கு ஒன்றாக்கி' எனத் திருமுறை கண்ட புராணம் கூறுதலால் பதிகங்கள் இரண்டும் ஒரே கட்டளை அமைப்பை உடையன.

| சுண்ணவெண் | நீறணி | மார்பிற் | றோல்புனைந் | |
|---|---|---|---|---|
| தானனா | தானன | தானா | தானனா | (124, 125) |

மூன்றாம் திருமுறை முறையின் முதல்பாடல் "ஆடினாய் நறுநெய்யொடு பால் தயிர்" என்ற கோயில் (சிதம்பரம்) திருப்பதிகப் பாடலாகும். முதல் இரண்டு திருமுறைகளின் முதல் பாடல் சீகாழிப் பதியைப் பற்றியது.

# ஆடினாய் பாடலுக்கு தருமைஆதீன தேவாரப் பாடசாலைத் தமிழாசிரியர் பண்டித அ. கந்தசாமிப்பிள்ளை அவர்களின் உரை

நறுநெய்யொடு பால்தயிர் ஆடினாய் - அபிடேகம் ஆடினாய்

அந்தணர் பிரியாத சிற்றம்பலம் ஆடினாய் - திருநடனம் ஆடினாய்

ஆடுவதும், நாடுவதும், பாடுவதும், சூடுவதும் உயிர்களாகிய நமக்காக.

எல்லாத் தலங்களுள்ளும் ஓர் ஆண்டிற்குள் ஆறுநாள் அபிடேக விசேடமுடைய தலம் சிதம்பரமேயாதலின் ஆடினாய் என்பது திருநடனத்தையும், கருதிய தொடக்கம் உடையதாகி நின்றது. தில்லைவாழ் அந்தணருள் நடராசப் பிரானாரும் ஒருவராதலின், பிரியாமை பிரியாதுள்ளது. சிற்றம்பலம் - ஞானாகாசம், பூதாகாசத்தைப் பிரித்தல் ஒல்லும். கடத்தற்குரிய தத்துவங்களுள் ஒன்று அது. ஞானாகாசத்தைப் **பிரிதல்** என்றும் எவ்வுயிர்க்கும் இல்லை. நாடுதல் - சங்கற்பம். நயத்தல் - விரும்புதல். மறை - சாமவேதம். பிறவும் கொள்ளப்படும். கீதம் - இசைப்பாடல். திங்கள் சூடிய கருணைத்திறம். தொல்வினைச் சுருக்கம் வேண்டுங்கால் குறித்தற்பாலது. பல்சடை எனப்பன்மையும், புன்சடை எனக் குறுமையும், நீள்சடை என நெடுமையும், பொன்சடை என நிறமும், விரிசடை எனப் பரப்பும், நிமிர்சடை என உயர்ச்சியும் பிறவும் திருமுறையுட் காணப்படும். பொன்சடையைப் புன்சடை எனலும் உண்டு.

அந்தணர்தம் சிந்தையானை (தி.6 ப.1 பா.1) அரியானை என்று எடுத்தே அடியவருக்கு எளியானை, அவர் தம் சிந்தை பிரியாத பெரிய திருத்தாண்டகச் செந்தமிழ்ப் பாடிப் பிறங்குசோதி விரியாநின்று எவ்வுலகமும் விளங்கிய பொன்னம்பலத்து மேவி ஆடல் புரியா நின்றவர் தம்மைப் பணிந்து தமிழாற்பின்னும் போற்றல் செய்வார் (பெரியபுராணம் திருநாவு. பா-175) என்பவற்றால் சிந்தையும் சிவபிரானும் பிரியா வினைக்கு முதலாதல் விளங்கும்.

“நின்று சபையில் ஆனந்த நிர்த்தமிடுவோர்க்கு ஆளாயின்
வென்ற பொறியார்க்கு ஆனந்த வெள்ளம் பெருக வுய்ப்பர் ”

(பேரூர்ப்புராணம் காவலன் வழிபடு படலம் பா. 23) என்னும் உண்மையைத் தெளிவிக்க “ஆடினாய்” என்றெடுத்தார். ஆடினாய் நறுநெய்யொடு பால் “பாதமலர் சூடுகின்றிலை சூட்டுகின்றதுமில்லை” என்னுந் திருவாசகத்தில் (பா.35) பாதமலர் என்னும் தொடர் இயைவது போல மீளவும் நெய், பால், தயிர் ஆடினாய் என்று இயைவது உணர்க.

சிவ வழிபாட்டிற்கு வாசத்திருமஞ்சனம் கூறப்படும் உபசாரங்கள் பலவற்றிலும் அபிடேகமே சிறந்தது ஆகலின், அதனை எடுத்துக் கூறினார். அதனை, “சிவதருமம் பல. அவற்றுட் சிறந்தது பூசனை. அதனுள், அவமில் பல உபசாரத்தைந்து சிறந்தன”. ஆங்கவை தாம் அபிடேகம், அரிய விரை, விளக்கு, மனுத்தாங்கும் அருச்சனை, நிவேதனம் ஆகும் என்னும் கச்சியப்ப முனிவர் வாக்கால் அறிக. (பேரூர்ப்புராணம் மருதவரைப் படலம் 29). தேன், நெய், பால், தயிர் ஆட்டுகந்தானே முதலியவற்றையும் நோக்குக. அந்தணர் - தில்லைவாழ் அந்தணர். எவ்வுயிர்க்கும் கருணைக் கடலென்பார். வேதியர் மறையோர் என்னாது அந்தணர் என்று அருளினார். மெய்ஞ்ஞானிகள், அவனருளே கண்ணாகக் கண்டு திளைக்க, ஆனந்தக்கூத்தாடும் பரஞானவெளி ஆதலின், ஊன் அடைந்த உடம்பின் பிறவி, தான் அடைந்த உறுதியைச் சார, ஆதியும் நடுவும், முடிவும் இல்லாத அற்புதத்தனிக் கூத்தாடும் இடம்

சிதம்பரம். ஞானாகாசம் எனப்பெற்றது. சிற்பரவியோமம் ஆகும். திருச்சிற்றம்பலத்துள் நின்று பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி என்றருளிய சேக்கிழார் திருவாக்கினாலும் (பெரியபுராணம் தில்லைவாழ் அந்தணர் பா. 2) உணர்க.

நறும் - நறுமணம் உள்ள, கொன்றை - மந்திரங்களிற் சிறந்ததாகிய பிரணவ மந்திரத்திற்குரிய தெய்வம் தாமே எனத்தெளிச் செய்ய, கொன்றைமாலையணிந்தனர். அம்மலர், உருவிலும் பிரணவ வடிவாயிருத்தலின் பிரணவபுட்பம் எனப்படும். "துன்றுவார் பொழில் தோணிபுரவர்தம், கொன்றைசூடும் குறிப்பதுவாகுமே". (தி. 5, ப. 45, பா. 7) என்னும் திருக்குறுந்தொகையாலும், "ஓரெழுத்திற்குரிய பொருள் உயர்நெடு மாலயன் என்பார் நீரெழுத்து நிகர் மொழி நின்னில விதழிமுன் என்னாம்" என்னும் வாட்போக்கிக் கலம்பகப்பாட்டாலும் அறிக. பனிகால் கதிர் - குளிர்ச்சியை வீசும் ஒளியையுடைய, வெண்திங்கள் சூடினாய் என்றது. உற்றார் இலாதார்க் குறுதுணையாவன. சிவபிரான் திருவடியே என்பதைக் குறிக்கும். தொல்வினை என்றது சஞ்சித கருமத்தை. பல்சடை - பூணூல் அபரஞானத்தையும் சடை பரஞானத்தையும் குறிக்கும் என்ப. அதனாலும், சிவசின்னங்களில் சடையே சிறந்ததாயிருத்தல் புகழ்ச் சோழ நாயனார் வரலாற்றாலும், விடந்தீர்க்க வேண்டித் திருமருகற் பெருமானை இரத்தற்கண் "சடையாய் எனுமால்" என்றெடுத் தருளினமையானும் அறியப்படும்.



## 1. காந்தார பஞ்சமம்

இது மருதப் பெரும்பண்ணின் இரண்டாவது திறமாகிய வடுகு என்னும் திறத்தில் பெருகியலுக்குரிய பண் 76 எண்ணுக்குரியது. இது 63–ஆம் மேளம் மேசகல்யாணியில் ஜன்னியம் என்பர். இதன் சுவை உவகை, மருட்கை என்று கருதப்படும். இதை மூவரும் பாடியுள்ளனர். சம்பந்தர் 3:1–23; அப்பர் 4:10–11; சுந்தரர் 7–77. ஆக 26 பதிகங்கள். இதற்குக் கட்டளை ஒன்றே (சம்பந்தரின் இடரினும் தளரினும் எனதுறு நோய், துஞ்சலும் துஞ்சலும் துஞ்சலில்லாத போழ்தினும் என்ற திருவைந்தெழுத்துப் பதிகம். அப்பரின் "சொற்றுணை வேதியன்" என்ற நமச்சிவாய திருப்பதிகம் என்பன சில சிறப்பு பதிகங்கள். இது பகற்பண்; இதற்குரிய நாழிகை நேரம் 24–27. மாலை 4–5. இதற்குரிய இராகம் கேதாரகௌளம்.

முத்துச்சாமி தீட்சிதர் தமது கீர்த்தனைகளில் பெரும்பாலானவற்றைச் சம்பந்தர் தேவாரப் பண்ணை வைத்தே செய்தார் என்று ஆன்றோர் சொல்வார்கள். இதற்கு எடுத்துக்காட்டாய், கோயில் திருப்பதிகம் "ஆடினாய் நறுநெய்யொடு பால்தயிர்" என்பதைச் சுட்டி, தீட்சிதருடைய வடமொழிக் கீர்த்தனை "நீலகண்டம் பஜேஹம்" என்பதும் அதை ஒட்டியே அதன் இராகமாகிய கேதாரகௌளத்திலேயே அமைந்திருப்பதையும் எடுத்துக்காட்டுவார்கள்.

காந்தாரம் என்பது காவும் தாரும் என்ற சொற்களின் சுருக்கமாகும். "க" என்பது நெடிலாகி உம்மை பெற்று காவும் என்றாகிறது. தரித்தல் என்னும் தொழிற்பெயர் முதல் நீண்டு பகுதியின் இகரம் குறைந்து உம்மை பெற்று தாரும் என்றாகிறது. இவ்விரண்டையும் ஒன்றுசேர்ப்பின் காவும் தாரும் எனவாகும். இவையே ஒரு சொல் நீர்மைத்தாய் காந்தாரம் என்னும் பண்ணைக் குறித்துநின்றது. ஒன்றும் பலவுமாக அமைவதே காந்தாரப் பண்ணின் பாங்காம்.

ஆக, காவும் தாருமாக விரிந்த நிலையினைக் கூறும் பண் காந்தாரம் ஆகிறது. அங்ஙனம் விரிந்த நிலையினைக் கூறும் பண், சமநிலை எய்தி ஒடுங்கும் நிலையினைக் கூற வல்லதே காந்தார பஞ்சமமாகிறது. இந்தப்பண் வாசிதாரணை, அங்கிதாரணை, அமுததாரணை ஆகியவற்றை நுட்பமாக விளக்கவல்லது.

பண்சமம் என்பதே பஞ்சமம் என்று ஆகியிருக்கிறது.

### காந்தார பஞ்சமம் - இலக்கணம்

அடியிற் பஞ்சம மாகிக் காவும்
தாரு மாகச் சமைந்தும் நாலடி
மேல்வைப் பாக விளங்கி நின்றும்
ஈரடிப் பண் சமம் ஆகப்பெற்றும்
அறுசீர்த் தூலந்தைந்தாய் பண்சமம்
அமையக் காந்தா ரத்திறம் கொண்டுமிப்
பண்காந் தார பண்சமம் ஆயது.

### பொருள்

அடியில் ஐந்து சீர்களாகி சமநிலை பெற்று காவுந்தாருமாய் அமைந்தும், நான்கு அடிகள் கீழ்வரும் அடிகட்கு மேலே நிற்பதும், இரண்டு அடிகள் சமநிலை கொண்டு வருவதும், ஆறுசீர்கள் தூலமாக அமைய, ஐந்துசீர்கள் சூக்குமம் கொண்ட அடியாக வருவதும், காந்தாரத்திறங்கொண்டுவருவதும் காந்தாரப் பஞ்சமப் பண்ணின் இலக்கணமாகின்றது.

## 1. கோயில்

பண் : காந்தார பஞ்சமம் | பதிக எண் : 1

**2801.** ஆடி னாய்நறு நெய்யொடு பால்தயிர்
அந்தணர்பிரி யாதசிற் றம்பலம்
நாடி னாய்இட மா நறுங் கொன்றை நயந்தவனே
பாடி னாய்மறை யோடுபல் கீதமும்
பல்சடைப்பனி கால்கதிர் வெண்டிங்கள்
சூடி னாய்அரு ளாய்சுருங்கஎம தொல்வினையே. 1

நறுமணம் உடைய நெய்யும், பாலும், தயிரும் ஆட்டப் பெற்றவனே! தில்லைவாழந்தணர் எல்லோரும் எப்பொழுதும் அகத்தும் புறத்தும் பிரியாது வழிபடும் திருச்சிற்றம்பலத்தைத் திருக்கூத்தாடும் ஞான வெளியாகக் கொண்டு வாழ்பவனே! நறிய கொன்றைப் பூமாலையை நயந்து (விரும்பிச்) சூடியவனே! நான்மறையோடு பல கீதங்களையும் பாடியவனே! பலவாகிய சடைமேல், குளிர்பனியைச் சொரிகின்ற வெண்ணிலவை யுடைய இளம் பிறையைச் சூடியவனே! எம் தொல்லை வினை இல்லையாம்படி திருவருள் செய்க.

திருஞானசம்பந்தர் எண்ணிலடங்கா பாடல்களில் சிவத்தையும், கொன்றையையும் பிரியாது பாடியதை வியந்த சுந்தரர் பெருமான் "வம்பறா வரிவண்டு மணம் நாற மலரும் மதுமலர் நற்கொன்றையான் அடியலால் பேணா எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்" என்று திருத்தொண்டத் தொகையில் பாடுகின்றார்.

**2802.** கொட்ட மேகம ழும்குழ லாளொடு
கூடி னாய்எரு தேறி னாய்நுதற்
பட்ட மேபுனை வாய்இசை பாடுவ பாரிடமா
நட்ட மேநவில் வாய்மறை யோர்தில்லை
நல்ல வர்பிரி யாதசிற் றம்பலம்
இட்ட மாஉறை வாய்இவை மேவிய
தென்னைகொலோ. 2

நறுமணம் கமழும் கூந்தலை உடைய சிவகாமி அம்மையாரொடு கூடியவனே, விடை யேறியவனே, நெற்றிப்பட்டம் அணிந்தவனே, பூதகணங்கள் இசைபாடுவனவாகத் திருக்கூத்தாடுவோனே, (அறிதற்கரிய) வேதங்களை ஆராய்ந்து தெளிகின்ற தில்லையில் வாழும் நல்லவராய அந்தணர் பிரியாத திருச்சிற்றம்பலத்தே விருப்பொடு வாழ்பவனே! இவ்வைந்து கருணைச் செயல்களையும் மேவியது யாது காரணம் பற்றியோ? கூறியருள்க.

**2803.** நீலத் தார்கரி யமிடற் றார்நல்ல
நெற்றி மேல்உற்ற கண்ணி னார்பற்று
சூலத் தார்சுட லைப்பொடி நீறணி வார்சடையார்
சீலத் தார்தொழு தேத்துசிற் றம்பலம்
சேர்த லால்கழற் சேவடி கைதொழக்
கோலத் தாய்அரு ளாய்உன காரணம் கூறுதுமே. 3

நீலநிறத்தைப் பொருந்திய கரிய திருக்கழுத்தினர் (திருநீலகண்டர்). அழகிய நெற்றிக்கண்ணினர். திரிசூலம் பற்றியவர். காடுடைய சுடலைப் பொடிபூசியவர், சடையினர், சீலம் மிக்கவர் ஆகிய தில்லைவாழந்தணர் வணங்கியேத்தும் திருச்சிற்றம்பலத்தை இடைவிடாது நினைந்து சேர்தலால், திருக்கோலம் உடைய நடராசப் பெருமானே! நின் கழலணிந்த சேவடியைக் கையால் தொழ அருள் செய்தாய். உன்னுடைய காரணங்களை (முதன்மையை)க் கூறுவேம்.

| | |
|---|---|
| **2804.** கொம்ப லைத்தழ கெய்திய நுண்ணிடைக்<br>கோல வாள்மதி போலமு கத்திரண்<br>டம்ப லைத்தகண் ணாள்முலை மேவிய<br>வார்சடையான்<br>கம்ப லைத்தெழு காமுறு காளையர்<br>காத லால்கழற் சேவடி கைதொழ<br>அம்ப லத்துறை வான்அடி யார்க்கடை<br>யாவினையே. **4** | பூங்கொம்பு தனக்கு இணையாகாவாறு அலையச் செய்து அதனழகினையும் தான் பெற்ற நுண்ணிய இடையையும், அழகும் ஒளியும் உடைய திங்கள் போலும் முகத்தில் இரண்டு அம்புகளை வருத்தி ஒப்பாகீர் என்றொதுக்கிய திருக் கண்களையும் உடைய சிவகாமியம்மையார் கொங்கைகளை விரும்பிய வார்சடையான் (நடராசப் பெருமான்), அரகர முழக்கஞ் செய்து விழுந்தெழுந்து அன்பர்கள் அன்புடன் வழிபடும் காளையைப் போன்ற உடற்கட்டினர். பேரார்வத்தோடு திருக் கழலணிந்த சிவந்த திருவடிகளைக் கைகளால் தொழ, பொன்னம்பலத்தில் திருக்கூத்தாடும் முழுமுதல்வன் அடியவர்க்கு வினைத்தொடர்பு இல்லை. |
| **2805.** தொல்லை யார்அமு துண்ணநஞ் சுண்டதோர்<br>தூம ணிமிட றாபகு வாயதோர்<br>பல்லை யார்தலை யிற்பலி ஏற்றுழல் பண்டரங்கா<br>தில்லை யார்தொழு தேத்துசிற் றம்பலம்<br>சேர்த லால்கழற் சேவடி கைதொழ<br>இல்லை யாம்வினை தான்எரி யம்மதில்<br>எய்தவனே. **5**<br><br>திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் தேரே அரங்கமாக ஆடிய கூத்தே 'பாண்டரங்கம்' எனப்படும். | திரிபுரத்தை எரித்தொழிக்க மலைவில்லால் தீக்கணையை எய்தவனே, பழந்தேவர் எல்லாரும் அமுதுண்ண வேண்டிக் கருணைப் பெருக்கால், நஞ்சினை உண்டதொரு தூய நீல மணிபோலக் கறுத்த திருக்கழுத்தினனே! பற்கள் நிறைந்த பிளந்த வாயுடையதொரு தலையில் பலியை ஏற்று உழலும் பாண்டரங்கக் கூத்தனே! தில்லை வாழந்தணர் வணங்கி ஏத்தும் திருச்சிற்றம்பலத்தைச் சேர்ந்து வழிபடுதலாலும் கழலணிந்த சேவடியைக் கைகளால் தொழுதலாலும் இருவினையும் பற்றறக் கழியும். |
| **2806.** ஆகந் தோய்அணி கொன்றை யாய்அனல்<br>அங்கை யாய்அம ரர்க்கம ராவுமை<br>பாகந் தோய்பக வாபலி யேற்றுழல் பண்டரங்கா<br>மாகந் தோய்பொழில் மல்குசிற் றம்பலம்<br>மன்னி னாய்மழு வாளி னாய்அழல்<br>நாகந் தோய்அரை யாய்அடி யாரைநண்<br>ணாவினையே. **6** | திருமேனியில் தோய்ந்த அழகிய கொன்றை மாலையையுடையவனே! தீ ஏந்திய திருக்கையனே! தேவதேவனே! அம்பிகை பாகமுடைய பகவனே! பலி ஏற்றுத்திரியும் பாண்டரங்கக் கூத்தனே! வானளாவிய சோலைகள் நிறைந்த திருச்சிற்றம்பலத்தே நிலைபெற்றவனே! மழுவாளை ஏந்தியவனே! நச்சுத் தீயையுடைய அரவக்கச்சணிந்த திருவரையினனே! உன் அடியவரை வினைகள் அடையா. (ஆதலின், உனக்கு அடிமை பூண்ட எமக்கும் வினை இல்லை என்றவாறு). |

| | |
|---|---|
| **2807.** சாதி யார்பளிங் கின்னொடு வெள்ளிய<br>சங்க வார்குழை யாய்திக ழப்படும்<br>வேதி யாவிகிர் தாவிழ வாரணி தில்லைதன்னுள்<br>ஆதி யாய்க்கிடம் ஆயசிற் றம்பலம்<br>**அங்கை யால்தொழ** வல்லடி யார்களை<br>வாதி யாதகலும்நலி யாமலி தீவினையே. 7<br>———<br>கை பெற்றதன் பயன் அவனைக் கும்பிடுவதே. | நல்ல இனத்துப் பொருந்திய பளிங்கொடு வெண்சங்கு கொண்டு செய்யப்பட்ட குண்டலத்தை உடையானே, விளங்குகின்ற மறையோனே, விகிர்தனே, திருவிழாக்கள் நிறைந்த அழகிய தில்லையுள் முதல்வனாகிய நினக்கு இடமான திருச்சிற்றம்பலத்தை அழகிய கைகளால் தொழவல்ல அடியார்களைத் தீவினைப் பெருக்கம் வாதிக்காது; வருத்தா தொழியும். |
| **2808.** வேயி னார்பணைத் தோளியொ டாடலை<br>வேண்டி னாய்விகிர் தாஉயிர் கட்கமு<br>தாயி னாய்இடு காட்டெரி யாடல்அ மர்ந்தவனே<br>தீயி னார்கணை யால்புரம் மூன்றெய்த<br>செம்மை யாய்திகழ் கின்றசிற் றம்பலம்<br>மேயி னாய்கழ லேதொழு தெய்துதும் மேலுலகே.<br>8 | மூங்கிலைப் போன்ற பருத்த தோளுடைய காளியொடு திருக்கூத்தாடுதலை விரும்பினவனே, விகிர்தனே, வணங்கிய உயிர்கட்கு அருளமுதமாகியவனே, இடுகாட்டின் தீயில் ஆடுதலை விரும்பியவனே, தீக்கடவுளைக் கூரிய முனையாக கொண்ட திருமாலாகிய கணையால் திரிபுரத்தை எய்த செம்மையனே, திருவருளாகி விளங்குகின்ற திருச்சிற்றம்பலத்தைத் திருநடங்கொள்ளும் இடமாக விரும்பியவனே, நின் கழலடிகளையே தொழுது சிவலோகத்தை அடைவோம். |
| **2809.** தாரி னார்விரி கொன்றை யாய்மதி<br>தாங்கு நீள்சடை யாய்தலை வாநல்ல<br>தேரி னார்மறு கின்திரு வாரணி தில்லைதன்னுள்<br>சீரி னால்வழி பாடொழி யாததோர்<br>செம்மை யால்அழ காயசிற் றம்பலம்<br>ஏரி னால்அமர்ந் தாய்உன சீரடி யேத்துதுமே. 9<br>———<br>திருஞானசம்பந்தர் பல இடங்களில் கொன்றை மாலை தரிசனம் காணப்பெற்றார். | மலர்ந்த கொன்றைப் பூமாலையைச் சூடியவனே, பிறையைத் தாங்கும் நீண்ட சடையவனே, தலைவனே, அழகிய தேர்களாலே பொலிவு நிறையப்பெற்ற திருவீதிகளையுடைய செல்வம் நிறைந்த திருத்தில்லையுள், சிறந்த நூல் முறைப்படி வழிபடுதலை ஒழியாததொரு செம்மையால் அழகான திருச்சிற்றம்பலத்தைத் திருக்கூத்தெழுச்சியால் விரும்பினவனே, உன் சீரடிகளை ஏத்துவேம் ஒழியாத வழிபாடு இன்றும் உண்டு. |
| **2810.** வெற்ற ரையுழல் வார்துவர் ஆடைய<br>வேடத் தாரவர் கள்உரை கொள்ளன்மின்<br>மற்ற வருல கின்னவ லம்மவை மாற்றகில்லார்<br>கற்ற வர்தொழு தேத்துசிற் றம்பலம்<br>காத லால்கழற் சேவடி கைதொழ<br>உற்ற வர்உல கின்உறு திகொள வல்லவரே. 10 | ஆடையில்லாத அரையினராய்த் திரிவாராகிய சமணருரைகளையும் துவரூட்டிய ஆடையால் கொள்ளும் வேடத்தவராகிய தேரருரைகளையும் ஒரு பொருளுரையாகக் கொள்ளாதீர்கள். அவர்கள் உலகத்து அவலங்களை மாற்ற வல்லாரல்லர். சிவாகமங்களைக் கற்று நாற்பாதங்களையும் வல்ல சைவர் தொழுது ஏத்தும் திருச்சிற்றம்பலத்தைக்கண்ட ஆராத காதலால், கழலணிந்த சேவடிகளைக் கைகளால் தொழ உற்றவரே உயிர்க்கு உலகினால் உள்ள உறுதி (ஆன்மலாபம்) கொள்ளவல்லவராவர். |

2811. நாறு பூம்பொழில் நண்ணிய காழியுள்
நான்ம றைவல்ல ஞானசம் பந்தன்
ஊறும் இன்தமி ழால்உயர்ந் தார்உறை
தில்லைதன்னுள்
ஏறு தொல்புகழ் ஏந்துசிற் றம்பலத்
தீச னைஇசை யாற்சொன்ன பத்திவை
கூறு மாறுவல் லார்உயர்ந் தாரொடும் கூடுவரே.
11

மணம் நாறும் பூஞ்சோலைகள் பொருந்திய சீகாழியுள் நான்கு மறைகளிலும் வல்ல திருஞானசம்பந்தர் ஊறும் இனிய தமிழால் சொன்னவையும், வேதசிவாகமங்களை யுணர்ந்த அந்தணர் மூவாயிரவர் வாழும் தில்லையுள் மேன்மேல் ஏறும் தொன்மைப்புகழ் தாங்கும் திருச்சிற்றம்பலம் உடையானைப் பண்ணிசையால் சொன்னவையும் ஆகிய இத்திருப்பதிகத்தை இசையுடன் பாடுமாறு வல்லவர் தேவரொடுங் கூடி இன்பம் அடைவர்.

## உ. திருப்பூந்தராய்

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 2

2812. பந்து சேர்வி ரலாள்பவ ளத்துவர்
வாயி னாள்பனி மாமதி போன்முகத்
தந்த மில்புக ழாள்மலை மாதொடும் ஆதிப்பிரான்
வந்து சேர்விடம் வானவர் எத்திசையுந்
நிறைந் துவலஞ் செய்து மாமலர்
புந்தி செய்திறைஞ் சிப்பொழி பூந்தராய்
போற்றுதுமே. 1

இப்பதிகத்தில் ஒவ்வொரு பாடலிலும் முதல் இரண்டு அடிகளில் அம்பிகையின் திருவுருவைச் சிறப்பிக்கிறார்.

பந்து வந்தணைகின்ற விரல்களையும், பவளம் போன்று சிவந்த வாயினையும், குளிர்ந்த முழுமதி போன்ற முகத்தையும், அளவற்ற புகழையுமுடையவளான மலைமகளாகிய உமாதேவியோடு எப்பொருள்கட்கும் முதல்வராக விளங்கும் சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடம் திருப்பூந்தராய் ஆகும். அங்குத் தேவர்கள் எல்லாத் திசைகளிலும் நிறைந்து, வலம் வந்து, மனத்தால் நினைந்து, உடலால் வணங்கி, சிறந்த மலர்களைத் தூவி வழிபடுவர். அத்தலத்தினை நாம் வணங்குவோமாக!

2813. காவி யங்கருங் கண்ணி னாள்கனித்
தொண்டை வாய்க்கதிர் முத்தநல் வெண்ணகைத்
தூவி யம்பெடை அன்னந டைச்சுரி மென்குழலாள்
தேவி யும்திரு மேனியோர் பாகமாய்
**ஒன்றி ரண்டொரு மூன்றொடு** சேர்பதி
பூவி லந்தணன் ஒப்பவர் பூந்தராய் போற்றுதுமே. 2

சீகாழிக்குரிய பன்னிரெண்டு திருப்பெயர்களையும் ஒன்றன்பின் ஒன்றாக மரபு மாறாமல் கீழ்க்காணுமாறுதான் சொல்லவேண்டும். பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி, கொச்சைவயம், கழுமலம். பூந்தராய் ஆறாவது என்று அதன் மரபை இப்பதிகப்பாட்டில் நிலைநிறுத்துகிறார். 12 பெயர் களையும் மந்திரமாக உச்சரிக்கலாம்.

நீலோற்பல மலர் போன்ற கரிய கண்களையும், கொவ்வைக்கனிபோல் சிவந்த வாயினையும், ஒளிவீசுகின்ற முத்துப்போன்ற வெண்மையான பற்களையும், இறகுகளையுமுடைய பெண் அன்னப்பறவை போன்ற நடையையும், பின்னிய மென்மையான கூந்தலையும் உடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டு இறைவன் எழுந்தருளியுள்ள இடம், மரபுப்படி சீகாழிக்கு வழங்கப்படுகின்ற பன்னிரு பெயர்களுள் ஆறாவதாகக் கூறப்படுகின்ற திருப்பூந்தராய். தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனை ஒத்த அந்தணர்கள் வசிக்கும் அத்திருத் தலத்தை நாம் வணங்குவோமாக!

| | | |
|---|---|---|
| **2814.** | பைய ராவரும் அல்குன் மெல்லியல்<br>பஞ்சின் நேரடி வஞ்சிகொள் நுண்ணிடைத்<br>தைய லாள்ஒரு பாலுடை எம்மிறை சாருமிடம்<br>செய்யெ லாங்கழு நீர்கம லம்மலர்த்<br>தேற லூறலிற் சேறுல ராதநற்<br>பொய்யி லாமறை யோர்பயில் பூந்தராய்<br>போற்றுதுமே. 3 | பாம்பின் படம் போன்ற அல்குலையும், பஞ்சு போன்ற மென்மையான அடியையும், வஞ்சிக்கொடி போன்ற நுண்ணிய இடையையும் உடைய தையலாகிய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒருபாகமாகக் கொண்ட எங்கள் இறைவன் விரும்பி எழுந்தருளியுள்ள இடம், செங்கழுநீர்ப் பூக்கள், தாமரைப் பூக்கள் இவற்றிலிருந்து தேன் ஊறிப் பாய்தலால் ஏற்பட்ட சேறு உலராத வயல்களையும், பொய்ம்மையிலாத அந்தணர்கள் வசிக்கும் சிறப்பையுமுடைய திருப்பூந்தராய். அத்திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |
| **2815.** | முள்ளி நாண்முகை மொட்டியல் கோங்கின்<br>அரும்பு தேன்கொள் குரும்பைமூ வாமருந்<br>துள்ளி யன்றபைம் பொற்கல சத்தியல் ஒத்தமுலை<br>வெள்ளி மால்வரை அன்னதோர் மேனியின்<br>மேவி னார்பதி வீமரு தண்பொழிற்<br>புள்ளி னந்துயின் மல்கிய பூந்தராய் போற்றுதுமே.<br>4 | தாமரை மொட்டு, கோங்கின் அரும்பு, ஊறும் தேனை உள்ளே கொண்ட இளநீர், மூவா மருந்தாகிய அமிர்தத்தை உள்ளடக்கிய பசும் பொற்கலசம் இவற்றை ஒத்த திருமுலைகளை யுடைய உமாதேவியாரை, திருநீறு பூசப் பெற்றமையால் வெள்ளிமலை போல் விளங்கும் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு சிவபெருமான் விரும்பி எழுந்தருளியுள்ள இடம், பறவைகள் அமைதியாய்த் துயில்கின்ற, மலர்கள் நிறைந்த குளிர்ச்சி பொருந்திய சோலைகளை யுடைய திருப்பூந்தராய். அத்திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |
| **2816.** | பண்ணி யன்றெழு மென்மொழி யாள்பகர்<br>கோதை யேர்திகழ் பைந்தளிர் மேனியோர்<br>பெண்ணி யன்றமொய்ம் பிற்பெரு மாற்கிடம்<br>பெய்வளையார்<br>கண்ணி யன்றெழு காவிச் செழுங்கரு<br>நீல மல்கிய காமரு வாவிநற்<br>புண்ணி யருறை யும்பதி பூந்தராய் போற்றுதுமே.<br>5 | பண்ணின் இசையோடு ஒலிக்கின்ற மென்மொழியாளாய், நிறைந்த கூந்தலையும், பசுந்தளிர் போன்ற மேனியையுமுடைய உமாதேவியைத் தன் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்ட சிவபெருமான் விரும்பி எழுந்தருளியிருக்கும் இடம், வளையல்களை அணிந்த பெண்களின் கண்களைப் போன்ற நீலோற்பல மலர்கள் நிறைந்த அழகிய குளங்களையுடையதும், பசு புண்ணியங்கள், பதி புண்ணியங்களைச் செய்கின்றவர்கள் வசிக்கின்ற பதியுமாகிய திருப்பூந்தராய். அத்திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |

| | | |
|---|---|---|
| **2817.** | வாணி லாமதி போல்நுத லாள்மட<br>மாழை யொண்க ணாள்வண்ட ரளந்நகை<br>பாணி லாவிய இன்னிசை யார்மொழிப்<br>பாவையொடும்<br>சேணி லாத்திகழ் செஞ்சடை யெம்மண்ணல்<br>சேர்வ துசிக ரப்பெருங் கோயில்சூழ்<br>போணி லாநுழை யும்பொழிற் பூந்தராய்<br>போற்றுதுமே. 6 | ஒளி பொருந்திய பிறைச்சந்திரனைப் போன்ற நெற்றியையும், மாம்பிஞ்சு போன்ற ஒள்ளிய கண்களையும் வளமான முத்துக்களைப் போன்ற பற்களையும், பாட்டில் விளங்குகின்ற இனிய இசை போன்ற மொழியினையும் உடைய பாவையாகிய உமாதேவியோடு, வானில் விளங்கும் நிலவு திகழ்கின்ற சிவந்த சடையையுடைய எங்கள் தலைவனான சிவபெருமான் விரும்பி எழுந்தருளியுள்ள இடமாவது, உயர்ந்த சிகரத்தையுடைய பெருங் கோயிலைச் சூழ்ந்து பிறைச்சந்திரன் நுழையும் சோலைகளையுடைய திருப்பூந்தராய். அத்திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |
| **2818.** | காரு லாவிய வார்குழ லாள்கயற்<br>கண்ணி னாள்புயற் காலொளி மின்னிடை<br>வாரு லாவிய மென்முலை யாள்மலை மாதுடனாய்<br>நீரு லாவிய சென்னி யன்மன்னி<br>நிகரும் நாமமுந் நான்கு நிகழ்பதி<br>போரு லாவெயில் சூழ்பொழிற் பூந்தராய்<br>போற்றுதுமே. 7 | கார்மேகம் போன்ற கரிய நீண்ட கூந்தலையும், கயல்மீன் போன்ற கண்களையும், மேகத்தில் தோன்றும் மின்னலைப் போன்ற இடையையும் கச்சணிந்த மென்மையான கொங்கைகளையும் உடைய மலைமகளான உமாதேவியோடு, கங்கையைத் தாங்கிய முடியையுடைய சிவபெருமான் நிலைபெற்றிருக்கும் பதி, பன்னிரு திருப்பெயர்கள் கொண்டு தனக்குத்தானே ஒப்பாக விளங்கும் பெருமை மிகுந்த, போர்க்கருவிகள் பொருத்தப்பட்ட மதில்கள் சூழ்ந்த, சோலைகள் நிறைந்த திருப்பூந்தராய். அத்திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |
| **2819.** | காசை சேர்குழ லாள்கயல் ஏர்தடங்<br>கண்ணி காம்பன தோள்கதிர் மென்முலைத்<br>தேசு சேர்மலை மாதம ருந்திரு மார்பகலத்<br>தீசன் மேவும் இருங்கயி லையெடுத்<br>தானை அன்றடர்த் தானிணைச் சேவடி<br>பூசை செய்பவர் சேர்பொழிற் பூந்தராய்<br>போற்றுதுமே. 8 | காயாம்பூப் போன்ற கருநிறமுடைய கூந்தலையும், கயல்மீன் போன்ற அழகிய அகன்ற கண்களையும், மூங்கில் போன்ற தோள்களையும், கதிர்வீசும் மென்மை வாய்ந்த கொங்கைகளையும் உடைய ஒளி பொருந்திய மலைமகளான உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட அழகிய அகன்ற மார்பினையுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ளதும், பெரிய கயிலை மலையினைப் பெயர்த்தெடுத்த இராவணனை அந்நாளில் அடர்த்த அச்சிவனின் சேவடிகள் இரண்டினையும் வழிபடுகிறவர்கள் வந்து சேர்கின்றதும் ஆகிய சோலைகள் சூழ்ந்த திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |

| | |
|---|---|
| **2820.** கொங்கு சேர்குழ லாள்நிழல் வெண்ணகைக்<br>கொவ்வை வாய்க்கொடி யேரிடை யாள்உமை<br>பங்கு சேர்திரு மார்புடை யார்படர் தீயுருவாய்<br>மங்குல் வண்ணனு மாமல ரோனும்<br>மயங்க நீண்டவர் வான்மிசை வந்தெழு<br>பொங்கு நீரின் மிதந்தநற் பூந்தராய் போற்றுதுமே.<br>9 | மணம் பொருந்திய கூந்தலையும், ஒளி பொருந்திய வெண்ணிறப் பற்களையும், கொவ்வைக்கனி போன்ற வாயினையும், கொடி போன்ற அழகிய இடையையும் உடைய உமாதேவியைத் தன்னுடைய ஒரு பாகமாக வைத்துள்ள அழகிய மார்பினையுடையவராய், கார்மேக வண்ணனான திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமனும் அடிமுடியறியாது மயங்கும்படி படர்கின்ற தீயுருவாய் ஓங்கி நின்ற சிவபெருமான் எழுந்தருளும் இடம், வானம்வரை பொங்கிய ஊழி வெள்ளத்திலும் அழியாது மிதந்த நற்பதியான திருப்பூந்தராய். அத்திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |
| **2821.** கலவ மாமயி லார்இய லாள்கரும்<br>பன்ன மென்மொழி யாள்கதிர் வாள்நுதற்<br>குலவு பூங்குழ லாள்உமை கூறனை வேறுரையால்<br>அலவை சொல்லுவார் தேர்அமண் ஆதர்கள்<br>ஆக்கி னான்றனை நண்ணலும் நல்கும்நற்<br>புலவர் தாம்புகழ் பொற்பதி பூந்தராய் போற்றுதுமே.<br>10 | தோகை மயில் போன்ற சாயலையுடையவளாய், கரும்பு போன்று இனிய மொழியை மென்மையாகப் பேசுபவளும், கதிர் வீசுகின்ற ஒளியுடைய நெற்றியுடையவளும், வாசனைப் பொருந்திய பூக்களைச் சூடிய கூந்தலையுடையவளுமான உமாதேவியை ஒரு பாகமாக வைத்தவர் சிவபெருமான். கூறத்தகாத சொற்களால் பழித்துக் கூறும் புத்தர்களையும், சமணர்களையும் பிறக்கும்படி செய்தவன் அவனே. அப்பெருமானை மனம், வாக்கு, காயம் மூன்றும் ஒன்றுபட வழிபட்டால் சிவபோகத்தைத் தருவான். அத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் சிவஞானிகள் போற்றும் அழகிய பதியான திருப்பூந்தராய். அத்திருத்தலத்தை நாம் வணங்குவோமாக! |
| **2822.** தேம்பல் நுண்ணிடை யாள்செழுஞ் சேலன<br>கண்ணி யோடண்ணல் சேர்விடம் தேன்அமர்<br>பூம்பொ ழில்திகழ் பொற்பதி பூந்தராய்<br>**போற்றுதும்என்**<br>**றோம்பு தன்மையன்** முத்தமிழ் நான்மறை<br>ஞான சம்பந்தன் ஒண்டமிழ் மாலைகொண்<br>டாம்படி இவை ஏத்தவல் லார்க்குஅடை<br>யாவினையே.<br>11<br><br>போற்றுதும் என்றோம்பு தன்மையன் – போற்றிப்புகழ வேண்டியதன் முக்கியத்துவத்தைச் சம்பந்தர் இயம்புகிறார். | மெலிந்த சிற்றிடையையும், செழுமையான சேல்மீன் போன்ற கண்களையும் உடைய உமாதேவியோடு எங்கள் தலைவனான சிவபெருமான் வீற்றிருக்கும் இடம், தேன் நிறைந்த பூஞ்சோலைகளுடன் விளங்குகின்ற அழகிய பதியான திருப்பூந்தராய். அதனை வணங்குவோம் என்ற அத்திருத்தலப் பெருமையைப் போற்றி வளர்க்கின்ற முத்தமிழ், நான்மறை இரண்டிற்குமுரிய திருஞான சம்பந்தனின் சிவஞானம் ததும்பும் தமிழ்ப் பாமாலையாகிய இப்பதிகத்தினைத் தமக்குப் பயன்தர வேண்டி ஓதுபவர்களை வினைகள் வந்தடையா. |

## 3. திருப்புகலி (நாலடி மேல் வைப்பு)

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 3

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **2823.** இயலிசை எனும்பொரு ளின்திறமாம்<br>புயல்அன மிடறுடைப் புண்ணியனே<br>கயல்அன வரிநெடுங் கண்ணியொடும்<br>அயல்உல கடிதொழ அமர்ந்தவனே<br>கலன்ஆவது வெண்டலை கடிபொழிற் புகலிதன்னுள்<br>நிலன்நாள்தொறும் இன்புற நிறைமதி அருளினனே. 1<br><br>நாலடிப்பாடலுக்குமேல் இரண்டடிகள் வைத்துப் பாடுகிறார் என்பதால் நாலடி மேல் வைப்பு. பாடல் தொறும் மேலடிகள் மாறுகின்றன. | இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் இவற்றில் கூறப்படும் பொருளின் பயனாக விளங்குகின்ற, கார்மேகம் போன்ற கருநிறக் கண்டத்தையுடைய புண்ணிய மூர்த்தியே! கயல்மீன் போன்ற நீண்ட கண்களையுடைய உமாதேவியோடு எல்லா உலகங்களும் தொழும்படி வீற்றிருப்பவனே! உனக்கு அணிகலனாக அல்லது உண்கலனாக விளங்குவது மண்டையோடே ஆகும். நல்ல மணமுடைய பூஞ்சோலைகள் நிறைந்த திருப்புகலியில் வீற்றிருந்து இந்நிலவுலகத்தோர் நாடொறும் இன்புறும்படி நிறைந்த அபர ஞான, பரஞானங்களை அடியேனுக்கு நீ அருளிச் செய்தாய். |
| **2824.** நிலையுறும் இடர்நிலை யாதவண்ணம்<br>இலையுறு மலர்கள்கொண் டேத்துதும்யாம்<br>மலையினில் அரிவையை வெருவவன்றோல்<br>அலைவரு மதகரி யுரித்தவனே<br>இமையோர்கள்நின் தாள்தொழ எழில்திகழ் பொழிற்புகலி<br>உமையாளொடு மன்னினை உயர்திரு வடியிணையே. 2 | ஆரவாரித்துவரும் மதயானையின் வலிய தோலினை மலைமகளான உமாதேவி அஞ்சும்படி உரித்தவனே! அழகிய சோலைகள் நிறைந்த திருப்புகலியில் வானவர்களும் வந்து உன் திருவடிகளைத் தொழும் பொருட்டு உமாதேவியோடு நிலையாக வீற்றிருக்கின்றாய். எங்களால் நீக்குவதற்கரிய நிலைத்த துன்பங்களை நீ நீக்கும் வண்ணம் இலைகளையும், மலர்களையும் கொண்டு உன் திருவடிகளை அர்ச்சித்து நாங்கள் வழிபடுவோம். |
| **2825.** பாடினை அருமறை வரன்முறையால்<br>ஆடினை காணமுன் அருவனத்திற்<br>சாடினை காலனைத் தயங்கொளிசேர்<br>நீடுவெண் பிறைமுடி நின்மலனே<br>நினையேஅடி யார்தொழ நெடுமதிற் புகலிந்நகர்<br>தனையேயிட மேவினை தவநெறி அருள்எமக்கே. 3 | ஒளி விளங்குகின்ற வளரும் தன்மையுடைய வெண்பிறையைச் சடைமுடியில் சூடிய நின்மலனே! அரிய வேதங்களை இசையிலக்கண முறைப்படி பாடியருளினாய்! முனிவரும் அவர்களின் பத்தினிகளும் காணும்படி அரிய தாருகாவனத்தில் திருநடனம் ஆடினாய்! மார்க்கண்டேயன் உயிரைக் கவரவந்த காலனைக் காலால் உதைத்தாய்! முழுமுதற்கடவுளான உன்னை அடியார்கள் தொழும்படி நீண்ட மதில்கள் சூழ்ந்த திருப்புகலி நகரில் வீற்றிருந்து அருளினாய்! எங்கட்குத் தவநெறியினை அருள்வாயாக! சுந்தரர் இறைவனிடம் "தலைவா உனை வேண்டிக் கொள்வேன் தவநெறியே" என்று வேண்டியது இங்கு நினைவு கூரத்தக்கது. |

**2826.** நிழல்திகழ் மழுவினை யானையின்தோல்
அழல்திகழ் மேனியில் அணிந்தவனே
கழல்திகழ் சிலம்பொலி அலம்பநல்ல
முழவொடும் அருநடம் முயற்றினனே
முடிமேல்மதி சூடினை முருகமர் பொழிற்புகலி
அடியாரவர் ஏத்துற அழகொடும் இருந்தவனே. 4

ஒளிவிளங்கும் மழுப்படையை ஏந்தியவனே! யானையின் தோலை நெருப்புப்போல் விளங்குகின்ற உனது சிவந்த திருமேனியில் அணிந்தவனே! திருவடியில் விளங்கும் வீரக் கழல்களும், சிலம்பும் ஒலிக்க, நல்ல முழவு முழங்கத் திருநடனம் புரிபவனே! சடைமுடியில் பிறைச்சந்திரனைச் சூடியவனே! அழகிய சோலைகள் சூழ்ந்த திருப்புகலியில் அடியார்கள் உன்னைப் புகழ்ந்து வணங்கும்படி வீற்றிருந்தருளினாய்.

---

**2827.** கருமையின் ஒளிர்கடல் நஞ்சம்உண்ட
உரிமையின் உலகுயிர் அளித்தநின்றன்
பெருமையை நிலத்தவர் பேசின்அல்லால்
**அருமையில் அளப்பரி தாயவனே**
அரவேரிடை யாளொடும் அலைகடன் மலிபுகலிப்
பொருள்சேர்தர நாள்தொறும் புவிமிசைப்
பொலிந்தவனே. 5

பாற்கடலில் தோன்றிய கருநிற நஞ்சை உண்டு, உன் முழுமுதற் பண்பினை விளங்குமாறு செய்து உலகுயிர்களைப் பாதுகாத்தருளிய உன்னுடைய பெருமையை மண்ணுலகத்தோர் போற்றலாமே தவிர, மற்ற எவ்வித அளவைகளாலும் ஆராய்வதற்கு அரியவனாய் உள்ளவனே! அரவம் அன்ன இடையுடைய உமாதேவியோடு, அலைகளையுடைய கடல்வளம் பொருந்திய திருப்புகலியிலே, இப்பூவுலகில் நாள்தோறும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நால்வகைப் பொருள்களும் சேரும்படி நீ வீற்றிருந்தருளுகின்றாய்.

---

**2828.** அடையரி மாவொடு வேங்கையின்றோல்
புடைபட அரைமிசைப் புனைந்தவனே
படையுடை நெடுமதிற் பரிசழித்த
விடையுடைக் கொடிமல்கு வேதியனே
விகிர்தாபரமா நின்னை விண்ணவர் தொழப்புகலித்
தகுவாய்மட மாதொடுந் தாள்பணிந் தவர்தமக்கே. 6

சிங்கத்தின் தோலைப் போர்த்து, புலியின் தோலையும் உடம்பில் பொருந்துமாறு இடையில் அணிந்துள்ளவனே! படைக்கருவிகளைக் கொண்ட நீண்ட மதில்களையுடைய திரிபுரத்தின் வலிமையை அழித்தவனே! இடபக் கொடியுடைய வேத நாயகனே! விகிர்தனே! எப்பொருட்கும் மேலானவனே! விண்ணோர்களும் தொழத் திருப்புகலியிலே உமாதேவியோடு வீற்றிருந்து உன் திருவடிகளை வணங்கும் அனைவர்க்கும் அருள்புரிகின்றாய்.

| | |
|---|---|
| **2829.** அடியவர் தொழுதெழ அமரரேத்தச்<br>செடியவல் வினைபல தீர்ப்பவனே<br>துடியிடை அகல்அல்குல் தூமொழியைப்<br>பொடியணி மார்புறப் புல்கினனே<br>புண்ணியா புனிதா புகர்ஏற்றினை புகலிந்நகர்<br>நண்ணினாய் கழல்ஏத்திட நண்ணகி லாவினையே.<br>7 | அடியவர்கள் தொழுதெழ, தேவர்கள் புகழ்ந்து வணங்க, அவர்களின் துன்பம்தரும் கொடிய வினைகளைத் தீர்த்தருளும் எம் இறைவனே! உடுக்கை போன்ற இடையையும், அகன்ற அல்குலையும், தூய மொழிகளையுமுடைய உமாதேவியைத் திருநீறு அணிந்த தன் திருமார்பில் தழுவியவனே! புண்ணிய மூர்த்தியே! புனிதனே! இடபவாகனனே! திருப்புகலி நகரில் வீற்றிருக்கும் பெருமானே! உன் திருவடிகளை வணங்கிப் போற்றுபவர்களை வினைகள் வந்தடையா. |
| **2830.** இரவொடு பகலதாம் எம்மான்உன்னைப்<br>பரவுதல் ஒழிகிலேன் வழியடியேன்<br>குரவிரி நறுங்கொன்றை கொண்டணிந்த<br>அரவிரி சடைமுடி ஆண்டகையே<br>அனமென்னடை யாளொடும் அதிர்கடல் இலங்கைமன்னை<br>இனமார்தரு தோளடர்த் திருந்தனை புகலியுளே.<br>8 | இரவு, பகல் போன்ற கால தத்துவத்தை இயக்கும் எம்பெருமானே! வழி வழி அடிமையாக வந்த நான் உன்னை நினைந்து வணங்கிப் போற்றுதலில் தவறேன். குராமலர்களையும், விரிந்த நறுமணமுடைய கொன்றை மலர்களையும், பாம்பையும் சடைமுடியில் அணிந்து, எம்மை ஆண்டருளும் பெருமானே! ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இலங்கை மன்னனான இராவணனின் இருபது தோள்களையும் அடர்த்த நீ, அன்னம் போன்ற மென்னடையுடைய உமாதேவியோடு திருப்புகலியில் எழுந்தருளியுள்ளாய். |
| **2831.** உருகிட உவகைதந் துடலினுள்ளால்<br>பருகிடும் அமுதன பண்பினனே<br>பொருகடல் வண்ணனும் பூவுளானும்<br>பெருகிடும் அருள்எனப் பிறங்கெரியாய்<br>உயர்ந்தாய்இனி நீஎனை ஒண்மலரடி யிணைக்கீழ்<br>வயந்தாங் குறநல் கிடுமதிற் புகலிமனே.<br>9 | உள்ளமும், உடலும் உருக உன்னைப் போற்றும் அடியவர்கட்குச் சிவானந்தம் அளிக்கும் அமுதம் போன்ற இனிமை வாய்ந்தவனே! கடல் போன்ற நீலநிறமுடைய திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் அடிமுடி காணாதபடி நெருப்பு மலையாய், உன்னுடைய பெருகும் அருளென உயர்ந்து நின்றாய். மதில்களையுடைய திருப்புகலியில் வீற்றிருக்கும் இறைவனே! நீ என்னை உன் ஒளி பொருந்திய திருவடியிணைக்கீழ் விரும்பி வீற்றிருக்கும்படி அருள்புரிவாயாக. |

**2832.** கையினில் உண்பவர் கணிகைநோன்பர்
செய்வன தவமலாச் செதுமதியார்
பொய்யவர் உரைகளைப் பொருள்எனாத
மெய்யவர் அடிதொழ விரும்பினனே
வியந்தாய்வெள் ளேற்றினை விண்ணவர் தொழுபுகலி
உயர்ந்தார்பெருங் கோயிலுள் ஒருங்குடன்
இருந்தவனே.
10

கையில் உணவேற்று உண்ணும் சமணர்களும், கணபங்கவாதம் செய்யும் புத்தர்களும் தவமல்லாததைச் செய்யும் அற்பமதியினர். உண்மைப்பொருளாம் இறைவனை உணராமல் வெறும் உலகியலறங்களை மட்டுமே பேசுகின்ற அவர்களுடைய உரைகளைப் பொருளெனக் கொள்ளாது, மெய்ப்பொருளாம் சிவனை யுணர்ந்த ஞானிகள் வந்து திருவடிகளைத் தொழ, விரும்பி அருள் புரிபவனே! வெண்ணிற எருதினை வாகனமாகக் கொண்டாய். விண்ணவர்களும் தொழ, திருப்புகலியில் உயர்ந்த அழகிய பெருங்கோயிலினுள் உமாதேவியுடன் ஒருங்கு வீற்றிருக்கின்றாய்.

**2833.** புண்ணியர் தொழுதெழு புகலிந்நகர்
விண்ணவர் அடிதொழ விளங்கினானை
நண்ணிய ஞானசம் பந்தன்வாய்மை
பண்ணிய அருந்தமிழ் பத்தும்வல்லார்
நடலையவை இன்றிப்போய் நண்ணுவர் சிவனுலகம்
இடராயின இன்றித்தாம் எய்துவர் தவநெறியே.
11

சிவபுண்ணியர்கள் வணங்குகின்ற திருப்புகலிப் பதியில், விண்ணவர்களும் தன் திருவடிகளைத் தொழும்படி விளங்கும் சிவபெருமானை, மனம், வாக்கு, காயம் மூன்றும் ஒன்றுபடப் போற்றிய திருஞானசம்பந்தனின் அருந்தமிழ்ப் பாக்கள் பத்தினையும் ஓதவல்லவர்கள் எவ்வித இடர்களுமின்றித் தவநெறியில் நின்று, பிறவித் துன்பத்தினின்றும் நீங்கிச் சிவனுலகம் அடைவர்.

## 4. திருவாவடுதுறை ( நாலடி மேல் வைப்பு )

**பண் : காந்தார பஞ்சமம்** **பதிக எண் : 4**

**2834.** இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே
இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக்
கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.
1

மேல்வைப்பு மகுடமாக எல்லாப் பாடல்களிலும் ஒரே மாதிரி வருவது பதிகத்தின் சிறப்பு. சிறந்த பலன் நல்கிய வேண்டுதல்.

திருப்பாற்கடலில், அமுதம் பெறும் பொருட்டுக் கடைந்தபோது தோன்றிய நஞ்சினைக் கழுத்தில் அடக்கித் தேவர்களைக் காத்த வேதநாயகனே! வாழ்க்கையில் இடையூறு ஏற்பட்டுத் துன்பம் உண்டானாலும், இளமை நீங்கி மூப்பினால் தளர்ச்சியுற்றாலும், தீவினைப் பயனால் நோய் தொடர்ந்து வந்தாலும், உன் திருவடிகளைத் தொழுது வணங்குவேன். அத்தகைய அடியேனை நீ ஆட்கொள்ளும் தன்மை இதுவோ? திருவாவடுதுறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே (உலக நன்மையின் பொருட்டுத் தந்தை செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) தேவைப்படுகின்ற பொருளை நீ எனக்குத் தரவில்லையானால் அஃது உன் திருவருளுக்கு அழகாகுமா?

| | |
|---|---|
| **2835.** வாழினும் சாவினும் வருந்தினும்போய்<br>வீழினும் உனகழல் விடுவேன்அல்லேன்<br>தாழிளந் தடம்புனல் தயங்குசென்னிப்<br>போழிள மதிவைத்த புண்ணியனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக்<br>கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.<br>2 | ஒளிர்கின்ற செஞ்சடையில் குளிர்ச்சியான கங்கையையும், பிறைச்சந்திரனையும் அணிந்த சிவபெருமானே! இம்மையில் மண்ணுலகில் நல்வினைப் பயனால் இன்பம் அனுபவிக்கின்ற காலத்திலும், தீவினைப் பயனால் துன்புற்று வருந்தும் காலத்திலும், நன்னெறியினின்று விலகித் தீநெறியில் செல்கின்ற காலத்திலும், வினைப்பயன்களை அனுபவித்து முடித்துச் சாகப்போகும் காலத்திலும், உன்னுடைய திருவடிகளை இறுகப் பற்றியதிலிருந்து நீங்கியவன் அல்லேன். இத்தகைய என்னை நீ ஆட்கொள்ளும் தன்மை இதுவோ? திருவாவடுதுறையில் வீற்றிருக்கும் சிவபெருமானே! (உலக நன்மையின் பொருட்டுத் தந்தை செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) எனக்குப் பொருள் தாராவிடில் அஃது உனது இன்னருளுக்கு அழகாகுமோ? |
| **2836.** நனவினும் கனவினும் நம்பாஉன்னை<br>மனவினும் வழிபடல் மறவேன்அம்மான்<br>புனல்விரி நறுங்கொன்றைப் போதணிந்த<br>கனல்எரி அனல்புல்கு கையவனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக்<br>கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.<br>3 | கங்கையையும், நறுமணம் கமழும் கொன்றையையும் அணிந்து கனன்று எரிகின்ற நெருப்பைக் கையிலேந்தியுள்ளவனே! அனைவரின் நம்பிக்கைக்கும், விருப்பத்திற்கு முரிய உன்னை நனவிலும், கனவிலும், மனம் ஒன்றி வணங்குவதற்கு மறந்திலேன். இத்தகைய என்னை நீ ஆட்கொள்ளுமாறு இதுவோ? திருவாவடுதுறையில் எழுந்தருளி யிருக்கும் சிவபெருமானே! (உலக நன்மைக்காகத் தந்தை செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) தேவையான பொருளை எனக்குத் தாராவிடில், அஃது உனதின்னருளுக்கு அழகாகுமோ? |
| **2837.** தும்மலொ டருந்துயர் தோன்றிடினும்<br>அம்மலர் அடியலால் அரற்றாதென்நாக்<br>கைம்மல்கு வரிசிலைக் கணையொன்றினால்<br>மும்மதிள் எரிஎழ முனிந்தவனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக்<br>கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.<br>4 | கையிலே மேருமலையை வில்லாக ஏந்தி, அக்கினியைக் கணையாகத் தொடுத்து, முப்புரங்களை எரியும்படி செய்தவனே! தும்மல், அவற்றின் உபாதைகள் இவற்றால் துன்பம் வரும்பொழுதும் உன்னுடைய மலர் போன்ற திருவடிகளைப் போற்றுதல் அல்லாமல் என் நா வேறெதனையும் நவிலாது. திருவாவடு துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! இத்தகைய தன்மையுடைய என்னை நீ ஆட்கொள்ளும் முறை இதுவோ? (உலக நன்மைக்காகத் தந்தை செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) தேவையான பொருளை எனக்குத் தாராவிடில், அஃது உனதின்னருளுக்கு அழகாகுமோ? |

| | |
|---|---|
| **2838.** கையது வீழினும் கழிவுறினும்<br>செய்கழல் அடியலால் சிந்தைசெய்யேன்<br>கொய்யணி நறுமலர் குலாயசென்னி<br>மையணி மிடறுடை மறையவனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 5 | கொய்து அணியப்பெறும் நறுமணம் கமழும் மலர்களைச் சூடியுள்ள முடியையும், மை போன்ற கருநிறக் கண்டத்தையும் உடைய மறையவனே! கைப்பொருள்கள் யாவும் இழந்து வருந்தும் காலத்திலும், பிறரால் இழிவாகக் கருதப்பட்டுக் கழிவுப் பொருள் போன்று ஒதுக்கப்பட்ட காலத்திலும், உன்னுடைய செம்மை வாய்ந்த திருவடிகளைப் போற்றுதலல்லாமல், வேறெதனையும் நான் சிந்தை செய்யேன். திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! இத்தன்மையுடைய என்னை நீ ஆட்கொள்ளும் முறை இதுவோ? (உலக நன்மைக்காகத் தந்தையார் செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) தேவையான பொருளை எனக்குத் தாராவிடில் அஃது உனதின்னருளுக்கு அழகாகுமோ? |
| **2839.** வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும்<br>எந்தாய்உன் னடியலால் ஏத்தாதென்நா<br>ஐந்தலை யரவுகொண் டரைக்கசைத்த<br>சந்தவெண் பொடியணி சங்கரனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 6 | ஐந்து தலைகளையுடைய பாம்பை அரையில் கச்சாகக் கட்டி, நறுமணம் கமழும் திருவெண்ணீற்றினைத் திருமேனியில் அணிந்துள்ள சங்கரனே! கொடிய துன்பத்தால் அச்சமுற்றாலும், எம் தந்தையே! உன் திருவடிகளைப் போற்றுதல் அல்லாமல் என் நா வேறெதனையும் சொல்லாது. அங்ஙனமிருக்க திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! நீ எம்மை ஆட்கொள்ளும் வகை இதுவோ. (உலக நன்மைக்காகத் தந்தையார் செய்ய விரும்பும் வேள்விக்கு) தேவையான பொருளை எனக்குத் தாராவிடில் அஃது உனதின்னருளுக்கு அழகாகுமோ? |
| **2840.** வெப்பொடு விரவியோர் வினைவரினும்<br>அப்பாவுன் அடியலால் அரற்றாதென்நா<br>ஒப்புடை ஒருவனை உருவழிய<br>அப்படி அழலெழ விழித்தவனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே. 7 | அழகில் தனக்கு ஒப்புமையாகத் தன்னைத் தவிரப் பிறரைச் சொல்ல முடியாத மன்மதனை, அவனுடைய வடிவம் அழியுமாறு நெருப்புத் தோன்ற நெற்றிக் கண்ணைத் திறந்து விழித்தவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! கொடிய வினையினால் துன்பம் நெருப்புப் போல வந்து தாக்கினாலும், அனைத்துயிர்கட்கும் தந்தையான உன் திருவடிகளைப் போற்றுதலல்லாமல் என் நா வேறொன்றையும் நவிலாது. இப்படிப்பட்ட என்னை நீ ஆட்கொள்ளும்முறை இதுவோ? (உலக நன்மைக்காகத் தந்தையார் செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) தேவையான பொருளை எனக்குத் தாராவிடில் அஃது உனதின்னருளுக்கு அழகாகுமோ? |

| | |
|---|---|
| **2841.** பேரிடர் பெருகிஓர் பிணிவரினும்<br>சீருடைக் கழல்அலால் சிந்தைசெய்யேன்<br>ஏருடை மணிமுடி யிராவணனை<br>ஆரிடர் படவரை அடர்த்தவனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக்<br>கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.<br>8 | அழகிய மணிமுடியணிந்த இராவணன் பொறுத்தற்கரிய துன்பமடையும்படி கயிலை மலையின்கீழ் அடர்த்தவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! தீவினையால் பெருந்துன்பம் தரும் நோய் வரினும் வாழ்வுதரும் உன் திருவடிகளைப் போற்றுதல் அல்லாமல் வேறெதனையும் நான் சிந்தனை செய்ததில்லை. இப்படிப்பட்ட என்னை நீ ஆட்கொள்ளும் முறை இதுவோ? (உலக நன்மைக்காகத் தந்தையார் செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) தேவையான பொருளை எனக்குத் தாராவிடில் அஃது உனதின்னருளுக்கு அழகாகுமா? |
| **2842.** உண்ணினும் பசிப்பினும் உறங்கினும்நின்<br>ஒண்மல ரடியலால் உரையாதென்நாக்<br>கண்ணனும் கடிகமழ் தாமரைமேல்<br>அண்ணலும் அளப்பரி தாயவனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக்<br>கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.<br>9 | திருமாலும், மணங்கமழ் தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும் அளந்தறிதற்கு அரியவனே! திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! நான் உண்ணும் நிலையிலும், பசியால் களைத்திருக்கும் நிலையிலும், உறங்கும் நிலையிலும் ஒளிபொருந்திய உன் திருவடிகளைப் போற்றுதலல்லாமல் என் நா வேறெதையும் நவிலாது. அப்படிப்பட்ட என்னை நீ ஆட்கொள்ளும் முறை இதுவோ? (உலக நன்மைக்காகத் தந்தை செய்யும் வேள்விக்கு) தேவைப்படும் பொருளை எனக்குத் தாராவிடில், அஃது உனதின்னருளுக்கு அழகாகுமா? |
| **2843.** பித்தொடு மயங்கியோர் பிணிவரினும்<br>அத்தாவுன் னடியலால் அரற்றாதென்னாப்<br>புத்தரும் சமணரும் புறன்உரைக்கப்<br>பத்தர்கட் கருள்செய்து பயின்றவனே<br>இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக்<br>கில்லையேல்<br>அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.<br>10 | புத்தரும், சமணரும் புறங்கூறினாலும் பொருட்படுத்தாது உன்னை வணங்குகின்ற பக்தர்கட்கு அருள்புரிகின்றவனே! பித்த நோயால் மயங்கும் நிலையுற்றாலும், தலைவா! உன் திருவடிகளைப் போற்றுதலல்லாமல் என் நா வேறெதையும் பேசாது. திருவாவடுதுறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! இப்படிப்பட்ட என்னை நீ ஆட்கொள்ளும்முறை இதுவோ? (உலக நன்மைக்காகத் தந்தையார் செய்ய விரும்புகின்ற வேள்விக்கு) தேவைப்படும் பொருளை எனக்குத் தாராவிடில் அஃது உனதின்னருளுக்கு அழகாகுமோ? |

**2844.** அலைபுனல் ஆவடு துறைஅமா்ந்த
இலைநுனை வேற்படை யெம்இறையை
நலமிகு ஞானசம் பந்தன்சொன்ன
விலையுடை அருந்தமிழ் மாலைவல்லார்
வினையாயினநீங் கிப்போய் விண்ணவர்
வியனுலகம்
நிலையாகமுன் ஏறுவர்நிலமிசை நிலையிலரே. 11

விலையுடை அருந்தமிழ் மாலைக்கு ஈவதொன்று மில்லை என்று சொல்ல முடியாது.

அலைகளையுடைய காவிரிவளம் பொருந்திய திருவாவடுதுறையில் வீற்றிருக்கும் இலை போன்ற நுனியையுடைய திரிசூலப் படையேந்திய எம் இறைவனைப் பற்றி உலக நலன்களை விரும்பிய ஞானசம்பந்தன் அருளிய சிறப்புடைய அருந்தமிழ் மாலையாகிய இத்திருப்பதிகத்தை ஓதுபவர்கள் வினையாவும் நீங்கப் பெற்று விரிந்த விண்ணுலகில் நிலையாக வீற்றிருப்பர். துன்பம் தரும் இம்மண்ணுலகில் மீண்டும் வந்து பிறவார்.

## 5. திருப்பூந்தராய் ( ஈரடி மேல் வைப்பு )

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 5

**2845.** தக்கன் வேள்வி தகர்த்தவன் பூந்தராய்
மிக்க செம்மை விமலன் வியன்கழல்
சென்று சிந்தையில் வைக்க மெய்க்கதி
நன்ற தாகிய நம்பன் தானே. 1

பாடல்தோறும் மேல்வைப்பு மாறுகிறது.

சிவனை மதியாது தக்கன் செய்த யாகத்தைத் தகர்த்தவனாகிய, திருப்பூந்தராய்த் தலத்தில் எழுந்தருளிய மிகுந்த சிறப்புடைய, இயல்பாகவே பாசங்களில் நீங்கிய சிவபெருமானின் பெருமையுடைய திருவடிகளைச் சிந்தியுங்கள். அனைத் துயிர்கட்கும் நன்மையைச் செய்கின்ற, அனைவராலும் விரும்பப்படுகின்ற அச் சிவபெருமானே நமக்கு வீடுபேற்றினைத் தருவான்.

**2846.** புள்ளி னம்புகழ் போற்றிய பூந்தராய்
வெள்ளம் தாங்கு விகிர்தன் அடிதொழ
ஞாலத் தில்உயர் வார்உள்கும் நன்னெறி
மூலம் ஆய முதலவன் தானே. 2

பறவையினங்களும் புகழ்ந்து போற்றிய திருப்பூந்தராய் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள கங்கையைத் தாங்கியுள்ள விகிர்தனான சிவபெருமானின் திருவடிகளைத் தொழுதலே, இந்நிலவுலகில் உயர்வடைவதை விரும்புபவர்கள் சிந்திக்கும் நன்னெறியாகும். ஏனென்றால் அனைத்திற்கும் மூலப் பொருளாக விளங்குபவன் அச்சிவபெருமானே ஆவான்.

**2847.** வேந்த ராய்உல காள விருப்புறின்
பூந்த ராய்நகர் மேயவன் பொற்கழல்
நீதி யால்நினைந் தேத்தி உள்கிடச்
சாதி யாவினை யான தானே. 3

நீங்கள் மன்னராகி உலகாள விரும்பினால் திருப்பூந்தராய் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானின் பொன்னார் திருவடிகளை வழிபடுங்கள். மேலும் அத்திருவடிகளை விதிமுறைப்படி நினைந்து, போற்றித் தியானித்தால் வினைகள் தம் தொழிலைச் செய்யா. எனவே பிறவி நீங்கும். வீடுபேறு உண்டாகும்.

| | |
|---|---|
| **2848.** பூசு ரர்தொழு தேத்திய பூந்தராய்<br>ஈசன் சேவடி யேத்தி யிறைஞ்சிடச்<br>சிந்தை நோயவை தீர நல்கிடும்<br>இந்து வார்சடை யெம்இ றையே. 4 | இப்பூவுலகில் தேவர்கள் போன்று பெருமையாகக் கருதப்படுகின்ற அந்தணர்கள் வணங்கிப் போற்றும் திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனின் செம்மை வாய்ந்த திருவடிகளைத் துதித்து இறைஞ்சிடச் சந்திரனை அணிந்த நீண்ட சடைகளையுடைய இறைவன் நம் மனக்கவலைகளைப் போக்கி அருள்புரிவான். |
| **2849.** பொலிந்த என்பணி மேனியன் பூந்தராய்<br>மலிந்த புந்தியர் ஆகி வணங்கிட<br>நுந்தம் மேல்வினையோட வீடுசெய்<br>எந்தை யாயஎம் மீசன் தானே. 5 | எலும்பு மாலைகளைத் தன் திருமேனியில் அணிந்து திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானை, நிறைந்த உள்ளத்தோடு வணங்கிட, நம் அனைவர்க்கும் தந்தையாகிய அவ்விறைவன், நீங்கள் முன்பு ஈட்டிய சஞ்சிதவினையைப் போக்குதலோடு, இனிமேல் வரும் ஆகாமிய வினையும் ஏறாதபடி செய்து வீடுபேறு அருளுவான். தத்தம் கால எல்லைகளில் நீங்கிய திருமால், பிரமன் இவர்களின் எலும்புகளைச் சிவபெருமான் மாலையாக அணிந்துள்ளது சிவனின் அநாதி நித்தத்தன்மையையும், யாவருக்கும் முதல்வனாம் தன்மையையும் உணர்த்தும். |
| **2850.** பூதம் சூழப் பொலிந்தவன் பூந்தராய்<br>நாதன் சேவடி நாளும் நவின்றிட<br>நல்கும் நாள்தொறும் இன்பம் நளிர்புனல்<br>பில்கு வார்சடைப் பிஞ்ஞ கனே. 6 | திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் பூதகணங்கள் சூழ விளங்கும் தலைவனாகிய சிவபெருமானின் திருவடிகளை எந்நாளும் போற்றி வணங்க, குளிர்ந்த கங்கைநீர் சொட்டுகின்ற நீண்ட சடைமுடியுடைய அப்பெருமான் நமக்கு நாள்தோறும் பேரின்பம் அருளுவான். |
| **2851.** புற்றின் நாகம் அணிந்தவன் பூந்தராய்<br>பற்றிவாழும் பரமனைப் பாடிடப்<br>பாவம் ஆயின தீரப் பணித்திடுஞ்<br>சேவ தேறிய செல்வன் தானே. 7 | புற்றில் வாழும் பாம்பை ஆபரணமாக அணிந்து, திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள, அனைவருக்கும் மேலான கடவுளாகிய சிவபெருமானைப் பாடி வணங்க, விடையேறும் செல்வனான அவன், நாம் மனம், வாக்கு, காயத்தால் செய்த பாவங் களனைத்தையும் தீர்த்தருளுவான். |
| **2852.** போத கத்துரி போர்த்தவன் பூந்தராய்<br>காத லித்தான் கழல்விரல் ஒன்றினால்<br>அரக்கன் ஆற்றல் அழித்தவ னுக்கருள்<br>பெருக்கி நின்றஎம் பிஞ்ஞ கனே. 8 | யானையின் தோலை உரித்துப் போர்த்தித் திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் விரும்பி எழுந்தருளியுள்ள எனது பிஞ்ஞகனாகிய சிவபெருமானே தனது திருவடி விரல் ஒன்றினால் அரக்கனது ஆற்றலை அழித்துப் பின்னர் அவனுக்கு அருள் செய்தான். |

| | |
|---|---|
| 2853. மத்தம் ஆன இருவர் மருவொணா<br>அத்தன் ஆனவன் மேவிய பூந்தராய்<br>ஆள தாக அடைந்துய்ம்மின் நும்வினை<br>மாளு மாறருள் செய்யுந் தானே. 9 | தாமே தலைவர் என்ற செருக்குக் கொண்ட திருமாலும், பிரமனும், அறிந்து அடைய முடியாது உயர்ந்து விளங்கிய சிவபெருமான் எழுந்தருளிய திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தை அவனுக்கு ஆட்படும்படி அடியவராய்ச் சென்று சேர்ந்து மேல் நிலையை அடையுங்கள். அவன் தானே வந்து உங்கள் வினைகள் அழியுமாறு அருள் புரிவான். |
| 2854. பொருத்த மில்சமண் சாக்கியப் பொய்கடிந்<br>திருத்தல் செய்தபிரான் இமை யோர்தொழப்<br>பூந்த ராய்நகர் கோயில் கொண்டுகை<br>ஏந்து மான்மறி யெம்இ றையே. 10 | வேத நெறிகட்குப் பொருந்தாத சமணர், புத்தர்களின் பொய்யுரைகளை ஒதுக்கி, விண்ணோர்கள் வணங்கும்படி வீற்றிருக்கும் கடவுள், திருப்பூந்தராய்த் திருத்தலத்தை கோயிலாகக் கொண்டு தனது கையில் மான்கன்றை ஏந்தியுள்ள சிவபெருமானே ஆவான். |
| 2855. புந்தி யான்மிக நல்லவர் பூந்தராய்<br>அந்தம் இல்எம் அடிகளை ஞானசம்<br>பந்தன் மாலைகொண் டேத்தி வாழும்நும்<br>பந்த மார்வினை பாறி டுமே. 11 | உள்ளத்தால் மிக நல்ல சிவனடியார்கள் வாழ்கின்ற திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள, என்றும் அழிதலில்லாத எம் தலைவனான சிவபெருமானைத் திருஞானசம்பந்தன் அருளிச் செய்த இப்பதிகப் பாமாலையைக் கொண்டு போற்றி வாழுங்கள். உங்களைப் பந்தித்து நின்ற வினைகள் யாவும் நீங்கும். |

## 6. திருக்கொள்ளம்பூதூர் ( ஈரடி மேல் வைப்பு )

**பண் : காந்தார பஞ்சமம்** **பதிக எண் : 6**

| | |
|---|---|
| 2856. கொட்ட மேகம ழுங்கொள்ளம் பூதூர்<br>நட்டம் ஆடிய நம்பனை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. 1<br><br>மேல்வைப்பு – ஒரே மகுடம். செயற்கரிய செய்ய விழையும்போது மகுடம் மாறுவதில்லை. | நல்லமணம் கமழும் திருக்கொள்ளம்பூதூர் என்னும் திருத்தலத்தில் திருநடனமாடும் இறைவனைத் தியானிப்பதால், **இந்த ஓடமாவது ஆற்றைக் கடந்து செல்லத் தனக்குத்தானே தள்ளப்படுவதாக. எம் நம்பிக்கைக்கும், விருப்பத்திற்குமுரிய சிவபெருமானே!** மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வணங்க அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| **2857.** கோட்ட கக்கழ னிக்கொள்ளம் பூதூர்<br>நாட்ட கத்துறை நம்பனை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. 2<br><br>கூவிளம்புதூர் கொள்ளம்புதூர் ஆயிற்று.<br>கூவிளம் – வில்வம். ஐப்பசி அமாவாசையன்று இந்த உற்சவம் நடக்கிறது. | நீர்நிலைகளும், வயல்களும் கொண்டு விளங்கும் திருக்கொள்ளம் பூதூர் என்னும் தலத்தில் விரும்பி வீற்றிருக்கின்ற நம்பனைத் தியானிக்க, இந்த ஓடமானது ஆற்றைக் கடந்து செல்லத் தனக்குத் தானே தள்ளப்படுவதாக. மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |
| **2858.** குலையி னார்தெங்கு சூழ்கொள்ளம் பூதூர்<br>**விலையி லாட்கொண்ட விகிர்தனை யுள்கச்**<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. 3 | குலைகளோடு கூடிய தென்னை மரங்கள் சூழ்ந்த திருக்கொள்ளம்பூதூரில், **விலை கொடுத்து வாங்கிய பொருளைப் போன்ற அருமையுடன் என்னை ஆட்கொண்ட விகிர்தனாகிய உன்னைத் தியானிக்க,** இந்த ஓடமாவது ஆற்றைக் கடந்து செல்லத் தனக்குத் தானே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |
| **2859.** குவளை கண்மல ருங்கொள்ளம் பூதூர்த்<br>தவள நீறணி தலைவனை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. 4 | பெண்களின் கண்களைப் போன்று குவளை மலர்கள் மலர்ந்துள்ள திருக்கொள்ளம்பூதூரில் வீற்றிருக்கின்ற திருவெண்ணீறு அணிந்துள்ள தலைவனான சிவபெருமானைத் தியானிக்க, இந்த ஓடமானது ஆற்றைக் கடந்து செல்லத் தனக்குத் தானே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |
| **2860.** கொன்றை பொன்சொரி யுங்கொள்ளம் பூதூர்<br>நின்ற புன்சடை நிமலனை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. 5 | கொன்றை மரமானது பொன்னிறப் பூக்களை உதிர்க்கின்ற திருக்கொள்ளம்பூதூரில் எழுந்தருளியுள்ள நிமலனைத் தியானிக்க, இந்த ஓடமானது ஆற்றைக் கடக்கத் தனக்குத் தானே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |

| | | | |
|---|---|---|---|
| **2861.** | ஓடம் வந்தணை யுங்கொள்ளம் பூதூர்<br>ஆடல் பேணிய அடிகளை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. | 6 | திருநடனம் செய்யும் தலைவனான சிவபெருமானைத் தியானிக்க, ஓடமானது திருக்கொள்ளம்பூதூர் என்னும் தலத்தினை அடையும்படி ஆற்றைக் கடக்கத் தானாகவே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |
| **2862.** | ஆறு வந்தணை யுங்கொள்ளம் பூதூர்<br>ஏறு தாங்கிய இறைவனை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. | 7 | ஆறு வந்தடைகின்ற திருக்கொள்ளம்பூதூரில் இடபம் தாங்கிய இறைவனைத் தியானிக்க, ஓடம் தானாகவே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |
| **2863.** | குரக்கி னம்பயி லுங்கொள்ளம் பூதூர்<br>அரக்க னைச்செற்ற ஆதியை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. | 8 | குரங்குக் கூட்டங்கள் மரங்களில் ஆடிக் குதிப்பதால் உண்டாகும் ஒலி நிறைந்த திருக்கொள்ளம்பூதூரில் எழுந்தருளியிருக் கின்றவனும், இராவணனை மலையின் கீழ் நெருக்கியவனுமான ஆதிமுதல்வனான சிவபெருமானைத் தியானிக்க இந்த ஓடம் தானாகவே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |
| **2864.** | பருவ ரால்உக ளுங்கொள்ளம் பூதூர்<br>இருவர் காண்பரி யான்கழ லுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. | 9 | பருத்த வரால்மீன்கள் துள்ளுகின்ற திருக்கொள்ளம்பூதூரில் எழுந்தருளி யிருக்கின்ற, திருமாலும், பிரமனும் காண்பதற்கு அரியவனாய் நின்ற சிவபெருமானின் திருவடிகளைத் தியானிக்க இந்த ஓடம் தானாகவே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியவர்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |

| | |
|---|---|
| **2865.** நீர கக்கழ னிக்கொள்ளம் பூதூர்த்<br>தேர மண்செற்ற செல்வனை யுள்கச்<br>செல்ல வுந்துக சிந்தை யார்தொழ<br>நல்கு மாறருள் நம்பனே. 10 | நீர்வளம் மிக்க வயல்களையுடைய திருக்கொள்ளம்பூதூரில் எழுந்தருளியுள்ளவனாய், புத்தர்களும், சமணர்களும் பகைத்துப் பேசும் செல்வனான சிவபெருமானைத் தியானிக்க இந்த ஒடம் தானே தள்ளப்படுவதாக. நம்பனே! மனத்தால் உன்னைச் சிந்தித்து மகிழும் அடியார்கள் புறத்தேயும் உன்னைத் திருக்கோயிலில் கண்டு வழிபட அருள்புரிவாயாக. |
| **2866.** கொன்றை சேர்சடை யான்கொள்ளம் பூதூர்<br>நன்று காழியுள் ஞானசம் பந்தன்<br>இன்றுசொன் மாலைகொண் டேத்த வல்லார்போய்<br>என்றும் வானவ ரோடிருப் பாரே. 11 | கொன்றை மலர்களை அணிந்த சடைமுடியுடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ள திருக்கொள்ளம்பூதூரில் நற்புகழுடைய காழியில் வசிக்கும் ஞானசம்பந்தன் உரைத்த இப்பதிகப் பாமாலையால் இறைவனைப் போற்ற வல்லவர்கள் எப்பொழுதும் தேவர்களோடு கூடி மகிழ்வர். |

## 7. திருப்புகலி

**பண் : காந்தார பஞ்சமம்** **பதிக எண் : 7**

| | |
|---|---|
| **2867.** கண்ணுத லானும்வெண் ணீற்றினா னுங்**கழ** லார்க்கவே<br>பண்ணிசை பாடிநின் றாடினா னும்**பரஞ்** சோதியும்<br>புண்ணிய நான்மறை யோர்களேத் தும்**புக** லிந்நகர்ப்<br>பெண்ணினல் லாளொடும் வீற்றிருந் த**பெரு** மானன்றே. 1<br><br>கழ, பரஞ், புக, பெரு மோனை ஒன்றிய அசைச் சொற்கள். | நெற்றிக் கண்ணையுடையவனும், திருவெண்ணீற்றினைப் பூசியுள்ளவனும், திருவடிகளில் கழல்கள் ஒலிக்கப் பண்ணுடன் இசைபாட நடனம் ஆடுபவனும் ஆகி, மேலான சோதி வடிவாக விளங்குகின்ற கடவுள், சிவ புண்ணியர்களாகிய, நான்கு வேதங்களையும் பயின்ற அந்தணர்கள் துதிக்கின்ற திருப்புகலி நகரில் பெண்ணின் நல்லவளாகிய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் சிவபெருமானேயாவான். |
| **2868.** சாம்பலோ டுந்தழ லாடினா னுஞ்சடை யின்மிசைப்<br>பாம்பினோ டும்மதி சூடினா னும்பசு வேறியும்<br>பூம்படு கல்லிள வாளைபா யும்புக லிந்நகர்க்<br>காம்பன தோளியொ டும்மிருந் தகட வுளன்றே. 2<br><br>மகா சங்கார காலத்தில் உலகமெல்லாம் நெருப்புமயமாய் அனைத்தும் ஒடுங்கியபின் நெருப்பின் நடுநின்று ஆடுவதுதான் **"சிவபரத்துவம்"**. | மகாசங்கார காலத்தில் சாம்பலோடு நெருப்பில் ஆடியவனும், சடைமுடியில் பாம்போடு சந்திரனைச் சூடியுள்ளவனும், இடபவாகனத்தில் ஏறியுள்ளவனுமான சிவபெருமான், மலர்ப் பொய்கையில் இள வாளை மீன்கள் துள்ளிப் பாய்கின்ற திருப்புகலி நகரில், மூங்கில் போன்ற தோளுடைய உமாதேவியோடு வீற்றிருக்கும் கடவுளே ஆவான். |

| | |
|---|---|
| **2869.** கருப்புநல் வார்சிலைக் காமன்வே வக்கடைக் கண்டானும்<br>மருப்புநல் லானையி னீருரி போர்த்தம ணாளனும்<br>பொருப்பன மாமணி மாடமோங் கும்புக லிந்நகர்<br>விருப்பினல் லாளொடும் வீற்றிருந் தவிம லனன்றே. **3** | நல்ல நீண்ட கரும்பு வில்லையுடைய மன்மதன் எரியும்படி நெற்றிக் கண்ணால் விழித்தவனும், அழகிய தந்தத்தையுடைய யானையின் வலிய தோலினை உரித்துப் போர்த்திக் கொண்ட மணாளனுமாகிய சிவபெருமான், மலைகள் போன்று உயர்ந்து விளங்கும் அழகிய மாடங்களையுடைய திருப்புகலி நகரில் தன்மீது விருப்பமுடைய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் விமலனேயாவான். |
| **2870.** அங்கையி லங்கழ லேந்தினா னும்அழ காகவே<br>கங்கையைச் செஞ்சடை சூடினா னுங்கட லின்னிடைப்<br>பொங்கிய நஞ்சமு துண்டவ னும்புக லிந்நகர்<br>மங்கைநல் லாளொடும் வீற்றிருந் தமண வாளனே. **4** | உள்ளங்கையில் நெருப்பை ஏந்தியவனும், அழகுறக் கங்கையைச் செஞ்சடையில் சூடியவனும், திருப்பாற் கடலில் தோன்றிய நஞ்சை அமுதாக உண்டவனும், திருப்புகலி நகரில் மங்கை நல்லாளாகிய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் சிவபெருமானேயாவான். |
| **2871.** சாமநல் வேதனுந் தக்கன்றன் வேள்வித கர்த்தானும்<br>நாமநூ றாயிரஞ் சொல்லிவா னோர்தொழு நாதனும்<br>பூமல்கு தண்பொழின் மன்னுமந் தண்புக லிந்நகர்க்<br>கோமள மாதொடும் வீற்றிருந் தகுழ கனன்றே. **5**<br><br>நூறாயிரம் திருநாமம் – இலட்ச்சார்ச்சனை. | நல்ல சாமவேதத்தை அருளியவனும், சிவனை நினையாது தக்கன் செய்த யாகத்தைத் தகர்த்தவனும், நூறாயிரம் திருநாமங்களைச் சொல்லித் தேவர்களும் அருச்சித்து வணங்கும் தலைவனும், பூக்கள் நிறைந்த குளிர்ந்த சோலைகள் நிலைபெற்றிருக்கும் அழகும், குளிர்ச்சியுமுடைய திருப்புகலி நகரில் அழகிய இளம் பெண்ணாகிய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் அழகிய சிவபெருமானே யாவான். |
| **2872.** இரவிடை யொள்ளெரி யாடினா னும்இமை யோர்தொழச்<br>செருவிடை முப்புரந் தீயெரித் தசிவ லோகனும்<br>பொருவிடை யொன்றுகந் தேறினா னும்புக லிந்நகர்<br>அரவிடை மாதொடும் வீற்றிருந் தவழ கனன்றே. **6** | மகாசங்காரம் என்று சொல்லப்படும் நள்ளிரவில் ஒளிமிக்க நெருப்பில் ஆடியவனும், தேவர்கள் தொழுது வேண்டப்போர் முகத்தில் முப்புரங்களைத் தீப்பற்றி எரியும்படி செய்த சிவலோக நாதனும், இடபவாகனத்தில் உகந்து ஏறியவனும், திருப்புகலி நகரில் பாம்பு போன்ற இடையினையுடைய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் அழகிய சிவபெருமானே யாவான். |

| | | |
|---|---|---|
| 2873. | சேர்ப்பது திண்சிலை மேவினா னுந்திகழ் பாலன்மேல்<br>வேர்ப்பது செய்தவெங் கூற்றுதைத் தானும்வேள் விப்புகை<br>போர்ப்பது செய்தணி மாடமோங் கும்புக லிந்நகர்ப்<br>பார்ப்பதி யோடுடன் வீற்றிருந் தபர மனன்றே. 7 | திண்ணிய கயிலை மலையை விரும்பி இருப்பிடமாகக் கொண்டவனும், பாலனான மார்க்கண்டேயர் மீது சினம் கொண்டு வந்த கொடுங்காலனைக் காலால் உதைத்தவனும், வேள்விப் புகையால் மூடப்பட்ட அழகிய மாடங்கள் ஓங்கும் திருப்புகலி நகரில் உமாதேவியோடு வீற்றிருந்தருள்பவனும் எல்லோருக்கும் மேலானவனான சிவபெருமானே யாவான். |
| 2874. | கன்னெடு மால்வரைக் கீழரக் கன்னிடர் கண்டானும்<br>வின்னெடும் போர்விறல் வேடனா கிவிச யற்கொரு<br>பொன்னெடுங் கோல்கொடுத் தானுமந் தண்புக லிந்நகர்<br>அன்னமன் னந்நடை மங்கையொ டும்அமர்ந் தானன்றே. 8 | கல் போன்று திண்ணிய நெடிய பெரிய திருக்கயிலை மலையின் கீழ் அரக்கனான இராவணனை இடர் செய்தானும், வில்லேந்திப் போர்புரியும் வீரமுடைய வேட்டுவ வடிவில் வந்து அர்ச்சுனனுக்கு ஒரு பொன்மயமான பாசுபதம் என்ற அம்பைக் கொடுத்தவனும், அழகிய குளிர்ச்சியான திருப்புகலி நகரில் அன்னம் போன்ற நடையையுடைய உமாதேவியோடு வீற்றிருந்து அருளுபவனான சிவபெருமானே யாவான். |
| 2875. | பொன்னிற நான்முகன் பச்சையான் என்றிவர் புக்குழித்<br>தன்னையின் னானெனக் காண்பரி யதழற் சோதியும்<br>புன்னைபொன் றாதுதிர் மல்குமந் தண்புக லிந்நகர்<br>மின்னிடை மாதொடும் வீற்றிருந் தவிம லனன்றே. 9 | பொன்னிறப் பிரமனும், பச்சைநிறத் திருமாலும் என்ற இவர்கள் அடிமுடி காணப் புகுந்தபோது தன்னை இன்னானெனக் காண்பதற் கியலாதபடி அழற்பிழம்பாய் நின்ற பெருமான், புன்னை மரங்கள் பொன் போன்ற தாதுக்களை உதிர்க்க அழகிய, குளிர்ச்சியான திருப்புகலி நகரில் மின்னல் போன்ற இடையையுடைய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் விமலனாகிய சிவபெருமானேயாவான். |
| 2876. | பிண்டியும் போதியும் பேணுவார் பேச்சினைப் பேணாததோர்<br>தொண்டருங் காதல்செய் சோதியா யசுடர்ச் சோதியான்<br>புண்டரீகம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுக லிந்நகர்<br>வண்டமர் கோதையொ டும்மிருந் தமண வாளனே. 10 | அசோக மரத்தையும், அரச மரத்தையும் போற்றும் சமணர்கள், புத்தர்கள் சொல்லும் உரைகளைப் போற்றாது ஒப்பற்ற தொண்டர்கள் பக்தியுடன் வழிபாடு செய்கின்ற சோதிச் சுடராய் ஒளிரும் இறைவன் தாமரைகள் மலரும் பொய்கைகள் சூழ்ந்த திருப்புகலி நகரில் வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவியோடு எழுந்தருளியுள்ள மணவாளனான சிவபெருமானேயாவான். |

| | |
|---|---|
| **2877.** பூங்கமழ் கோதையொ டும்மிருந் தான்புக லிந்நகர்ப்<br>பாங்கனை ஞானசம் பந்தன்சொன் னதமிழ் பத்திவை<br>ஆங்கமர் வெய்திய வாதியா கவிசை வல்லவர்<br>ஓங்கம ராவதி யோர்தொழச் செல்வது முண்மையே. 11 | பூமணம் கமழும் கூந்தலையுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட திருப்புகலி நகர் இறைவனை, ஞானசம்பந்தன் சொன்ன தமிழ்ப்பாக்கள் பத்தினைத் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவமாகவே கொண்டு இன்னிசையுடன் ஒதித் துதிக்க வல்லவர்கள் பெருமையுடைய தேவலோகத் தாரும் தொழும்படி சிவனுலகம் செல்வர் என்பது உண்மையே ஆகும். |

## 8. திருக்கடவூர் வீரட்டம்

**பண் : காந்தார பஞ்சமம்** **பதிக எண் : 8**

| | |
|---|---|
| **2878.** சடையுடை யானும்நெய் யாடலா னுஞ்சரி கோவண<br>உடையுடை யானுமை யார்ந்த வொண்கண் உமைகேள்வனும்<br>கடையுடை நன்னெடு மாடமோங் குங்கட வூர்தனுள்<br>விடையுடை யண்ணலும் வீரட்டா னத்தர னல்லனே. 1<br><br>அட்ட வீரட்டத்தலம் – குங்கிலியக்கலய நாயனாரும், காரி நாயனாரும் தொண்டுசெய்து முத்தி பெற்ற தலம். மார்க்கண்டேயர் வரலாற்றுத்தலம். | சடை முடியுடையவனும், பசுவிலிருந்து பெறப்படும் நெய் முதலான ஐந்து பொருள்களால் திருமுழுக்காட்டப்படுபவனும், சரிந்த கோவண ஆடையுடையவனும், மை தீட்டிய ஒளி பொருந்திய கண்ணையுடைய உமாதேவியின் கணவனும், வாயில்களை யுடைய நெடிதோங்கிய நல்ல மாடங்களை உடைய திருக்கடவூரில் இடப வாகனத்தில் வீற்றிருக்கும் அண்ணலும் வீரட்டானத்து அரன் அல்லனோ? |
| **2879.** எரிதரு வார்சடை யானும்வெள் ளையெரு தேறியும்<br>புரிதரு மாமலர்க் கொன்றைமா லைபுனைந் தேத்தவே<br>கரிதரு காலனைச் சாடினா னுங்கட வூர்தனுள்<br>விரிதரு தொல்புகழ் வீரட்டா னத்தர னல்லனே. 2<br><br>திருக்களிற்றுப் படியார் என்ற சாத்திர நூலை இயற்றிய உய்யவந்ததேவ நாயனார் அவதாரத்தலம். | நெருப்புப் போன்று சிவந்த நீண்ட சடைமுடி உடையவனும், வெண்ணிற எருதை வாகனமாகக் கொண்டவனும், சிறந்த **கொன்றை மலர்களாலான மாலையைப் புனைந்து ஏத்தி மார்க்கண்டேயன்** வழிபட, அவனுயிரைக் கவர வந்த கருநிறக் காலனைக் காலால் உதைத்தவனுமாகிய இறைவன் திருக்கடவூரில் மேன்மேலும் பெருகுகின்ற பழம்புகழுடைய திருவீரட்டானத்தில் வீற்றிருந்தருளும் அரன் அல்லனோ? |
| **2880.** நாதனும் நள்ளிரு ளாடினா னும்நளிர் போதின்கண்<br>பாதனும் பாய்புலித் தோலினா னும்பசு வேறியும்<br>காதலர் தண்கட வூரினா னுங்கலந் தேத்தவே<br>வேதம தோதியும் வீரட்டா னத்தர னல்லனே. 3 | எல்லா உலகங்கட்கும் தலைவனும், மகாசங்கார காலத்தில் நடனம் புரிபவனும், அடியவர்களின் இதயத் தாமரையில் வீற்றிருப்பவனும், புலித்தோலாடை உடையவனும், இடப வாகனனும், அன்பர்கள் வசிக்கும் குளிர்ச்சி பொருந்திய திருக்கடவூரில் விளங்குபவனுமான இறைவன் யாவரும் வணங்குமாறு வேதத்தை அருளிச் செய்த வீரட்டானத்து அரன் அல்லனோ? |

| | | |
|---|---|---|
| **2881.** | மழுவமர் செல்வனும் மாசிலா தபல பூதமுன்<br>முழவொலி யாழ்குழன் மொந்தைகொட் டமுது காட்டிடைக்<br>கழல்வளர் கால்குஞ்சித் தாடினா னுங்கட வூர்தனுள்<br>விழவொலி மல்கிய வீரட்டா னத்தர னல்லனே. 4 | மழுப்படையேந்திய செல்வனும், குற்றமில்லாத பல பூதகணங்கள் முரசு ஒலிக்க, யாழும் குழலும் இசைக்க, மொந்தை என்னும் வாத்தியம் கொட்ட, சுடுகாட்டில் கழல் ஒலிக்கத் தன் திருப்பாதத்தை நன்கு வளைத்து ஆடும் பெருமான், திருக்கடவூரில் திருவிழாக்களின் ஒலி நிறைந்த வீரட்டானத்து அரன் அல்லனோ? |
| **2882.** | சுடர்மணிச் சுண்ணவெண் ணீற்றினா னுஞ்சுழல் வாயதோர்<br>படமணி நாகம ரைக்கசைத் தபர மேட்டியும்<br>கடமணி மாவுரித் தோலினா னுங்கட வூர்தனுள்<br>விடமணி கண்டனும் வீரட்டா னத்தர னல்லனே. 5 | சுடர்விடும் மணிபோன்ற உருத்திராக்கம் அணிந்துள்ளவனும், வாசனை பொருந்திய திருவெண்ணீற்றினைப் பூசியுள்ளவனும், அசைகின்ற படமுடைய பாம்பை இடையில் கச்சாக அணிந்துள்ள கடவுளும், மதமுடைய யானையின் தோலை உரித்துப் போர்த்தவனும், திருக்கடவூரில் நஞ்சை மணி போன்று கண்டத்தில் கொண்டு விளங்குபவனும் வீரட்டானத்தில் வீற்றிருந்தருளும் அரன் அல்லனோ? விடமணி கண்டன் – "நீலமணி மிடற்று ஒருவன் போல'' (ஔவையார், புறநானூறு). நினைவுகூர்க. |
| **2883.** | பண்பொலி நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்<br>உண்பலி கொண்டுழல் வானும்வா னின்னொளி மல்கிய<br>கண்பொலி நெற்றிவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்<br>வெண்பொடிப் பூசியும் வீரட்டா னத்தர னல்லனே. 6 | நான்கு வேதங்களையும் பண்ணோடு பாடுபவனும், நடனம் ஆடுபவனும், பலவூர்களுக்குச் சென்று மண்டையோட்டில் பிச்சையேற்றுத் திரிபவனும், நெற்றிக் கண்ணை உடையவனும், வானில் ஒளிரும் வெள்ளிய சந்திரனைச் சடையிலணிந்துள்ளவனும், திருவெண்ணீற்றைப் பூசியுள்ளவனும் திருக்கடவூரிலுள்ள வீரட்டானத்து அரன் அல்லனோ? |
| **2884.** | செவ்வழ லாய்நில னாகிநின் றசிவ மூர்த்தியும்<br>முவ்வழல் நான்மறை யைந்துமா யமுனி கேள்வனும்<br>கவ்வழல் வாய்க்கத நாகமார்த் தான்கட வூர்தனுள்<br>வெவ்வழல் ஏந்துகை வீரட்டா னத்தர னல்லனே. 7 | செந்நிற நெருப்பாகவும், நிலமாகவும் விளங்கும் சிவமூர்த்தியும், ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினி என்ற மூவகை நெருப்பாய்த் திகழ்பவனும், இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என நான்கு வேதங்களாய் விளங்குபவனும், ஞானநூல்களை ஓதல், ஓதுவித்தல், கேட்டல், கேட்பித்தல், சிந்தித்தல் என்ற ஞானவேள்விகள் ஐந்தையும் இயற்றும் முனிவர்களின் துணைவனாய் விளங்குபவனும், கவ்வுகின்ற நெருப்பைப் போன்று விடத்தைக் கக்குகின்ற வாயையுடைய சினமிகுந்த பாம்பை அணிந்தவனும், வெப்பமுடைய நெருப்பை ஏந்திய கரத்தை உடையவனும், திருக்கடவூரிலுள்ள வீரட்டானத்தில் எழுந்தருளியுள்ள அரன் அல்லனோ? |

| | |
|---|---|
| **2885.** அடியிரண் டோருடம் பைஞ்ஞான்கி ருபது தோள்தச<br>முடியுடை வேந்தனை மூர்க்கழித் தமுதன் மூர்த்தியும்<br>கடிகம மும்பொழில் சூழுமந் தண்கட வூர்தனுள்<br>வெடிதலை யேந்தியும் வீரட்டா னத்தர னல்லனே. 8 | ஓர் உடம்பில் இரண்டு கால்களும், இருபது தோள்களும், பத்துத் தலைகளுமுடைய இலங்கை வேந்தனான இராவணனின் மூர்க்கத் தன்மையை அழித்த முதல் பொருளாகிய மூர்த்தியும், முடை நாற்றமுடைய பிரமனின் மண்டையோட்டை ஏந்தியுள்ளவனும், திருக்கடவூரிலுள்ள வீரட்டானத்தில் எழுந்தருளியுள்ள அரன் அல்லனோ ? |
| **2886.** வரைகுடை யாமழை தாங்கினா னும்வளர் போதின்கண்<br>புரைகடிந் தோங்கிய நான்முகத் தான்புரிந் தேத்தவே<br>கரைகடல் சூழ்வையங் காக்கின்றா னுங்கட வூர்தனுள்<br>விரைகமழ் பூம்பொழில் வீரட்டா னத்தர னல்லனே. 9 | கோவர்த்தன மலையைக் குடையாகப் பிடித்துப் பெருமழையிலிருந்து ஆக்களையும், ஆயர்களையும் காத்த திருமாலும், குற்றமற்ற தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் சிவனே முழுமுதற்பொருள் என உணர்ந்து துதிக்க, பக்கங்களில் கடல் சூழ்ந்த இவ்வுலகத்தைக் காக்கின்றவன், திருக்கடவூரில் மணங்கமழ் பூஞ்சோலைகளுடைய வீரட்டானத்தில் வீற்றிருந்தருளும் அரன் அல்லனோ ? |
| **2887.** தேரரும் மாசுகொள் மேனியா ரும்தெளி யாததோர்<br>ஆரருஞ் சொற்பொரு ளாகிநின் றஎம தாதியான்<br>காரிளங் கொன்றைவெண் டிங்களா னுங்கட வூர்தனுள்<br>வீரமுஞ் சேர்கழல் வீரட்டா னத்தர னல்லனே. 10 | புத்தர்களும், அழுக்கு உடம்பையுடைய சமணர்களும் தெளிந்தறிதற்கரிய சொல்லும், பொருளுமாகி நின்ற எம் ஆதிப்பிரான், கார் காலத்தில் மலரும் இளங்கொன்றைப் பூக்களை அணிந்துள்ளவனும், வெண்ணிறச் சந்திரனைச் சடையில் சூடியுள்ளவனும், வீரக்கழல்களை அணிந்துள்ளவனும் ஆகிய, திருக்கடவூரிலுள்ள வீரட்டானத்தில் எழுந்தருளியிருக்கும் அரன் அல்லனோ ? |
| **2888.** வெந்தவெண் ணீறணி வீரட்டா னத்துறை வேந்தனை<br>அந்தணர் தங்கட வூருளா னைஅணி காழியான்<br>சந்தமெல் லாம்அடிச் சாத்தவல் லமறை ஞானசம்<br>பந்தன செந்தமிழ் பாடியா டக்கெடும் பாவமே. 11 | விதிப்படி அமைக்கப்பட்ட திருவெண்ணீற்றினை அணிந்துள்ள திருவீரட்டானத்து இறைவனாய், அந்தணர்கள் வழிபாடு செய்யத் திருக்கடவூரில் திகழ்பவனை, அழகிய சீகாழியில் அவதரித்த வேதமுணர்ந்த ஞானசம்பந்தன் செந்தமிழில் அருளிய இச்சந்தப் பாடல்களை இறைவன் திருவடிக்குப் பக்தியுடன் சாத்திப் பாடியாடும் அன்பர்களின் பாவம் கெடும். |

## 9. திருவீழிமிழலை

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 9

**2889.** கேள்வியர் நாடொறு மோதுநல் வேதத்தர் கேடிலா
வேள்விசெ யந்தணர் வேதியர் வீழி மிழலையார்
வாழியர் தோற்றமுங் கேடும்வைப் பாருயிர் கட்கெலாம்
ஆழியர் தம்மடி போற்றியென் பார்கட் கணியரே. 1

முதல் ஈரடிகளில் வீழிமிழலை வேதியர்களைப்பற்றிக் கூறப்படுகிறது. தில்லை மூவாயிரம்; வீழிமிழலை ஆயிரம் என்பது பழமொழி. தில்லை அந்தணர்; வீழி வேதியர்; அழுந்தை மறையோர் என்றும் கூறுவர்.

கேள்வி ஞானம் உடையவர்களும், நாள்தோறும் நல்ல வேதத்தை ஓதுபவர்களும், கெடுதலில்லாத யாகத்தைச் செய்கின்ற, எவ்வுயிர்களிடத்தும் இரக்கமுடையவர் களுமான அந்தணர்கள், போற்றுகின்ற வேதநாயகர் திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானேயாவார். அவர் ஆருயிர்கட்கெல்லாம் வினைப்பயனுக்கேற்பப் பிறப்பும், இறப்பும் செய்வார். கடலாழம் கண்டறிய வரப்படாததுபோல அவருடைய தன்மை பிறரால் அறிதற்கு அரியது. தம்முடைய திருவடிகளைப் போற்றி வணங்கும் அன்பர்கட்கு நெருக்கமானவர்.

**2890.** கல்லினற் பாவையோர் பாகத்தர் காதலித் தேத்திய
மெல்லினத் தார்பக்கல் மேவினர் வீழி மிழலையார்
நல்லினத் தார்செய்த வேள்வி செகுத்தெழு ஞாயிற்றின்
பல்லனைத் துந்தகர்த் தாரடி யார்பாவ நாசரே. 2

இறைவர் மலைமகளாகிய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவர். பக்தியோடு துதிக்கும் மென்மையான இனத்தாராகிய அந்தணர்கள் விரும்பிப் போற்றுகின்ற வீழிமிழலையில் விளங்குபவர். சிவனை நினையாது செய்த தக்கனது யாகத்தை அழித்தவர். அந்த யாகத்தில் பங்கேற்ற சூரியனின் பற்களைத் தகர்த்தவர். தம்மைத் தொழும் அடியவர்களின் பாவத்தைப் போக்குபவர்.

**2891.** நஞ்சினை யுண்டிருள் கண்டர்பண் டந்தக னைச்செற்ற
வெஞ்சின மூவிலைச் சூலத்தர் வீழி மிழலையார்
அஞ்சனக் கண்ணுமை பங்கினர் கங்கையங் காடிய
மஞ்சனச் செஞ்சடை யாரென வல்வினை மாயுமே. 3

இறைவர் நஞ்சுண்டதால் இருள் போன்று கறுத்த கண்டத்தையுடையவர். கடுங்கோபம் கொண்டு அந்தகாசுரன் என்ற அரக்கனைக் கொன்ற மூவிலைச் சூலப்படையையுடையவர். திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளுபவர். மைதீட்டிய கண்களையுடைய உமாதேவியைத் தம் ஒரு பாகமாகக் கொண்டவர். கங்கையால் அபிடேகம் செய்யப்பட்ட சிவந்த சடைமுடியை யுடையவர். அத்தகைய சிவபெருமானைத் தொழும் அடியவர்களின் கொடு வினை யாவும் அழியும்.

| | |
|---|---|
| **2892.** கலையிலங் கும்மழு கட்டங்கங் கண்டிகை குண்டலம்<br>விலையிலங் கும்மணி மாடத்தர் வீழி மிழலையார்<br>தலையிலங் கும்பிறை தாழ்வடஞ் சூலந் தமருகம்<br>அலையிலங் கும்புன லேற்றவர்க் கும்மடி யார்க்குமே.<br>4 | மான், மழுப்படை, யோகதண்டம், உருத்திராக்கம், குண்டலம் முதலியன கொண்டு, விலைமதிப்புடைய மணிகளால் அலங்கரிக்கப்பட்ட மாடங்களையுடைய திருவீழிமிழலையில் இறைவர் வீற்றிருந் தருளுகின்றார். தலையிலே பிறைச்சந்திரன் திகழ, கழுத்திலே எலும்புமாலை விளங்க, கையில் சூலம், உடுக்கை கொண்டு அலையுடைய கங்கையை ஏற்று இடபக்கொடி கொண்டு விளங்குபவர். யோகநெறி நின்று தம்மைத் தொழும் அடியவர்களும் தம்மைப் போன்ற உருவம் (சாரூப பதவி) பெறச் செய்வார். (ஒத்த தோழர்கள் ஒன்று போல் அலங்கரித்துக் கொள்வது போல). |
| **2893.** பிறையுறு செஞ்சடை யார்விடை யார்பிச்சை நச்சியே<br>வெறியுறு நாட்பலி தேர்ந்துழல் வீழி மிழலையார்<br>முறைமுறை யாலிசை பாடுவா ராடிமுன் றொண்டர்கள்<br>இறையுறை வாஞ்சிய மல்லதெப் போதுமென் னுள்ளமே.<br>5 | திருவீழிமிழலையில் வீற்றிருக்கும் இறைவர் பிறைச்சந்திரனைச் சூடிய சிவந்த சடைமுடியை யுடையவர். இடபத்தை வாகனமாக உடையவர். பிச்சையெடுத்தலை விரும்பும் நாள்களில் பலியேற்றுத் திரிவார். தொண்டர்கள் பண்முறைப்படி இசைபாடி அதற்கேற்ப ஆட முற்பட அவர்களின் இதயத் தாமரையில் வீற்றிருப்பார். அவரையல்லாது எனது உள்ளம் வேறெதையும் நினையாது. |
| **2894.** வசையறு மாதவங் கண்டு வரிசிலை வேடனாய்<br>விசையனுக் கன்றருள் செய்தவர் வீழி மிழலையார்<br>இசைவர விட்டியல் கேட்பித்துக் கல்ல வடமிட்டுத்<br>திசைதொழு தாடியும் பாடுவார் சிந்தையுட் சேர்வரே.<br>6 | திருவீழிமிழலையில் வீற்றிருக்கும் இறைவர், அருச்சுனன் செய்த குற்றமற்ற பெருந்தவம் கண்டு இரங்கி, அழகிய வில்லேந்திய வேட்டுவ வடிவில் வந்து அவனுக்கு அருள்புரிந்தவர். தம்மை இசைத்தமிழால் பாடி, தம் திருப்புகழைப் போற்றி உரைத்துப் பிறரைக் கேட்கும்படி செய்து, முரசொலிக்கத் திசைநோக்கித் தொழுது ஆடிப் பாடுவார் சிந்தனையில் வீற்றிருப்பர். |
| **2895.** சேடர்விண் ணோர்கட்குத் தேவர்நன் மூவிரு தொன்னூலர்<br>வீடர்முத் தீயர்நால் வேதத்தர் வீழி மிழலையார்<br>காடரங் காவுமை காணவண் டத்திமை யோர்தொழ<br>நாடக மாடியை யேத்தவல் லார்வினை நாசமே.<br>7 | திருவீழிமிழலையில் வீற்றிருக்கும் இறைவர் விண்ணோர்கட்குத் தூரமானவர். மேன்மை வாய்ந்த சாத்திர நூல்கள் ஆறினையும் கற்று வல்லவர்களாய், மூவகை அழலை ஓம்பி, நால் வேதங்களையும் பயின்ற அந்தணர்கட்கு அணியராகி வீட்டின்பம் நல்குபவர். சுடுகாட்டை அரங்காகக் கொண்டு, உமாதேவியார் கண்டு மகிழ, எல்லா அண்டங்களிலுமுள்ள தேவர்கள் தொழத் திருநடனம் செய்பவராகிய சிவபெருமானை ஏத்தி வழிபடுபவர்களின் வினையாவும் அழியும். |

| | |
|---|---|
| **2896.** எடுத்தவன் மாமலைக் கீழ்இ ராவணன் வீழ்தர<br>விடுத்தருள் செய்திசை கேட்டவர் வீழி மிழலையார்<br>படுத்துவெங் காலனைப் பால்வழி பாடுசெய் பாலற்குக்<br>கொடுத்தன ரின்பங் கொடுப்பர் தொழக்குறை வில்லையே. **8** | பெரிய கயிலை மலையை அப்புறப்படுத்த எடுத்த இராவணனை அம்மலையின் கீழேயே கிடந்து அலறுமாறு அடர்த்து, பின் அவனது சாமகானம் பாடிய இசை கேட்டு அருள்புரிந்தார் திருவீழிமிழலையில் வீற்றிருக்கும் சிவபெருமான். அவர் கொடிய காலனை உதைத்து, தம்மருகில் நின்று வழிபாடு செய்த பாலனான மார்க்கண்டேயனுக்குப் பேரின்பம் கொடுத்தார். அச்சிவபெருமான் தம்மைத் தொழுது போற்றும் அடியவர்கட்கு எவ்விதக் குறைவுமில்லாமல் எல்லா நலன்களையும் கொடுப்பார். |
| **2897.** திக்கமர் நான்முகன் மாலண்ட மண்டலந் தேடிட<br>மிக்கமர் தீத்திர ளாயவர் வீழி மிழலையார்<br>சொக்கம தாடியும் பாடியும் பாரிடஞ் சூழ்தரும்<br>நக்கர்தந் நாமம் நமச்சிவா யவ்வென்பார் நல்லரே. **9** | நான்கு திக்குகளையும் நோக்குகின்ற முகங்களையுடைய பிரமனும், திருமாலும் மேலுள்ள அண்டங்கள் அனைத்திலும் கீழுள்ள அண்டங்களிலும் முடி, அடி தேட, காண முடியாவண்ணம், மிகுந்து எழும் தீப்பிழம்பாய் நின்றவர் திருவீழிமிழலையில் வீற்றிருக்கும் சிவபெருமான். அவர் சொக்கு எனப்படும் ஒருவகைத் திருக்கூத்து ஆடியும், பாடியும் பூதகணங்கள் சூழ விளங்கும் நக்கர். அவருடைய திருநாமமாகிய நமச்சிவாய என்பதை ஓதவல்லவர்கள் சிவபுண்ணியம் செய்தவராவர். |
| **2898.** துற்றரை யார்துவ ராடையர் துப்புர வொன்றிலா<br>வெற்றரை யார்அறி யாநெறி வீழி மிழலையார்<br>சொற்றெரி யாப்பொருள் சோதிக்கப் பால்நின்ற சோதிதான்<br>மற்றறி யாஅடி யார்கள்தஞ் சிந்தையுள் மன்னுமே. **10** | பொருந்திய காவியாடை அணிந்த புத்தர்களும், ஆடையணியாத சுத்தமில்லாச் சமணர்களும் அறியாத நெறியில் விளங்குபவர் திருவீழிமிழலையில் வீற்றிருக்கும் இறைவர். சொல்லையும், பொருளையும் கடந்து அருள் ஒளியாக விளங்கும் இறைவர். தம்மைத் தவிர வேறெதையும் அறியாத அடியார்களின் சிந்தனையில் நிலையாக வீற்றிருப்பார். |
| **2899.** வேதியர் கைதொழு வீழி மிழலைவி ரும்பிய<br>ஆதியை வாழ்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்ஆய்ந்<br>தோதிய வொண்டமிழ் பத்திவை யுற்றுரை செய்பவர்<br>மாதியல் பங்கன் மலரடி சேரவும் வல்லரே. **11** | அந்தணர்கள் கைகூப்பித் தொழுது போற்றும் திருவீழிமிழலையை விரும்பி வீற்றிருக்கும் இறைவனை, சோலைகள் விளங்கும் சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் ஆராய்ந்து ஓதிய ஒண்தமிழ்ப் பாக்கள் பத்தினையும் கூறிப்போற்றி வழிபடுபவர்கள் உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட சிவபெருமானின் மலர் போன்ற திருவடிகளைச் சேர்ந்து முக்திப் பேற்றினைப் பெறுவர். |

## 10. திருவிராமேச்சுரம்

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 10

**2900.** அலைவளர் தண்மதி யோடய லேஅடக் கிஉமை
முலைவளர் பாகமு யங்கவல் லமுதல் வன்முனி
இலைவளர் தாழைகள் விம்முகா னலிரா மேச்சுரம்
தலைவளர் கோலநன் மாலையன் தானிருந்
தாட்சியே. 1

கங்கையையும், குளிர்ந்த சந்திரனையும் சடை முடியிலே அடக்கி, உமாதேவியின் முலைவளர் பாகத்தைக் கூடவல்ல முதல்வனாகிய சிவபெருமான், நீண்ட மடல்களையுடைய தாழைகள் மலர்ந்துள்ள கடற்கரைச் சோலையையுடைய இராமேச்சுரத்துள், தலைகளால் ஆகிய அழகிய நல்ல மாலையை அணிந்து அருளாட்சி செய்கின்றான்.

---

தலத்தின் பெயர் – சேது.
கோயிலின் பெயர் – இராமேச்சுரம்.

**2901.** தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச
மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னார்கள்தம் மேல்வினை வீடுமே.
2

சீதாப்பிராட்டியைக் கவர்ந்த தென்னிலங்கை மன்னனான தசமாமுகனின் பூச்சூடிய முடியையுடைய தலைகளை அறுத்துக் கொன்ற பழி நீங்குமாறு அம்பினைச் செலுத்தும் வில்லையுடைய அண்ணலாகிய இராமபிரான் வழிபட்ட இராமேச்சுரத்தை இடைவிடாது சிந்திப்பவர்களின் வினை அழியும்.

---

இராமன் பூசித்த ஈசுவரன் – இராமேசுவரன்.
இராமன் பூசித்த நாதன் – இராமநாதன்.

**2902.** மானன நோக்கியை தேவிதன் னையொரு
மாயையால்
கானதில் வவ்விய காரரக் கன்உயிர் செற்றவன்
ஈனமி லாப்புக ழண்ணல்செய் தவிரா மேச்சுரம்
ஞானமும் நன்பொரு ளாகிநின் றதொரு
நன்மையே.
3

மான் போன்ற மருண்ட பார்வையையுடைய சீதாப்பிராட்டியை மாயம் செய்து கானகத்தில் கவர்ந்த கரிய அரக்கனாகிய இராவணனின் உயிரை நீக்க, குற்றமில்லாத பெரும் புகழுடைய அண்ணலாகிய இராமபிரான் வழிபட்ட இராமேச்சுரமானது மன்னுயிர்கட்கு நன்மைதரும் சிவஞானத்தையும், அதன் பயனான முத்தி இன்பத்தையும் தரும்.

---

இராமன் பூசித்த லிங்கம் – இராமலிங்கம்.

**2903.** உரையுண ராதவன் காமமென் னும்முறு
வேட்கையான்
வரைபொரு தோளிறச் செற்றவில் லிமகிழ்ந்
தேத்திய
விரைமரு வுங்கடலோதமல் குமிரா மேச்சுரத்
தரையர வாடநின் றாடல்பே ணுமம்மா னல்லனே.
4

மிகுந்த காமவேட்கையால் பிறன் மனைவியைக் கவர்தல் தவறு என்ற அறவுரையை உணராத இராவணனின் மலை போன்ற தோள்களைத் தொலைத்த இராமன் மகிழ்ந்து போற்றிய, புலவு நாறும் கடற்கரையையுடைய இராமேச்சுரத்தில் வீற்றிருக்கும் இறைவன் அரையில் பாம்பைக் கச்சாகக் கட்டித் திருநடனம் புரியும் தலைவனான சிவபெருமான் அல்லனோ ?

---

பன்னிரு ஜோதிர்லிங்கத் தலங்களில் ஒன்று.

**2904.** ஊறுடை வெண்டலை கையிலேந் திப்பல
வூர்தொறும்
வீறுடை மங்கைய ரையம்பெய்யவிற லார்ந்ததோர்
ஏறுடை வெல்கொடி யெந்தைமே யவிரா மேச்சுரம்
பேறுடை யான்பெயர் ஏத்துமாந் தர்பிணி பேருமே.
5

சேது தலத்தில் மொத்தம் 36 தீர்த்தங்கள்.
இராமேச்சுரம் கோயிலில் 22 தீர்த்தங்கள் உள்ளன.

கையினால் பறித்த பிரமனது தலையை ஏந்தி, ஊர்கள் தோறும் சென்று அழகிய மங்கையர்கள் இட்ட பிச்சையை ஏற்றவனாய், வீரமுடைய இடபம் பொறிக்கப்பட்ட வெற்றிக்கொடியுடைய எந்தையாகிய சிவபெருமான் இராமேச்சுரத்தில் வீற்றிருந்தருளுகின்றான். வீடுபேற்றை நல்கும் அவன் திருப்பெயரை ஏத்தும் மாந்தர்களின் பிறவிப்பிணி நீங்கும்.

**2905.** அணையலை சூழ்கட லன்றடைத் துவழி
செய்தவன்
பணையிலங் கும்முடி பத்திறுத் தபழி போக்கிய
இணையிலி யென்றுமி ருந்தகோ யிலிரா மேச்சுரம்
துணையிலி தூமலர்ப் பாதமேத் தத்துயர் நீங்குமே.
6

இராமனும், சீதையும் சேதுவில் சிவபூசை செய்துள்ளார்கள். அனுமன் கொண்டு வந்த லிங்கம் காசிவிசுவநாதர் என்ற நாமத்துடன் தாபனம் செய்யப்பட்டுள்ளது.

அலைகளையுடைய கடலில் அன்று அணைகட்டிக் கடப்பதற்கு வழி செய்த இராமபிரான், இராவணனின் பருத்த தலைகள் பத்தினையும் தொலைத்ததால் ஏற்பட்ட பழியைப் போக்கிய இணையற்ற இறைவன், என்றும் வீற்றிருந்தருளும் கோயில் இராமேச்சுரம். தனக்கு ஒப்பு ஒருவருமில்லாத அப்பெருமானின் தூய மலர் போன்ற திருவடிகளைப் போற்றித் துதிப்பவர்களின் துன்பம் நீங்கும்.

**2906.** சனிபுதன் ஞாயிறு வெள்ளிதிங் கட்பல தீயன
முனிவது செய்துகந் தானைவென் றவ்வினை
மூடிட
இனியருள் நல்கிடென் றண்ணல்செய் தவிரா
மேச்சுரம்
பனிமதி சூடிநின் றாடவல் லபர மேட்டியே.
7

அந்த இராவணணின் தவ வலிமையை யோசிப்போம். அவனை வென்ற இராமனின் தவ வலிமையை யோசிப்போம். அந்த இராமனும் சிவபூசை செய்தான். நாம் அதனை யோசிக்காமல் திருநல்லாறு சென்று சனியை வணங்கிவிட்டு மூலாலயம் சென்று தர்ப்பதான்யேசுவரரைக் காணாமலேயே வந்தால் எப்பிறவியில் ஈடேறுவோம் என்று யோசிப்போம்.

இராவணன் தன்மகன் இந்திரஜித்து பிறக்கும்போது கிரகநிலை சரியில்லாத காரணத்தால் தன் வரத்தின் வலிமையால் கிரகங்களைச் சிறையில் இட்டுக் குழந்தை பிறந்தபின் அவற்றை விடுதலை செய்ததாக இராமாயணம் கூறுகிறது.

சனி, புதன், சூரியன், வெள்ளி, சந்திரன், அங்காரகன், குரு, ராகு, கேது ஆகிய நவக் கிரகங்களால் தீமை வரும் எனச் சோதிடன் கூறியதைக் கேட்டுக் கோபம் கொண்டு அவர்களைச் சிறையில் வைத்த தன் ஆற்றலுக்கு மகிழ்ந்த இராவணனை அழித்து வெற்றி கொண்ட பழி தீர, அருளை வேண்டி அண்ணல் இராமபிரான் வழிபட்ட தலம் இராமேச்சுரம். அங்கு எழுந்தருளியிருப்பவர் குளிர்ச்சி பொருந்திய சந்திரனைச் சூடித் திருநடனம் செய்யும் முழுமுதற் பொருளான சிவபெருமானே ஆவார்.

2907. பெருவரை யன்றெடுத் தேந்தினான் றன்பெயர் சாய்கெட
அருவரை யாலடர்த் தன்றுநல் கியயன் மாலெனும்
இருவரு நாடிநின் றேத்துகோ யிலிரா மேச்சுரத்
தொருவனு மேபல வாகிநின் றதொரு வண்ணமே. 8

பெரிய கயிலை மலையை எடுத்த இராவணனது புகழ் குறைந்து அழியும்படி அவனை அம்மலைக்கீழ் அடர்த்தலும், தன் தவறுணர்ந்து அவன் சாமகானம் பாடியபோது அவனுக்கு அருளுதலும் செய்தவர் சிவபெருமான். பிரமனும், திருமாலும் முழுமுதற்பொருள் சிவன் என்பதை உணர்ந்து வந்து ஏத்தியபோது விளங்கித் தோன்றி, இராமேச்சுரத்திலுள்ள கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் ஒருவனே எல்லாப் பொருள்களிலும் விளங்கித் தோன்றுகின்றான்.

---

கோள்களையும், தேவர்கள் உட்பட அனைவரையும் வெற்றிகொள்ளும் வலிமை இராவணனுக்கு சிவபூசையால் வந்தது.

x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x

9

2908. சாக்கியர் வன்சமண் கையர்மெய் யிற்றடு மாற்றத்தார்
வாக்கிய லும்முரை பற்றுவிட் டுமதி யொண்மையால்
ஏக்கிய லுஞ்சிலை யண்ணல்செய் தவிரா மேச்சுரம்
ஆக்கிய செல்வனை யேத்திவாழ் மின்னரு ளாகவே. 10

புத்தர்களும், சமணர்களும் கூறுகின்ற உண்மையல்லாததும், தடுமாற்றம் கொண்டதுமாகிய உரைகளைப் பற்றி நிற்காது, ஒளிமிகுந்த அம்பினைச் செலுத்தும் வில்லையுடைய அண்ணலாகிய இராமபிரான் வழிபட்ட இராமேச்சுரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை ஞானத்தால் ஏத்தி வாழுங்கள். அவனருளால் எல்லா நலன்களும் உண்டாகும்.

2909. பகலவன் மீதியங் காமைக்காத் தபதி யோன்றனை
இகலழி வித்தவ னேத்துகோ யிலிரா மேச்சுரம்
புகலியுள் ஞானசம் பந்தன்சொ னதமிழ் புந்தியால்
அகலிட மெங்குநின் றேத்தவல் லார்க்கில்லை யல்லலே. 11

தான் பெற்ற வரத்தின் வலிமையால் சூரியன் தன் நகருக்கு மேலே செல்லக்கூடாது என்று ஆணையிட்ட இலங்கைக் கோனாகிய இராவணனைப் போரில் அழித்த இராமபிரான் வழிபட்ட கோயிலாகிய இராமேச்சுரத்தினை, திருப்புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன் சொன்ன இத்தமிழ்ப் பதிகத்தால் மனம் ஒன்றி இப்பூமியில் எங்கும் ஓதவல்லவர்கட்குத் துன்பம் சிறிதும் இல்லை.

---

இராவண வதத்தின் பொருட்டு இராமன் அணைகட்டி இலங்கையை அடைந்த இடமாதலின் இது சேதுக்கரை என வழங்கப்படும். சேது–செய்கரை. சேதுவில் இராமனது தனுவின் நுனியாற் கீறித் தீர்த்தங்காணப் பட்டமையால் இது தனுக்கோடி என்று வழங்கப்பட்டது. தனு – வில்.

## 11. திருப்புனவாயில்

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 11

2910. மின்னியல் செஞ்சடை வெண்பிறை யன்விரி நூலினன்
பன்னிய நான்மறை பாடியா டிப்பல வூர்கள்போய்
அன்னமன் னந்நடை யாளொ டும்மம ரும்மிடம்
புன்னைநன் மாமலர் பொன்னுதிர்க் கும்புன வாயிலே. 1

இலிங்கத்திருமேனியும், ஆவுடையாரும் மிகப்பெரியன. லிங்கத்துக்கு மூன்று முழப் பரிவட்டமும், ஆவுடையாருக்கு முப்பத்துமூன்று முழப் பரிவட்டமும் தேவை.

மின்னல் போன்று ஒளிரும் சிவந்த சடைமுடியும், வெண்மையான பிறைச்சந்திரனும், விரிந்த மார்பினில் முப்புரிநூலும் கொண்டு, அடிக்கடி ஓதப்படும் நான்கு வேதங்களையும் பாடியாடிப் பல திருத்தலங்கட்கும் சென்று, அன்னம் போன்ற நடையையுடைய உமாதேவியோடு இறைவன் வீற்றிருந்தருளும் இடமானது, புன்னை மலர்கள் பொன் போன்ற தாதுக்களை உதிர்க்கும் திருப்புனவாயில் ஆகும்.

2911. விண்டவர் தம்புர மூன்றெரித் துவிடை யேறிப்போய்
வண்டம ருங்குழல் மங்கையொ டும்மகிழ்ந் தானிடம்
கண்டலு ஞாழலு நின்றுபெ ருங்கடற் கானல்வாய்ப்
புண்டரீ கம்மலர்ப் பொய்கைசூழ்ந் தபுன வாயிலே. 2

பகையசுரர்களின் மூன்று கோட்டைகளும் எரிந்து சாம்பலாகுமாறு செய்து, இடப வாகனத்தில் ஏறி, வண்டமர்ந்துள்ள கூந்தலையுடைய உமாதேவியோடு மகிழ்ந்து, இறைவன் எழுந்தருளியிருக்கும் இடமாவது, தாழையும், புலிநகக் கொன்றையும் தழைத்த கடற்கரைச் சோலையும், தாமரைகள் மலர்ந்துள்ள குளங்களும் சூழ்ந்த திருப்புனவாயில் ஆகும்.

2912. விடையுடை வெல்கொடி யேந்தினா னும்விறற் பாரிடம்
புடைபட வாடிய வேடத்தா னும்புன வாயிலில்
தொடைநவில் கொன்றையந் தாரினா னுஞ்சுடர் வெண்மழுப்
படைவல னேந்திய பால்நெய்யா டும்பர மனன்றே. 3

இடபம் பொறித்த வெற்றிக் கொடியை ஏந்தியவனும், வீரமிக்க பூதகணங்கள் சூழ நடனம் செய்யும் கோலத்தை உடையவனுமான சிவபெருமான் திருப்புனவாயில் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளி, கொன்றை மாலை அணிந்து, ஒளியுடைய மழுப்படையை வலக்கையிலே ஏந்தி, பாலாலும், நெய்யாலும் திருமுழுக்காட்டப்பட்டு அடியவர்கட்கு அருள்புரியும் பரம்பொருள் ஆவான்.

2913. சங்கவெண் தோடணி காதினா னுஞ்சடை தாழவே
அங்கையி லங்கழ லேந்தினா னும்மழ காகவே
பொங்கர வம்மணி மார்பினா னும்புன வாயிலில்
பைங்கண்வெள் ளேற்றண்ண லாகிநின் றபர மேட்டியே. 4

திருப்புனவாயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான் வெண்சங்கினாலாகிய தோடணிந்த காதுடையவன். தாழ்ந்த நீண்ட சடையுடையவன். உள்ளங்கையில் நெருப்பு ஏந்தியவன். சீறிப் படமாடும் பாம்பை ஆபரணமாக அணிந்த மார்புடையவன். திருப்புனவாயில் என்னும் திருத்தலத்திலே பசிய கண்களையுடைய வெண்ணிய இடப வாகனத்தில் எழுந்தருளிய சிவபெருமான் மேலான பரம்பொருள் ஆவான்.

| | | |
|---|---|---|
| **2914.** | கலிபடு தண்கடல் நஞ்சமுண் டகறைக்<br>கண்டனும்<br>புலியதள் பாம்பரைச் சுற்றினா னும்புன வாயிலில்<br>ஒலிதரு தண்புன லோடெருக் கும்மத மத்தமும்<br>மெலிதரு வெண்பிறை சூடிநின் றவிடை யூர்தியே.<br>5 | ஒலிக்கின்ற குளிர்ச்சியான பாற்கடலில் தோன்றிய நஞ்சை உண்டதால் கறுத்த கண்டத்தை உடையவன் சிவபெருமான். புலித்தோலை ஆடையாகவும், பாம்பை அரையில் கச்சாகவும் கட்டியவன். அவன் திருப்புனவாயில் என்னும் தலத்தில், ஒலிக்கின்ற குளிர்ந்த கங்கையோடு, எருக்கு, ஊமத்தம் ஆகிய மலர்களையும், மெலிந்த வெண்ணிறப் பிறைச்சந்திரனையும் சடையில் சூடி இடப வாகனத்தில் வீற்றிருந்தருளு கின்றான். |
| **2915.** | வாருறு மென்முலை மங்கைபா டநட<br>மாடிப்போய்க்<br>காருறு கொன்றைவெண் டிங்களா னுங்கனல்<br>வாயதோர்<br>போருறு வெண்மழு வேந்தினா னும்புன வாயிலில்<br>சீருறு செல்வமல் கவ்விருந் தசிவ லோகனே.<br>6 | கச்சணிந்த மெல்லிய முலைகளையுடைய உமாதேவி பாட, அதற்கேற்ப நடனம் ஆடி, கார்காலத்தில் மலர்கின்ற கொன்றை மலரையும், வெண்ணிறத் திங்களையும் சடையிலே சூடி, நெருப்புப் போன்று ஒளிர்கின்ற போர் செய்யப் பயன்படும் வெண்மழுப்படையைக் கையில் ஏந்தித் திருப்புனவாயில் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவலோக நாதனாகிய சிவபெருமான் தன் அடியார்கட்குச் சீருறு செல்வம் அருள்வான். |
| **2916.** | பெருங்கடல் நஞ்சமு துண்டுகந் துபெருங்<br>காட்டிடைத்<br>திருந்திள மென்முலைத் தேவிபா டந்நட<br>மாடிப்போய்ப்<br>பொருந்தலர் தம்புர மூன்றுமெய் துபுன வாயிலில்<br>இருந்தவன் தன்கழ லேத்துவார் கட்கிடர்<br>இல்லையே.<br>7 | சிவபெருமான், பெரிய பாற்கடலைக் கடைந்த போது ஏற்பட்ட நஞ்சை உண்டு மகிழ்ந்தவன். சுடுகாட்டில் இளமென்முலையுடைய உமாதேவி பாட நடனமாடியவன். பகையசுரர்களின் புரம் மூன்றையும் அம்பு எய்து அழித்தவன். திருப்புனவாயில் என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள அப்பெருமானின் திருவடிகளைப் போற்றி தொழுபவர்கட்கு எவ்விதத் துன்பமும் இல்லை. |
| **2917.** | மனமிகு வேலனவ் வாளரக் கன்வலி ஒல்கிட<br>வனமிகு மால்வரை யால்அடர்த் தானிட மன்னிய<br>இனமிகு தொல்புகழ் பாடல்ஆ டல்எழின் மல்கிய<br>புனமிகு கொன்றையந் தென்றலார்ந் தபுன<br>வாயிலே.<br>8 | செருக்குடைய மனம் உடையவனும், வேல், வாள் போன்ற படைக்கலன்களை உடையவனுமான அரக்கனான இராவணனின் வலிமை அழியுமாறு, அழகும், பெருமையு முடைய கயிலை மலையால் அடர்த்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, அவனுடைய பழம்புகழைப் பல்வேறு வகைகளில் போற்றுகின்ற பாடல்களும், ஆடல்களும் நிறைந்து அழகுற விளங்குகின்றதும், கொன்றை மலரின் நறுமணத்தைச் சுமந்துவரும் தென்றல்காற்று வீசுகின்றதுமான திருப்புனவாயில் ஆகும். |

| | | |
|---|---|---|
| **2918.** | திருவளர் தாமரை மேவினா னும்திகழ் பாற்கடற்<br>கருநிற வண்ணனும் காண்பரி யகட வுள்ளிடம்<br>நரல்சுரி சங்கொடும் இப்பியுந் திந்நல மல்கிய<br>பொருகடல் வெண்டிரை வந்தெறி யும்புன<br>வாயிலே.<br>9 | அழகிய தாமரையில் வீற்றிருக்கின்ற பிரமனும், விளங்கும் திருப்பாற் கடலில் பள்ளி கொண்டுள்ள கருநிறத் திருமாலும் காண்பதற்கரியவன் சிவபெருமான். அவன் விரும்பி எழுந்தருளியுள்ள இடம் கடலின் வெண்ணிற அலைகள் கரையை மோதும்போது தள்ளப்பட்ட ஒலிக்கின்ற சுரிசங்குகளும், சிப்பிகளும் நிறைந்து செல்வம் கொழிக்கும் திருப்புனவாயில் ஆகும். |
| **2919.** | போதியெ னப்பெய ராயினா ரும்பொறி யில்சமண்<br>சாதியு ரைப்பன கொண்டயர்ந் துதளர்<br>வெய்தன்மின்<br>போதவிழ் தண்பொழில் மல்குமந் தண்புன<br>வாயிலில்<br>வேதனை நாடொறு மேத்துவார் மேல்வினை<br>வீடுமே.<br>10 | புத்தர்களும், சமணர்களும் சாதித்துக் கூறுகின்ற சொற்களைக் கேட்டு உணர்வழிந்து தளர்ச்சி அடைய வேண்டா. பூக்கள் மலர்ந்துள்ள குளிர்ச்சி பொருந்திய சோலைகள் நிறைந்த அழகிய குளிர்ந்த திருப்புனவாயிலில் வீற்றிருந்தருளும் வேதத்தின் பொருளாயுள்ள சிவபெருமானை நாள்தோறும் போற்றி வழிபடுபவர்களின் வினையாவும் நீங்கும். |
| **2920.** | பொற்றொடி யாளுமை பங்கன்மே வும்புன<br>வாயிலைக்<br>கற்றவர் தாந்தொழு தேத்தநின் றகடற்<br>காழியான்<br>நற்றமிழ் ஞானசம் பந்தன்சொன் னதமிழ்<br>நன்மையால்<br>அற்றமில் பாடல்பத் தேத்தவல் லார்அருள்<br>சேர்வரே.<br>11 | பொன் வளையலணிந்த உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருப்புனவாயில் என்னும் தலத்தை வேதாகமங்களைக் கற்றவர்கள் தொழுது போற்றுமாறு, கடல்வளமிக்க சீகாழியில் அவதரித்த நற்றமிழ் ஞானசம்பந்தன் அருளிய குற்றமில்லாத இத்தமிழ்ப் பாக்கள் பத்தினையும் ஓத வல்லவர்கள் இறையருளைப் பெறுவர். |

## 12. திருக்கோட்டாறு

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 12

2921. வேதியன் விண்ணவ ரேத்தநின் றான்விளங் கும்மறை
ஓதிய வொண்பொரு ளாகிநின் றானொளி யார்கிளி
கோதிய தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
ஆதியை யேநினைந் தேத்தவல் லார்க்கல்ல லில்லையே. 1

வேதங்களை அருளிச் செய்த சிவபெருமான் விண்ணோர்களாலும் தொழப்படுகின்றான். அவ்வேதங்களால் போற்றப்படும் உயர்ந்த பொருளாகவும் விளங்குகின்றான். அழகிய கிளிகள் கொஞ்சும் குளிர்ச்சியான சோலைகள் சூழ்ந்த அழகான திருக்கோட்டாறு என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள ஆதிப் பிரானான அவனை நினைந்து வணங்க வல்லவர்கட்குத் துன்பம் இல்லை.

2922. ஏலம லர்க்குழன் மங்கைநல் லாள்இம வான்மகள்
பாலம ருந்திரு மேனியெங் கள்பர மேட்டியும்
கோலம லர்ப்பொழில் சூழ்ந்தெழி லார்திருக் கோட்டாற்றுள்
ஆலநீ ழற்கீ ழிருந்தறஞ் சொன்ன அழகனே. 2

மணம் கமழும் கூந்தலையுடைய மங்கை நல்லாளான, இமவான் மகளான உமாதேவியைத் தன் திருமேனியின் ஒரு பாகமாக வைத்த எங்கள் பரம்பொருளான சிவபெருமான், வண்ணப் பூக்களையுடைய சோலைகள் சூழ்ந்த அழகிய திருக்கோட்டாறு என்னும் தலத்தில் ஆலமரநிழலில் தென்முகக்கடவுளாக அமர்ந்து சனகாதி முனிவர்கட்கு அறம் உரைத்த அழகனாவான்.

2923. இலைமல்கு சூலமொன் றேந்தினா னுமிமை யோர்தொழ
மலைமல்கு மங்கையோர் பங்கனா யம்மணி கண்டனும்
குலைமல்கு தண்பொழில் சூழ்ந்தழ கார்திருக் கோட்டாற்றுள்
அலைமல்கு வார்சடை யேற்றுகந் தவழ கனன்றே. 3

சிவபெருமான் இலைபோன்ற சூலப்படையைக் கையில் ஏந்தியவன். விண்ணோர்களும் தொழுது வணங்க மலைமகளான உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட நீலகண்டன். கங்கையை நீண்ட சடையிலே தாங்கிய அழகனான அவன், காய்களும், கனிகளும் குலைகளாகத் தொங்கும் குளிர்ந்த சோலை சூழ்ந்த அழகிய திருக்கோட்டாறு என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளான்.

2924. ஊனம ரும்முட லுள்ளிருந் தவ்வுமை பங்கனும்
வானம ரும்மதி சென்னிவைத் தமறை யோதியும்
தேனம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக் கோட்டாற்றுள்
தானம ரும்விடை யானும்எங் கள்தலை வனன்றே. 4

இறைவன் உடம்பினை இயக்கும் உயிர்க்குள் உயிராய் விளங்குபவன். உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவன். வானில் தவழும் சந்திரனைத் தலையிலே அணிந்தவன். வேதங்களை அருளிச் செய்தவன். இடபத்தை வாகனமாக உடையவன். அவன் தேனுடைய மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருக்கோட்டாறு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற எங்கள் தலைவன் ஆவான்.

---

உடலுக்குள் உயிர். உயிர்க்குள் சிவம் என்ற கருத்தை திருஞானசம்பந்தர் நிறுவுகிறார். சிவம் உயிரை இயக்க, உயிர் உடலை இயக்குகிறது.

| | |
|---|---|
| **2925.** வம்பல ரும்மலர்க் கோதைபா கம்மகிழ் மைந்தனும்<br>செம்பவ ளத்திரு மேனிவெண் ணீறணி<br>செல்வனும்<br>கொம்பம ரும்மலர் வண்டுகெண் டுந்திருக்<br>கோட்டாற்றுள்<br>நம்பனெ னப்பணி வார்க்கருள் செய்யெங்கள்<br>நாதனே.<br>5 | சிவபெருமான் நறுமணம் கமழும் மாலையணிந்த கூந்தலையுடைய உமாதேவியை ஒரு பாகமாக வைத்து மகிழும் வலிமையுடையவன். செம்பவளம் போன்ற திருமேனியில் வெண்ணிறத் திருநீறு அணிந்துள்ள செல்வன். அனைத்துயிர்களும் விரும்பி அடையத்தக்க அவன், கொம்புகளிலுள்ள மலர்களை வண்டுகள் கெண்டுகின்ற திருக்கோட்டாறு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்து, தன்னைப் பணிந்து வணங்குபவர்கட்கு அருள்புரிபவன். அவனே எங்கள் தலைவன். |
| **2926.** பந்தம ரும்விரன் மங்கைநல் லாளொரு<br>பாகமா<br>வெந்தம ரும்பொடிப் பூசவல் லவிகிர் தன்மிகும்<br>கொந்தம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக்<br>கோட்டாற்றுள்<br>அந்தண னைநினைந் தேத்தவல் லார்க்கில்லை<br>அல்லலே. 6 | சிவபெருமான் பந்து போன்ற திரட்சியான விரல்களையுடைய மங்கை நல்லாளாகிய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவன். வெந்து தணிந்த திருநீற்றினைப் பூசியுள்ள விகிர்தன். மிகுதியாகக் கொத்தாகப் பூக்கும் மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருக்கோட்டாறு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருள்கின்ற, அனைத்துயிர்களிடத்தும் செவ்விய அருளுடைய அவனை நினைந்து வழிபடும் அடியவர்கட்கு அல்லல் சிறிதும் இல்லை. |
| **2927.** துண்டம ரும்பிறை சூடிநீ டுசுடர் வண்ணனும்<br>வண்டம ருங்குழன் மங்கைநல் லாளொரு<br>பங்கனும்<br>தெண்டிரை நீர்வயல் சூழ்ந்தழ கார்திருக்<br>கோட்டாற்றுள்<br>அண்டமு மெண்டிசை யாகிநின் றவழ கனன்றே.<br>7 | துண்டித்த பிறை போன்ற சந்திரனைச் சடையில் சூடியவன் சிவபெருமான். நீண்டு ஓங்கும் நெருப்புப் போன்ற சிவந்த நிறமுடையவன். பூவிலுள்ள தேனை விரும்பி வண்டுகள் அமர்கின்ற கூந்தலையுடைய மங்கை நல்லாளாகிய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவன். கடலும், நீர்வளமிக்க செழுமையான வயல்கள் சூழ்ந்த நிலவளமுடைய அழகான திருக்கோட்டாறு என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் அண்டங்களும், எட்டுத்திசை களுமாகி நின்ற அழகன் அல்லனோ ? |
| **2928.** இரவம ருந்நிறம் பெற்றுடை யவிலங் கைக்கிறை<br>கரவம ரக்கயி லையெடுத் தான்வலி செற்றவன்<br>குரவம ரும்மலர்ச் சோலைசூழ்ந் ததிருக்<br>கோட்டாற்றுள்<br>அரவம ருஞ்சடை யானடி யார்க்கருள் செய்யுமே.<br>8 | இரவு போன்ற கருமைநிறமுடைய இலங்கை மன்னனான இராவணன் வஞ்சனையால் கயிலை மலையைப் பெயர்த்து எடுக்க, அவன் வலிமையை அழித்த சிவபெருமான், குரா மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருக்கோட்டாறு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்து, சடைமுடியில் பாம்பணிந்து விளங்கி, தன் அடியவர்கட்கு அருள் புரிகின்றான். |

**2929.** ஓங்கிய நாரண னான்முக னும்உண ராவகை
நீங்கிய தீயுரு வாகிநின் றநிம லன்னிழற்
கோங்கம ரும்பொழில் சூழ்ந்தெழி லார்திருக்
கோட்டாற்றுள்
ஆங்கம ரும்பெரு மானம ரர்க்கம ரனன்றே. 9

செருக்குடைய திருமாலும், பிரமனும் உணரா வண்ணம் அளந்தறிய முடியாத தீ யுருவாகிநின்ற சிவபெருமான் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவன். நிழல்தரும் கோங்கு மலர்ச்சோலை சூழ்ந்த அழகிய திருக்கோட்டாறு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பெருமான். தேவர்கட்கெல்லாம் தேவனாவான்.

**2930.** கடுக்கொடுத் ததுவ ராடையர் காட்சியில்
லாததோர்
தடுக்கிடுக் கிச்சம ணேதிரி வார்கட்குத்
தன்னருள்
கொடுக்ககில் லாக்குழ கன்அம ருந்திருக்
கோட்டாற்றுள்
இடுக்கணின் றித்தொழு வார்அம ரர்க்கிறை
யாவரே. 10

சாயம் பற்றும் பொருட்டுக் கடுக்காய் நீரில் தோய்த்த காவி ஆடை அணிந்த புத்தர்களும், சிறுபாயைச் சுமந்து திரியும் சமணர்களும் தன்னை நாடாததால், அருள் புரியமாட்டாத அழகன் சிவபெருமான். திருக்கோட்டாறு என்னும் தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற அவனைச் சிரமப்படாமல் எளிய முயற்சியால் வழிபடுகின்றவர்களும், தேவர்கட்குத் தலைவராவர்.

**2931.** கொடியுயர் மால்விடை யூர்தியி னான்திருக்
கோட்டாற்றுள்
அடிகழ லார்க்கநின் றாடவல் லஅரு ளாளனைக்
கடிகம ழும்பொழிற் காழியுண் ஞானசம்
பந்தன்சொல்
படியிவை பாடிநின் றாடவல் லார்க்கில்லை
பாவமே. 11

இடபத்தைக் கொடியாகவும், வாகனமாகவும் கொண்டு, திருக்கோட்டாறு என்னும் தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான் திருவடிகளிலுள்ள கழல்கள் ஒலிக்க, திருநடனம் புரியும் அருளாளன். அப்பெருமானை நறுமணம் கமழும் சோலைகளையுடைய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இப்பதிகப் பாடல்களால் போற்றிப் பாடியாட வல்லவர்களின் பாவம் யாவும் நீங்கும்.

## 13. திருப்பூந்தராய்

**பண் : காந்தார பஞ்சமம்** **பதிக எண் : 13**

**2932.** மின்னன வெயிறுடை விரவ லோர்கள்தந்
துன்னிய புரமுகச் சுளிந்த தொன்மையர்
புன்னையம் பொழிலணி பூந்த ராய்நகர்
அன்னமன் னந்நடை யரிவை பங்கரே. 1

மின்னலைப் போன்ற பற்களையுடைய பகையசுரர்களின் நெருங்கிய புரம்மூன்றும் சாம்பலாகும்படி கோபித்த பழமையானவரான சிவபெருமான், புன்னை மரங்கள் நிறைந்த சோலைகளால் சூழப்பட்ட அழகிய பூந்தராய் நகரில், அன்னம் போன்ற நடையையுடைய உமாதேவியைப் பாகமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றார்.

---

எல்லாப்பாடல்களிலும் உமையொருபாகராக வர்ணிக்கப்பட்டு திரிபுரம் எரித்த வரலாறும் போற்றப்படுவது இப்பதிகத்தின் சிறப்பாகும்.

| | |
|---|---|
| **2933.** மூதணி முப்புரத் தெண்ணி லோர்களை<br>வேதணி சரத்தினால் வீட்டி னாரவர்<br>போதணி பொழிலமர் பூந்த ராய்நகர்த்<br>தாதணி குழலுமை தலைவர் காண்மினே. 2<br><br>பூந்தராய்ப்பதிகங்களில் உமையொருபாகன் வர்ணனைக்கு முக்கியத்துவம் அதிகம். இதே திருமுறையில் இரண்டாவது பதிகத்தைப் பார்க்க. | பழமையான அணிவகுப்பையுடைய முப்புரத்திலிருந்த அளவற்ற அசுரர்களை வெம்மையுடைய அம்பினால் அழித்தவராகிய சிவபெருமான், மலர்கள் நிறைந்த அழகிய சோலைகளையுடைய திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் மகரந்தப் பொடிகள் தங்கிய கூந்தலையுடைய உமாதேவியுடன் வீற்றிருந் தருளுகின்றார். அவரைத் தரிசித்துப் பிறவிப் பயனை அடையுங்கள். |
| **2934.** தருக்கிய திரிபுரத் தவர்கள் தாம்உகப்<br>பெருக்கிய சிலைதனைப் பிடித்த பெற்றியர்<br>பொருக்கடல் புடைதரு பூந்த ராய்நகர்க்<br>கருக்கிய குழலுமை கணவர் காண்மினே. 3 | செருக்குக் கொண்ட திரிபுரத்தசுரர்கள் அழியுமாறும், தேவர்களின் இன்பம் பெருகுமாறும், மேருமலையை வில்லாகப் பிடித்த சிவபெருமான், அலைவீசுகின்ற கடல் பக்கங்களில் சூழ்ந்திருக்க, பெருமையுடைய திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவராவார். கூந்தலுக்கு உவமையாகக் கூறப்படும் பொருள்களெல்லாம் தமக்கு அத்தகைய நிறமும், அழகும் இல்லையே என்று வருத்தமுறும்படி அழகிய, கரிய கூந்தலையுடைய உமாதேவியின் கணவர் ஆவார். அவரைத் தரிசித்துப் பிறவிப் பயனை அடையுங்கள். |
| **2935.** நாகமும் வரையுமே நாணும் வில்லுமா<br>மாகமார் புரங்களை மறித்த மாண்பினர்<br>பூகமார் பொழிலணி பூந்த ராய்நகர்ப்<br>பாகமர் மொழியுமை பங்கர் காண்மினே. 4 | வாசுகி என்னும் பாம்பை நாணாகவும், மேரு மலையை வில்லாகவும் கொண்டு, ஆகாயத்தில் திரிந்த திரிபுரங்களை அழித்த மாண்புடைய சிவபெருமான், கமுக மரங்கள் நிறைந்த சோலைகளால் அழகுடன் திகழும் திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வெல்லப்பாகு போன்று இனிமையாகப் பேசுகின்ற உமாதேவியைப் பாகமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றார். அவரைத் தரிசித்துப் பிறவிப்பயனை அடையுங்கள். |
| **2936.** வெள்ளெயி றுடையவவ் விரவ லார்களூர்<br>ஒள்ளெரி யூட்டிய வொருவ னாரொளிர்<br>புள்ளணி புறவினிற் பூந்த ராய்நகர்க்<br>கள்ளணி குழலுமை கணவர் காண்மினே. 5 | வெண்ணிறப் பற்களையுடைய அசுரர்களின் திரிபுரங்கள், ஒளி பொருந்திய நெருப்பால் எரிந்து சாம்பலாகுமாறு செய்தவர் சிவபெருமான். மின்னுகின்ற பறவைகளை உடைய திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அப்பெருமானார் தேன்கமழும் கூந்தலையுடைய உமாதேவியின் கணவராவார். அப்பெருமானாரைத் தரிசித்துப் பிறவிப் பயனைப் பெறுங்கள். |

| | |
|---|---|
| **2937.** துங்கிய றானவர் தோற்ற மாநகர்<br>அங்கியில் வீழ்தர வாய்ந்த வம்பினர்<br>பொங்கிய கடலணி பூந்த ராய்நகர்<br>அங்கய லனகணி யரிவை பங்கரே. **6** | அசுரர்களின் நெடிய வடிவங்களைப் போன்று தோற்றத்தையுடைய பெரிய முப்புரங்களையும், நெருப்பால் அழியுமாறு செய்த அக்கினிக் கணையை உடைய சிவபெருமான், பொங்கும் கடலையுடைய அழகிய திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமான் அழகிய கயல்மீன் போன்ற கண்களையுடைய உமாதேவியை ஒரு பாகமாக உடையவர். அப்பெருமானைத் தரிசித்துப் பிறவிப் பயனைப் பெறுங்கள். |
| **2938.** அண்டர்க ளுய்ந்திட வவுணர் மாய்தரக்<br>கண்டவர் கடல்விட முண்ட கண்டனார்<br>புண்டரீ கவ்வயற் பூந்த ராய்நகர்<br>வண்டமர் குழலிதன் மணாளர் காண்மினே. **7** | சிவபெருமான் எல்லா அண்டத்தவர்களும் நன்மை அடையும் பொருட்டுத் திரிபுர அசுரர்களை மாய்த்தவர். கடலில் தோன்றிய நஞ்சை உண்ட கருநிறக் கண்டத்தர். தாமரை மலர்கள் பூத்துள்ள வயல்களையுடைய திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவர். பூவிலுள்ள தேனை உண்ணும்பொருட்டு வண்டு அமர்கின்ற கூந்தலையுடைய உமாதேவியின் மணாளர் ஆவார். அப்பெருமானைத் தரிசித்துப் பிறவிப் பயனைப் பெறுங்கள். |
| **2939.** மாசின வரக்கனை வரையின் வாட்டிய<br>காய்சின வெயில்களைக் கறுத்த கண்டனார்<br>பூசுரர் பொலிதரு பூந்த ராய்நகர்க்<br>காசைசெய் குழலுமை கணவர் காண்மினே. **8** | சிவபெருமான் குற்றம் செய்த அரக்கனான இராவணனைக் கயிலை மலையின்கீழ் அடர்த்தவர். கோபத்தால் பிற உயிர்களைத் துன்புறுத்திய அசுரர்களின் மூன்று கோட்டைகளை எரித்த நீலகண்டர். அந்தணர்கள் நிறைந்து விளங்குகின்ற திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில், வீற்றிருந்தருளும் அவர் காயாம்பூவைப் போன்ற கருநிறக் கூந்தலையுடைய உமாதேவியின் கணவராவார். அவரைத் தரிசித்துப் பிறவிப் பயனைப் பெறுங்கள். |
| **2940.** தாமுக மாக்கிய வசுரர் தம்பதி<br>வேமுக மாக்கிய விகிர்தர் கண்ணனும்<br>பூமக னறிகிலாப் பூந்த ராய்நகர்க்<br>கோமக ளெழில்பெறு மரிவை கூறரே. **9** | தம் விருப்பம்போல் தேவர்கட்குத் துன்பம் செய்த அசுரர்களின் மூன்று நகரங்களை வெந்தழியுமாறு செய்த விகிர்தர் சிவபெருமான். திருமாலும், பிரமனும் அறிய ஒண்ணாதவர். திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் தலைவரான சிவபெருமான் அழகிய உமாதேவியைத் தம் உடம்பின் ஒரு கூறாகக் கொண்டவர். அவரைத் தரிசித்துப் பிறவிப் பயனை அடையுங்கள். |

2941. முத்தர வசுரர்கண் மொய்த்த முப்புரம்
அத்தகு மழலிடை வீட்டி னாரமண்
புத்தரு மறிவொணாப் பூந்த ராய்நகர்க்
கொத்தணி குழலுமை கூறர் காண்மினே. 10

சிவபெருமான் மூன்று தரத்தினராகிய அசுரர்கள் மிகுந்த முப்புரங்களை நெருப்பில் எரிந்து சாம்பலாகுமாறு செய்தவர். சமணர்களாலும், புத்தர்களாலும் அறிய ஒண்ணாதவர். திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அவர், பூங்கொத்துக்களால் அழகுபடுத்தப்பட்ட கூந்தலையுடைய உமாதேவியைத் தம் உடம்பின் ஒரு கூறாகக் கொண்டவர். அப்பெருமானைத் தரிசித்துப் பிறவிப் பயனை அடையுங்கள்.

2942. புரமெரி செய்தவர் பூந்த ராய்நகர்ப்
பரமலி குழலுமை நங்கை பங்கரைப்
பரவிய பந்தன்மெய்ப் பாடல் வல்லவர்
சிரமலி சிவகதி சேர்தல் திண்ணமே. 11

முப்புரம் எரித்த சிவபெருமான் திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தில் அடர்த்தியான கூந்தலையுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமானை ஞானசம்பந்தன் நவின்ற இம்மெய்ம்மைப் பதிகத்தால் போற்ற வல்லவர்கள் தலையானதாகக் கருதப்படுகின்ற சிவகதியை நிச்சயம் பெறுவர்.

## 14. திருப்பைஞ்ஞீலி

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 14

2943. ஆரிடம் பாடில ரடிகள் காடலால்
ஓரிடங் குறைவில ருடையர் கோவணம்
நீரிடஞ் சடைவிடை யூர்தி நித்தலும்
பாரிடம் பணிசெயும் பயில்பைஞ் ஞீலியே. 1

---

பைஞ்ஞீலி – பசிய வாழை. அப்பர் சுவாமிகளுக்காக இறைவன் பந்தர் அமைத்துக் கட்டமுது அளித்த தலம். வாழை பூசித்த தலம்.

சிவபெருமான் இருடிகளுக்காக வேதத்தை அருளிச் செய்தவர். வசிப்பது சுடுகாடானாலும் அதனால் ஒரு குறையும் இல்லாதவர். அணிவது கோவண ஆடை. சடைமுடியில் கங்கையைத் தாங்கியவர். இடப வாகனத்தில் ஏறியவர். தினந்தோறும் பூதகணங்கள் சூழ்ந்து நின்று பணிசெய்யத் திருப்பைஞ்ஞீலியில் வீற்றிருந்தருளுகின்றார்.

2944. மருவிலார் திரிபுர மெரிய மால்வரை
பருவிலாக் குனித்தபைஞ் ஞீலி மேவலான்
**உருவிலான் பெருமையை யுளங்கொ ளாதவத்**
**திருவிலா ரவர்களைத்** தெருட்ட லாகுமே. 2

பகையசுரர்களின் முப்புரங்களும் எரிந்து சாம்பலாகுமாறு மேரு என்னும் பெருமையுடைய மலையினை வில்லாக வளைத்த சிவபெருமான் திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான். இத்தகைய வடிவமுடையவன் அவன் என்று வரையறை செய்து உணர்த்த இயலாத அப்பெருமானுடைய பெருமையை உணராதவர் அவனருளைப் பெறாதவர். அவர்களின் அறிவைத் தெளிவித்தல் இயலுமா?

| | |
|---|---|
| **2945.** அஞ்சுரும் பணிமல ரமுத மாந்தித்தேன்<br>**பஞ்சுரம் பயிற்றுபைஞ் ஞீலி** மேவலான்<br>வெஞ்சுரந் தனிலுமை வெருவ வந்ததோர்<br>குஞ்சரம் படவுரி போர்த்த கொள்கையே. **3** | அழகிய சுரும்பு என்னும் சாதி வண்டினம் மலரை அடைந்து தேனைக்குடித்துத் தேன் என்னும் சாதி வண்டினங்களுக்குப் பஞ்சுரம் என்னும் பண்ணைப் பாடிப் பழக்கும் திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் வீற்றிருக்கும் இறைவன், வெப்பம் மிகுந்த காட்டில் உமாதேவி அஞ்சுமாறு வந்த யானையின் தோலை உரித்துப் போர்த்திக் கொண்டவன். |
| **2946.** கோடல்கள் புறவணி கொல்லை முல்லைமேல்<br>பாடல்வண் டிசைமுரல் பயில்பைஞ் ஞீலியார்<br>பேடல ராணலர் பெண்ணு மல்லதோர்<br>ஆடலை யுகந்தவெம் மடிக ளல்லரே. **4** | காந்தள் மலர்களிலும், முல்லை நிலத்திலுள்ள காடுகளிலுமுள்ள முல்லை மலர்களின் மீதும் அமர்ந்திருக்கும் வண்டுகள் செய்யும் ரீங்காரம் பண்ணிசைபோல் ஒலிக்க, திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் இறைவர் அலியல்லர். ஆணுமல்லர். பெண்ணுமல்லர். திருநடனம் புரிவதில் விருப்பமுடைய அப்பெருமானார் எங்கள் தலைவர் ஆவார். |
| **2947.** விழியிலா நகுதலை விளங்கி ளம்பிறை<br>சுழியிலார் வருபுனற் சூழல் தாங்கினான்<br>பழியிலார் பரவுபைஞ் ஞீலி பாடலான்<br>கிழியிலார் கேண்மையைக் கெடுக்க லாகுமே. **5** | விழியிலாத பற்களோடு கூடிய பிரமகபாலத்தைக் கையில் ஏந்தி, இளம்பிறையையும், கங்கையையும் சடையில் தாங்கியுள்ளவன் சிவபெருமான். பழியிலாத அடியவர்கள் போற்றிப் பாடத் திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அப்பெருமான் தன்னை வணங்குபவர்களின் செல்வ மில்லாத வறுமை நிலையைப் போக்குவான். |
| **2948.** விடையுடைக் கொடிவல னேந்தி வெண்மழுப்<br>படையுடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவலான்<br>துடியிடைக் கலையல்கு லாளோர் பாகமாச்<br>சடையிடைப் புனல்வைத்த சதுர னல்லனே. **6** | இடபம் பொறித்த கொடியை வலக்கையில் ஏந்தி, வெண்மழுப்படையையுடைய கடவுள் திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ளான். உடுக்கை போன்ற குறுகிய இடையில் மேகலை என்னும் ஆபரணம் அணிந்து, சீலையால் மறைத்த அல்குலை யுடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டு, சடையிலே கங்கையைத் தரித்த சதுரன் ஆவான். |
| **2949.** தூயவன் தூயவெண் ணீறு மேனிமேல்<br>பாயவன் பாயபைஞ் ஞீலி கோயிலா<br>மேயவன் வேய்புரை தோளி பாகமா<br>**ஏயவ னெனைச்செயுந் தன்மை யென்கொலோ.** **7** | இறைவன் தூய உடம்பினன். தூய்மையான திருநீற்றைத் தன் திருமேனி முழுவதும் பரவப் பூசியவன். திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்திலுள்ள திருக்கோயிலில் விரும்பி வீற்றிருந்தருளுபவன். மூங்கிலைப் போன்ற தோளையுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவன். அப்பெருமான் சீவனான என்னைச் சிவனாகச் செய்யும் பண்புதான் என்னே! |

| பாடல் | பொருள் |
|---|---|
| **2950.** தொத்தின தோள்முடி யுடைய வன்றலை<br>பத்தினை நெரித்தபைஞ் ஞீலி மேவலான்<br>முத்தினை முறுவல்செய் தாளொர் பாகமாப்<br>பொத்தினன் திருந்தடி பொருந்தி வாழ்மினே. 8 | கொத்தாகவுள்ள இருபது தோள்களைக் கொண்ட இராவணனின் முடியுடைய தலைகள் பத்தையும் இறைவன் நெரித்தான். அப்பெருமான் திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளு கின்றான். முத்துப் போன்ற பற்களை உடைய உமாதேவியை ஒருபாகமாக அணைத்துக் கொண்டவன். அப்பெருமானின் திருவடிகளைப் பொருந்தி வாழ்வீர்களாக. |
| **2951.** நீருடைப் போதுறை வானு மாலுமாய்ச்<br>சீருடைக் கழலடி சென்னி காண்கிலர்<br>பாருடைக் கடவுள்பைஞ் ஞீலி மேவிய<br>தாருடைக் கொன்றையந் தலைவர் தன்மையே. 9 | நீர்நிலைகளில் விளங்குகின்ற தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமனும், திருமாலும் திருமுடியையும், சிறப்புடைய கழலணிந்த திருவடிகளையும் தேடியும் காணாது நிற்க, இவ்வுலகை உடைமைப் பொருளாகக் கொண்ட இறைவன் திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் கொன்றைமாலை அணிந்த தலைவனாய் வீற்றிருந்தருளுகின்றான். |
| **2952.** பீலியார் பெருமையும் பிடகர் நூன்மையும்<br>சாலியா தவர்களைச் சாதி யாததோர்<br>கோலியா வருவரை கூட்டி யெய்தபைஞ்<br>ஞீலியான் கழலடி நினைந்து வாழ்மினே. 10 | மயிற்பீலியேந்திப் பெருமை கொள்ளும் சமணர்களும், திரிபிடகம் என்னும் சமய நூலுடைய புத்தர்களும், தங்கள் நூற்பொருளோடு பொருந்தாதவர்களை வாதிட்டு வெல்லும் வல்லமையில்லாதவர்கள். எனவே, அவர்களின் உரைகளைக் கேளாது, வளைக்க முடியாத மேருமலையை வில்லாக வளைத்து அம்பினைத் தொடுத்து எய்து முப்புரங்களை எரித்தவனும், திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளு கின்றவனுமான சிவபெருமானின் கழலணிந்த திருவடிகளை நினைந்து வணங்கி வாழ்வீர்களாக! |
| **2953.** கண்புனல் விளைவயற் **காழிக் கற்பகம்**<br>நண்புண ரருமறை ஞான சம்பந்தன்<br>பண்பினர் பரவுபைஞ் ஞீலி பாடுவார்<br>உண்பின வுலகினி லோங்கி வாழ்வரே. 11 | தண்ணீர் பாய்கின்ற வயல் வளமுடைய சீகாழியில், கற்பகமரம் போன்று அன்பினால் அனைத்துயிர்கட்கும் நலம் சேர்க்கும் அருமறை வல்ல ஞானசம்பந்தன், நற்பண்புடையவர் வணங்கும் திருப்பைஞ்ஞீலி என்னும் திருத்தலத்திலுள்ள இறைவனைப் பாடிய இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கள், வினைப் பயன்களை நுகர்வதற்காகப் பிறந்துள்ள இப்பூவுலகில் ஓங்கி வாழ்வர். |

## 15. திருவெண்காடு

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 15

| | |
|---|---|
| **2954.** மந்திர மறையவை வான வரொடும்<br>இந்திரன் வழிபட நின்ற எம்மிறை<br>வெந்தவெண் ணீற்றர்வெண் காடு மேவிய<br>அந்தமு முதலுடை யடிக ளல்லரே. 1 | பஞ்சாக்கர மந்திரத்தைத் தனி நடுப்பகுதியில் கொண்ட வேதங்களும், தேவர்களும், இந்திரனும் வழிபட வீற்றிருக்கின்ற எங்கள் இறைவனாய், வெந்த வெண்ணீற்றினைத் திருமேனியில் பூசித் திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான் அந்தமும், ஆதியுமாகிய அடிகள் அல்லரோ ? |
| **2955.** படையுடை மழுவினர் பாய்புலித் தோலின்<br>உடைவிரி கோவண முகந்த கொள்கையர்<br>விடையுடைக் கொடியர்வெண் காடு மேவிய<br>**சடையிடைப் புனல்வைத்த சதுர ரல்லரே.** 2 | இறைவர் மழுவைப் படையாக உடையவர். பாய்கின்ற புலித்தோலை ஆடையாக உடையவர். கோவணத்தை உகந்து அணிந்தவர். இடபவடிவம் பொறிக்கப்பட்ட கொடியுடையவர். திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான் சடையிலே கங்கையைத் தாங்கிய திறமையானவர் அல்லரோ ? |

<u>சடையிடைப் புனல் வைத்த சதுரம் (திறமை)</u>

சடையில் புனல் வைத்த திறம் என்ன ? நீரானது மேலிருந்து கீழ்நோக்கிச் செல்லும் இயல்பினை உடையது. அதனை அடக்கித் திவலையாக்கிச் சடையில் நிலையாக வைத்தல் ஒரு திறமையாகும். அவ்வாறு செய்து பழகி அப்பழக்கத்தால், கீழ்நோக்கிப் பல்லாயிர நினைப்பாக விரிந்து ஓடும் என் மனத்தையும் அணு அளவாக்கித் தன் திருவடியை நினைக்கவைத்த வல்லாளன் என்பது கருத்து.

| | |
|---|---|
| **2956.** பாலொடு நெய்தயிர் பலவு மாடுவர்<br>தோலொடு நூலிழை துதைந்த மார்பினர்<br>மேலவர் பரவுவெண் காடு மேவிய<br>ஆலம தமர்ந்தவெம் மடிக ளல்லரே. 3 | இறைவர் பாலொடு, நெய், தயிர் மற்றும் பலவற்றாலும் திருமுழுக்கு ஆட்டப்படுபவர். யானைத்தோலைப் போர்வையாகவும், புலித்தோலை ஆடையாகவும் அணிந்தவர். முப்புரி நூலணிந்த மார்பினர். சிவஞானிகள் துதிக்கின்ற திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் கல்லால மரத்தின்கீழ் வீற்றிருந்து அறம் உரைத்த எம் தலைவர் அல்லரோ ? |
| **2957.** ஞாழலுஞ் செருந்தியு நறுமலர்ப் புன்னையுந்<br>தாழைவெண் குருகயல் தயங்கு கானலில்<br>வேழம துரித்தவெண் காடு மேவிய<br>யாழின திசையுடை யிறைவ ரல்லரே. 4 | புலிநகக் கொன்றையும், செருந்தியும், நறுமணமிக்க புன்னை மலர்களும், தாழையும், குருக்கத்தியும் விளங்கும் கடற்கரைச் சோலையுடைய திருவெண்காடு என்னும் திருத்தலத்தில், யானையின் தோலையுரித்த ஆற்றல் உடையவராயும், யாழிசை போன்ற இனிமை உடையவராயும் உள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார் அல்லரோ ? |

| | |
|---|---|
| **2958.** பூதங்கள் பலவுடைப் புனிதர் புண்ணியர்<br>ஏதங்கள் பலவிடர் தீர்க்கு மெம்மிறை<br>வேதங்கண் முதல்வர்வெண் காடு மேவிய<br>பாதங்கள் தொழநின்ற பரம ரல்லரே. 5 | எம் இறைவர், பூதகணங்கள் பல உடைய புனிதர். புண்ணிய வடிவினர். தம்மை வழிபடுபவர்களின் குற்றங்களையும், துன்பங்களையும் தீர்த்தருளுபவர். அவர் வேதங்களில் கூறப்படும் முதல்வர். திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அவர்தம் பாதங்கள் அனைவராலும் தொழப்படும் நிலையில் விளங்கும் பரம்பொருள் அல்லவோ ? |
| **2959.** மண்ணவர் விண்ணவர் வணங்க வைகலும்<br>எண்ணிய தேவர்கள் இறைஞ்சும் எம்மிறை<br>விண்ணமர் பொழில்கொள்வெண் காடு மேவிய<br>அண்ணலை அடிதொழ அல்லல் இல்லையே. 6 | மண்ணுலகத்தோரும், விண்ணுலகத்தோரும், மற்றுமுள்ள தேவர்களும் தினந்தோறும் எங்கள் இறைவனை வழிபட்டுப் போற்றுகின்றனர். வானளாவிய சோலைகளையுடைய திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருக்கின்ற அப்பெருமானின் திருவடிகளை வணங்குபவர்கட்குத் துன்பம் இல்லை. |
| **2960.** நயந்தவர்க் கருள்பல நல்கி யிந்திரன்<br>கயந்திரம் வழிபடநின்ற கண்ணுதல்<br>வியந்தவர் பரவுவெண் காடுமேவிய<br>பயந்தரு மழுவுடைப் பரம ரல்லரே. 7 | விரும்பி வழிபடும் அடியவர்கட்கு வேண்டுவன வேண்டியவாறு அருளி, இந்திரனின் வெள்ளை யானை வழிபட அதற்கும் அருள்புரிந்தவர். நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான் ஆவார். அனைவரும் அந்த இன்னருளை வியந்து போற்றும்படி திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் பயந்தரு மழுப்படையுடைய பரமர் அல்லரோ ? |
| **2961.** மலையுட னெடுத்தவல் லரக்கன் நீள்முடி<br>தலையுட னெரித்தருள் செய்த சங்கரர்<br>விலையுடை நீற்றர்வெண் காடு மேவிய<br>அலையுடைப் புனல்வைத்த அடிகள் அல்லரே. 8 | கயிலை மலையை எடுத்த கொடிய அரக்கனாகிய இராவணனின் நீண்ட முடி, தலை, உடல் ஆகியவற்றை நெரித்து, பின் அவன் தவறுணர்ந்து சாமகானம் பாட, அருள் செய்த சங்கரர், மதிப்புடைய திருநீற்றினைப் பூசியவர். அலையுடைய கங்கையைச் சடையில் தாங்கித் திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பெருமான் அவர் அல்லரோ ? |
| **2962.** ஏடவிழ் நறுமலர் அயனு மாலுமாய்த்<br>தேடவுந் தெரிந்தவர் தேர கிற்கிலார்<br>வேடம துடையவெண் காடு மேவிய<br>ஆடலை யமர்ந்தஎம் அடிகள் அல்லரே. 9 | பூவிதழ்களுடைய நறுமணம் கமழும் தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் திருமுடியையும், திருஅடியையும் காணத் தேடியும் காண்பதற்கு அரியவராய் நெருப்பு மாலையாய் விளங்கியவரும், பலபல வேடம் கொள்பவருமான இறைவன் திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்து திருநடனம் புரிதலை விரும்பிய அடிகள் அல்லரோ ? |

| | |
|---|---|
| 2963. போதியர் பிண்டியர் பொருத்தம் இல்லிகள்<br>நீதிகள் சொல்லியும் நினைய கிற்கிலார்<br>வேதியர் பரவுவெண் காடு மேவிய<br>ஆதியை யடிதொழ அல்லல் இல்லையே. 10 | புத்தரும், சமணரும் பொருத்தம் இல்லாதவராய், இறையுண்மையை உணர்த்தும் நீதிகளை எடுத்துரைத்தும், நல்வாழ்வு இல்லாமையால் அவற்றை நினைத்துப் பார்த்தாலும் செய்யாதவர் ஆயினர். எனவே அவர்களைச் சாராது, வேதம் ஓதும் அந்தணர்கள் பரவித் துதிக்கின்ற திருவெண்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற அனைத்துலகுக்கும் முதற்பொருளாகிய சிவபெருமான் திருவடிகளைத் தொழ துன்பம் இல்லையாம். |
| 2964. நல்லவர் புகலியுள் ஞான சம்பந்தன்<br>செல்வன்எம் சிவனுறை திருவெண் காட்டின்மேற்<br>சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர்<br>அல்லலோ டருவினை அறுதல் ஆணையே. 11 | பசு புண்ணியம், பதி புண்ணியம் செய்த நல்லவர்கள் வசிக்கின்ற திருப்புகலியுள் அவதரித்த ஞானசம்பந்தன், செல்வனாகிய எம் சிவபெருமான் வீற்றிருந்தருள்கின்ற திருவெண்காட்டின்மேல் பாடிய அருந்தமிழ்ப் பாக்கள் பத்தினையும் பக்தியோடு ஓதவல்லவர்களுடைய துன்பங்களோடு அவற்றிற்குக் காரணமான அருவினையும் அறும் என்பது நமது ஆணையாகும். |

## 16. திருக்கொள்ளிக்காடு

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 16

| | |
|---|---|
| 2965. நிணம்படு சுடலையி னீறு பூசிநின்<br>றிணங்குவர் பேய்களோ டிடுவர் மாநடம்<br>உணங்கல்வெண் டலைதனில் உண்ப ராயினும்<br>குணம்பெரி துடையர்நங் கொள்ளிக் காடரே. 1<br><br>கொள்ளி – அக்கினி.<br>கொள்ளி பூசித்த தலம் கொள்ளிக்காடு. | பிணங்களை எரிக்கும் சுடுகாட்டின் சாம்பலைப் பூசிப் பேய்களோடு பெரிய கூத்து ஆடுகின்ற இறைவர், உலர்ந்த பிரமகபாலத்தைக் கையில் ஏந்திப் பலியேற்று உண்பர். ஆயினும் அப் பெருமான் உயர்ந்த குணம் உடையவராய்த் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| 2966. ஆற்றநல் லடியிணை அலர்கொண் டேத்துவான்<br>சாற்றிய அந்தணன் தகுதி கண்டநாள்<br>மாற்றல னாகிமுன் னடர்த்து வந்தணை<br>கூற்றினை யுதைத்தனர் கொள்ளிக் காடரே. 2<br><br>கொள்ளி கொளுத்த – கொள்ளிக்காடு.<br>வெள்ளி முளைக்க – தெங்கூர்.<br>நெல்லி காய்க்க – நெல்லிக்கா. | நலம் தரும் இறைவனின் திருவடிகளை மலர்கொண்டு போற்றி வழிபட்ட மார்க்கண்டேயனின் வாழ்நாள் இறுதியை அறிந்து யாவராலும் தவிர்க்க முடியாதவனாகி மார்க்கண்டேயனை நெருங்கி வந்தடைந்த கூற்றுவனைக் காலால் உதைத்த இறைவர் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |

| | |
|---|---|
| **2967.** அத்தகு வானவர்க் காக மால்விடம்<br>வைத்தவர் மணிபுரை கண்டத் தின்னுளே<br>மத்தமும் வன்னியும் மலிந்த சென்னிமேல்<br>கொத்தலர் கொன்றையர் கொள்ளிக் காடரே. 3 | தாம் வாழ்வான் வேண்டி வணங்கும் வானவர்களைக் காப்பதற்காகக் கொடிய விடத்தை உண்டு தம் கண்டத்தில் அடக்கிய சிவபெருமான், ஊமத்தம் பூவும், வன்னியும் அணிந்த சடைமுடியில் கொத்தாகக் கொன்றை மலர் சூடியவர். அப்பெருமான் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **2968.** பாவண மேவுசொன் மாலை யிற்பல<br>நாவணங் கொள்கையின் நவின்ற செய்கையர்<br>ஆவணங் கொண்டெமை யாள்வ ராயினும்<br>கோவணங் கொள்கையர் கொள்ளிக் காடரே. 4 | யாப்பிலக்கணம் பொருந்துமாறு சொல்லைத் தொடுக்கும் மாலை போன்ற பாடல்கள் பலவற்றை நாநயத்துடன் நவிலுமாறு செய்தவர் இறைவர். அவர் உயிர்களாகிய எங்களை அடிமை கொண்டு ஆள்பவராயினும் கோவண ஆடை உடையவர். அப்பெருமான் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **2969.** வாரணி வனமுலை மங்கை யாளொடும்<br>சீரணி திருவுருத் திகழ்ந்த சென்னியர்<br>நாரணி சிலைதனால் நணுக லாரெயில்<br>கூரெரி கொளுவினர் கொள்ளிக் காடரே. 5 | கச்சணிந்த அழகிய முலையுடைய உமாதேவியோடு, சிறந்த அழகிய திருவுருவத்துடன் விளங்கும் சிவபெருமான், நாண் பூட்டிய மேருமலையை வில்லாகக் கொண்டு பகைவர்களாகிய முப்புர அசுரர்களின் மதில்களை, அக்கினியை அம்பின் நுனியாகக் கொண்டு கொளுத்தியவர். அப்பெருமான் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **2970.** பஞ்சுதோய் மெல்லடிப் பாவை யாளொடும்<br>மஞ்சுதோய் கயிலையுள் மகிழ்வர் நாள்தொறும்<br>வெஞ்சின மருப்பொடு விரைய வந்தடை<br>குஞ்சரம் உரித்தனர் கொள்ளிக் காடரே. 6 | செம்பஞ்சுக் குழம்பு தோய்ந்த மெல்லிய பாதத்தையுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு, மேகத்தைத் தொடும்படி உயர்ந்துள்ள கயிலைமலையில் மகிழ்ந்திருந்து நாள்தோறும் தம்மை வழிபடுபவர்கட்கு அருள் பாலிக்கும் இறைவர், கொடிய சினத்தோடும், கொம்போடும் வேகமாக வந்தடைந்த யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவர். அப்பெருமான் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |

| | | |
|---|---|---|
| 2971. | இறையுறு வரிவளை யிசைகள் பாடிட<br>அறையுறு கழலடி ஆர்க்க ஆடுவர்<br>சிறையுறு விரிபுனல் சென்னி யின்மிசைக்<br>குறையுறு மதியினர் கொள்ளிக் காடரே. 7 | திருக்கையில் விளங்கும் அழகிய வளையல் களையுடைய உமாதேவி இசைபாட, திருவடிகளில் விளங்கும் வீரக்கழல்கள் ஒலிக்க, இறைவர் திருநடனம் புரிகின்றார். அப்பெருமான் பாய்கின்ற கங்கையைத் தடுத்துச் சடையில் தாங்கி, கலைகுறைந்த சந்திரனையும் தலையில் சூடி, திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| 2972. | எடுத்தனன் கயிலையை யியல்வ லியினால்<br>அடர்த்தனர் திருவிர லால்அ லறிடப்<br>படுத்தன ரென்றவன் பாடல் பாடலும்<br>கொடுத்தனர் கொற்றவாள் கொள்ளிக் காடரே.<br>8 | தன்னுடைய வலிமையினால் கயிலைமலையை அப்புறப்படுத்த எடுத்த இராவணனை, தம் காற்பெரு விரலையூன்றி அம்மலையின்கீழ் அடர்த்து அலறும்படி செய்ய, இராவணன் தவறுணர்ந்து, தன்னை வருத்திய சிவனைப் போற்றிச் சாமகானம் பாட, இறைவர் இரங்கி வீரவாளை அருளினார். அப்பெருமானார் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| 2973. | தேடினா ரயன்முடி மாலுஞ் சேவடி<br>நாடினா ரவரென்று நணுக கிற்றிலர்<br>பாடினார் பரிவொடு பத்தர் சித்தமும்<br>கூடினார்க் கருள் செய்வர் கொள்ளிக் காடரே.<br>9 | பிரமன் திருமுடியினையும், திருமால் திருவடியையும் தேட, அவர்களால் எப்பொழுதும் அணுக முடியாதவராய் விளங்கும் சிவபெருமான், பத்தர்கள் மனம் ஒன்றி அன்பால் அகம் குழைந்து பாட அருள்செய்வார். அப்பெருமானார் திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| 2974. | நாடிநின் றறிவில்நா ணிலிகள் சாக்கியர்<br>ஓடிமுன் னோதிய வுரைகள் மெய்யல<br>பாடுவர் நான்மறை பயின்ற மாதொடும்<br>கூடுவர் திருவுருக் கொள்ளிக் காடரே. 10 | இறையுண்மையை உணரும் அறிவில்லாத நாணமற்ற சமணரும், புத்தர்களும் முனைந்து சொல்லும் உரைகள் மெய்யானவை அல்ல. அவர்களைச் சாராதுவிட்டு, நான்கு வேதங்களை அருளிய சிவபெருமான், நன்கு பழகிய உமாதேவியோடு திருக்கொள்ளிக்காடு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் திருக்கோலத்தைக் கண்டு தரிசித்து உய்தி அடையுங்கள். |

2975. நற்றவர் காழியுண் ஞானசம் பந்தன்
குற்றமில் பெரும்புகழ்க் கொள்ளிக் காடரைச்
சொற்றமி ழின்னிசை மாலை சோர்வின்றிக்
கற்றவர் கழலடி காண வல்லரே. 11

நல்தவத்தோர் வாழ்கின்ற சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன், குற்றமற்ற பெரும்புகழுடைய திருக்கொள்ளிக்காடு என்னும் தலத்தில் வீற்றிருந்தருளும் இறைவனை, அழகு தமிழில், இன்னிசையோடு பாடிய இப்பாமாலையைத் தளராது கற்று ஓத வல்லவர்கள் அப்பெருமானின் திருவடிகளைக் காணும் பேறு பெறுவார்கள்.

## 17. திருவிசயமங்கை

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 17

2976. மருவமர் குழலுமை பங்கர் வார்சடை
அரவமர் கொள்கையெம் அடிகள் கோயிலாம்
குரவமர் சுரபுன்னை கோங்கு வேங்கைகள்
விரவிய பொழிலணி விசய மங்கையே. 1

ஊரின் பெயர் – கோவந்தபுத்தூர்.
கோயிலின் பெயர் – விசயமங்கை.

நறுமணம் கமழும் கூந்தலையுடைய உமாதேவியை ஒருபாகத்தில் கொண்ட, நீண்ட சடையில் பாம்பணிந்த சிவபெருமான் எழுந்தருளியுள்ள கோயில், குரவம், சுரபுன்னை, கோங்கு, வேங்கை ஆகிய மரங்கள் நிறைந்து விளங்கும் சோலைகள் சூழ்ந்த அழகிய திருவிசயமங்கை ஆகும்.

2977. கீதமுன் னிசைதரக் கிளரும் வீணையர்
பூதமுன் னியல்புடைப் புனிதர் பொன்னகர்
கோதனம் வழிபடக் குலவு நான்மறை
வேதியர் தொழுதெழு விசய மங்கையே. 2

"கொள்ளிடக்கரைக் கோவந்த புத்தூரில் வெள்ளிடைக் கருள் செய் விசயமங்கை" என்பது அப்பர் வாக்கு. கொள்ளிடத்தின் வடகரையில் அரியலூரிலிருந்து 30 கல் தொலைவில் உள்ளது.

கீதங்களை முன்னே இசைக்க விளங்கும் வீணையினை உடையவரும், பூதகணங்கள் சூழ விளங்கும் புனிதருமான சிவபெருமானின் பொன்னகர் என்பது, இடபதேவர் வழிபட விளங்குவதும், நான்கு வேதங்களையும் ஓதும் அந்தணர்கள் தொழுது போற்றும் திருவிசயமங்கை என்னும் திருத்தலம் ஆகும். கோதனம் வழிபட – பசுக்கூட்டங்கள் வழிபட என்றும் பொருள் உரைப்பர். ஒரு காலத்தில் இவ்வூர் கோவந்த புத்தூர் என வழங்கப்பட்டதாகக் கூறுவர்.

2978. அக்கர வரையினர் அரிவை பாகமாத்
தொக்கநல் விடையுடைச் சோதி தொன்னகர்
தக்கநல் வானவர் தலைவர் நாள்தொறும்
மிக்கவர் தொழுதெழு விசய மங்கையே. 3

கொள்ளிடத்தின் தென்கரையில் வைகாவூருக்கும் புறம்பயத்துக்கும் இடையில் விசயமங்கை என்ற ஊர் உள்ளது. அதுவன்று இது.

உருத்திராக்கத்தையும், பாம்பையும் அணிந்த இடுப்பையுடையவரும், உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவரும், சிறந்த நல் இடபத்தை வாகனமாக உடையவருமான சோதி வடிவான சிவபெருமான் வீற்றிருந்தருளும் பழமை வாய்ந்த நகர், தகுதியுடைய நல்ல தேவர்களும், அவர்களுடைய தலைவர்களும் நாள்தோறும் வணங்கிப் போற்றுகின்ற திருவிசயமங்கை என்னும் திருத்தலமாகும்.

| | |
|---|---|
| **2979.** தொடைமலி யிதழியுந் துன்னெ ருக்கொடு<br>புடைமலி சடைமுடி யடிகள் பொன்னகர்<br>படைமலி மழுவினர் பைங்கண் மூரிவெள்<br>விடைமலி கொடியணல் விசய மங்கையே. **4** | கொன்றை மாலையும், நெருக்கமாகத் தொடுக்கப்பட்ட எருக்க மாலையும் பக்கங்களிலே விளங்கும் சடைமுடியுடைய அடிகளாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் அழகிய நகரம், மழுவை ஆயுதமாக உடையவரும், பசிய கண்களையுடைய வலிமையுடைய வெண்ணிற எருத்தினை கொடியாக உடைய சிவபெருமானின் திருவிசயமங்கை என்னும் திருத்தலமாகும். |
| **2980.** தோடமர் காதினன் துதைந்த நீற்றினன்<br>ஏடமர் கோதையோ டினித மர்விடம்<br>காடமர் மாகரி கதறப் போர்த்ததோர்<br>வேடம துடையணல் விசய மங்கையே. **5** | இறைவன் இடப்பாகத்தில் தோடணிந்த காதினன். நன்கு குழையத் திருநீறு பூசிய மேனியன். காட்டிலே வசிக்கின்ற பெரிய யானை கதறும்படி அதன் தோலை உரித்துப் போர்த்துக் கொண்ட ஒப்பற்ற திருக்கோலத்தை யுடைய அண்ணலான சிவபெருமான், பூவிதழ்களை அணிந்த கூந்தலையுடைய உமாதேவியோடு இனிது வீற்றிருக்கும் இடம் திருவிசயமங்கை என்னும் திருத்தலமாகும். |
| **2981.** மைப்புரை கண்ணுமை பங்கன் வண்டழல்<br>ஒப்புரை மேனியெம் முடைய வன்னகர்<br>அப்பொடு மலர்கொடங் கிறைஞ்சி வானவர்<br>மெய்ப்பட வருள்புரி விசய மங்கையே. **6** | நீலோற்ப மலர் போன்ற கண்ணுடைய உமாதேவியை ஒரு பாகத்தில் கொண்டவன் இறைவன். சிறந்த நெருப்புப் போன்ற திருமேனியுடையவன். எம்மை ஆளும் அவரின் நகர் நீரும், மலரும் கொண்டு தேவர்கள் உண்மையாக வழிபட அவர்களுக்கு அருள்புரிந்த திருவிசயமங்கை என்னும் திருத்தலம் ஆகும். பூவும், நீரும் கொண்டு அன்புடன் வழிபடுபவர்களின் பூசையை ஏற்று இறைவன் அருள் செய்வான் என்று கூறுவது அன்பில்லாதவர்களின் பூவையும், நீரையும் இறைவன் ஏற்றுக் கொள்ள மாட்டான் என்பதைப் புலப்படுத்தும். "பொக்கம் மிக்கவர் பூவும் நீரும் கண்டு நக்கு நிற்பர் அவர்தமை நாணியே'' (தி.5 ப.90 பா.9) என்ற திருநாவுக்கரசரின் திருவாக்கை இங்கு நினைவுகூர்க. |

| | |
|---|---|
| **2982.** இரும்பொனின் மலைவில்லின் எரிச ரத்தினால்<br>வரும்புரங் களைப்பொடி செய்த மைந்தனூர்<br>சுரும்பமர் கொன்றையும் தூய மத்தமும்<br>விரும்பிய சடையணல் விசய மங்கையே. 7 | பெரிய மேருமலையாகிய வில்லினால் எய்யப்பட்ட நெருப்பாகிய அம்பினால் திரிபுரங்களைப் பொடிசெய்த பெரும் வீரமுடையவன் இறைவன். வண்டுகள் அமர்கின்ற கொன்றை மலர் மாலையையும், தூய ஊமத்தை மலரையும் விரும்பி அணிந்த சடைமுடியுடைய தலைவனான சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருவிசயமங்கை என்னும் திருத்தலம் ஆகும். |
| **2983.** உளங்கைய இருபதோ டொருபதுங் கொடாங்<br>களந்தரும் வரையெடுத் திடும்அ ரக்கனைத்<br>தளர்ந்துட னெரிதர வடர்த்த தன்மையன்<br>விளங்கிழை யொடும்புகும் விசய மங்கையே. 8 | தன்னுடைய வழியில் இம்மலை தடுக்கின்றது என்று மனம் கசந்து, இருபது தோள்களும், பத்துத் தலைகளும் கொண்டதால் தான் வலிமையுடையவன் என்று எண்ணி, எடுத்தற்கு அரிய கயிலை மலையினைப் பெயர்த்தெடுக்க முயன்ற அரக்கனான இராவணன் தளர்ந்து உடல் நெரியும்படி அடர்த்த தன்மையுடைய சிவபெருமான், ஒளிவீசும் ஆபரணங்களை அணிந்த உமாதேவியோடு வீற்றிருந்தருளுவது திருவிசயமங்கை என்னும் திருத்தலம் ஆகும். |
| **2984.** மண்ணினை யுண்டவன் மலரின் மேலுறை<br>அண்ணல்கள் தமக்களப் பரிய அத்தனூர்<br>தண்ணறுஞ் சாந்தமும் பூவு நீர்கொடு<br>விண்ணவர் தொழுதெழு விசய மங்கையே. 9 | மண்ணினை உண்ட திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமனும் அளத்தற்கரிய தலைவனான சிவபெருமானது ஊர், குளிர்ச்சி பொருந்திய நறுமணம் கமழும் சந்தனமும், பூவும் நீரும் கொண்டு விண்ணவர் தொழுது போற்றும் திருவிசயமங்கை என்னும் திருத்தலமாகும். |
| **2985.** கஞ்சியுங் கவளமுண் கவணர் கட்டுரை<br>நஞ்சினுங் கொடியன நமர்கள் தேர்கிலார்<br>செஞ்சடை முடியுடைத் தேவன் நன்னகர்<br>விஞ்சையர் தொழுதெழு விசய மங்கையே. 10 | கஞ்சி உண்ணும் புத்தர்களும், கவனமாக உணவு உண்ணும் சமணர்களும் உரைக்கின்ற கருத்துக்கள் நஞ்சினும் கொடியனவாகும். நம்மவர்கள் அவற்றை ஏற்றுக் கொள்ளார். சிவந்த சடைமுடியுடைய தேவாதி தேவனின் நல்ல நகரம் வித்தியாதரர்கள் தொழுது வணங்கும் திருவிசயமங்கை என்னும் திருத்தலமாகும். |

2986. விண்ணவர் தொழுதெழு விசய மங்கையை
நண்ணிய புகலியுள் ஞானசம் பந்தன்
பண்ணிய செந்தமிழ் பத்தும் வல்லவர்
புண்ணியர் சிவகதி புகுதல் திண்ணமே. 11

விண்ணவர்கள் தொழுது வழிபடும் திருவிசய மங்கை என்னும் திருத்தலத்தை அடைந்து, திருப்புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இச்செந்தமிழ்ப் பாக்கள் பத்தினையும் ஓதவல்லவர்கள் சிவபுண்ணியச் செல்வர் களாவர். அவர்கள் சிவகதி அடைவது உறுதியாகும்.

## 18. திருவைகல் மாடக்கோயில்

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 18

2987. துளமதி யுடைமறி தோன்று கையினர்
இளமதி யணிசடை யெந்தை யாரிடம்
உளமதி யுடையவர் வைக லோங்கிய
வளமதி தடவிய மாடக் கோயிலே. 1

ஊர்ப் பெயர் – வைகல் மேலையூர்.
கோயில் பெயர் – மாடக் கோயில்.

இறைவன், துள்ளிக்குதிக்கும் இயல்புடைய மான்கன்றை ஏந்தியுள்ள திருக்கரத்தினன், இளம்பிறையை அணிந்துள்ள சடையன். எம் தந்தையாகிய அச்சிவபெருமான் விற்றிருந்தருளும் இடமாவது சிவஞானிகள் வாழ்கின்ற திருவைகல் என்னும் திருத்தலத்தில், அழகிய சந்திரனை வருடுமளவு ஓங்கி உயர்ந்துள்ள திருமாடக்கோயில் ஆகும்.

2988. மெய்யக மிளிரும்வெண் ணூலர் வேதியர்
மையகண் மலைமக ளோடும் வைகிடம்
வையக மகிழ்தர வைகல் மேற்றிசைச்
செய்யகண் **வளவன்முன் செய்த கோயிலே.** 2

"சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழற்பந்தல் செய்து
உலந்தவன் இறந்தபோது கோச்செங்கண்ணானுமாகி"
– அப்பர்.

இறைவர் ஒளிர்கின்ற முப்புரிநூல் அணிந்துள்ளவர். வேதத்தை அருளிச் செய்தவர். அவர், மை தீட்டிய கரிய கண்ணுடைய மலைமகளான உமாதேவியை உடனாகக் கொண்டு வீற்றிருந்தருளும் இடமாவது, இப்பூவுலகத்தார் மகிழும்படி திருவைகல் என்னும் திருத்தலத்தில் மேற்குத் திசையில், சிவந்த கண்ணுடைய கோச்செங்கட் சோழ மன்னனால் முற்காலத்தில் எழுப்பப்பட்ட மாடக்கோயிலாகும்.

2989. கணியணி மலர்கொடு காலை மாலையும்
பணியணி பவர்க்கருள் செய்த பான்மையர்
தணியணி யுமையொடு தாமும் தங்கிடம்
மணியணி கிளர்வைகன் மாடக் கோயிலே. 3

சின்னஞ் சிறிய இவ்வூரில் மூன்று சிவாலயங்கள் உள்ளன.

அழகிய மலர்களைக் கொண்டு காலையும், மாலையும் வழிபாடு செய்பவர்கட்கு அருள்செய்யும் தன்மை யுடையவர் இறைவர். அவர் குளிர்ந்த அருளையே தம் வடிவமாகக் கொண்டு உமாதேவியோடு தாமும் வீற்றிருந்தருளும் இடமாவது இரத்தினங்களால் அழகு படுத்தப்பட்ட திருவைகல் என்னும் திருத்தலத்திலுள்ள மாடக்கோயிலாகும்.

| | |
|---|---|
| **2990.** கொம்பியல் கோதைமுன் அஞ்சக் குஞ்சரத்<br>தும்பிய துரிசெய்த துங்கர் தங்கிடம்<br>வம்பியல் சோலைசூழ் வைகல் மேற்றிசைச்<br>**செம்பியன் கோச்செங்க ணான்செய்**<br>**கோயிலே.** 4<br><br>கொம்பியல் கோதை – தலத்து அம்பிகையின் திருநாமம். | பூங்கொம்பு போன்ற மெல்லியலாளான உமாதேவி அஞ்சுமாறு யானையின் தோலை உரித்த மேன்மையுடையவனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருவைகல் என்னும் திருத்தலத்தின் மேற்குத்திசையில் **கோச்செங்கட் சோழன்** எழுப்பிய மாடக்கோயில் ஆகும். |
| **2991.** விடமடை மிடற்றினர் வேத நாவினர்<br>மடமொழி மலைமக ளோடும் வைகிடம்<br>மடவனம் நடைபயில் வைகல் மாநகர்க்<br>குடதிசை நிலவிய மாடக்கோயிலே. 5<br><br>மாடக்கோயில் – யானை ஏறமுடியாதவாறு படிக்கட்டுகள் அமைத்து செய் குன்று போலக்கட்டப் பெற்றதாகும். வைகல், நன்னிலம், அம்பர் போன்றவை கோச்செங்கணாரின் மாடக்கோயில்கள். | இறைவர் பாற்கடலில் தோன்றிய நஞ்சை அடைத்து வைத்துள்ள கண்டத்தினர். வேதங்களை ஓதும் நாவினர். அவர், இனிய மொழிகளை மென்மையாகப் பேசுகின்ற மலைமகளான உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம், இள அன்னப் பறவைகள் நடை பயிலும் திருவைகல் என்னும் பெருநகரின் மேற்குத்திசையில் நிலவும் மாடக் கோயில் ஆகும். |
| **2992.** நிறைபுனல் பிறையொடு நிலவு நீள்சடை<br>இறையவர் உறைவிடம் இலங்கு மூவெரி<br>மறையொடு வளர்வுசெய் வாணர் வைகலில்<br>திறையுடை நிறைசெல்வன் செய்த கோயிலே.<br>6 | புனிதமான கங்கையையும், பிறைச் சந்திரனையும் அணிந்துள்ள நீண்ட சடைமுடியுடைய இறைவர் வீற்றிருந்தருளும் இடமாவது, மூவகை அக்கினிகளை வேதங்களோடு வளர்க்கின்ற அந்தணர்கள் வாழ்கின்ற திருவைகல் என்னும் திருத்தலத்தில், சிற்றரசர்கள் கப்பம் கட்ட நிறைந்த செல்வனாக விளங்கும் கோச்செங்கட்சோழன் என்ற மாமன்னன் கட்டிய மாடக்கோயில் ஆகும். |
| **2993.** எரிசரம் வரிசிலை வளைய ஏவிமுன்<br>திரிபுர மெரிசெய்த செல்வர் சேர்விடம்<br>வரிவளை யவர்பயில் வைகல் மேற்றிசை<br>வருமுகில் அணவிய மாடக் கோயிலே. 7 | அக்கினியாகிய அம்பை, மேருமலையை நீண்ட வில்லாக வளைத்துச் செலுத்தி முற்காலத்தில் திரிபுரங்களை எரியுண்ணுமாறு செய்த செல்வராகிய சிவபெருமான் வீற்றிருந் தருளுகின்ற இடமாவது, வரிவளையல்கள் அணிந்த பெண்கள் பழகுகின்ற திருவைகல் என்னும் திருத்தலத்தின் மேற்குத் திசையில் விரிந்துள்ள மேகத்தைத் தொடும்படி ஓங்கியுள்ள மாடக்கோயில் ஆகும். |

| | | |
|---|---|---|
| **2994.** மலையன இருபது தோளி னான்வலி<br>தொலைவுசெய் தருள்செய்த சோதி யாரிடம்<br>மலர்மலி பொழிலணி வைகல் வாழ்வர்கள்<br>வலம்வரு மலையன மாடக் கோயிலே. | 8 | மலை போன்ற இருபது தோள்களையுடைய இராவணனது வலிமையை அழித்து, பின்னர் அவன் சாமகானம் பாடிப் பெற்ற அவனுக்கு அருள் செய்த சோதியாகிய இறைவன் வீற்றிருந்தருளும் இடமாவது, மலர்கள் நிறைந்த சோலைகளையுடைய அழகிய திருவைகலில் வாழ்கின்றவர்கள் வலம் வந்து வணங்கும் மலை போன்ற மாடக்கோயில் ஆகும். |
| **2995.** மாலவன் மலரவன் நேடி மால்கொள<br>மாலெரி யாகிய வரதர் வைகிடம்<br>மாலைகொ டணிமறை வாணர் வைகலில்<br>மாலன மணியணி மாடக் கோயிலே. | 9 | திருமாலும், பிரமனும் இறைவனின் அடிமுடிகளைத் தேடியும் காணமுடியாது மயக்கம் கொள்ள, நெருப்பு மலையாய் நின்ற, வழிபடுபவர்கட்கு வேண்டிய வரங்களை அளிக்கவல்ல சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, பூமாலைகளை இறைவனுக்கு அணிவித்து, வேதங்களை ஓதி வழிபாடு செய்யும் அந்தணர்கள் வாழ்கின்ற திருவைகல் என்னும் திருத்தலத்தில், மேகம் போலும் நிறத்தையுடைய நீலமணிகளால் அழகுபடுத்தப்பட்ட மாடக்கோயில் ஆகும். |
| **2996.** கடுவுடை வாயினர் கஞ்சி வாயினர்<br>பிடகுரை பேணிலார் பேணு கோயிலாம்<br>மடமுடை யவர்பயில் வைகல் மாநகர்<br>வடமலை யனையநன் மாடக் கோயிலே. | 10 | கடுக்காயைத் தின்னும் வாயுடையவர்களும், கஞ்சி குடிக்கும் வாயுடையவர்களுமான சமணர்களையும், புத்தர்களின் பிடகநூலையும் பொருட்படுத்தாத சிவனடியார்கள் போற்றும் கோயிலாவது, மடம் என்னும் பண்புடைய மகளிர் பழகுகின்ற திருவைகல் என்னும் மாநகரில் மேருமலையை ஒத்த சிறப்புடைய நன்மாடக் கோயில் ஆகும். |
| **2997.** மைந்தன திடம்வைகல் மாடக் கோயிலைச்<br>சந்தமர் பொழிலணி சண்பை ஞானசம்<br>பந்தன தமிழ்கெழு பாடல் பத்திவை<br>சிந்தைசெய் பவர்சிவ லோகஞ் சேர்வரே. | 11 | அளவில்லாத ஆற்றலுடைய இறைவன் வீற்றிருந்தருளும் இடமாகிய திருவைகல் என்னும் திருத்தலத்திலுள்ள மாடக்கோயிலைச் சந்தன மரங்கள் கொண்ட சோலைகளையுடைய அழகிய திருச்சண்பை நகரில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ்ப் பதிகத்தைச் சிந்தையிலிருத்திப் போற்ற வல்லவர்கள் சிவலோகத்தில் இருப்பர். |

## 19. திருஅம்பர்ப் பெருந்திருக்கோயில்

பண் : காந்தார பஞ்சமம் பதிக எண் : 19

2998. எரிதர அனல்கையில் ஏந்தி யெல்லியில்
நரிதிரி கானிடை நட்டம் ஆடுவர்
அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்**செங் கண்ணவன்** கோயில் சேர்வரே.
1

இப்பதிகத்தின் முதல் ஏழு பாடல்களிலும் 'ஆடுவர்' என்றே இரண்டாம் அடியை நிறைவு செய்கிறார்.

இறைவர் எரிகின்ற நெருப்பைக் கையில் ஏந்தி நள்ளிருளில், நரிகள் திரிகின்ற மயானத்தில் திருநடனம் புரிகின்றார். அப்பெருமானார் அரிசில் ஆறு பாய்வதால் நீர்வளமிக்க அம்பர் மாநகரில் பெருமையிற் சிறந்த, சிவந்த கண்களையுடைய கோச்செங்கட்சோழன் கட்டிய கோயிலில் வீற்றிருந்தருளுகின்றார்.

2999. மையகண் மலைமகள் பாக மாயிருள்
கையதோர் கனலெரி கனல ஆடுவர்
ஐயநன் பொருபுனல் அம்பர்ச் செம்பியர்
செய்யகண் ணிறைசெய்த கோயில் சேர்வரே.
2

நட்டம், கனல, பெயர, பாடி, வீசி, சூடி ஆடுவர்.

மைபூசிய கண்ணையுடைய மலைமகளான உமாதேவியை ஒருபாகமாகக் கொண்டு, இருளில், இறைவர் கையில் கனன்று எரிகின்ற நெருப்பானது சுவாலை வீச, நடனம் ஆடுவார். அப்பெருமானார் கரையை மோதுகின்ற அரிசிலாற்றினால் நீர்வளமிக்க அழகிய நல்ல அம்பர் மாநகரில் கோச்செங்கட் சோழன் கட்டிய கோயிலில் வீற்றிருந்தருளுகின்றார்.

3000. மறைபுனை பாடலர் சுடர்கை மல்கவோர்
பிறைபுனை சடைமுடி பெயர ஆடுவர்
அறைபுன னிறைவயல் அம்பர் மாநகர்
இறைபுனை யெழில்வளர் இடம தென்பரே. 3

பெருந்திருக்கோயிலும், மாடக்கோயிலும் ஒன்றே.

வேதங்களை அருளிப் பாடுகின்ற இறைவர். சுடர்விடு நெருப்பு கையில் விளங்கவும், பிறைச்சந்திரன் சடைமுடியில் அசையவும் ஆடுவார். ஒலிக்கின்ற அரிசிலாற்றினால் நீர் நிறைந்த வயல்களையுடைய அம்பர் மாநகரில், கோச்செங்கட்சோழ மன்னன் எழுப்பிய அழகுமிகு கோயிலில் வீற்றிருந்தருளுகின்றார்.

3001. இரவுமல் கிளமதி சூடி யீடுயர்
பரவமல் கருமறை பாடி யாடுவர்
அரவமோ டுயர்செம்மல் அம்பர்க் கொம்பலர்
மரவமல் கெழினகர் மருவி வாழ்வரே. 4

முற்பிறப்பில் சிலந்தியாக இருந்து, சிவபூசை செய்த வினைஎச்சத்தின் காரணமாக மறுபிறப்பில் மாடக்கோயில்களென்னும் பெருங்கோயில்கள் 78 கட்டினார் என்பது அப்பரின் சேத்திரக்கோவையில் பதிவு செய்யப்பட்டுள்ளது.

இரவில் ஒளிரும் இளம்பிறைச் சந்திரனைச் சூடி, தம் பெருமையின் உயர்வைத் துதிப்பதற்குரிய அருமறைகளை இறைவர் பாடி ஆடுவார். பாம்பணிந்து உயர்ந்து விளங்கும் செம்மலாகிய சிவபெருமான், கொம்புகளில் மலர்களையுடைய வெண்கடம்ப மரங்கள் நிறைந்த சோலைகளை யுடைய அழகிய அம்பர் மாநகரில் வீற்றிருந்தருளுகின்றார்.

| | |
|---|---|
| **3002.** சங்கணி குழையினர் சாமம் பாடுவர்<br>வெங்கனல் கனல்தர வீசி யாடுவர்<br>அங்கணி விழவமர் அம்பர் மாநகர்ச்<br>செங்கணல் இறைசெய்த கோயில் சேர்வரே. 5<br><br>திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் தலபுராணம் பாடியுள்ளார். | இறைவர் சங்கினாலாகிய குழை அணிந்த காதினர். சாமவேதத்தைப் பாடுவார். மிகுந்த வெப்பமுடைய நெருப்புச் சுவாலை வீசத் தோள்வீசி ஆடுவார். அழகிய திருவிழாக்கள் நடைபெறும் அம்பர் மாநகரில் கோச்செங்கட் சோழ மன்னன் எழுப்பிய திருக்கோயிலில் அப்பெருமானார் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3003.** கழல்வளர் காலினர் சுடர்கை மல்கவோர்<br>சுழல்வளர் குளிர்புனல் சூடி யாடுவர்<br>அழல்வளர் மறையவர் அம்பர்ப் பைம்பொழில்<br>நிழல்வளர் நெடுநகர் இடம தென்பரே. 6<br><br>சோமாசி மாற நாயனார் அவதாரத்தலம். ஒவ்வொரு ஆண்டும் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெறும். | இறைவர் வீரக்கழல்கள் அணிந்த திருவடிகள் உடையவர். சுடர்விட்டு எரியும் நெருப்பைக் கையில் ஏந்தியுள்ளவர். நீர்ச்சுழிகளையுடைய குளிர்ந்த கங்கையைச் சடையில் சூடி ஆடுவர். அப்பெருமானார், வேள்வித்தீ வளர்க்கும் அந்தணர்கள் வாழ்கின்ற அம்பர் மாநகரில் அழகிய சோலைகளையுடைய நிழல்தரும் பெருந்திருக்கோயிலில் வீற்றிருந்தருளு கின்றார். |
| **3004.** இகலுறு சுடரெரி யிலங்க வீசியே<br>பகலிடம் பலிகொளப் பாடி யாடுவர்<br>அகலிட மலிபுகழ் அம்பர் வம்பவிழ்<br>புகலிட நெடுநகர் புகுவர் போலுமே. 7 | இறைவர், வலிமைமிக்க சுடர்விட்டு எரியும் நெருப்பை ஏந்தித் தோள்களை வீசிப் பலி ஏற்கும் பொருட்டுப் பாடி ஆடுவர். அப்பெருமானார் அகன்ற இப்பூவுலகெங்கும் பரவிய மிகு புகழையுடைய அம்பர் மாநகரில், தெய்விக மணம் கமழும் திருக்கோயிலைத் தமது இருப்பிடமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றார். |
| **3005.** எரியன மணிமுடி யிலங்கைக் கோன்தன<br>கரியன தடக்கைகள் அடர்த்த காலினர்<br>அரியவர் வளநகர் அம்பர் இன்பொடு<br>புரியவர் பிரிவிலாப் பூதஞ் சூழவே. 8 | சிவபெருமான், நெருப்புப் போன்று ஒளிவீசும் இரத்தினங்கள் பதிக்கப்பட்ட கிரீடம் அணிந்த இலங்கை மன்னனான இராவணனின் கரிய, பருத்த கைகளை அடர்த்த திருவடிகளை யுடையவர். அருந்தவத்தோர் வாழ்கின்ற வளம் பொருந்திய அம்பர் மாநகரில், தம்மைப் பிரிவில்லாத பூதகணங்கள் புடைசூழ இனிதே வீற்றிருந்தருளுகின்றார். |
| **3006.** வெறிகிளர் மலர்மிசை யவனும் வெந்தொழிற்<br>பொறிகிள ரரவணைப் புல்கு செல்வனும்<br>அறிகில அரியவர் அம்பர்ச் செம்பியர்<br>செறிகழ லிறைசெய்த கோயில் சேர்வரே. 9 | நறுமணம் கமழும் தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், கொல்லும் தன்மையுடைய பாம்பைப் படுக்கையாகக் கொண்டுள்ள செல்வனாகிய திருமாலும், அறிதற்கு அரியரான இறைவர் திருஅம்பர் மாநகரில் கோச்செங்கட்சோழ மன்னன் கட்டிய திருக்கோயிலில் தம் கழலணிந்த திருவடி பொருந்த வீற்றிருந்தருளுகின்றார். |

3007. வழிதலை பறிதலை யவர்கள் கட்டிய
மொழிதலைப் பயனென மொழியல் வம்மினோ
அழிதலை பொருபுனல் அம்பர் மாநகர்
உழிதலை யொழிந்துளர் உமையுந் தாமுமே. 10

இத்தலம் மிகவும் பழமை வாய்ந்தது. "தண்ணீருங் காவிரியே; தார்வேந்தன் சோழனே; மண்ணாவதுஞ் சோழ மண்டலமே – பெண்ணாவாள் அம்பர்ச் சிலம்பி யரவிந்தமே; மலராம்; செம்பொற் சிலம்பே சிலம்பு" தனிப்பாடல்.

மழித்த தலையையும், முடி பறித்த தலையையும் உடைய புத்தர்களும், சமணர்களும் கட்டுரையாகக் கூறியவற்றைப் பயனுடைய வெனக் கொள்ள வேண்டா. கங்கையைச் சடையிலே தாங்கி, அங்குமிங்கும் சுற்றித் திரிதலை ஒழிந்து, அம்பர் மாநகரில் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இறைவனைத் தரிசித்து அருள்பெற வாருங்கள்.

3008. அழகரை யடிகளை அம்பர் மேவிய
நிழல்திகழ் சடைமுடி நீல கண்டரை
உமிழ்திரை யுலகினில் ஓதுவீர் கொண்மின்
தமிழ்கெழு விரகினன் தமிழ்செய் மாலையே. 11

அழகரை, அடிகளை, திருஅம்பர் மாநகரில் எழுந்தருளியிருக்கும் ஒளிர்கின்ற சடைமுடியுடைய நீலகண்டரான சிவபெருமானை, அலைவீசுகின்ற கடலுடைய இவ்வுலகினில், முத்தமிழ் விரகனாகிய ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ்ப் பாமாலையாகிய திருப்பதிகத்தை ஓதிச் சிவகதி பெறுமின்.

## 20. திருப்பூவணம்

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 20

3009. மாதமர் மேனிய னாகி வண்டொடு
போதமர் பொழிலணி பூவ ணத்துறை
வேதனை விரவலர் அரண மூன்றெய்த
நாதனை அடிதொழ நன்மை யாகுமே. 1

பூவணம் – புட்பவனக்காசி என்று கூறப்படும் இத்தலத்தில் என்பானது மலர் அல்லது சிலையாகும் என்பது ஐதீகம்.

உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு, வண்டமர்கின்ற மலர்கள் உள்ள சோலையுடைய அழகிய திருப்பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, துன்பம்தரும் பகையசுரர்களின் மூன்று கோட்டைகளையும் அம்பு எய்து அழித்த நாதனான சிவபெருமானின் திருவடிகளைத் தொழ எல்லா நலன்களும் உண்டாகும்.

3010. வானணி மதிபுல்கு சென்னி வண்டொடு
தேனணி பொழிற்றிருப் பூவ ணத்துறை
ஆனநல் லருமறை அங்கம் ஓதிய
ஞானனை அடிதொழ நன்மை யாகுமே. 2

சிவநெறிப் பற்றுசான்ற பொன்னனையாள் என்னும் அம்மையாரின் பொருட்டு மதுரை சோமசுந்தரக்கடவுள் சித்தர் வடிவமாய் எழுந்தருளி இரசவாதம் செய்து திருமேனி அமைக்குமாறு அருள் செய்த பதி. மூவேந்தர்களோடு சுந்தரர் வழிபட்ட தலம்.

வானில் அழகுறத் திகழும் சந்திரனைத் தொடுமளவு உயர்ந்தோங்கிய, வண்டு நுகரும் தேனையுடைய மலர்களுள்ள அழகிய சோலைகளையுடைய திருப்பூவணத்தில் வீற்றிருந்தருளுகின்ற, நலம்தரும் நான்கு வேதங்களையும், அவற்றின் ஆறு அங்கங்களையும் ஓதியருளிய ஞான வடிவினனான சிவபெருமானின் திருவடிகளைத் தொழ, எல்லா நலன்களும் உண்டாகும்.

| | |
|---|---|
| **3011.** வெந்துயர் உறுபிணி வினைகள் தீர்வதோர்<br>**புந்தியர்** தொழுதெழு பூவ ணத்துறை<br>அந்திவெண் பிறையினோ டாறு சூடிய<br>நந்தியை அடிதொழ நன்மை யாகுமே. 3<br><br>புந்தியர்–தாங்கள் செய்வனவற்றை சிவார்ப்பணமாகச் செய்தலும், தங்கட்கு வருவனவற்றை சிவனருளெனக் கொண்டு அமைந்து நுகர்தலுமாகிய புத்தி பண்ணுபவர். பிரயோக விவேகம். | கொடுந்துன்பம் தரும் நோயும், அதற்குக் காரணமான வினைகளும் சிவனருளாலேயே தீரும் என்பதை நிச்சயித்து, அவனைத் தொழுது போற்றுகின்றவர்கள் வசிக்கும் திருப்பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, மாலைக் காலத்தில் உதிக்கும் வெண் பிறையோடு கங்கையும் சூடிய சிவபெருமானின் திருவடிகளைத் தொழ, எல்லா நலன்களும் உண்டாகும். நந்தி–சிவனுக்கு ஒரு பெயர். |
| **3012.** வாசநன் மலர்மலி மார்பில் வெண்பொடிப்<br>பூசனைப் பொழில்திகழ் பூவ ணத்துறை<br>ஈசனை மலர்புனைந் தேத்து வார்வினை<br>நாசனை யடிதொழ நன்மை யாகுமே. 4<br><br>இத்தலத்திற்கு கந்தசாமிப்புலவர் செய்த தலபுராணமும், உலாவும் உள்ளன. | நறுமணம் கமழும் மலர்மாலைகளை அணிந்துள்ள மார்பில், திருவெண்ணீற்றினைப் பூசி, சோலைகளையுடைய திருப்பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான், மலர்புனைந்து ஏத்தும் அன்பர்களின் வினையைப் போக்குவான். அப்பெருமானின் திருவடிகளைத் தொழ எல்லா நன்மைகளும் உண்டாகும். |
| **3013.** குருந்தொடு மாதவி கோங்கு மல்லிகை<br>பொருந்திய பொழிற்றிருப் பூவ ணத்துறை<br>அருந்திறல் அவுணர்தம் அரண மூன்றெய்த<br>பெருந்தகை அடிதொழப் பீடை யில்லையே. 5 | குருந்து, மாதவி, கோங்கு, மல்லிகை ஆகிய மலர்கள் மலர்ந்துள்ள சோலைகளையுடைய திருப் பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, அரு வலிமையுடைய அசுரர்களின் மூன்று கோட்டைகளையும் அம்பு எய்து அழித்த பெருந்தகையான சிவபெருமானின் திருவடிகளைத் தொழ, துன்பம் யாவும் நீங்கும். |
| **3014.** வெறிகமழ் புன்னைபொன் ஞாழல் விம்மிய<br>பொறியர வணிபொழிற் பூவ ணத்துறை<br>கிறிபடு முடையினன் கேடில் கொள்கையன்<br>நறுமல ரடிதொழ நன்மை யாகுமே. 6 | நறுமணம் கமழும் புன்னை, புலிநகக் கொன்றை முதலான மரங்கள் நிறைந்த அழகிய சோலையையுடைய திருப்பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, கோவண ஆடை தரித்த, அழிதலில்லாத கொள்கைகளை உடைய சிவபெருமானின் நறுமணமிக்க மலர் போன்ற திருவடிகளைத் தொழ, எல்லா நலன்களும் உண்டாகும். |
| **3015.** பறைமல்கு முழவொடு பாட லாடலன்<br>பொறைமல்கு பொழிலணி பூவ ணத்துறை<br>மறைமல்கு பாடலன் மாதொர் கூறினன்<br>அறைமல்கு கழல்தொழ அல்லல் இல்லையே. 7 | பறையின் ஒலியும், முழவின் ஓசையும் ஒலிக்கப் பாடி ஆடுபவன் இறைவன். அமைதி தவழும் சோலையையுடைய அழகிய திருப்பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவன். நால்வேதங்களையும் பாடுபவன். உமாதேவியைத் தன் திருமேனியின் ஒரு கூறாகக் கொண்டவன். அப்பெருமானின் ஒலிக்கின்ற கழலணிந்த திருவடிகளைத் தொழத் துன்பம் சிறிதும் இல்லை. |

| | |
|---|---|
| **3016.** வரைதனை யெடுத்தவல் லரக்கன் நீள்முடி<br>விரல்தனில் அடர்த்தவன் வெள்ளை நீற்றினன்<br>பொருபுனல் புடையணி பூவ ணந்தனைப்<br>பரவிய அடியவர்க் கில்லை பாவமே. **8**<br><br>இப்பதிகத்தின் ஐந்து பாடல்களில் திருஞானசம்பந்தர் நன்மை பற்றியும், பாவம், அல்லல் இன்மை பற்றி நான்கு பாடல்களிலும் பதிவுசெய்கிறார். தம்மை அடைவாருடைய எல்லாப் பாவங்களையும் நீக்கி நன்மை புரிந்து அருளுதல் பற்றி திருப்பூவணேசுவரருக்கு "அடைவார் வினை தீர்ப்பவர்" என்பது திருநாமம். | கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த வலிமை வாய்ந்த அரக்கனான இராவணனின் நீண்ட முடிகளைத் தம் காற்பெருவிரலை ஊன்றி அடர்த்தவர் சிவபெருமான். தம் திருமேனி முழுவதும் திருவெண்ணீற்றினைப் பூசி, ஒலிக்கின்ற கங்கையைத் தம் சடைமுடியின் ஒரு பக்கத்தில் அணிந்து திருப்பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருக்கின்ற அப்பெருமானைத் தொழுது போற்றும் அடியவர்களின் பாவம் நாசமாகும். |
| **3017.** நீர்மல்கு மலருறை வானும் மாலுமாய்ச்<br>சீர்மல்கு திருந்தடி சேர கிற்கிலர்<br>போர்மல்கு மழுவினன் மேய பூவணம்<br>ஏர்மல்கு மலர்புனைந் தேத்தல் இன்பமே. **9** | நீரில் வளரும் தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமனும், திருமாலும், தன்னைத் தொழுபவர்களை நன்னெறிப்படுத்தும் இறைவனின் சிறந்த திருவடிகளைச் சேர்தற்கு இயலாதவராயினர். போர்த் தன்மையுடைய மழுப்படையுடைய சிவபெருமான் வீற்றிருந் தருளுகின்ற திருப்பூவணத்தை அழகிய மலர் கொண்டு போற்றுதல் இன்பம் தரும். |
| **3018.** மண்டைகொண் டுழிதரு மதியில் தேரரும்<br>குண்டருங் குணம்அல பேசுங் கோலத்தர்<br>வண்டமர் வளர்பொழின் மல்கு பூவணம்<br>கண்டவ ரடிதொழு தேத்தல் கன்மமே. **10** | மண்டை என்னும் ஒருவகைப் பாத்திரத்தை ஏந்திப் பிச்சையெடுத்துத் திரிகின்ற புத்தர்களும், சமணர்களும், இறையுண்மையை உணராது கூறும் பயனற்ற பேச்சைக் கேளாது, வண்டுகள் மொய்க்கின்ற வளமுடைய சோலைகள் நிறைந்த திருப்பூவணம் என்னும் திருத்தலத்தைத் தரிசித்து அங்கு வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளைத் தொழுது போற்றுதல் நம் கடமையாகும். |
| **3019.** புண்ணியர் தொழுதெழு பூவ ணத்துறை<br>அண்ணலை யடிதொழு தந்தண் காழியுள்<br>நண்ணிய அருமறை ஞானசம் பந்தன்<br>பண்ணிய தமிழ்சொலப் பறையும் பாவமே. **11** | புண்ணியர்கள் தொழுது போற்றுகின்ற திருப்பூவணம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற தலைவரான சிவபெருமானின் திருவடிகளைத் தொழுது போற்றி, அழகிய, குளிர்ச்சியான சீகாழியில் அவதரித்த அருமறைவல்ல ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ்ப் பாடல்களை ஓதவல்லவர்களின் பாவம் யாவும் நீங்கும். |

## 21. திருக்கருக்குடி

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 21

**3020.** நனவிலும் கனவிலும் நாளும் தன்னொளி
நினைவிலும் எனக்குவந் தெய்து நின்மலன்
கனைகடல் வையகம் தொழுக ருக்குடி
அனலெரி யாடுமெம் அடிகள் காண்மினே. 1

நான் விழித்திருக்கும் பொழுதும், கனவு காணும்பொழுதும், உள்ளொளியாக நெஞ்சில் நின்று நினைவிலும் எனக்குக் காட்சி தரும், இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனாகிய இறைவனாய், ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இப்பூவுலகத்தோர் போற்றும் திருக்கருக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, நெருப்பைக் கையிலேந்தி ஆடுகின்ற எம் தலைவரான சிவபெருமானைத் தரிசித்துப் பயனடைவீர்களாக.

**3021.** வேதியன் விடையுடை விமலன் ஒன்னலர்
மூதெயில் எரியெழ முனிந்த முக்கணன்
காதியல் குழையினன் கருக்கு டியமர்
ஆதியை அடிதொழ அல்ல லில்லையே. 2

வேதத்தை அருளிச் செய்தவனும், வேதப் பொருளாக விளங்குபவனும், இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனும், பகையசுரர்களின் மூன்று மதில்களும் எரிந்து சாம்பலாகுமாறு கோபித்த முக்கண்ணனுமான சிவபெருமான் காதில் குழை அணிந்தவனாய்த் திருக்கருக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான். எப்பொருட்கும் முதல்வனான அப்பெருமானின் திருவடிகளைத் தொழத் துன்பம் இல்லை.

**3022.** மஞ்சுறு பொழில்வள மலிக ருக்குடி
நஞ்சுறு திருமிட றுடைய நாதனார்
அஞ்சுரும் பார்குழல் அரிவை அஞ்சவே
வெஞ்சுரந் தனில்விளை யாடல்என்கொலோ. 3

கருக்குடித் தலத்து இறைவி பெயர் சுரும்பார் குழல் அரிவை.

மேகம் சூழும் சோலைகளையுடைய வளம் மிக்க திருக்கருக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற நஞ்சுண்ட திருக்கழுத்தையுடைய தலைவரான சிவபெருமான், அழகிய வண்டுகள் மொய்க்கும் கூந்தலையுடைய உமாதேவி அஞ்சும்படி கொடிய சுடுகாட்டில் ஆடல் செய்வது என்கொல் ?

**3023.** ஊனுடைப் பிறவியை அறுக்க உன்னுவீர்
கானிடை யாடலான் பயில்க ருக்குடிக்
கோனுயர் கோயிலை வணங்கி வைகலும்
வானவர் தொழுகழல் வாழ்த்தி வாழ்மினே. 4

வினைப்பயனை அனுபவிக்க உடம்பெடுத்த இப்பிறவியை ஒழிக்க நினைக்கும் மாந்தரீர்! சுடுகாட்டில் திருநடனம் செய்யும் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கருக்குடி என்னும் திருத்தலத்திலுள்ள உயர்ந்த கோயிலை வணங்கியும், நாள்தோறும் வானவர்கள் தொழுகின்ற அப்பெருமானின் திருவடிகளை வாழ்த்தியும் வாழ்வீர்களாக!

| | | |
|---|---|---|
| **3024.** | சூடுவர் சடையிடைக் கங்கை நங்கையைக்<br>கூடுவர் உலகிடை ஐயங் கொண்டொலி<br>பாடுவர் இசைபறை கொட்ட நட்டிருள்<br>ஆடுவர் கருக்குடி அண்ணல் வண்ணமே. 5 | இறைவர் சடைமுடியில் கங்கையைச் சூடி உள்ளார். தம் திருமேனியில் ஒரு பாகமாக உமாதேவியை வைத்துள்ளார். இவ்வுலகில் பிச்சை ஏற்கும் பொழுது இசையோடு பாடுவார். பறை கொட்ட நள்ளிருளில் நடனம் ஆடுவார். இது திருக்கருக்குடியில் வீற்றிருந்தருளும் தலைவரான சிவபெருமானின் அருள் தன்மையாகும். |
| **3025.** | இன்புடை யாரிசை வீணை பூணரா<br>என்புடை யாரெழின் மேனி மேலெரி<br>முன்புடை யார்முதல் ஏத்தும் அன்பருக்<br>கன்புடை யார்கருக் குடியெம் அண்ணலே. 6 | திருக்கருக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் தலைவரான சிவபெருமான் வீணையை இசைத்துப் பாடுவதில் மகிழ்பவர். தம்முடைய அழகிய திருமேனியில் பாம்பையும், எலும்பையும் ஆபரணமாக அணிந்துள்ளவர். எரிகின்ற நெருப்பைத் திருக்கரத்தில் ஏந்தியுள்ளவர். யாவற்றுக்கும் மூலப் பொருளாகிய, முதற்பொருளாக விளங்குபவர். அன்பர்களிடத்து அன்புடையவர். |
| **3026.** | காலமும் ஞாயிறுந் தீயும் ஆயவர்<br>கோலமும் முடியர வணிந்த கொள்கையர்<br>சீலமும் உடையவர் திருக்க ருக்குடிச்<br>சாலவும் இனிதவ ருடைய தன்மையே. 7 | சிவபெருமான் கால தத்துவமாகவும், அதனைக் கடந்தும் விளங்குபவர். ஞாயிறு முதலிய சுடராக ஒளிர்பவர். நெருப்பு முதலிய பஞ்ச பூதங்களானவர். தம் சடைமுடியில் பாம்பணிந்தவர். சிறந்த புகழை உடையவர். திருக்கருக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற அப்பெருமானின் தன்மை சாலவும் இனிதாகும். |
| **3027.** | எறிகடல் புடைதழு விலங்கை மன்னனை<br>முறிபட வரையிடை யடர்த்த மூர்த்தியார்<br>கறைபடு பொழின்மதி தவழ்க ருக்குடி<br>அறிவொடு தொழுமவர் ஆள்வர் நன்மையே. 8 | அலைவீசுகின்ற கடலையுடைய இலங்கை மன்னனான இராவணனை நிலை கெடும்படி மலையிடையில் வைத்து அடர்த்த சிவமூர்த்தியாகிய இறைவர், மரங்களின் அடர்த்தியால் இருண்ட சோலைகளில் சந்திரன் தவழும் திருக்கருக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவராய், தம்மை ஞானத்தால் தொழும் அடியவர்கட்கு நன்மையைத் தந்தருளி ஆட்சி செய்கின்றார். |
| **3028.** | பூமனுந் திசைமுகன் றானும் பொற்பமர்<br>வாமனன் அறிகிலா வண்ண மோங்கெரி<br>ஆமென வுயர்ந்தவன் அணிக ருக்குடி<br>நாமன னினில்வர நினைதல் நன்மையே. 9 | தாமரைப் பூவில் வாழ்கின்ற பிரமனும், அழகிய வாமனாவதாரம் எடுத்த திருமாலும் அறிய முடியா வண்ணம், ஓங்கிய நெருப்பு மலையாய் உயர்ந்து நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கருக்குடி என்னும் திருத்தலத்தை நாம் மனத்தால் நினைந்து வழிபட நன்மையாகும். |

| | | |
|---|---|---|
| **3029.** சாக்கியர் சமண்படு கையர் பொய்ம்மொழி<br>ஆக்கிய வுரைகொளேல் அருந்தி ருந்நமக்<br>காக்கிய அரனுறை அணிக ருக்குடிப்<br>பூக்கமழ் கோயிலே புடைபட் டுய்ம்மினே. | 10 | புத்தரும், சமணர்களுமான வஞ்சகர் கூறும் பொய்ம்மொழிகளை உரையாகக் கொள்ள வேண்டா. பெறுதற்கரிய சைவ சமயத்தில் நம்மைப் பிறக்குமாறு செய்த சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற அழகிய திருக்கருக்குடி என்னும் திருத்தலத்திலுள்ள பூமணம் கமழும் திருக்கோயிலைச் சார்ந்து உய்தி அடையுங்கள். |
| **3030.** கானலில் விரைமலர் விம்மு காழியான்<br>வானவன் கருக்குடி மைந்தன் றன்னொளி<br>ஆனமெய்ஞ் ஞானசம் பந்தன் சொல்லிய<br>ஊனமில் மொழிவலார்க் குயரு மின்பமே. | 11 | கடற்கரைச் சோலைகளில் நறுமணம் கமழும் மலர்கள் நிறைந்த சீகாழியில் அவதரித்த, வானவர் தொழுதெழும் திருக்கருக்குடி என்னும் திருத்தலத்திலுள்ள சிவனொளியை மெய்ஞ்ஞான சம்பந்தன் பாடி அருளிய குற்றமில்லாத இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கட்குப் பேரின்பம் மிகும். |

## 22. பொது ( பஞ்சாக்கரத் திருப்பதிகம் )

பண் : காந்தார பஞ்சமம் — பதிக எண் : 22

| | | |
|---|---|---|
| **3031.** துஞ்சலும் துஞ்சலி லாத போழ்தினும்<br>நெஞ்சகம் நைந்து நினைமின் நாள்தொறும்<br>வஞ்சக மற்றடி வாழ்த்த வந்தகூற்<br>றஞ்சவு தைத்தன அஞ்செ ழுத்துமே. | 1 | தூங்கும்பொழுதும், விழித்திருக்கும் பொழுதும், மனம் கசிந்து உருக நாள்தோறும் திருஐந்தெழுத்தை நினைத்துப் போற்றுங்கள். பல வழிகளில் திரிந்து செல்லும் தன்மையுடைய மனத்தை அவ்வாறு செல்லவிடாமல் தடுத்து ஒருமுகப்படுத்தி இறைவனையே நினைத்து அவன் திருவடிகளை வாழ்த்திப் போற்றியவர் மார்க்கண்டேயர். அவருக்கு விதிக்கப்பட்ட வாழ்நாள் இறுதியில் அவரது உயிரைக் கவர வந்த கூற்றுவனை உதைத்து அழித்தது திருஐந்தெழுத்தே. |
| **3032.** மந்திர நான்மறை யாகி வானவர்<br>சிந்தையுள் நின்றவர் தம்மை யாள்வன<br>செந்தழ லோம்பிய செம்மை வேதியர்க்<br>கந்தியுள் மந்திரம் அஞ்செ ழுத்துமே. | 2 | மந்திரங்களாலும், நான்கு வேதங்களாலும் ஆகித் தேவர்களுடைய சிந்தையினுள்ளும் நின்று அவர்களை ஆட்கொண்டு நன்னெறி பயப்பது திருஐந்தெழுத்தே ஆகும். செந்நிற அழலோம்பிச் செம்மை நெறியில் நிற்கும் வேதியர்க்கும் காலை, நண்பகல், மாலை என்ற மூன்று சந்தியா காலங்களிலும் செபிக்க வேண்டிய மந்திரம் திருஐந்தெழுத்தேயாகும். |

| | |
|---|---|
| **3033.** ஊனில் உயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்<br>ஞான விளக்கினை யேற்றி நன்புலத்<br>தேனை வழிதிறந் தேத்து வார்க்கிடர்<br>ஆன கெடுப்பன அஞ்செ ழுத்துமே. **3** | உடம்பில் பிராணாயாமத்தால் உயிர்ப்புச் சக்தியை ஒடுக்கி, ஞானவிளக்கம் பெறச் செய்து, அறிவைப் பெறும் வாயில்களால் நல்ல மெய்யறிவை நாடி இறைவனைப் போற்றுவார்கட்கு அறியாமையால் வரும் துன்பங்களைக் கெடுப்பன திருஐந்தெழுத்துக்களே. |
| **3034.** நல்லவர் தீயர் எனாது நச்சினர்<br>செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ<br>கொல்ல நமன்றமர் கொண்டு போமிடத்<br>தல்லல் கெடுப்பன அஞ்செ ழுத்துமே. **4** | புண்ணியர், பாவிகள் என்ற பாகுபாடு இன்றி விரும்பிச் செபிப்பவர்கள் யாவரேயாயினும் அவர்களுடைய மலங்களை நீக்கிச் சிவமுத்தி காட்டும் ஆற்றலுடையன திருஐந் தெழுத்தாகும். எமதூதர்கள் வந்து உயிரைக் கொண்டு செல்லும் காலத்தும், மரணத் தறுவாயில் ஏற்படக் கூடிய துன்பத்தைப் போக்குவனவும் திருஐந்தெழுத்துக்களாகும். |
| **3035.** கொங்கலர் வன்மதன் வாளி யைந்தகத்<br>தங்குள பூதமும் அஞ்ச ஐம்பொழில்<br>தங்கர வின்படம் அஞ்சுந் தம்முடை<br>அங்கையில் ஐவிரல் அஞ்செ ழுத்துமே. **5** | வலிய மன்மதனின் அம்பானது தேன் துளிர்க்கும் தாமரை, அசோகு, மா, முல்லை, கருங்குவளை என்ற ஐந்து மலர்களால் ஆனதாகும். இவ்வுலகிலுள்ள பூதங்கள் நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐந்தாகும். சோலைகள் அரிசந்தனம், கற்பகம், சந்தானம், பாரிசாதம், மந்தாரம் என ஐந்தாகும். பாம்பின் படம் ஐந்து ஆகும். செபிப்போருடைய கைவிரல்கள் ஐந்தாகும். இவ்வாறு ஐவகையாகக் காணப்படும் யாவற்றுக்கும் ஒப்ப, மந்திரமும் திருஐந்தெழுத்தேயாகும். |
| **3036.** தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தினும்<br>வெம்மை நரகம் விளைந்த போழ்தினும்<br>இம்மை வினையடர்த் தெய்தும் போழ்தினும்<br>அம்மையி னுந்துணை அஞ்செ ழுத்துமே. **6** | தும்மல், இருமல் தொடர்ந்து வந்த பொழுதும், கொடிய நரகத் துன்பத்தை அனுபவிக்க நேரும் பொழுதும், முற்பிறப்புக்களில் செய்த வினை இப்பிறவியில் வந்து வருத்தும் பொழுதும், இப்பிறவியில் நாள்தோறும் ஓதிவந்ததன் பயனால் மறுபிறவியில் வந்து துணையாவது திருஐந்தெழுத்தேயாகும். |
| **3037.** வீடு பிறப்பை அறுத்து மெச்சினர்<br>பீடை கெடுப்பன பின்னை நாள்தொறும்<br>மாடு கொடுப்பன மன்னு மாநடம்<br>ஆடிஉ கப்பன அஞ்செ ழுத்துமே. **7** | இறப்பு, பிறப்பு இவற்றை அறுத்து இத்திரு மந்திரத்தைப் பாராட்டிச் செபிப்பவர்களின் துன்பங்களை நீக்குவன. தினந்தோறும் செல்வங்கள் யாவும் கொடுப்பன. நிலைபெற்ற நடனத்தையாடும் சிவபெருமான் மகிழ்வன திருஐந்தெழுத்தேயாகும். |

| | |
|---|---|
| **3038.** வண்டம ரோதி மடந்தை பேணின<br>பண்டை யிராவணன் பாடி உய்ந்தன<br>தொண்டர்கள் கொண்டு துதித்த பின்னவர்க்<br>கண்டம் அளிப்பன அஞ்செ முத்துமே. **8** | வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவியால் செபிக்கப்படும் சிறப்புடையது திருவைந்தெழுத்தாகும். முற்காலத்தில் இராவணன் திருவைந்தெழுத்து ஓதி உய்ந்தான். அடியார்கள் தங்கள் கடமையாகக் கொண்டு, செபித்த அளவில் அவர்களுக்கு அண்டங்களையெல்லாம் அரசாளக் கொடுப்பன இவ்ஐந்தெழுத்தாகும். |
| **3039.** கார்வணன் நான்முகன் காணு தற்கொணாச்<br>சீர்வணச் சேவடி செவ்வி நாள்தொறும்<br>பேர்வணம் பேசிப் பிதற்றும் பித்தர்கட்<br>கார்வணம் ஆவன அஞ்செ முத்துமே. **9** | திருமாலும், பிரமனும் காணவொண்ணாத சிறப்புடைய திருவடிகளின் பெருமையை நாள்தோறும் பலமுறை பேசிப் போற்றும் பக்தர்கட்கு ஆர்வமாக விளங்குவது திருஐந்தெழுத்தாகும். |
| **3040.** புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்<br>சித்தத் தவர்கள் தெளிந்து தேறின<br>வித்தக நீறணி வார்வி னைப்பகைக்<br>கத்திரம் ஆவன அஞ்செ முத்துமே. **10** | புத்தர்களும், சமணர்களும் கூறும் பொய் வார்த்தைகளை மனத்திற் கொள்ளாத தெளிந்த சித்தத்தவர்களால் உறுதியுடன் ஓதப்படுவது திருஐந்தெழுத்தாகும். சகல சக்திகளு முடைய திருநீற்றை அணிபவர்களுடன் போர்புரிய வரும் பகைவர்களை எதிர்த்து அம்புபோல் பாய்ந்து அழிக்கவல்லன திருஐந்தெழுத்தேயாகும். |
| **3041.** நற்றமிழ் ஞானசம் பந்தன் நான்மறை<br>கற்றவன் காழியர் மன்னன் உன்னிய<br>அற்றமில் மாலையீ ரைந்தும் அஞ்செழுத்<br>துற்றன வல்லவர் உம்ப ராவரே. **11** | நன்னெறி கூட்டுவிக்கும் தமிழ் பரப்பும், ஞானசம்பந்தன், நான்கு வேதங்களையும் கற்று வல்லவனாய்ச் சீகாழி மக்கள் தலைவனாய் மனத்தால் தியானித்துப் பாடிய, கேடுகள் வாராமல் தடுக்கும் திருஐந்தெழுத்தின் பெருமைகளை எடுத்துரைக்கும் இம்மாலையின் பத்துப் பாடல்களையும் ஓதவல்லவர்கள் தேவர்களாவார்கள். |

## 23. திருவிற்கோலம்

**பண் : காந்தார பஞ்சமம்** **பதிக எண் : 23**

| | |
|---|---|
| **3042.** உருவினார் உமையொடும் ஒன்றி நின்றதோர்<br>திருவினான் வளர்சடைத் திங்கள் கங்கையான்<br>வெருவிவா னவர்தொழ வெகுண்டு நோக்கிய<br>செருவினான் உறைவிடம் திருவிற் கோலமே. **1** | அழகே உருவான உமாதேவியோடு ஒன்றிநின்ற செல்வரான சிவபெருமான் தம் சடைமுடியில் திங்களும், கங்கையும் சூடியவர். வானவர்கள் அஞ்சித் தொழுது போற்றுமாறு, வெகுண்டெழுந்து போர்க்கோலம் பூண்டு வில்லேந்தி, அப்பெருமான் வீற்றிருந்தருளுகிற இடம் திருவிற்கோலம் ஆகும். |

திரிபுர தகன காலத்தில் இறைவன் வில்லை ஏந்தி நின்ற கோலம் – விற்கோலம்.

| | |
|---|---|
| **3043.** சிற்றிடை யுமையொரு பங்க னங்கையில்<br>உற்றதோர் எரியினன் ஒரு சரத்தினால்<br>வெற்றிகொள் அவுணர்கள் புரங்கள் வெந்தறச்<br>செற்றவன் உறைவிடம் திருவிற் கோலமே. 2 | சிறிய இடையையுடைய உமாதேவியைத் தம் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டு, அழகிய கையில் நெருப்பு ஏந்தி விளங்கும் சிவபெருமான், ஓர் அம்பால் அசுரர்களின் மூன்று புரங்களும் வெந்தழியுமாறு போர்செய்து வெற்றி கொண்டவர். அப்பெருமான் வீற்றிருந்தருளுகின்ற இடம் திருவிற்கோலம் என்னும் கோயிலாகும். |
| **3044.** **ஐயன்நல் லதிசயன்** அயன்விண் ணோர்தொழும்<br>மையணி கண்டனார் வண்ண வண்ணம்வான்<br>பையர வல்குலாள் பாகம் ஆகவும்<br>செய்யவன் உறைவிடம் திருவிற் கோலமே. 3<br><br>அதிக மழை பெய்வதாயிருந்தால் வெண்மை நிறமும், போர் ஏற்படுவதாயிருந்தால் சிவப்பு நிறமும் இறைவன் திருமேனியில் ஏற்படும் அதிசயம். | இறைவர் யாவற்றுக்கும் தலைவர். பல பல வேடம் கொள்ளும் அதிசயர். பிரமனும், மற்றுமுள்ள விண்ணோர்களும் தொழுகின்ற மை போன்ற இருண்ட கண்டத்தர். நல்ல வண்ணமுடைய, பாம்பின் படம் போன்ற அல்குலையுடைய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு செம்மேனியராய் அவர் வீற்றிருந்தருளும் இடம் திருவிற்கோலம் ஆகும். |
| **3045.** **விதைத்தவன் முனிவருக் கறமுன்** காலனை<br>உதைத்தவன் உயிரிழந் துருண்டு வீழ்தரப்<br>புதைத்தவன் நெடுநகர்ப் புரங்கள் மூன்றையும்<br>சிதைத்தவன் உறைவிடம் திருவிற் கோலமே. 4 | இறைவன் சனகாதி முனிவர்கட்கு அறக்கருத்துக்களை நன்கு பதியும்படி உபதேசித்தவன். மார்க்கண்டேயனின் உயிரைக் கவரவந்த காலனைக் காலால் உதைத்து உருண்டு விழும்படி செய்தவன். திரிபுரங்கள் மூன்றையும் எரித்துச் சாம்பலாகுமாறு சிதைத்தவன். அப்பெருமான் வீற்றிருந்தருளுகின்ற இடம் திருவிற்கோலம் என்பதாம். |
| **3046.** முந்தினான் மூவருள் முதல்வன் ஆயினான்<br>கொந்துலா மலர்ப்பொழிற் கூக மேவினான்<br>அந்திவான் பிறையினான் அடியர் மேல்வினை<br>சிந்துவான் உறைவிடம் திருவிற் கோலமே. 5 | இறைவன் எல்லாப் பொருள்கட்கும் முற்பட்டவன். மும்மூர்த்திகளுக்குள் தலைவனானவன். கொத்தாகப் பூக்கும் மலர்கள் நிறைந்த சோலைகளையுடைய கூகம் என்னும் ஊரில் வீற்றிருப்பவன். மாலையில் வானில் தோன்றும் பிறைச் சந்திரனைச் சூடியவன். அடியவர்களைப் பற்றியுள்ள வினைகள் நீங்கும்படிச் செய்பவன். அப்பெருமான் வீற்றிருந்தருளுமிடம் திருவிற்கோலம் ஆகும். |

| | |
|---|---|
| **3047.** தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம்<br>வகுத்தவன் வளர்பொழிற் கூக மேவினான்<br>மிகுத்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்<br>செகுத்தவன் உறைவிடம் திருவிற் கோலமே. 6 | இறைவன் அரிய நான்கு வேதங்களையும் அவற்றின் ஆறங்கங்களையும் தொகுத்தவன். சிவாகமங்களை அருளிச் செய்தவன். வளமையான சோலைகளையுடைய கூகம் என்னும் ஊரில் வீற்றிருக்கும் அவன், தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன். செருக்குற்று மிகுந்த கொடுமைகளைச் செய்த அசுரர்களின் முப்புரங்களை வெந்தழியும்படி செய்தவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவிற்கோலம் ஆகும். |
| **3048.** விரித்தவன் அருமறை விரிச டைவெள்ளம்<br>தரித்தவன் தரியலர் புரங்கள் ஆசற<br>எரித்தவன் இலங்கையர் கோன்இ டர்படச்<br>சிரித்தவன் உறைவிடம் திருவிற் கோலமே. 7<br>________________<br>xxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxxx 8 | அரும்பொருளுரைக்கும் வேதங்களை இறைவன் விரித்து அருளியவன். விரிந்து சென்ற கங்கையைச் சடைமுடியில் தாங்கியவன். பகையசுரர்களின் முப்புரங்கள் அற்றொழியும்படி எரித்தவன். இலங்கை மன்னனான இராவணன் கயிலையின் கீழ்த் துன்புறும்படி செய்து, பின் அருள் புரிந்த விளையாடல் செய்தவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவிற்கோலம் ஆகும். |
| **3049.** திரிதரு புரம்எரி செய்த சேவகன்<br>வரியர வொடுமதி சடையில் வைத்தவன்<br>அரியொடு பிரமன தாற்ற லால் உருத்<br>தெரியலன் உறைவிடம் திருவிற் கோலமே. 9 | இறைவன் வானத்திலே பறந்து திரிந்து தேவர்கட்குத் தீங்குகள் செய்த அசுரர்களின் முப்புரங்களை எரித்தவன். வரிகளையுடைய பாம்பையும், சந்திரனையும் சடையிலே அணிந்தவன். திருமாலும், பிரமனும் தமது ஆற்றலைப் பெரிதாகக் கொண்டு முனைந்ததால் காண்பதற்கு அரியவனானவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது திருவிற்கோலம் ஆகும். |
| **3050.** சீர்மையில் சமணொடு சீவ ரக்கையர்<br>நீர்மைஇல் உரைகள்கொள் ளாத நேசர்க்குப்<br>பார்மலி பெருஞ்செல்வம் பரிந்து நல்கிடும்<br>சீர்மையி னான்இடம் திருவிற் கோலமே. 10 | இறையுண்மையை உணரும் தன்மையில்லாத சமணர்களும், புத்தர்களும் கூறும் உரைகளைக் கொள்ளாது, இறை நம்பிக்கையுடன் அவன்மீது பக்தி செலுத்துபவர்கட்கு உலகில் பெருஞ் செல்வத்தைப் பரிவுடன் இறைவன் தருவான். அத்தகைய மேன்மையுடைய பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவிற்கோலம் ஆகும். |

| | |
|---|---|
| 3051. கோடல்வெண் பிறையனைக் கூக மேவிய<br>சேடன செழுமதில் திருவிற் கோலத்தை<br>நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன<br>பாடல்வல் லார்களுக் கில்லை பாவமே. 11 | வளைந்த வெண்ணிறப் பிறைச்சந்திரனைச் சடையில் சூடி, கூகம் என்னும் ஊரில், அழகிய, வளமையான மதில்களையுடைய திருவிற் கோலம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை நினைத்துத் தமிழ் ஞானசம்பந்தன் உரைத்த பாடல்களைப் பாட வல்லவர்கட்குப் பாவம் இல்லை. |

## 2. கொல்லி

கொல்லும் பாம்பின் இயல்பினைக் கொண்டதே கொல்லிப் பண். இது மருதயாழின் முதல் திறமாகிய நவிர் என்னும் திறத்தின் புறநிலைப் பண்ணாக 103 பண் வரிசையில் 70–ஆம் எண் பெறுகிறது. மூவரும் இதைப் பாடியுள்ளனர். சம்பந்தர் 3:24–41; அப்பர் 4:1, 22; சுந்தரர் 31–37 ஆக 27 பதிகங்கள். (சம்பந்தர்) மண்ணினல்ல வண்ணம், சந்தமார் அகிலொடு சாதிதேக்கு, மானினேர் விழி மாதராய், (அப்பர்) கூற்றாயினவாறு விலக்ககலீர் என்ற முதல் பதிகம், (சுந்தரர்) தம்மையே புகழ்ந்திச்சை பேசினும் முதலாயின இப்பண்ணில் அமைந்தவை. கொல்லிக்குரியவை 4 கட்டளைகள். இவையன்றி, அப்பர் தேவாரம் 4–ஆம் திருமுறை, பண்களை அடுத்த முதல் திருநேரிசைப் பதிகம், செஞ்சடைக்கற்றை முற்றத்திளநிலா என்ற பதிகம் கொல்லி என்றே ஏடுகளில் உள்ளது. அதைப் பின்பற்றி மற்றெல்லாத் திருநேரிசைப் பதிகங்களும் (22–79) கொல்லிக்குரியனவாகக் கொள்ளப்படுகின்றன.

இன்று கொல்லிக்குரிய இராகம் நவரோசு என்று கருதப்படுகிறது. சாஸ்திரி, தியாகைய தீட்சிதர் ஆகிய மூவர் நவரோசு இராகத்தைப் பாடவில்லை. ஆகவே கொல்லியே இராகம் (கொல்லி இராகம்) என்ற கருத்தும் உண்டு. நவசந்தியில் இது ரிஷப சந்திக்குரியது. மற்றபடி இது கம்பீரமும், மிருதுவான கருணா ரசமும், சாந்தமும் பொருந்தியது என்பர். 29–ஆவது மேளம் தீரசங்கராபரணத்தில் ஜன்னியம்.

அப்பர் சுவாமிகள் தமது திருக்குறுக்கை வீரட்டப் பதிகத்தில் திருநேரிசைப் பண்ணைக் குறிப்பிடுகிறார்.

கல்லினால் எறிந்துகஞ்சி தாமுணும் சாக்கியனார்
நெல்லினார் சோறுணாமே நீள்விசும் பாளவைத்தார்
எல்லியாங் கெரிகையேந்தி எழில்திகழ் நட்டமாடிக்
கொல்லியாம் பண்ணுகந்தார் குறுக்கை வீரட்டனாரே. (5:49:6)

பாம்பினிடத்தில் கொல்லும் விடம் மிகுந்திருக்கும். பார்ப்பதற்கு அழகாக இருக்கும். பூத்தென்று சீறும். வண்டுகளை நெருங்கிப் பிடித்து அவற்றைத் தன் வயிற்றின்கண் அகப்படுத்திக்கொள்ளும். இத்தகைய இயல்புகள் சீர்களில் அமைந்துள்ள இந்தப்பண் கொல்லி என்று பெயர் பெறுகிறது.

### கொல்லிப் பண்ணின் இலக்கணம்

கொல்லும் விளங்கனி கூர்ந்தும் விளமே
விளங்க நின்றும் மிகவும் பூத்தெனச்
சீறிக் கௌவணஞ் சென்று மாவெனும்
வண்டுள் ளாக மறைவு பெறவும்
நின்றதாற் கொல்லிப் பண்ணென்று வந்தது.

கூவிளங்கனிச்சீரும், கருவிளங்கனிச்சீரும் மிகுந்திருக்கும். கூவிளம், கருவிளம் ஆகிய சீர் விரவி வரும். பாம்புசீறி வண்டினை உண்ணவருவது போல், பூச்சீர், மாச்சீரை நெருங்கி தன்னகப்படுத்திக் கொள்ளும் இயல்புடையது கொல்லிப் பண்ணாம்.

## 24. திருக்கழுமலம்

பண் : கொல்லி

பதிக எண் : 24

பதிகம் பாடிய சூழல்

திருஞானசம்பந்தர் பரசமயம் நிராகரித்துச் சைவத் தாபனஞ் செய்துகொண்டிருக்கும் நாட்களில், சிவபாதவிருதயர் தம் மகவைக் காண மதுரை வருகிறார். பிள்ளையார் வரவேற்க, தாதையார் அவரைத் தொழுதபோது, பிள்ளையார் அந்தத் தாதையாரது சார்பு பற்றித் திருத்தோணியிலிருக்கும் தாதையாரையும், தாயாரையும் நினைந்து தொழுதனர். தாதையார் தொழுதபோது, உலகத் தாதையார் என்ற நிலையில், பிள்ளையார் தொழவில்லை. அது அவருடைய பவ பாசமற்ற நிலை. அவர் தாதையாரிடம் தோணியப்பர் பற்றி நலம் விசாரித்த கருத்தை சேக்கிழார் சுவாமிகள் கீழ்க்கண்ட பாடல்களில் விளக்குகிறார்.

இருந்தவத்தோ ரவர்முன்னே யிணைமலர்க்கை குவித்தருளி
"யருந்தவத்தீ" ரெனையறியாப் பருவத்தே யெடுத்தாண்ட
பெருந்தகையெம் பெருமாட்டி யுடனிருந்ததே ? யென்று
பொருந்து புகழ்ப் புகலியின் மேற் றிருப்பதிகம் போற்றிசைத்தார்

"மண்ணினல்ல" வென்றெடுத்து மனத்தெழுந்த பெருமகிழ்ச்சி
யுண்ணிறைந்த காதலினாற் கண்ணருவி பாய்ந்தொழுக
வண்ணலார் தமைவினவித் திருப்பதிக மருள் செய்தார்
தண்ணறும் பூஞ்செங்கமலத் தாரணிந்த தமிழ் விரகர்

கழுமல முதுபதிக் கடவுளைப் பற்றி மதுரையில் இருந்தபடியே பாடிய பதிகம்.

3052. மண்ணின்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணின்நல் லகதிக்கி யாதுமோர் குறைவிலை
கண்ணினல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை
யிருந்ததே. 1

உயிர்கள் இப்பூவுலகில் வளமோடு இன்பவாழ்வு வாழலாம். தினந்தோறும் இறைவனை நினைத்து வழிபட யாதொரு குறையுமிலாத முக்தியின்பமும் பெறலாம். இத்தகைய பேற்றினை அளிக்கும் பொருட்டே கண்ணுக்கினிய நல்ல வளத்தையுடைய கழுமலம் என்னும் ஊரில் பெண்ணின் நல்லாளாகிய உமாதேவியோடு பெருந்தகை யாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான்.

---

பெருந்தகை – தான் அறியாதிருந்தும் அவர் நினைந்து, எடுத்தாண்டமையினைக் குறிக்க, "பெருந்தகை" என்றார். பதிகத்தின் அனைத்துப் பாடல்களிலும் உமையுடன் அமர்ந்த பெருந்தகையைப்பாடி மகிழ்கின்றார்.

| | |
|---|---|
| **3053.** போதையார் பொற்கிண்ணத் தடிசில்பொல்லாதெனத்<br>தாதையார் முனிவுறத் தான்எனை யாண்டவன்<br>காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்<br>பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே. **2**<br><br>திருஞானசம்பந்தரின் அருள் நிகழ்வுகளுக்கு அகச் சான்றான பாடல். | பொற்கிண்ணத்தில் ஞானம் பெருகும் அடிசிலை இறைவனின் ஆணைப்படி உமாதேவியார் திருஞானசம்பந்தப் பெருமானுக்கு ஊட்ட, பால் அறாவாயராக விளங்கிய அவரைப் பார்த்து "யார் தந்த அடிசிலை உண்டனை?" என்று தந்தையார் கோபித்து வினவ இறைவர் தம் திருக்காட்சியினை நல்கி என்னை ஆட்கொண்டார். அத்தகைய பெருமையுடைய சிவபெருமான் காதிற் குழையோடும் பேதையாகிய உமாதேவியோடும் கழுமலம் என்னும் வளநகரில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3054.** தொண்டணை செய்தொழில் துயரறுத் துய்யலாம்<br>வண்டணை கொன்றையான் மதுமலர்ச் சடைமுடிக்<br>கண்டுணை நெற்றியான் கழுமல வளநகர்ப்<br>பெண்டுணை யாகவோர் பெருந்தகை யிருந்ததே. **3** | தொன்றுதொட்டு உயிர்களைப் பற்றி வருகின்ற வினையால் உண்டாகும் துன்பத்தை நீக்கி உய்விக்கும் பொருட்டு, வண்டுகள் மொய்க்கின்ற தேனையுடைய கொன்றை மலர்களைச் சடைமுடியில் அணிந்தும், நெற்றியில் ஒரு கண் கொண்டும், கழுமலம் என்னும் வளநகரில் உமாதேவியை உடனாகக் கொண்டும் பெருந்தகையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். |
| **3055.** அயர்வுளோம் என்றுநீ அசைவொழி நெஞ்சமே<br>நியர்வளை முன்கையாள் நேரிழை யவளொடும்<br>கயல்வயல் குதிகொளுங் கழுமல வளநகர்ப்<br>பெயர்பல துதிசெயப் பெருந்தகை யிருந்ததே. **4** | நெஞ்சமே! வினையால் இத்துன்பம் வந்தது என்று எண்ணித் தளர்ச்சியுற்றுச் சோம்பியிருத்தலை ஒழிப்பாயாக. (இறைவனை வழிபட்டு இத்துன்பத்திலிருந்து விடுபட வேண்டும் என்பது குறிப்பு). ஒளிமிக்க வளையல்கள் முன்கைகளில் விளங்க, சிறந்த ஆபரணங்களை அணிந்த உமாதேவியோடு, கயல்மீன்கள் அருகிலுள்ள வயல்களில் குதிக்குமாறு நீர்வளமும், நிலவளமுமிக்க திருக்கழுமலம் என்னும் வளநகரில் பல பெயர்கள் கூறிப் போற்றும்படி பெருந்தகையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். |

| | |
|---|---|
| **3056.** அடைவிலோம் என்றுநீ அயர்வொழி நெஞ்சமே<br>விடையமர் கொடியினான் விண்ணவர்<br>தொழுதெழும்<br>கடையுயர் மாடமார் கழுமல வளநகர்ப்<br>பெடைநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே.<br>**5** | நெஞ்சமே! நமக்குப் புகலிடம் இல்லையே என்று தளர்ச்சி அடைவதை ஒழிப்பாயாக! இடபக் கொடியினைக் கொண்டு விண்ணவர்களும் தொழுது போற்றும்படி, கடைவாயில்கள் உயர்ந்த மாளிகைகளையுடைய கழுமலம் என்னும் வளநகரில் பெண் அன்னம் போன்ற நடையையுடைய உமாதேவியோடு பெருந்தகையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். |
| **3057.** மற்றொரு பற்றிலை நெஞ்சமே மறைபல<br>கற்றநல் வேதியர் கழுமல வளநகர்ச்<br>சிற்றிடைப் பேரல்குல் திருந்திழை யவளொடும்<br>பெற்றெனை யாளுடைப் பெருந்தகை யிருந்ததே.<br>**6** | நெஞ்சமே! இறைவனைத் தவிர மற்றோர் பற்று எதுவுமில்லை. நான்கு வேதங்களையும் நன்கு கற்று, கற்றதன்படி ஒழுகுகின்ற அந்தணர்கள் வாழ்கின்ற திருக்கழுமலம் என்னும் வளநகரில் சிற்றிடையும், பெரிய அல்குலும் உடைய, அழகிய ஆபரணங்கள் அணிந்த உமாதேவியோடு, என்னை ஆட்கொண்ட பெருந்தகையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3058.** குறைவளை வதுமொழி குறைவொழி நெஞ்சமே<br>நிறைவளை முன்கையாள் நேரிழை யவளொடும்<br>கறைவளர் பொழிலணி கழுமல வளநகர்ப்<br>பிறைவளர் சடைமுடிப் பெருந்தகை யிருந்ததே.<br>**7** | நெஞ்சமே! மனக்குறை கொண்டு மொழியும் சொற்களை விடுவாயாக. நிறைந்த வளையல்களை முன்கையில் அணிந்தவளும், சிறந்த ஆபரணங்களை அணிந்தவளுமான உமாதேவியோடு, இருண்ட சோலைகளையுடைய அழகிய திருக்கழுமலம் என்னும் வளநகரில், பிறைச் சந்திரனைச் சடைமுடியில் சூடிப் பெருந்தகையாராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3059.** அரக்கனார் அருவரை யெடுத்தவன் அலறிட<br>நெருக்கினார் விரலினால் நீடியாழ் பாடவே<br>கருக்குவா ளருள்செய்தான் கழுமல வளநகர்ப்<br>பெருக்குநீ ரவளொடும் பெருந்தகை யிருந்ததே.<br>**8** | பெருமையுடைய கயிலைமலையை எடுத்த அரக்கனான இராவணன் அலறும்படி தம் காற்பெருவிரலை ஊன்றி இறைவர் அம்மலையின்கீழ் அவனை நெருக்கினார். பின் அவன் தன் தவறுணர்ந்து நீண்ட யாழை எடுத்து இன்னிசையோடு பாட, கூர்மையான வாளை அருளினார். திருக்கழுமலம் என்னும் வளநகரில் உயிர்கட்கு மிக்க இன்னருள் செய்யும் உமாதேவியோடு பெருந்தகையாராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |

3060. நெடியவன் பிரமனும் நினைப்பரி தாய்அவர்
அடியொடு முடியறி யாஅழல் உருவினன்
கடிகமழ் பொழில்அணி கழுமல வளநகர்ப்
பிடிநடை யவளொடும் பெருந்தகை யிருந்ததே. 9

நினைந்துருகும் தன்மையில்லாத திருமாலும், பிரமனும் அடிமுடி அறியாவண்ணம் சிவபெருமான் அழலுருவாய் ஓங்கி நின்றனன். நறுமணம் கமழும் சோலைகளை உடைய திருக்கழுமலம் என்னும் வளநகரில் பெண் யானையின் நடைபோன்று விளங்கும் நடையை உடைய உமாதேவியோடு பெருந்தகையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான்.

3061. தாருறு தட்டுடைச் சமணர்சாக் கியர்கள்தம்
ஆருறு சொற்களைந் தடியிணை அடைந்துய்ம்மின்
காருறு பொழில்வளர் கழுமல வளநகர்ப்
பேரறத் தாளொடும் பெருந்தகை யிருந்ததே. 10

மாலை போன்று, பாயை விரும்பி ஆடையாக அணிந்துள்ள சமணர்களும், புத்தர்களும், இறையுண்மையை எடுத்துரைக்காது, தமக்குப் பொருந்தியவாறு கூறுதலால், அவற்றை விடுத்து, இறைவனின் திருவடிகளை வழிபட்டு உய்வீர்களாக. பசுமைவாய்ந்த அழகிய சோலைகள் வளர்ந்துள்ள திருக்கழுமலம் என்னும் வளநகரில் பேரறத்தாளாகிய உமாதேவியோடு பெருந்தகையாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான்.

3062. கருந்தடந் தேன்மல்கு கழுமல வளநகர்ப்
பெருந்தடங் கொங்கையோ டிருந்தஎம் பிரான்றனை
அருந்தமிழ் ஞானசம் பந்தன செந்தமிழ்
விரும்புவா ரவர்கள்போய் விண்ணுல காள்வரே. 11

நீர்வளமும், தேன்வளமும் பெருகிய திருக்கழுமல வளநகரில், மேல்நோக்கி வளைந்த பெரிய கொங்கைகளையுடைய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் எங்கள் தலைவனான சிவபெருமானை, அருந்தமிழ் வல்லவனான ஞானசம்பந்தன் செழுந்தமிழில் அருளிய இத்திருப்பதிகத்தை விரும்பி ஓத வல்லவர்கள் விண்ணுலகை ஆள்வர்.

## 25. திருந்து தேவன்குடி

பண் : கொல்லி | பதிக எண் : 25

3063. மருந்துவேண் டில்இவை மந்திரங் கள்இவை
புரிந்துகேட் கப்படும் புண்ணியங் கள்இவை
திருந்துதே வன்குடித் தேவர்தே வெய்திய
அருந்தவத் தோர்தொழும் அடிகள்வே டங்களே. 1

திருந்துதேவன்குடியில் வீற்றிருக்கும், தேவர்கட்கெல்லாம் தேவனாக விளங்குபவனும், அருந்தவத்தோர்களால் தொழப்படுபவனுமான சிவபெருமானின் திருவேடங்கள் (திருநீறு, உருத்திராக்கம், சடாமுடி) மருந்து வேண்டுபவர்க்கு மருந்தாகவும், மந்திரங்கள் விரும்புவார்கட்கு மந்திரமாகவும், சிவபுண்ணியச் சரிதை கேட்க விரும்புவார் கட்கு அப்புண்ணியப் பயனாகவும் அமையும்.

---

கோயிலைச் சுற்றி ஊரே இல்லை. கோயில் மட்டும் அகழி சூழத் தனியே உள்ளது. மூலவர் ஆலயத்தின் மேலுள்ள விமானமும் கல்லால் ஆனது.

| | |
|---|---|
| **3064.** வீதிபோக் காவன வினையைவீட் டுவ்வன<br>ஓதியோர்க் கப்படாப் பொருளையோர் விப்பன<br>தீதில்தே வன்குடித் தேவர்தே வெய்திய<br>ஆதிஅந் தம்மிலா அடிகள்வே டங்களே. 2<br><br>அபூர்வநாயகி, அருமருந்த நாயகி என்ற இரண்டு அம்மன் ஆலயங்கள் உள்ளன. | தேவர்கட்கெல்லாம் தேவனாக, தீமையில்லாத திருந்து தேவன்குடியில் வீற்றிருக்கும் ஆதியந்தமில்லாச் சிவபெருமானின் சிவ வேடங்கள் கோயிலுக்குச் செல்லும்போது அணியப்பட்டு அழகு தருவன. தீவினைகளைப் போக்குவன. கற்று ஆராய்ந்தறிய முடியாத ஞானநூல்களின் நுண்பொருள்களைத் தெளிவாக உணரும்படி செய்வன. |
| **3065.** மானம்ஆக் குவ்வன மாசுநீக் குவ்வன<br>வானையுள் கச்செலும் வழிகள் காட்டுவ்வன<br>தேனும்வண் டும்மிசை பாடுந்தே வன்குடி<br>ஆனஞ்சா டும்முடி அடிகள்வே டங்களே. 3 | தேன் மணமும், வண்டுகளின் இன்னிசையும் விளங்கும் திருந்துதேவன்குடியில் வீற்றிருக்கும், பசுவிலிருந்து பெறப்படும் பஞ்சகவ்வியங்களால் திருமுழுக்காட்டப்படும் சிவபெருமானின் சிவவேடங்கள், மன்னுயிர்களின் பெருமையை மேம்படச் செய்வன. வினைகட்குக் காரணமான அஞ்ஞானமான மாசினை நீக்குவன. முக்திக்குரிய வழிகளைக் காட்டுவன. |
| **3066.** செவிகளார் விப்பன சிந்தையுட் சேர்வன<br>கவிகள்பா டுவ்வன கண்குளிர் விப்பன<br>புவிகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி<br>அவிகளுய்க் கப்படும் அடிகள்வே டங்களே. 4 | இப்பூமியைச் செழிக்கச் செய்யும் நீர்வளமுடைய திருந்துதேவன்குடியில் வீற்றிருந்து, வேள்வியின் அவிர்ப் பாகத்தை ஏற்று உயிர்களை உய்யச் செய்யும் சிவபெருமானின் திருவேடங்களின் சிறப்புக்கள் கேட்கச் செவிகட்கு இன்பம் தருவன. நினைக்கச் சிந்தையில் சீரிய கருத்துக்களைத் தோற்றுவிப்பன. கவிபாடும் ஆற்றலைத் தருவன. சிவவேடக்காட்சிகள் கண்களைக் குளிர்விப்பன. |
| **3067.** விண்ணுலா வும்நெறி வீடுகாட் டும்நெறி<br>மண்ணுலா வும்நெறி மயக்கந்தீர்க் கும்நெறி<br>தெண்ணிலா வெண்மதி தீண்டுதே வன்குடி<br>அண்ணலா னேறுடை அடிகள்வே டங்களே. 5 | ஒளிரும் சந்திர மண்டலத்தைத் தொடும் திருந்து தேவன்குடியில் இடப வாகனத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானின் திருவேடம், இப்பூவுலக வாழ்விற்கான நன்னெறியைக் காட்டும்; அறியாமையால் 'தான்' என்ற எண்ணம் கொண்ட உயிர்களின் மயக்கம் தீர்க்கும்; சிவலோகம் செல்லும் நெறிகாட்டும்; முக்தி நெறி காட்டும். |

| | | |
|---|---|---|
| **3068.** | பங்கமென் னப்படர் பழிகளென் னப்படா<br>புங்கமென் னப்படர் புகழ்களென் னப்படும்<br>திங்கள்தோ யும்பொழில் தீண்டுதே வன்குடி<br>அங்கம்ஆ றுசொன்ன அடிகள்வே டங்களே. 6 | சந்திரனைத் தொடுமளவு ஓங்கி வளர்ந்துள்ள, நந்தவனச் சோலையையுடைய திருந்துதேவன் குடியில் வேதத்தின் ஆறு அங்கங்களையும் விரித்துச் சொன்ன சிவபெருமானின் திருவேடங்களை நினைப்பூட்டும் வகையில், சிவவேடம் கொள்பவர்களை முன்னர்ப் பழிபாவங்கட்கு ஆளாயினோர் என்று எள்ளற்க. அவர்களது உயர்வினை வாயினால் சொல்ல முடியாத அளவு புகழைத் தருவதாகக் கருதுக. |
| **3069.** | கரைதல்ஒன் றும்மிலை கருதவல் லார்தமக்<br>குரையில்ஊ னம்மிலை உலகினின் மன்னுவர்<br>திரைகள்பொங் கப்புனல் பாயுந்தே வன்குடி<br>அரையில்வெண் கோவணத் தடிகள்வே டங்களே. 7 | அலைகள் வீசுகின்ற ஆறுபாயும் திருந்து தேவன்குடியில் இடையில் வெண்ணிறக் கோவணத்தை அணிந்துள்ள சிவபெருமானின் திருவேடங்கள் முழுதும் நற்குணமேயாகும். குற்றம் என்று சொல்வதற்கு ஒன்றும் இல்லை. அவ்வேடங்களை நினைத்து அவற்றின் பெருமைகளைச் சொல்பவர்களின் குறைகள் நீங்கும். அவர்கள் வையத்துள் வாழ்வாங்கு வாழ்வர். |
| **3070.** | உலகமுட் குந்திறல் உடையரக் கன்வலி<br>விலகுபூ தக்கணம் வெருட்டும்வே டத்தின<br>திலகமா ரும்பொழில் சூழ்ந்ததே வன்குடி<br>அலர்தயங் கும்முடி அடிகள்வே டங்களே. 8 | சிறந்த நந்தவனச் சோலை சூழ்ந்த திருந்துதேவன் குடியில் உள்ள மலர் அணிந்த முடியுடைய சிவபெருமானின் திருவேடம், உலகத்தைத் தனக்குக்கீழ் அடக்கும் ஆற்றலுடைய இராவணனது வலியும் பின்வாங்கத்தக்க வலியையுடைய பூதகணங்கள் சூழ விளங்குவது. எனவே அவ்வேடம் அஞ்சத்தக்க பிற பொருள்கள் அடியார்களை வந்தடையாதபடி வெருட்ட வல்லது. |
| **3071.** | துளக்கம்இல் லாதன தூயதோற் றத்தன<br>விளக்கம்ஆக் குவ்வன வெறிவண்டா ரும்பொழில்<br>திளைக்குந்தே வன்குடித் திசைமுக னோடுமால்<br>அளக்கஒண் ணாவண்ணத் தடிகள்வே டங்களே. 9 | வண்டுகள் மொய்க்கின்ற மலர்களையுடைய நறுமணம் கமழும் நந்தவனச் சோலை விளங்கும் திருந்துதேவன் குடியில், பிரமனும் திருமாலும் காணவொண்ணாச் சிவபெருமானின் திருவேடங்கள் உள்ளன. அவை மன்னுயிர்களை நிலை கலங்காமல் காக்கவல்லன. கண்டவர் மனத்தைத் தூய்மைசெய்யும் தோற்றத்தை உடையன. அஞ்ஞானத்தை நீக்கி ஞானவிளக்கம் தருவன. |

**3072.** செருமரு தண்டுவர்த் தேரம ணாதர்கள்
உருமரு வப்படாத் தொழும்பர்தம் உரைகொளேல்
திருமரு வும்பொய்கை சூழ்ந்ததே வன்குடி
அருமருந் தாவன அடிகள்வே டங்களே. 10

நெருங்கிய மருதமர இலையின் குளிர்ந்த துவர் தோய்ந்த ஆடையணிந்த புத்தர்களும், சமணர்களும் இறைவனை உணரும் அறிவற்றவர்கள் ஆவர். அருகில் நெருங்க முடியாத தோற்றமுடைய அவர்களின் உரைகளை ஏற்க வேண்டா. இலக்குமி வீற்றிருக்கும் தாமரை மலர்ந்துள்ள பொய்கை சூழ்ந்த திருந்துதேவன் குடியில் வீற்றிருக்கும் சிவபெருமானின் திருவேடம், உயிர்களின் பிறவிப்பிணிக்கு அருமருந்தாகி இன்பம் பயக்கும்.

**3073.** சேடர்தே வன்குடித் தேவர்தே வன்றனை
மாடம்ஓங் கும்பொழின் மல்குதண் காழியான்
நாடவல் லதமிழ் ஞானசம் பந்தன
பாடல்பத் தும்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11

தேவர்கள் தொழும் திருந்துதேவன்குடியில் வீற்றிருந்தருளுகின்ற தேவர்கட்கெல்லாம் தேவனான சிவபெருமானைப் பற்றி, ஓங்கிய மாடமாளிகைகளும், சோலைகளும் நிறைந்த, குளிர்ச்சிபொருந்திய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் விரும்பும் இன்தமிழில் அருளிய பத்துப் பாடல்களையும் ஓத வல்லவர்கட்குப் பாவம் இல்லை.

## 26. திருக்கானப்பேர் ( காளையார் கோயில் )

பண் : கொல்லி | பதிக எண் : 26

**3074.** பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடும்
கடியுலாம் பூம்பொழிற் கானப்பேர் அண்ணல்நின்
அடியலால் அடைசரண் உடையரோ வடியரே. 1

இத்தலத்தில் சுந்தரேசுவரர், சோமேசுவரர், காளையீசரென்று மூன்று சிவலிங்கப் பெருமான் சந்நிதிகள் உள்ளன.

பெண் யானைகள் பின்தொடர, பெரிய தும்பிக்கையுடைய ஆண் யானையானது, விடியற்காலையிலேயே குளத்தில் மூழ்கி, மலர்களை ஏந்தி விதிமுறைப்படி வழிபடுகின்ற நறுமணம் கமழும் பூஞ்சோலையுடைய திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளையன்றி, அடியவர்கள் சரணம் புகுவதற்கு யாது உள்ளது ?

**3075.** நுண்ணிடைப் பேரல்குல் நூபுர மெல்லடிப்
பெண்ணின்நல் லாளையோர் பாகமாப் பேணினான்
கண்ணுடை நெற்றியான் கருதிய கானப்பேர்
விண்ணிடை வேட்கையார் விரும்புதல் கருமமே. 2

சுந்தரமூர்த்தி நாயனார் கனவில் சிவபெருமான் தோன்றி காளையாகத் தவமிருப்பது, கானப்பேர் என்றுரைத்து அவரை வணங்கச்செய்து பதிகம் பெற்ற காரணத்தால் 'காளையார் கோயில்' எனப்படுகிறது.

நுண்ணிய இடையையும், பெரிய அல்குலையும், சிலம்பணிந்த மென்மையான பாதங்களையும் உடைய பெண்ணின் நல்லாளாகிய உமாதேவியைத் தன் திருமேனியின ஒரு பாகமாகக் கொண்ட நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தை, விண்ணுலகை ஆளும் விருப்பமுடையவர்கள் விரும்பி ஏத்துதல் கடமையாகும்.

| | |
|---|---|
| **3076.** வாவிவாய்ந் தங்கிய நுண்சிறை வண்டினம்<br>காவிவாய்ப் பண்செயுங் கானப்பேர் அண்ணலை<br>நாவிவாய்ச் சாந்துளும் பூவுளு ஞானநீர்<br>தூவிவாய்ப் பெய்துநின் றாட்டுவார் தொண்டரே.<br>3<br><br>"கண்டு தொழப்பெறுவது என்று கொலோ அடியேன் கார்வயல் சூழ் கானப்பேர் உறை காளையையே"<br>சுந்தரர். | பகலில் குளத்திலுள்ள தாமரை மலர்களில் தங்கித் தேனைப் பருகிய வண்டினம், இரவில் அப்போது மலரும் நீலோற்பல மலரை அடைந்து தேனுண்ட மகிழ்ச்சியில் பண்ணிசைக்க விளங்கும் திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் இறைவனை, கஸ்தூரி என்னும் மான், புழுகுப்பூனை இவற்றிலிருந்து பெறப்படும் வாசனைப் பொருள், சந்தனம், புனித நீர் முதலியன கொண்டு அடியவர்கள் திருமுழுக்காட்டி, மலர் தூவி அர்ச்சித்துப் போற்றி வழிபடுவர். |
| **3077.** நிறையுடை நெஞ்சுளும் நீருளும் பூவுளும்<br>பறையுடை முழவுளும் பலியுளும் பாட்டுளும்<br>கறையுடை மிடற்றண்ணல் கருதிய கானப்பேர்<br>குறையுடை அவர்க்கலாற் களைகிலார் குற்றமே.<br>4 | திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற நஞ்சுண்ட கறுத்த கண்டத்தையுடைய சிவபெருமானை, மனத்தைப் பொறிவழி ஓடாது ஒருமுகப்படுத்தி நிறுத்திய நெஞ்சுடன், பூவும் நீரும் கொண்டு, முழவு முழங்க, இறைவனின் புகழைப்பாடி நைவேத்தியம் செய்து வழிபடுகின்ற மெய்யடியார்களுக்கு அல்லாது ஏனையோர் களுக்குக் குறைகள் தீருமோ! |
| **3078.** ஏனப்பூண் மார்பின்மேல் என்புபூண் டீறிலா<br>ஞானப்பே ராயிரம் பேரினா னண்ணிய<br>கானப்பேர் ஊர்தொழுங் காதலார் தீதிலர்<br>வானப்பேர் ஊர்புகும் வண்ணமும் வல்லரே.<br>5 | பன்றிக்கொம்பை ஆபரணமாக அணிந்த மார்பின்மேல், எலும்புமாலைடியயும் அணிந்து, அழிவில்லாத சிவஞானம் தருகின்ற திருநாமம் ஆயிரம் கொண்டு திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தினை விரும்பித் தொழும் அடியவர்கள் தீவினைகளற்றவர் ஆவர். தேவர்களின் நகரமான அமராவதியை அடையும் சிறப்புடையவர் ஆவர். |
| **3079.** பள்ளமே படர்சடைப் பாற்படப் பாய்ந்தநீர்<br>வெள்ளமே தாங்கினான் வெண்மதி சூடினான்<br>கள்ளமே செய்கிலார் கருதிய கானப்பேர்<br>உள்ளமே கோயிலா உள்கும்என் உள்ளமே.<br>6 | பள்ளம் போன்ற படர்ந்த சடையில், வெள்ளம் போலப் பாய்ந்த கங்கையைத் தாங்கி வெண்ணிறச் சந்திரனையும் சூடினான் சிவபெருமான். கள்ளம் என்பதை அறியாது வெள்ளை உள்ளத்துடன் இறைவனை வழிபடுகின்ற, திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்திலுள்ள மெய்யடியார்களின் உள்ளத்தில் இறைவன் விளங்குவதால், அவ்வடியவர்களின் திருவுள்ளத்தைக் கோயிலாக நினைத்து என் மனம் வழிபடும். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **3080.** மானமா மடப்பிடி வன்கையால் அலகிடக்<br>கானமார் **கடகரி வழிபடுங் கானப்பேர்**<br>ஊனமாம் உடம்பினில் உறுபிணி கெடஎண்ணில்<br>ஞானமா மலர்கொடு நணுகுதல் நன்மையே. 7<br>காட்டானை வழிபட்ட தலம். | பெரிய பெண் யானை தன் வலிய கையால் அலகிடக் கானகத்திலுள்ள மதமுடைய பெரிய ஆண் யானையானது வழிபடுகின்ற திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்திலுள்ள இறைவனை, குற்றமுடைய இவ்வுடம்பிலுள்ள உயிரைப் பிணித்துள்ள ஆணவமாகிய நோய் தீர ஞானமாகிய மலர்கொண்டு மனம், வாக்கு, காயத்தால் வழிபட நன்மைகள் உண்டாகும். |
| **3081.** வாளினான் வேலினான் மால்வரை யெடுத்ததிண்<br>தோளினான் நெடுமுடி தொலையவே ஊன்றிய<br>தாளினான் கானப்பேர் தலையினால் வணங்குவார்<br>நாளுநாள் உயர்வதோர் நன்மையைப் பெறுவரே. 8 | வாட்போர் வலியாலும், வேற்படைப் பயிற்சியாலும், பெரிய கயிலைமலையை எடுத்த வலிமை வாய்ந்த தோள்களை உடைய இராவணனின் நீண்டமுடிகள் நலியுமாறு, பெருவிரலை ஊன்றிய திருவடிகளையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தைத் தலையால் வணங்கும் அடியவர்கள் நாளுக்கு நாள் உயர்நிலை அடைந்து எல்லா நலன்களையும் பெறுவார்கள். |
| **3082.** சிலையினான் முப்புரந் தீயெழச் செற்றவன்<br>நிலையிலா இருவரை நிலைமைகண்டு ஓங்கினான்<br>கலையினார் புறவிற்றேன் கமழ்தரு கானப்பேர்<br>தலையினால் வணங்குவார் தவமுடை யார்களே. 9 | மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரத்தைத் தீப்பற்றும்படி செய்து அழித்த சிவபெருமான், நிலையிலா பிரமன், திருமால் இவர்களின் செருக்கைக் கண்டு அவர்கள் காணாத வண்ணம் நெருப்பு மலையாய் ஓங்கி நின்றான். அழகிய குறிஞ்சியும், முல்லையும் சார்ந்த நிலமான, தேன் மணம் கமழத் திகழும் திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தைத் தொழுது போற்றுபவர்கள் தவமுடையவர்கள் ஆவர். |
| **3083.** உறித்தலைச் சுரையொடு குண்டிகை பிடித்துச்சி<br>பறித்தலும் போர்த்தலும் பயனிலை பாவிகாள்<br>மறித்தலை மடப்பிடி வளர்இளங் கொழுங்கொடி<br>கறித்தெழு கானப்பேர் கைதொழல் கருமமே. 10 | உறியினிடத்துச் சுரைக்குடுக்கை, கமண்டலம் இவற்றைத் தாங்கிக் கையில் பிடித்து அலையும், இறைவனை உணராத பாவிகளாகிய சமணர், புத்தர்கள் முறையே செய்யும் தலையிலுள்ள முடிகளைப் பறித்தலும், காவியாடை போர்த்தலும் ஆகிய செயல்களால் பயனில்லை. மடமையுடைய பெண்யானையும் வளர்கின்ற இளங்கொழுங்கொடியும் போன்ற உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டு சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தைக் கைகூப்பித் தொழுவது நம் கடமையாகும். |

3084. காட்டகத்து ஆடலான் கருதிய கானப்பேர்
கோட்டகத் திளவரால் குதிகொளும் காழியான்
நாட்டகத் தோங்குசீர் ஞானசம் பந்தன
பாட்டகத் திவைவலார்க்கு இல்லையாம் பாவமே. 11

சுடுகாட்டில் ஆடுகின்ற சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் திருக்கானப்பேர் என்னும் திருத்தலத்தை, இள வரால் மீன்கள் துள்ளிப் பாயும் நீர்நிலைகளையுடைய வளமையான சீகாழி என்னும் நகரில் அவதரித்த மிகுந்த புகழையுடைய ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகத்தால் போற்ற வல்லவர்கட்குப் பாவம் இல்லை. (அவர்கள் பாவத்திற்குக் காரணமான தீவினைகளிலிருந்து நீங்கப் பெற்றவர்கள் ஆவர்).

## 27. திருச்சக்கரப்பள்ளி

பண் : கொல்லி

பதிக எண் : 27

3085. படையினார் வெண்மழுப் பாய்புலித் தோலரை
உடையினார் உமையொரு கூறனார் ஊர்வதோர்
விடையினார் வெண்பொடி பூசியார் விரிபுனல்
சடையினார் உறைவிடஞ் சக்கரப் பள்ளியே. 1

சிவபெருமான் வெண்ணிற மழுவைப் படைக்கலனாக உடையவர். பாயும் புலித்தோலை அரையில் ஆடையாக அணிந்தவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு கூறாகக் கொண்டவர். இடபத்தை வாகனமாகக் கொண்டவர். திருவெண்ணிற்றைப் பூசியவர். கங்கையைச் சடையிலே தாங்கியவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருச்சக்கரப்பள்ளி என்னும் கோயிலாகும்.

திருமால் பூசித்துச் சக்கரம் பெற்ற பள்ளி, சக்கரப்பள்ளி.

3086. பாடினார் அருமறை பனிமதி சடைமிசைச்
சூடினார் படுதலை துன்எருக் கதனொடும்
நாடினார் இடுபலி நண்ணியோர் காலனைச்
சாடினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 2

சிவபெருமான் அரிய நால்வேதங்களை ஓதி அருளியவர். குளிர்ந்த சந்திரனைச் சடைமுடியில் சூடியவர். மண்டையோட்டு மாலையுடன் எருக்கம் பூவும் அணிந்தவர். திருக்கரத்தில் கபாலம் ஏந்திப் பிச்சை ஏற்றுத் திரிபவர். தம்மை உறுதியாகப் பற்றி வழிபடும் மார்க்கண்டேயனின் உயிரைக் கவரவந்த காலனைக் காலால் உதைத்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சக்கரப்பள்ளி என்னும் திருக்கோயிலை உடைய ஊராகும்.

| | | |
|---|---|---|
| **3087.** | மின்னினார் சடைமிசை விரிகதிர் மதியமும்<br>பொன்னினார் கொன்றையும் பொறிகிளர் அரவமும்<br>துன்னினார் உலகெலாம் தொழுதெழ நான்மறை<br>தன்னினார் வளநகர் சக்கரப் பள்ளியே. **3** | சிவபெருமான் மின்னலைப் போன்ற சடையின் மீது, ஒளிக்கதிர்களை வீசுகின்ற சந்திரனையும், பொன் போன்ற கொன்றை மலரையும், நெருப்புப் பொறி போன்று விடத்தைக் கக்குகின்ற பாம்பையும் அணிந்தவர். உலகம் யாவும் தொழுது போற்றுமாறு நான்கு வேதங்களின் உட்பொருளாக விளங்குபவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சக்கரப்பள்ளி என்பதாகும். |
| **3088.** | நலமலி கொள்கையார் நான்மறை பாடலார்<br>வலமலி மழுவினார் மகிழும்ஊர் வண்டறை<br>மலர்மலி சலமொடு வந்திழி காவிரி<br>சலசல மணிகொழி சக்கரப் பள்ளியே. **4** | சிவபெருமான் எல்லா உயிர்கட்கும் நன்மையே செய்யும் பெருங்கருணையாளர். நான்கு வேதங்களையும் அருளிச் செய்தவர். வலிமையுடைய மழுவைப் படைக்கலனாக ஏந்தியவர். அப்பெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் ஊர், வண்டுகள் ஒலிக்கின்ற, தேன்துளிகளைக் கொண்ட மலர்கள் மணம் வீச, வேகமாகப் பாயும் காவிரியாறு சலசல என ஒலிக்கும், மணிகளைக் கரையிலே ஒதுக்கும் வளமுடைய திருச்சக்கரப்பள்ளி என்பதாகும். |
| **3089.** | வெந்தவெண் பொடியணி வேதியர் விரிபுனல்<br>அந்தமில் அணிமலை மங்கையோ டமரும்ஊர்<br>கந்தமார் மலரொடு காரகில் பல்மணி<br>சந்திநோடு அணைபுனற் சக்கரப் பள்ளியே. **5** | சிவபெருமான் வெந்த திருவெண்ணீற்றினை அணிந்த வேதநாயகர். கங்கையைச் சடைமுடியில் தாங்கியவர். அவர் அழியா அழகுடைய மலைமங்கையான உமாதேவியோடு வீற்றிருந்தருளும் ஊர், நறுமணம் கமழும் மலர், அகில், பலவகை மணிகள், சந்தனமரம் இவை வந்தடைகின்ற நீர்வளமிக்க திருச்சக்கரப்பள்ளி என்பதாகும். |
| **3090.** | பாங்கினான் முப்புரம் பாழ்பட வெஞ்சிலை<br>வாங்கினார் வானவர் தானவர் வணங்கிட<br>ஓங்கினார் உமையொரு கூறொடும் ஒலிபுனல்<br>தாங்கினார் உறைவிடஞ் சக்கரப் பள்ளியே. **6** | உரிய தன்மையில் முப்புரங்களும் பாழ்பட்டு எரிந்து சாம்பலாகும்படி, கோபத்துடன், வளைக்க முடியாத மேரு மலையை வில்லாக வளைத்தவர். தேவர்களும், அசுரர்களும் வணங்கும் பெருமை பெற்றவர். உமாதேவியைத் தம் உடம்பில் ஒரு கூறாகக் கொண்டவர். ஒலிக்கின்ற கங்கையைச் சடைமுடியில் தாங்கியவர். அப்பெருமான் வீற்றிருந் தருளுமிடம் திருச்சக்கரப்பள்ளி என்பதாகும். |

| | | |
|---|---|---|
| 3091. | பாரினார் தொழுதெழு பரவுபல் லாயிரம்<br>பேரினார் பெண்ணொரு கூறனார் பேரொலி<br>நீரினார் சடைமுடி நிரைமலர்க் கொன்றையந்<br>தாரினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 7 | சிவபெருமான் இப்பூவுலக மக்களெல்லாம் தொழுது போற்றும் பல்லாயிரக்கணக்கான திருநாமங்களை உடையவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். பேரொலியோடு பெருக்கெடுத்து வரும் கங்கையைச் சடைமுடியில் தாங்கியவர். கொத்தாக மலரும் கொன்றை மலர்களை அழகிய மாலையாக அணிந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சக்கரப்பள்ளி என்பதாகும். |
| 3092. | முதிரிலா வெண்பிறை சூடினார் முன்னநாள்<br>எதிரிலா முப்புரம் எரிசெய்தார் வரைதனால்<br>அதிரிலா வல்லரக் கன்வலி வாட்டிய<br>சதிரினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 8 | முதிர்வு அடையாத இள வெண்திங்களைச் சிவபெருமான் சடைமுடியில் சூடியவர். முன்பொருநாள் தம்மை எதிர்த்துப் போர் செய்து வெற்றி பெறுதற்கு ஒருவரும் இல்லை என்னும் நிலையில் திரிந்த அசுரர்களின் முப்புரங்களை எரித்துச் சாம்பலாகுமாறு செய்தவர். கயிலை மலையினால் வல்லசுரனான இராவணனின் வலிமையை அடக்கிய திறமையாளர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சக்கரப்பள்ளி என்பதாகும். |
| 3093. | துணிபடு கோவணம் சுண்ணவெண் பொடியினர்<br>பணிபடு மார்பினர் பனிமதிச் சடையினர்<br>மணிவணன் அவனொடு மலர்மிசை யானையும்<br>தணிவினர் வளநகர் சக்கரப் பள்ளியே. 9 | கிழிக்கப்பட்ட துணியைக் கோவணமாகச் சிவபெருமான் அணிந்தவர். மணம் கமழும் திருவெண்ணிற்றினைப் பூசியவர். பாம்பை மார்பில் ஆபரணமாக அணிந்தவர். குளிர்ந்த சந்திரனைச் சடைமுடியில் சூடியவர். திருமாலும், பிரமனும் தங்களையே தலைவராகக் கருதிய செருக்கைத் தணியச் செய்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சக்கரப்பள்ளி என்பதாகும். |
| 3094. | உடம்புபோர் சீவரர் ஊண்டொழிற் சமணர்கள்<br>விடம்படும் உரையவை மெய்யல விரிபுனல்<br>வடம்படு மலர்கொடு வணங்குமின் வைகலும்<br>தடம்புனல் சூழ்தரு சக்கரப் பள்ளியே. 10 | உடம்பைப் போர்க்கும் சீவரம் என்று சொல்லப்படும் மஞ்சள் உடை உடுத்தும் புத்தர்களும், உண்பதையே தொழிலாகக் கொண்ட சமணர்களும் உரைப்பவை நஞ்சு போன்று கொடுமையானவை. மெய்ம்மை யானவை அல்ல. அவற்றைப் பொருளாகக் கொள்ள வேண்டா. விரிந்து பரவும் புனிதநீர் கொண்டு அபிடேகம் செய்தும், மலர் மாலைகளைச் சார்த்தியும், குளிர்ந்த குளங்கள் சூழ்ந்து நீர்வளம் மிகுந்து விளங்கும் திருச்சக்கரப்பள்ளியில் வீற்றிருந்தருளும் இறைவனை நாளும் வணங்குவீர்களாக! |

**3095.** தண்வயல் புடையணி சக்கரப் பள்ளியெம்
கண்ணுத லவனடிக் கழுமல வளநகர்
நண்ணிய செந்தமிழ் ஞானசம் பந்தன்சொல்
பண்ணிய விவைசொலப் பறையுமெய்ப் பாவமே. 11

குளிர்ந்த வயல் சூழ்ந்த வளமை நிறைந்த அழகிய திருச்சக்கரப்பள்ளியில் அருள்பாலிக்கும், நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானின் திருவடிகளை, திருக்கழுமல வளநகரில் அவதரித்த செந்தமிழ் வல்ல ஞானசம்பந்தன் போற்றிய இத்திருப்பதிகத்தைப் பக்தியுடன் பாடுபவர்களின் பாவம் நீங்கும்.

## 28. திருமழபாடி

பண் : கொல்லி | பதிக எண் : 28

**3096.** காலையார் வண்டினங் கிண்டிய காருறும்
சோலையார் பைங்கிளி சொற்பொருள் பயிலவே
வேலையார் விடம்அணி வேதியன் விரும்பிடம்
மாலையார் மதிதவழ் மாமழ பாடியே. 1

காலைப்பண்ணாகிய மருதப்பண்ணை இசைக்கின்ற வண்டினங்கள் வாழும் கிளர்ந்த மலர்களையுடைய மரங்கள் மேகத்தைத் தொடும்படி வளர்ந்துள்ள சோலைகளில் உள்ள பைங்கிளிகள் அத்தலத்திலுள்ளோர் பயிலும் சைவநூல்களின், சொல்லையும், பொருளையும் பயில்வன. கடலில் தோன்றிய விடத்தைக் கண்டத்தில் மணிபோல் உள்ளடக்கிய வேதப் பொருளாகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம், மாடங்களில் சந்திரன் தவழ்கின்ற திருமழபாடி என்னும் திருத்தலம் ஆகும்.

---

மழவார் பாடி என்பதன் சிதைவு மழபாடி. மழவர்களின் பாசறை அமைந்திருந்த இடம்.
மழவர் – இளைஞர். ஒரு வகை வீரர்.
பாடி – இருப்பிடம்.
இறைவன் மழு ஆயுதமேந்தி நடனமாடியதால் மழுவாடி எனப்பட்டு சிதைந்து மழபாடி என்றாயிற்று.

**3097.** கறையணி மிடறுஉடைக் கண்ணுதல் நண்ணிய
பிறையணி செஞ்சடைப் பிஞ்ஞகன் பேணும்ஊர்
துறையணி குருகினம் தூமலர் துதையவே
மறையணி நாவினான் மாமழ பாடியே. 2

தம்மை அடைக்கலமாக வந்தடைந்த சந்திரனை அழகிய செஞ்சடையில் சூடிய பிஞ்ஞகர் சிவபெருமான். அவர் நீலகண்டராகவும், நெற்றிக்கண்ணினை உடையவராகவும் வேதங்களை ஓதுபவராகவும் விளங்குபவர். அவர் வீற்றிருந்தருளும் ஊர், நீர்த்துறைகளிலுள்ள வெண்ணிறப் பறவைகள் அங்கு மலர்ந்துள்ள வெண்ணிற மலர்கட்கும் தமக்கும் வேறுபாடு தோன்றாதபடி விளங்கும் திருமழபாடி என்னும் திருத்தலமாகும்.

**3098.** அந்தணர் வேள்வியும் அருமறைத் துழனியும்
செந்தமிழ்க் கீதமும் சீரினால் வளர்தரப்
பந்தணை மெல்விர லாளொடு பயில்விடம்
மந்தம்வந் துலவுசீர் மாமழ பாடியே. 3

அந்தணர்கள் வேள்வி செய்யும்போது கூறுகிற வேதங்கள் ஒலிக்கப்படுவதும், செந்தமிழ்ப் பக்திப் பாடல்கள் இசைக்கப்படுவதும் எனச் சிறப்புடன் விளங்குமிடம். இறைவன், பந்து வந்தடைகின்ற மென்மையான விரல்களையுடைய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம், தென்றற் காற்று வீசும் புகழ்மிக்க திருமழபாடி என்னும் திருத்தலமாகும்.

| | |
|---|---|
| **3099.** அத்தியின் உரிதனை அழகுறப் போர்த்தவன்<br>**முத்தியாய் மூவரின் முதல்வனாய் நின்றவன்**<br>பத்தியால் பாடிடப் பரிந்தவர்க்கு அருள்செயும்<br>அத்தனார் உறைவிடம் அணிமழ பாடியே. 4 | யானையின் தோலை உரித்து அழகுறச் சிவபெருமான் போர்த்திக் கொண்டவன். வீடுபேறாயும், மும்மூர்த்திகட்கு முதல்வனாயும் விளங்குபவன். பக்தியால் பாடிப் போற்றும் அன்பர்கட்கு அருள்புரியும் தலைவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் அழகிய திருமழபாடி என்னும் திருத்தலமாகும். |
| **3100.** கங்கையார் சடையிடைக் கதிர்மதி யணிந்தவன்<br>வெங்கண்வாள் அரவுடை வேதியன் தீதிலாச்<br>செங்கயற் கண்உமை யாளொடுஞ் சேர்விடம்<br>மங்கைமார் நடம்பயில் மாமழ பாடியே. 5<br><br>திருஆலம் பொழிலிலிருந்த சுந்தரரை வரவழைத்து "பொன்னார் மேனியனே" பதிகம் பெற்றவர் மழபாடியார். பிரமலோகத்துச் சிவலிங்கத்தைப் புருடா மிருகம் தாபித்த தலம். பிரமனால் பெயர்த்தெடுக்க முடியாமல் போனதால் வஜ்ரதம்பேசுவரர். | கங்கையைத் தாங்கிய சடைமுடியன். இடையில் ஒளிரும் சந்திரனை அணிந்தவன் சிவபெருமான். ஒளியுமிழும் கொடிய கண்களையுடைய பாம்பை ஆபரணமாக அணிந்தவன். வேதத்தை அருளி, வேதப் பொருளாகவும் விளங்குபவன். தன்னை வழிபடுபவர்களின் தீவினைகளை நீக்கும் அருள் விளங்கும் சிவந்த கண்களையுடைய உமாதேவியோடு அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் மங்கையர்கள் நடம் பயின்று விளங்கும் சிறப்புடைய திருமழபாடி என்னும் திருத்தலம் ஆகும். |
| **3101.** பாலனார் ஆருயிர் பாங்கினால் உணவரும்<br>காலனார் உயிர்செகக் காலினால் சாடினான்<br>சேலினார் கண்ணினாள் தன்னொடுஞ் சேர்விடம்<br>மாலினார் வழிபடும் மாமழ பாடியே. 6<br><br>நந்திகேசுவரருக்கும், சுயம்பிரபா தேவிக்கும் திருமணம் நடந்த இடம். இன்றும் ஆண்டுதோறும் பங்குனிமாதம் புனர்பூசநாளில் இவ்வைபவம் நடைபெறுகிறது. | பாலனான மார்க்கண்டேயனின் வாழ்நாள் முடிந்ததும் அவன் ஆருயிரைக் கவரவந்த காலனின் உயிர் அழியும்படி அவனைக் காலால் உதைத்த சிவபெருமான், சேல்மீன் போன்ற கண்களையுடைய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம் திருமால் முதலான பெருமையுடையவர்கள் வழிபடும் சிறப்புமிக்க திருமழபாடி என்னும் திருத்தலம் ஆகும். |
| **3102.** விண்ணிலார் இமையவர் மெய்ம்மகிழ்ந் தேத்தவே<br>எண்ணிலார் முப்புரம் எரியுண நகைசெய்தார்<br>கண்ணினால் காமனைக் கனல்எழக் காய்ந்தஎம்<br>அண்ணலார் உறைவிடம் அணிமழ பாடியே. 7 | சிவபெருமான் விண்ணுலகத்துத் தேவர்கள் மெய்ம்மகிழ்ந்து போற்றத் தம்மை வழிபட்டு உய்யும் எண்ணமில்லாத அசுரர்களின் முப்புரங்களைச் சிரித்து எரியுண்ணும்படி செய்தவர். நெற்றிக்கண்ணைத் திறந்து நெருப்புப்பொறி பறக்க மன்மதனை எரித்த எம் தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் அழகிய திருமழபாடி என்னும் திருத்தலம் ஆகும். |

| | | |
|---|---|---|
| 3103. | கரத்தினால் கயிலையை யெடுத்தகார் அரக்கன<br>சிரத்தினை ஊன்றலுஞ் சிவனடி சரண்எனா<br>இரத்தினாற் கைந்நரம் பெடுத்திசை பாடலும்<br>வரத்தினான் மருவிடம் மாமழ பாடியே. 8 | தன் கையால் கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த கரிய அரக்கனான இராவணனின் தலைகள் அம்மலையின்கீழ் நலிவுற்றுத் துன்புறும்படி தம்காற்பெருவிரலைச் சிவபெருமான் ஊன்றியவர். பின் இராவணன் சிவன் திருவடியையே சரணம் எனக் கொண்டு அருள்புரியும்படி கெஞ்சி வேண்டித் தன் கை நரம்பினை எடுத்து வீணையாக மீட்டிச் சாமகானம் பாட, அவனுக்கு வரமருளிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம் திருமழபாடி என்னும் திருத்தலம் ஆகும். |
| 3104. | ஏடுலா மலர்மிசை அயனெழில் மாலுமாய்<br>நாடினார்க் கரியசீர் நாதனார் உறைவிடம்<br>பாடெலாம் பெண்ணையின் பழம்விழப்<br>பைம்பொழில்<br>மாடெலாம் மல்குசீர் மாமழ பாடியே. 9 | இதழ்களையுடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் அடிமுடி தேட, காண்பதற்கு அரியவராய் விளங்கிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், ஒருபக்கம் பனைமரங்களின் பழுத்த பழங்கள் உதிர மறுபக்கம் பசுமையான சோலைகள் விளங்கும் சிறப்புடைய திருமழபாடி என்னும் திருத்தலம் ஆகும். |
| 3105. | உறிபிடித் தூத்தைவாய்ச் சமணொடு சாக்கியர்<br>நெறிபிடித் தறிவிலா நீசர்சொற் கொள்ளன்மின்<br>பொறிபிடித் தரவினம் பூணெனக் கொண்டுமான்<br>மறிபிடித் தானிடம் மாமழ பாடியே. 10 | நீர்க்கலசத்தை உறியிலே தாங்கி அதைப் பிரம்பில் மாட்டித் தூக்கிச் செல்லும், வாய் கழுவும் வழக்கமில்லாத சமணர்களும், புத்தர்களும் இறையுண்மையை அறியாது கூறும் சொற்களைப் பொருளாகக் கொள்ள வேண்டா. படமெடுத்தாடும், புள்ளிகளையுடைய பாம்பை ஆபரணமாக அணிந்து, இள மான்கன்றைக் கரத்தில் ஏந்திய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருமழபாடி என்னும் திருத்தலம் ஆகும். |
| 3106. | ஞாலத்தா ராதிரை நாளினான் நாள்தொறும்<br>சீலத்தான் மேவிய திருமழ பாடியை<br>ஞாலத்தான் மிக்கசீர் ஞானசம் பந்தன்சொல்<br>கோலத்தால் பாடுவார் குற்றம்அற் றார்களே. 11 | இப்பூவுலகில் சிறப்பாக விளங்கும் ஆதிரை என்னும் நட்சத்திரத்திற்குரிய சிவ பெருமானுக்கு, நாள்தோறும் சிவாகம விதிப்படி பூசைகள் நடைபெறுகின்ற திருமழபாடி என்னும் திருத்தலத்தினைப் போற்றி, உலகத்தோரால் வணங்கப்படுகின்ற மிகுந்த புகழையுடைய திருஞானசம்பந்தன் அருளிய திருப்பதிகத்தைச் சிவவேடப் பொலிவுடன் பாடுபவர்கள் தீவினையிலிருந்து நீங்கப் பெற்றவர்கள் ஆவர். |

## 29. மேலைத்திருக்காட்டுப்பள்ளி

பண் : கொல்லி

பதிக எண் : 29

| | |
|---|---|
| **3107.** வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்<br>ஊருமன் னும்பலி உண்பதும் வெண்டலை<br>காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி<br>நீருமன் னுஞ்சடை நிமலர்தந் நீர்மையே. 1 | சிவபெருமான் கச்சணிந்த முலையையுடைய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். பிரமகபாலம் ஏந்தி ஊர்தோறும் சென்று பிச்சை ஏற்பவர். அப்பெருமான் மேகத்தைத் தொடும்படி வளர்ந்துள்ள சோலைகள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் கங்கையைத் தாங்கிய சடைமுடியை உடைய நிமலராய் விளங்குவது அவர்தம் சிறந்த குணமாகும். |
| **3108.** நிருத்தனார் நீள்சடை மதியொடு பாம்பணி<br>கருத்தனார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி<br>அருத்தனார் அழகமர் மங்கையோர் பாகமாப்<br>பொருத்தனார் கழலிணை போற்றுதல்<br>பொருளதே. 2 | சிவபெருமான் திருநடனம் செய்பவர். நீண்ட சடைமுடியில் சந்திரனோடு பாம்பை ஆபரணமாக அணிந்தவர். நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் கண்ணாற்காணும் பொருள்வடிவாயும் விளங்குபவர். அழகிய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டுள்ள அப்பெருமானின் திருவடிகளைப் போற்றி வணங்குதலே பயனுடைய செய்கையாகும். |
| **3109.** பண்ணினார் அருமறை பாடினார்<br>நெற்றியோர்<br>கண்ணினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி<br>விண்ணினார் விரிபுனல் மேவினார் சடைமுடி<br>அண்ணலார் எம்மையா ளுடையஎம் மடிகளே.<br>3 | சிவபெருமான் அரிய வேதங்களை, உரிய பண்ணோடு பாடியருளினார். அவர் நெற்றிக் கண்ணை உடையவர். நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில், ஆகாயத்திலிருந்து விரிந்த கங்கையைத் தாங்கிய சடைமுடியுடையவராய் வீற்றிருந்தருளுபவர். அச்சிவபெருமானே எம்மை ஆட்கொண்டருளும் எம் தலைவர் ஆவார். |
| **3110.** பணங்கொள்நா கம்அரைக் கார்ப்பது பல்பலி<br>உணங்கலோ டுண்கலன் உறைவது நாட்டிடைக்<br>கணங்கள்கூ டித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி<br>நிணங்கொள்சூ லப்படை நிமலர்தம் நீர்மையே.<br>4 | சிவபெருமான் இடுப்பிலே கச்சாக அணிந்திருப்பது படமெடுத்தாடும் நாகமாகும். பல இடங்களில் பிச்சையேற்று வந்த உணவை உண்ணு பாத்திரம், உலர்ந்த பிரமகபாலமாகும். வசிப்பது சுடுகாடாகும். அத்தகைய பெருமானார் சிவகணத்தோர் தொழுது போற்றும்படி திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்து அருளுகின்றார். கொழுப்பினைக் கொண்ட சூலப்படையை ஏந்திய நிமலராய் விளங்கும் இயல்புடையவர். |

| | | |
|---|---|---|
| **3111.** | வரையுலாம் சந்தொடு வந்திழி காவிரிக்<br>கரையுலாம் இடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்<br>திரையுலாம் கங்கையும் திங்களும் சூடியங்<br>கரையுலாங் கோவணத் தடிகள்வே டங்களே. 5 | மலையில் செழித்த சந்தன மரங்களை நீரோட்டத்தால் உந்தித் தள்ளிக் கரையினில் சேர்க்கும் காவிரியின் மணல் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தின் இறைவர் அலைவீசும் கங்கையையும், சந்திரனையும் சடைமுடியிலே சூடி, இடுப்பிலே கோவண ஆடையுடன் காட்சிதரும் கோலமுடையவர். |
| **3112.** | வேதனார் வெண்மழு வேந்தினார் அங்கமுன்<br>ஓதினார் உமையொரு கூறனார் ஒண்குழைக்<br>காதினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி<br>நாதனார் திருவடி நாளும்நின் றேத்துமே. 6 | வேதத்தை அருளிச்செய்து வேதப் பொருளாகவும் விளங்குபவர் சிவபெருமான். வெண்ணிற மழுப்படையை ஏந்தியவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு கூறாகக் கொண்டவர். ஒளி பொருந்திய குழையணிந்த காதை உடையவர். நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் தலைவரான அப்பெருமானின் திருவடிகளைத் தினந்தோறும் போற்றி வழிபடுவீர்களாக! |
| **3113.** | மையினார் மிடறனார் மான்மழு வேந்திய<br>கையினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்<br>தையலோர் பாகமாத் தண்மதி சூடிய<br>ஐயனார் அடிதொழ அல்லல்ஒன் றில்லையே. 7 | மை போன்ற கரிய கண்டத்தையுடைய சிவபெருமான் மானையும், மழுவையும் ஏந்திய கையினர். நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு குளிர்ந்த சந்திரனைச் சடைமுடியில் சூடிய தலைவரான சிவபெருமானின் திருவடிகளைத் தொழுது போற்றத் துன்பம் சிறிதும் இல்லை. |
| **3114.** | சிலைதனால் முப்புரஞ் செற்றவன் சீரினார்<br>மலைதனால் வல்லரக் கன்வலி வாட்டினான்<br>கலைதனார் புறவணி மல்குகாட் டுப்பள்ளி<br>தலைதனால் வணங்கிடத் தவமது ஆகுமே. 8<br><br>இப்பாடலில் 'தன்' என்பன நான்கும் அசைகள். | சிவபெருமான் மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை அழித்தவர். சிறப்புடைய கயிலை மலையினால் இராவணனின் வலிமையை அடக்கியவர். மான்கள் உலவும் முல்லைநிலமான அழகு திகழும் திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அப்பெருமானைப் பக்தியுடன் தலைதாழ்த்தி வணங்க நல்தவப்பேறு உண்டாகும். |

| | | |
|---|---|---|
| 3115. | செங்கண்மால் திகழ்தரு மலருறை திசைமுகன்<br>தங்கையால் தொழுதெழத் தழலுரு ஆயினான்<br>கங்கையார் சடையினான் கருதுகாட் டுப்பள்ளி<br>அங்கையால் தொழும்அவர்க் கல்லல்ஒன்<br>றில்லையே.<br>9 | சிவந்த கண்களையுடைய திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் தொழுது போற்ற அழல் உருவமாய் விளங்கியவர் சிவபெருமான். கங்கையைச் சடையிலே தாங்கித் திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற அப்பெருமானை அழகிய கைகளால் கூப்பித் தொழும் அன்பர்கட்குத் துன்பம் இல்லை. |
| 3116. | போதியார் பிண்டியார் என்றவப் பொய்யர்கள்<br>வாதினால் உரையவை மெய்யல வைகலும்<br>காரினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி<br>ஏரினால் தொழுதெழ வின்பம்வந் தெய்துமே.<br>10 | அரச மரத்தினடியில் ஞானம் பெற்ற புத்தரின் வழிவந்த புத்தர்களும், அசோகமர நிழலில் அமரும் அருகக் கடவுளை வணங்கும் சமணர்களும், தங்கள் வாதத்தால் உரைப்பவை மெய்ம்மையானவை அல்ல. மேகம் தவழும், நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் இறைவனை நாள்தோறும் சீலத்தால் தொழுது போற்ற இன்பம் வந்தடையும். |
| 3117. | பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்<br>அருமறை யவைவல்ல வணிகொள்சம்<br>பந்தன்சொல்<br>கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி<br>பரவிய தமிழ்சொல்லப் பறையுமெய்ப் பாவமே.<br>11 | நீர்வளமிக்க அழகிய புறவம் என்னும் பெயர் கொண்ட சீகாழியில் அவதரித்த, அருமறைகளில் வல்ல, சிவஞானத்தையே ஆபரணமாக அணிந்த ஞானசம்பந்தன், நீலமணி போன்ற கண்டத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருக்காட்டுப் பள்ளி என்னும் திருத்தலத்தை வணங்கிப் போற்றிய இத்திருப்பதிகத்தை ஓத, பாவம் நீங்கும். |

## 30. திருஅரதைப் பெரும்பாழி ( அரித்துவார மங்கலம் )

பண் : கொல்லி

பதிக எண் : 30

3118. பைத்தபாம் போடரைக் கோவணம் பாய்புலி
மொய்த்தபேய் கள்முழக் கம்முது காட்டிடை
நித்தமா கந்நட மாடிவெண் ணீறணி
பித்தர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 1

இடுப்பில் படத்தையுடைய பாம்பைக் கச்சாகக் கட்டி, கோவணமும் புலித்தோலும் அணிந்து, பூதகணங்கள் சூழ்ந்து முழங்கச் சுடுகாட்டில் நிலைபெற்ற நடனம் ஆடி, திருவெண்ணீறு அணிந்த பித்தரான சிவபெருமான் கோயில் கொண்டருளுவது திருஅரதைப் பெரும்பாழியே ஆகும்.

---

அரி (திருமால்) பன்றியாகத்துவாரம் செய்து வழிபட்டதால் அரித்துவாரமங்கலம்.

| | | |
|---|---|---|
| **3119.** | கயலசே லகருங் கண்ணியர் நாள்தொறும்<br>பயலைகொள் ளப்பலி தேர்ந்துழல் பான்மையார்<br>இயலைவா னோர்நினைந் தோர்களுக்<br>கெண்ணரும்<br>பெயரர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 2 | கயல்மீன் போன்றும், சேல் மீன் போன்றும் அழகிய கருநிறக் கண்களையுடைய மகளிர், நாள்தோறும் பசலை நோய் கொள்ளுமாறு அழகிய தோற்றத்துடன் பலியேற்று உழலும் தன்மையுடையவர் சிவபெருமான். அவருடைய தன்மைகள் வானவர்களும், அடியவர்களும் எண்ணுதற்கு அரியன, பல திருப்பெயர்களைக் கொண்டு விளங்கும் அப்பெருமான் கோயில் கொண்டருளுவது திருஅரதைப் பெரும்பாழியே. |
| **3120.** | கோடல்சா லவ்வுடை யார்கொலை யானையின்<br>மூடல்சா லவ்வுடை யார்முளி கானிடை<br>ஆடல்சா லவ்வுடை யாரழ காகிய<br>பீடர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 3 | அடியவர்களின் வேண்டுதல்களை ஏற்று இறைவர் அருள்புரிபவர். கொல்லும் தன்மையுடைய யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவர். அருவருக்கத்தக்க சுடுகாட்டில் நடனம் புரிபவர். அழகிய பெருமையுடைய அப்பெருமான் கோயில் கொண்டருளுவது திரு அரதைப் பெரும்பாழியே. |
| **3121.** | மண்ணர்நீ ரார்அழ லார்மலி காலினார்<br>விண்ணர்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்<br>பண்ணர்பா டல்உடை யாரொரு பாகமும்<br>பெண்ணர்கோ யில்அர தைப்பெரும் பாழியே.<br>4 | நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐம்பூதங்களாக விளங்குபவர் இறைவர். வேதத்தின் உண்மைப் பொருளை விரித்து ஓதுபவர். மெய்ப்பொருளாகியவர். பண்ணோடு கூடிய பாடலில் விளங்குபவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டு விளங்குபவர். அப்பெருமானார் கோயில் கொண்டருளுவது திருஅரதைப் பெரும்பாழியே. |
| **3122.** | மறையர்வா யின்மொழி மானொடு வெண்மழுக்<br>கறைகொள்சூ லம்முடைக் கையர்கா ரார்தரும்<br>நறைகொள்கொன் றையந் தார்தருஞ்<br>சென்னிமேல்<br>பிறையர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 5 | சிவபெருமான் வேதங்களை அருளிச் செய்தவர். மானும், வெண்மழுவும், சூலமும் ஏந்திய கையர். கார் காலத்தில் மலரும் தேன் துளிக்கும் நறுமணமுடைய கொன்றை மாலையை விரும்பி அணிந்துள்ளவர். சடைமுடியில் பிறைச்சந்திரனைச் சூடியவர். அப்பெருமான் கோயில் கொண்டருளுவது திருஅரதைப் பெரும்பாழியே. |
| **3123.** | புற்றர வம்புலித் தோலரைக் கோவணம்<br>தற்றிர வின்னட மாடுவர் தாழ்தரு<br>சுற்றமர் பாரிடந் தொல்கொடி யின்மிசைப்<br>பெற்றர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 6 | புற்றில் வாழும் பாம்பையும், புலித்தோலையும், கோவணத்தையும் இடையில் அணிந்து, இரவில் நடனமாடும் சிவபெருமான், பூதகணங்கள் சூழ்ந்து நின்று வணங்க இடபக் கொடியுடையவர். அப்பெருமான் கோயில் கொண்டருளுவது திருஅரதைப் பெரும்பாழியே. |

| | | |
|---|---|---|
| 3124. | துணையிறுத் தஞ்சுரி சங்கமர் வெண்பொடி<br>இணையிலேற் றையுகந் தேறுவ ரும்எரி<br>கணையினான் முப்புரம் செற்றவர் கையினில்<br>பிணையர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 7 | அழகிய சுரிந்த சங்கினாலாகிய குழைகளைக் காதில் அணிந்தும், திருவெண்ணீற்றைப் பூசியும் விளங்குபவர் இறைவர். ஒப்பற்ற இடபத்தை விரும்பி வாகனமாக ஏறுபவரும், அக்கினிக் கணையைச் செலுத்தி முப்புரங்களை அழித்தவரும், கையினில் இளமான்கன்றை ஏந்தியவருமான அச்சிவபெருமான் கோயில் கொண்டு அருளுவது திருஅரதைப் பெரும்பாழியே ஆகும். |
| 3125. | சரிவிலா வல்லரக் கன்றடந் தோடலை<br>நெரிவிலா ரவ்வடர்த் தார்நெறி மென்குழல்<br>அரிவைபா கம்அமர்ந் தாரடி யாரொடும்<br>பிரிவில்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 8 | தளர்ச்சியே இல்லாத வல்லசுரனான இராவணனின் வலிமையான பெரிய தோள்களும், தலைகளும் நெரியுமாறு அடர்த்த சிவபெருமான், அடர்த்தியான மென்மை வாய்ந்த கூந்தலையுடைய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு, அடியவர்களோடு பிரிவில்லாது வீற்றிருந்தருளும் கோயில் திருஅரதைப் பெரும்பாழியே. |
| 3126. | வரியரா என்பணி மார்பினர் நீர்மல்கும்<br>எரியரா வுஞ்சடை மேற்பிறை யேற்றவர்<br>கரியமா லோடயன் காண்பரி தாகிய<br>பெரியர்கோ யில்அர தைப்பெரும் பாழியே. 9 | வரிகளையுடைய பாம்பு, எலும்பு ஆகியவற்றை ஆபரணமாக அணிந்த மார்பினர் இறைவர். கங்கையைத் தாங்கிய நெருப்புப் போன்ற சிவந்த சடையில் பிறைச்சந்திரனைச் சூடியவர். கருநிறத் திருமாலும், பிரமனும் காண்பதற்கரிய ஓங்கிய பெருமையுடைய சிவபெருமான் கோயில் கொண்டருளுவது திருஅரதைப் பெரும்பாழியே. |
| 3127. | நாணிலா தசமண் சாக்கியர் நாடொறும்<br>ஏணிலா தம்மொழி யவ்வெழி லாயவர்<br>சேணுலா மும்மதில் தீயெழச் செற்றவர்<br>பேணுகோ யில்அர தைப்பெரும் பாழியே. 10 | சமணர்களும், புத்தர்களும் நாள்தோறும் பெருமையற்ற சொற்களை மொழிகின்றனர். அவற்றை ஏலாது அழகுடையவராய், ஆகாயத்தில் திரியும் முப்புரங்களை எரிந்து சாம்பலாகுமாறு அழித்த சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் கோயில் திருஅரதைப் பெரும்பாழியே. |
| 3128. | நீரினார் புன்சடை நிமலனுக் கிடமெனப்<br>பாரினார் பரவர தைப்பெரும் பாழியைச்<br>சீரினார் காழியுள் ஞானசம் பந்தன்செய்<br>ஏரினார் தமிழ்வல்லார்க் கில்லையாம் பாவமே. 11 | கங்கையை மெல்லிய சடையில் தாங்கிய நிமலனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் எனப் பூவுலகத்தோரால் போற்றி வணங்கப்படும் திரு அரதைப் பெரும்பாழியைப் போற்றி, புகழுடைய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய சிறப்புடைய இத்தமிழ்ப்பதிகத்தை ஓத வல்லவர்கட்குப் பாவம் இல்லை. |

## 31. திருமயேந்திரப்பள்ளி

பண் : கொல்லி

பதிக எண் : 31

| பாடல் | பொருள் |
|---|---|
| **3129.** திரைதரு பவளமும் சீர்திகழ் வயிரமும்<br>கரைதரு மகிலொடு கனவளை புகுதரும்<br>வரைவிலா லெயிலெய்த மயேந்திரப் பள்ளியுள்<br>அரவரை யழகனை யடியிணை பணிமினே. 1<br><br>அழகர் – சுவாமியின் பெயர்.<br>மயேந்திரன் என்னும் பெயருடைய ஓர் இந்திரன் வழிபட்ட தலம்.<br>பள்ளி – இடம். | கடலலைகள் அடித்துவரும் பவளங்களும், சிறப்புடைய வைரமும், கரையிலே ஒதுக்கப்பட்ட அகில் மரங்களும், கனமான சங்குகளும் நிறைந்த திருமயேந்திரப்பள்ளி என்னும் திருத்தலத்தில், மேருமலையாகிய வில்லால், அக்கினிக் கணையாகிய அம்பை எய்து முப்புரங்களை எரியும்படி செய்த, இடையில் பாம்பைக் கச்சாக அணிந்துள்ள அழகனாகிய சிவபெருமானின் திருவடிகளை வணங்குவீர்களாக. |
| **3130.** கொண்டல்சேர் கோபுரங் கோலமார் மாளிகை<br>கண்டலுங் கைதையுங் கமலமார் வாவியும்<br>வண்டுலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியிற்<br>செண்டுசேர் விடையினான் றிருந்தடி பணிமினே. 2 | மேகத்தைத் தொடும்படி உயர்ந்த கோபுரங்களும், அழகிய மாளிகைகளும், நீர்முள்ளியும், தாழையும், தாமரைகள் மலர்ந்துள்ள குளங்களும், வண்டுகள் உலவுகின்ற சோலைகளுமுடைய அழகிய திருமயேந்திரப் பள்ளியில் வட்டமாக நடைபயிலும் இடபத்தை வாகனமாகக் கொண்ட சிவபெருமானின், உயிர்களை நன்னெறியில் செலுத்தும் திருவடிகளை வணங்குவீர்களாக. |
| **3131.** கோங்கிள வேங்கையும் கொழுமலர்ப் புன்னையும்<br>தாங்குதேன் கொன்றையும் தகுமலர்க் குரவமு<br>மாங்கரும் பும்வயன் மயேந்திரப் பள்ளியுள்<br>ஆங்கிருந் தவன்கழ லடியிணை பணிமினே. 3 | கோங்கு, வேங்கை, செழுமையான மலர்களை யுடைய புன்னை, தேன் துளிகளையுடைய கொன்றை, சிறந்த மலர்களை உடைய குரவம் முதலிய மரங்கள் நிறைந்த சோலைகளும், மாமரங்களும், கரும்புகள் நிறைந்த வயல்களும் உடைய திருமயேந்திரப்பள்ளியில் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் வீரக்கழல்கள் அணிந்த திருவடிகளை வணங்குவீர்களாக. |
| **3132.** வங்கமார் சேணுயர் வருகுறி யான்மிகு<br>சங்கமா ரொலியகில் தருபுகை கமழ்தரு<br>மங்கையோர் பங்கினன் மயேந்திரப் பள்ளியுள்<br>எங்கணா யகன்றன திணையடி பணிமினே. 4 | வாணிகத்தின் பொருட்டு மிக்க நெடுந்தூரம் சென்ற கப்பல்கள் திரும்பிவரும் குறிப்பினை ஊரிலுள்ளவர்கட்கு உணர்த்த ஊதப்படும் சங்குகளின் ஒலியும், அகிற்கட்டைகளால் தூபம் இடுகின்ற போது உண்டாகும் நறுமணம் கமழும் புகையுமுடைய திருமயேந்திரப் பள்ளியுள், உமாதேவியைத் தன் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டு வீற்றிருந்தருளும் எங்கள் தலைவனான சிவபெருமானின் திருவடிகளை வணங்குவீர்களாக. |

| | | |
|---|---|---|
| **3133.** | நித்திலத் தொகைபல நிரைதரு மலரெனச்<br>சித்திரப் புணரிசேர்ந் திடத்திகழ்ந் திருந்தவன்<br>மைத்திகழ் கண்டனன் மயேந்திரப் பள்ளியுட்<br>கைத்தல மழுவனைக் கண்டடி பணிமினே. **5** | இறைவனை வழிபடற்கு மலர்களைக் கையால் ஏந்தி வருதல் போல, பல முத்துக்குவியல்களை அழகிய கடலானது அலைகளால் கரையினில் சேர்க்கத் திருமயேந்திரப் பள்ளியுள் வீற்றிருந்தருளும் இறைவனும், மை போன்று கருநிறம் கொண்ட கழுத்தையுடையவனும், கையில் மழு என்னும் ஆயுதத்தை ஏந்தியவனுமான சிவபெருமானைத் தரிசித்து அவன் திருவடிகளை வணங்குவீர்களாக. |
| **3134.** | சந்திரன் கதிரவன் றகுபுக ழயனொடும்<br>இந்திரன் வழிபட விருந்தவெம் மிறையவன்<br>மந்திர மறைவளர் மயேந்திரப் பள்ளியுள்<br>அந்தமி லழகனை யடிபணிந் துய்ம்மினே. **6** | சந்திரன், சூரியன், மிகுபுகழ்ப் பிரமன், இந்திரன் முதலியோர் வழிபட விளங்கும் எம் இறைவனாய், வேதமந்திரங்கள் சிறப்படைய திருமயேந்திரப் பள்ளியில் வீற்றிருந்தருளும் அழிவில்லாத பேரழகனாகிய சிவபெருமானின் திருவடிகளை வணங்கி நன்மை அடைவீர்களாக. |
| **3135.** | சடைமுடி முனிவர்கள் சமைவொடும் வழிபட<br>நடநவில் புரிவின னறவணி மலரொடு<br>படர்சடை மதியினன் மயேந்திரப் பள்ளியுள்<br>அடல்விடை யுடையவ னடிபணிந் துய்ம்மினே. **7** | சடைமுடியுடைய முனிவர்கள் பூசைத் திரவியங்களைச் சேகரித்து வழிபட, திருமயேந்திரப்பள்ளியுள் வீற்றிருந்தருளு பவனும், திருநடனம் செய்பவனும், தேன் துளிக்கும் வாசனைமிக்க அழகிய மலர்களோடு பரந்து விரிந்த சடையில் சந்திரனைச் சூடியவனும், வலிமையுடைய எருதினை வாகனமாக உடையவனுமான சிவபெருமானின் திருவடிகளை வணங்கி நன்மை அடைவீர்களாக! |
| **3136.** | சிரமொரு பதுமுடைச் செருவலி யரக்கனைக்<br>கரமிரு பதுமிறக் கனவரை யடர்த்தவன்<br>மரவமர் பூம்பொழின் மயேந்திரப் பள்ளியுள்<br>அரவமர் சடையனை யடிபணிந் துய்ம்மினே. **8** | பத்துத் தலைகளையுடைய, போர் செய்யும் வலிமையுடைய அரக்கனான இராவணனின் இருபது கரங்களும் கெடுமாறு, கனத்த கயிலைமலையின் கீழ் அடர்த்த பெருமானாய், வெண்கடம்ப மரங்கள் நிறைந்த அழகிய சோலை சூழ்ந்த திருமயேந்திரப்பள்ளியுள் வீற்றிருந்தருளும் பாம்பணிந்த சடைமுடியுடைய சிவபெருமானின் திருவடிகளை வணங்கி நன்மை அடையுங்கள். |

| | |
|---|---|
| 3137. நாகணைந் துயில்பவ னலமிகு மலரவன்<br>ஆகணைந் தவர்கழ லணையவும் பெறுகிலர்<br>மாகணைந் தலர்பொழின் மயேந்திரப் பள்ளியுள்<br>யோகணைந் தவன்கழல் உணர்ந்திருந்<br>துய்ம்மினே. 9 | ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையில் துயில்பவனான திருமாலும், அழகிய தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும், இறைவனின் அடிமுடிகளைத் தேட முற்பட்டு, பன்றி உருவெடுத்த திருமால் சிவனின் திருவடிகளை நெருங்கவும் இயலாதவரானார். (அன்ன உருவெடுத்த பிரமன் திருமுடியை நெருங்க இயலாதவரானார் என்பதும் குறிப்பு). ஆகாயமளாவிய பூஞ்சோலைகளையுடைய திருமயேந்திரப் பள்ளியில் யோகமூர்த்தியாய் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளை உணர்ந்து தியானித்து நன்மை அடைவீர்களாக.! |
| 3138. உடைதுறந் தவர்களு முடைதுவ ருடையரும்<br>படுபழி யுடையவர் பகர்வன விடுமினீர்<br>மடைவளர் வயலணி மயேந்திரப் பள்ளியுள்<br>இடமுடை யீசனை யிணையடி பணிமினே.<br>10 | ஆடையினைத் துறந்தவர்களாகிய சமணர்களும், மஞ்சள் உடை அணிபவர் களாகிய புத்தர்களும் மிக்க பழிக்கிடமாகக் கூறுவனவற்றைக் கேளாது விடுவீர்களாக. மடையின் மூலம் நீர் பாயும் வளமுடைய வயல்களையுடைய அழகிய மயேந்திரப்பள்ளியுள் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளை வணங்குவீர்களாக. |
| 3139. வம்புலாம் பொழிலணி மயேந்திரப் பள்ளியுள்<br>நம்பனார் கழலடி ஞானசம் பந்தன்சொல்<br>நம்பர மிதுவென நாவினா னவில்பவர்<br>உம்பரா ரெதிர்கொள வுயர்பதி யணைவரே.<br>11 | நறுமணம் கமழும் சோலைகளையுடைய அழகிய திருமயேந்திரப்பள்ளியுள் எவ்வுயிரும் விரும்பும் சிவபெருமானின் வீரக்கழலணிந்த திருவடிகளைப் போற்றி ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை 'இது நம்முடைய கடமை' என்ற உறுதியுடன் நாவினால் பாடித் துதிப்பவர்கள் தேவர்கள் எதிர்கொண்டு அழைக்க உயர்ந்த இடத்தினை அடைவார்கள். |

## 32. திருவேடகம்

**பண் : கொல்லி** **பதிக எண் : 32**

| | |
|---|---|
| 3140. வன்னியு மத்தமு மதிபொதி சடையினன்<br>பொன்னிய திருவடி புதுமல ரவைகொடு<br>மன்னிய மறையவர் வழிபட வடியவர்<br>இன்னிசை பாடல ரேடகத் தொருவனே. 1<br><br>'வாழ்க அந்தணர்' என்ற பாசுரம் எழுதப்பட்ட ஏடு சென்றடைந்த இடம் – ஏடகம். | வன்னியும், ஊமத்த மலரும், சந்திரனும் தாங்கிய சடைமுடியுடைய சிவபெருமானின் பொன்போன்ற திருவடிகளைப் புதுமலர்களைக் கொண்டு பெருமையுடைய அந்தணர்கள் போற்றி வழிபடவும், அடியவர்கள் இன்னிசையுடன் பாடிப் போற்றவும் ஒப்பற்ற இறைவனான சிவபெருமான் திருவேடகத்தில் வீற்றிருந்தருளுகின்றான். |

| | | |
|---|---|---|
| 3141. | கொடிநெடு மாளிகை கோபுரங் குளிர்மதி<br>வடிவுற வமைதர மருவிய வேடகத்<br>தடிகளை யடிபணிந் தரற்றுமி னன்பினால்<br>இடிபடும் வினைகள்போ யில்லைய தாகுமே. 2 | கொடிகளையுடைய நீண்டு உயர்ந்த மாளிகையின் கோபுரம் குளிர்ந்த சந்திரனைத் தழுவுதலால் மதிபோல் ஒளிரும் திருவேடகத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருவடிகளைக் கீழே விழுந்து வணங்கி இறைவனுடைய புகழைக்கூறி அன்பினால் வழிபடுங்கள். நம்மைத் துன்புறுத்தும் தீவினைகள் யாவும் அழிந்து விடும். |
| 3142. | குண்டலந் திகழ்தரு காதுடைக் குழகனை<br>வண்டலம் பும்மலர்க் கொன்றைவான் மதியணி<br>செண்டலம் பும்விடைச் சேடனூ ரேடகம்<br>கண்டுகை தொழுதலுங் கவலைநோய் கழலுமே. 3 | காதில் இரு கந்தருவர்களைக் குண்டலமாகக் கொண்டு விளங்கும் அழகராய், வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மலரையும், வானில் விளங்கும் சந்திரனையும் சடைமுடியில் அணிந்து, மணியோசை ஒலிக்க வீரநடை போடும் இடபவாகனத்தின் மீது வீற்றிருந்தருளும் மேன்மையுடையவரான சிவபெருமானின் ஊர் திருவேடகமாகும். அத்திருத்தலத்தை தரிசித்துக் கைகூப்பி வணங்கிப் போற்ற, மனக்கவலையால் வரும் நோய் நீங்கும். |
| 3143. | ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறும்<br>கோலமார் தருவிடைக் குழகனா ருறைவிடம்<br>சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகம்<br>சீலமா ரேடகஞ் சேர்தலாஞ் செல்வமே. 4 | மயிர்ச்சாந்து தடவிய மணமிகு கூந்தலை யுடைய உமாதேவியோடு, அழகிய இடப வாகனத்தில் ஏறும் அழகனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமான, ஆல், மாதவி, சந்தனம், செண்பகம் முதலியன மிகுந்து விளங்கும் சிறப்புடைய திருவேடகம் சென்று அவனை வழிபட்டால் செல்வம் பெருகும். |
| 3144. | வரியணி நயனிநன் மலைமகண் மறுகிடக்<br>கரியினை யுரிசெய்த கறையணி மிடறினன்<br>பெரியவன் பெண்ணினோ டாணலி யாகிய<br>எரியவ னுறைவிட மேடகக் கோயிலே. 5 | செவ்வரி படர்ந்த கண்களையுடைய, நல்ல மலைமகளான உமாதேவி கலங்க, யானையின் தோலை உரித்த, விடம் அணிகண்டரான, பெருமை மிகுந்தவரான சிவபெருமான், பெண்ணாகவும், ஆணாகவும், அலியாகவும் விளங்கும் சோதி உருவினர். அவர் வீற்றிருந்தருளும் இடமாவது திருவேடகக் கோயிலாகும். |
| 3145. | பொய்கையின் பொழிலுறு புதுமலர்த் தென்றலார்<br>வைகையின் வடகரை மருவிய வேடகத்<br>தையனை யடிபணிந் தரற்றுமின் னடர்தரும்<br>வெய்யவன் பிணிகெட வீடெளி தாகுமே. 6<br>______________________________<br>x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x x<br>7 | குளங்களிலும், சோலைகளிலும் அன்றலர்ந்த புது மலர்களின் மணத்தைச் சுமந்து தென்றல் காற்று வீச, வைகை ஆற்றின் வடகரையிலுள்ள திருவேடகத்தில் வீற்றிருக்கும் தலைவனான சிவபெருமானின் திருவடிகளைப் பணிந்து அவனைப் போற்றிப் பாடுங்கள். அது இம்மையில் துன்பம்தரும் கொடிய நோய்களைத் தீர்த்து, மறுமையில் முத்திப்பேற்றினை எளிதாகக் கிடைக்கச் செய்யும். |

| | | |
|---|---|---|
| 3146. | தடவரை யெடுத்தவன் றருக்கிறத் தோளடர்<br>படவிர லூன்றியே பரிந்தவற் கருள்செய்தான்<br>மடவர லெருக்கொடு வன்னியு மத்தமும்<br>இடமுடைச் சடையினன் ஏடகத் திறைவனே.<br>8 | பெரிய கயிலைமலையை எடுத்த இராவணனின் செருக்கைக் கெடுத்துத் தோள்கள் நொறுங்கும்படி காற்பெருவிரலை ஊன்றிப், பின்னர் தவறுணர்ந்து இராவணன் இசைத்து வழிபட அவனுக்குப் பரிவுடன் அருள்செய்த இறைவனாய், இளைய எருக்கு, வன்னி, ஊமத்தம் மலர்களை அணிந்த சடைமுடியுடைய சிவபெருமான் திருவேடகத்தில் வீற்றிருந்தருளும் இறைவன் ஆவான். |
| 3147. | பொன்னுமா மணிகளும் பொருதிரைச் சந்தகில்<br>தன்னுளார் வைகையின் கரைதனிற் சமைவுற<br>அன்னமா மயனுமா லடிமுடி தேடியும்<br>இன்னவா றெனவொணான் ஏடகத் தொருவனே.<br>9 | பொன்னும், மணிவகைகளும், சந்தனம், அகில் ஆகிய மரங்களும் வீசுகின்ற அலைகள் வாயிலாகக் கொண்டுவந்து சேர்க்கப்படும் வைகையின் கரையில், அன்னப் பறவையாகப் பிரமன் திருமுடியையும், பன்றி வடிவாகத் திருமால் திருவடியையும் தேடியும் இன்னவெனக் காணொணாது விளங்கிய சிவபெருமான் திருவேடகத்தில் வீற்றிருந்தருளும் ஒப்பற்ற இறைவன் ஆவான். |
| 3148. | குண்டிகைக் கையினர் குணமிலாத் தேரர்கள்<br>பண்டியை பெருக்கிடும் பளகர்கள் பணிகிலர்<br>வண்டிரைக் கும்மலர்க் கொன்றையும் வன்னியும்<br>இண்டைசேர்க் குஞ்சடை யேடகத் தெந்தையே.<br>10 | கையில் குண்டிகையேந்திய சமணர்களும், இறை உண்மையை உணராத புத்தர்களும், உண்டு வயிற்றைப் பெருக்கச் செய்யும் பாவிகள். அவர்கள் இறைவனை வணங்காதவர்கள். அவர்களின் உரைகளைப் பொருளாகக் கொள்ளவேண்டா. வண்டுகள் மொய்க்கின்ற கொன்றை மலரையும், வன்னியையும் மாலையாக அணிந்த சடைமுடியுடைய, திருவேடகத்தில் வீற்றிருந்தருளும் எம் தந்தையாகிய சிவபெருமானை ஏத்தி வழிபடுங்கள். |
| 3149. | கோடுசந் தனமகில் கொண்டிழி வைகைநீர்<br>ஏடுசென் றணைதரு மேடகத் தொருவனை<br>நாடுதென் புகலியுண் ஞானசம் பந்தன<br>பாடல்பத் திவைவல்லார்க் கில்லையாம் பாவமே.<br>11 | யானையின் தந்தம், சந்தனம், அகில் ஆகியவற்றை அலைகள் வாயிலாகக் கொண்டுவரும் வைகைநீரில் எதிர் நீந்திச் சென்ற திருவேடு தங்கிய திருவேடகம் என்னும் திருத்தலத்திலுள்ள ஒப்பற்ற இறைவனை நாடிப் போற்றிய, அழகிய புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இப்பத்துப் பாடல்களையும் பக்தியுடன் ஓதவல்லவர்கட்குப் பாவம் இல்லை. அவர்கள் தீவினைகளிலிருந்து நீங்கப் பெற்றவர்கள் ஆவர். |

திருஞானசம்பந்தர் புனல்வாதத்தில் மதுரையில் இட்டஏடு வைகையாற்றில் எதிர்த்துச்செல்ல, அதை எடுப்பதற்காகக் குலச்சிறையார் சென்றார். காற்றென கடும்பரியில் சென்றார். அவ்வேடு மேலும் செல்லாமல் தங்கற் பொருட்டு ஏடகத்தை ஏற்றிப் பாடியதற்கான அகச்சான்றுப் பாடல் இதுவாகும்.

## 33. திருவுசாத்தானம் ( கோயிலூர் )

பண் : கொல்லி

பதிக எண் : 33

3150. நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவான்
போருடைச் சுக்கிரீ வன்அநு மான்றொழக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெம்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே. 1

இராமபிரான் இலங்கைக்குச் செல்வதன் முன் இங்கு மந்திர உபதேசம் பெற்றதால் இப்பெயர் பெற்றது.

பாற்கடலில் பள்ளிகொள்ளும் திருமாலின் அவதாரமான இராமனும், இலக்குமணனும், சாம்பவான், சுக்கிரீவன், அனுமன் ஆகியோரும் தொழுது வணங்கக் கருநிற நஞ்சை உண்டு காத்தருள் செய்த எம் பெருமைக்குரிய, எங்களை ஏவல்கொள்ளும் தலைவனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவுசாத்தானம் ஆகும்.

---

3151. கொல்லையே றுடையவன் கோவண ஆடையன்
பல்லையார் படுதலைப் பலிகொளும் பரமனார்
முல்லையார் புறவணி முதுபதி **நறைகமழ்**
**தில்லையா னுறைவிடந் திருவுசாத் தானமே.** 2

தில்லைப்பதியான் இங்கு விரும்பி எழுந்தருளியிருக்கும் காரணம் பற்றிக் கோயிலூர் என்றும் பெயர் பெற்றது.

முல்லைநிலம் சார்ந்த எருதை (திருமாலை) இறைவன் வாகனமாக உடையவன். கோவண ஆடை உடையவன். முன்பல்லிருந்த உலர்ந்த பிரமகபாலத்தை ஏந்திப் பிச்சையேற்கும் பரமன். முல்லைக்கொடிகளையுடைய முல்லை நிலத்தில், தேன் துளிக்கும் சோலைகளை யுடைய அழகிய பழம்பதியான தில்லையில் விளங்குபவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவுசாத்தானம் ஆகும்.

---

3152. தாமலார் போலவே தக்கனார் வேள்வியை
**ஊமனார் தங்கனா வாக்கினா** னொருநொடிக்
காமனா ருடல்கெடக் காய்ந்தவெங் கண்ணுதல்
சேமமா வுறைவிடந் திருவுசாத் தானமே. 3

ஊமனார் தம்கனா ஆக்கினான்—ஊமையன் தான் கனவு கண்டதைச் சொல்ல முடியாதது போலத் தக்கனும் தன் வேள்வி அழிவுபட்டுத்தானும் பட்டதைச் சொல்ல முடியாத ஆட்டுத்தலை பெற்ற வரலாறு.

தான் அயலார் போதைத் தன் மாமனான தக்கன் செய்த வேள்வியை ஊமன் கண்ட கனவு போலப் பயனற்றதாக்கினான். ஒரு நொடியில் மன்மதனின் உடல் எரிந்து சாம்பலாகுமாறு செய்த நெற்றிக் கண்ணுடைய கடவுளாவான். அப்பெருமான் அடியவர்கட்கு நன்மை தரும் பொருட்டு வீற்றிருந்தருளும் இடம் திருவுசாத்தானம் ஆகும்.

---

3153. மறிதரு கரத்தினான் மால்விடை யேறியான்
குறிதரு கோலநற் குணத்தினா ரடிதொழ
**நெறிதரு வேதியார் நித்தலு நியமஞ்செய்**
செறிதரு பொழிலணி திருவுசாத் தானமே. 4

உசாவுதல் – கேட்டல்.

இள மான்கன்றைத் திருக்கரத்தில் ஏந்தி, பெருமையுடைய இடப வாகனத்தில்ஏறி, சிவவேடப் பொலிவுடைய நற்பண்புடைய அடியவர்கள் தன் திருவடியைத் தொழுது போற்றவும், சிவாகமநெறியில் ஒழுகும் அந்தணர்கள் நாள்தோறும் நியமத்துடன் பூசை செய்யவும் விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் அடர்ந்த சோலைகள் சூழ்ந்த அழகிய திருவுசாத்தானம் ஆகும்.

XXXXXXXXXXXXXXXXXXXXXX 5, 6

| | |
|---|---|
| **3154.** பண்டிரைத் தயனுமா லும்பல பத்தர்கள்<br>தொண்டிரைத் தும்மலர் தூவித்**தோத்**<br>**திரஞ்சொலக்**<br>கொண்டிரைக் கொடியொடுங் குருகினி<br>னல்லினம்<br>தெண்டிரைக் கழனிசூழ் திருவுசாத் தானமே. 7<br><br>தோத்திரம் பிறரும் கேட்குமாறு ஓசையோடு பாடுக. மந்திரத்தைப் பிறர் காதிற் படாதவாறு உச்சரிக்க. | பண்டைக்காலம் முதல் மகிழ்ச்சியால் ஆரவாரித்துப் பிரமனும், திருமாலும், மற்றுமுள்ள பல பக்தர்களும் அடிமைத் திறத்தினால் மலர்களைத் தூவி தோத்திரம் சொல்லி வழிபட, இறைவன் வீற்றிருந் தருளுவது, மீன் முதலிய இரைகளைக் கவரும் காக்கையோடு, நல்ல பறவை இனங்கள் தங்குகின்ற, நீர்வளமிக்க வயல்கள் சூழ்ந்த திருவுசாத்தானம் ஆகும். |
| **3155.** மடவரல் பங்கினன் மலைதனை மதியாது<br>சடசட வெடுத்தவன் தலைபத்து நெரிதர<br>அடர்தர வூன்றியங் கேயவற் கருள்செய்தான்<br>திடமென வுறைவிடந் திருவுசாத் தானமே. 8<br><br>தாமலர் போலவே – தாமே உண்ணின்று இயற்றுவித்தும் புறத்தோற்றத்தில் இவரல்லாது வீர பத்திரர் இயற்றியதாகத் தோற்றம் ஏற்படுத்துதல். | உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு விளங்கும் இறைவன். கயிலைமலையை மதியாது பெயர்த்தெடுத்த இராவணனின் பத்துத் தலைகளும் நெரியும்படிதன் காற் பெருவிரலை ஊன்றி அம்மலையின்கீழ் அவனை அடர்த்து, பின்னர் இராவணன் தன் தவறுணர்ந்து வழிபட அவனுக்கு அருள் செய்தவன். அப்பெருமான் உறுதியாக வீற்றிருந்தருளும் இடம் திருவுசாத்தானம் ஆகும். |
| **3156.** ஆணலார் பெண்ணலார் அயனொடு மாலுக்கும்<br>காணொணா வண்ணத்தான் கருதுவார்<br>மனத்துளான்<br>பேணுவார் பிணியொடும் பிறப்பறுப் பானிடம்<br>சேணுலா மாளிகைத் திருவுசாத் தானமே. 9 | இறைவர் ஆணுமல்லர். பெண்ணுமல்லர். பிரமனும், திருமாலும் காணொணாத வண்ணம் விளங்குபவர். தம்மை நினைந்து வழிபடும் அன்பர்களின் மனத்தில் நிறைந்துள்ளவர். தம்மை வழிபடும் அடியவர்களின் உடல்நோயை நீக்குவதோடு பிறவி நோயையும் தீர்ப்பவர். அப்பெருமானார் வீற்றிருந்தருளும் இடம் ஆகாயமளாவிய மாளிகைகள் உடைய திருவுசாத்தானம் ஆகும். |
| **3157.** கானமார் வாழ்க்கையான் காரமண் டேரர்சொல்<br>ஊனமாக் கொண்டுநீ ருரைமினுய் யவெனில்<br>வானமார் மதிலணி மாளிகை வளர்பொழில்<br>தேனமா மதியந்தோய் திருவுசாத் தானமே. 10 | சமணர்களும், புத்தர்களும், இறையுண்மையை உணராது கூறும் சொற்கள் பயனற்றவை. நீங்கள் உய்ய வேண்டும் என்றால் சுடுகாட்டில் திருநடனம் செய்யும் இறைவன் வீற்றிருந் தருளுகின்ற, வானளாவிய உயர்ந்த மதில்களும், மாளிகைகளும், செழித்த சோலைகளும் சூழ்ந்த இனிய நிலவு தோயும் திருவுசாத்தானம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுங்கள். |

**3158.** வரைதிரிந் திழியுநீர் வளவயற் புகலிமன்
திரைதிரிந் தெறிகடற் றிருவுசாத் தானரை
உரைதெரிந் துணருஞ்சம் பந்தனொண்
தமிழ்வல்லார்
நரைதிரை யின்றியே நன்னெறி சேர்வரே. **11**

மலையிலிருந்து தன் தன்மை மாறுபட்டுப் பாயும் காவிரியின் நீர் வளமும், வயல் வளமும் மிகுந்த புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன், அலை வீசுகின்ற கடலையுடைய திருவுசாத்தானத்தில் வீற்றிருந்தருளும் இறைவனை உணர்ந்து போற்றிய இந்த ஒண் தமிழ்ப் பதிகத்தை ஓத வல்லவர்கள் நரை, திரை என வந்து தாக்கும் மூப்பின் தளர்ச்சியின்றி, இளமை மிடுக்குடன் வாழ்ந்து சிவஞான நெறியில் நிற்பர்.

## 34. திருமுதுகுன்றம் ( விருத்தாசலம் – பழமலை )

**பண் : கொல்லி** **பதிக எண் : 34**

**3159.** வண்ணமா மலர்கொடு வானவர் வழிபட
அண்ணலா ராயிழை யாளொடு மமர்விடம்
விண்ணின்மா மழைபொழிந் திழியவெள்
ளருவிசேர்
திண்ணிலார் புறவணி திருமுது குன்றமே. 1

பல வண்ண மலர்களைக் கொண்டு வானவர்கள் வழிபடச் சிவபெருமான் அழகிய ஆபரணங்கள் அணிந்த உமாதேவியோடு இனிது வீற்றிருந்தருளும் இடமாவது, வானத்திலிருந்து மழை பொழிந்து வெள்ளருவியாகப் பாயச் செழித்த திண்மையான முல்லைநிலம் சூழ விளங்கும் அழகிய திருமுதுகுன்றம் ஆகும்.

காசியின் விழுமிதான முதுகுன்ற வரையும் கண்டான் என்று கச்சியப்பர் கந்தபுராணத்தில் முருகப்பெருமான் வழிநடைப்படலத்தில் வழிபட்ட வரலாற்றைப் பதிவு செய்கிறார்.

**3160.** வெறியுலாங் கொன்றையந் தாரினான் மேதகு
பொறியுலா மரவசைத் தாடியோர் புண்ணியன்
மறியுலாங் கையினான் மங்கையோ டமர்விடம்
செறியுளார் புறவணி திருமுது குன்றமே. 2

வாசனை பொருந்திய கொன்றை மாலையை அணிந்து, படமெடுக்கும் புள்ளிகளையுடைய பாம்பை இடையில் கட்டி ஆடுகின்ற புண்ணிய மூர்த்தியான சிவபெருமான், இளமான் கன்றை ஏந்திய திருக்கரத்தை உடையவனாய், உமாதேவியோடு வீற்றிருந்தருளுகின்ற இடமானது சோலைகள் நிறைந்த அழகிய திருமுதுகுன்றம் ஆகும்.

தலமரம் – வன்னி மிகப்பழமையானது.
மிகப்பெரியது. அதன் முதுமையை இரசிக்க வேண்டும்.

**3161.** ஏறினார் விடைமிசை இமையவர் தொழவுமை
கூறனார் கொல்புலித் தோலினார் மேனிமேல்
நீறனார் நிறைபுனற் சடையனார் நிகழ்விடம்
தேறலார் பொழிலணி திருமுது குன்றமே. 3

சுந்தரர் தாம் பெற்ற பொன்னை இத்தலத்தீர்த்தமான மணிமுத்தாறு நதியிலே இட்டுத் திருவாரூர்க் கமலாலயக் குளத்தில் பெற்றார்.
மலையினின்று மணிகளையும், முத்துக்களையும் வாரியலைத்து வருதலின் இது மணிமுத்தாறு எனப்பெயர் பெற்றது.

இறைவன், இடப வாகனத்தில் ஏறித் தேவர்கள் தொழுது போற்ற, உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு கூறாகக் கொண்டு, கொல்லும் தன்மையுடைய புலியின் தோலை ஆடையாக அணிந்து, திருமேனியில் திருவெண்ணீறு அணிந்து, நிறைந்த கங்கையைச் சடைமுடியில் தாங்கி வீற்றிருந்தருளும் இடமாவது, தேன் துளிகளையுடைய மலர்கள் விளங்கும் சோலைகள் சூழ்ந்த அழகிய திருமுதுகுன்றம் ஆகும்.

**3162.** உரையினா ருறுபொரு ளாயினா னுமையொடும்
விரையினார் கொன்றைசேர் சடையினார் மேவிடம்
உரையினா ரொலியென வோங்குமுத் தாறுமெய்த்
திரையினா ரெறிபுனற் றிருமுது குன்றமே. 4

மலை – சிவபெருமானின் திருவுரு.
திருமணிமுத்தாறு – சக்தி யுரு.
இறந்தவர் எலும்பு இடப்பதுவதால் அத்திமுத்தாறு.
தன்பால் மூழ்கினால்முக்தி வழங்குதலால் – முத்திமுத்தாறு

இறைவன் வேதத்தால் நுவலப்படும் பொருளாக விளங்குபவன். உமாதேவியை உடனாகக் கொண்டு நறுமணம் கமழும் கொன்றை மலரைச் சடைமுடியில் அணிந்தவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் பக்தர்கள் உரைக்கும் அரநாமத்தின் ஒலியென அலையோசை எழுப்பும், பெருகுகிற மணிமுத்தாறுடைய திருமுதுகுன்றம் ஆகும்.

**3163.** கடியவா யினகுரற் களிற்றினைப் பிளிறவோர்
இடியவெங் குரலினோ டாளிசென் றிடுநெறி
வடியவாய் மழுவினன் மங்கையோ டமர்விடம்
செடியதார் புறவணி திருமுது குன்றமே. 5

கனத்த குரலில் ஆண் யானையானது பிளிற, இடிபோன்ற குரலில் கர்ச்சிக்கும் சிங்கம் செல்லும் வழிகளில், கூரிய முனையுடைய மழுப்படை ஏந்தி, உமாதேவியோடு இறைவன் வீற்றிருந்தருளும் இடமாவது செடிகொடிகள் அடர்ந்த குறிஞ்சிப் புறவிடமான அழகிய திருமுதுகுன்றம் ஆகும்.

**3164.** கானமார் கரியினீ ருரிவையார் பெரியதோர்
வானமார் மதியினோ டரவர்தா மருவிடம்
ஊனமா யினபிணி யவைகெடுத் துமையொடும்
தேனமார் பொழிலணி திருமுது குன்றமே. 6

காட்டில் திரியும் யானையின் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்திய இறைவன், அகன்ற வானத்தில் தவழும் சந்திரனையும், பாம்பையும் அணிந்து, உயிர்களைப் பற்றியுள்ள குற்றமான ஆணவம் என்னும் நோயைத் தீர்த்து அருளும் பொருட்டு உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடமாவது, தேன் துளிக்கும் பூஞ்சோலை களையுடைய அழகிய திருமுதுகுன்றம் ஆகும்.

| | |
|---|---|
| **3165.** மஞ்சர்தா மலர்கொடு வானவர் வணங்கிட<br>வெஞ்சொலார் வேடரோ டாடவர் விரும்பவே<br>அஞ்சொலா ளுமையொடும் மமர்விட மணிகலைச்<br>செஞ்சொலார் பயிறருந் திருமுது குன்றமே. 7<br><br>இந்தத்தலத்தில் மரிக்கும் உயிர்களை மரண சமயத்தில் உமாதேவியார் தம்மடியில் வைத்து முன்தானையால் விசிறுவாரென்பதும் சிவபெருமான் அவ்வுயிர்களின் வலக்காதில் பஞ்சாட்சர உபதேசம் செய்தருளுவாரென்பதும் பல தல நூல்களில் சொல்லப்பட்டுள்ளன. | வலிமை மிகுந்தவராகிய சிவபெருமானைத் தேவர்கள் மலர்தூவிப் போற்றி வணங்க, கொடுந்தொழில் செய்யும் வேடர்களும், பிற ஆடவர்களும் விரும்பித் தொழ, அழகிய இன்சொல் பேசும் உமாதேவியோடு இறைவர் வீற்றிருந்தருளும் இடம் வேதங்களை நன்கு கற்றவர்களும், பக்திப் பாடல்களைப் பாடுபவர்களும் வசிக்கின்ற திருமுதுகுன்றம் ஆகும். |
| **3166.** காரினா ரமர்தருங் கயிலைநன் மலையினை<br>ஏரினார் முடியிரா வணனெடுத் தானிற<br>வாரினார் முலையொடும் மன்னினார் மருவிடம்<br>சீரினார் திகழ்தருந் திருமுது குன்றமே. 8 | மழை பொழியும் கார்மேகம் போன்று உயிர்கட்கு அருள்புரியும் சிவபெருமான் வீற்றிருக்கும் நன்மைதரும் கயிலை மலையினை, அழகிய முடியுடைய இராவணன் எடுத்தபோது, அவனை நலியச் செய்த இறைவன், கச்சணிந்த முலையுடைய உமாதேவியோடு வீற்றிருந் தருளும் இடம் சிறப்புமிக்க திருமுதுகுன்றம் ஆகும். |
| **3167.** ஆடினார் கானகத் தருமறை யின்பொருள்<br>பாடினார் பலபுகழ்ப் பரமனா ரிணையடி<br>ஏடினார் மலர்மிசை யயனுமா லிருவரும்<br>தேடினா ரறிவொணார் திருமுது குன்றமே. 9 | இறைவர் சுடுகாட்டில் திருநடனம் ஆடியவர். அரிய வேதங்களை அருளி, அவற்றின் உட்பொருளை விரித்தோதியவர். எவ்வுயிர் கட்கும் தலைவரான அவர், தம் திருவடிகளை இதழ்களையுடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் தேடியும் அறியப்படவொண்ணாதவர். அப்பெருமானார் வீற்றிருந்தருளும் இடம் திருமுதுகுன்றம் ஆகும். |
| **3168.** மாசுமெய் தூசுகொண் டுழல்சமண் சாக்கியர்<br>பேசுமெய் யுளவல்ல பேணுவீர் காணுமின்<br>வாசமார் தருபொழில் வண்டினம் மிசைசெயத்<br>தேசமார் புகழ்மிகுந் திருமுது குன்றமே. 10 | அழுக்கு உடம்பையும், அழுக்கு உடையையு முடைய சமணர்களும், புத்தர்களும் கூறும் மொழிகள் மெய்ம்மையானவை அல்ல. வாசனை பொருந்திய சோலைகளில் வண்டினங்கள் இசைக்க, அழகும், புகழும் மிகுந்த திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தைத் தரிசித்து, அங்குள்ள இறைவனைப் போற்றி வழிபடுங்கள். |

| | |
|---|---|
| **3169.** திண்ணினார் புறவணி திருமுது குன்றரை<br>நண்ணினான் காழியுண் ஞானசம் பந்தன்சொல்<br>எண்ணினா னீரைந்து மாலையு மியலுமாப்<br>பண்ணினாற் பாடுவார்க் கில்லையாம் பாவமே. **11** | செழுமையான சோலைகளையுடைய திருமுது குன்றத்தில் வீற்றிருந்தருளும் இறைவனை மனம், வாக்கு, காயம் மூன்றும் ஒன்றுபட வழிபட்டு, சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தைப் பண்ணிசையோடு பாட வல்லவர்களின் பாவம் நீங்கும். |

## 35. தென்குடித்திட்டை

**பண் : கொல்லி** **பதிக எண் : 35**

| | |
|---|---|
| **3170.** முன்னைநான் மறையவை முறைமுறை<br>குறையொடும்<br>தன்னதாள் தொழுதெழ நின்றவன் றன்னிடம்<br>மன்னுமா காவிரி வந்தடி வருடநல்<br>செந்நெலார் வளவயல் தென்குடித் திட்டையே. **1**<br><br>வெண்ணாறு, வெட்டாறுகளுக்கு நடுவில் திட்டாக இருப்பதால் திட்டை என்று பெயர் பெற்றது. | நான்கு மறைகளும் நூல்களில் விதித்த முறையில் தொழுது போற்ற, உயிர்களெல்லாம் தங்களது குறைகளை முறையிட்டுத் தன் திருவடிகளை வணங்கிப் போற்றச் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, காவிரிநீர் வாய்க்கால்கள் வழிவந்து, செந்நெல் விளையும் வயல்களை வளப்படுத்தும் சிறப்புடைய திருத்தென்குடித்திட்டை ஆகும். |
| **3171.** மகரமா டுங்கொடி மன்மத வேடனை<br>நிகரலா காநெருப் பெழவிழித் தானிடம்<br>பகரவா ணித்திலம் பன்மக ரத்தொடும்<br>சிகரமா ளிகைதொகுந் தென்குடித் திட்டையே. **2** | மீன்கொடியுடைய மன்மதன் எரிந்து சாம்பலாகுமாறு நெருப்புப்பொறிப் பறக்க நெற்றிக் கண்ணைத் திறந்து விழித்த ஒப்பற்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, வான் போல் மின்னும் முத்துக்களும், பல அணிவகைகளும் பதிக்கப்பெற்று, உயர்ந்து விளங்கும் மாளிகைகளையுடைய திருத்தென் குடித்திட்டை என்பதாகும். |
| **3172.** கருவினா லன்றியே கருவெலா மாயவன்<br>உருவினா லன்றியே யுருவுசெய் தானிடம்<br>பருவநாள் விழவொடும் பாடலோ டாடலும்<br>திருவினான் மிகுபுகழ்த் தென்குடித் திட்டையே.<br>**3** | இறைவன் கருவயப்பட்டுப் பிறவாமலே எல்லாப் பொருள்கட்கும் கருப்பொருளாக விளங்குபவன். தனக்கென ஒரு குறிப்பிட்ட உருவமில்லாத இறைவன், பிற பொருள்களெல்லாம் உருவு கொள்ளும்படி தோற்றுவித்து அருள்பவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, பருவ காலங்களிலும், திருவிழாக் காலங்களிலும் பாடலும், ஆடலும் செல்வத்தால் மிகச் சிறப்புற நடக்கும் புகழையுடைய திருத்தென்குடித்திட்டை என்பதாகும். 'கருவினாலன்றி' என்றது சிவபெருமான் கருவயப்பட்டுப் பிறவான் என்பதை உணர்த்தும். |

| | | |
|---|---|---|
| 3173. | உண்ணிலா வாவியா யோங்குதன் றன்மையை<br>விண்ணிலா ரறிகிலா வேதவே தாந்தனூர்<br>எண்ணிலா ரெழின்மணிக் கனகமா ளிகையிளந்<br>தெண்ணிலா விரிதருந் தென்குடித் திட்டையே. 4 | இறைவன் உயிருக்குள் உயிராய் ஓங்கி ஒளிரும் தன்மையைத் தேவர்களும் அறிகிலர். அவன் வேத உடநிடத உட்பொருளாக விளங்குபவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் அழகிய மணிகள் பதிக்கப்பெற்ற பொன்மாளிகையின் மேல், தெளிந்த நிலவின் ஒளி பரவும் திருத்தென்குடித்திட்டை என்பதாகும். |
| 3174. | வருந்திவா னோர்கள்வந் தடையமா நஞ்சுதான்<br>அருந்தியா ரமுதவர்க் கருள்செய்தா னமருமூர்<br>செருந்திபூ மாதவிப் பந்தர்வண் செண்பகம்<br>திருந்துநீள் வளர்பொழில் தென்குடித் திட்டையே. 5 | திருப்பாற்கடலைக் கடைந்தபோது தோன்றிய நஞ்சின் வெப்பத்தால் துன்புற்றுத் தேவர்கள் தன்னைத் தஞ்சமென வந்தடைய, அவர்களுக்கு இரங்கி, நஞ்சைத் தான் அருந்தி, அமுதத்தை அவர்கட்கு அருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் நகர், செருந்தி, மாதவி, செண்பகம் இவை மிகுதியாக வளரும் நீண்ட சோலைகளை உடைய திருத்தென்குடித் திட்டையாகும். |
| 3175. | ஊறினா ரோசையுள் ஒன்றினா ரொன்றிமால்<br>கூறினா ரமர்தருங் குமரவேள் தாதையூர்<br>ஆறினார் பொய்யகத் தையுணர் வெய்திமெய்<br>தேறினார் வழிபடுந் தென்குடித் திட்டையே. 6 | இறைவர் எப்பொருள்களிலும் நிறைந்தவர். எல்லா ஓசைகளிலும் ஒன்றியவர். திருமாலை ஒரு கூறாகக் கொண்டவர். குமரக்கடவுளின் தந்தை. அப்பெருமானார் வீற்றிருந்தருளும் நகரானது, ஆறு பகைகளாகிய காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் இவற்றைக் களைந்து, நிலையற்ற பொருள்கள்மேல் செல்லும் அவாவினை அடக்கி, மனத்தைப் பொறி வழிச் செல்ல விடாது ஒருமுகப்படுத்தி, சிவனே மெய்ப்பொருள் எனத் தெளிந்தவர்கள் வழிபடும் திருத்தென்குடித்திட்டை என்பதாகும். |
| 3176. | கானலைக் கும்மவன் கண்ணிடந் தப்பநீள்<br>வானலைக் குந்தவத் தேவுவைத் தானிடம்<br>தானலைத் தெள்ளமூர் தாமரைத் தண்டுறை<br>தேனலைக் கும்வயல் தென்குடித் திட்டையே. 7 | காட்டிலுள்ள உயிர்களை வருத்தும் வேடர் குலத்தவராகிய கண்ணப்ப நாயனார் கண் இடந்து அப்பியபோது, தேவர்களும் பொறாமையால் வருந்தும்படி, தவத்தையுடைய கண்ணப்பரைத் தெய்வமாகச் செய்தான் சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, தெளிந்த நீர்நிலைகளில் மலர்ந்துள்ள தாமரைகளின் தண்டிலிருந்து தேன்பெருகிப் பாயும் வயல்வளமுடைய திருத்தென்குடித் திட்டை என்பதாகும். |

| | | |
|---|---|---|
| 3177. | மாலொடும் பொருதிறல் வாளரக் கன்னெரிந்<br>தோலிடும் படிவிர லொன்றுவைத் தானிடம்<br>காலொடுங் கனகமூக் குடன்வரக் கயல்வரால்<br>சேலொடும் பாய்வயல் தென்குடித்திட்டையே. 8 | திருமாலின் அவதாரமான இராமனோடும் போர் புரியும் வல்லமைபெற்ற அரக்கனான இராவணன் கயிலை மலையின் கீழ்ச் சிக்குண்டு ஓலமிட்டு அலறும்படி தன்காற் பெருவிரலை ஊன்றிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, கால்வாய் வழியாகச் செல்லும் நீரில் பொன்னிற மூக்குடைய கயல், வரால், சேல் போன்ற மீன்கள் வந்து பாயும் வயல்களையுடைய திருத்தென்குடித்திட்டை என்பதாகும். |
| 3178. | நாரணன் றன்னொடு நான்முகன் றானுமாய்க்<br>காரணன் னடிமுடி காணவொண் ணானிடம்<br>ஆரணங் கொண்டுபூ சுரர்கள்வந் தடிதொழச்<br>சீரணங் கும்புகழ்த் தென்குடித் திட்டையே. 9 | திருமாலும், பிரமனும் தேடியும் அடிமுடி காணவொண்ணாதவாறு விளங்கிய, உலகிற்கு நிமித்த காரணமான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், இப்பூவுல தேவர்கள் என்று சொல்லப்படும் அந்தணர்கள் வேதம் ஓதித் தன் திருவடிகளை வணங்குமாறு சிறந்த தெய்வத்தன்மையுடைய புகழுடன் சிவபெருமான் விளங்கும் திருத்தென்குடித் திட்டை என்பதாகும். |
| 3179. | குண்டிகைக் கையுடைக் குண்டரும் புத்தரும்<br>பண்டுரைத் தேயிடும் பற்றுவிட் டீர்தொழும்<br>வண்டிரைக் கும்பொழிற் றண்டலைக்<br>கொண்டலார்<br>தெண்டிரைத் தண்புனல் தென்குடித் திட்டையே. 10 | கமண்டலம் ஏந்திய கையுடைய சமணர்களும், புத்தர்களும் சொல்லும் பொருத்தமில்லாத உரைகளைப் பற்றி நில்லாதீர். வண்டுகள் ஒலிக்கும் சோலையின் உச்சியில் குளிர்ந்த மேகங்கள் தவழ, தெளிந்த அலைகளையுடைய குளிர்ச்சியான ஆறுபாயும் திருத்தென்குடித் திட்டையைச் சார்ந்து இறைவனை வழிபடுங்கள். |
| 3180. | தேனலார் சோலைசூழ் தென்குடித் திட்டையைக்<br>கானலார் கடிபொழில் சூழ்தருங் காழியுள்<br>ஞானமார் ஞானசம் பந்தன செந்தமிழ்<br>பானலார் மொழிவலார்க் கில்லையாம் பாவமே. 11 | தேன் துளிக்கும் மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த திருத்தென்குடித் திட்டையைப் போற்றி, கடற்கரையின்கண் அமைந்துள்ள நறுமணமிக்க சோலைகள் சூழ்ந்த சீகாழியில் அவதரித்த, சிவஞானம் நிறைந்த ஞானசம்பந்தன் அருளிய இச்செந்தமிழ்ப் பாக்களைப் பாடவல்லவர்கட்குப் பாவம் இல்லை. |

## 36. திருக்காளத்தி

பண் : கொல்லி

பதிக எண் : 36

3181. சந்தமா ரகிலொடு சாதிதேக் கம்மரம்
உந்துமா முகலியின் கரையினி லுமையொடும்
மந்தமார் பொழில்வளர் மல்குவண் காளத்தி
எந்தையா ரிணையடி யென்மனத் துள்ளவே. 1

காளத்தியப்பரையும் கண்ணப்பரையும் வணங்கிப் பதிகம்பாடி பின்பு அங்கிருந்தபடியே வடநாட்டுத்தலங்களான கேதாரம், கயிலாயம், பருப்பதம் அவற்றின் மேலும் பதிகம்பாடி விடை கொண்டு புறப்படும்போது பாடியதாக இப்பதிகத்தைக் கொள்ளலாம்.

சந்தனம், அகில், சாதிக்காய், தேக்கு ஆகிய மரங்களை அலைகளால் உந்தித் தள்ளிவரும் சிறப்பான பொன்முகலி என்னும் ஆற்றின் கரையில், தென்றல் காற்று வீசும் சோலைகள் வளர்ந்து பெருக, வள்ளல் தன்மையுடைய எம் தந்தையாகிய காளத்திநாதர் உமாதேவியோடு, அவருடைய திருவடிகள் எம் மனத்தில் பதியுமாறு வீற்றிருந்தருளுகின்றார்.

3182. ஆலமா மரவமோ டமைந்தசீர்ச் சந்தனம்
சாலமா பீலியுஞ் சண்பக முந்தியே
காலமார் முகலிவந் தணைதரு காளத்தி
நீலமார் கண்டனை நினையுமா நினைவதே. 2

முன்னை நாளில் காளன் என்னும் பாம்பும், யானையும் தம் முன் மாறு கொண்டு சிவபெருமானை இத்தலத்தில் பூசித்தனர். பின்னாளில் சிவகோசரியாரும், கண்ணப்ப நாயனாரும் இகலி வழிபட்ட செயலை உற்று நோக்கினால் மண்வாசனை மாறாது என்று முடிவுக்கு வரலாமா?

ஆல், மா, குங்கும மரம், சந்தனம் ஆகிய மரங்களும், மிகுதியான மயிற்பீலியும், சண்பகமும் அலைகளால் தள்ளப்பட்டுப் பருவ காலங்களில் நிறைகின்ற பொன்முகலி என்னும் ஆற்றின் கரையில் அமைந்துள்ள திருக்காளத்தி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் நீலகண்டனான இறைவனை, எவ்வகையில் நினைந்து வழிபடுதல் பொருந்துமோ அத்தன்மையில் நினைந்து வழிபடுதல் நம் கடமையாகும்.

3183. கோங்கமே குரவமே கொன்றையம் பாதிரி
மூங்கில்வந் தணைதரு முகலியின் கரையினில்
ஆங்கமர் காளத்தி யடிகளை யடிதொழ
வீங்குவெந் துயர்கெடும் வீடெளி தாகுமே. 3

கோங்கு, குரவம், கொன்றை, பாதிரி, மூங்கில் ஆகிய மரங்களைத் தள்ளிக் கொண்டுவரும் பொன்முகலி ஆற்றின் கரையில் வீற்றிருக்கும் காளத்திநாதரின் திருவடிகளைத் தொழுது போற்ற, பெருகிவரும் கொடிய துன்பம் கெடும். முத்திப்பேறு எளிதாகக் கைகூடும்.

3184. கரும்புதேன் கட்டியுங் கதலியின் கனிகளும்
அரும்புநீர் முகலியின் கரையினி லணிமதி
ஒருங்குவார் சடையினன் காளத்தி யொருவனை
விரும்புவா ரவர்கடாம் விண்ணுல காள்வரே. 4

கரும்பு, தேன் கட்டி, வாழைக்கனி ஆகியவற்றை விளைவிக்கும் நீர்வளமுடைய பொன்முகலி ஆற்றின் கரையில், அழகிய பிறைச்சந்திரனை நீண்ட சடையில் சூடி வீற்றிருந்தருளும் ஒப்பற்ற காளத்திநாதரை விரும்பிப் பணிபவர்கள் விண்ணுலகை ஆள்வார்கள்.

| | | |
|---|---|---|
| **3185.** | வரைதரு மகிலொடு மாமுத்த முந்தியே<br>திரைதரு முகலியின் கரையினிற் றேமலர்<br>விரைதரு சடைமுடிக் காளத்தி விண்ணவன்<br>நிரைதரு கழலிணை நித்தலும் நினைமினே. 5<br><br>XXXXXXXXXXXXXXXX 6, 7 | மலையில் வளரும் அகிலும், முத்துக்களும் அலைகளால் தள்ளப்பட்டு வரும் பொன்முகலி ஆற்றின் கரையில், தேன் துளிக்கின்ற நறுமண மலர்களைச் சடைமுடியில் அணிந்து விளங்கும், காளத்தியிலுள்ள தேவாதி தேவனாகிய சிவபெருமானின் ஒலிக்கின்ற வீரக்கழல்களை அணிந்த திருவடிகளைத் தினந்தோறும் நினைந்து போற்றி வழிபடுவீர்களாக. |
| **3186.** | முத்துமா மணிகளு முழுமலர்த் திரள்களும்<br>எத்துமா முகலியின் கரையினி லெழில்பெறக்<br>கத்திட வரக்கனைக் கால்விர லூன்றியே<br>அத்தன்றன் காளத்தி அணைவது கருமமே. 8 | இராவணன் கயிலைமலையின் கீழ்நெரியும்படி தன் காற்பெருவிரலை ஊன்றிய சிவபெருமான், முத்துக்களும், மணிகளும், மலர்க் கொத்துக்களும் அலைகளால் தள்ளப்பட்டு வரும் பொன்முகலி ஆற்றின் கரையில் அமைந்துள்ள அழகிய திருக்காளத்தி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான். அத்திருத்தலத்தை அடைந்து அப்பெருமானை வணங்குதல் நம் கடமையாகும். |
| **3187.** | மண்ணுமா வேங்கையும் மருதுகள் பீழ்ந்துந்தி<br>நண்ணுமா முகலியின் கரையினி னன்மைசேர்<br>வண்ணமா மலரவன் மாலவன் காண்கிலா<br>அண்ணலார் காளத்தி யாங்கணைந் தும்மினே. 9 | வேங்கை, மருது ஆகிய மரங்கள் வேருடன் வீழ்த்தப்பட்டுச் சேற்று மண்ணுடன் கலந்து தள்ளப்பட்டு வரும் பொன்முகலியாற்றின் கரையில், அழகிய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் காண்பதற்கு அரியவனும், எவ்வுயிர்கட்கும் நன்மையே செய்கின்ற வனுமான சிவபெருமான் வீற்றிருந்தருளு கின்றான். அத்திருத்தலத்தை அடைந்து வணங்கிப் போற்றி, உய்தி பெறுங்கள். |
| **3188.** | வீங்கிய வுடலினர் விரிதரு துவருடைப்<br>பாங்கிலார் சொலைவிடும் பரனடி பணியுமின்<br>ஓங்குவண் காளத்தி யுள்ளமோ டுணர்தர<br>வாங்கிடும் வினைகளை வானவர்க் கொருவனே. 10 | பருத்த உடலுடைய சமணர்களும், புத்தர்களும் இறையுண்மையை உணராது கூறும் சொற்களைக் கை விடுக. இறைவனுடைய திருவடிகளை வணங்கிப் போற்றுங்கள். வளமுடன் ஓங்கும் வள்ளலாகிய திருக்காளத்திநாதனை உள்ளத்தால் உணர்ந்து மனம் ஒன்றி வழிபட்டால், தேவர்களுக்கெல்லாம் தலைவனான அச்சிவபெருமான், வழிபடும் உயிர்களின் வினைகளைத் தீர்த்து நன்மை செய்வான். |

3189. அட்டமா சித்திகள் அணைதரு காளத்தி
வட்டவார்
சடையனை வயலணி காழியான்
சிட்டநான் மறைவல ஞானசம் பந்தன்சொல்
இட்டமாப் பாடுவார்க் கில்லையாம் பாவமே. 11

அட்டமா சித்திகளைத் தரும் திருக்காளத்தியில் வீற்றிருந்தருளும் நீண்ட சடைமுடியுடைய சிவபெருமானைப் போற்றி, வயல் வளமிக்க அழகிய சீகாழியில் அவதரித்த நான்கு வேதங்களையும் நன்கு கற்றுவல்ல ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை விரும்பி ஓதவல்லவர்கட்குப் பாவம் இல்லை.

## 37. திருப்பிரமபுரம்

பண் : கொல்லி

பதிக எண் : 37

3190. கரமுனம்மல ராற்புனன்மலர்
தூவியேகலந் தேத்துமின்
பரமனூர்பல பேரினாற்பொலி
பத்தர்சித்தர்கள் தாம்பயில்
வரமுன்னவ்வருள் செய்யவல்லவெம்
மையனாடொறு மேயசீர்ப்
பிரமனூர்பிர மாபுரத்துறை
பிஞ்ஞகன்னருள் பேணியே. 1

யாவர்க்கும் மேலான பொருளான சிவபெருமானது ஊரும் பல திருப்பெயர்களை உடையது. பக்தர்களும், சித்தர்களும் போற்றி வணங்க, அவர்கள் வேண்டும் வரங்களை நல்கி அருள் செய்யவல்ல என் தலைவன், நாள்தோறும் விரும்பி வீற்றிருந்தருளும் சிறப்புடைய பிரமனூர் ஆகிய திருப்பிரமபுரத்தில் எழுந்தருளியுள்ள பிஞ்ஞகனின் அருளைப் போற்றிக் கைத்தாமரையால் தூய நீரை அபிடேகம் செய்து, மலர்களைத் தூவி, ஒரு நெறிய மனம் வைத்து வழிபடுவீர்களாக.

3191. விண்ணிலார்மதி சூடினான்விரும்
பும்மறையவன் றன்றலை
உண்ணநன்பலி பேணினானுல
கத்துளூனுயி ரான்மலைப்
பெண்ணினார்திரு மேனியான்பிர
மாபுரத்துறை கோயிலுள்
அண்ணலாரரு ளாளனாயமர்
கின்றவெம்முடை யாதியே. 2

இறைவர் விண்ணிலே விளங்கும் சந்திரனைச் சடையில் சூடியவர். விரும்பும் நான்மறைகளை ஓதுகின்ற பிரமனின் மண்டையோட்டை உண்கலனாகக் கொண்டு பிச்சை ஏற்பவர். உலகத்து உயிர்கட்கு உடம்பும், உயிருமானவர். மலைமகளான உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவரும், திருப்பிரமபுரத்துறைகின்ற கோயிலினுள் அருளைப் பொழிபவராய் அமர்ந்துள்ள தலைவரும் ஆகிய எம்முடைய சிவபெருமானே ஆதிப்பிரான் ஆவார்.

| | | | |
|---|---|---|---|
| 3192. | எல்லையில்புக ழாளனும்மிமை<br>யோர்கணத்துடன் கூடியும்<br>பல்லையார்தலை யிற்பலியது<br>கொண்டுகந்த படிறனுந்<br>தொல்லைவையகத் தேறுதொண்டர்கள்<br>தூமலர்சொரிந் தேத்தவே<br>மல்லையம்பொழி றேன்பில்கும்பிர<br>மாபுரத்துறை மைந்தனே. | 3 | இறைவர் எல்லையற்ற புகழ் உடையவர். தேவர்கள் கூட்டம் சூழ விளங்குபவர். பற்களையுடைய பிரமனின் மண்டையோட்டில் பிச்சையேற்று மகிழ்ந்த வஞ்சகர். அவர் பழமையான இந்நிலவுலகில் தத்துவங்களைக் கடந்து ஏறிய தெளிந்த அறிவுடைய தொண்டர்கள் தூய மலர்களைத் தூவி ஏத்தி வழிபட, வளம் மிக்க அழகிய சோலைகளில் தேன் சொட்டும் திருப்பிரமபுரத்துக் கோயிலில் வீற்றிருந்தருளுகின்ற வலிமையுடைய சிவபெருமானே ஆவார். |
| 3193. | அடையலார்புரம் சீறியந்தண<br>ரேத்தமாமட மாதொடும்<br>பெடையெலாங்கடற் கானல்புல்கும்பிர<br>மாபுரத்துறை கோயிலான்<br>றொடையலார்நறுங் கொன்றையான்றொழி<br>லேபரவிநின் றேத்தினால்<br>இடையிலார்சிவ லோகமெய்துதற்<br>கீதுகாரணங் காண்மினே. | 4 | பகையசுரர்களின் மூன்று புரங்களையும் கோபித்து அழித்து, அந்தணர்கள் போற்றி வணங்க, உமாதேவியோடு, பெண் பறவைகள் தங்கள் ஆண் பறவைகளுடன் கூடும் கடற்கரைச் சோலைகளையுடைய திருப்பிரமாபுரத்தில் கோயில் கொண்டருளியவன் சிவபெருமான். இடையீடில்லாதவர்களாய்ச் சிவலோகம் சென்று அடைவதற்கு, நறுங்கொன்றை மலர்களை மாலையாக அணிந்த சிவபெருமானின் வழிபாட்டிற்குரியவைகளைச் செய்து, அவன் அருட்செயல்களைப் போற்றி வழிபடும் நெறியே சாதனமாகும் என்பதை அறிவீர்களாக. |
| 3194. | வாயிடைம்மறை யோதிமங்கையர்<br>வந்திடப்பலி கொண்டுபோய்ப்<br>போயிடம்மெரி கானிடைப்புரி<br>நாடகம்மினி தாடினான்<br>பேயொடுங்குடி வாழ்வினான்பிர<br>மாபுரத்துறை பிஞ்ஞகன்<br>றாயிடைப்பொரு டந்தையாகுமென்<br>றோதுவார்க்கரு டன்மையே. | 5 | இறைவன் தன் திருவாயால் வேதங்களை அருளிச் செய்தவன். தாருகாவனத்து முனிபத்தினிகள் வந்து பிச்சையிடப் பிரம கபாலத்தில் பலிஏற்று, சுடுகாட்டையே அரங்கமாகக் கொண்டு நடனம் ஆடுபவன். பேய்க் கணங்களுடன் கூடி வாழ்பவன். திருப்பிரமாபுரத்துக் கோயிலில் வீற்றிருந்தருளுகின்ற பிஞ்ஞகனானச் சிவபெருமானே, பெற்ற தாயும், தந்தையும், மற்றுமுள்ள அனைத்துப் பொருளுமாய் விளங்குபவன் என்பதை உணர்ந்து ஓதுபவர்கட்கு அவன் அருள்செய்பவன். |

| | | | |
|---|---|---|---|
| 3195. | ஊடினாலினி யாவதென்னுயர்<br>நெஞ்சமேயுறு வல்வினைக்<br>கோடிநீயுழல் கின்றதென்னழ<br>லன்றுதன்கையி லேந்தினான்<br>பீடுநேர்ந்தது கொள்கையான்பிர<br>மாபுரத்துறை வேதியன்<br>ஏடுநேர்மதி யோடராவணி<br>யெந்தையொன்றுநின் றேத்திடே. | 6 | உயர் நெஞ்சமே! என் சொல்வழி நில்லாது பிணங்கினால் அதனால் உனக்கு ஆகப்போவது என்ன? வல்வினையே ஈட்டுவதற்கென்றே நீ ஓடி உழல்வது தான் என்ன? பண்டைக்காலத்தில் தன் திருக்கரத்தில் நெருப்பேந்தியவன் சிவபெருமான். தன்னை வழிபடும் அடியவர்கட்குப் பேரின்பத்தை வழங்கும் தன்மையன். திருப்பிரமாபுரத்து வீற்றிருந்தருளும் வேதங்களை அருளிச் செய்தவனும், மலரை ஒத்த பிறைச் சந்திரனையும், பாம்பையும் அணிந்தவனுமான சிவபெருமானை, எம் தந்தை என்று போற்றி வழிபடுவீர்களாக. |
| 3196. | செய்யன்வெள்ளிய னொள்ளியார்சில<br>ரென்றுமேத்தி நினைந்திட<br>ஐயனாண்டகை யந்தணனரு<br>மாமறைப்பொரு ளாயினான்<br>பெய்யுமாமழை யானவன்பிர<br>மாபுரமிடம் பேணிய<br>வெய்யவெண்மழு வேந்தியைந்நினைந்<br>தேத்துமின்வினை வீடவே. | 7 | இறைவன் சிவந்த திருமேனியுடையவன். வெள்ளிமலை எனப்படும் கயிலைக்கு நாயகன். சிவஞானம் பெற்ற பெருமக்களால் எக்காலத்திலும் போற்றப்பட்டு வணங்கப்படும் தலைவன். அளவில்லா ஆற்றலும், எவ்வுயிரிடத்தும் பேரிரக்கமும் உடையவன். அரிய நான்மறைகளின் உட்பொருளாய் விளங்குபவன். பெய்யும் மழை போன்றவன். திருப்பிரமாபுரத்தில் வீற்றிருந்தருளும் மழுப்படையேந்திய சிவபெருமானை, உங்கள் வினைகள் நீங்க வழிபடுவீர்களாக! |
| 3197. | கன்றொருக்கையி லேந்திநல்விள<br>வின்கனிபட நூறியுஞ்<br>சென்றொருக்கிய மாமறைப்பொரு<br>டோர்ந்தசெம்மல ரோனுமாய்<br>அன்றரக்கனைச் செற்றவன்னடி<br>யும்முடியவை காண்கிலார்<br>பின்றருக்கிய தண்பொழிற்பிர<br>மாபுரத்தரன் பெற்றியே. | 8 | ஒருகையால் பசுவின் கன்றைப் பற்றி விளா மரத்தின் கனியை அழித்த திருமாலும், தொகுக்கப்பட்ட வேதங்களின் பொருளை நன்கு கற்ற பிரமனும், அன்று தன்காற் பெருவிரலை ஊன்றி இராவணனைக் கயிலையின்கீழ் நெருக்கிய சிவ பெருமானுடைய திருவடியையும், திருமுடியையும் தேடியும் காணாதவராயினர். அப்பெருமான் அருள் தன்மையும், ஆற்றலும் கொண்டு எழுச்சிமிக்க குளிர்ந்த சோலைகளையுடைய திருப்பிரமபுரத்து வீற்றிருந்தருளுகின்றான். |

| | |
|---|---|
| 3198. உண்டுடுக்கைவிட் டார்களும்முயர்<br>கஞ்சிமண்டை கொள் தேரரும்<br>பண்டடக்கு சொற்பேசும்அப்பரி<br>வொன்றிலார்கள்சொற் கொள்ளன்மின்<br>தண்டொடக்குவன் சூலமுந்தழன்<br>மாமழுப்படை தன்கையிற்<br>கொண்டொடுக்கிய மைந்தனெம்பிர<br>மாபுரத்துறை கூத்தனே. 9 | உணவை உண்டு ஆடையைக் கைவிட்ட சமணர்களும், மண்டை என்னும் பாத்திரத்தில் கஞ்சியேற்று உண்ணும் புத்தர்களும் மக்களிடம் பரிவில்லாதவர்கள். உயர்ந்தவையும் தொன்றுதொட்டு வருவனவுமாகிய வேத ஆகம நூல்களைப் பழித்துப் பேசுபவர். அவர்கள் சொற்களைக் கொள்ள வேண்டா. வீணை, அக்குமாலை, சூலம், நெருப்பு, பெரிய மழுப்படை இவற்றைத் தன்கையில் கொண்டு இவ்வுலகமனைத்தையும் ஒடுக்கி அருளும் வல்லமையுடையவன் எம் திருப்பிரமபுரத்து வீற்றிருந்தருளும் கூத்தனாகிய சிவபெருமானேயாவான். அவனை வணங்கிப் போற்றி உய்வீர்களாக! |
| 3199. பித்தனைப்பிர மாபுரத்துறை<br>பிஞ்ஞகன்கழல் பேணியே<br>மெய்த்தவத்துநின் றோர்களுக்குரை<br>செய்துநன்பொருண் மேவிட<br>வைத்தசிந்தையுண் ஞானசம்பந்தன்<br>வாய்நவின்றெழு மாலைகள்<br>பொய்த்தவம்பொறி நீங்கஇன்னிசை<br>போற்றிசெய்யுமெய்ம் மாந்தரே. 10 | பித்தனும், திருப்பிரமபுரத்து உறைகின்ற பிஞ்ஞகனும் ஆகிய சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி, மெய்த் தவநெறிகளில் நிற்போர்கட்கு உரைசெய்து வீடுபேறு அடையச் செய்ய வேண்டும் என்ற சிந்தையில், ஞானசம்பந்தன் திருவாய்நவின்ற இத்திருமாலைகளைப் பொய்த்தவத்தில் செலுத்தும் பொறிவழிச் செல்லும் புலன்களின் குற்றம் நீங்க, இன்னிசையால் போற்றுபவர்களே மெய்யுணர்ந்த மாந்தர் ஆவர். |

## 38. திருக்கண்டியூர் வீரட்டம் ( அடியார் பாற் கேட்டுகந்த வினாவுரை )

பண் : கொல்லி

பதிக எண் : 38

| | |
|---|---|
| 3200. வினவினேனறி யாமையில்லுரை<br>செய்ம்மினீரருள் வேண்டுவீர்<br>கனைவிலார்புனற் காவிரிக்கரை<br>மேயகண்டியூர் வீரட்டன்<br>தனமுனேதனக் கின்மையோதம<br>ராயினாரண்ட மாளத்தான்<br>வனனில்வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ்<br>வையமாப்பலி தேர்ந்ததே. 1<br><br>அடியார்களை வினவுவதாக அமைந்த திருப்பதிகம். மற்ற வினாவுரைப் பதிகங்கள் ஆண்டவனை வினவுவதாக அமைந்துள்ளன. | இறையருளை வேண்டிப் பணிசெய்யும் அன்பர்காள்! அறியாமை காரணமாக வினவுகின்றேன் உரைசெய்வீர்களாக! ஆரவாரத்தோடு மிகுந்த நீர் செல்லும் காவிரியின் கரையிலுள்ள திருக்கண்டியூரில் வீற்றிருந்தருளும் வீரட்டநாதன், தனக்கு நெருக்கமான திருமாலும், பிரமனும் அண்டங்களை ஆளத் தான் சுடுகாட்டில் வாழ்ந்து ஆடியும், பாடியும் பிச்சையேற்றுத் திரிவது ஏன்? தனக்கு முன்னோர் தேடிவைத்த பொருள் இல்லாத காரணத்தினாலா? |

| | |
|---|---|
| **3201.** உள்ளவாறெனக் குரைசெய்மின்னுயர்<br>வாயமாதவம் பேணுவீர்<br>கள்ளவிழ்பொழில் சூழுங்கண்டியூர்<br>வீரட்டத்துறை காதலான்<br>பிள்ளைவான்பிறை செஞ்சடைம்மிசை<br>வைத்ததும்பெரு நீரொலி<br>வெள்ளந்தாங்கிய தென்கொலோமிகு<br>மங்கையா ளுடனாகவே. 2 | உயர்ந்த பெரிய தவநெறியில் நிற்பவர்களே! எனக்கு உள்ளவாறு உரைசெய்வீர்களாக! தேன்கமழும் சோலைகள் சூழ்ந்த திருக்கண்டியூரில் தனக்கு ஒப்பாரும், மிக்காருமில்லாத, உமாதேவியோடு வீற்றிருந்தருளும் சிவபெருமான், இளம்பிறைச் சந்திரனைச் சிவந்த சடையின்மீது வைத்ததும், பெருநீர்ப் பெருக்காகிய கங்கையைச் சடையில் தாங்கியதும் என் கொல்? |
| **3202.** அடியராயினீர் சொல்லுமின்அறி<br>கின்றிலேன்அரன் செய்கையைப்<br>படியெலாந்தொழு தேத்துகண்டியூர்<br>வீரட்டத்துறை பான்மையான்<br>முடிவுமாய்முத லாய்இவ்வைய<br>முழுதுமாய்அழ காயதோர்<br>பொடியதார்திரு மார்பினிற்புரி<br>நூலும்பூண்டெழு பொற்பதே. 3<br><br>அறியாமையில் வினவினேன்; உரைசெய்மின்; உள்ளவாறெனக்குறை செய்மின்; சொல்லுமின்; பகருமின்; நல்குமின்; விரவிலாதுமைக் கேட்கின்றேன் என்றிவ்வாறு பலவிதமாகக் கேட்பது அறியாமையினால் அல்ல. **'அருத்தன் திறத்தை அடியார்பால் கேட்டுவக்க'** என்று நிறைவுப் பாடலில் இயம்புவதைப் படித்து நாமும் உவப்போம். | என் சிற்றறிவினால் சிவபெருமானின் செய்கையை அறிய இயலவில்லை. எப்பொழுதும் சிவபெருமானின் திருவடிகளை இடையறாது சிந்தித்துக் கொண்டிருக்கும் அடியவர்களே! நீங்கள் எனக்குச் சொல்வீர்களாக! உலகமெல்லாம் தொழுது போற்றுகின்ற திருக்கண்டியூரில் வீரட்டானத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் இவ்வுலகிற்கு அந்தமாயும், ஆதியாயும் இருப்பவன். இவ்வுலகம் முழுவதும் நிறைந்து விளங்குபவன். அப்பெருமான் தன் அழகிய மார்பில் திருநீற்றுப்பூச்சும், முப்புரிநூலும் பூண்டு தோன்றுவது ஏன்? |
| **3203.** பழையதொண்டர்கள் பகருமின்பல<br>வாயவேதியன் பான்மையைக்<br>கழையுலாம்புனல் மல்குகாவிரி<br>மன்னுகண்டியூர் வீரட்டன்<br>குழையொர்காதினிற் பெய்துகந்தொரு<br>குன்றின்மங்கை வெருவுறப்<br>புழைநெடுங்கைநன் மாவுரித்தது<br>போர்த்துகந்த பொலிவதே. 4 | சிவனடியார் திருக்கூட்டமரபில் வழிவழியாய் வருகின்ற பழைய அடியீராகிய நீங்கள் புத்தடியேனுக்குப் பலவாகிய தன்மைகளை யுடைய இறைவனின் தன்மையைக் கூறுங்கள். மலையிலிருந்து பெருகும் காவிரியால் வளம்மிகுந்த திருக்கண்டியூரில் வீற்றிருந் தருளும் வீரட்டநாதன், தன் காதில் ஒரு குழையணிந்து மகிழ்ந்து, மலைமகளான உமாதேவி அஞ்சுமாறு துளையுடைய நீண்ட தும்பிக்கையையுடைய யானையின் தோலை உரித்துப் போர்த்தது ஏன்? |

| | |
|---|---|
| **3204.** விரவிலாதுமைக் கேட்கின்றேன்அடி<br>விரும்பியாட்செய்வீர் விளம்புமின்<br>கரையெலாந்திரை மண்டுகாவிரிக்<br>கண்டியூருறை வீரட்டன்<br>முரவமொந்தை முழாவொலிக்க<br>முழங்குபேயொடுங் கூடிப்போய்ப்<br>பரவுவானவர்க் காகவார்கடல்<br>நஞ்சமுண்ட பரிசதே. **5** | அடியார் நடுவுள் கலந்திருக்கப் பெறாமையால் இவற்றை வினவுகின்றேன். இறைவனின் திருவடிகட்கு விரும்பிப் பணிசெய்யும் அடியவர்களே! விளம்புவீராக. அலைகள் மோதுகின்ற காவிரியின் கரையிலுள்ள திருக்கண்டியூரில் வீற்றிருந்தருளும் வீரட்டநாதன், முரவு, மொந்தை, முழவு முதலான வாத்தியங்கள் முழங்க, பேய்க்கணங்களும், பூதகணங்களும் சூழ்ந்து நிற்க, தன்னை வழிபட்ட தேவர்கள் பொருட்டுப் பெரிய பாற்கடலில் தோன்றிய நஞ்சினை உண்ட தன்மைதான் என்கொல்? |
| **3205.** இயலுமாறெனக் கியம்புமின்னிறை<br>வன்னுமாய்நிறை செய்கையைக்<br>கயனெடுங்கண்ணி னார்கள்தம்பொலி<br>கண்டியூருறை வீரட்டன்<br>புயல்பொழிந்திழி வானுளோர்களுக்<br>காகஅன்றயன் பொய்ச்சிரம்<br>அயனகவ்வ தரிந்துமற்றதில்<br>ஊணுகந்த வருத்தியே. **6**<br><br>பிரமனுடைய தலையைக் கொய்த தல வரலாற்றுக்கு அகச்சான்று. | மெய்யடியார்களே! இறைவன் உலகினுக்கும், உயிருக்கும் தலைவனாய் இருப்பதோடு, உலகப் பொருள்களிலும், அனைத்து உயிர்களிடத்தும் அவையேயாய்க் கலந்து வியாபித்து நிற்கும் தன்மையை எனக்கு இயன்ற அளவு இயம்புவீர்களாக! கயல் போன்ற நீண்ட கண்களையுடைய மகளிர் வாழ்கின்ற திருக்கண்டியூரில் வீற்றிருந்தருளும் வீரட்டநாதன், உலகத்தில் மழை பொழியச் செய்து நலம்புரியும் தேவர்கட்காகப் பிரமனுடைய ஐந்தாவது சிரத்தை அயலார் பரிகசிக்கும்படி நகத்தால் அரிந்து, அதில் பிச்சையேற்றுண்ணும் விருப்பம் என்கொல்? |
| **3206.** திருந்துதொண்டர்கள் செப்புமின்மிகச்<br>செல்வன்றன்னது திறமெலாம்<br>கருந்தடங்கண்ணி னார்கடாந்தொழு<br>கண்டியூருறை வீரட்டன்<br>இருந்துநால்வரொ டானிழல்லற<br>முரைத்ததும்மிகு வெம்மையார்<br>வருந்தவன்சிலை யாலம்மாமதின்<br>மூன்றுமாட்டிய வண்ணமே. **7** | தெளிந்த சிவஞானம் பெற்று இறைவனுக்குத் தொண்டு செய்யும் அன்பர்களே! மெய்ச் செல்வனாக விளங்கும் சிவபெருமானின் தன்மைகளை எனக்கு உரைப்பீர்களாக! கருநிற அழகிய கண்களையுடைய மகளிர் வழிபடும் திருக்கண்டியூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் வீரட்டநாதன், அன்று ஆலமரநிழலில் நால்வர்க்கு அறம் உரைத்ததும், தேவர்களைத் துன்புறுத்திய அசுரர்களின் மூன்று கோட்டைகளும் எரியுமாறு மேருமலையை வில்லாக வளைத்ததும் என்கொல்? |

| பாடல் | | விளக்கம் |
|---|---|---|
| **3207.** நாவிரித்தரன் றொல்புகழ்பல<br>பேணுவீரிறை நல்குமின்<br>காவிரித்தடம் புனல்செய்கண்டியூர்<br>வீரட்டத்துறை கண்ணுதல்<br>கோவிரிப்பய னானஞ்சாடிய<br>கொள்கையுங்கொடி வரைபெற<br>மாவரைத்தலத் தாலரக்கனை<br>வலியைவாட்டிய மாண்பதே. | 8 | நாவால் சிவபெருமானது பழம்புகழ் போற்றும் அடியவர்களே! எனக்கு விடை கூறுவீர்களாக. காவிரியால் நீர் வளம்மிக்க திருக்கண்டியூர் வீரட்டானத்தில் வீற்றிருந்தருளுகின்ற நெற்றிக் கண்ணுடைய சிவபெருமான், பசுவிலிருந்து பெறப்படும் பால், தயிர், நெய், கோசலம், கோமயம் ஆகிய பஞ்சகவ்வியங்களால் திருமுழுக்காட்டப்படும் தன்மையும், கொடி போன்ற பார்வதி அமைதி பெற, பெரிய கயிலை மலையில் தன் காற்பெருவிரலை ஊன்றி மலையின் கீழ் இராவணன் நெரியுமாற செய்து அவன் வலிமையை அழித்த மாண்பும் என்கொல்? |
| **3208.** பெருமையேசர ணாகவாழ்வுறு<br>மாந்தர்காளிறை பேசுமின்<br>கருமையார்பொழில் சூழுந்தண்வயற்<br>கண்டியூருறை வீரட்டன்<br>ஒருமையாலுயர் மாலுமற்றை<br>மலரவன்உணர்ந் தேத்தவே<br>அருமையாலவ ருக்குயர்ந்தெரி<br>யாகிநின்றவத் தன்மையே. | 9 | சிவபெருமானுடைய பெருமையைப் புகழ்ந்து கூறி, அவனைச் சரண்புகுந்து அவனருளால் வாழும் மாந்தர்காள்! விடை கூறுவீர்களாக! மரங்களின் அடர்த்தியால் வெயில் நுழையாது இருண்டு விளங்கும் சோலைகள் சூழ்ந்த, குளிர்ச்சியான வயல்களையுடைய திருக்கண்டியூரில் வீற்றிருந்தருளுகின்ற வீரட்டநாதன், திருமாலும், பிரமனும் சிவபெருமானின் முழுமுதல் தன்மையை உணர்ந்து போற்றும்படி, அவர்கள் காண்பதற்கு அரியவனாய் உயர்ந்து நெருப்புமலையாய் நின்ற தன்மை என்கொல்? |
| **3209.** நமரெழுபிறப் பறுக்குமாந்தர்காள்<br>நவிலுமின்உமைக் கேட்கின்றேன்<br>கமழிவயல் சூழுந்தண்புனற்<br>கண்டியூருறை வீரட்டன்<br>தமரழிந்தெழு சாக்கியச்சமண்<br>ஆதரோது மதுகொளா<br>தமரரானவ ரேத்தவந்தகன்<br>தன்னைச்சூலத்தில் ஆய்ந்ததே. | 10 | தம்மைச் சார்ந்து விளங்கும் கற்றவர்களின் ஏழு பிறப்புக்களையும் அறுக்கும் மெய்யடியார்களே! உங்களை வினவுகின்றேன். விடை கூறுவீர்களாக. பூமியில் வெடிப்பு ஏற்பட்டு வறட்சி உண்டாகாதவாறு குளிர்ந்த நீர் பாயும் வயல்கள் சூழ்ந்த திருக்கண்டியூரில் வீற்றிருந்தருளும் வீரட்டநாதன், தமது சமயத்தவர் பயனெய்தாது அழியும்படி இறைவனைச்சாரும் வழிகளை எடுத்துரைக் காத புத்தர், சமணர்கள் உரைக்கும் உலகியல் அறங்களான கொல்லாமை, பரதுக்கம் இவற்றை மறுத்து, தேவர்கள் ஏத்த, அந்தகாசுரனைச் சூலத்தால் குத்திக் கொன்றது ஏன்? |

| | | |
|---|---|---|
| 3210. | கருத்தனைப்பொழில் சூழுங்கண்டியூர்<br>வீரட்டத்துறை கள்வனை<br>அருத்தனைத்திறம் அடியால்பார்மிகக்<br>கேட்டுகந்த வினாவுரை<br>திருத்தமாந்திகழ் காழிஞானசம்<br>பந்தன்செப்பிய செந்தமிழ்<br>ஒருத்தராகிலும் பலர்களாகிலும்<br>உரைசெய்வார் உயர்ந்தார்களே. 11 | அன்பர்தம் கருத்தாக விளங்குபவனாய், சோலைகள் சூழ்ந்த திருக்கண்டியூர் வீரட்டானத்தில் பிறரால் காணப்பெறாது மறைந்திருந்து மனத்தைக் கவரும் கள்வனாய், சொல்லின் பொருளாக இருக்கும், அப்பெருமானின் திறத்தினை அடியவர்களிடம் வினாவுரையாகக் கேட்டு மகிழும் முறையில் சீகாழியில் அவதரித்த, இறைவனின் இயல்புகளை நன்கு உணர்ந்த ஞானசம்பந்தன் செப்பிய செந்தமிழாகிய இத்திருப்பதிகத்தை ஒருவராகத் தனித்தும், பலராகச் சேர்ந்தும் ஓதவல்லவர்கள் உயர்ந்தவர்கள் ஆவர். |

## 39. திருஆலவாய்

திருஞானசம்பந்தர் சைவ நன்னெறியை நிலைநாட்டுவதற்காகவும், திருநீற்றுப் பெருமையை நம் போன்றோர் உணர வேண்டுமென்பதற்காகவும் சிவபெருமானால் இப்பூமிக்கு அனுப்பப்பட்டவர். இந்த நிகழ்வுகள் நடந்த இடம் மதுரை. மதுரையில் உள்ள கோயிலின் பெயர் திருஆலவாய். ஆலத்தின் (பாம்பின்) வாய்– ஆலவாய். கோயில் கட்ட எல்லைகள் தெரிய வேண்டுமென பாண்டிய மன்னன் வினவ சுவாமியின் கையில் கங்கணமாக இருந்த பாம்பு கீழே விழுந்து ஒரு வட்ட வடிவமடித்து அதன் வாலைத் தலையில் வைத்துக் காட்டிய இடத்தில்தான் இன்றைய ஆலவாய்க் கோயில் அமைந்துள்ளது. 8 யானைகளும், 32 யாழிகளும், 64 சிங்கங்களும் எண்ணற்ற விமானங்களும், நான்கு வாயில்களுக்கும் நான்கு இராஜ கோபுரங்களும் சூழ மிகப்பிரம்மாண்டமான பிரகாரங்கள், மண்டபங்களுடன் மயன் என்ற தேவதச்சனால் கட்டப்பட்ட திருவாலவாயினைப் பற்றித் திருஞானசம்பந்தர் அருளிய பதிகங்களுள் நமக்குத் தெளிவு வேண்டும். அதை எண்ணி எண்ணி உணா்ந்து உணா்ந்து அனுபவித்து அனுபவித்துப் படிக்கவேண்டும் பாடல்கள் அல்ல எவ்வளவு பதிகங்களை முடியுமோ அவ்வளவு பதிகங்களை மனனம் செய்யவேண்டும்.

### திருவாலவாயினைப் பற்றிப் பிள்ளையார் அருளிய பதிகங்கள்

| வ. எண் | பதிக எண் | பதிக முதற் குறிப்பு | பாடப்பட்ட இடமும், சூழலும் |
|---|---|---|---|
| 1. | 3.120 | மங்கையர்க்கரசி | மதுரையை அணுகும்போது திருஆலவாய்த் திருக்கோயில் கண்ணில் புலப்படும்போது திருநகரின் புறத்தே அருளப்பட்டது. |
| 2. | 1.94 | நீலமாமிடற்று | முதன் முதலில் சொக்கநாதரைக் கண்டு திருக்கோயிலில் பாடியது. கோயிலில்தன் வழிபாடு முடிந்து மங்கையர்க்கரசியாரை முதன்முதலில் சந்தித்து ஆசி வழங்குகிறார். |

| 3. | 3.51 | செய்யனே | அமணர்கள் தீயிட்டபோது தீ அவர்களைச் சென்று பரவ ஏவல் செய்ய "பையவே சென்று பாண்டியர்க்காக" என்று ஆணையிட்டு திருமடத்தில் இருந்த வண்ணம் பாடியது. |
|---|---|---|---|
| 4.<br><br>5. | 3.47<br><br>3.108 | காட்டுமா,<br><br>வேதவேள்வி | என்ற இரண்டு பதிகங்கள் சுரந்தீர்த்துச் சமணைவாது<br><br>செய்து வென்றருளத் திருமடத்தினின்றும் அரசமாளிகைக்குப் புறப்படும்போது இறைவரது திருவுள்ளக்குறிப்பினைப் பெற திருக்கோயிலின் திருமுன்பு பாடப்பட்டது. இறைவனின் திருவுள்ளக்குறிப்பின்றி நாமும் எதையும் செய்யக்கூடாது. |
| 6. | 3.39 | மானினேர் விழி | கொடுமையான சமணர்கள் திருக்குழந்தையான ஆளுடைபிள்ளையாரை ஏதாவது செய்து விடுவார்களோ என்று ஐயமுற்ற மங்கையர்க்கரசியாரை விளித்து அரச மாளிகையில் பாடியது. **மக்களுள்ளே தனி நபரை முன்னிலைப்படுத்தி பிள்ளையார் பாடிய ஒரே பதிகம் இதுவாகும்.** |
| 7. | 2.70 | பிரமனூர் | "தங்கள் பதியாது?" என்று வினவிய பாண்டிய மன்னனின் படுக்கைப் பக்கம் அமர்ந்து தமது ஊர்ப் பனிரெண்டு பெயர்களை இணைத்துச் சக்கர மாற்றாகப் பாடிய பதிகம். |
| 8. | 2.66 | மந்திரமாவது நீறு | சுரந்தீரு முன்னர் அரசனது மாளிகையில் அரசன் முன்பு<br><br>அருளப்பட்டது. முதல் ஏழு பாடல்களில் வலப்பால் வெப்பைத் தீர்க்கப்பாடுகிறார். ஆடவர்க்கு வலதுபக்கம் நோய் வந்தால் அதை மணி, மந்திரம், மருந்து என்ற மூன்றாலும் தீர்ப்பது அரிது. ஏனைய நான்கு பாடல்கள் பின்பு இடப்பால் வெப்பைத் தீர்க்கப் பாடுகிறார். முதல் ஏழு பாட்டுக்களில் திருவாலவாயன் திருநீறே என்று போற்றி அதற்கேற்றவாறு இகரமோனையும், மேல் நான்கு பாட்டுகளில் ஆலவாயான் திருநீறு என்று அகரமோனையும் வர அமைந்தருளிய இப்பதிகம் இருகூறாக நிற்கும் அமைதியைப் படித்து இன்புற வேண்டும். |
| 9.<br><br>10. | 3.87<br><br>1.49 | தளிரிள வளரொளி<br><br>போகமார்த்த | பதிகத்தில் கயிறு சார்த்திப் பார்த்தல் என்ற கோட்பாட்டை<br><br>திருஞான சம்பந்தரே முதலில் பின்பற்றியுள்ளார் என்பதற்கு அனல் வாதமே சான்றாகும். அவ்வாறு பார்த்தபோது "போகமார்த்த பூண் முலையாள்" என்ற பதிக ஏடுவந்தது. |

| | | | |
|---|---|---|---|
| | | | அதுதான் பச்சைப் பதிகம். அப்பதிக ஏட்டினை அனலில் இடும்போது பாடிய பதிகம் தான் தளிரிள வளரொளி. "எரியிடில் இவை பழுதிலை" என்பது மகுடமாகும். |
| 11. | 3.54 | வாழ்க அந்தணர் | திருமுகப்பாசுரம், புனல் வாதத்தில் வைகைக் கரையில் ஏடு வைகைநீரை எதிர்த்துச் செல்லும் வண்ணம் இயற்றி இடப்பட்ட பதிகமாகும். |
| 12. | 3.52 | வீடலாலவாய் | சுர, அனல், புனல் வாதங்கள் முடிந்தபின் நன்றியின் உச்சகட்டமாக திருஆலவாய் இறைவன் முன் பாடியது. |
| 13. | 3.115 | ஆலநீழல் | திருமடத்தில் அருளப்பட்டது. "நீடுபூசனை நிரம்பியும் அன்பினால் நிரம்பார்" என்றபடி நேரேசென்று கும்பிட்ட பின்பும் ஆராமையால் மேலும் கும்பிட்டுக் கொண்டேயிருக்கும் பெருவிருப்பத்தால் திருக்கோயிலினின்றும் திரும்பி திருமடத்துக்கு வந்த பின் அடியார்களோடு இருக்கும் நிலையில் அடியார் பெருமையை விளக்கி இயமகமாக மகிழ்ச்சி பொங்க அருளிய பதிகம். |
| 14. | 3.24 | மண்ணினல்ல | தாதையார் திருமடத்துக்கு வரக்கண்டபோது அவர் சார்வு கண்டருளித் திருத்தோணியப்பரை நினைந்து பாடியருளப்பட்டது. உடலுக்குத் தந்தை வந்தபோது வரவேற்று உயிர்த்தந்தையை நினைத்துப் பாடுகின்றார். |

**பண் : கொல்லி** **பதிக எண் : 39**

**3211.** மானினேர்விழி மாதராய்வழு
திக்குமாபெருந் தேவிகேள்
பானல்வாயொரு பாலனீங்கிவ
னென்றுநீபரி வெய்திடேல்
ஆனைமாமலை யாதியாய
இடங்களிற்பல அல்லல்சேர்
ஈனர்கட்கெளி யேனலேன்**திரு**
**வாலவாயர னிற்கவே.** 1

சமணர் கூட்டத்தால் குழந்தை திருஞானசம்பந்தருக்குத் தீங்கு வந்துவிடுமோ என்று அச்சமுற்ற மங்கையர்க்கரசியாரை ஆற்றுப்படுத்தப் பாடப்பட்ட பதிகம்.

மான்போன்ற மருண்ட பார்வையையுடைய மாதரசியே! பாண்டிய மன்னனின் மனைவியான பெருந்தேவியே! கேள். "பால்வடியும் நல்ல வாயையுடைய பாலன்" என்று நீ இரக்கமடைய வேண்டா. திருஆலவாயரன் துணைநிற்பதால் ஆனைமலை முதலான இடங்களிலிருந்து வந்துள்ளவர்களும், பல துன்பங்களைப் பிறர்க்கு விளைவிக்கின்றவர் களுமாகிய இழிந்த இச்சமணர்கட்கு யான் எளியேன் அல்லேன்.

3212. ஆகமத்தொடு மந்திரங்க
ளமைந்த**சங்கத பங்கமாப்**
பாகதத்தொ டிரைத்துரைத்த
சனங்கள்வெட்குறு பக்கமா
மாகதக்கரி போற்றிரிந்து
புரிந்துநின்றுணும் மாசுசேர்
ஆகதர்க்கெளி யேனலேன்**திரு**
**வாலவாயர னிற்கவே.** 2

சங்கதம் – சமஸ்கிருதத்தின் திரிபு.
பாகதம் – ப்ராகிருதம் என்பதன் சிதைவு.
மாசு – நாடோறும் சிறிது சிறிதாகச் சேரும் தூசு.

வேத ஆகமங்களையும், மந்திரங்களையும், நன்கு பயின்ற வைதிக மாந்தர் வெட்கம் அடையும்படி, அம்மொழியின் கூறாகிய பிராகிருத மொழியை ஆரவாரித்துப் பேசி, மிக் கோபத்தையுடைய யானைபோல் திரிந்து நின்றுண்ணும் அழுக்கு மேனியுடைய சமணர்கட்கு நான் எளியேன் அல்லேன், திருஆலவாய் அரன்துணை நிற்பதால்.

---

3213. அத்தகுபொரு ளுண்டுமில்லையு
மென்றுநின்றவர்க் கச்சமா
ஒத்தொவ்வாமை மொழிந்துவாதி
லழிந்தெழுந்த கவிப்பெயர்ச்
சத்திரத்தின் மடிந்தொடிந்து
சனங்கள் வெட்குற நக்கமே
சித்திரர்க்கெளி யேனலேன்**றிரு**
**வாலவாயர னிற்கவே.** 3

திருவாலவாய் அரன் துணை நிற்கையினால்
எளியேன் அலேன்.

கடவுள் உண்டு என்றும் சொல்லமுடியாது. இல்லை என்றும் சொல்ல முடியாது என்னும் பொருள்பட அத்திநாத்தி என்று ஒத்தும், ஒவ்வாமலும் கூறும் சமணர்கள் வாதில் அழிந்து தோற்று, எனது கவிதையாகிய வாளால் மடிந்து ஒடிவர். பார்ப்பவர் வெட்கப்படும்படி ஆடையின்றி உலவும் தங்கள் நெறியே மேலானது என சித்திரவார்த்தை பேசுபவர்கட்கு, நான் ஆலவாயரன் துணைநிற்றலால் எளியேன் அல்லன்.

---

3214. சந்துசேனனு மிந்துசேனனுந்
தருமசேனனுங் கருமைசேர்
கந்துசேனனுங் கனகசேனனு
முதலதாகிய பெயர்கொளா
மந்திபோற்றிரிந் தாரியத்தொடு
செந்தமிழ்ப்பய னறிகிலா
அந்தகர்க்கெளி யேனலேன்**றிரு**
**வாலவாயர னிற்கவே.** 4

ஆரியத்தோடு செந்தமிழ்ப்பயன் – சிவனே முழுமுதற்கடவுள் எனவும், சைவநெறியே சீரிய நெறி எனவும் அறிதலாகும்.

சந்துசேனன், இந்துசேனன், தருமசேனன், மாசுடைய கந்தசேனன், கனகசேனன் முதலான பெயர்களைக் கொண்டு மந்திபோல் திரிந்து, வடமொழி, தென்மொழிகளைக் கற்றதன் பயனாகிய சிவனே முழுமுதற்கடவுள், சைவமே சீரிய சமயநெறி என்னும் உணர்வினைப் பெறாது அகக்கண்ணிழந்து திரியும் சமணர்கட்கு யான் எளியேனல்லேன். திருவாலவாயரன் என்னுள்ளிருந்து அருள்புரிவார்.

| | பாடல் | எண் | பொருள் |
|---|---|---|---|
| 3215. | கூட்டினார்கிளி யின்விருத்த<br>முரைத்ததே ரொலி யின்றொழிற்<br>பாட்டுமெய் சொலிப் பக்கமேசெலு<br>மெக்கர்தங்களைப் பல்லறம்<br>காட்டியேவரு மாடெலாங்கவர்<br>கையரைக்கசி வொன்றிலாச்<br>சேட்டைகட்கெளி யேனலேன்**றிரு**<br>**வாலவாயர னிற்கவே.** | 5 | கூண்டிலிருக்கும் கிளியின் ஒலித்தன்மைக்கு ஏற்ப, கிளிவிருத்தம் முதலிய சுவடிகளின் பொருள்களை மெய்யென்று சொல்லி ஏமாற்றுகிறவர்கட்கும், பல தருமங்களைச் செய்தவர்களாக வெளியில் காட்டி அவற்றால் வரும் செல்வங்களைக் கவரும் கீழோர்கட்கும், இரக்கமில்லாத குறும்பர்கட்கும் யான் எளியேனல்லேன். திருவாலவாயரன் என்றும் நின்று அருள்புரிவார். |
| 3216. | கனகநந்தியும் புட்பநந்தியும்<br>பவணநந்தியுங் குமணமா<br>சுனகநந்தியுங் குனகநந்தியுந்<br>திவணநந்தியு மொழிகொளா<br>அனகநந்தியர் மதுவொழிந்தவ<br>மேதவம்புரி வோமெனும்<br>சினகருக்கெளி யேனலேன்**றிரு**<br>**வாலவாயர னிற்கவே.** | 6 | கனகநந்தி, புட்பநந்தி, பவணநந்தி, குமண மாசுனநந்தி, குனகநந்தி, திவணநந்தி என எண்ணற்ற பலவகை நந்திகள் என்னும் பெயர் கொண்டவர்களாய் மது உண்பதை ஒழித்து, அவமாகிய நிலையைத் தவமெனக் கொள்ளும் சமணர்கட்கு யான் எளியேனல்லேன், திருவாலவாயரன் என்னுள் நிற்பதால். |
| 3217. | பந்தணம்மவை யொன்றிலம்பரி<br>வொன்றிலம்மென வாசக<br>மந்தணம்பல பேசிமாசறு<br>சீர்மையின்றிய நாயமே<br>அந்தணம்மரு கந்தணம்மது<br>புத்தணம்மது சிந்தணச்<br>சிந்தணர்க்கெளி யேனலேன்**றிரு**<br>**வாலவாயரனிற்கவே.** | 7 | சுற்றமும், பற்றும் இல்லை என்று கூறியும், இரகசியமான வாசகங்களைப் பேசியும், குற்றமற்ற ஒழுங்கு நெறியின்றியும், நியாயமற்ற நெறிநின்று, ஆருகதசமயத்தின்கொள்கை இத்தகையது என்று கூறித்திரியும் சமணர்கட்கும், புத்த சமயத்தின் கொள்கை இத்தகையது என்று கூறித்திரியும் புத்தர்கட்கும், அச்சமயங்களில் சித்தி பெற்றோர்கட்கும் ஆலவாயரன் என்றும் துணை நிற்றலால், யான் எளியவன் அல்லேன். |
| 3218. | மேலெனக்கெதி ரில்லையென்ற<br>வரக்கனார் மிகை செற்றதீப்<br>போலியைப்பணி யக்கிலாதொரு<br>பொய்த்தவங்கொடு குண்டிகை<br>பீலிகைக்கொடு பாயிடுக்கி<br>நடுக்கியேபிறர் பின்செலும்<br>சீலிகட்கெளி யேனலேன்**றிரு**<br>**வாலவாயரனிற்கவே.** | | தனக்கு மேலானவரும், எதிரானவரும் இல்லை என்று கருதிய இராவணனது செருக்கை அழித்த, தீயைப்போன்று செந்நிற மேனியுடைய சிவபெருமானைப் பணிந்து ஏத்தாது, பொய்த்தவம் பூண்டு, குண்டிகை, மயிற்பீலி ஆகியவற்றைக் கொண்டு, பாயை அக்குளில் இடுக்கி நடந்து செல்லுங்கால், சிற்றுயிர்கட்கு ஊறுநேருமோ என அஞ்சி நடுக்கத்துடன் ஒருவர்பின் ஒருவராய்ச் செல்வதைச் சீலம் எனக் கொள்ளும் சமணர்கட்கு, யான், திருவாலவாயரன் என்னுள் துணை நிற்றலால் எளியவனல்லேன். |

| | |
|---|---|
| **3219.** பூமகற்கு மரிக்குமோர்வரு<br>புண்ணியன்னடி போற்றிலார்<br>சாமவத்தையி னார்கள்போறலை<br>யைப்பறித்தொரு பொய்த்தவம்<br>வேமவத்தைசெ லுத்திமெய்ப்பொடி<br>யட்டிவாய்சக திக்குநேர்<br>ஆவமர்க்கெளி யேனலேன்**றிரு**<br>**வாலவாயர னிற்கவே.** 9<br><br>"திருவாலவாயன் அரனிற்கவே" என்பது இப்பதிகத்தின் மகுடம். நமக்கெல்லாம் மிக முக்கியமான செய்தி. | பிரமனும், திருமாலும் அறியவொண்ணாத புண்ணியனான சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி வணங்காது, இறந்தோர்க்கு நீர்க்கடன் செய்பவர்போல் தலைமுடியைக் களைந்து, பொய்த்தவத்தால் துன்புறும் நிலையடையும்படி உடம்பை வாட்டி, பொருளற்ற உரைகளைக் கூறுகின்ற சமணர்கட்கு யான் எளியேன் அல்லேன், திருவாலவாயரன் என்னுள் துணை நிற்றலால். |
| **3220.** தங்களுக்குமச் சாக்கியர்க்குந்<br>தரிப்பொணாதநற் சேவடி<br>எங்கணாயக னேத்தொழிந்திடுக்<br>கேமடுத்தொரு பொய்த்தவம்<br>பொங்குநூல்வழி யன்றியேபுல<br>வோர்களைப்பழிக் கும்பொலா<br>அங்கதர்க்கெளி யேனலேன்**றிரு**<br>**வாலவாயர னிற்கவே.** 10 | சமணர்கட்கும், புத்தர்கட்கும் அரியவராகிய, நல்ல சிவந்த திருவடிகளையுடைய எங்கள் தலைவராகிய சிவபெருமானை வழிபடுதலை விட்டு, பொய்த்தவம் பூண்டு, நல்ல நூல்கள் கூறும் வழியும் நில்லாது அறிஞர்களைப் பொல்லாப் பழிச்சொல் பேசுபவர்கட்கு, யான் திருவாலவாயரன் என்னுள் நிற்பதால் எளியேன் அல்லேன். |
| **3221.** எக்கராமமண் கையருக்கெளி<br>யேனலேன்றிரு வாலவாய்ச்<br>சொக்கனென்னு ளிருக்கவேதுளங்<br>கும்முடித்தென்னன் முன்னிவை<br>தக்கசீர்ப்புக லிக்குமன்றமிழ்<br>நாதன்ஞானசம் பந்தன்வாய்<br>ஒக்கவேயுரை செய்தபத்து<br>முரைப்பவர்க்கிட ரில்லையே. 11 | திருஆலவாய் இறைவன் சொக்கநாதன் என் உள்ளத்தில் இருத்தலால், செருக்குடைய சமணர்கட்குயான் எளியவன் அல்லன் என்று பாண்டிய மன்னன் முன்னிலையில் திருப்புகலியில் அவதரித்த தமிழ்நாதனாகிய ஞானசம்பந்தன் வாய்மையோடு அருளிய இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கட்குத் துன்பம் இல்லை. |

## 40. பொது ( திருவிருக்குக்குறள் )

**பண் : கொல்லி** **பதிக எண் : 40**

| | |
|---|---|
| 3222. கல்லானீழல், அல்லாத்தேவை<br>நல்லார்பேணார், அல்லோநாமே. 1<br><br>சிவத்தைத் தவிர மற்ற எத்தெய்வத்தையும் அடியார்களாகிய நாம் கனவில்கூட கடவுளாக நினைக்கவே கூடாது என்ற கருத்தைப் பதிகம் முழுவதும் வலியுறுத்துகிறார். | கல்லால மரத்தின் நிழலில் சனகாதி முனிவர்கட்கு அறநெறி உரைத்தருளிய சிவபெருமானை அன்றிப் பிறிதொரு தெய்வத்தை மெய்யுணர்ந்த ஞானிகள் பொருளாகக் கொள்ளார். நாமும் அவ்வாறே சிவனையன்றி வேறு தெய்வத்தை வழிபடோம். |

| | |
|---|---|
| **3223.** கொன்றைசூடி, நின்றதேவை<br>அன்றியொன்று, நன்றிலோமே. **2**<br><br>சுவாமிக்கு கொன்றை மலர் மிகவும் உகந்தது. சம்பந்தர் நிறைய இடங்களில் சிவத்தையும், கொன்றையையும் இணைத்துப் பாடியதைக்கண்டசுந்தரரும் "வம்பறா வரிவண்டு மணம் நாற மலரும் மதுமலர் நற்கொன்றையின் அடிஅலால் பேணா சம்பந்தன்" என்று போற்றுகின்றார். | கொன்றை மலரைச் சூடிவிளங்கும் சிவ பெருமானை அன்றி, பிறிதொரு தெய்வம், முக்திச் செல்வம் தருவதாக நாம் கருதோம். |
| **3224.** கல்லாநெஞ்சின், நில்லானீசன்<br>சொல்லாதாரோ, டல்லோநாமே. **3** | இறைவனை இடைவிடாது தியானிக்காதவர் உள்ளத்தில் அவன் நில்லான். ஆதலால் அப்பெருமானின் பெருமைகளைப் போற்றாதவர் களோடு நாங்கள் சேரோம். |
| **3225.** கூற்றுதைத்த, நீற்றினானைப்<br>போற்றுவார்கள், தோற்றினாரே. **4** | மார்க்கண்டேயரின் உயிரைக் கவரவந்த கூற்றுவனைத் தன் திருப்பாதத்தால் உதைத்த, தன் திருமேனியில் திருவெண்ணீற்றினைப் பூசியுள்ள சிவபெருமானைப் போற்றுபவர்களே பிறந்ததன் பயனை அடைவர். |
| **3226.** காட்டுளாடும், பாட்டுளானை<br>நாட்டுளாரும், தேட்டுளாரே. **5** | சுடுகாட்டில் நடனம் ஆடும் இறைவன் அடியாரேத்தும் பாமாலையை உடையவன். சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று தம் உள்ளத்தில் நிலைநிறுத்தியவர்களே பேரின்பச் செல்வத்தில் திளைப்பவர்கள். |
| **3227.** தக்கன்வேள்விப், பொக்கந்தீர்த்த<br>மிக்கதேவர், பக்கத்தோமே. **6** | முழுமுதற்பொருளான சிவனை நினையாது தக்கன் செய்த வேள்வியின் குற்றத்தைத் தீர்த்த வல்லமையும், அருளுமுடைய சிவபெருமானுக்கு அணுக்கத் தொண்டராய் யாம் உள்ளோம். |
| **3228.** பெண்ணாணாய, விண்ணோர்கோவை<br>நண்ணாதாரை, எண்ணோநாமே. **7** | பெண்ணாகவும், ஆணாகவும் ஆகி, தேவர்கள் போற்றும் தலைவரான சிவபெருமானை, மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களாலும் வழிபடாதவர்களை நாம் நெஞ்சாலும் நினைப்பதில்லை. |

| | | |
|---|---|---|
| **3229.** தூர்த்தன்வீரம், தீர்த்தகோவை<br>ஆத்தமாக, ஏத்தினோமே. | 8 | துன்மதியால் கயிலையைப் பெயர்த்த இராவணனது வலிமையை அழித்து, பின் அவன் தன் தவறுணர்ந்து சாமகானம்பாடி இறைஞ்ச, அவனுக்கு ஒளி பொருந்திய வாளும், நீண்ட வாழ்நாளும் அருளிய இறைவனை நாம் விரும்பிப் போற்றி வணங்கினோம். |
| **3230.** பூவினானும், தாவினானும்<br>நாவினாலும், நோவினாரே | 9 | தாமரைப்பூவின்மேல் வீற்றிருந்தருளும் பிரமனும் உலகத்தைத் தாவி அளந்த திருமாலும், இறைவனின் திருமுடியையும், திருவடியையும் உடல்வருந்தித் தேடியும் காணாதவர்களாய்ப் பின்னர் நாவால் அவனைப் போற்றி உருகி நின்றனர். |
| **3231.** மொட்டமணர், கட்டர்தேரர்<br>பிட்டர்சொல்லை, விட்டு ளாமே. | 10 | தலைமயிரைப் பறித்து மொட்டைத் தலையுடன் விளங்கும் சமணர்களும், கட்டான உடலமைப்புடைய புத்தர்களும், சைவசமய நெறிக்குப் புறம்பாகக் கூறுவனவற்றை நாம் பொருளாகக் கொள்ளாது விட்டோம். |
| **3232.** அந்தண்காழிப், பந்தன்சொல்லைச்<br>சிந்தைசெய்வோர், உய்ந்துளோரே. | 11 | அழகிய குளிர்ச்சி பொருந்திய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தர் அருளிய இத்திருப்பதிகத்தைச் சிந்தனை செய்து பாடுபவர்கள் உய்தி பெற்றவர்களாவர். |

## 41. திருக்கச்சியேகம்பம் ( திருவிருக்குக்குறள் )

**பண் : கொல்லி** **பதிக எண் : 41**

| | | |
|---|---|---|
| **3233.** கருவார்கச்சித், திருவேகம்பத்<br>தொருவாவென்ன, மருவாவினையே. | 1 | யாவற்றுக்கும் கருப்பொருளாக விளங்கும் திருக்கச்சியேகம்பத்தில் வீற்றிருந்தருளும் ஒப்பற்ற சிவபெருமானைப் போற்றி வணங்க வினைவந்து சாராது. |
| **3234.** மதியார்கச்சி, நதியேகம்பம்<br>விதியாலேத்தப், பதியாவாரே. | 2 | மதி தவழும் மாடங்களையுடைய கச்சியில் கம்பை நதியின் கரையில் விளங்குகின்ற திருவேகம்பத்தைச் சிவாகம விதிப்படி அன்பர்கள் போற்றி வணங்கச் சிவகணங்களுக்குத் தலைமையாய் விளங்குவார்கள். |

| | | | |
|---|---|---|---|
| **3235.** | கலியார்கச்சி, மலியேகம்பம்<br>பலியாற்போற்ற, நலியாவினையே. | **3** | விழாக்கள் மலிந்து ஆரவாரத்துடன் எப்பொழுதும் விளங்கும் கச்சியில் வீற்றிருந்தருளுகின்ற திருவேகம்பநாதரைப் பூசைக்குரிய பொருள்களைக் கொண்டு பூசை செய்து போற்றி வழிபடத் தீவினையால் வரும் துன்பம் இல்லை. |
| **3236.** | வரமார்கச்சி, புறமேகம்பம்<br>பரவாவேத்த, விரவாவினையே. | **4** | தன்னை வழிபடும் அன்பர்களுக்கு வேண்டிய வரங்களை நல்கும் தெய்வத்தன்மையுடைய நகர் காஞ்சிபுரம் ஆகும். இத்திருத்தலத்தில் திருவேகம்பப் பெருமானை வணங்கிப் போற்ற வினை தொடராது நீங்கும். |
| **3237.** | படமார்கச்சி, இடமேகம்பத்<br>துடையாயென்ன, அடையாவினையே. | **5** | சித்திர வேலைப்பாடுகளுடைய அழகிய கச்சியை இடமாகக் கொண்டு திருவேகம்பத்தில் வீற்றிருந்தருளும் இறைவன் எங்கள் தலைவனே என்று போற்ற வினை வந்து சாராது. |
| **3238.** | நலமார்கச்சி, நிலவேகம்பம்<br>குலவாவேத்தக், கலவாவினையே. | **6** | நலம் தரும் கச்சிநகரில் விளங்குகின்ற திருவேகம்பத்தை அன்பால் அகமகிழ்ந்து போற்றி வணங்க வினை நீங்கும். |
| **3239.** | கரியின்னுரியன், திருவேகம்பன்<br>பெரியபுரமூன், றெரிசெய்தானே. | **7** | யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்ட இறைவனான திருவேகம்பப் பெருமான், தேவர்களைத் துன்புறுத்திய அசுரர்கள் வாழ்ந்த மூன்று புரங்களையும் எரியுண்ணும்படி செய்தார். |
| **3240.** | இலங்கையரசைத், துலங்கவூன்றும்<br>நலங்கொள்கம்பன், இலங்குசரணே. | **8** | இலங்கை மன்னனான இராவனனைக் கயிலை மலையின் கீழ் நெரியுமாறு காற்பெருவிரலை ஊன்றி, அவன் நலத்தை அழித்த திருவேகம்பன் திருவடியைச் சரணடைதலே ஒளிமிக்க வாழ்வுக்குரிய நன்னெறியாகும். |
| **3241.** | மறையோனரியும், அறியாவனலன்<br>நெறியேகம்பம், குறியாற்றொழுமே. | **9** | பிரமனும், திருமாலும் அறியமுடியாத வண்ணம் நெருப்பு மலையாய் நின்ற சிவபெருமான் கச்சியில் திருவேகம்ப நாதராக நெறியாகவும், போற்றித்தொழப் பெறும் குறியாகவும் உள்ளார். |

3242. பறியாத்தேரர், நெறியில்கச்சிச்
செறிகொள்கம்பம், குறுகுவோமே. 10

தலைமயிர் பறியாத புத்தர்களும், அது பறிக்கப் பட்ட சமணர்களும் கூறும் நெறியில் அமையாது, கச்சியில் ஞானம் பெருகும் திருவேகம்பநாதனின் திருக்கோயிலை அடைந்து வழிபடுவோமாக.

---

3243. கொச்சைவேந்தன், கச்சிக்கம்பம்
மெச்சுஞ்சொல்லை, நச்சும்புகழே. 11

கொச்சைவயம் என்னும் திருப்பெயருடைய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் திருக்கச்சியேகம்பத்தைப் போற்றிப்பாடிய இத்திருப்பதிகத்தை ஓதுபவர்கள் நிலைத்த புகழுடன் விளங்குவார்கள்.

---

## 42. திருச்சிற்றேமம்

**பண் : கொல்லிக்கௌவாணம்** **பதிக எண் : 42**

3244. நிறைவெண்**டிங்கள் வாண்முக**
மாதர்பாட நீள்சடைக்
குறைவெண்டிங்கள் சூடியோ
ராடன்மேய கொள்கையான்
சிறைவண்டியாழ்செய் பைம்பொழிற்
பழனஞ்சூழ்சிற் றேமத்தான்
இறைவனென்றே யுலகெலா
மேத்தநின்ற பெருமானே.

திங்கள் வாண்முக மாதர் என்று உமாதேவியாரைக் குறிக்கும் சொற்றொடர் இப்பதிகத்தின் எல்லாப் பாடல்களிலும் வருகின்றன.

வெண்மையான முழுநிலவு போன்று ஒளி பொருந்திய முகமுடைய உமாதேவியார் இசைபாட, நீண்ட சடைமுடியில் பிறைச்சந்திரனைச் சூடி, நடனம் புரிகின்ற இயல்புடையவராய், சிறகுகளையுடைய வண்டுகள் யாழ் போன்று ஒலிக்கும் பசுமையான சோலைகளும், வயல்களும் சூழ்ந்த திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளுகின்ற இறைவர் உலகமெல்லாம் ஏத்திப் போற்றுகின்ற சிவபெருமானே ஆவர்.

---

3245. மாகத்**திங்கள் வாண்முக**
மாதர்பாட வார்சடைப்
பாகத்திங்கள் சூடியோ
ராடன்மேய பண்டங்கன்
மேகத்தாடு சோலைசூழ்
மிடைசிற்றேம மேவினான்
ஆகத்தேர்கொ ளாமையைப்
பூண்டவண்ண லல்லனே.

மாகம் – ஆகாயம்

ஆகாயத்தில் விளங்கும் சந்திரன் போன்று ஒளியுடைய முகத்தையுடைய உமாதேவியார் இசைபாட, நீண்ட சடையில் பிறைச்சந்திரனைச் சூடிப் பண்டரங்கம் என்னும் கூத்தாடும் இறைவர், மேகம் திகழும் சோலைசூழ்ந்த திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமான் திருமார்பில் ஆமை ஓட்டினை ஆபரணமாகப் பூண்ட அண்ணலான சிவபெருமான் அல்லரோ ?

| | | |
|---|---|---|
| **3246.** நெடுவெண்டிங்கள் வாண்முக<br>மாதர்பாட நீள்சடைக்<br>கொடுவெண்டிங்கள் சூடியோ<br>ராடன்மேய கொள்கையான்<br>படுவண்டியாழ்செய் பைம்பொழிற்<br>பழனஞ்சூழ்சிற் றேமத்தான்<br>கடுவெங்கூற்றைக் காலினாற்<br>காய்ந்தகடவு ளல்லனே. | 3 | வெண்ணிறப் பூரண சந்திரன் போன்ற ஒளி பொருந்திய முகம் கொண்ட உமாதேவி இன்னிசையோடு பாட, நீண்ட சடையில் வளைந்த பிறைச்சந்திரனைச் சூடி நடனம் செய்கின்ற பெருமானாய், வண்டுகள் யாழ்போன்று ஒலி செய்யப் பசுமை வாய்ந்த சோலைகள் சூழ்ந்த திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளுகின்ற இறைவன் கொடிய காலனைக் காலால் உதைத்து அழித்த கடவுளான சிவபெருமான் அல்லனோ? |
| **3247.** கதிரார் திங்கள் வாண்முக<br>மாதர்பாடக் கண்ணுதல்<br>முதிரார்திங்கள் சூடியோ<br>ராடன்மேய முக்கணன்<br>எதிரார்புனலம் புன்சடை<br>எழிலாருஞ்சிற் றேமத்தான்<br>அதிரார்பைங்க ணேறுடை<br>யாதிமூர்த்தி யல்லனே. | 4 | கதிர்வீசும் சந்திரனைப் போன்ற ஒளிபொருந்திய முகம்கொண்ட உமாதேவியார் பண்ணோடு பாட, நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் இளம்பிறைச் சந்திரனைச் சூடி, ஆடுகின்ற முக்கண்ணர் ஆவார். அவர் கங்கையும், சடைமுடியும் கொண்டவராய் அழகுடைய திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளுபவர். அவர், கழுத்தில் கட்டிய சதங்கைமணி ஒலிக்கும், பசிய கண்களையுடைய இடபத்தை வாகனமாகக் கொண்ட ஆதிமூர்த்தி அல்லரோ? |
| **3248.** வானார்திங்கள் வாண்முக<br>மாதர்பாட வார்சடைக்<br>கூனார்திங்கள் சூடியோ<br>ராடன்மேய கொள்கையான்<br>தேனார்வண்டு பண்செயுந்<br>திருவாருஞ்சிற் றேமத்தான்<br>**மானார்விழிநன் மாதொடும்**<br>மகிழ்ந்தமைந்த னல்லனே. | 5 | வானில் விளங்கும் சந்திரனைப் போன்று ஒளிபொருந்திய முகமுடைய உமாதேவியார் பண்ணோடு பாட, நீண்ட சடைமுடியில் வளைந்த பிறைச்சந்திரனைச் சூடித் திருநடனம் செய்பவனாய்ப் பூக்களிலுள்ள தேனை அருந்திய வண்டு இசைபாடுகின்ற அழகிய திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளும் இறைவன், மான் போன்ற மருண்ட பார்வையுடைய உமாதேவியோடு மகிழ்ந்திருக்கும் வீரமுடைய சிவபெருமான் அல்லரோ? |
| **3249.** பனிவெண்டிங்கள் வாண்முக<br>மாதர்பாடப் பல்சடைக்<br>குனிவெண்டிங்கள் சூடியோ<br>ராடன்மேய கொள்கையான்<br>தனிவெள்விடையன் புள்ளினத்<br>தாமம்சூழ்சிற் றேமத்தான்<br>முனிவு மூப்புநீக்கிய<br>முக்கண்மூர்த்தி யல்லனே. | 6 | குளிர்ந்த வெண்ணிலவைப் போன்ற ஒளி பொருந்திய முகமுடைய உமாதேவியார் பண்ணிசைத்துப் பாட, சடைமுடியில் வளைந்த பிறைச்சந்திரனைச் சூடி ஆடல்புரிகின்றவர் இறைவர். அவர் ஒற்றை வெள் இடபத்தை வாகனமாகக் கொண்டு, பறவை இனங்களும் நறுமண மலர்களும் சூழ்ந்து விளங்கும் திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளுபவர் அவர் வெறுப்பு அற்றவராய், மூப்பினை அடையப் பெறாதவரான முக்கண் மூர்த்தியான சிவபெருமான் அல்லரோ? |

| பாடல் | எண் | உரை |
|---|---|---|
| **3250.** கிளருந்திங்கள் வாண்முக<br>மாதர்பாடக் கேடிலா<br>வளருந்திங்கள் சூடியோ<br>ராடன்மேய மாதவன்<br>தளிருங்கொம்பு மதுவுமார்<br>தாமஞ்சூழ்சிற் றேமத்தான்<br>ஒளிரும்வெண்ணூன் மார்பனென்<br>உள்ளத்துள்ளான் அல்லனே. | 7 | கிளர்ந்து எழுந்த பூரண சந்திரனைப் போன்று ஒளி பொருந்திய முகம் கொண்ட உமாதேவியார் பண்ணோடு பாட, குறைவிலாது வளரும் தன்மையுடைய பிறைச்சந்திரனைச் சூடித் திருநடனம் செய்யும் இறைவர், தளிரும், கொம்புகளும், தேன் துளிக்கும் மலர்மாலைகளும் சூழ விளங்கும் திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளுபவர். அப்பெருமான் ஒளிரும் முப்புரிநூலை அணிந்த திருமார்பினராய் என் உள்ளத்திலுள்ளவர் அல்லரோ? |
| **3251.** சூழ்ந்ததிங்கள் வாண்முக<br>மாதர்பாடச் சூழ்சடைப்<br>போழ்ந்ததிங்கள் சூடியோ<br>ராடன்மேய புண்ணியன்<br>தாழ்ந்தவயற்சிற் றேமத்தான்<br>றடவரையைத்தன் றாளினால்<br>ஆழ்ந்தவரக்க னொல்கவன்<br>றடர்த்தவண்ண லல்லனே. | 8 | சந்திரனைப் போன்று ஒளியுடைய முகம் கொண்ட உமாதேவியார் பண் இசைத்துப்பாட, சடைமுடியில் பிறைச்சந்திரனைச் சூடித் திருநடனம் செய்யும் புண்ணிய மூர்த்தியாகிய சிவபெருமான், வயல்வளமிக்க திருச்சிற்றேமத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமான் தம்காற்பெருவிரலை ஊன்றிப் பெரிய கயிலைமலையின் கீழ் அரக்கனான இராவணன் நெருக்குண்ணும்படி அன்று அடர்த்த அண்ணல் அல்லரோ? |
| **3252.** தனிவெண்டிங்கள் வாண்முக<br>மாதர்பாடத் தாழ்சடைத்<br>துணிவெண்டிங்கள் சூடியோ<br>ராடன்மேய தொன்மையான்<br>அணிவண்ணச்சிற் றேமத்தா<br>னலர்மேலந்த ணாளனும்<br>மணிவண்ணனுமுன் காண்கிலா<br>மழுவாட்செல்வ னல்லனே. | 9 | ஒப்பற்ற வெண்ணிறச் சந்திரன் போன்று ஒளிரும் முகமுடைய உமாதேவியார் பண்ணிசையோடு பாட, தாழ்ந்த சடையில் இளம்பிறைச்சந்திரனைச் சூடித் திருநடனம் செய்கின்ற மிகப் பழமையான இறைவன், அழகிய திருச்சிற்றேமத்தில் வீற்றிருந் தருளுகின்றார். அப்பெருமான் தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனும், நீலரத்தினம் போன்ற நிறமுடைய திருமாலும் காணமுடியாதவாறு மழுப்படை ஏந்தி விளங்குகின்ற செல்வர் அல்லரோ? |
| **3253.** வெள்ளைத்திங்கள் வாண்முக<br>மாதர்பாட வீழ்சடைப்<br>பிள்ளைத்திங்கள் சூடியோ<br>ராடன்மேய பிஞ்ஞகன்<br>உள்ளத்தார்சிற் றேமத்தா<br>னுருவார்புத்த ரொப்பிலாக்<br>கள்ளத்தாரைத் தானாக்கியுட்<br>கரந்துவைத்தான் அல்லனே. | 10 | வெண்ணிறச் சந்திரன் போன்ற ஒளி திகழும் முகமுடைய உமாதேவியார் பண்ணிசைத்துப் பாட, சடைமுடியில் பிறைச்சந்திரனைச் சூடி, திருநடனம் செய்யும் இறைவன் விரும்பி வீற்றிருந்தருளுவது திருச்சிற்றேமம் என்ற தலமாகும். அப்பெருமான் புத்தர், சமணர் ஆகியோர்களைப் படைத்தும், அவர்கட்குத் தோன்றாதவாறு மறைந்தும் விளங்குபவர். |

| | |
|---|---|
| **3254.** கல்லிலோத மல்குதண்<br>கானல்சூழ்ந்த காழியான்<br>நல்லவாய வின்றமிழ்<br>நவிலுஞான சம்பந்தன்<br>செல்வனூர்சிற் றேமத்தைப்<br>பாடல்சீரார் நாவினால்<br>வல்லராகி வாழ்த்துவா<br>ரல்லலின்றி வாழ்வரே. 11 | கற்களால் ஆகிய மதிலில் கடல் அலைகள் மல்கும், குளிர்ந்த கடற்கரைச் சோலைசூழ்ந்த சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன், செல்வனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருச்சிற்றேமத்தைப் போற்றி நல்ல இன்தமிழில் அருளிய சிறப்புடைய இப்பாடல்களை நாவினால் ஓதவல்லவர்கள் துன்பம் அற்று வாழ்வார்கள். |

## 3. கௌசிகம்

மருதப் பெரும்பண்ணில் மூன்றாவது வஞ்சி என்ற திறத்தில் பெருகியலாய் இது 80–ஆம் எண் பெற்ற பண். இது சங்கீத ரத்நாகரத்தில் தேவரா வர்த்தினி எனவே குறிப்பிடப்பெற்றுள்ளது. வீரம் வெகுளி வியப்பு என்னும் சுவைகளோடு கூடியது என்று அங்குச் சொல்லப்பட்டது. கட்டளை 2. இது பகற்பண் நாலாயிரத்தில் இது கைசிகம் என்று வழங்கப்படுவது போலும். இப்பண்ணைச் சம்பந்தரும் சுந்தரரும் பாடியுள்ளனர். சம்பந்தர் 3 :43–54, 117 : சுந்தரர் : 96. இவற்றுள் சம்பந்தர் பதிகம் முதலில் 12 உள்ளன. பின் தனியே 117. இது மாலைமாற்றுப் பதிகம் இது சிறப்புத் தன்மையால் இப்படிப் பிரிந்து அமைந்தது போலும். வேறு எந்தப் பதிகமும் இப்படி இரண்டிடங்களில் அமைக்கப் பெறவில்லை. இனி மிகவும் சிறப்பான பல பாடல்கள் சம்பந்தருடைய கௌசிகப் பண்ணில் அமைந்துள்ளன. "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" என்று அவர் சோதியுள் கலந்த சமயம் பாடிய "நமசிவாயப் பதிகம்", "பையவே சென்று பாண்டியற்காகவே" என்று தீயைப் பாண்டியன் மீது ஏவிய பதிகம், "வாழ்க அந்தணர்"என்று திருப்பாசுரப் பதிகம் ஆகியன குறிப்பிடத்தக்கன. இது சுத்தசாவேரியில் பாடப்பட்டு வந்தது. இப்போது பைரவியில் பாடுகிறார்கள்.

நம்பாடுவான் என்ற பாணர் குல பக்தன் திருக்குறுங்குடியில் பள்ளியெழுச்சி பாடுபவன். அவனுடைய பக்தியும் சத்தியமும் காரணமாக, வைணவரிடையும் கோயில்களிலும் கைசிக ஏகாதசி என்ற ஒருவிழா ஏற்பட்டு இன்னும் நடந்துவருவது கைசிகம் (கௌசிகம்) என்ற பண்ணுக்குச் செய்யும் சிறப்பாகும். இவ்வரலாறு பாணர் வரலாற்றில் சொல்லப் பெற்றுள்ளது.

### கௌசிகப் பண்ணின் இலக்கணம்

மடிப்புப் பலவாம் மடியென நின்றும்
படர்ந்து விரிந்து படாஅம் எனப்பெற்றும்
கூசல் இகக்கும் கொய்சகம் கௌசிகம்
என்ன வுடுக்கை இயல்புடைத்தாக
மடிக்கவும் விரிக்கவும் வரும்பண் கௌசிகம்

### நூற்பாப் பொருள்

ஆடையானது பலவகை மடிப்பாகவும் இருக்கும். மடிப்பு நீங்கிய வழி படர்ந்து இருக்கும் படாம் என சொல்லுந்தகையதும் ஆகும். மக்களின் கூச்சத்தை நீக்கும் இயல்புடையது. கொய்சகம் என்பது ஆடையாகும். கொய்சகம் என்பதே கௌசிகம் என வந்துள்ளது.

## 43. சீகாழி

பண் : கௌசிகம் பதிக எண் : 43

| | |
|---|---|
| **3255.** சந்த மார்முலை யாடன கூறனார்<br>வெந்த வெண்பொடி யாடிய மெய்யனார்<br>கந்த மார்பொழில் சூழ்தரு காழியுள்<br>எந்தை யாரடி யென்மனத் துள்ளவே. 1 | இறைவர் அழகிய திருமுலைகளையுடைய உமாதேவியாரைத் தம் திருமேனியில் ஒரு கூறாகக் கொண்டவர். வெந்த திருவெண்ணீற்றினைப் பூசிய திருமேனி உடையவர். நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த சீகாழியுள் வீற்றிருந்தருளிய என் தந்தையாராகிய சிவபெருமானின் திருவடிகள் என் மனத்தில் நன்கு பதிந்துள்ளன. |
| **3256.** மானி டம்முடை யார்வளர் செஞ்சடைத்<br>தேனி டங்கொளுங் கொன்றையந் தாரினார்<br>கானி டங்கொளுந் தண்வயற் காழியார்<br>ஊனி டங்கொண்டெ னுச்சியி னிற்பரே. 2 | மானை இடக்கரத்தில் ஏந்திய சிவபெருமான் நீண்ட சிவந்த சடைமுடியின்மீது, தேன் துளிக்கும் கொன்றைமாலையை அணிந்தவர். நறுமணம் திகழும் குளிர்ந்த வயல்களையுடைய சீகாழியில் வீற்றிருந்தருளும் அப்பெருமான் இந்த உடலை இடமாகக் கொண்டு எனது உச்சியில் நிற்பர். |
| **3257.** மைகொள் கண்டத்தர் வான்மதிச் சென்னியர்<br>பைகொள் வாளர வாட்டும் படிறனார்<br>கைகொண் மான்மறி யார்கடற் காழியுள்<br>ஐய னந்தணர் போற்ற இருக்குமே. 3 | நஞ்சுண்டதால் மை போன்ற கறுத்த கண்டத்தை உடையவரும், வானில் விளங்கும் சந்திரனைச் சடைமுடியில் சூடி, படமெடுத்தாடும் பாம்பினை ஆட்டும் படிறரும், இளமான்கன்றை இடக்கரத்தில் ஏந்தியுள்ள தலைவருமான சிவபெருமான், அந்தணர்கள் போற்றக் கடல்சூழ்ந்த சீகாழியில் வீற்றிருந் தருளுகின்றார். |
| **3258.** புற்றி னாகமும் பூளையும் வன்னியுங்<br>கற்றை வார்சடை வைத்தவர் காழியுட்<br>பொற்றொ டியோ டிருந்தவர் பொற்கழல்<br>**உற்ற போதுட** னேத்தி யுணருமே. 4<br><br>எப்பொழுதெல்லாம் முடியுமோ அப்பொழுதெல்லாம் சிவனை வழிபட வேண்டும். | புற்றில் வாழும் பாம்பையும், தும்பைப்பூ மாலையையும், வன்னிப் பத்திரத்தையும் தமது கற்றையான நீண்ட சடைமேல் அணிந்து, சீகாழியில் உமாதேவியோடு வீற்றிருந் தருளுகின்ற சிவபெருமானின் பொன் போன்ற திருவடிகளைச் சமயம் நேர்ந்தபொழுது தாமதியாது உடனே துதித்துத் தியானித்து அவனருளை உணர்வீர்களாக. |
| **3259.** நலியுங் குற்றமு நம்முட னோய்வினை<br>மெலியு மாறது வேண்டுதி ரேல்வெய்ய<br>கலிக டிந்தகை யார்கடற் காழியுள்<br>அலைகொள் செஞ்சடை யாரடி போற்றுமே. 5 | நம் மனத்தை வருத்தும் குற்றங்களும், தீவினைகளால் நம் உடலை வருத்தும் நோய்களும், மெலிந்து விலக விரும்புவீர்களாயின், கையால் வேள்வி வளர்த்துக் கொடிய கலியினால் ஏற்படும் துன்பத்தை ஓட்டும் அந்தணர்கள் வாழ்கின்ற கடல்சூழ்ந்த சீகாழியில், அலைகளையுடைய கங்கையைத் தாங்கிய செஞ்சடையானாகிய சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி வழிபடுங்கள். |

| | | |
|---|---|---|
| **3260.** பெண்ணொர் கூறினர் பேயுட னாடுவர்<br>பண்ணு மேத்திசை பாடிய வேடத்தர்<br>கண்ணு மூன்றுடை யார்கடற் காழியுள்<br>அண்ண லாய வடிகள் சரிதையே. | **6** | சிவபெருமான் உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாக உடையவர். பேய்க்கணங்கள் சூழ ஆடுபவர். உலகத்தார் போற்றும்படி நல்ல பண்களை ஏழிசைகளோடு பாடிய வேடத்தர், மூன்று கண்களை உடையவர். இவை கடல்சூழ்ந்த சீகாழியில் வீற்றிருந்தருளும் தலைவரான சிவபெருமானின் புகழை உணர்த்துபவைகள் ஆகும். |
| **3261.** பற்று மானு மழுவு மழகுற<br>முற்று மூர்திரிந் துபலி முன்னுவர்<br>கற்ற மாநன் மறையவர் காழியுட்<br>பெற்ற மேற துகந்தார் பெருமையே. | **7** | பெருமானார் தம் திருக்கரத்திலே மானையும், மழுவையும் அழகுற ஏந்தி, ஊர் முழுவதும் திரிந்து பிச்சை எடுக்க முற்படுவார். வேதங்களை நன்கு கற்ற பெருமையுடைய நல் அந்தணர்கள் வாழ்கின்ற சீகாழியில் இடபத்தை வாகனமாக விரும்பி வீற்றிருந்தருளுகின்ற அச்சிவபெருமானது தன்மை இத்தன்மைத்தாகும். |
| **3262.** எடுத்த வல்லரக் கன்முடி தோளிற<br>அடர்த்து கந்தருள் செய்தவர் காழியுட்<br>கொடித்த யங்குநற் கோயிலு ளின்புற<br>இடத்து மாதொடு தாமு மிருப்பரே. | **8** | திருக்கயிலைமலையைப் பெயர்த்தெடுத்த வல்லரக்கனான இராவணனின் முடியும், தோளும் நெரியுமாறு அடர்த்து, பின் அவன் எழுப்பிய சாமகானத்தால் மகிழ்ந்து அருள் செய்த சிவபெருமான் சீகாழியில் கொடிகள் விளங்குகின்ற அழகிய திருக்கோயிலுள் தம் திருமேனியின் இடப்புறத்தில் உமாதேவியை உடனாகக் கொண்டு இன்புற வீற்றிருந்தருளுவர். |
| **3263.** காலன் தன்னுயிர் வீட்டு கழலடி<br>மாலு நான்முகன் றானும் வனப்புற<br>ஓல மிட்டுமுன் றேடி யுணர்கிலாச்<br>சீலங் கொண்டவ னூர்திகழ் காழியே. | **9** | காலன் உயிரைப் போக்கிய இறைவன் திருவடியைத் திருமாலும், பிரமனும் வனப்புறும் தோற்றத்தினராய் ஓலமிட்டுத் தேடியும் காணவொண்ணாத சிறப்புடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஊர் பெருமையுடன் திகழும் சீகாழியாகும். |

3264. உருவ நீத்தவர் தாமு முறுதுவர்
தருவ லாடையி னாருந் தகவிலர்
கருமம் வேண்டுதி ரேற்கடற் காழியுள்
ஒருவன் சேவடி யேஅடைந் துய்ம்மினே. 10

தமது கடுமையான சமய ஒழுக்கத்தினால் உடலின் இயற்கை நிறம் மாறிக் கருநிறமான சமணர்களும், துவர் நிறம் ஊட்டப்பட்ட ஆடையை உடுக்கின்ற புத்தர்களும் தகைமை யற்றவர்கள். உங்களுக்கு நல்ல காரியம் கைகூட வேண்டுமென்று விரும்பினீர்களே யானால், கடலை அடுத்த சீகாழியில் வீற்றிருந்தருளும் ஒப்பற்ற சிவபெருமானின் சிவந்த திருவடிகளைச் சரணடைந்து உய்வீர்களாக!

3265. கானல் வந்துல வுங்கடற் காழியுள்
ஈன மில்லி யிணையடி யேத்திடும்
ஞான சம்பந்தன் சொல்லிய நற்றமிழ்
மான மாக்கும் மகிழ்ந்துரை செய்யவே. 11

மானம் – பெருமை – வீடுபேறு.
"உரைத்த நற்பயனும் பெரும்பயனாயது ஒள்ளிய வீடு" பேரூர்ப்புராணம்.

கரையிலுள்ள சோலைகளிலிருந்து நறுமணம் வீசும் கடலை அடுத்த சீகாழியில், அழிவற்று என்றும் நித்தப்பொருளாக விளங்கிடும் சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளையும் வணங்கிடும் ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை மனமகிழ்ச்சியுடன் பாட அத்தமிழ் மேலான வீடுபேற்றைத் தரும்.

## 44. திருக்கழிப்பாலை

பண் : கௌசிகம் பதிக எண் : 44

3266. வெந்த குங்கி லியப்புகை விம்மவே
கந்த நின்றுல வுங்கழிப் பாலையார்
அந்த மும்மள வும்மறி யாததோர்
சந்த மாலவர் மேவிய சாந்தமே. 1

நெருப்பிலிடப்பட்ட குங்கிலியத்தின் புகைப் பெருக்கால் நறுமணம் கமழும் திருக்கழிப்பாலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் அழிவில்லாதவர். இன்ன தன்மையர் என்று அளந்தறிய முடியாதவர். அப்பெருமானின் சாந்த நிலையும் அளக்கொணாத தன்மையுடையதாகும்.

3267. வானி லங்க விளங்கு மிளம்பிறை
தான லங்க லுகந்த தலைவனார்
கானி லங்க வருங்கழிப் பாலையார்
மான லம்மட நோக்குடை யாளொடே. 2

வானம் பிரகாசிக்க விளங்கும் இளம்பிறைச் சந்திரனை மாலைபோல் விரும்பி அணிந்த தலைவரான சிவபெருமான், கடற்கரைச் சோலை விளங்கும் திருக்கழிப்பாலையில் மான் போன்ற பார்வையுடைய உமாதேவியாரோடு வீற்றிருந்தருளுவார்.

| | | |
|---|---|---|
| **3268.** | கொடிகொ ளேற்றினர் கூற்றை யுதைத்தனர்<br>பொடிகொண் மார்பினிற் பூண்டதொ ராமையர்<br>கடிகொள் பூம்பொழில் சூழ்கழிப் பாலையுள்<br>அடிகள் செய்வன வார்க்கறி வொண்ணுமே. 3 | இறைவர் எருதுக் கொடியுடையவர். காலனைக் காலால் உதைத்தவர். திருநீறு அணிந்துள்ள மார்பில் ஆமையின் ஓட்டினை ஆபரணமாக அணிந்தவர். நறுமணம் கமழும் பூஞ்சோலைகள் சூழ்ந்த திருக்கழிப்பாலையில் வீற்றிருந்தருளும் அப்பெருமானின் செயல்களை யார்தான் அறிந்துகொள்ள முடியும்? ஒருவராலும் முடியாது. |
| **3269.** | பண்ண லம்பட வண்டறை கொன்றையின்<br>தண்ண லங்க லுகந்த தலைவனார்<br>கண்ண லங்கவ ருங்கழிப் பாலையுள்<br>அண்ண லெங்கட வுள்ளவன் அல்லனே. 4 | பூக்களிலுள்ள தேனை உண்டதால் வண்டுகள் பண்ணிசைக்கக் குளிர்ச்சி பொருந்திய கொன்றை மாலையை விரும்பி அணிகின்ற தலைவரான சிவபெருமான் கண்ணைக் கவரும் பேரழகினையுடைய திருக்கழிப்பாலையில் வீற்றிருந்தருளும் அண்ணலாவார். அவரே எம் கடவுள் அல்லரே? |
| **3270.** | ஏரி னாருல கத்திமை யோரொடும்<br>பாரி னாருட னேபர வப்படுங்<br>காரி னார்பொழில் சூழ்கழிப் பாலையெம்<br>சீரி னார்கழ லேசிந்தை செய்ம்மினே 5. | எழுச்சி மிகுந்த விண்ணுலகத்தவராகிய தேவர்களோடு, மண்ணுலக மக்களாலும் சேர்ந்து தொழப்படுகின்றவனும், மேகங்கள் தவழும் சோலைகள் சூழ்ந்த திருக்கழிப்பாலையில் வீற்றிருந்தருளும் சிறப்புடையவனுமாகிய சிவபெருமானின் திருவடிகளையே சிந்தை செய்யுங்கள். |
| **3271.** | துள்ளு மான்மறி யங்கையி லேந்தியூர்<br>கொள்வ னாரிடு வெண்டலை யிற்பலி<br>கள்வ னாருறை யுங்கழிப் பாலையை<br>உள்ளு வார்வினை யாயின வோயுமே. 6 | துள்ளுகின்ற இளமையான மானை, அழகிய கையில் ஏந்தி, ஊர்தோறும் திரிந்து பிச்சை ஏற்கின்ற கள்வனாராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கழிப்பாலையை நினைந்து ஏத்த வினையாவும் நீங்கும். |
| **3272.** | மண்ணி னார்மலி செல்வமும் வானமும்<br>எண்ணி நீரினி தேத்துமின் பாகமும்<br>பெண்ணி னார்பிறை நெற்றியொ டுற்றமுக்<br>கண்ணி னாருறை யுங்கழிப் பாலையே. 7 | மண்ணுலகில் பொருந்திய மிக்க செல்வங்களையும், வானுலகில் மறுமையில் பெறக்கூடிய செல்வத்தையும் தருபவன் இவனே என்பதை மனத்தில் எண்ணி, தன் திருமேனியின் ஒரு பாகமாக உமாதேவியைக் கொண்டுள்ளவனும், பிறைச் சந்திரனைச் சடைமுடியில் அணிந்தவனும், முக்கண்ணனுமான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கழிப்பாலையை இனிதே போற்றி நீங்கள் வணங்குவீர்களாக! |

| | | |
|---|---|---|
| **3273.** இலங்கை மன்னனை யீரைந் திரட்டிதோள்<br>துலங்க வூன்றிய தூமழு வாளினார்<br>கலங்கள் வந்துல வுங்கழிப் பாலையை<br>வலங்கொள் வார்வினை யாயின மாயுமே. | 8 | இலங்கை மன்னனான இராவணனின் இருபது தோள்களும் நொறுங்கும்படி கயிலைமலையில் தன்காற்பெருவிரலை ஊன்றிய, தூய்மையான மழுவாகிய படைக்கலத்தை உடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற, மரக்கலங்கள் வந்து உலவும் திருக்கழிப் பாலையை வலமாக வருபவர்களுக்கு வினைகள் யாவும் அழிந்துவிடும். |
| **3274.** ஆட்சி யாலல ரானொடு மாலுமாய்த்<br>தாட்சி யாலறி யாது தளர்ந்தனர்<br>காட்சி யாலறி யான்கழிப் பாலையை<br>மாட்சி யாற்றொழு வார்வினை மாயுமே. | 9 | தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமனும், திருமாலும் தாங்கள் செய்கின்ற படைத்தல், காத்தல் ஆகிய தொழில்களின் ஆளுமையால் ஏற்பட்ட செருக்குக் காரணமாக இறைவனுடைய திருவடியையும் அறிய முற்பட்டு, தமது தாழ்ச்சியால் அவற்றை அறிய முடியாது தளர்ச்சியடைந்தனர். நூலறிவாலும், ஆன்ம அறிவாலும் அறியப்படாதவனான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கழிப்பாலையை அதன் மாட்சிமை உணர்ந்து தொழுவாருடைய வினைகள் யாவும் மாயும். |
| **3275.** செய்ய நுண்டுவ ராடையி னாரொடு<br>மெய்யின் மாசு பிறக்கிய வீறிலாக்<br>கையர் கேண்மை யெனோகழிப் பாலையெம்<br>ஐயன் சேவடி யேயடைந் துய்ம்மினே. | 10 | சிவந்த மெல்லிய மஞ்சட்காவி உடைகளை உடுத்தும் புத்தர்களோடும், அழுக்கு உடம்பை உடைய பெருமையற்ற கீழ்மக்களாகிய சமணர்களோடும் நட்பு உங்களுக்கு ஏனோ ? திருக்கழிப்பாலையில் வீற்றிருந்தருளும் எம் தலைவராகிய சிவபெருமானுடைய சிவந்த திருவடிகளையே சரணாக அடைந்து உய்தி பெறுங்கள். |
| **3276.** அந்தண் காழி யருமறை ஞானசம்<br>பந்தன் பாய்புனல் சூழ்கழிப் பாலையைச்<br>சிந்தை யாற்சொன்ன செந்தமிழ் வல்லவர்<br>முந்தி வானுல காடன் முறைமையே. | 11 | அழகிய, குளிர்ச்சி மிகுந்த சீகாழியில் அவதரித்த அருமறைவல்ல ஞானசம்பந்தன், பாய்கின்ற நீர் சூழ்ந்த திருக்கழிப்பாலையைப் போற்றிச் சிவ சிந்தையோடு சொன்ன செந்தமிழாகிய இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள் எல்லோரும் முன்னதாக வானுலகத்தை ஆளுதற்கு உரியவராவர். |

## 45. திருவாரூர் (நகர்ப்புறத்து அடியார்கூட்டத்தை வணங்கிப் பாடியது )

பண் : கௌசிகம் — பதிக எண் : 45

| | பாடல் | விளக்கம் |
|---|---|---|
| 3277. | அந்த மாயுல காதியு மாயினான்<br>வெந்த வெண்பொடிப் பூசிய வேதியன்<br>சிந்தை யேபுகுந் தான்றிரு வாரூரெம்<br>எந்தை தானெனை யேன்றுகொ ளுங்கொலோ. 1 | சிவபெருமான் உலகத்தின் ஒடுக்கத்திற்கும், தோற்றத்திற்கும் நிமித்த காரணன். திருவெண்ணீறு பூசிய வேத நாயகன். என் சிந்தையில் புகுந்து விளங்குபவன். திருவாரூரில் வீற்றிருந்தருளும் எம் தந்தையான அவன் என்னை ஏற்று அருள் புரிவானோ! |
| 3278. | கருத்த னேகரு தார்புர மூன்றெய்த<br>ஒருத்த னேயுமை யாளொரு கூறனே<br>திருத்த னேதிரு வாரூரெந் தீவண்ண<br>அருத்த வென்னெனை யஞ்சலென் னாததே. 2 | இறைவர் என் கருத்திலிருப்பவர். தம்மைக் கருதிப் போற்றாத பகையசுரர்களின் மூன்று புரங்களையும் அக்கினிக்கணை தொடுத்து எரித்துச் சாம்பலாகுமாறு செய்தவர். ஒப்பற்றவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு கூறாகக் கொண்டவர். தூயவர். திருவாரூரில் வீற்றிருந்தருளும் தீ வண்ணர். எப்பொருட்கும் விளக்கமாய் அமைந்த பெரும்பொருள். அவர் என்னை அஞ்சற்க என்று மொழியாததன் காரணம் யாதோ ? |
| 3279. | மறையன் மாமுனி வன்மரு வார்புரம்<br>இறையின் மாத்திரை யில்லெரி யூட்டினான்<br>சிறைவண் டார்பொழில் சூழ்திரு வாரூரெம்<br>இறைவன் றானெனை யேன்றுகொ<br>ளுங்கொலோ. 3 | இறைவன், வேதங்களை அருளிச் செய்து வேதப் பொருளாகவும் விளங்குபவன். பெரிய தவத்தன். பகையசுரர்களின் முப்புரங்களை நொடிப்பொழுதில் எரியூட்டியவன். சிறகுகளையுடைய வண்டுகள் ஒலிக்கும் சோலைகள் சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் இறைவன் என்னை அடியவனாக ஏற்றுக் கொள்வானோ! |
| 3280. | பல்லி லோடுகை யேந்திப் பலிதிரிந்<br>தெல்லி வந்திடு காட்டெரி யாடுவான்<br>செல்வ மல்கிய தென்றிரு வாரூரான்<br>அல்ல றீர்த்தெனை யஞ்சலெ னுங்கொலோ. 4 | இறைவர் பிரமனின் பல் இல்லாத மண்டை யோட்டை ஏந்திப் பலி ஏற்றுத் திரிபவர். இரவில் சுடுகாட்டில் நடனம் புரிபவர். செல்வச் செழிப்பு மிக்க அழகிய திருவாரூரில் வீற்றிருந்தருளும் அப்பெருமான் என் துன்பத்தைத் தீர்த்து அஞ்சாதே என்று சொல்லி அருள்புரிவாரோ! |
| 3281. | குருந்த மேறிக் கொடிவிடு மாதவி<br>விரிந்த லர்ந்த விரைகமழ் தேன்கொன்றை<br>திருந்து மாடங்கள் சூழ்திரு வாரூரான்<br>வருந்தும் போதெனை வாடலெ னுங்கொலோ. 5 | குருந்த மரத்தில் ஏறிப்படரும் மாதவியும், விரிந்து மலர்ந்து நறுமணம் கமழும் தேனுடைய கொன்றை மரங்களும் திகழ, மாட மாளிகைகள் சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் இறைவர் நான் வருந்தும்போது, என்னை வருந்தாதே என்றுரைத்து அருள் புரிவாரோ! |

| | |
|---|---|
| **3282.** வார்கொண் மென்முலை யாளொரு பாகமா<br>ஊர்க ளாரிடு பிச்சைகொ ளுத்தமன்<br>சீர்கொண் மாடங்கள் சூழ்திரு வாரூரான்<br>ஆர்க ணாவெனை யஞ்சலெ னாததே. **6** | கச்சணிந்த மெல்லிய முலைகளையுடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு, ஊரிலுள்ளவர்கள் இடுகின்ற பிச்சையை ஏற்கும் உத்தமனாய், செல்வ வளமிக்க அழகிய மாடங்கள் சூழ்ந்த திருவாரூரில் வீற்றருந்தருளும் சிவபெருமான் நான் வேறு யாரைச் சரணாகப் புகுந்துள்ளேன் என்று கருதி அவன் என்னை அஞ்சாதே என்று கூறாமலிருக்கிறான்? |
| **3283.** வளைக்கை மங்கைநல் லாளையோர் பாகமாத்<br>துளைக்கை யானை துயர்படப் போர்த்தவன்<br>திளைக்குந் தண்புனல் சூழ்திரு வாரூரான்<br>இளைக்கும் போதெனை யேன்றுகொ<br>ளுங்கொலோ **7** | வளையலணிந்த கைகளையுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட இறைவன், தன்னை எதிர்த்து வந்த யானையானது கலங்குமாறு அடர்த்து அதன் தோலை உரித்துப் போர்த்திக் கொண்டவன். குளிர்ந்த புனல் சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் இறைவன், இளைத்து வருந்தும் காலத்தில் என்னை ஏற்று அருள் புரிவானோ! |
| **3284.** இலங்கை மன்ன னிருபது தோளிறக்<br>கலங்கக் கால்விர லாற்கடைக் கண்டவன்<br>வலங்கொள் மாமதில் சூழ்திரு வாரூரான்<br>அலங்கல் தந்தெனை யஞ்சலெ னுங்கொலோ<br>**8** | இலங்கை வேந்தனான இராவணனுடைய இருபது தோள்களும் நொறுங்கிக் கலங்கத் தன் காற்பெருவிரலை ஊன்றியவர் இறைவர். வலிமையுடைய பெரிய மதில்கள் சூழ்ந்த திருவாரூரில் வீற்றிருந்தருளும் அப்பெருமான் எனக்குப் பெருமை சேர்க்கும் மாலை தந்து அருளி, நான் வருந்தும் காலத்தில் அஞ்சாதே என்று அபயம் அளித்துக் காப்பாரோ! |
| **3285.** நெடிய மாலும் பிரமனும் நேர்கிலாப்<br>படிய வன்பனி மாமதிச் சென்னியான்<br>செடிக ணீக்கிய தென்றிரு வாரூரெம்<br>அடிக டானெனை யஞ்சலெ னுங்கொலோ. **9** | நீண்டு உயர்ந்த திருமாலும், பிரமனும் காணமுடியாத தன்மையராய்க் குளிர்ந்த சந்திரனைச் சடைமுடியில் தாங்கிய இறைவர், மன்னுயிர்களின் பாவங்களை நீக்கி அழகிய திருவாரூரில் வீற்றிருந்தருளும் அடிகளாவார். அவர் என்னை அஞ்சாதே என்று அருள் புரிவாரோ! |

| | |
|---|---|
| 3286. மாசு மெய்யினர் வண்டுவ ராடைகொள்<br>காசை போர்க்குங் கலதிகள் சொற்கொளேல்<br>தேச மல்கிய தென்றிரு வாரூரெம்<br>ஈசன் றானெனை யேன்றுகொ ளுங்கொலோ. 10 | அழுக்கு உடம்பையுடைய சமணர்களும், துவராடை அணிந்த புத்தர்களும், கூறும் பயனற்ற சொற்களைக் கொள்ளாதீர். அருளொளி விளங்கும் அழகிய திருவாரூரில் வீற்றிருந்தருளும் எம் இறைவரான சிவபெருமான் என்னை ஏற்று நின்று அருள்புரிவாரோ! |
| 3287. வன்னி கொன்றை மதியொடு கூவிளம்<br>சென்னி வைத்த பிரான்றிரு வாரூரை<br>மன்னு காழியுண் ஞானசம் பந்தன்வாய்ப்<br>பன்னு பாடல்வல் லார்க்கில்லை பாவமே. 11 | வன்னி, கொன்றை, சந்திரன், வில்வம் ஆகியவற்றைச் சடைமுடியில் திகழச் சூடிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருவாரூரை, நிலைபெற்ற சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் வாய்மலர்ந்து அருளிய இத்திருப்பாடல்களை ஓத வல்லவர்கட்குப் பாவம் இல்லை. |

## 46. திருக்கருகாவூர்

பண் : கௌசிகம் பதிக எண் : 46

| | |
|---|---|
| 3288. முத்தி லங்குமுறு வல்லுமை யஞ்சவே<br>மத்த யானைமறு கவ்வுரி வாங்கியக்<br>கத்தை போர்த்தகட வுள்கரு காவூரெம்<br>அத்தர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 1<br><br>அவர் வண்ணம் மழலும் மழல்வண்ணமே – பதிகத்தின் மகுடம். | முத்துப் போன்ற புன்னகை கொண்டு விளங்கும் உமாதேவி அஞ்சுமாறு மதம் பிடித்த யானையின் தோலை உரித்துப் போர்த்திய கடவுள் திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் எம் தலைவர். அவர் வண்ணம் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |
| 3289. விமுத வல்லசடை யான்வினை யுள்குவார்க்<br>கமுத நீழலக லாததோர் செல்வமாம்<br>கமுத முல்லை கமழ்கின்ற கருகாவூர்<br>அமுதர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே 2.<br><br>இப்பதிக்கு தலவிருட்சம் முல்லை. கமுத முல்லை (2) கடிகொள் முல்லை (4) கைதன் முல்லை (5) கந்தமௌவல் முல்லை (7) கார்த்தண முல்லை (10) என்று இயன்ற இடங்களிலெல்லாம் முல்லை மணம் கமழச்செய்ய ஞானசம்பந்தரால்தான் முடியும். | கங்கையைத் தாங்கிய சடைமுடியுடைய சிவபெருமானுக்குத் திருத்தொண்டு செய்யும் அடியவர்களே! நும் பணி ஆனது அமுதம் போல இன்பம் விளைவிக்கும் திருவடி நீழலை விட்டு அகலாத செல்வமாகும். வெண்ணிற முல்லை மணம் கமழ்கின்ற திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் இறைவன் அமுதம் போன்று இனிமை தருபவன். அவனுடைய வண்ணம் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |
| 3290. பழக வல்லசிறுத் தொண்டர்பா வின்னிசைக்<br>குழக ரென்றுகுழை யாவழை யாவரும்<br>கழல்கொள் பாடலுடை யார்கரு காவூரெம்<br>அழகர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 3 | பழகுவதற்குரிய சிறப்புடைய சிறுத்தொண்டர்கள் இன்னிசையோடு பாடி அழகனான சிவபெருமானைக் குழைந்து, அழைத்து, கழலணிந்த திருவடிகளையே பொருளாகக் கொண்ட பாக்களைப் பாட, திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் அழகரான சிவபெருமானின் வண்ணம் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |

| | | |
|---|---|---|
| **3291.** | பொடிமெய் பூசிமலர் கொய்து புணர்ந்துடன்<br>செடிய ரல்லாவுள்ளம் நல்கிய செல்வத்தர்<br>**கடிகொள் முல்லை**கம ழுங்கரு காவூரெம்<br>அடிகள் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 4 | திருவெண்ணீற்றைத் திருமேனியில் பூசி, மலர் கொண்டு தூவிப் போற்றி வழிபடும் அடியவர்கட்குக் குற்றமில்லாச் செம்மையான உள்ளம் நல்கும் செல்வரான சிவபெருமான், நறுமணம் கமழும் முல்லை மலர்களையுடைய திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் எம் அடிகளாவார். அவருடைய வண்ணம் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |
| **3292.** | மைய லின்றிமலர் கொய்துவ ணங்கிடச்<br>செய்ய வுள்ளம்மிக நல்கிய செல்வத்தர்<br>**கைதன் முல்லைகம** ழுங்கரு காவூரெம்<br>ஐயர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 5 | மயக்கமில்லாமல் மலர்கொய்து போற்றி வணங்கும் அடியவர்கட்குச் செம்மையான உள்ளம் நல்கும் செல்வத்தராகிய சிவபெருமான், தாழையும் முல்லையும் மணம் கமழும் திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் எம் தலைவர் ஆவார். அவருடைய வண்ணம் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |
| **3293.** | மாசில் தொண்டர்மலர் கொண்டுவ ணங்கிட<br>ஆசை யாரவரு ணல்கிய செல்வத்தர்<br>காய்சி னத்தவிடை யார்கரு காவூரெம்<br>ஈசர் வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. 6 | மாசில்லாத தொண்டர்கள் மலர்தூவி வணங்கிட அவர்கள் விருப்பம் நிறைவேற அருள்நல்கும் செல்வரான சிவபெருமான், சினம் கொள்ளும் இடபத்தை வாகனமாகக் கொண்டு திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் எம் இறைவர் ஆவார். அவர் வண்ணம் எரியும் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |
| **3294.** | வெந்த நீறுமெய் பூசிய வேதியன்<br>சிந்தை நின்றருள் நல்கிய செல்வத்தன்<br>**கந்த மௌவல்**கம ழுங்கரு காவூரெம்<br>எந்தை வண்ணம்மெரி யும்மெரி வண்ணமே. 7<br><br>XXXXXXXXXXXXXXXXXX 8 | திருநீறு பூசிய வேதியராய், அடியவர்தம் சிந்தையுள் நின்று அருள்புரியும் செல்வரான சிவபெருமான், நறுமணம் கமழும் முல்லைகள் மலரும் திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் எம் தந்தையாவார். அவர் வண்ணம் எரியும் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |
| **3295.** | பண்ணி னேர்மொழி யாளையோர் பாகனார்<br>மண்ணு கோலம்முடை யம்மல ரானொடும்<br>கண்ண னேடவரி யார்கரு காவூரெம்<br>அண்ணல் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 9 | பண் போன்று இனிய மொழிபேசும் உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்ட இறைவன், அலங்கரிக்கப்பட்ட கோலமுடைய அழகிய மலரில் வீற்றிருந்தருளும் பிரமனும், திருமாலும் காண்பதற்கு அரியவராய்த் திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் எம் தலைவர் ஆவார். அவரது வண்ணம் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமாகும். |

3296. போர்த்த மெய்யினர் போதுழல் வார்கள்சொல்
தீர்த்த மென்றுதெளி வீர்தெளி யேன்மின்
**கார்த்தண் முல்லை**கம ழுங்கரு காவூரெம்
ஆத்தர் வண்ணம்மழ லும்மழல் வண்ணமே. 10

சீவரவுடையால் மறைத்த உடம்பினர்களும், பொழுதெல்லாம் அலைபவர்களும் சொல்கின்ற மொழிகளை உயர்ந்தனவாகக் கொள்ள வேண்டா. மேகம் சூழ, குளிர்ந்த முல்லை மணம் கமழும் திருக்கருகாவூரில் வீற்றிருந்தருளும் எம் சிவனின் வண்ணம் நெருப்புப் போன்ற சிவந்த வண்ணம்.

3297. கலவ மஞ்ஞையுல வுங்கரு காவூர்
நிலவு பாட லுடையான்றன் நீள்கழல்
குலவு ஞானசம் பந்தன செந்தமிழ்
சொலவ லாரவர் தொல்வினை தீருமே. 11

மயில், தோகை விரித்து ஆடுகின்ற திருக்கருகாவூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் இறைவர் புகழ்ப் பாக்கள் கொண்டு போற்றி வழிபடப் பெற்றவர். அப்பெருமானுடைய திருவடிகளில் அன்பு செலுத்தி ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்களின் தொல்வினை தீரும்.

## 47. திருவாலவாய்

பண் : கௌசிகம் பதிக எண் : 47

3298. காட்டு மாவ துரித்துரி போர்த்துடல்
நாட்ட மூன்றுடை யாயுரை செய்வனான்
வேட்டு வேள்விசெய் யாஅமண் கையரை
ஒட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே. 1

இப்போது அவுணரை வெல்லவேண்டும். அதற்காக யானை உரி நிகழ்வும், நெற்றிக்கண் கொள்கையும் தமக்குதவ வேண்டுமென்ற குறிப்புடன் பதிகத்தை ஆரம்பிக்கிறார். நாமும் அவ்வாறே இடம், பொருள், ஏவல் அறிந்து பதிகத்தையும், பொருளையும் தேர்வு செய்து பாட வேண்டும்.

காட்டிலுள்ள யானையின் தோலை உரித்துப் போர்த்திய இறைவனே! மூன்று கண்களுடைய பெருமானே! நல் வேள்வியைப் புரியாதவர்களாகிய சமணர்களுடன் நான் வாதம் செய்து அவரை விரட்டுவதற்குத் திருவுளக்குறிப்பு யாது? உரை செய்வாயாக!

3299. மத்த யானையின் ஈருரி மூடிய
அத்த னேயணி ஆலவா யாய்பணி
பொய்த்த வன்தவ வேடத்த ராஞ்சமண்
சித்த ரையழிக் கத்திரு வுள்ளமே. 2

எல்லாப் பாடல்களிலும் வாது செய்யத் திருவுள்ளக் குறிப்பை அறிய விழைகிறார்.

மதம் பொருந்திய யானையின் தோலை உரித்துப் போர்த்திய அத்தனே! அழகிய ஆலவாயில் விளங்கும் நாதனே! பொய்த்தவ வேடம் கொண்ட சமணரிடம் வாது செய்து அழிப்பதற்குத் திருவுள்ளம் யாதோ? உரைப்பாயாக.

| | |
|---|---|
| **3300.** மண்ண கத்திலும் வானிலு மெங்குமாம்<br>திண்ண கத்திரு வாலவா யாயருள்<br>பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்<br>தெண்ணர் **கற்**பழிக் கத்திரு வுள்ளமே. 3<br><br>கற்பு – கல்விநிலை; அல்லது கல் போன்ற உறுதிப்பாடு | இப்பூவுலகத்திலும், விண்ணுலகத்திலும் மற்றும் எல்லா இடங்களிலும் உறுதியாய் விளங்கும் ஆலவாயில் வீற்றிருக்கின்ற இறைவனே! பௌத்தர்களும் சமணர்களும் வாதம் புரியும் தன்மையில் அவர்தம் கல்வியைத் தகுதியற்றதாக அழிதல் செய்தவற்குத் திருவுள்ளம் யாது! உரைத்தருள்வாயாக. |
| **3301.** ஓதி யோத்தறி யாவம ணாதரை<br>வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே<br>ஆதி யேதிரு வாலவா யண்ணலே<br>நீதி யாக நினைந்தருள் செய்திடே. 4<br><br>மாவுரித்ததுவும், நெற்றிக்கண் உடைமையும் பகையை அழிக்கும் தன்மையைக் குறிப்பன. போர்த்தது – அந்த அழித்தலும் காவல் கருதி நிகழ்வது என்ற குறிப்புக்காகும். | வேதங்களை ஓதி உணரும் ஞானம் அற்றவராகிய சமணர்களை வாதில் வெற்றி கொள்ளத் திருவுள்ளம் யாது? ஆதி மூர்த்தியாய்த் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அண்ணலே! நடுநிலை யிலிருந்து அருள் செய்வாயாக! |
| **3302.** வைய மார்புக ழாயடி யார்தொழும்<br>செய்கை யார்திரு வாலவா யாய்செப்பாய்<br>கையி லுண்டுழ லுமமண் கையரைப்<br>பைய வாது செயத்திரு வுள்ளமே. 5 | உலகெங்கும் பரவிய புகழை உடையவனே! அடியவர்கள் தொழுது போற்றத் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் இறைவனே! கையில் உணவு வாங்கி உண்டு திரியும் அமணராகிய கீழ்மக்களுடன் மெதுவாக நான் வாதம் புரிவதற்குத் திருவுள்ளம் யாது? உரைத்தருள்வாயாக! |
| **3303.** நாறு சேர்வயற் றண்டலை மிண்டிய<br>தேற லார்திரு வாலவா யாய்செப்பாய்<br>வீறி லாத்தவ மோட்டமண் வேடரைச்<br>சீறி வாதுசெ யத்திரு உள்ளமே. 6 | நாற்றுக்கள் நடப்பட்ட வயல்களிலும், சோலைகளிலும் பெருக்கெடுத்து வழியும் தேன் நிறைந்த திருவாலவாயில் வீற்றிருந்தருளும் சிவபெருமானே! பெருமையில்லாத தவத்தைப் புரியும் முரடர்களாகிய சமணர்களைச் சினந்து வாது செய்ய உன்னுடைய திருவுள்ளம் யாது? சொல்லியருள்வாயாக! |
| **3304.** பண்ட டித்தவத் தார்பயில் வாற்றொழும்<br>தொண்ட ருக்கெளி யாய்திரு வாலவாய்<br>அண்ட னேயமண் கையரை வாதினில்<br>செண்ட டித்துள றத்திரு வுள்ளமே. 7 | தொன்றுதொட்டுப் பலகாலும் பழகிய திறத்தால் உம்முடைய திருவடிகளையே வணங்கி வருகின்ற தொண்டர்களுக்கு எளியவரே! திருவாலவாயில் வீற்றிருந்தருளுபவரே! அண்டப்பொருளாக விளங்கும் பெருமையுடையவரே! சமணர்களை வாதில் வளைத்து அடித்து அழிக்க எண்ணுகிறேன். உமது திருவுளம் யாது? |

| | |
|---|---|
| **3305.** அரக்கன் தான்கிரி யேற்றவன் றன்முடிச்<br>செருக்கி னைத்தவிர்த் தாய்திரு வாலவாய்ப்<br>பரக்கு மாண்புடை யாயமண் பாவரைக்<br>கரக்க வாதுசெ யத்திரு வுள்ளமே. **8** | இராவணனின் முடிகளை நெரித்துச் செருக்கினை அழித்தவரே! திருவாலவாயில் வீற்றிருந்து எங்கும் பரவிய புகழை உடையவரே! இறைவனை நினைந்து வழிபடும் பேறுபெறாதவர்களான சமணர்களை அடக்குவதற்கு அவர்களுடன் வாது செய்யத் தங்கள் திருவுள்ளம் யாது? |
| **3306.** மாலும் நான்முக னும்மறி யாநெறி<br>ஆல வாயுறை யும்மண்ண லேபணி<br>மேலை வீடுண ராவெற்ற ரையரைச்<br>சால வாதுசெ யத்திரு வுள்ளமே. **9** | திருமாலும், பிரமனும் அறியாத தன்மையராய்த் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் தலைவரான சிவபெருமானே! இறைவனுக்குத் தொண்டு செய்து உயர்ந்த, வீட்டுநெறியினை அடைவதற்குரிய வழியை உணராது ஆடையின்றித் திரியும் சமணர்களோடு மிகவும் வாது செய்யத் தங்கள் திருவுள்ளம் யாது? |
| **3307.** கழிக்க ரைப்படு மீன்கவர் வாரமண்<br>அழிப்ப ரையழிக் கத்திரு வுள்ளமே<br>தெழிக்கும் பூம்புனல் சூழ்திரு வாலவாய்<br>மழுப்ப டையுடை மைந்தனே நல்கிடே. **10**<br><br>மீன்கவர் வாரமண் – மீன்பிடித்துண்பவர். மீன்கள் நீரின் வெளிப்போந்ததும் யாரும் கொலை செய்யாமல் தாமே இறந்துபடுதலால் அம்மீனைப் பிடித்து உண்பது கொலையாகாது என்பது அமணர் கொள்கை. | நீர்நிலைகளிலுள்ள மீன்களைக் கவர்ந்து உண்ணும் புத்தர்களையும், நன்மார்க்கங்களை அழித்து வரும் சமணர்களையும் அடக்க எண்ணுகிறேன். ஒலிக்கும் அழகிய ஆறு சூழ்ந்த திருவாலவாயில் வீற்றிருந்தருளும் இறைவரே! மழுப்படையை உடைய மைந்தரே! உமது திருவுள்ளம் யாது? |
| **3308.** செந்தெ னாமுர லுந்திரு வாலவாய்<br>மைந்த னேயென்று வல்லம ணாசறச்<br>சந்த மார்தமிழ் கேட்டமெய்ஞ் ஞானசம்<br>பந்தன் சொற்பக ரும்பழி நீங்கவே. **11** | வண்டுகள் முரலும் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் மைந்தனே! என்று விளித்து வலிய அமணர்களின் நெறிகளிலுள்ள குற்றங்கள் நீங்கச் சந்தமுடைய தமிழால் இறைவன் திருவுள்ளம் யாது எனக் கேட்ட மெய்ஞ்ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தைப் பழிநீங்க ஓதுவீர்களாக! |

## 48. திருமழபாடி

பண் : கௌசிகம் பதிக எண் : 48

**3309.** அங்கை யாரழ லன்னழ கார்சடைக்
கங்கை யான்கட வுள்ளிட மேவிய
மங்கை யானுறை யும்**மழ பாடியைத்**
தங்கை யாற்**றொழு வார்**தக வாளரே. 1

ஊரின் புறத்தே வந்தபோது அதனை நோக்கிக் கைகூப்பி தொழுது வணங்கிப் பாடிய பதிகமாகும்.

இறைவன் அழகிய கையில் நெருப்பேந்தியவன். அழகிய செஞ்சடையில் கங்கையைத் தாங்கி, இடம், பொருள், காலம் இவற்றைக் கடந்து என்றும் நிலைத்துள்ள அச்சிவபெருமான் தன் திருமேனியின் இடப்பாகமாக உமாதேவியைக் கொண்டு வீற்றிருந்தருளும் மழபாடியைக் கைகளால் கூப்பித் தொழும் அன்பர்கள் நற்பண்பாளர்கள் ஆவர்.

**3310.** விதியு மாம்விளை வாமொளி யார்ந்ததோர்
கதியு மாங்கசி வாம்வசி யாற்றமா
மதியு மாம்வலி யாமழ பாடியுள்
நதியந் தோய்சடை நாதன்நற் பாதமே. 2

திருமழபாடியில் வீற்றிருந்தருளும் கங்கையைச் சடையில் தாங்கிய சிவபெருமானின் திருவடிகளே ஆன்மாக்களுக்கு விதியாவதும், அவ்விதியின் விளைவாவதும், ஒளியிற் கலப்பதாகிய முத்தி ஆவதுமாம். மனத்தைக் கசியவைத்துத் தன்வயப்படுத்தும் சிவஞானத்தை விளைவிக்கும் அத்தகைய திருவடிகளை வழிபடுவீர்களாக.

**3311.** முழவி னான்முது காடுறை பேய்க்கணக்
குழுவி னான்குல **வுங்கையி லேந்திய**
**மழுவி னானுறை** யும்மழ பாடியைத்
தொழுமி னுந்துய ரானவை தீரவே. 3

குலவுங்கையில் ஏந்திய மழுவினான் – மழு (பரசு) இங்கு தவஞ்செய்து இறைவரது கையில் ஏந்தப் பெற்றது என்பதால் மழபாடி என்ற பெயர் பெற்றது.

இறைவன் முழவு என்னும் வாத்தியம் உடையவன். சுடுகாட்டில் உறையும் பேய்க்கணத்துடன் குலவி நடனம் புரிபவன். அழகிய கையில் மழுப்படையை உடையவர். அப்பெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருமழபாடியை உங்கள் துன்பம் எல்லாம் நீங்கும்படி தொழுது போற்றுங்கள்.

**3312.** கலையி னான்மறை யான்கதி யாகிய
மலையி னான்மரு வார்புர மூன்றெய்த
சிலையி னான்சேர் திருமழ பாடியைத்
தலையி னால்வணங் **கத்தவ மாகுமே.** 4

பரசுராமர் தவம் செய்து பரிசு பெற்ற இடம்.

மழவர் – இளைஞர்

தவமிருந்தால் தான் மழபாடியை வணங்க முடியும். மழபாடியை வணங்குவார்கள் தவமுடையார்கள்.

இறைவன் ஆயகலைகள் அறுபத்துநான்கு ஆனவர். நான்கு மறைகள் ஆகியவன். உயிர்கள் சரண்புகும் இடமாகிய கயிலை மலையினை உடையவன். பகையசுரர்களின் திரிபுரங்களை எரியுண்ணுமாறு அக்கினிக் கணையை ஏவிய, மேருமலையை வில்லாக உடையவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் திருமழபாடியைத் தலையினால் வணங்கிப் போற்றத் தவத்தின் பலன் கைகூடும்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3313.** நல்வி னைப்பய னான்மறை யின்பொருள்<br>**கல்வி யாயக** ருத்தனு ருத்திரன்<br>செல்வன் மேய திருமழ பாடியைப்<br>புல்கி யேத்து மதுபுக ழாகுமே. 5<br><br>கற்றதனால் ஆய பயன் – இறைவனைக் கருத்தில் கொள்ளுதல். | இறைவன் நல்வினையின் பயனாகியவன். நான்மறையின் பொருளாகியவன். கல்விப் பயனாகிய கருத்தன். உருத்திரனாகத் திகழ்பவன். அச்செல்வன் வீற்றிருந்தருளும் திருமழபாடியைப் போற்றுங்கள். அது உமக்குப் புகழ் தரும். |
| **3314.** நீடி னாருல குக்குயி ராய்நின்றான்<br>ஆடி னானெரி கானிடை மாநடம்<br>பாடி னாரிசை மாமழ பாடியை<br>நாடி னார்க்கில்லை நல்குர வானவே. 6 | பரந்த இவ்வுலகிற்கு இறைவன் உயிராய் விளங்குகின்றான். சுடுகாட்டில் திருநடனம் ஆடுபவன். பத்தர்கள் இசையோடு போற்றிப் பாடத் திருமழபாடியில் இனிது வீற்றிருந்தருளும் அவனைச் சார்ந்து போற்றுபவர்கட்கு வறுமை இல்லை. |
| **3315.** மின்னி னாரிடை யாளொரு பாகமாய்<br>மன்னி னானுறை மாமழ பாடியைப்<br>பன்னி னாரிசை யால்வழி பாடுசெய்<br>துன்னி னார்வினை யாயின வோயுமே. 7 | மின்னலைப் போன்று ஒளிரும் நுண்ணிய இடையுடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற மாமழ பாடியை இசைப்பாடலால் போற்றி வழிபாடு செய்யும் அன்பர்களின் வினை யாவும் நீங்கும். |
| **3316.** தென்னி லங்கையர் மன்னன் செழுவரை<br>தன்னி லங்கவ டர்த்தருள் செய்தவன்<br>மன்னி லங்கிய மாமழ பாடியை<br>உன்னி லங்க வுறுபிணி யில்லையே. 8 | இராவணனைச் செழுமையான கயிலை மலையின் கீழ் அடர்த்து அருள் செய்தவர் சிவபெருமான். அவர் நிலையாக வீற்றிருந்தருளுகின்ற திருமழபாடியை நினைந்து போற்ற உடம்பில் உறுகின்ற பிணி யாவும் நீங்கும். |
| **3317.** திருவி னாயக னுஞ்செழுந் தாமரை<br>மருவி னானுந் தொழத்தழன் மாண்பமர்<br>உருவி னானுறை யும்மழ பாடியைப்<br>பரவி னார்வினைப் பற்றறுப் பார்களே. 9 | திருமகளின் நாயகனாகிய திருமாலும், செழுமை வாய்ந்த தாமரையில் வீற்றிருந்தருளும் பிரமனும், தொழுது போற்ற நெருப்பு மலையாக நின்ற மாண்புடைய வடிவினரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருமழபாடியைப் பரவிப் போற்றும் அன்பர்கள் பற்றிலிருந்து நீங்கியவராவர். |
| **3318.** நலியும் நன்றறி யாச்சமண் சாக்கியர்<br>வலிய சொல்லினு மாமழ பாடியுள்<br>ஒலிசெய் வார்கழ லான்திற முள்கவே<br>மெலியு நம்முடன் மேல்வினை யானவே. 10 | நன்மை அறியாத சமணர்களும், புத்தர்களும் பிறரை வருத்தும் சொற்களை வலிய உரைத்தாலும் அவற்றைப் பொருளாகக் கொள்ளாது, திருமழபாடியுள் வீரக்கழல்கள் ஒலிக்கத் திருநடனம் புரியும் சிவபெருமானின் அருட்செயலை நினைந்து போற்றினால் நம்மைப் பற்றியுள்ள வினையாவும் மெலிந்து அழியும். |

**3319.** மந்த முந்து பொழின்மழ பாடியுள்
எந்தை சந்த மினிதுகந் தேத்துவான்
கந்த மார்கடற் காழியுண் ஞானசம்
பந்தன் மாலைவல் லார்க்கில்லை பாவமே. 11

தென்றல் காற்று வீசும் சோலைகள் சூழ்ந்த திருமழபாடியுள் வீற்றிருந்தருளும் எம் தந்தையாகிய சிவபெருமானைச் சந்தம் பொலியும் இசைப்பாடல்களால் போற்றி, வாசனை வீசும் கடலுடைய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிக மாலையை ஓதவல்லவர்கட்குப் பாவம் இல்லை.

## 49. பொது ( நமச்சிவாயத் திருப்பதிகம் )

பண் : கௌசிகம் பதிக எண் : 49

**3320.** காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேதம் நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் நமச்சி வாயவே. 1

இறைவன் திருஞானசம்பந்தரை சைவ தாபனத்துக்காகவும், திருநீற்றுப் பெருமையை பறை சாற்றவும் பூமிக்கு அனுப்பினார். அப்பணி முடிந்ததும் நல்லூரப் பெருமணம் சென்று திருமணத்தைக் காண வந்தோர்க்கும் தீதுறு பிறவிப்பாசம் தீர்த்தல் செம்பொருளாகக் கொண்டும், நாமெல்லாம் பிற்காலத்தில் உய்வதற்காகவும் பாடியது.

உள்ளன்பு கொண்டு மனம் கசிந்து கண்ணீர் பெருகி தன்னை ஓதுபவர்களை முத்திநெறியாகிய நன்னெறிக்குக் கூட்டுவிப்பவனும், நான்கு வேதங்களின் உண்மைப் பொருளாக விளங்குபவனும், அனைவருக்கும் தலைவனுமான சிவபெருமானின் திருநாமம் 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தாகும்.

**3321.** நம்பு வாரவர் நாவி னவிற்றினால்
வம்பு நாண்மலர் வார்மது வொப்பது
செம்பொ னார்தில கம்முல குக்கெலாம்
நம்பன் நாமம் நமச்சி வாயவே. 2

காதலாகி – மனநிலை
கசிந்து கண்ணீர் மல்குதல் – மெய்யின் நிலை
ஓதுவார் – வாக்கின் நிலை
மனமொழி மெய்களால் ஓதுவது.

சிவபெருமானின் திருவடிகளையே பற்றுக்கோடாக நம்பும் பக்தர்கள் திருவைந்தெழுத்தைத் தங்கள் நாவினால் உச்சரித்தால், நறுமணம் கமழும் நாள்மலர்களில் உள்ள தேன்போல இனிமை பயப்பது, எல்லா உலகங்கட்கும் செம்பொன் திலகம் போன்றது நம்முடைய சிவபெருமானின் திருநாமமான 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தே ஆகும்.

**3322.** நெக்கு ளார்வ மிகப்பெரு கிந்நினைந்
தக்கு மாலைகொ டங்கையி லெண்ணுவார்
தக்க வானவ ராத்தகு விப்பது
நக்கன் நாமம் நமச்சி வாயவே. 3

துஞ்சலும் துஞ்சலிலாத போழ்தினும் என்ற மற்றொரு திருப்பதிகம் ஐந்தெழுத்துப் பதிகம் எனப்படும். இது நமச்சிவாயப் பதிகமாகும். நக்கன் – சிவன், திகம்பரன்; எல்லாப் பொருள்களில் இருந்தும் ஒன்றிலும் பற்றாத ஞானச்சோதி.

உள்ளம் நெகிழ்ந்து அன்புமிகப் பெருக சிவபெருமானைச் சிந்தித்து, தமது அழகிய கையில் உருத்திராக்க மாலையைக் கொண்டு திருவைந்தெழுத்தை விதிப்படிச் செபிப்பவர்களைத் தேவர்களாக்கும் தகுதியைப் பெறும்படிச் செய்வது சிவபெருமானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தாகும்.

**3323.** இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலால்
நயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்
நியமந் தானினை வார்க்கினி யானெற்றி
நயனன் நாமம் நமச்சி வாயவே. 4

நம்புவாரவர் – மருந்தினிடத்தும், மருத்துவனிடத்தும் நம்பிக்கையில்லையேல் நோய் நீக்கம் எளிதன்று என்னும் உண்மைக் குறிப்பு.

தன்னை நாடோறும் தியானித்து வழிபடும் அடியவர்கட்கு என்றும் நன்மை செய்பவனும், நெற்றிக்கண்ணை உடையவனுமான சிவபெருமானின் திருநாமம் 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தாகும். இனிமையான சொற்களால் திருவைந்தெழுத்தை நயம்பட ஓதவல்லவர்களை எவரேனும் அண்டினால், அங்ஙனம் அண்டியவர்களையும் அணுக இயமன் தூதன் பயப்படுவான்.

**3324.** கொல்வா ரேனுங் குணம்பல நன்மைகள்
இல்லா ரேனு மியம்புவ ராயிடின்
எல்லாத் தீங்கயு நீங்குவ ரென்பரால்
நல்லார் நாமம் நமச்சி வாயவே. 5

இப்பாட்டில் தீவினைகள் ஈட்டப்படும் நிலைகளும் அடுத்த (6) பாட்டில் அவை பாவமாக மாறி வலிக்கும் நிலையும் 7 ஆவது பாட்டில் பாவப் பயனாக மாறிப் பெருநரக வேததனை உள்ளாக்கும் நிலையும் குறிக்கப்பட்டன.

கொலைத்தொழிலில் ஈடுபட்டவர்களாக இருப்பினும், நற்குணமும், பல நல்லொழுக்கங்களும் இல்லாதவர் ஆயினும் ஏதேனும் சிறு பூர்வ புண்ணியத்தால் திருவைந்தெழுத்தை உச்சரிப்பார்களேயானால் எல்லாவிதமான தீங்குகளினின்றும் நீங்குவர் என்று பெரியோர்கள் கூறுவர். அத்தகைய சிறப்புடையது எல்லோருக்கும் நன்மையே செய்பவனாகிய சிவபெருமானின் திருப்பெயரான 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தேயாகும்.

**3325.** மந்த ரம்மன பாவங்கண் மேவிய
பந்த னையவர் தாமும் பகர்வரேல்
சிந்தும் வல்வினை செல்வமு மல்குமால்
**நந்தி** நாமம் நமச்சி வாயவே. 6

நந்தி – இறைவர் பெயர். வினைகளை நந்தச் செய்பவன். நந்துதல் – அழிதல்; குறைதல்.

மந்தர மலை போன்ற பாவங்களைச் செய்து பாசங்களால் கட்டுண்டவர்களும், திருவைந்தெழுத்தை உச்சரிப்பார்களேயானால் அவர்களது கொடிய வினைகள் தீர்ந்து போகும். அவர்கட்குச் செல்வமும் பெருகும். அத்தகைய சிறப்புடையது நந்தி என்னும் பெயருடைய சிவபெருமானின் திருநாமமான 'நமச்சிவாய' என்பதாகும்.

**3326.** நரக மேழ்புக நாடின ராயினும்
உரைசெய் வாயின ராயி னுருத்திரர்
விரவி யேபுகு வித்திடு மென்பரால்
**வரதன்** நாமம் நமச்சி வாயவே. 7

வரதன் – கேட்ட வரம் அனைத்தும் தருவோன்.

ஏழ் நரகங்கட்குச் செல்லக்கூடிய பாவிகளானாலும் திருவைந்தெழுத்தைப் பக்தியோடு உச்சரிப்பார்களேயானால், உருத்திர கணத்தாரோடு சேர்ந்து வசிக்கும் பேற்றினைப் பெறுவர். அடியவர்கள் கேட்ட வரமெல்லாம் தரும் சிவபெருமானின் திருநாமமும் திருவைந்தெழுத்தே ஆகும்.

| | |
|---|---|
| **3327.** இலங்கை மன்ன னெடுத்த வடுக்கன்மேல்<br>தலங்கொள் கால்விரல் சங்கர னூன்றலும்<br>மலங்கி வாய்மொழி செய்தவ னுய்வகை<br>நலங்கொள் நாமம் நமச்சி வாயவே. 8 | இலங்கை மன்னனான இராவணன் திருக்கயிலையைப் பெயர்த்து எடுக்க முயல, சங்கரன் தன் காற்பெருவிரலை ஊன்றவும், கயிலையின் கீழ் நெருக்குண்டு அவன் வாய்விட்டு அலற அவனுக்கு உய்யும்நெறி அருளி, நன்மை செய்வதையே தன் இயல்பாக உடைய சிவபெருமானின் திருநாமம் 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தாகும். |
| **3328.** **போதன் போதன கண்ணனு** மண்ணல்தன்<br>பாதந் தான்முடி நேடிய பண்பராய்<br>யாதுங் காண்பரி தாகி யலந்தவர்<br>ஓதும் நாமம் நமச்சி வாயவே. 9<br><br>போதன் – தாமரைப் பூவிலிருப்பவனாகிய பிரமன். போது அன கண்ணனும் – தாமரைப் பூப்போன்ற கண்களையுடைய திருமாலும். | தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமனும், தாமரை மலர் போன்ற கண்களையுடைய திருமாலும், எல்லோருக்கும் தலைவரான சிவபெருமானின் திருமுடியையும், திருவடியையும் தேட முயற்சித்து, காண இயலாதவராகித் தம் செயலுக்கு வருந்திப் பின்னர் அவர்கள் நல்லறிவு பெற்று ஓதி உய்ந்தது 'நமச்சிவாய' என்ற திருவைந்தெழுத்தேயாகும். |
| **3329.** கஞ்சி மண்டையர் கையிலுண் கையர்கள்<br>வெஞ்சொன் மிண்டர் விரவில ரென்பரால்<br>விஞ்சை யண்டர்கள் வேண்ட வமுதுசெய்<br>நஞ்சுள் கண்டன் நமச்சி வாயவே. 10 | தேவர்கள் வேண்ட நஞ்சினை உண்டு அதை கழுத்தில் தேக்கிய நீலகண்டனான சிவபெருமானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்து மந்திரத்தை, மண்டை என்னும் ஒருவித பாத்திரத்தில் கஞ்சியைக் குடிக்கும் வழக்கமுடைய பௌத்தர்களும், கைகளையே பாத்திரமாகக் கொண்டு அதில் உணவு ஏற்றுப் புசிக்கும் வழக்கமுடைய சமணர்களும் ஓதும் பேறு பெற்றிலர். |
| **3330.** நந்தி நாமம் நமச்சிவா யவெனும்<br>சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்<br>சிந்தை யால்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்<br>பந்த பாசம் அறுக்கவல் லார்களே. 11 | நந்தி என்னும் பெயருடைய சிவபெருமானின் திருநாமமாகிய 'நமச்சிவாய' என்னும் திருவைந்தெழுத்தைச் சந்தம் மிகுந்த தமிழ் கொண்டு ஞானசம்பந்தன் அருளிச் செய்த இத்திருப்பதிகத்தைச் சிந்தை மகிழ ஓத வல்லவர்கள் பந்தபாசம் அறுக்க வல்லவர் ஆவர். |



கற்பு – கல்விநிலை; அல்லது கல் போன்ற உறுதிப்பாடு.

## 50. திருத்தண்டலைநீணெறி

பண் : கௌசிகம் பதிக எண் : 50

3331. விரும்புந் திங்களுங் கங்கையும் விம்மவே
சுரும்புந் தும்பியுஞ் **சூழ்சடை யார்க்கிடம்**
கரும்புஞ் செந்நெலுங் காய்கமு கின்வளம்
நெருங்குந் **தண்டலை நீணெறி காண்மினே.** 1

தண்டலை – தலத்தின் பெயர்.
கோயிலின் பெயர் – நீள்நெறி
பதிகமகுடம் – சடையார்க்கிடம் தண்டலை நீணெறி காண்மினே.

விரும்பப்படுகின்ற சந்திரனையும், கங்கையையும் தாங்கி சுரும்பும் தும்பியும் ரீங்காரம் செய்யும் மலர்களைச் சூடியுள்ள சடை முடியையுடைய இறைவன் வீற்றிருந்தருளும் இடமாவது கரும்பும், செந்நெலும், பாக்கு மரங்களும் நிறைந்து வளம் கொழிக்கும் திருத்தண்டலை நீள்நெறியாகும். இத்திருத்தலத்தைத் தரிசித்து இறைவனை வணங்கிப் போற்றுங்கள்.

3332. இகழுங் கால னிதயத்து மென்னுளும்
திகழுஞ் சேவடி யான்றிருந் தும்மிடம்
புகழும் பூமக ளும்புணர் பூசுரர்
நிகழுந் தண்டலை நீணெறி காண்மினே. 2

அரிவாட்டாய நாயனார் சிவபெருமானுக்குச் செந்நெல் அரிசி, மாவடு, செங்கீரை இவைகளை நாளும் நிவேதித்து வீடுபேறடைந்த தலம். அருகில் உள்ள கணமங்கலம் அவரது அவதாரத்தலம்.

சிவபக்தரான மார்க்கண்டேயரை மதியாது இகழ்ந்த காலனின் இதயத்துள்ளும், என்னுள்ளும் திகழும், சிவந்த திருவடிகளையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், புகழுடைய திருமகளும், அந்தணர்களும் விளங்கும் திருத்தண்டலை நீள்நெறியாகும். அத்திருத்தலத்தைத் தரிசித்து இறைவனை வணங்கிப் போற்றுங்கள்.

3333. பரந்த நீலப் படரெரி வல்விடம்
கரந்த கண்டத்தி னான்கரு தும்மிடம்
சுரந்த மேதி துறைபடிந் தோடையில்
நிரந்த தண்டலை நீணெறி காண்மினே. 3

பதிகமகுடம் – அரிவாட்டாய நாயனாரை நினைவு கூறும் வண்ணம் அமைந்துள்ளது.

விரிந்து பரந்த எரிபோன்ற கொடிய நஞ்சினைக் கண்டத்தில் தேக்கி நீலகண்டனாக இறைவன் வீற்றிருந்தருளும் இடமாவது, ஓடையில் எருமை படிந்து பால் சொரியும் வளமிக்க திருத்தண்டலை நீள்நெறியாகும். அங்கு அப்பெருமானை வணங்கி வழிபடுங்கள்.

3334. தவந்த வென்புந் தவளப் பொடியுமே
உவந்த மேனியி னானுறை யும்மிடம்
சிவந்த பொன்னுஞ் செழுந்தர ளங்களும்
நிவந்த தண்டலை நீணெறி காண்மினே. 4

வெந்த எலும்பும், திருவெண்ணீறும் உவந்து திருமேனியில் தரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, சிவந்த பொன்னும், செழுமையான முத்துக்களும் மிகுந்த திருத்தண்டலை நீள்நெறியாகும். இத்திருத்தலத்தைத் தரிசித்து இறைவனை வணங்கிப் போற்றுங்கள்.

XXXXXXXXXXXXXXXXXX 5, 6, 7

3335. இலங்கை வேந்த னிருபது தோளிற
விலங்க லில்லடர்த் தான்விரும் பும்மிடம்
சலங்கொ ளிப்பி தரளமுஞ் சங்கமும்
நிலங்கொள் தண்டலை நீணெறி காண்மினே. 8

கூர்மாவதாரத்தில் கடல் கலக்கிய திருமாலின் செருக்கைத் தவிர்த்து அந்த ஆமை ஓட்டினை சிவபெருமான் மார்பிலணிந்த தலம்.

இலங்கை மன்னனான இராவணனின் இருபது தோள்களும் நெரியுமாறு கயிலைமலையின்கீழ் அடர்த்த இறைவன் வீற்றிருந்தருளும் இடமாவது, நீரில் உள்ள சிப்பிகளும், முத்துக்களும், சங்குகளும் அலைகள் வாயிலாக அடித்துவரப்பட்டுச் செல்வவளம் மிகுந்த திருத்தண்டலை நீள்நெறியாகும். அங்கு வீற்றிருந்தருளும் பெருமானைத் தரிசித்து வழிபடுங்கள்.

3336. கருவ ருந்தியி னான்முகன் கண்ணனென்
றிருவ ருந்தெரி யாவொரு வன்னிடம்
செருவ ருந்திய **செம்பியன் கோச்செங்கண்**
நிருபர் தண்டலை நீணெறி காண்மினே. 9

கோச்செங்கட்சோழன் கட்டிய மாடக்கோயில் என்பதற்கு அகச்சான்று மூன்றாம் திருமுறையில் அகச்சான்றுடன் வரும் கோச்செங்கட் சோழனின் மூன்றாவது தலம்.

மற்ற இரண்டும் – வைகல் மாடக்கோயில், அம்பர் பெருந்திருக் கோயில்.

சிருட்டி செய்யும் பிரமன் திருமாலின் உந்திக் கமலத்தில் தோன்றினான். அவனும், திருமாலும் தெரிந்து கொள்ள முடியாத ஒப்பற்றவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, போரில் முயன்ற கோச்செங்கட் சோழ மன்னன் கட்டிய கோயிலாகிய திருத்தண்டலை நீள்நெறியாகும். அங்கு வீற்றிருந்தருளும் பெருமானைத் தரிசித்து வழிப டுங்கள்.

3337. கலவு சீவரத் தார்கையி லுண்பவர்
குலவ மாட்டாக் குழக னுறைவிடம்
சுலவு மாமதி லுஞ்சுதை மாடமும்
நிலவு தண்டலை நீணெறி காண்மினே. 10

கற்றவர் வாழ் தண்டலை நீணெறி என்பது தெய்வச் சேக்கிழார் வாக்கு. கற்றவர் – வாலறிவன் நற்றாள் தொழக் கற்றவர். தொழக்கற்றல் – இறைவன் பணியே பொருளாவது; ஏனையவை பொருளல்ல என்று தெரிந்து இறைவன் பணி நின்று ஒழுகுதல்.

சீவரமென்னும் ஆடையைச் சுற்றிய புத்தர்களும், கையில் உணவைக் கவளமாய் வாங்கி உண்ணும் சமணர்களும், அன்பு செலுத்துவதற்கு எட்டாதவனாய் விளங்கும் அழகனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, வளைந்த மாமதில்களும், சுண்ணச்சாந்தினாலாகிய மாடங்களும் விளங்குகின்ற திருத்தண்டலை நீள்நெறி ஆகும். அங்கு வீற்றிருந்தருளும் பெருமானைத் தரிசித்து வழிபடுங்கள்.

3338. நீற்றர் தண்டலை நீணெறி நாதனைத்
தோற்று மேன்மையர் தோணி புரத்திறை
சாற்று ஞானசம் பந்தன் றமிழ்வலார்
மாற்றில் செல்வர் **மறப்பர் பிறப்பையே.** 11

தண்டலையார் சதகம் என்னும் பழமொழியோடு பல நீதிகள் பொதிந்த நூல் அச்சில் வெளிவந்துள்ளது. பிறவி வாசனையை மறக்கலாம்.

திருநீறு அணியப்பெற்ற அடியவர்கள் வாழும் திருத்தண்டலை நீணெறியில் வீற்றிருக்கும் நாதனைப் போற்றி, அத்தகைய திருநீற்றின் மேன்மை விளங்கும் தோணிபுரத்தில் வீற்றிருந்தருளும் ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கள் நிலைத்த செல்வத்தை உடையவர்களாய்ப் பிறவிப்பிணி நீங்கப் பெற்றவராவர்.

## 51. திருவாலவாய்

பண் : கௌசிகம் பதிக எண் : 51

திருக்கழுமலத்தார் வேந்தர் திருமதுரையை மேவிய நாளில், தவ மறைந்து அல்ல செய்வாராகிய அமணர், (அச்சிவநெறி வளர்க்க வந்தாரது திருமடத்தில்) மந்திரத்தால் செந்தீச் சேரச் செய்தனர். "ஆதிமந்திரம் அஞ்செழுத்து ஓதுவார் நோக்கும் எம்மாத்திரத்தினும் (எத்திசையினும்) மற்றை மந்திர விதி வருமோ ?" மந்திரம் பலியாது என்று அறிந்த அக்கீழ்மையோர்கூடி, தம்மேன்மையை இனி அரசன் மதியான் நம் பிழைப்பும் ஒழியும் என்று அஞ்சினர். திருஞானசம்பந்தர் வீற்றிருந்த திருமடப்புறச் சுற்றினில், தழல்கொண்டு புகுந்து தம் தொழில்புரிந்தனர். அதைக் கண்டோர் ஊழிக்கற்பகக் கொழுந்துக்குச் சொல்லினர். மாதவர் துயிலும் இத்திருமடப் புறம்பு பழுதுசெய்வதோ பாவிகாள்' எனப் பரிந்தருளினார். அவ்"வஞ்சனை மனத்தோர் என் பொருட்டுச் செய்த தீங்கு ஆயினும்" சிவபத்தருக்கு எய்துமோ" என்றார். அச்சம் முன்பும் ஆத்திரம் பின்பும் உற்றன. அரசியல் முறைமை வழுவிற்று என்று எண்ணினார். வெய்ய தீங்கு ஆகிய இது வேந்தன் மேலதாகும் என்னும் விதிமுறையால், சைவர் வாழ்மடத்தில் இட்ட தீத்தழல், பாண்டிமாதேவியார் நெடுமங்கல நாணைக்காவல் செய்தலும், குலச்சிறையார் அன்பும். அரசனது சிவாபராதம் அகலுதலும், சிவநெறிக்கு மீண்டுவரும் விதியுண்மையும், வெப்புநோய் அகல வெண்ணீறு பூசும் பேறு அரசனுக்கிருப்பதும் ஆகிய ஏதுக்களால் பையவே சென்று பாண்டியனுக்கு ஆகுக என்று பாடியருளியது இத்திருப்பதிகம்.

**3339.** செய்ய னேதிரு வாலவாய் மேவிய
ஐய னேயஞ்ச லென்றருள் செய்யெனைப்
பொய்ய ராமம ணர்கொளு வுஞ்சுடர்
**பைய வேசென்று பாண்டியற் காகவே. 1**

பதிக மகுடம்

நடுநிலைமை உடையவரே! திருஆலவாயில் வீற்றிருந்தருளும் தலைவரே! என்னை அஞ்சேல் என்று அருள் செய்வீராக. பொய்யராகிய சமணர் இம்மடத்திற்கு வைத்த இந்நெருப்பு மெல்லச் சென்று பாண்டிய மன்னனைப் பற்றுவதாக.

---

**3340.** **சித்த னே**திரு வாலவாய் மேவிய
அத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எத்த ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பத்தி மன்தென்னன் பாண்டியற் காகவே. 2

அத்தன் – தலைவன்.
எல்லாம் வல்ல சித்தருக்கு மதுரைத் திருக்கோயிலில் தனிக்கோயில் உள்ளது. மூலவரின் வடமேற்கு மூலையில் இச்சந்நிதி உள்ளது. வணங்கவேண்டிய அற்புதமான மூர்த்தம்.

எல்லாம் வல்ல சித்தரே! திருஆலவாயில் வீற்றிருந்தருளிய தலைவரே! என்னை அஞ்சேல் என்று அருள் செய்வீராக. ஏமாற்றித் திரிவோராகிய சமணர் இம்மடத்திற்கு வைத்த இந்நெருப்பு அருக மதத்தில் பக்தியுடையோனாகிய பாண்டிய மன்னனைப் பற்றுவதாக.

---

**3341.** தக்கன் வேள்வி தகர்த்தரு ளாலவாய்ச்
சொக்க னேயஞ்ச லென்றருள் செய்யெனை
எக்க ராமம ணர்கொளு வுஞ்சுடர்
பக்க மேசென்று பாண்டியற் காகவே. 3

சிவனை மதியாது தக்கன் செய்த வேள்வியைச் சிதைத்த திருஆலவாய்ச் சொக்கரே! என்னை அஞ்சேல் என்று அருள்புரிவீராக. இறுமாப்புடைய சமணர்கள் இம்மடத்திற்குப் பற்ற வைத்த நெருப்பு அத்தகையோர் பக்கமே சார்ந்து பாண்டிய மன்னனைப் பற்றுவதாக.

| | |
|---|---|
| **3342.** சிட்ட னேதிரு வாலவாய் மேவிய<br>அட்டமூர்த்திய னேயஞ்ச லென்றருள்<br>துட்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்<br>பட்டி மன்றென்னன் பாண்டியற் காகவே. 4 | நீதிநெறி தவறாதவரே! திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அட்டமூர்த்தி வடிவானவரே! என்னை அஞ்சேல் என்று அருள்புரிவீராக! கொடியவரான அமணர் இம்மடத்தில் பற்ற வைத்த நெருப்பு கல்வியறிவுடையோனாகிய பாண்டிய மன்னனைச் சென்று பற்றுவதாக. |
| **3343.** நண்ண லார்புர மூன்றெரி யாலவாய்<br>அண்ண லேயஞ்ச லென்றருள் செய்யெனை<br>எண்ணி லாவம ணர்கொளு வுஞ்சுடர்<br>பண்ணி யற்றமிழ்ப் பாண்டியற் காகவே. 5 | பகையசுரர்களின் திரிபுரங்களை எரித்த திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அண்ணலே! என்னை அஞ்சேல் என்று அருள்செய்வீராக. சிந்திக்கும் திறனில்லாத சமணர்கள் இம்மடத்தைக் கொளுத்திய நெருப்பானது பண்ணிசையோடு தமிழ் வழங்கும் பாண்டிய மன்னனைச் சென்று பற்றுவதாக. |
| **3344.** தஞ்ச மென்றுன் சரண்புகுந் தேனையும்<br>அஞ்ச லென்றரு ளாலவா யண்ணலே<br>வஞ்சஞ் செய்தம ணர்கொளு வுஞ்சுடர்<br>பஞ்ச வன்தென்னன் பாண்டியற்காகவே. 6 | திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அண்ணலே! அபயம் என்று உம்முடைய திருவடிகளைச் சரணம் அடைந்த அடியேனையும் அஞ்சேல் என்று கூறி அருள்புரிவீராக. வஞ்சகம் செய்யும் சமணர்கள் இம்மடத்திற்கு வைத்த இந்த நெருப்பு, பஞ்சவன், தென்னன் முதலிய பெயர்களையுடைய பாண்டிய மன்னனைச் சென்று பற்றுவதாக. |
| **3345.** செங்கண் வெள்விடை யாய்திரு வாலவாய்<br>அங்க ணாவஞ்ச லென்றருள் செய்யெனைக்<br>கங்கு லாரமண் கைய ரிடுங்கனல்<br>பங்கமில் தென்னன் பாண்டியற் காகவே. 7 | சிவந்த கண்களையுடைய வெண்ணிற இடபத்தை வாகனமாக உடையவரே! திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அழகிய கண்களையுடைய சிவபெருமானே! அடியேனை அஞ்சேல் என்று அருள்செய்வீராக! இருள்மனம் கொண்ட சமணர்கள் இம்மடத்திற்கு இட்ட நெருப்பானது, உயிருக்குத் தீங்கு நேராதபடி பாண்டிய மன்னனைச் சென்று பற்றுவதாக. |
| **3346.** தூர்த்தன் வீரந் தொலைத்தரு ளாலவாய்<br>ஆத்த னேயஞ்ச லென்றருள் செய்யெனை<br>ஏத்தி லாவம ணர்கொளு வுஞ்சுடர்<br>பார்த்தி வன்தென்னன் பாண்டியற்காகவே. 8<br><br>பையவே என்றதனால் தீயுருவமாக அன்றி வெப்ப நோயின் உருவில் மெல்லப்பற்றுக என்று பணித்தனர். பாண்டியன் சைவத்துக்குத் திரும்ப நின்றசீர் நெடுமாறனாக வரவேண்டுமென்பதும் மங்கையர்க்கரசியார் மாங்கல்யநாண் நிலை பெற்றிருக்க வேண்டுமென்பதும் முன்வினை. | பிறன் மாதரை விரும்பிய தூர்த்தனாகிய இராவணனின் வீரத்தை அழித்தபின் அருள்செய்த திருஆலவாயில் வீற்றிருந்தருளும் பெருங்கருணையுடைய சிவபெருமானே! அடியேனை அஞ்சேல் என்று அருள்செய்வீராக! இறைவனைத் துதிக்கும் பேறு பெறாத சமணர்கள் இம்மடத்திற்கு இட்ட நெருப்பு, இப்பூவுலகை ஆளும் தென்னன் பாண்டியனைச் சென்று பற்றுவதாக! |

| | |
|---|---|
| **3347.** தாவி னானயன் றானறி யாவகை<br>மேவி னாய்திரு வாலவா யாயருள்<br>தூவி லாவம ணர்கொளு வுஞ்சுடர்<br>பாவி னான்தென்னன் பாண்டியற்காகவே. 9 | உலகத்தைத் தாவியளந்த திருமாலும், பிரமனும் அறிய முடியாதவாறு நெருப்பு மலையாய் ஓங்கி நின்ற திருஆலவாய் இறைவனே! அடியேனுக்கு அருள்புரிவீராக! நீராடாமையால் தூய்மையற்ற சமணர்கள் இம்மடத்திற்கு இட்ட இந்நெருப்பு இதற்குக் காரணமான பாண்டிய மன்னனைச் சென்று பற்றுவதாக! |
| **3348.** எண்டி சைக்கெழி லாலவாய் மேவிய<br>அண்ட னேயஞ்ச லென்றருள் செய்யெனைக்<br>குண்ட ராமம ணர்கொளு வுஞ்சுடர்<br>பண்டிமன் தென்னன் பாண்டியற்காகவே. 10 | எட்டுத் திசைகளிலும் எழில் பரவும் திருஆலவாயில் வீற்றிருந்தருளும், அண்டங்களுக்கெல்லாம் நாயகனான சிவபெருமானே! அடியேனை அஞ்சேல் என்று அருள்புரிவீராக! சிறுமையுடைய சமணர்கள் இம்மடத்திற்கு இட்ட நெருப்பானது தொன்மையாக விளங்கும் பாண்டிய மன்னனைச் சென்று பற்றுவதாக. |
| **3349.** அப்ப னாலவா யாதி யருளினால்<br>வெப்பம் தென்னவன் மேலுற மேதினிக்<br>கொப்ப ஞானசம் பந்த னுரைபத்தும்<br>செப்ப வல்லவர் தீதிலாச் செல்வரே. 11 | 'எனக்குத் தந்தையாக விளங்கும் திருஆலவாய் ஆதிமூர்த்தியின் திருவருளால் சமணர்கள் இம்மடத்திற்கு வைத்த நெருப்பின் வெப்பமானது பாண்டிய மன்னனைப் பற்றுவதாக' என்று உலக நியதிக்கு ஏற்ற தன்மையில் ஞானசம்பந்தன் உரைத்தருளிய இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கள் குற்றமற்ற செல்வர்களாகத் திகழ்வர். |

## 52. திருஆலவாய் ( திரு விராகம்)

**(நன்றியின் உச்சகட்டத்தில் பாடப்பட்ட திருப்பதிகம்)**

**பண் : கௌசிகம்** **பதிக எண் : 52**

பாண்டியனுக்கு உயிரை நல்கி, மெய்ந்நெறிகாட்டி, ஊனச் சமணை நீக்கி, உலகெலாம் உய்யக் கொண்ட ஞானசம்பந்தர் வாய்மை பெருகி ஓங்கிற்று. திருக்கூத்தப்பிரான் திருநெறி நடந்தது. வேள்வியும் மாரியும் சிவநெறியும் மிகுந்து, இம்மையில், இன்பத்தில் குறைவில்லை எனினும் சிவநாம செபத்தால் பிறவித்துன்பம் தொலையப் பேரின்பம் பெற்றது உலகம். மங்கையர்க்கரசியாரும் மன்னனும் போற்றிவரப் புகலியர் வேந்தர் பொங்கொளிச் சிவிகை ஏறிப் போகின்றார் திருவாலவாய்க்கு. தொண்டர் யாவரும் மகிழ்ச்சியுடன் புகழ்ந்து போற்றிச் செல்கின்றனர். மண்ணெலாம் உய்யவந்த வள்ளலாரைக் கண்டு, கண்ணாற் பயன் கொண்டனர் கன்னிநாட்டவர் எல்லாரும். சிவிகையினின்றும் இறங்கி, கோயில் வாயிலில் புகுந்தார் பாலறாவாயர்.

வலங்கொண்டார். "கைகளும் தலைமீது ஏறக், கண்ணில் ஆனந்தவெள்ளம் மெய்யெலாம்பொழிய வேத முதல்வரைப் பணிந்து போற்றி, ஐயனே அடியனேனை அஞ்சல் என்று அருளவல்ல மெய்யனே" என்று விளம்பலுற்றது இத்திருப்பதிகம்.

**3350.** வீடலால வாயிலாய் விழுமியார்க ணின்கழல்
பாடலால வாயிலாய் பரவநின்ற பண்பனே
காடலால வாயிலாய் கபாலிநீள்க டிம்மதில்
கூடலால வாயிலாய் குலாயதென்ன
கொள்கையே.

வீடுபேற்றிலன்றி வேறொன்றில் விருப்பம் இல்லாதவரான மெய்ஞ்ஞானிகள் உம் திருவடிகளைப் போற்றிப்பாட, அவர்தம் வாக்கினிடமாக விளங்குபவரே! அவர்கள் துதித்துப் போற்றுகின்ற பண்புகள் பலவற்றை உடையவரே! சுடுகாட்டைத் தவிர வேறோர் இடத்தை விரும்பி நில்லாதவரே! கபாலி என்னும் பெயரையுடையவராய், மதில் சூழப்பெற்ற நான்மாடக்கூடல் என்னும் திருஆலவாயில் எழுந்தருளியுள்ள பெருமானாரே! நீர் மதுரையம்பதியில் குலாவி விளையாடுவது எம்மால் அறியும் தரத்த தன்றாயுள்ளது.

---

1. வீடு – அல் – ஆல் – வாய் – இலாய்
2. வீடல் – ஆல் – அ – வாயில் – ஆய என்று பலவாறும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

இப்பாடலுக்கு பண்டிதர் கந்தசாமிப் பிள்ளை அவர்களின் கீழ்க்காண் உரையைப் படித்துத் திருஞானசம்பந்தரின் செந்தமிழில் மூழ்கி இன்புறுக.

1. விழுமியார்கள் – மெய்ஞ்ஞானிகள். வீடு அலால் – முத்திப் பேற்றையன்றி, அவாய், (வேறொன்றை) அவாவி – விரும்பி (நிற்றல்) இல்ஆய் – இல்லையாகி. நின் – உனது. கழல் – திருவடிகளை. (பாடல் வாயிலாய்) ஆல – கொண்டாட. பரவநின்ற பண்பனே – துதிக்கின்ற பண்பையுடையவனே. காடு அலால் – முதுகாட்டைத்தவிர. அவாய் – விரும்பி (நிற்றல்). இல்லாய் – இல்லாதவனே. நீள் – நெடிய. கவாலிமதில் – கவாலி என்னும் பெயரையுடைய மதில், விழுமியார்கள் நின்கழல் பரவநின்ற பண்பனே. காடு அல்லால் விரும்புதலில்லாதவனே, நான்மாடக் கூடலாகிய திருவாலவாயில் எழுந்தருளிய பெருமானே, குலாவி விளையாடியது எம்மால் அறியுந் தரத்ததன்று என்றவாறு.

வீடல் ஆல ஆய் இல்லாய் – இறத்தல் அகல (பிறத்தற்கு வாயிலான) தாயில்லாதவரே. விழுமியார்கள் – மெய்யுணர்தலிற் சீரியோர்கள். நின்கழல் – தேவரீர் திருவடித் தாமரைகளை. பாடல் – பாடுதலையுடைய. ஆல வாய் இல்லாய் – கல்லால மரத்தினகமே இல்லமாகக் கொண்டவரே. பரவ நின்ற பண்பனே – மண்ணும் விண்ணும் மற்றும் வாழ்த்த நின்றருளிய பண்புடையவரே. காடு அல்லால் அவாய் இல்லாய் – மகா சங்கார காலத்தில் யாவும் ஒடுங்கும் காடு அல்லாமல் வேறு யாதும் விரும்பியில்லாதவரே. கபாலிநீள் கடிமதில் – நீண்ட கபாலி என்று வழங்கப்பெறும் கடிமதில் (சூழப்பெற்ற), கூடல் – நான்மாடக் கூடல் (என்றும் திருமருதந்துறை மதுரை) என்றும் பெயர்கொண்ட நகரின்) கண் உள்ள, ஆலவாயிலாய் – திருவாலவாய் என்று வழங்கப்பெறும் திருக்கோயிலை உடையவரே. குலாயது என்ன கொள்கை – (கால்மாறி) ஆடுவதற்கு என்ன கருத்து ?

வீடல் (வீடு+அல்) – அழிதல். ஆல – அகல. அகலல் என்றதன் மரூஉவே. ஆலல் என்பது : – மயிலின் தோகை சுருங்கியிருந்து அகலும் போது செய்யும் ஒலியை அகவுதல் என்பர். அகலுவது தோகை, அகவுவது

மயில். இரண்டிற்கும் சிறிது வேறுபாடிருந்தும், இரண்டும் ஒருசேரக் கருத்துள் வரும் வண்ணம் 'மயில் ஆல' என்பது மரபு. திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரே "மயில் ஆலச் செருந்திகாலையே கனகம் மலர்கின்ற சாய்க்காடு" "வண்டுபாட, மயில் ஆல, மான்கன்று துள்ள, வரிக்கெண்டை பாயச் சுனைநீல மொட்டு அலரும் கேதாரம்" என்று அருளியதில், 'ஆல' என்ற சொல்லாட்சி உள்ளதை அறிக. 'அகன்றோர்' என்பதன் மரூஉவே ஆன்றோர். "அன்னச் சேவல் மாறு எழுந்து ஆலும்" (புறம். 128) என்புழி, ஆலும் என்பது ஒலிக்கும் என்ற பொருளதாய் நின்றதும், 'ஆலோலம்' என்னும் வழக்கு உணர்க. ஆலோலம் (அகல ஓலம், ஆல ஓலம், ஆலோலம்) என்று மருவும் முன்பு இருந்த வடிவம் உய்த்துணர்தற்பாலது. 'பயில் பூஞ் சோலை மயில் எழுந்து ஆலவும்' (புறம். 116) என்புழி 'ஆலவும்' என்ற பொருள் பயப்பதுணர்க. 'முயங்கல் ஆன்றிசின்' (புறம். 151) என்புழி, 'அமைந்தேன்' என்று பொருளுரைத்ததும், அதற்குரிய அடிச்சொல் (பகுதி) ஆங்கு இல்லாமையும், அதன் அடி 'அகல்' என்பதும், அஃது அகன்றிசின் என்பதன் மரூஉவே என்பதும் அறிதல் சிலர்க்கே எளிது. 'ஆனாது உருவும் புகழும் ஆகி' (புறம். 6) 'அமிழ்து அட்டு ஆனாக் கமழ் குய் அடிசில்' (மேற்படி 10). 'ஆனா ஈகை அடுபோரண்ணல்' (மேற்படி 42) என்னும் இடங்களில், எதிர்மறையில் வந்த 'ஆனாமை'க்கு எவ்வடிவின் அமைந்த சொல் உடன்பாடாகலாம்? ஆனுதல் எனலாமோ? ஆன்றல் என்றுள்ளதேல்' அதன் பகுதி யாது? அகல் + தல் – அகறல். அகல் – ஆல் என மருவி அது, தல் என்னும் விகுதியோடு சேருங்கால் 'ஆன்றல்' என்றாயிற்று. ஆகவே, வீடல் ஆல என்றதற்கு இறப்பு அகல என்ற பொருளே உரியதென்க. எனவே இறப்பின்மை பெறப்பட்டது. ஆய் : யாய் என்றதன் மரூஉ. யாய் தன்மைக்கும், ஞாய் முன்னிலைக்கும், தாய் படர்க்கைக்கும் உரியன. 'யாயும் ஞாயும் யாராகியரோ' (குறுந்தொகை). 'யாயை வெறுத்தனன் பின்னை விதியை வெறுத்தனன்' (வில்லி பாரதம்). ஆய் இல்லாய் – ஆய் இல்லாமை பிறப்பின்மையைக் குறிக்க நின்றது. நிற்கவே இறப்பகலப் பிறப்பில்லாய் என்றவாறாம். 'தோற்றம் உண்டேல் மரணம் உண்டு'. இறப்பும் பிறப்பும் இல்லாத கடவுள். 'பிறப்பில் பெருமான்' 'பிறப்பினோ டிறப்பிலை' என்னும் இப்பெருமான் திருவாக்குணர்க.

ஆலவாய் – ஆலமர நிழலகம். வாய் – இடம். இல் – வாழும் இடம். பரவ – வாழ்த்த. 'பரவுவார்கள் இமையோர்கள்'. 'யானும் உன்னைப் பரவுவனே'. ('வாழ்த்துவதும்' எனத் தொடங்குந் திருவாசகம்). பண்பு – அருட்பண்பு. எண் குணம். காடு – 'கோயில் சுடுகாடு'. சருவசங்கார காலத்தில் 'தானொருவனுமே' நிற்றலின், அது சிறந்த வீடாயிற்று. மதுரையில் உள்ள திருமதிலுக்கு, 'கபாலி' என்ற பெயர் உண்டு. கடி – காவல். கூடல் – கன்னி, கரியமால், காளி. ஆலவாய் என்னும் நான்கன் கூட்டம் பற்றிய காரணப்பெயர். நான்மாடக் கூடலான படலத்து வரலாறும் கொள்ளலாம். ஆலவாய் – மதுரையில் உள்ள திருக்கோயிலின் பெயர். குலாயது என்ன கொள்கை – பின்னர் (2, 3, 7, 10) உள்ள வினாக்களுக்கு ஏற்பப் பொருள் கொள்க. குலாவுதல் – ஆடுதல். "ஆடுங்குலாத்தில்லை யாண்டான்" கொள்கையும் கோட்பாடும் ஒன்றாகா? கொள்கை செய் வினை. கோட்பாடு செயப்பாட்டு வினை. கொள்கைக்குக் கோட்பாடு என்று பொருளுரைத்தல் சில இடத்திலன்றி எல்லா இடத்திலும் பொருந்தாது. "ஒன்று வேறுணர்வும் இல்லேன் தெளிவற நிறைந்த கோலம். மன்றில் நான் மறைகள் ஏத்த மானிடர் உய்ய வேண்டி, நின்று நீ ஆடல் செய்கை நினைப்பதே நியமம் ஆகும், என்று பூம் புகலி மன்னர் இன்தமிழ்ப் பதிகம் பாட" எனச் சேக்கிழார் சுவாமிகள் அருளிய கருத்தே இப்பதிகப் பாடல்களில் அமைந்திருத்தல் காண்க.

1. வீடு ஆல வாயிலாய் :– 'அழிக்கத்தக்க ஆலகால விடத்தை உண்ட திருவாயினை உடையவரே. 2. கரிய விடத்தையுடைய பாம்பினால் காட்டப்பட்ட இடத்தை இருப்பாகக் கொண்டவரே. 3. வீடு பெறற் பொருட்டுக் கல்லால் ஆகிய அவ்விடத்தில் ஆய்ந்த (விழுமியோர்கள்) (சனகாதி முனிவர்) பாடலாலவாயிலாய் : பாடுதலினால் அந்த வாக்கினிடம் விளங்குபவரே. காடலால் அவாயிலாய் – சுடுகாடேயன்றி வேறு இருப்பிடம் விரும்பாதவரே. குலாயது – எம்முடன் உள்ளே விளங்க விரவி எழுந்தருளியிருந்து அருள்புரிந்து ஏற்றுக்கொண்டது என்றாருமுளர்.'

**3351.** பட்டிசைந்த வல்குலாள் பாவையாளோர் பாகமா
ஒட்டிசைந்த தன்றியும் முச்சியாளொ ருத்தியாக்
கொட்டிசைந்த வாடலாய் கூடலால வாயிலாய்
எட்டிசைந்த மூர்த்தியா யிருந்தவாறி தென்னையே. 2

பட்டாடை அணிந்த திருமேனியுடைய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒருபாகமாகப் பிரியாவண்ணம் கொண்டதோடு, சடைமுடியின் உச்சியில் கங்கா தேவியையும் தாங்கியவரே! கொட்டு என்னும் பறை முழங்க ஆடுபவரே! கூடல் ஆலவாயில் வீற்றிருந்து அருள்பவரே! அட்டமூர்த்தியாய் விளங்கும் சிவபெருமானே! உம் அருள்தன்மை எம்மால் எடுத்தியம்ப வல்லதோ.

**3352.** குற்றநீ குணங்கணீ கூடலால வாயிலாய்
சுற்றநீ பிரானுநீ தொடர்ந்திலங்கு சோதிநீ
கற்றநூற் கருத்துநீ யருத்தமின்ப மென்றிவை
முற்றுநீ புகழ்ந்துமுன் னுரைப்பதென்மு கம்மனே. 3

திருஆலவாயில் வீற்றிருந்தருளும் இறைவரே! நீரே உயிர்க்குள் உயிராய் ஒன்றி உடனிருந்து இயங்குகிறீர். ஆதலால் எனது குற்றமும் நீரே; குணமும் நீரே; என் சுற்றமும் தலைவரும் நீரே. என்னுள்ளிருக்கும் அறியாமையாகிய இருளை நீக்கி அறிவொளி தொடர்ந்தொளிரச் செய்யும் சோதி நீரே. பொதுவும், சிறப்புமாகிய வேத, ஆகம நூல்களில் கருத்தும் நீரே. நூல்களில் உட்பொருளை அடியேன் நனிவிளங்கச் செய்பவரும், அவ்விளக்கத்தால் இன்பம் அடையச் செய்பவரும் நீரே. உம் திருமுன் அடியேன் இவ்வாறு உம்மைப் புகழ்வது உண்மையேயன்றி வெறும் புகழ்ச்சியன்று.

**3353.** **முதிருநீர்ச்** சடைமுடி முதல்வன்நீ **முழுங்கழல்**
**அதிர**வீசி யாடுவா யழகன்நீ புயங்கன்நீ
மதுரன்நீ மணாளன்நீ மதுரையால வாயிலாய்
சதுரன்நீ சதுர்முகன் கபாலமேந்து சம்புவே. 4

மதுரை என வழங்கும் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் இறைவனே! தூய கங்கையைச் சடைமுடியில் தாங்கிய முதல்வன் நீ. சப்தத்துடன் எரியும் நெருப்பிடையே நின்று நிலமதிர ஆடுபவன் நீ. அழகன் நீ. பாம்பை ஆபரணமாக அணிந்தவன் நீ. வரம்பில் இன்பம் உடையவன் நீ. மணவாளன் நீ. மதுரை எனப்படும் ஆலவாயில் வீற்றிருந்தருளுபவன் நீ. சாமர்த்தன் நீ. பிரமகபாலமேந்திப் பலியேற்றுத் திரியும் சிவபிரான் நீ.

---

முதிரும் – மேலிருந்து கீழ் வேகத்துடன் செல்லும் தன்மையை மாற்றிக் கீழ் நின்று மேனோக்கிச் செல்லும்படி தாங்கியவர் என வாதத்தின் இறுதியாய்ச் செய்த புனல் வாதக் குறிப்பு.
முழங்கு அழல் அதிர – சுடுந்தன்மையுடைய தீயை அவ்வாறல்லாது செய்த அனல்வாதக்குறிப்பு.

**3354.** கோலமாய நீண்மதிற் கூடலால வாயிலாய்
**பாலனாய தொண்டு செய்து பண்டுமின்று முன்னையே**
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்
சீலமாய சிந்தையில் தேர்வதில்லை தேவரே. 5

பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்றும் – திருஞானசம்பந்தரின் முன்னை நிலைத் தொண்டின் குறிப்பும் அதனையே தொடர்ந்து இங்குவந்து பணி செய்யும் குறிப்பும் உணர்த்தும் சிறந்த சரிதச் சான்றாகவும் கொள்ளலாம்.

அழகிய நீண்ட மதில்களையுடைய கூடலில் விளங்கும் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் பெருமானே! மார்க்கண்டேயர், சண்டேசுரர் போன்ற பாலர்கள் சிவபூசை செய்து பண்டைக் காலத்தும், இக்காலத்தும் வழிபட விளங்கும் நீலகண்டனே. தேவர்கள் உன்னையன்றிப் பிற தெய்வங்களைத் தமது தூயசிந்தையில் கொள்ளாதவராய் வாழ்கின்றனர்.

---

**3355.** பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க வாடுவாய் பிஞ்ஞகா பிறப்பிலீ
கொன்றையம் முடியினாய் கூடலால வாயிலாய்
**நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.** 6

பின் தயங்க – பின்புறம் அசைந்தாடி விளங்க நின் தயங்கி ஆடல் – சிவஞானிகள் கண்டு எப்போதும் கும்பிட்டுச் சிவானந்தத்தில் திளைக்கும் கூத்து. ஞான நடனம். ஐந்தொழில் கூத்தாம் ஊன நடனத்திலிருந்து மாறுபட்டது.

பொன்போல் ஒளிரும் அழகிய சடைமுடி பின்னால் தாழ்ந்து அசைய நடனம் ஆடுபவரே! தலைக்கோலம் உடையவரே! பிறப்பற்றவரே! கொன்றைமாலை சூடிய முடி உடையவரே! நான்மாடக் கூடலில் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் இறைவரே! உம் ஒளிமயமான திருநடனத்தை நினைத்து இன்புற்றிருப்பதே உயிர்கள் உய்தி பெறுதற்குரிய நியமம் ஆகும்.

---

**3356.** ஆதியந்த மாயினா யாலவாயி லண்ணலே
சோதியந்த மாயினாய் சோதியுள்ளொர் சோதியாய்
**கீதம்வந்த வாய்மையாற் கிளர்தருக்கி** னார்க்கலால்
ஓதிவந்த வாய்மையா லுணர்ந்துரைக்க லாகுமே. 7

கீதம் வந்த வாய்மை – அன்பு மேலீட்டினால் தம்மை மறந்து கீதங்களைப் பாடிக் கொண்டிருத்தல். தருக்காவது – சிவனடிக்கீழும், சிவனடியார் திருக்கூட்டத்தின் உள்ளும் இருந்து வாழும் ஆனந்தத்தால் வருவது.

ஞானசம்பந்தரும், திருமூலரும் கண்டுணர்ந்து திளைத்த கூத்து இதுவேயாகும். சிவானந்தக் கூத்து, பொற்பதிக்கூத்து, சுந்தரக்கூத்து, அற்புதக்கூத்து என்று திருமந்திரத்தில் பேசப்படுவதும் இக்கூத்தேயாகும்.

உலகத் தோற்றத்திற்கும், ஒடுக்கத்திற்கும் நிமித்த காரணராய் விளங்கும் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் இறைவரே! பேரொளிப் பிழம்பாக விளங்குபவரே! பெருஞ்சோதிக்குள் சோதியாய் ஒளிர்பவர் நீர். உபதேச வழியாகச் சிவஞானம் பெற்ற பக்குவமுடைய ஆன்மாக்களுக்கு அல்லாமல் ஏனைய அபரஞானமாகிய கல்வி அறிவுடையோர்க்கு உம் அருட்பண்பை உணர்தற்கும், உரைப்பதற்கும் இயலுமோ?

| | |
|---|---|
| **3357.** கறையிலங்கு கண்டனே கருத்திலாக் கருங்கடல்<br>துறையிலங்கை மன்னனைத் தோளடர ஊன்றினாய்<br>மறையிலங்கு பாடலாய் மதுரையால வாயிலாய்<br>நிறையிலங்கு நெஞ்சினால் நினைப்பதே நியமமே. 8<br><br>நிறையிலங்கு நெஞ்சு – பிறிதொன்றனுக்கும் இடமின்றி (பொது நீக்கி) இறைவனையே நினைக்கும் நெஞ்சு | விடக்கறை விளங்கும் கழுத்தை உடையவரே! கரிய கடலால் சூழப்பட்ட இலங்கை மன்னனின் தோள்கள் நொறுங்கும்படி திருக்கயிலை மலையில் காற்பெருவிரலை ஊன்றியவரே! வேதங்களிலுள்ள பாடல்களால் போற்றப் படுபவரே! மதுரையிலுள்ள திருஆலவாயில் வீற்றிருந்தருள்பவரே! மனத்தை ஒரு வழியே நிறுத்தி உம்மை நினைப்பதே உய்தற்குரிய நியமமாகும். |
| **3358.** தாவணவ் விடையினாய் தலைமையாக நாடொறும்<br>கோவணவ் வுடையினாய் கூடலால வாயிலாய்<br>தீவணம் மலர்மிசைத் திசைமுகனு மாலுநின்<br>தூவணம் மளக்கிலார் துளக்கமெய்து வார்களே. 9 | தாவிச் செல்லும் இடபத்தை வாகனமாக உடையவரே! தலைமை உடையவராய் நாடொறும் கோவண ஆடையோடு கூடல் ஆலவாயில் வீற்றிருந்து அருள் செய்பவரே! நெருப்புப் போன்று செந்நிறமான தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும், உம் முழுமுதல் தன்மையை அறியாதவர்களாய்க் கலக்கம் உற்றார்கள். |
| **3359.** தேற்றமில் வினைத்தொழிற் றேரருஞ் சமணரும்<br>போற்றிசைத்து நின்கழல் புகழ்ந்து புண்ணியங்கொளாா்<br>கூற்றுதைத்த தாளினாய் கூடலால வாயிலாய்<br>நாற்றிசைக்கு மூர்த்தியாகி நின்றதென்ன நன்மையே. 10<br><br>நியமம் – நியதியாகிய கடன். நீ செய்யும் பேரருளுக்கு அருள் ஆடலை நினைப்பதைத் தவிர வேறு கைம்மாறு ஒன்றுமில்லை. | தெளிவில்லாத செயல்களைச் செய்யும் புத்தரும், சமணரும் உம் திருவடிகளைப் போற்றிப் புகழ்ந்து புண்ணியங்களைத் தேடிக் கொள்ளாதவராயினர். காலனை மார்க்கண்டேயர்க்காக உதைத்த திருவடிகளை உடையவரே! கூடல் ஆலவாயில் வீற்றிருந்தருளும் இறைவரே! உலகனைத் திற்கும் தலைவராக விளங்கி உயிர்கட்கு எல்லா நன்மையும் தருபவர் நீவிர் அல்லிரோ? |
| **3360.** போயநீர் வளங்கொளும் பொருபுனற் புகலியான்<br>பாயகேள்வி ஞானசம் பந்தன்நல்ல பண்பினால்<br>ஆயசொல்லின் மாலைகொண்டு ஆலவாயிலண்ணலைத்<br>தீயதீர எண்ணுவார்கள் சிந்தையாவர் தேவரே. 11<br><br>“மானுடம் உய்ய வேண்டி நின்று நீயாடல் செய்கை நினைப்பதே நியமமாகும்” என்பது பதிகக் கருத்து. | நீர்வளம் தரும், ஒலிக்கின்ற ஆறு பாய்கின்ற சீகாழியில் அவதரித்த பரந்த கேள்வி ஞானமுடைய ஞானசம்பந்தன் இறைவனுடைய நற்பண்புகளைப் போற்றி அருளிய இச்சொல் மாலையை ஓதித் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் இச்சிவபெருமானை வழிபடுபவர்கள் தீமைகள் நீங்கப்பெற்று நற்சிந்தையுடைய தேவர்களாவர். |

## 53. திருவானைக்கா ( திருவிராகம் )

பண் : கௌசிகம் | பதிக எண் : 53

**3361.** வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவி லின்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவில் **அண்ணலை அபயமாக வாழ்பவர்**
ஏனைக்காவல் வேண்டுவார்க் கேதுபேத மில்லையே. 1

வானிலுள்ள இருளைப் போக்கும் வெண்மதியைச் சடையில்தாங்கி, தேன் போன்ற இனிய மொழிபேசும் உமாதேவியைத் தன் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டு, திருஆனைக்காவில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைச் சரணாகக் கொண்டு வாழ்பவர்கட்குத் தம்மைத்தாமே காத்துக்கொள்ள முடியாமல் பிறதுணை வேண்டும்படி நேரும் பெரிய அபாயம் எதுவும் இல்லை.

---

**3362.** சேறுபட்ட தண்வயற் சென்றுசென்று சேணுலா
வாறுபட்ட நுண்டுறை யானைக்காவி லண்ணலார்
நீறுபட்ட மேனியார் நிகரில்பாத மேத்துவார்
**வேறுபட்ட சிந்தையார்** விண்ணிலெண்ண வல்லரே. 2

இந்த நிலையை அடைந்தவர்களுக்கு கருவி கரணங்கள் நம்மைப் போலவே இருந்தாலும் பலன் அளிப்பதில் பெரிய வேறுபாடுகள் காணப்படும். சித்தர் ஆவார்.

சேறுடைய குளிர்ச்சி பொருந்திய வயல் வளம் பெருகுமாறு, நெடுந்தொலைவு சென்று ஓடிவரும் காவிரி ஆற்றின் துறையில் விளங்கும் திருவானைக்காவில் வீற்றிருந்தருளும் அண்ணலாகிய சிவபெருமான், திருவெண்ணீறு பூசிய திருமேனியுடையவர். ஒப்பற்ற அப்பெருமானின் திருவடிகளைப் போற்றுபவர்கள், சிந்தை முதலிய பசுகரணங்கள், பதி கரணங்களாக மாறியவர்களாய், முத்தியின்பம் பெறுவதற்குரிய சிவஞானம் கைகூடப் பெற்றவர்கள் ஆவர்.

---

**3363.** தாரமாய மாதரா டானொர்பாக மாயினான்
ஈரமாய புன்சடை ஏற்றதிங்கள் சூடினான்
ஆரமாய மார்புடை யானைக்காவி லண்ணலை
வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே. 3

இக்கோயில் 5 பிரகாரங்கள் கொண்ட பெரிய கோயில். பஞ்ச பூதங்களில் நீர்த்தலம். சிவலிங்கத்தின் கீழிருந்து நீர் ஊறி வருவதை இன்றும் காணலாம்.

தாரமாகிய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர் சிவபெருமான். கங்கையைத் தாங்கிய சடைமுடியில் சந்திரனையும் சூடியவர். சோழ அரசனின் வேண்டுகோளுக்கிணங்க, அவனது தொலைந்த இரத்தின மாலையைத் திருமஞ்சன நீரோடு தம் திருமார்பில் ஏற்றவர். திருவானைக்காவில் வீற்றிருந்தருளும் அண்ணலான சிவபெருமானை அன்புடன் வணங்குவார்களின் தீவினைகள் யாவும் நீங்கும்.

3364. விண்ணினண்ணு புல்கிய வீரமாய மால்விடைச்
சுண்ணவெண்ணீ றாடினான் சூலமேந்து கையினான்
அண்ணல்கண்ணொ ரோர் மூன்றினா னானைக்காவு கைதொழ
எண்ணும்வண்ணம் வல்லவர்க் கேதமொன்று மில்லையே. 4

வானில் நண்ணிச்சென்று முப்புரம் எரித்தபோது திருமால் இடபமாகத் தாங்கினான். இறைவன் திருவெண்ணீறு அணிந்தவன். சூலமேந்திய கையினன். மூன்று கண்களையுடைய மூர்த்தியான சிவபெருமான் வீற்றிருந் தருளுன்ற திருவானைக்காவைக் கைதொழ எண்ணும் அன்பர்கட்குத் தீமை எதுவும் இல்லை.

3365. வெய்யபாவங் கைவிட வேண்டுவீர்க ளாண்டசீர்
மைகொள்கண்டன் வெய்யதீ மாலையாடு காதலான்
கொய்யவிண்ட நாண்மலர்க் கொன்றைதுன்று சென்னியெம்
ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. 5

முற்பிறப்பில் சிலந்தியாயிருந்த கோச்செங்கட் சோழன் கட்டிய கற்றளி என்பதால் யானை உள்ளே போக முடியாதபடி கருவறை அமைப்பு உள்ளது.

கொடிய பாவமானது விலக வேண்டும் என்று விரும்புகிற அன்பர்களே! தேவர்களைக் காத்து அருள்புரிந்த நஞ்சுண்ட இருண்ட கண்டத்தினனும், வெப்ப மிகுந்த நெருப்பினை ஏந்தி ஆடுகின்ற அன்புடையவனும், அன்றலர்ந்த கொன்றை மலரைக் கொய்து தலையிலணிந்தவனுமான எம் தலைவனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் பொய்கை சூழ்ந்த திருவானைக்கா என்னும் திருத்தலத்தை அடைந்து வழிபடுவீர்களாக.

3366. நாணுமோர்வு சார்வுமுன் நகையுமுட்கு நன்மையும்
பேணுறாத செல்வமும் பேசநின்ற பெற்றியான்
ஆணும்பெண்ணு மாகிய வானைக்காவி லண்ணலார்
காணுங்கண்ணு மூன்றுடைக் கறைகொண்மிடற னல்லனே. 6

இறைவர் சித்தராய் எழுந்தருளித் திருநீற்றைக் கூலியாகக் கொடுத்து எழுப்பித்த காரணத்தால் வெளிப்புற மதிலுக்குத் திருநீறு இட்டான் திருமதில் என்று பெயர். மிகப் பெரியது.

அஞ்ஞானத்தால் ஈசனை அறியாத பிறர் நாணத்தக்க நாணமும், பதியை ஓர்ந்து அறிதலும், அறிந்தபின் சார்ந்திருத்தலும், சார்தலினால் மகிழ்ச்சியும், மனத்தை அடக்கி உள்கித் தியானம் செய்தலுமாகிய நன்மையும் உடையவர்களாய், எவற்றையும் பொருட்படுத்தாத வீரியமும் கொண்ட அடியவர்கள் கொண்டாடிப் பேசத்தக்க தன்மையை உடைய, சிவபெருமான் ஆணும், பெண்ணும் சேர்ந்ததாகிய அர்த்தநாரித் திருக்கோலத்தில் திருவானைக்காவில் வீற்றிருந்தருளும் அண்ணலாய் மூன்று கண்களையுடையவராய் விளங்குபவர் அல்லரோ?

**3367.** கூருமாலை நண்பகற் கூடிவல்ல தொண்டர்கள்
பேருமூருஞ் செல்வமும் பேசநின்ற பெற்றியான்
பாரும்விண்ணுங் கைதொழப் பாயுங்கங்கை செஞ்சடை
ஆரநீரொ டேந்தினா னானைக்காவு சேர்மினே. 7

காலை, மாலை, நண்பகல் முக்காலங்களிலும் இறைவனுக்குத் தொண்டு செய்யும் அடியார்கள் ஒன்று கூடி, இறைவனின் திருநாம மகிமைகளையும் திருத்தலங்களின் சிறப்புக்களையும், அவன் அருட்செயல்களையும் போற்றிப் பேச விளங்கும் தன்மையன் சிவபெருமான். பூவுலகத்தோரும், விண்ணுலகத்தோரும் கைதொழுது வணங்கக் கங்கையைச் செஞ்சடையில் தாங்கியுள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருவானைக்கா என்னும் திருத்தலத்தை அடைந்து வழிபடுவீர்களாக.

---

கொடிமரத்துக்கு அருகில் உள்ள மண்டப வேலைப்பாடு உலகப்புகழ் பெற்றது.

---

**3368.** பொன்னமல்கு தாமரைப் போதுதாது வண்டினம்
அன்னமல்கு தண்டுறை யானைக்காவி லண்ணலைப்
பன்னவல்ல நான்மறை பாடவல்ல தன்மையோர்
முன்னவல்லர் மொய்கழ றுன்னவல்லர் விண்ணையே. 8

இலக்குமி வீற்றிருந்தருளும் தாமரை மலரில் வண்டினம் ரீங்காரம் செய்யவும், அன்னப்பறவைகள் வைகும் குளிர்ந்த நீர்நிலைகளின் துறைகளை உடைய திருஆனைக்காவில் வீற்றிருந்தருளும் அண்ணலான சிவபெருமானை நான்கு வேதங்களிலுமுள்ள பாடல்களைப் பாடி, அவன் திருவடிகளைப் போற்றி வணங்குபவர்கள் இப்பூவுலகின்கண் குறைவற்ற செல்வராய்த் திகழ்வதோடு மறுமையில் விண்ணுலகை ஆள்வர்.

---

கச்சியப்ப முனிவர் எழுதிய இத்தல புராணத்தையும், மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை எழுதிய அகிலாண்டநாயகி மாலையையும் நாம் கண்டிப்பாகப் படிக்க வேண்டும்.

---

**3369.** ஊனொடுண்ட னன்றென ஊனொடுண்டல் தீதென
ஆனதொண்ட ரன்பினாற் பேசநின்ற தன்மையான்
வானொடொன்று சூடினான் வாய்மையாக மன்னிநின்று
ஆனொடஞ்சு மாடினா னானைக்காவு சேர்மினே. 9

ஊன் உணவு இறைவனுக்குப் படைத்தல் நன்று என்று சுவைமிகுந்த இறைச்சியைப் படைத்த கண்ணப்பநாயனாரின் அன்பிற்கும், ஊன் உணவு இறைவனுக்குப் படைத்தல் அபசாரம் அது தீது என மருண்ட சிவகோசரியார் அன்பிற்கும் கட்டுண்ட தன்மையினனும், பிறைச்சந்திரனைச் சடையில் சூடி, சத்தியப் பொருளாக என்றும் நிலைத்து நின்று, பசுவிலிருந்து பெறப்படும் பஞ்சகவ்வியங்களால் திருமுழுக்காட்டப்படுகின்றவனுமாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருவானைக்கா என்னும் திருத்தலத்தைச் சார்ந்து அவனை வழிபட்டு உய்யுங்கள்.

| | |
|---|---|
| 3370. கையிலுண்ணுங் கையருங் கடுக்கள்தின் கழுக்களும்<br>மெய்யைப்போர்க்கும் பொய்யரும் வேதநெறியை யறிகிலார்<br>தையல்பாக மாயினான் றழலதுருவத் தானெங்கள்<br>ஐயன்மேய பொய்கைசூ ழானைக்காவு சேர்மினே. 10 | கையில் உணவு வாங்கி உண்ணும் சமணரும், கடுக்காய்களைத் தின்னும் புத்தர்களும், மெய்ப்பொருளாம் இறைவனை உணராது பொய்ப்பொருளாம் உலகியலைப் பற்றிப் பேசுபவர்களாய் வேதநெறியை அறியாதவர்கள். எனவே அவர்களைச் சாராது, உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவரும், நெருப்புப் போன்ற சிவந்த திருமேனியை உடையவருமான எங்கள் தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் பொய்கை சூழ்ந்த திருவானைக்கா என்னும் திருத்தலத்தை அடைந்து அவரை வழிபட்டு உய்யுங்கள். |
| 3371. ஊழியூழி வையகத் துயிர்கடோற்று வானொடும்<br>ஆழியானுங் காண்கிலா வானைக்காவி லண்ணலைக்<br>காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை<br>வாழியாகக் கற்பவர் வல்வினைகண் மாயுமே. 11 | ஊழிக்காலந்தோறும் உயிர்களுக்குத் தனு, கரண, புவன, போகங்களைப் படைக்கின்ற பிரமனும், திருமாலும் இறைவனின் முடியையும், அடியையும் தேடிச்சென்றும் காண்பதற்கு அரிய திருவானைக்காவில் வீற்றிருந்தருளும் அண்ணலான சிவபெருமானைச் சீகாழிப்பதியில் அவதரித்த ஞானசம்பந்தன் போற்றி அருளிய இத்திருப்பதிகத்தை மண்ணில் நல்ல வண்ணம் வாழக் கற்று ஓதவல்லவர்களின் கொடிய வினையாவும் மாய்ந்தழியும். |

## 54. பொது ( திருப்பாசுரம் )

பண் : கௌசிகம் பதிக எண் : 54

3372. வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே. 1

1. அந்தணர், வானவர், ஆன் இனம் வாழ்க.
2. தண் புனல் வீழ்க
3. வேந்தனும் ஓங்குக
4. தீயது எல்லாம் அழிக.
5. அரன் நாமமே சூழ்க.

இப்பதிகத்தின் முக்கியத்துவத்தை கருதி சேக்கிழார் மேற்கண்டவாறு பிரித்து 22 பாடல்களில் விரித்துள்ளார். அதை விளக்கி சிவக்கவிமணி சி.கே.எஸ். அவர்களின் உரை வளப்பத்தைத் தனி நூலாக வெளியிட்டுத்தான் அனுபவிக்க வேண்டும்.

உலக நன்மையின் பொருட்டு வேள்விகள், அர்ச்சனைகள், வழிபாடுகள் ஆகியவை செய்யும் அந்தணர்கள் வாழ்க. அவ்வேள்விகளைச் சிவன் நியதிப்படி ஏற்றுச் செலுத்தும் வானவர்கள் வாழ்க. வேள்வி, வழிபாடு இவற்றிற்குரிய பஞ்ச கௌவியங்களையும், திருநீற்றினையும் அளிக்கும் பசுக்கூட்டங்கள் வாழ்க. வேள்வியின் பயனால் குளிர்ந்த மழை பொழிக. சிவாலய பூசை முதலியவற்றை அழியாது காத்து வரும் மன்னனின் செங்கோலாட்சி ஓங்குக. வேள்விகளால் வரும் நலங்களை அடைய வொட்டாது கேடுவிளைவிக்கும் அயனெறிகளிலுள்ள தீயவை ஆழ்க.

**3373.** அரிய காட்சிய ராய்த்தம தங்கைசேர்
எரிய ரேறுகந் தேறுவர் கண்டமும்
கரியர் காடுறை வாழ்க்கைய ராயினும்
பெரிய ராரறி வாரவர் பெற்றியே. **2**

பாச ஞானத்தாலும், பசு ஞானத்தாலும் காண்பதற்கு அரியவர். பதிஞானத்தால் உணரும் மெய்யன்புடைய அடியவர்க்கு அவர் திருமேனி தரித்து வந்து, நெருப்பேந்திய கையர், ஏறுகந்தேறுவர், கண்டமும் கரியவர், காடுறை வாழ்க்கையராய் எளிதிற்காட்சி அருளுவர். ஆயினும் உலகத்தையே தம் வடிவமாகக் கொண்ட பெரியவர். அவருடைய தன்மையை யாவரால் அறிந்து கொள்ள முடியும் ?

---

1. அரிய காட்சியர்
2. அங்கைசேர் எரியர்
3. ஏறு உகந்தேறுவர்
4. கண்டமும் கரியர்
5. காடுறை வாழ்க்கையர்
6. பெரியர்

முன் அரிய காட்சியர் என்றார், பின்னர் எரியர் முதலிய சில அடையாளங்களால் அறியப்படும் நிலை கூறினார். அவற்றுள் அடங்காது நிற்கும் பெருநிலையையும் கூறினார். இவற்றுள் முடிந்து விடுமோ அவர் நிலை என்னில் அன்று, யாவர்தான் அவர் பெற்றி முழுதும் அளந்தரிய வல்லவர் என வினவினால் உறுதிப்பட எவராலும் இயலாது என்று நினைவு செய்து அருளினார். உரிய அன்பினில் காண்பவர் காணும் சில அடையாளங்களால் அன்றி அவர் தன்மையை முழுதும் அறியவல்லவர் எவருமில்லர். இவர் தன்மை யாரறிவார் ? என்று பாட்டுதோறும் வரும் பல்லவனீச்சுரப் பதிகத்தை நினைவு கூர்வோமாக.

**3374.** வெந்த சாம்பல் **விரை**யனெப் பூசியே
தந்தை யாரொடு தாயிலர் தம்மையே
சிந்தியா வெழு வார்வினை தீர்ப்பரால்
எந்தை யாரவ ரெவ்வகையார் கொலோ. **3**

இறைவன் வெந்த சாம்பலை வாசனைப் பொடியெனப் பூசியவர். தந்தையும், தாயுமில்லாதவர். தம்மை இடையறாது சிந்திப்பவர்கள் வினையைத் தீர்ப்பவர். அத்தகைய எம் தந்தையாரான அவரின் பண்புகளை எவ்வகைக் கூற்றால் கூறுவது.

---

விரை – மணம். கலவைச் சாந்து. "சுண்ண வெண் சந்தனச் சாந்து" தேவாரம். "சாந்தமும் திருநீறு" திருவிசைப்பா. சிவதருமம் பல. அவற்றுள்ளே சிறந்தது பூசனை. அப்பூசனையுட் செய்யப்படும் உபச்சாரங்களுள் சிறந்தன ஐந்து அங்கங்கள். அவையாவன அபிடேகம், விரை, விளக்கு, அருச்சனை, நிவேதனம் என்பன. அவற்றுள் விரையாவது இலேபனமும், சுகந்தமுமென்று இருவகைப்படும். அவற்றுள் இலேபனமாவது பனிநீர், பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ, கோரோசனை, கஸ்தூரியும் கலந்த சந்தனத்தை அபிடேகம் முடிந்த பின் செறிவாகச் சாத்துதல், சுகந்தமாவது முல்லை, இருவாட்சி, பிச்சி, மல்லிகை, பனிநீர், மருக்கொழுந்து, வெட்டிவேர் என்னும் ஏழினையும் தொடுத்துத் திருவுரு தெரியாவண்ணம் அலங்கரித்தல் எனவரும் ஆகம விதிகளால் தெரிந்து கொள்ளலாம்.

> சிவதருமம் பல; அவற்றுட் சிறந்தது பூசனை; அதனுள்
> அவமில் பல உபச்சாரத்தைந்து சிறந்தனவற்றைத்
> தவமலியப் பதினாறு மண்டலந் தண்டாதி யற்றிற்
> கவலையறப் பயனிம்மைப் பிறப்பிடையேகை கூடும் **28**

ஆங்கவை தாமபிடேக மரியவிரை விளக்குமனுத்
தாங்கு மருச் சனை நிவேதனமாகும். 29

விரை யிரண்டாந் தளராத விலேபனமுந்
தயங்கு சுகந்தமுமென்ன 33

காசில் பனி நீர்ப் பச்சை கருப்பூரங் குங்குமப்பூ
மாசிலு ரோசனை புழுகு மான் மதநாவியு கலந்த
வாசிசந்த மலாக்காச் சந்தன மிலே பனமதனைத்
தேசவிருந்திருமேனி முழுதுஞ் செறிதரக் கொட்டல் 34

எனவரும் பேரூர்ப்புராணம் மருத வரைப்படலத்தில் காணலாம்.

சங்கரா தொலைக்காட்சி நிகழ்ச்சியில் பெரும்பாலும் இரவு 9.00 மணிக்கு சிருங்கேரி சங்கர மடத்தில் மகாசந்நிதானம் தம் கைகளால் செய்யும் சந்திர மௌலீஸ்வர பூசையைக் காணலாம். அவர் அபிடேகம் முடிந்ததும் இவ்வாறு சந்தனச் சாந்தால் சிவலிங்கம் முழுவதையும் செறிவாகச் சாத்தி உருவம் பொறித்த மூடியும் இட்டு மூடிவிடுவர். அதன்மேல் சுகந்தங்களை இட்டு அலங்காரம் செய்வார்.

3375. ஆட்பா லவர்க்கருளும் வண்ணமு மாதி மாண்பும்
கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா
கோட்பா லனவும் வினையுங் குறுகாமை யெந்தை
தாட்பால் வணங்கித் தலைநின் றிவைகேட்க
தக்கார். 4

இறைவன் பக்குவமுடைய உயிர்கட்கு அருள்புரிகின்ற தன்மையும், பழமை வாய்ந்த புகழ்களும் கேட்கவும், சொல்லவும் தொடங்கினால் அளவில்லாதன. ஆதலால் அவை பற்றிய ஆராய்ச்சி வேண்டா. எம் தந்தையாகிய இறைவனின் திருவடிகளைச் சார்ந்து வணங்கி அவன் புகழ்களைக் கேட்கும் அடியவர்கட்குக் கோள்களாலும், தீயவினைகளாலும் துன்பம் உண்டாகாது.

ஆட்பாலவர் – ஆளாகும் பான்மையுட்பட்டவர்.

## ஆட்பாலருக்கு எப்படி அருளுவார்?

நாமெல்லாம் அறிந்தபடி உயிர்கள் ஒரு மலமுடைய விஞ்ஞானகலர். இருமலமுடைய பிரளாயகலர், மும்மலமுடைய சகலர் என மூவகைப்படுவர். இவர்களில்

1. விஞ்ஞானகலருக்கு தன்மையில் உணர்த்துவார் (மெய்ஞ்ஞானம் தானே விளையும்).
2. பிரளாயகலருக்கு முன்னிலையில் வந்து மான், மழு, நாற்றோள், நீலகண்டம் முதலிய உருவங்காட்டி அருளுவார். (ஞானசம்பந்தருக்கு அருளியது) இவையிரண்டும் தமது வடிவேயன்றி பிறிதொரு வடிவம் ஆதாரமாக நின்று செய்யாமையின் நிராதாரமெனப்படும்.
3. சகலருக்கு (நம் போன்றவருக்கு) பிறிதொரு மானுட வடிவத்தை குரு என ஆதாரமாகக் கொண்டு உபதேச முகத்தால் அருளுதல். இது சாதாரம் எனப்படும் இக்குருவடிவமும் அவரவர் தன்மைக்கேற்ப பல வகைப்படும்.

கோட்பால் – குற்றப்பகுதிகள்

கோட்பாலவும் – கிரகங்களின் பாற்பட்டு விளையும் விளைவுகள் என்றும், ஆண்டவன் தாளடைந்து கோளாலும், வினையாலும் விளையும் கெடுதல்கள் குறுகி இடர்ப்படுத்தாதவாறு முறையிட வேண்டியது உயிர்களின் கடமை என்றும் கொள்ளலாம்.

ஆட்பாலவருக்கு அருளும் வண்ணமும் ஆதி மாண்பும்

உயிர்களுக்கு இன்பஞ்செய்தற் பொருட்டேயாகும். சங்கரன் – இன்பஞ் செய்பவன்.

**3376.** ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண் மிக்கீரிறையே வந்து சார்மின்களே. **5**

இறைவனை அன்பால் வழிபடும் ஞானிகளே! அனுமானப் பிரமாணத்தாலும் உரையளவையாலும் இறைவனை மிகுதியாகச் சோதிக்க வேண்டா. அவன் ஊனக்கண் கொண்டு நோக்கப்புறத்தே சோதி வடிவமாகவும், அன்போடு கூடி அகத்தால் ஞானக்கண் கொண்டு நோக்க உள்ளொளியாகவும் விளங்குபவன். அவனை விரைவில் வந்து சார்ந்து, மனம் ஒன்றி வழிபட்டுப் பிறவித் துன்பத்தைப் போக்கிக் கொள்ளுங்கள். இறைவன் அளவைகளால் அறியப்படும் ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டவன்.

---

ஏதுக்களால் சோதித்தல் – அநுமானப் பிரமாணத்தால் அறிதல்
எடுத்த மொழியாற் சோதித்தல் – உரையளவையாற் சோதித்து அறிதல்

---

**3377.** ஆடும் மெனவும் மருங்கூற்ற முதைத்து வேதம்
பாடும் மெனவும் புகழல்லது பாவநீங்கக்
கேடும் பிறப்பும் மறுக்கும் மெனக்கேட் டீராகில்
நாடுந் திறத்தார்க் கருளல்லது நாட்ட லாமே. **6**

இறைவன் திருநடனம் புரிவதும், மார்க்கண்டேயருக்காகக் காலனைக் காலால் உதைத்ததும், வேதங்களை அருளிச் செய்ததும் ஆகிய செயல்கள் புகழ் கருதியா, மன்னுயிர்களின் தீவினைகளை நீக்குவதற்கா, பிறப்பை அறுத்துப் பிறவா நெறியை அளிப்பதற்கா என்று கேட்பீராயின், இவை தன்னைச் சார்ந்த அடியார்கட்கு அருள் செய்வதற்கேயன்றி வேறு காரணத்தாலல்ல என்று உறுதியாகக் கூறலாம். இறைவன் உயிர்களிடத்துக் கொண்ட அளப்பருங் கருணையே அவன் செயல்கட்குக் காரணம்.

---

**3378.** கடிசேர்ந்த போது மலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத் தாதை பண்டு
முடிசேர்ந்த காலையற வெட்டிட முக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ணம் மறிவார் சொலக்கேட்டு மன்றே.

சண்டீசர் நறுமணமுடைய மலர்களைத் தூவிப் போற்றி, நல்ல பசுவின் பால் கொண்டு மணலாலான சிவலிங்கத்திற்குத் திருமுழுக்காட்டத் தந்தை கோபம் கொண்டு காலால் இடற, சிவ பூசைக்கு இடையூறு செய்த கால் மீது அருகிலுள்ள கோலை எடுத்து ஒச்ச, அது மழுவாக மாறிக் காலை வெட்டினாலும், முக்கண் மூர்த்தியான சிவபெருமான் அவ்வடியவருக்குத் திருவடிப்பேற்றினை அளித்தருளியதை அறிவு சால் அன்பர்கள் அன்றே சொல்லக் கேட்டோம் அல்லமோ?

---

அரனடிக்கு அன்பர் செய்யும் பாவமும் அறமதாகும்.
பரனடிக்கு அன்பிலார் செய் புண்ணியம் பாவமாகும்.
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி
நரரினில் பாலன் செய்த பாதகம் நன்மையாய்த்தே.
– சித்தியார் சுபக்கம் 29.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **3379.** வேத முதல்வன் முதலாக விளங்கி வையம்<br>ஏதப் படாமை யுலகத்தவ ரேத்தல் செய்யப்<br>பூத முதல்வன் முதலே முதலாப் பொலிந்த<br>சூத னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே. 8 | வேதத்தை அருளிச் செய்தவனாய், வேதப் பொருளாகவும் விளங்கும் சிவபெருமானை முதல்வனாகக் கொண்டு, குற்றம் செய்யாது நன்னெறியில் நிற்கும் பொருட்டு உலகத்தோர் அவனைப் போற்றிசைக்க, பூத நாயகனான அவனைப் போற்றிச் சூதமுனிவர் அருளிச்செய்த பதினெட்டு புராணங்களும் ஒழுக்கத்தைப் போதிப்பனவாகும். |
| **3380.** பாராழி வட்டம் பகையா னலிந்தாட்ட வாடிப்<br>பேராழி யானதிடர் கண்டருள் செய்தல் பேணி<br>நீராழி விட்டேறி நெஞ்சிடங் கொண்ட வர்க்குப்<br>போராழி யீந்த புகழும் புகழுற்ற தன்றே. 9 | கடல்போல் பெருகியுள்ள இப்பூவுலக மக்கள் பகைவர்களால் நலிவுறுத்தி அலைக்கப்பட, அவர்கள் துன்பத்தை அறிந்து அருள் செய்ய விரும்பி, தான் கண்துயிலும் கடலைவிட்டுப் பூமிக்கு வந்து, தம்மைத் தன்நெஞ்சிடமாகக் கொண்ட திருமாலுக்கு அவர் வேண்டுகோளுக்கிணங்கக் காத்தல் தொழில் நன்கு நிகழப் பேராற்றல் மிகுந்த சக்கராயுதப் படையைச் சிவபெருமான் ஈந்தது மெய்யான புகழ் அன்றோ ? |
| **3381.** மாலா யவனும் மறைவல்ல நான்மு கனும்<br>பாலாய தேவர் பகரில் லமு தூட்டல் பேணிக்<br>காலாய முந்நீர் கடைந்தார்க் கரிதா யெழுந்த<br>ஆலால முண்டங்கம ரர்க்கருள் செய்த தாமே. 10 | திருமாலும், நான்மறைகளையும் நன்கு கற்ற பிரமனும், பலராகிய தேவர்களும் சொல்வதற்கரிய அமுதுண்ண விரும்பி, பாற்கடலைக் கடைய அரிதாய் எழுந்த ஆலகால விடத்தை உண்டு, தேவர்களைக் காத்து அருள்செய்தவர் சிவபெருமான். |
| **3382.** அற்றன்றி யந்தண் மதுரைத் தொகை யாக்கினானும்<br>தெற்றென்று தெய்வந் தெளியார் கரைக்கோலை தெண்ணீர்ப்<br>பற்றின்றிப் பாங்கெதிர்வி னூரவும் பண்பு நோக்கில்<br>பெற்றொன் றுயர்த்த பெருமான் பெருமானு மன்றே. 11 | சிவபெருமான் முன்னர்க்கூறிய புகழுரைகட்கு மட்டுமன்றி, மதுரையில் தமிழ்ச்சங்கம் அமைத்து தமிழ் வளர்த்தருளியவர். சிவபெருமானே முழுமுதற்பொருள் எனத் தெளிவு பெறாதவர்கள் தெளிவுபெறும் பொருட்டு வாதத்தில் உண்மை காண ஞானசம்பந்தர் இட்ட ஏடு பற்றற்ற சிவஞானிகளின் மனம் பிறவியாற்றை எதிர்த்துச் செல்வது போல, வையையாற்றை எதிர்த்துச் சென்ற தன்மையை நோக்கில், இடப வாகனத்தின் மீதேறிய சிவபெருமானே முழுமுதற்கடவுள் என்பது உண்மையாகும். ஆதலால் அவர்பால் அன்பு செய்தல் கடன் என்பது குறிப்பு. ஞானசம்பந்தர் சமணர்களோடு புனல்வாதம் செய்ததற்கும், அப்போது அவரிட்ட **ஏடு வையையாற்றை எதிர்த்துச் சென்ற அற்புத நிகழ்ச்சிக்கும் இப்பாடலே அகச்சான்றாகும்.** |

| | |
|---|---|
| **3383.** நல்லார்கள் சேர்புகலி ஞானசம் பந்தனல்ல<br>எல்லார்களும்பரவு மீசனை யேத்து பாடல்<br>பல்லார் களும் மதிக்கப் பாசுரஞ் சொன்ன பத்தும்<br>வல்லார்கள் வானோ ருலகாளவும் வல்ல ரன்றே. 12 | சிவஞானிகள் வாழ்கின்ற புகலி எனப்படும் சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன், மெய்யன்பர்களால் நன்கு வணங்கப்படும் சிவபெருமானைப் போற்றிப் பாடிய பாடல்கள் பலராலும் மதிக்கப்படும் திருப்பாசுரம் ஆகும். இதனை ஓத வல்லவர்கள் வானுலகை ஆளும் வல்லமை பெறுவர். |

## 4. பஞ்சமம்

இது பாலை யாழாகிய பெரும்பண்ணின் மூன்றாவது திறனாகிய உறுப்பு என்னும் திறனில் அகநிலைக்குரிய பண் 25 என்னும் எண்ணுடையது இதற்குத் தெய்வம் காமன் என்றும் சுவை நகையும் உவகையும் என்றும் இது முதுவேனிற் பருவத்துக்கு உரியதென்றும் சொல்லியுள்ளனர். இது மாலைக்குரிய பண் இதற்கு நேரான இராகம் ஆகிரி இதற்குக் கட்டளைகள் மூன்று. இப்பண்ணில் அப்பர் சுவாமிகள் பாடல் இல்லை ஏனை இருவரும் பாடியுள்ளனர். சம்பந்தர் 3:55–56 சுந்தரர் 96–100: ஆக 17 பதிகங்கள் சம்பந்தர் கண்பொலி நெற்றியினன், பைங்கோட்டு மலர்ப்புன்னை என்ற திருச்செங்காட்டங்குடிப் பதிகம், சுந்தரர் கடைசி நொடித்தான் மலைப்பதிகம். வெள்ளையானை மேல் கயிலாயம் சென்று பாடியது "தானெனை முன் படைத்தான்" என்பன இப்பண்ணில் அமைந்தனை.

மிகவும் சிறப்பாகச் சொல்லத்தக்கது திருவிசைப்பா இதிலடங்கிய 29 பதிகங்களில் 27 பதிகங்கள் பஞ்சமப் பண் (திருப்பல்லாண்டு உட்பட) திருவிசைப்பா பாடிய 9 ஆசிரியன்மாரும் பஞ்சமப் பண்ணில் பாடியிருக்கிறார்கள் என்பது இப்பண்ணுக்கு எல்லாரிடத்திலும் இருந்த ஈடுபாட்டைப் புலப்படுத்துகிறது. ஒன்பதாந் திருமுறையில் இறுதிப் பதிகமாகிய திருப்பல்லாண்டும் பஞ்சமப் பண்ணில்தான் அமைந்திருக்கிறது.

பஞ்சமத்துக்கு நேரான இராகம் ஆகிரி என்று சொன்னோம் ஆகிரி சம்பந்தமாக இசைவாணரிடையே ஒரு நம்பிக்கை நிலவுகிறது. ஆகிரி பாடினால் சோறு கிடைக்காது என்பது அவர்களிடை ஒரு பழமொழி. இதற்கு ஒரு கதையும் உண்டு. பண்டைக் காலத்தில் ஒரு சங்கீத வித்துவான் ஒரு சோற்று மூட்டையோடு வந்தார். அதை நன்றாய் வளைந்திருந்த ஒரு மூங்கிலில் கட்டித் தொங்கவிட்டார். கீழே வைத்தால் எறும்புகள் நாய் முதலியன தீண்டிவிடும் என்ற அச்சம் எதிரில் இருந்த ஆற்றில் நன்றாக நீராடி துணிகளைத் துவைத்து உலர்த்திவிட்டு ஜப தபங்களை முடித்துக்கொண்டு ஆனந்தமாய் ஆகிரி பாடிக்கொண்டு கரையேறிச் சோற்றுமூட்டையைத் தேடிவந்தார். மூங்கிலானது வெயில் வரவரத் தலைதூக்கி முழுமையும் நிமிர்ந்துவிட்டது. மூட்டை அதிக உயரம் போய்விட்டது. இவருக்கு எட்டவே இல்லை. மீண்டும் மூங்கில் வளையுமா ? வளையுமா, வளைவது எப்போது அதுவரையில் இவருக்குப் பசி தாங்குமா, மறுநாள் காலையில் அது பனி ஈரத்தில் வளைகிறவரையில் கட்டுச்சோறுதான் கெடாமல் இருக்குமா ? அது முதல் இந்த ஆகிரிப் பழமொழி வழங்கலாயிற்று.

### பஞ்சமப் பண்ணின் இலக்கணம்

நிரையசை நடுவாய் நிற்க இயற்சீர்
வெண்டளை யிரண்டி ரண்டாய் மருங்கின்
அமையச் செந்தூக் காக வந்தொடு
ஐம்பூதத்தின் அகத்திற் சமஞ்சமம்
ஆகநிற்கும் அக்கினி யென்னக்
காயுந் தன்மையால் காய்ச்சீர் சமமாய்ச்
சமய வந்த அமைவு பஞ்சமம்

பொருள்

பண் சமம் என்பது பஞ்சமம் ஆகிறது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம் பொறிகளும் சமமாம் ஒரு நிலை எய்தி இறையிடம் ஒன்றுவதை நுட்பமாக விளக்குவது பஞ்சமம். பாட்டின் ஒவ்வோர் அடியிலும் வரும் ஐந்து சீர்களிலும் நிரையசையாம் ஓரசைச்சீர் நடுவாக அமைந்திருக்க நிரையசைச் சீருக்கு முன்னுள்ள இரண்டு சீர்களும், பின்னுள்ள இரண்டு சீர்களும் இயற்சீர் வெண்டளை அமையும்படி நிற்றலால் இதன் தோற்றம் செந்தூக்காக வந்ததல்லாமல், ஐம்பூதங்களின் அகத்தும் நிறைந்துள்ள அக்கினிபோன்று எல்லாச் சீர்களின் நடுவில் காயுந்தன்மையுடைய காய்ச்சீர் சமமாகி நிற்றலால் இது பஞ்சமம் என்று பகரப் பெறுகிறது.

## 55. திருவான்மியூர்

பண் : பஞ்சமம் — பதிக எண் : 55

**3384.** விரையார் கொன்றையினாய் விடமுண்ட
மிடற்றினனே
உரையார் பல்புகழா யுமைநங்கையொர்
பங்குடையாய்
திரையார் தெண்கடல்சூழ் திருவான்மி
யூருறையும்
அரையா **வுன்னையல்லா லடையாதென
தாதரவே.** 1

உன்னையல்லால் அடையாதெனது ஆதரவே – பதிகத்தின் மகுடம்

நறுமணம் கமழும் கொன்றை மலரை அணிந்தவனே, விடமுண்ட கறுத்த கண்டத்தினனே, அடியவர்களால் பலவாகப் புகழ்ந்துரைக்கப்படுபவனே. உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவனே. அலைவீசும் அழகிய கடல் சூழ்ந்த திருவான்மியூரில் வீற்றிருந்தருளும் அரசனே! உன்னைத்தவிர என் மனம் ஆதரவாக வேறெதையும் அடையாது.

**3385.** இடியா ரேறுடையா யிமையோர்தம் மணிமுடியாய்
கொடியார் மாமதியோ டரவம்மலர்க்
கொன்றையினாய்
செடியார் மாதவிசூழ் திருவான்மி யூருறையும்
அடிகே ளுன்னையல்லா லடையாதென தாதரவே. 2

வான்மீகி முனிவர் வழிபட்டுப் பேறு பெற்ற தலமாதலால் வான்மியூர் என்னும் பெயர் எய்திற்று.

இடிபோல் முழங்கும் இடபத்தை வாகனமாக உடையவனே! தேவர்கள் தங்கள் மணிமுடி உன் திருப்பாதத்தில் படும்படி வணங்க அவர்கட்கு வாழ்வளிக்கும் முதற்பொருளே! இடபக்கொடியும், சந்திரனும், பாம்பும், கொன்றை மலரும் உடைய இறைவனே! செடிகளோடு கூடிய மாதவி மலரின் மணம் சூழ்ந்த திருவான்மியூரில் வீற்றிருந்தருளும் தலைவனான சிவபெருமானே! உன்னைத் தவிர என் மனம், ஆதரவாக வேறெதையும் அடையாது.

**3386.** கையார் வெண்மழுவா கனல்போற்றிரு மேனியனே
மையா ரொண்கணல்லா ளுமையாள்வளர்
மார்பினனே
செய்யார் செங்கயல்பாய் திருவான்மி யூருறையும்
ஐயா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 3

கையின்கண் பொருந்திய வெண்மையான மழுவாயுதத்தை உடையவனே! கனல் போன்ற சிவந்த திருமேனியனே! மை பூசப் பெற்ற, ஒளி பொருந்திய கண்களை உடைய நல்லவளாகிய உமையம்மை கண்வளரும் மார்பினனே! வயல்களில் செங்கயல்கள் பாயும் வளம் பொருந்திய திருவான்மியூரில் உறையும் ஐயனே! உன்னையல்லாமல் எனது அன்பு பிறிதொருவரை சென்றடையாது.

**3387.** பொன்போ லுஞ்சடைமேற் புனல்தாங்கிய
புண்ணியனே
மின்போ லும்புரிநூல் விடையேறிய வேதியனே
தென்பால் வையமெலாந் திகழுந்திரு
வான்மிதன்னில்
அன்பா வுன்னையல்லா லடையாதென தாதரவே. 4

பொன்போல் ஒளிரும் சடைமேல் கங்கையைத் தாங்கிய புண்ணியமூர்த்தியே! மின்போல் ஒளிரும் முப்புரிநூல் அணிந்து, இடப வாகனத்திலேறி, வேதங்களை அருளிச் செய்தவனாய், வேதப் பொருளாகவும் விளங்குபவனே! உலகெலாம் இன்புறத் திருவான்மியூர் என்னும் தலத்தில் வீற்றிருந்தருளும் அன்புருவான உன்னையல்லால் என் மனம் வேறெதையும் ஆதரவாக அடையாது.

---

**3388.** கண்ணா ருந்நுதுலாய் கதிர்சூழொளி
மேனியின்மேல்
எண்ணார் வெண்பொடிநீ றணிவாயெழில்
வார்பொழில்சூழ்
திண்ணார் வண்புரிசைத் திருவான்மி
யூருறையும்
அண்ணா வுன்னையல்லா லடையாதென
தாதரவே. 5

நெற்றிக்கண்ணை உடையவனே! கதிர்போல் ஒளிரும் திருமேனி மீது திருவெண்ணீற்றினை அணிந்துள்ளவனே! அழகிய சோலைகள் சூழ்ந்த உறுதியான மதில்களை உடைய திருவான்மியூரில் வீற்றிருந்தருளும் தந்தையே! உன்னையல்லால் என்மனம் வேறெதையும் ஆதரவாக அடையாது.

---

**3389.** நீதி நின்னையல்லா னெறியாது
நினைந்தறியேன்
ஓதீ நான்மறைகள் மறையோன்றலை
யொன்றினையும்
சேதீ சேதமில்லாத் திருவான்மி யூருறையும்
ஆதீ யுன்னையல்லா லடையாதென தாதரவே.
6

நீதி – ஓதி – சேதீ – ஆதீ – நான்கும் பெயர்கள் விளியுருபேற்று நீண்டன.

நீதிவடிவாயுள்ளவனே! உன்னையே நினைப்பதல்லாமல் உன்னை வழிபடுதற்குரிய நெறி வேறொன்றை அறிந்திலேன். நால் வேதங்களை அருளிச் செய்தவனே! பிரமன் தலை ஒன்றை நகத்தால் கிள்ளியவனே! எத்தகைய குறைவுமின்றி வளம் பொருந்திய திருவான்மியூரில் வீற்றிருந்தருளும் ஆதிமூர்த்தியே! உன்னையல்லால் என்மனம் வேறெதையும் ஆதரவாக அடையாது.

---

**3390.** வானார் மாமதிசேர் சடையாய்வரை போலவரும்
கானா ரானையின்றோ லுரித்தாய்கறை
மாமிடற்றாய்
தேனார் சோலைகள்சூழ் திருவான்மி யூருறையும்
ஆனா யுன்னையல்லா லடையாதென
தாதரவே.
7

XXXXXXXXXXXXXXXXXXXXXXX 8

வானில் விளங்கும் சந்திரனைச் சடையில் தரித்தவனே! மலைபோல வரும் காட்டிலுள்ள யானையின் தோலை உரித்தவனே! நஞ்சுண்டு கறுத்த கண்டத்தையுடையவனே! தேன் துளிர்க்கும் மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருவான்மியூரில் இடப வாகனத்தில் வீற்றிருந்தருளும் இறைவனே! உன்னையல்லால் என்மனம் வேறெதையும் ஆதரவாக அடையாது.

| | |
|---|---|
| **3391.** பொறிவாய் நாகணையா னொடுபூமிசை மேயவனும்<br>நெறியார் நீள்கழன்மேன் முடிகாண்பரி தாயவனே<br>செறிவார் மாமதில்சூழ் திருவான்மி யூருறையும்<br>அறிவே யுன்னையல்லால் லடையாதென தாதரவே. **9** | நெருப்புப் பொறிபோல் விடம் கக்கும் வாயுடைய பாம்பைப் படுக்கையாகக் கொண்ட திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், நன்னெறி காட்டும் உனது நீண்ட திருவடியையும், மேலோங்கும் திருமுடியையும் காண்பதற்கு அரியவனாய் விளங்கியவனே! நெருக்கமாக நீண்ட பெரிய மதில்கள் சூழ்ந்த திருவான்மியூரில் வீற்றிருந்தருளும் முற்றுணர்வும், இயற்கை உணர்வு முடையவனே! உன்னையல்லால் என் மனம் வேறெதையும் ஆதரவாக அடையாது. |
| **3392.** குண்டா டுஞ்சமணர் கொடுஞ்சாக்கிய ரென்றிவர்கள்<br>கண்டார் காரணங்கள் கருதாதவர் பேசநின்றாய்<br>திண்டேர் வீதியதார் திருவான்மி யூருறையும்<br>அண்டா வுன்னையல்லா லடையாதென தாதரவே. **10** | விதண்டாவாதம் செய்கின்ற சமணர்களும், முரட்டுத் தன்மையுடைய புத்தர்களும் காரணம் அறியாதவராய் உன்னைப் பேச வீற்றிருந்தாய். வலிமை வாய்ந்த தேரோடும் வீதிகளையுடைய திருவான்மீயூரில் வீற்றிருந்தருளும் தேவனே! உன்னையல்லால் என் மனமானது ஆதரவாக வேறெதையும் நாடாது. |
| **3393.** கன்றா ருங்கமுகின் வயல்சூழ்தரு காழிதனில்<br>நன்றான புகழான் மிகுஞானசம் பந்தனுரை<br>சென்றார் தம்மிடர்தீர் திருவான்மி யூரதன்மேல்<br>குன்றா தேத்தவல்லார் கொடுவல்வினை போயறுமே. **11** | பாக்குமரக் கன்றுகள் வயல்களைச் சூழ்ந்து விளங்குகின்ற சீகாழியில் அவதரித்து, நல்ல புகழ் மிகுந்த ஞானசம்பந்தன், இடர் தீர்க்கும் திருவான்மியூரின் மேல் போற்றி அருளிய இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கட்குக் கொடிய தீவினையானது நீங்கும். |

## 56. திருப்பிரமபுரம்

**பண் : பஞ்சமம்** **பதிக எண் : 56**

| | |
|---|---|
| **3394.** இறையவ னீசனெந்தை யிமை யோர்தொழு தேத்தநின்ற<br>கறையணி கண்டன்வெண்டோ டணி காதினன் காலத்தன்று<br>மறைமொழி வாய்மையினான் மலையா ளொடு மன்னுசென்னிப்<br>பிறையணி செஞ்சடையான் பிர மாபுரம் பேணுமினே. **1** | இறைவன், ஈசன், எம் தந்தை என்று வானவர்கள் தொழுது போற்ற நின்று, நஞ்சுண்ட கறுத்த கண்டத்தினன். சங்கினாலாகிய குழையணிந்த காதினையுடையவன். அக்காலத்தில் வேதத்தின் பொருளை உபதேசித்தருளியவன். மலைமகளான உமாதேவியோடு தலையில் பிறைச்சந்திரனை அணிந்த சிவந்த சடையுடைய அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுவீர்களாக! |

| | |
|---|---|
| **3395.** சடையினன் சாமவேதன் சரி கோவண வன்மழுவாட்<br>படையினன் பாய்புலித்தோ லுடை யான்மறை பல்கலைநூல்<br>உடையவ னூனமில்லி யுட னாயுமை நங்கையென்னும்<br>பெடையொடும் பேணுமிடம் பிர மாபுரம் பேணுமினே. 2 | இறைவன் சடைமுடியுடையவன். சாமவேதத்தில் விருப்பமுடையவன். சரிந்த கோவண ஆடையை அணிந்தவன். மழுவாகிய படை உடையவன். பாயும் புலியின் தோலை உடையவன். வேதம் முதலான பல கலைநூல்களில் கூறப்படும் தலைவன். எத்தகைய குறைபாடும் இல்லாத அவன், உமாதேவியோடு விரும்பி வீற்றிருந் தருளுமிடமான திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுவீர்களாக! |
| **3396.** மாணியை நாடுகால னுயிர் மாய்தரச் செற்றுக்காளி<br>காணிய வாடல்கொண்டான் கலந் தூர்வழி சென்றுபிச்சை<br>ஊணியல் பாகக்கொண்டங் குட னேயுமை நங்கையொடும்<br>பேணிய கோயின்மன்னும் பிர மாபுரம் பேணுமினே. 3 | இறைவன் பிரமசாரியான மார்க்கண்டேயரின் உயிரைக் கவரவந்த காலனின் உயிரை மாய்த்தவன். காளிதேவி காணுமாறு திருநடனம் புரிந்தவன். பிரமகபாலத்தைக் கையிலேந்தி ஊர்தோறும் சென்று பிச்சையேற்று உண்ணுதலை இயல்பாகக் கொண்டவன். அப்பெருமான் உமாதேவியோடு விரும்பி வீற்றிருந்தருளும் கோயிலாக நிலைபெற்றுள்ள திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுவீர்களாக. |
| **3397.** பாரிடம் விண்ணுமெங்கும் பயி னஞ்சு பரந்துமிண்டப்<br>பேரிடர்த் தேவர்கணம் பெரு மானிது காவெனலும்<br>ஓரிடத் தேகரந்தங் குமை நங்கையொ டும்முடனே<br>பேரிட மாகக்கொண்ட பிர மாபுரம் பேணுமினே. 4 | நிலவுலகிலும், விண்ணுலகிலும் எங்கும் பயின்ற விடமானது பரவிப் பெருக, அதனால் பெருந்துன்பத்திற்குட்பட்ட தேவர்கள் அனைவரும், "பெருமானே! காப்பாற்று வீர்களாக" என்று பிரார்த்திக்க, அவ்விடத்தைக் கண்டத்தில் கரந்து அருள்புரிந்த அப்பெருமான் உமாதேவியோடு வீற்றிருந்தருளுகின்ற பெருமை மிகுந்த திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுவீர்களாக. |
| **3398.** நச்சர வச்சடைமே னளிர் திங்களு மொன்றவைத்தங்<br>கச்ச மெழவிடைமே லழ கார்மழு வேந்திநல்ல<br>இச்சை பகர்ந்துமிக விடு மின்பலி யென்றுநாளும்<br>பிச்சைகொ ளண்ணனண்ணும் பிர மாபுரம் பேணுமினே. 5 | இறைவன் விடம் பொருந்திய பாம்பைச் சடைமுடியில் தரித்து, குளிர்ச்சி பொருந்திய சந்திரனையும் அதனுடன் ஒன்றி இருக்குமாறு செய்தவன். அழகிய இடபவாகனத்தின் மீது அமர்ந்து அச்சம் தரும் மழுப்படையை ஏந்தியவன். இன்மொழிகள் பேசி 'மிக இடுங்கள்' என்று நாள்தோறும் பிச்சை ஏற்கும் தலைவனாகிய சிவபெருமான் வீற்றிருந் தருளும் திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுவீர்களாக! |

| | |
|---|---|
| **3399.** பெற்றவன் முப்புரங்கள் பிழை யாவண்ணம் வாளியினாற்<br>செற்றவன் செஞ்சடையிற் றிகழ் கங்கை தனைத்தரித்திட்<br>டொற்றை விடையினனா யுமை நங்கையொ டும்முடனே<br>பெற்றிமை யாலிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. 6 | இறைவன் திரிபுர அசுரர்கள் தவத்தினால் பெற்ற வலிய மூன்று புரங்களையும் தப்பாவண்ணம் ஓரம்பினால் அழித்தவன். சிவந்த சடையில் அழகிய கங்கையைத் தரித்தவன். ஒற்றை இடபவாகனம் ஏறினவன். உமாதேவியோடு அவன் வீற்றிருந்தருளும் பெருமையுடைய திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுவீர்களாக! |
| **3400.** வேத மலிந்தவொலி விழ வின்னொலி வீணையொலி<br>கீத மலிந்துடனே கிள ரத்திகழ் பௌவமறை<br>ஓத மலிந்துயர்வான் முக டேறவொண் மால்வரையான்<br>பேதையொ டும்மிருந்தான் பிர மாபுரம் பேணுமினே. 7 | வேதங்களை ஓதுகின்ற ஒலி, வீணையின் இன்னொலி, கீதஒலி இவை ஒருசேர எழுந்த கடல்ஓசையை அடக்குமாறு, வானத்தின் உச்சியை அடைவதாய் உள்ள, ஒளி பொருந்திய பெரிய கயிலைமலையானாகிய சிவபெருமான் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுங்கள். |
| **3401.** இமையவ ரஞ்சியோட வெதிர் வாரவர் தம்மையின்றி<br>அமைதரு வல்லரக்கன் னடர்த் துமலை யன்றெடுப்பக்<br>குமையது செய்துபாடக் கொற்ற வாளொடு நாள்கொடுத்திட்<br>டுமையொ டிருந்தபிரான் பிர மாபுர முன்னுமினே. 8 | தேவர்கள் அஞ்சியோடத் தன்னை எதிர்ப்பவர் யாருமில்லாது அமைந்த வல்லசுரனாகிய இராவணன் பண்டைக் காலத்தில் கயிலையைப் பெயர்த்து எடுக்க, சிவபெருமான் தன் காற்பெருவிரலை ஊன்றி அவன் அம்மலைக் கீழ் நசுங்கும்படி துன்பம் செய்து, பின் அவன் தவறுணர்ந்து சாமகானம் பாடித் துதிக்க, அவனுக்கு வெற்றிதரும் வாளொடு, நீண்ட வாழ்நாளும் கொடுத்து அருள்செய்து, உமாதேவியாரோடு வீற்றிருந்தருளும் திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுங்கள். |
| **3402.** ஞால மளித்தவனும் மரி யும்மடி யோடுமுடி<br>காலம் பலசெலவுங் கண்டி லாமையி னாற்கதறி<br>ஓல மிடவருளி யுமை நங்கையொ டும்முடனாய்<br>ஏல விருந்தபிரான் பிர மாபுர மேத்துமினே. 9 | இப்பூவுலகைப் படைத்த பிரமனும், திருமாலும், பலகாலம் இறைவனுடைய அடிமுடியைத் தேடி அலைந்து காண முடியாது கதறி ஓலமிட அவர்கட்கு அருள்புரிந்த அச்சிவபெருமான் உமாதேவியை உடனாகக் கொண்டு வீற்றிருந்தருளும் திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுங்கள். |

| | |
|---|---|
| 3403. துவருறு மாடையினார் தொக்க பீலியர் நக்கரையர்<br>அவரவர் தன்மைகள்கண் டணு கேன்மின் னருள்பெறுவீர்<br>கவருறு சிந்தையொன்றிக் கழி காலமெல் லாம்படைத்த<br>இவரவ ரென்றிறைஞ்சிப் பிர மாபுர மேத்துமினே. 10 | மஞ்சட்காவி ஊட்டப்பட்ட ஆடையணிந்த புத்தர்களும், தொகுத்துக் கட்டிய மயிற்பீலியைக் கையிலேந்தியவராய், ஆடையில்லாத இடையையுடைய சமணர் களும், இறையுண்மையை அறியாதவர் களாதலால் அவர்களை அணுகாதீர். திருவருள் பெற விரும்பும் அடியார்களே! ஐயம் பல நிறைந்த மனத்தை ஒருமுகப்படுத்தி, சென்ற காலம் முதலிய எல்லாக் காலத்தையும் படைத்த முழுமுதற்கடவுள் சிவபெருமான் என்று வணங்கி, அப்பெருமான் வீற்றிருந்தருளும் திருப்பிரமாபுரம் என்னும் திருத்தலத்தைப் போற்றி வழிபடுங்கள். |
| 3404. உரைதரு நான்மறையோர் புகழ்ந் தேத்தவொண் மாதினொடும்<br>வரையென வீற்றிருந்தான் மலி கின்ற பிரமபுரத்<br>தரசினை யேத்தவல்ல வணி சம்பந்தன் பத்தும்வல்லார்<br>விரைதரு விண்ணுலகம் மெதிர் கொள்ள விரும்புவரே. 11 | சிவபெருமானது பெருமையை உரைக்கும் நான்கு வேதங்களையும் பயின்றவர்கள் அப்பெருமைகளைப் புகழ்ந்து போற்ற, அழகிய உமாதேவியோடு மலைபோன்று உறுதிப் பொருளாக விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற பிரமாபுரத்தில் அருளாட்சியைப் போற்றி ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர் களை நறுமணம் கமழும் விண்ணுலகத்துத் தேவர்கள் எதிர்கொண்டழைத்துச் செல்ல விரும்புவர். |

## 57. திருவொற்றியூர் ( விலக்கு அளிக்கப்பட்ட ஊர் )

பண் : பஞ்சமம் பதிக எண் : 57

| | |
|---|---|
| 3405. விடையவன் விண்ணுமண்ணுந் தொழ நின்றவன் வெண்மழுவாட்<br>படையவன் பாய்புலித்தோ லுடை கோவணம் பல் கரந்தைச்<br>சடையவன் சாமவேதன் சசி தங்கிய சங்கவெண்டோ<br>டுடையவன் னூனமில்லி யுறை யும்மிட மொற்றியூரே.<br><br>பஞ்சம் ஏற்பட்ட காலத்தில் சோழமன்னன் எல்லாத் தலங்களின் படித்தரத்தையும் குறைத்தனுப்பிய கட்டளை ஓலையில் இவ்வூர் இறைவன் ஒருவரும் அறியாதபடி "ஒற்றியூர் நீங்கலாக மற்றையூர்க்கிக் கட்டளை'' என்று எழுதியபடியால் இறைவன் எழுத்தறியும் பெருமான் எனப்படுகிறார். திருஇன்னம்பூரில் இருப்பவர் எழுந்தறிநாதன். | சிவபெருமான் இடப வாகனத்தை உடையவன். விண்ணுளோரும், இம்மண்ணுலக மாந்தரும் தொழுது போற்ற விளங்குபவன். கறைபடியாத மழுப்படை உடையவன். பாயும் புலித்தோலுடையும், கோவணமும் உடையவன். பலவிதமான மலர்களைச் சடையில் அணிந்தவன். சாமகானப் பிரியன். சந்திரனைச் சடையில் தாங்கி, சங்கினால் ஆகிய வெண்மையான தோடு என்னும் காதணி அணிந்தவன். குறைவில்லாத அப்பெருமான் தன்னை வழிபடும் அடியவர்களின் ஊனமாகக் கருதப்படும் குற்றம் குறைகளைக் களைந்து வீற்றிருந்தருளும் இடம் திருவொற்றியூர் என்னும் திருத்தலம் ஆகும். |

3406. பாரிடம் பாணிசெய்யப் பறைக் கட்செறு
பல்கணப்பேய்
சீரொடும் பாடலாட லில யஞ்சிதை
யாதகொள்கைத்
தாரிடும் போர்விடையன் றலைவன்றலை
யேகலனா
ஊரிடும் பிச்சைகொள்வா னுறை யும்மிட
மொற்றியூரே. 2

கலியநாயனார் அவதாரத்தலம். சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலியாரை மணந்த தலம்.

பூதகணங்கள் பண்ணிசைத்துப் பாட, பறைகள் கொட்ட, கண்டாரைக் கொல்லவல்ல பல்வேறு பேய்க்கணங்கள் தாளத்தோடு இலயம் கெடாதவாறு பாடி ஆடத் திருநடனம் புரிபவன். கிண்கிணிமாலை அணிந்த போர்செய்யும் தன்மையுடைய இடப வாகனத்தில் வீற்றிருந்தருளும் தலைவன். பிரமகபாலத்தை உண்கலனாகக் கொண்டு ஊர்தோறும் திரிந்து பிச்சை ஏற்பவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது திருவொற்றியூர் என்னும் திருத்தலம் ஆகும்.

3407. விளிதரு நீருமண்ணும் விசும் போடனல்
காலுமாகி
அளிதரு பேரருளா னர னாகிய வாதிமூர்த்தி
களிதரு வண்டு பண்செய் கமழ் கொன்றையி
னோடணிந்த
ஒளிதரு வெண்பிறையா னுறை யும்மிட
மொற்றியூரே. 3

உபமன்யு முனிவரிடத்தில் சிவதீக்கை பெற்றுத் தம்மை வழிபட்ட வாசுகியை இறைவர் தம் திருமேனியில் ஐக்கியம் செய்துகொண்டதால் படம்பக்கநாதர் எனப்படுகிறார்.

ஓசையுடன் பாயும் நீர், நிலம், ஆகாயம், நெருப்பு, காற்றுமாகி, மன்னுயிர்களைக் காக்கும் பெருங்கருணையாளன் ஆகிய சங்கார கர்த்தாவாகிய சிவபெருமானே உலகத் தோற்றத்திற்கும் நிமித்த காரணனாவான். மலர்களிலுள்ள தேனைப் பருகிய மகிழ்ச்சியில் வண்டுகள் பண்ணிசைக்கும் நறுமணம் கமழும் கொன்றை மாலையோடு ஒளிரும் வெண்பிறைச் சந்திரனையும் சடையில் அணிந்த அச்சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருவொற்றியூர் என்னும் திருத்தலமாகும்.

3408. அரவமே கச்சதாக வசைத் தானலர்
கொன்றையந்தார்
விரவிவெண் ணூல்கிடந்த விரை யார்வரை
மார்பனெந்தை
பரவுவார் பாவமெல்லாம் பறைத் துப்படர்
புன்சடைமேல்
உரவுநீ ரேற்றபெம்மா னுறை யும்மிட
மொற்றியூரே. 4

"உறையும் இடம் ஒற்றியூரே" பதிகத்தின் மகுடம்

சிவபெருமான் இடையிலே பாம்பைக் கச்சாக அணிந்தவர். கொன்றை மலர்மாலை அணிந்தவர். வெண்ணிற முப்புரி நூலணிந்து கலவைச் சாந்தணிந்த மலைபோன்ற மார்பை உடையவர். எம் தந்தையான அச் சிவபெருமான் தம்மை வணங்குவாரின் பாவத்தைப் போக்கிப் படர்ந்த சடையின் மேல் கங்கையைத் தாங்கியவர். அவர் வீற்றிருந்தருளும் இடம் திருவொற்றியூர் என்னும் திருத்தலம் ஆகும்.

**3409.** விலகினார் வெய்யபாவம் விதி யாலருள் செய்துநல்ல
பலகினார் மொந்தைதாளந் தகுணிச்சமும் பாணியாலே
அலகினால் வீசிநீர்கொண் டடி மேலல ரிட்டுமுட்டா
துலகினோ ரேத்தநின்றா னுறை யும்மிட மொற்றியூரே. 5

கொடிய பாவத்திலிருந்து விடுபட்ட பக்குவ ஆன்மாக்கட்கு, விதிப்படி அருள்செய்து, சிவபெருமான் நல்ல பலவகையான வாத்தியங்களான மொந்தை, தாளம், தகுணிச்சம் என்னும் ஒருவகை தோற்கருவி முதலியன ஒலிக்கப் பாட்டோடும், தாளத்தோடும் எண்தோள் வீசி நின்று ஆட, உலகத்தோர் அவன் திருவடியில் மலர்களைத் தூவி, தங்கள் வழிபாடு தடைப்படா வண்ணம் துதித்து வணங்க அவன் வீற்றிருந்தருளும் இடம் திருவொற்றியூர் என்னும் திருத்தலமாகும்.

இப்பதிகம் தலத்தின் புறத்தே தொண்டர்கள் தம்மை எதிர்கொண்டு வரவேற்றபோது பாடப்பட்டது.

**3410.** கமையொடு நின்றசீரான் கழ லுஞ்சிலம் புமொலிப்பச்
சுமையொடு மேலும்வைத்தான் விரி கொன்றையுஞ் சோமனையும்
அமையொடு நீண்டதிண்டோ ளழ காயபொற் றோடிலங்க
உமையொடுங் கூடிநின்றா னுறை யும்மிட மொற்றியூரே. 6

பொறுமையுடன் விளங்கும் தலைவனான சிவபெருமான், தன் திருவடிகளிலுள்ள கழலும், சிலம்பும் ஒலிக்கச் சடைமுடியில் மலர்ந்த கொன்றையையும், சந்திரனையும் தாங்கிய, நீண்ட வலிமையான தோளழகு உடையவன். காதில் பொன்னாலாகிய தோடு பிரகாசிக்க உமாதேவியோடு சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது திருவொற்றியூர் என்னும் திருத்தலம் ஆகும்.

**3411.** நன்றியால் வாழ்வதுள்ளம் முல குக்கொரு நன்மையாலே
கன்றினார் மும்மதிலுங் கரு மால்வரை யேசிலையாப்
பொன்றினார் வார் சுடலைப் பொடி நீறணிந் தாரழலம்
பொன்றினா லெய்தபெம்மா னுறை யும்மிட மொற்றியூரே. 7

உள்ளத்தில் பிறருக்கு உபகாரமாய் வாழ வேண்டும் என்பதை உலகிற்கு உணர்த்தச் சிவபெருமான், உலகத்தார்க்கு தீமை செய்த அசுரர்கள் வாழும் முப்புரங்களையும், பெருமை வாய்ந்த மேருமலையை வில்லாகக் கொண்டு அக்கினிக்கணை ஒன்றை எய்து அழித்தவர். நெடிய சுடலைப்பொடியாகிய நீற்றினை அணிந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவொற்றியூர் என்னும் திருத்தலமாகும்.

**3412.** பெற்றியாற் பித்தனொப்பான் பெரு மான்கரு மானுரிதோல்
சுற்றியான் சுத்திசூலஞ் சுடர்க் கண்ணுதன் மேல்விளங்கத்
தெற்றியாற் செற்றரக்கன் னுட லைச்செழு மால்வரைக்கீழ்
**ஒற்றியான் முற்றுமாள்வா னுறை** யும்மிட மொற்றியூரே. 8

பித்தனைப் போன்று விளங்கும் சிவபெருமான், செய்கையால் அறிவில் பெரியவனாவான். கலைமானின் தோலைச் சுற்றி உடுத்தவன். சுத்தி, சூலம் என்பன ஏந்தியவன். நெற்றிக்கண் உடையவன். கோபமுடைய அரக்கனான இராவணன் கயிலை மலையைப் பெயர்த்து எடுக்க, அவன் அம்மலையின்கீழ் நெரியுமாறு தன் காற்பெருவிரலை அழுத்தியவன். உலகம் முழுவதையும் ஆட்கொண்டருளும் அப்பெருமான் விற்றிருந்தருளும் இடமாவது திருவொற்றியூர் என்னும் திருத்தலமாகும்.

| | | |
|---|---|---|
| 3413. | திருவினார் போதினானுந் திரு மாலுமொர்<br>தெய்வமுன்னித்<br>தெரிவினாற் காணமாட்டார் திகழ் சேவடி<br>சிந்தை செய்து<br>பரவினார் பாவமெல்லாம் பறையப்படர்<br>பேரொளியோ<br>டொருவனாய் நின்றபெம்மா னுறை யும்மிட<br>மொற்றியூரே. 9 | இலக்குமி எழுந்தருளிய தாமரை மலரில் வீற்றிருந்தருளும் பிரமனும், திருமாலும் ஒப்பற்ற தெய்வத்தைக் காணவேண்டும் என நினைத்துத் தம் அறிவால் தேடிக் காணமாட்டாதவர் ஆயினர். சிவபெருமானின் சிவந்த திருவடிகளை மனத்தால் சிந்தித்து வழிபடுபவர்களின் பாவம் எல்லாம் அழியப் படர்ந்த பேரொளியோடு ஒப்பற்றவனாயிருந்த அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவொற்றியூர் என்னும் திருத்தலம் ஆகும். |
| 3414. | தோகையம்பீலிகொள்வார் துவர்க் கூறைகள்<br>போர்த்துழல்வார்<br>ஆகம செல்வனாரை யலர் தூற்றுதல்<br>காரணமாக்<br>கூகையம் மாக்கள்சொல்லைக் குறிக்<br>கொள்ளன்மி னேழுலகும்<br>ஓகைதந் தாளவல்லா னுறை யும்மிட<br>மொற்றியூரே. 10 | நடந்து செல்லும்போது எறும்பு முதலிய சிறு பூச்சிகள் மிதிபட்டு இறந்துவிடாதிருக்க மயில்தோகை ஏந்திப் பெருக்கிச் செல்லும் சமணர்களும், துவர் ஆடையைப் போர்த்திய புத்தர்களும், ஆகமம் அருளிய, ஆகம நெறியால் பூசிக்கப்படும் செல்வரான சிவபெருமானைப் பழித்துக் கூறுவதால், கோட்டான் போன்று ஐயறிவுடைய விலங்குகட்கு ஒப்பாவாராதலால் அவர்கள் கூறும் சொற்களைப் பொருளெனக் கொள்ள வேண்டா. ஏழுலகும் மகிழுமாறு ஆட்கொள்ள வல்ல சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவொற்றியூர் என்னும் திருத்தலமாகும். |
| 3415. | ஒண்பிறை மல்குசென்னி யிறை வன்னுறை<br>யொற்றியூரைச்<br>சண்பையர் தந்தலைவன் றமிழ் ஞானசம்<br>பந்தன்சொன்ன<br>பண்புனை பாடல்பத்தும் பர விப்பணிந்<br>தேத்தவல்லார்<br>விண்புனை மேலுலகம் விருப் பெய்துவர்<br>வீடெளிதே. 11 | ஒளிரும் பிறைச்சந்திரனைத் தலையில் சூடிய இறைவனான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருவொற்றியூரை, சண்பை என்று கூறப்படும் சீகாழியில் சிவம் பெருக்க அவதரித்த தலைவனான தமிழ் ஞானசம்பந்தன் அருளிய பண்ணோடு கூடிய இப்பாடல்கள் பத்தையும் ஓதி வழிபட வல்லவர்கள் விண்ணிலுள்ள சுவர்க்கலோகத்தை அடைந்து வீடுபேற்றை எளிதில் அடைவர். |

## 58. திருச்சாத்தமங்கை

பண் : பஞ்சமம் பதிக எண் : 58

3416. திருமலர்க் கொன்றைமாலை திளைக் கும்மதி சென்னிவைத்தீர்
இருமலர்க் கண்ணிதன்னோ டுட னாவது மேற்பதொன்றே
பெருமலர்ச் சோலைமேக முரிஞ் சும்பெருஞ் சாத்தமங்கை
அருமல ராதிமூர்த்தீ யய வந்தி யமர்ந்தவனே. 1

ஊர்ப்பெயர் – சாத்தமங்கை
கோயிலின் பெயர் – அயவந்தி
அம்மையின் பெயர் – இருமலர்க் கண்ணம்மை
திருநீலநக்கர் அவதாரத்தலம்
நிறைசெல்வத் திருசாத்தமங்கை என்பது சேக்கிழார் வாக்கு.

தெய்வத்தன்மை பொருந்திய கொன்றை மலர்களை மாலையாக அணிந்தவனும், சந்திரனைத் தலையில் தரித்தவனும், இரு தாமரை மலர் போன்ற கண்களையுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு, நறுமணம் பெருகும் மலர்கள் நிறைந்த சோலைகளிலுள்ள மரங்கள் மேகத்தை உராயும்படி விளங்கும் திருச்சாத்த மங்கை என்னும் திருத்தலத்தில், உலகிற்கு ஒப்பற்றவனாகி விளங்கும் ஆதிமூர்த்தியும் ஆகிய சிவபெருமான் அயவந்தி என்னும் திருக்கோயிலில் விற்றிருந்தருளுகின்றார். இத்தலத்தின் அம்பிகையின் திருப்பெயரான **இருமலர்க் கண்ணம்மை** என்பது இப்பாடலில் உணர்த்தப்படுகின்றது.

3417. பொடிதனைப் பூசுமார்பிற் புரி நூலொரு பாற்பொருந்தக்
கொடியன சாயலாளோ டுடனாவதுங் கூடுவதே
கடிமண மல்கிநாளுங் கம ழும்பொழிற் சாத்தமங்கை
அடிகணக் கன்பரவ வய வந்தி யமர்ந்தவனே. 2

சிவபெருமான் திருவெண்ணீற்றினைப் பூசிய திருமார்பில் முப்புரிநூல் அணிந்து, பூங்கொடி போன்ற மெல்லிய சாயலுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு விளங்குகிறான். நறுமண மலர்கள் நாளும் பூத்து வாசனை வீசும் சோலைகளையுடைய திருச்சாத்த மங்கையில் சிவபெருமான் **திருநீலநக்க நாயனார்** போற்றி வழிபட அயவந்தி என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான்.

3418. நூனலந் தங்குமார்பி னுகர் நீறணிந் தேறதேறி
மானன நோக்கிதன்னோ டுட னாவது மாண்பதுவே
தானலங் கொண்டுமேகந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை
ஆனலந் தோய்ந்தவெம்மா னயவந்தி யமர்ந்தவனே. 3

இந்நகர் மறையவர் மிக்க பதியாதல் பற்றி 3, 4, 5, 6, 7, 10 திருப்பாட்டுக்களில் போற்றப்பட்டுள்ளது.

முப்புரிநூல் அணிந்த திருமார்பில் திரு வெண்ணீற்றினை அணிந்து, இடப வாகனத்திலேறி, மான் போன்ற மருண்ட பார்வையுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு விளங்குபவன் சிவபெருமான். மேகத்தைத் தொடும்படி உயர்ந்த அழகிய சோலைகள் சூழ்ந்த திருச்சாத்த மங்கை என்னும் திருத்தலத்தில் பசுவிலிருந்து பெறப்படும் பஞ்சகவ்வியங்களால் திருமுழுக் காட்டப்படும் சிவபெருமான் திருஅயவந்தி என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளு கின்றான்.

| | |
|---|---|
| **3419.** மற்றவின் மால்வரையா மதி லெய்துவெண் ணீறுபூசிப்<br>புற்றர வல்குலாளோ டுட னாவதும் பொற்பதுவே<br>கற்றவர் சாத்தமங்கை நகர் கைதொழச் செய்தபாவம்<br>அற்றவர் நாளுமேத்த வய வந்தி யமர்ந்தவனே. **4**<br><br>பதிகம் முழுவதும் அம்மையோடு உடனாதல் பேசப்படுகிறது. "அயவந்தி அமர்ந்தவனே" என்பது மகுடம். | பெரிய மேருமலையை வில்லாகக் கொண்டு மும்மதில்களை எய்து அழித்து, திருவெண்ணீற்றினைப் பூசி, புற்றில் வாழ்கின்ற பாம்பு போன்ற அல்குலையுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு விளங்குகிறான் சிவபெருமான். வேதாகமங்களை நன்கு கற்றவர்கள் வாழ்கின்ற திருச்சாத்தமங்கை என்னும் திருத்தலத்தைக் கைகூப்பித் தொழப் பாவம் நீங்கும். உலகப் பற்றற்ற மெய்யடியார்கள், தமக்குப் பற்றுக் கோடாக விளங்கும் சிவபெருமானை நாள்தோறும் போற்றி வழிபட திருஅயவந்தி என்னும் திருக்கோயிலில் அவன் வீற்றிருந்தருளுகின்றான். |
| **3420.** வெந்தவெண் ணீறுபூசி விடை யேறிய வேதகீதன்<br>பந்தண வும்விரலா ளுட னாவதும் பாங்கதுவே<br>சந்தமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை<br>அந்தமா யாதியாகி யய வந்தி யமர்ந்தவனே. **5** | இறைவன் திருவெண்ணீற்றினைப் பூசியவன். இடப வாகனத்தில் ஏறியமர்பவன். வேதத்தை இசையோடு பாடியருளி, வேதப் பொருளாகவும் விளங்குபவன். பந்து வந்தனைகின்ற விரல்களையுடைய உமாதேவியை உடனாகக் கொண்டவன். வேதமும், அதன் ஆறங்கமும் ஓதுகின்ற அந்தணர்கள் தொழுகின்ற திருச்சாத்தமங்கை என்னும் திருத்தலத்தில் உலகத்திற்கு அந்தமும், ஆதியுமாகிய சிவபெருமான் திருஅயவந்தி என்னும் கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான். |
| **3421.** வேதமாய் வேள்வியாகி விளங் கும்பொருள் வீடாகிச்<br>சோதியாய் மங்கைபாகந் நிலை தான்சொல்ல லாவதொன்றே<br>சாதியான் மிக்கசீராற் றகு வார்தொழுஞ் சாத்தமங்கை<br>ஆதியாய் நின்றபெம்மா னய வந்தி யமர்ந்தவனே. **6**<br><br>"ஆறொழுகுஞ் செக்கர் அயவந்தி மதிச் சடையார் முன்தாழ்ந்து" என்பது சேக்கிழார் வாக்கு. ஆறு ஒழுகுதலாவது – ஆயிரமாமுகத்தினொடு பரந்து விரிந்துபாய்ந்த கங்கை அதன்மிகை தணிந்து பணி போலாகச் சிறிதாகி ஒழுங்குபட வழிதல். செவ்வானம் போன்ற நிறமுடைய சிவந்த சடை. | இறைவன் வேதங்களை அருளி வேதப் பொருளாகவும் விளங்குபவன். எரியோம்பிச் செய்யப்படும் வேத வேள்வியாகவும், ஞான வேள்வியாகவும் திகழ்பவன். ஒண் பொருளாகவும், வீடுபேறாகவும் உள்ளவன். சோதி வடிவானவன். உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு விளங்குபவன். இப்பெருமான் இத்தகையவன் என்பதை வாயினால் சொல்லவும் ஆகுமோ? அத்தகைய சிறப்புடைய பெருமான், தக்கவர்கள் தொழும் திருசாத்தமங்கை என்னும் திருத்தலத்தில் ஆதிமூர்த்தியாய் திருஅவயந்தி என்னும் கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **3422.** இமயமெல் லாமிரிய மதி லெய்துவெண் ணீறுபூசி<br>உமையையொர் பாகம்வைத்த நிலை தானுன்ன லாவதொன்றே<br>சமயமா றங்கம்வேதந் தரித் தார்தொழுஞ் சாத்தமங்கை<br>அமையவே றோங்குசீரா னய வந்தி யமர்ந்தவனே. 7 | சிவபெருமான் இமயம் முதலான பெரிய மலைகளும் நிலைகலங்குமாறு, முப்புரங்களை எரித்து, திருவெண்ணீற்றினைப் பூசி உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாக வைத்த தன்மை பாராட்டிப் பேசக்கூடிய அரிய செயலாகும். அவன் சமய நூல்களையும், வேதத்தையும், அதன் அங்கங்களையும் ஓதுகின்ற அந்தணர்கள் தொழுகின்ற திருச்சாத்தமங்கை என்னும் திருத்தலத்தில் சிறப்புடன் ஓங்கித் திரு அயவந்தி என்னும் கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான். |
| **3423.** பண்ணுலாம் பாடல்வீணை பயில் வானோர் பரமயோகி<br>விண்ணுலா மால்வரையான் மகள் பாகமும் வேண்டினையே<br>தண்ணிலா வெண்மதியந் தவ ழும்பொழிற் சாத்தமங்கை<br>அண்ணலாய் நின்றவெம்மா னய வந்தி யமர்ந்தவனே. 8 | இறைவன் பண்ணிசையோடு கூடிய பாடலை வீணையில் மீட்டிப் பாடுவான். பரமயோகி அவன் மலையரசன் மகளாகிய பார்வதி தேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவன். அப்பெருமான் குளிர்ச்சி பொருந்திய வெண்ணிற சந்திரனைத் தொடும்படி ஓங்கி உயர்ந்த சோலைகள் சூழ்ந்த திருச்சாத்தமங்கையில் தலைவனாய் விளங்கி, திருஅவயந்தி என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான். |
| **3424.** பேரெழிற் றோளரக்கன் வலி செற்றதும் பெண்ணோர்பாகம்<br>ஈரெழிற் கோலமாகி யுடனாவது மேற்பதொன்றே<br>காரெழில் வண்ணனோடு கன கம்மனை யானுங்காணா<br>ஆரழல் வண்ணமங்கை யய வந்தி யமர்ந்தவனே. 9 | மிகுந்த எழிலுடைய வலிமை வாய்ந்த தோள்களினால் மலையைப் பெயர்த்த இராவணனின் வலிமையை அடக்கிய சிவபெருமான் உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு அம்மையப்பனாகவும், உடனாகக் கொண்டு அழகிய இரண்டு கோலமாகவும், கார்மேகம் போன்ற அழகிய வண்ணனான திருமாலும், பொன் போன்ற நிறமுடைய பிரமனும், காண முடியாவண்ணம் நெருப்பு வண்ணமுமாகி, திருச்சாத்தமங்கை என்னும் திருத்தலத்தில், திரு அயவந்தி என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான். |

3425. கங்கையோர் வார்சடைமே லடை யப்புடை
யேகமழும்
மங்கையோ டொன்றிநின்றம் மதிதான்சொல்ல
லாவதொன்றே
சங்கையில் லாமறையோ ரவர் தாந்தொழு
சாத்தமங்கை
அங்கையிற் சென்னிவைத்தா யயவந்தி
யமர்ந்தவனே. 10

சிவபெருமான் கங்கையை நீண்ட சடைமுடியில் தாங்கி, பக்கத்தில் உமாதேவியோடு ஒன்றி நின்ற அறிவுடைமை சொல்லக்கூடிய தொன்றா? அவன் ஐயமில்லாமல் வேதங்களைக் கற்று அந்தணர்கள் தொழுகின்ற திருசாத்தமங்கை என்னும் திருத்தலத்தில் உள்ளங்கையில் பிரமகபாலம் ஏந்தித் திருஅயவந்தி என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான்.

3426. மறையினார் மல்குகாழித் தமிழ் ஞானசம்
பந்தன்மன்னும்
நிறையினார் நீலநக்க னெடு மாநக
ரென்றுதொண்டர்
அறையுமூர் சாத்தமங்கை யய வந்திமே
லாய்ந்தபத்தும்
முறைமையா லேத்தவல்லா ரிமை யோரிலு
முந்துவரே. 11

நான்மறைவல்ல அந்தணர்கள் வாழ்கின்ற சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன், மனத்தைப் புறவழியோடாது நிறுத்தி, திருநீல நக்கருடைய நெடுமா நகர் என்று தொண்டர்களால் போற்றப்படும் திருச்சாத்தமங்கை என்னும் திருத்தலத்திலுள்ள திருஅயவந்தி என்னும் திருக்கோயிலைப் போற்றி அருளிய இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள் தேவர்களைவிட மேலானவர்கள் ஆவர்.

## 59. திருக்குடமூக்கு ( ஆதிகும்பேசுவரர் திருக்கோயில் )
## (கும்பகோணம்)

பண் : பஞ்சமம்

பதிக எண் : 59

3427. அரவிரி கோடனீட லணி காவிரி
யாற்றயலே
மரவிரி போதுமௌவன் மண மல்லிகை
கள்ளவிழும்
குரவிரி சோலைசூழ்ந்த குழ கன்குட
மூக்கிடமா
இரவிரி திங்கள்சூடி **யிருந் தானவ**
**னெம்மிறையே.** 1

பாம்பைப் போலும் தண்டோடு மலர் விரிந்த காந்தட் செடிகள் செழித்திருத்தலால், அழகிய காவிரியாற்றின் பக்கம், மராமரங்கள் விரிந்த மலர்களும், முல்லையும், மணம் வீசும் மல்லிகையும், தேனோடு முறுக்கு உடையும் மலர்களை உடைய குராமரங்களும் விரிந்த சோலை சூழ்ந்த கும்பகோணத்தினை இடமாகக் கொண்டு குழகனாகிய சிவபெருமான், இரவில் ஒளிரும் சந்திரனைச் சூடி வீற்றிருக்கிறான். அப்பெருமானே எம் இறைவன்.

இருந்தானவன் எம்மிறையே – பதிக மகுடம்

**3428.** ஒத்தர வங்களோடு மொலி காவிரி
யார்த்தயலே
பூத்தர வங்களோடும் புகை கொண்டடி
போற்றிநல்ல
கூத்தர வங்களோவாக் குழ கன்குட
மூக்கிடமா
ஏத்தர வங்கள்செய்ய விருந் தானவ
னெம்மிறையே. 2

---

ஒத்தரவங்கள் – வேத ஒலி
பூத்தரவங்கள் – பூவுடன் கூடிய துதிகள்
கூத்தரவங்கள் – நடன ஒலிகள்
ஏத்தரவங்கள் – புகழ் ஒலிகள்

வேதங்கள் ஓதப்படும் ஒலியோடு, காவிரியாறு பாயும் ஒலியும் சேர்ந்தொலிக்க, பக்கத்திலுள்ள பூஞ்சோலைகளில் மலர்ந்துள்ள பூக்களைக் கொண்டு தூவி, தூபதீபம் காட்டி இறைவனைப் போற்றுவதால் உண்டாகும் ஒலி விளங்க, திருநடனம் புரியும் அழகனாகிய சிவபெருமான், திருக்குட மூக்கினை இடமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றான். எல்லோரும் போற்றி வணங்கும் புகழுடைய அப்பெருமானே யாம் வணங்கும் கடவுளாவான்.

**3429.** மயில்பெடை புல்கியால மணன் மேன்பட
வன்னமல்கும்
பயில்பெடை வண்டுபண்செய் பழங் காவிரிப்பைம்
பொழில்வாய்க்
குயில்பெடை யோடுபாட லுடை யான்குட
மூக்கிடமா
இயலொடு வானமேத்த விருந் தானவ
னெம்மிறையே. 3

---

பிரளய காலத்தில் எல்லா உயிர்களையும் ஒருசேர வைத்த குடத்தின் மூக்கு இருந்த இடமாதலின் குடமூக்கு.

ஆண்மயில் பெண்மயிலைத் தழுவி ஆட, காவிரியாற்றின் கரையிலுள்ள மணலின் மீது ஆண் அன்னம் தன் பெண் அன்னத்தோடு நடைபயில, வண்டுகள் பண்ணிசைக்க, நிறைய பழங்கள் கனிந்துள்ள பசுமையான சோலைகளில் குயிலானது பெடையோடு சேர்ந்து கீதமிசைக்கத் திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் விண்ணோர்கள் வேதாகம முறைப்படி பூசிக்க வீற்றிருந்தருளும் சிவபெருமானே யாம் வணங்கும் கடவுளாவான்.

**3430.** மிக்கரை தாழவேங்கை யுரி யார்த்துமை
யாள்வெருவ
அக்கர வாமையேன மருவப் போடவை
பூண்டழகார்
கொக்கரை யோடுபாட லுடை யான்குட
மூக்கிடமா
எக்கரை யாருமேத்த விருந் தானவ
னெம்மிறையே. 4

சிவபெருமான் புலியின் தோலை உரித்து நன்கு தாழ இடுப்பில் கட்டியவர். உமாதேவி அஞ்சுமாறு எலும்பு, பாம்பு, ஆமையோடு, பன்றியின் கொம்பு ஆகியவற்றை அழகிய ஆபரணமாகப் பூண்டு, கொக்கரை என்னும் வாத்தியம் இசைக்கப் பாடும் சிவபெருமான் திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் எத்தன்மையோரும் போற்றி வணங்க வீற்றிருந்தருளுகின்றான். அவனே யாம் வணங்கும் கடவுளாவான்.

| | |
|---|---|
| **3431.** வடிவுடை வாட்டடங்கண் ணுமை யஞ்சவோர் வாரணத்தைப்<br>பொடியணி மேனிமூட வுரி கொண்டவன் புன்சடையான்<br>கொடிநெடு மாடமோங்குங் குழ கன்குட மூக்கிடமா<br>இடிபடு வானமேத்த விருந் தானவ னெம்மிறையே. 5 | அழகிய உருவமுடைய வாள்போன்ற ஒளி பொருந்திய அகன்ற கண்களையுடைய உமாதேவி அஞ்சுமாறு யானையின் தோலை உரித்து, திருவெண்ணீறணிந்த திருமேனிமீது போர்த்தவனும், சடைமுடியுடையவனும், அழகனும் ஆன சிவபெருமான், கொடிகள் அசைகின்ற ஆகாயத்தைத் தொடும்படி ஓங்கி வளர்ந்துள்ள நீண்ட மாடங்கள் நிறைந்த திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் வானவர்கள் போற்ற வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமானே யாம் வணங்கும் கடவுளாவான். |
| **3432.** கழைவளர் கவ்வைமுத்தங் கமழ் காவிரி யாற்றயலே<br>தழைவளர் மாவினல்ல பல வின்கனி கள்தங்கும்<br>குழைவளர் சோலைசூழ்ந்த குழ கன்குட மூக்கிடமா<br>இழைவளர் மங்கையோடு மிருந் தானவ னெம்மிறையே. 6 | முற்றிய மூங்கில்களிலிருந்து மிகுதியாகக் கிடைக்கும் ஒலிக்கின்ற முத்துக்கள் நிறைந்த காவிரியாற்றின் பக்கத்திலே, தழைகள் மிகுந்த மாங்கனிகளும், பலாவின் கனிகளும் கொத்தாக விளைகின்ற சோலைகள் சூழ்ந்த திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில், அழகான சிவபெருமான், நல்ல ஆபரணங்கள் அணிந்த உமாதேவியோடு வீற்றிருந் தருளுகின்றான். அப்பெருமானே யாம் வணங்கும் கடவுளாவான். |
| **3433.** மலைமலி மங்கைபாகம் மகிழ்ந் தானெழில் வையமுய்யச்<br>சிலைமலி வெங்கணையாற் சிதைத் தான்புர மூன்றினையும்<br>குலைமலி தண்பலவின் பழம் வீழ்குட மூக்கிடமா<br>இலைமலி சூலமேந்தி யிருந் தானவ னெம்மிறையே. 7 | மலைமகளாகிய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு, மகிழ்ந்து விளங்கும் சிவபெருமான் எழில்மிக்க இவ்வுலகம் உய்யுமாறு மேருமலையை வில்லாகக் கொண்டு, அக்கினியைக் கணையாக்கித் தொடுத்து, மூன்று புரங்களையும் சிதைத்தவன். கொத்தாகக் காய்க்கும் பலாக்கனிகள் தாமாகவே கனிந்து வீழும் வளம் நிறைந்த திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் இலைபோன்ற சூலப்படையை ஏந்தி வீற்றிருந்தருளும் சிவபெருமானே யாம் வணங்கும் கடவுளாவான். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3434.** நெடுமுடி பத்துடைய நிகழ் வாளரக் கன்னுடலைப்<br>படுமிடர் கண்டயரப் பரு மால்வரைக் கீழடர்த்தான்<br>கொடுமட றங்குதெங்கு பழம் வீழ்குட மூக்கிடமா<br>இடுமண லெக்கர்சூழ விருந் தானவ னெம்மிறையே. 8 | நீண்ட முடிகள் பத்துடைய வாளுடைய இராவணனின் உடலானது துன்பப்படுமாறு கயிலைமலையின் கீழ் அடர்த்த பெருமானாய், வளைந்த மடல்களையுடைய தென்னை மரங்களிலிருந்து முற்றிய காய்கள் விழும் திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் மணல் திட்டு சூழ வீற்றிருந்தருளும் சிவபெருமானே யாம் வணங்கும் கடவுளாவான். |
| **3435.** ஆரெரி யாழியானு மல ரானும ளப்பரிய<br>நீரிரி புன்சடைமே னிரம் பாமதி சூடிநல்ல<br>கூரெரி யாகிநீண்ட குழ கன்குட மூக்கிடமா<br>ஈருரி கோவணத்தோ டிருந் தானவ னெம்மிறையே. 9<br><br>ஈர் + உரி – ஈருரி<br>ஈர் + இரு – ஈரிரு | அக்கினிபோல் ஒளிரும் சக்கராயுதப் படையுடைய திருமாலும், பிரமனும் அளக்க முடியாதவனாய், கட்டுப்படுத்த முடியாமல் பெருக்கெடுத்த கங்கையைப் புன்சடைமேல் தாங்கி, இளம்பிறைச் சந்திரனைச் சூடி, நல்ல நெருப்புப் பிழம்பு போல் ஓங்கி நின்ற அழகனான சிவபெருமான், திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் தோலும் கோவண ஆடையும் அணிந்து வீற்றிருந்தருளுகின்றான். அவனே யாம் வணங்கும் கடவுள் ஆவான். |
| **3436.** மூடிய சீவரத்தார் முது மட்டையர் மோட்டமணர்<br>நாடிய தேவரெல்லா நயந் தேத்திய நன்னலத்தான்<br>கூடிய குன்றமெல்லா முடை யான்குட மூக்கிடமா<br>ஏடலர் கொன்றைசூடி யிருந்தானவ னெம்மிறையே. 10 | மஞ்சட் காவியுடையணிந்த, இறைவனை உணராத பேதையராகிய புத்தர்களும், இறுமாப்புடைய சமணர்களும் கூறுவன பயனற்றவை. தன்னை நாடித் தேவர்கள் எல்லாம் விரும்பி வழிபட, அவர்கட்கு நல்லதையே அருளும் சிவபெருமான், மன்னுயிரைக் குன்றவைக்கும் தீவினையால் வரும் குற்றங்களை நீக்கி அருள்புரிவான். திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் இதழ் விரித்த கொன்றைமாலையைச் சூடி வீற்றிருந்தருளும் அப்பெருமானே யாம் வணங்கும் கடவுளாவான். |
| **3437.** வெண்கொடி மாடமோங்கு விறல் வெங்குரு நன்னகரான்<br>நண்பொடு நின்றசீரான் றமிழ்ஞானசம் பந்தனல்ல<br>தண்குட மூக்கமர்ந்தா னடிசேர்தமிழ் பத்தும்வல்லார்<br>விண்புடை மேலுலகம் வியப்பெய்துவர் வீடெளிதே. 11 | வெண்கொடி அசைகின்ற மாடங்கள் ஓங்கி விளங்கும் வெங்குரு எனப்படும் சீகாழியில் அனைவரிடத்தும் நட்புக் கொண்டு பழகும் புகழ்மிக்க தமிழ் ஞானசம்பந்தன் நல்ல குளிர்ந்த திருக்குடமூக்கு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி அருளிய இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள் வானிலுள்ள சுவர்க்கலோகத்தை அடைந்து இன்புறுவர். அவர்கட்கு முக்திப்பேறு எளிதாகக் கைகூடும். |

## 60. திருவக்கரை

பண் : பஞ்சமம் பதிக எண் : 60

3438. கறையணி மாமிடற்றான் கரி காடரங்
காவுடையான்
பிறையணி கொன்றையினா னொரு பாகமும்
பெண்ணமர்ந்தான்
மறையவன் றன்றலையிற் பலி கொள்பவன்
வக்கரையில்
உறைபவ னெங்கள்பிரா னொலி யார்கழ
லுள்குதுமே. 1

வக்கராசுரன் வழிபட்ட காரணத்தால் வக்கரை.

இறைவன் நஞ்சுண்ட கறுத்த கண்டத்தை உடையவன். சுடுகாட்டில் திருநடனம் செய்பவன். பிறைச் சந்திரனையும், கொன்றைமாலையையும் அணிந்தவன். உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவன். பிரமன் தலையைக் கொய்து அதன் ஓட்டில் பிச்சை ஏற்பவன். திருவக்கரை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற எங்கள் தலைவனான சிவபெருமானின் ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திருவடிகளைத் தியானிப்பீர்களாக.

3439. பாய்ந்தவன் காலனைமுன் பணைத் தோளியொர்
பாகமதா
ஏய்ந்தவ னெண்ணிறந்தவ் விமை யோர்க
டொழுதிறைஞ்ச
வாய்ந்தவன் முப்புரங்க ளெரி செய்தவன்
வன்கரையில்
தேய்ந்திள வெண்பிறைசேர் சடை யானடி
செப்புதுமே. 2

மார்க்கண்டேயரின் உயிரைக் கவரவந்த காலனைக் காலால் சிவபெருமான் உதைத்தவன். பருத்த தோள்களை உடைய உமாதேவியைத் தன் திருமேனிக்கு ஒரு பாகமாகக் கொண்டவன். எண்ணற்ற தேவர்களால் தொழுது போற்றப்படுபவன். முப்புரங்கள் எரிந்து சாம்பலாகுமாறு செய்தவன். திருவக்கரை என்னும் திருத்தலத்தில் தேய்ந்த வெண்ணிறப் பிறைச்சந்திரனைச் சடையில் சூடி வீற்றிருந்தருளும் அச்சிவபெருமானின் திருவடிகளை வணங்கிப் போற்றுவோமாக!

3440. சந்திர சேகரனே யரு ளாயென்று
தண்விசும் பில்
இந்திர னும்முதலா விமை யோர்க
டொழுதிறைஞ்ச
அந்தர மூவெயிலும் மன லாய்விழ
வோரம்பினால்
மந்தர மேருவில்லா வளைத் தானிடம்
வக்கரையே. 3

''சந்திரனைச் சடைமுடியில் சூடியுள்ள சிவபெருமானே! அருள்புரிவீராக'' என்று குளிர்ந்த விண்ணுலகத்தில் விளங்கும் இந்திரன் முதலான தேவர்கள் தொழுது போற்ற, அந்தரத்தில் திரிந்து கேடுகளை விளைவித்த மூன்று கோட்டைகளும் அக்கினியாகிய கணையினால் எரிந்து சாம்பலாகுமாறு மந்தர மேருமலையை வில்லால் வளைத்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவக்கரை என்னும் திருத்தலமாகும்.

| | |
|---|---|
| 3441. நெய்யணி சூலமொடு நிறை வெண்மழு வும்மரவும்<br>கையணி கொள்கையினான் கனன் மேவிய வாடலினான்<br>மெய்யணி வெண்பொடியான் விரி கோவண வாடையின்மேல்<br>மையணி மாமிடற்றா னுறை யும்மிடம் வக்கரையே. 4 | நெய் தடவப்பட்ட சூலத்தையும், வெண்ணிற மழுவையும் படைக்கலனாக ஏந்தி, பாம்பைக் கையில் ஆபரணமாகப் பூண்டு, நெருப்பேந்தித் திருநடனம் செய்பவன் சிவபெருமான். அவன் தன் திருமேனியில் திருவெண்ணீற்றினைப் பூசியவன். விரித்து ஓதப்பெறும் வேதங்களைக் கோவணமாக அணிந்தவன். மை நிறம் பெற்ற கரிய கண்டத்தையுடைய அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவக்கரை என்னும் திருத்தலமாகும். |
| 3442. ஏனவெண் கொம்பினொடும் மிள வாமையும் பூண்டுகந்து<br>கூனிள வெண்பிறையுங் குளிர் மத்தமுஞ் சூடிநல்ல<br>மானன மென்விழியா ளொடும் வக்கரை மேவியவன்<br>தானவர் முப்புரங்க ளெரி செய்த தலைமகனே. 5 | பன்றியின் கொம்பும், ஆமையின் ஓடும் அணிகலனாகக் கொண்டு, வளைந்த பிறைச்சந்திரனையும், குளிர்ந்த ஊமத்த மலரையும் சூடி, நல்ல மான்போன்ற மென்மையான விழிகளையுடைய உமாதேவியோடு திருவக்கரை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் பகையசுரர்களின் முப்புரங்களை எரியுண்ணும்படி செய்த முதல்வன் ஆவான். |
| 3443. கார்மலி கொன்றையொடுங் கதிர் மத்தமும் வாளரவும்<br>நீர்மலி யுஞ்சடைமே னிரம் பாமதி சூடிநல்ல<br>வார்மலி மென்முலையா ளொடும் வக்கரை மேவியவன்<br>பார்மலி வெண்டலையிற் பலி கொண்டுழல் பான்மையனே. 6 | கார்காலத்தில் மிகுதியாக மலரும் கொன்றை மலரும், ஊமத்த மலரும், ஒளி பொருந்திய பாம்பும், கங்கையும் சடைமுடியில் திகழ, கலைநிரம்பா பிறைச்சந்திரனைச் சூடி, நல்ல கச்சணிந்த மென்மையான முலைகளையுடைய உமாதேவியோடு திருவக்கரை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான் சிவபெருமான். அப்பெருமான் இப்பூவுலகில் வெண்ணிறப் பிரம கபாலத்தில் பிச்சையேற்றுத் திரியும் தன்மையன். |
| 3444. கானண வும்மறிமா னொரு கையதோர் கைமழுவாள்<br>தேனண வுங்குழலா ளுமை சேர்திரு மேனியனான்<br>வானண வும்பொழில்சூழ் திரு வக்கரை மேவியவன்<br>ஊனண வுந்தலையிற் பலி கொண்டுழ லுத்தமனே. 7 | காட்டில் உலவும் மானை ஒரு கையில் ஏந்தி, மழுவாளை மற்றொரு கையிலேந்தியவன் சிவபெருமான். வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவன். வானளாவிய சோலைகள் சூழ்ந்த திருவக்கரை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் பிரமனின் மண்டையோட்டை ஏந்திப் பிச்சை எடுத்துத் திரியும் உத்தமனாவான். |

| | |
|---|---|
| **3445.** இலங்கையர் மன்னனாகி யெழில் பெற்ற விராவணனைக்<br>கலங்கவொர் கால்விரலாற் கதிர் பொன்முடி பத்தலற<br>நலங்கெழு சிந்தையனா யருள் பெற்றலு நன்களித்த<br>வலங்கெழு மூவிலைவே லுடை யானிடம் வக்கரையே. 8 | இலங்கை மன்னனான அழகிய இராவணன் கலங்குமாறு, சிவபெருமான் தன் காற்பெருவிரலை ஊன்றி, ஒளி வீசுகின்ற பொன்னாலான திருமுடிகளணிந்த அவன் தலைகள் பத்தும் அலறுமாறு செய்தான். பின்பு இராவணன் செருக்கு நீங்கி, நல்ல சிந்தனையோடு இறைவனைப் போற்றிசைக்க, திருவருளால் இறைவன் அவனுக்கு வீரவாளும், நீண்ட வாழ்நாளும் கொடுத்து அருள் புரிந்தான். அத்தகைய பெருமான் வலக்கையில் மூவிலைவேல் ஏந்தி வீற்றிருந்தருளும் இடம் திருவக்கரை என்னும் திருத்தலமாகும். |
| **3446.** காமனை யீடழித்திட் டவன் காதலி சென்றிரைப்பச்<br>சேமமே யுன்றனக்கென் றருள் செய்தவன் றேவர்பிரான்<br>சாமவெண் டாமரைமே லய னுந்தர ணியளந்த<br>வாமன னும்மறியா வகை யானிடம் வக்கரையே. 9 | மன்மதனுடைய அழகிய வலிய தேகத்தை எரித்துச் சாம்பலாக்கிப் பின்னர் அவன் மனைவி இரதி இரந்து வேண்டிப் பிரார்த்திக்கச் சிவபெருமான் மன்மதனை உயிர்ப்பித்து அவள் கண்களுக்கு மட்டும் புலப்படும்படி அருள்புரிந்தான். வெண்டாமரையில் வீற்றிருந்து சாமகானம் பாடுகின்ற பிரமனும், உலகையளந்த வாமனனான திருமாலும் அறியாவண்ணம் நீண்ட சோதியாக நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவக்கரை என்னும் திருத்தலமாகும். |
| **3447.** மூடிய சீவரத்தர் முதிர் பிண்டிய ரென்றிவர்கள்<br>தேடிய தேவர்தம்மா லிறைஞ் சப்படுந் தேவர்பிரான்<br>பாடிய நான்மறையன் பலிக் கென்றுபல் வீதிதொறும்<br>வாடிய வெண்டலைகொண் டுழல் வானிடம் வக்கரையே. 10 | காவியாடை போர்த்திய புத்தர்களும், அசோக மரத்தை வணங்கும் சமணர்களும், தேடுகின்ற தேவர்களால் வணங்கப்படுகின்ற தேவர்கட்கெல்லாம் தலைவனான சிவபெருமான் நான்மறைகளை அருளிச்செய்து, பல வீதிகள்தோறும் சென்று உலர்ந்த பிரம கபாலத்தை ஏந்திப் பிச்சையேற்றுத் திரிவான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவக்கரை என்னும் திருத்தலமாகும். |
| **3448.** தண்புன லும்மரவுஞ் சடை மேலுடை யான்பிறைதோய்<br>வண்பொழில் சூழ்ந்தழகா ரிறை வன்னுறை வக்கரையைச்<br>சண்பையர் தந்தலைவன் றமிழ் ஞானசம் பந்தன்சொன்ன<br>பண்புனை பாடல்வல்லா ரவர் தம்வினை பற்றறுமே. 11 | குளிர்ந்த கங்கையும், பாம்பும் சடைமுடியில் அணிந்த அழகனான சிவபெருமான், உறையும் சந்திரனைத் தொடும்படி ஓங்கி வளர்ந்துள்ள செழுமைவாய்ந்த சோலைகள் சூழ்ந்த திருவக்கரை என்னும் திருத்தலத்தைப் போற்றி, சண்பை நகர் எனப்படும் சீகாழியில் சிவம் பெருக்க அவதரித்த தலைவனான தமிழ் ஞானசம்பந்தன், அருளிய பண்ணோடு கூடிய இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள் வினையிலிருந்து நீங்கப் பெறுவர். |

## 61. திருவெண்டுறை

பண் : பஞ்சமம் பதிக எண் : 61

3449. ஆதிய னாதிரையன் னன லாடிய வாரழகன்
பாதியொர் மாதினொடும் பயி லும்பர மாபரமன்
போதிய லும்முடிமேற் புன லோடர வம்புனைந்த
வேதியன் **மாதிமையால் விரும் பும்மிடம்**
**வெண்டுறையே.** 1

வெண்டு –வண்டு. பிருங்கி முனிவர் வண்டின் உருவமெடுத்து சிவபெருமானை மட்டும் பூசித்த தலம்.
பிருங்கம் – வண்டு.
பதிகமகுடம் – ஆதியன், ஆதிரையன் என்பன முதலாகப் படிக்கப்படும் தன்மைகளையுடைய இறைவர் மாதிமையால் விரும்புமிடம் வெண்டுறையே.

சிவபெருமான் ஆதிமூர்த்தியானவர். திருவாதிரை என்னும் நட்சத்திரத்திற்கு உரியவர். நெருப்பைக் கையிலேந்தித் திருநடனம் புரியும் பேரழகர். தம் திருமேனியின் ஒரு பாகமாக உமாதேவியை ஏற்று மேலான பொருள்கள் எவற்றினும் மிக மேலான பொருளாயிருப்பவர். கொன்றை முதலிய மலர்களை அணிந்த முடிமேல், கங்கையையும் பாம்பையும் அணிந்தவராய், வேதங்களை அருளிச் செய்தவர் சிவபெருமான் ஆவார். அப்பெருமானார் மிக்க அன்புடன் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்பதாகும்.

3450. காலனை யோருதையில் லுயிர் வீடுசெய்
வார்கழலான்
பாலொடு நெய்தயிரும் பயின் றாடிய
பண்டரங்கன்
மாலை மதியொடுநீ ரர வம்புனை
வார்சடையான்
**வேலன கண்ணி**யொடும் விரும் பும்மிடம்
வெண்டுறையே. 2

வேலனகண்ணி – தலத்து அம்பிகையின் பெயர்

மார்க்கண்டேயர் உயிரைக் கவரவந்த காலனைக் காலால் உதைத்து உயிர்விடும்படி செய்த சிவபெருமான் வாரால் கட்டிய வீரக்கழலையணிந்தவன். பால், நெய், தயிர் முதலானவற்றால் திருமுழுக்காட்டப்பட்டுப் பண்டரங்கம் என்னும் திருக்கூத்துப் புரிந்தவன். மாலை நேர சந்திரனொடு, கங்கை, பாம்பு இவற்றை அணிந்த விரிந்த சடையுடையவன். வேல்போன்ற கண்களையுடைய உமாதேவியோடு அப்பெருமான் விற்றிருந்தருளுமிடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும்.

3451. படைநவில் வெண்மழுவான் பல பூதப்
படையுடையான்
கடைநவின் மும்மதிலும் மெரி யூட்டிய
கண்ணுதலான்
உடைநவி லும்புலித்தோ லுடை யாடையி
னான்கடிய
விடைநவி லுங்கொடியான் விரும் பும்மிடம்
வெண்டுறையே. 3

சிவபெருமான் தூய மழுப்படை உடையவர். பலவகையான பூதகணங்களைப் படைவீரர்களாகக் கொண்டுள்ளவர். பாவங்களைச் செய்துவந்த மூன்று மதில்களையும் எரியுண்ணும்படி செய்த நெற்றிக் கண்ணையுடையவர். புலித்தோலாடை அணிந்தவர். விரைந்து செல்லக்கூடிய ஆற்றல் பொருந்திய இடபத்தைக் கொடியாக உடைய அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். அத்திருத்தலத்தைப் போற்றி வழிபடுங்கள்.

| | |
|---|---|
| **3452.** பண்ணமர் வீணையினான் பர விப்பணி<br>தொண்டர்கடம்<br>எண்ணமர் சிந்தையினா னிமை யோர்க்கு<br>மறிவரியான்<br>பெண்ணமர் கூறுடையான் பிர மன்றலை<br>யிற்பலியான்<br>விண்ணவர் தம்பெருமான் விரும் பும்மிடம்<br>வெண்டுறையே. 4 | சிவபெருமான் வீணையிலே பண்ணோடு கூடிய பாடலை மீட்டுபவர். தம்மைப் போற்றி வணங்குகின்ற தொண்டர்களின் சிந்தையில் எழுந்தருளியிருப்பவர். தேவர்களால் அறிவதற்கு அரியவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். பிரம கபாலம் ஏந்திப் பிச்சையேற்றவர். தேவர்களுக்கெல்லாம் தலைவராக விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். |
| **3453.** பாரிய லும்பலியான் படி யார்க்கு<br>மறிவரியான்<br>சீரிய லும்மலையா ளொரு பாகமும்<br>சேரவைத்தான்<br>போரிய லும்புரமூன்று றுடன் பொன்மலை<br>யேசிலையா<br>வீரிய நின்றுசெய்தான் விரும் பும்மிடம்<br>வெண்டுறையே. 5 | சிவபெருமான் உலகத்தார் செய்யும் பூசைகளைத் தான் ஏற்பவன். தன் தன்மையை உலக மாந்தர்களின் சிற்றறிவால் அறிவதற்கு அரியவனாய் விளங்குபவன். புகழ்மிக்க உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவன். போர் செய்யும் தன்மையுடைய முப்புரங்களுடன் பொன்மயமான மேருமலையே வில்லாகக் கொண்டு தன் வலிமையைக் காட்டிப் போர் செய்தவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். |
| **3454.** ஊழிக ளாயுலகா யொரு வர்க்கு<br>முணர்வரியான்<br>போழிள வெண்மதியும் புன லும்மணி<br>புன்சடையான்<br>யாழின் மொழியுமையாள் வெரு வவ்வெழில்<br>வெண்மருப்பின்<br>வேழ முரித்தபிரான் விரும் பும்மிடம்<br>வெண்டுறையே. 6 | சிவபெருமான் ஊழிக்காலங்கள்தோறும் உலகப் பொருட்களுள் கலப்பால் ஒன்றாய் விளங்கினும், ஒருவர்க்கும் உணர்வதற்கு அரியவனாய் விளங்குகின்றான். பிளவுபட்ட வெண்ணிறச் சந்திரனையும், கங்கையையும் அணிந்த சடையுடையவன். யாழ் போன்று இனிமையான மொழி பேசுகின்ற உமாதேவி அஞ்சும்படி அழகிய வெண் தந்தமுடைய யானையின் தோலை உரித்தவன். அப்பெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். |
| **3455.** கன்றிய காலனையும் முரு ளக்கனல்<br>வாயலறிப்<br>பொன்றமு னின்றபிரான் பொடி யாடிய<br>மேனியினான்<br>சென்றிமை யோர்பரவுந் திகழ் சேவடி<br>யான்புலன்கள்<br>வென்றவ னெம்மிறைவன் விரும் பும்மிடம்<br>வெண்டுறையே. 7 | மார்க்கண்டேயரின் உயிரைக் கவரச் சினந்து வந்த காலன் அலறி விழுமாறு காலால் உதைத்து அழித்தவன். திருவெண்ணீற்றினைத் திருமேனியில் பூசியவன். தேவர்களெல்லாம் சென்று போற்றி வணங்கும் செம்மையான திருவடிகளை உடையவன். ஞானிகள் புலன்களை வெல்லும்படி செய்பவன். எம் தலைவனான அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3456.** கரமிரு பத்தினாலுங் கடு வன்சின மாயெடுத்த<br>சிரமொரு பத்துமுடை யரக் கன்வலி<br>செற்றுகந்தான்<br>பரவவல் லார்வினைக ளறுப் பானொரு<br>பாகமும்பெண்<br>விரவிய வேடத்தினான் விரும் பும்மிடம்<br>வெண்டுறையே. 8 | பத்துத் தலைகளையுடைய அரக்கனான இராவணன், தன் இருபது கரங்களினாலும் கடும் கோபத்துடன் கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க அவனது வலிமையை சிவபெருமான் அழித்தார். அவர் தன்னைப் போற்றி வழிபடும் பக்தர்களின் வினைகளை அறுப்பவர். தன் திருமேனியின் ஒரு பாகமாக உமாதேவியைக் கொண்ட கோலத்துடன் விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். |
| **3457.** கோல மலரயனுங் குளிர் கொண்ட<br>னிறத்தவனும்<br>சீல மறிவரிதாய்த் திகழ்ந் தோங்கிய<br>செந்தழலான்<br>மூலம தாகிநின்றான் முதிர் புன்சடை<br>வெண்பிறையான்<br>வேலை விடமிடற்றான் விரும் பும்மிடம்<br>வெண்டுறையே. 9 | அழகிய தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், குளிர்ந்த மழைநீர் பொழியும் மேகம் போன்று கருநிறமுடைய திருமாலும், தனது தன்மையை அறிதற்கு அரியவனாய்ச் சிவந்த நெருப்பு மலைபோல் ஓங்கி நின்றவன் சிவபெருமான். அவன் எல்லாவற்றுக்கும் மூலப் பொருளாக விளங்கி நின்றான். முதிர்ந்த சடையில் வெண்ணிறப் பிறைச்சந்திரனை அணிந்தவன். கடலில் தோன்றிய விடத்தைக் கண்டத்தில் அடக்கிய நீலகண்டனான அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். |
| **3458.** நக்குரு வாயவருந் துவ ராடை<br>நயந்துடையாம்<br>பொக்கர்க டம்முரைகள் ளவை பொய்யென<br>வெம்மிறைவன்<br>திக்கு நிறைபுகழார் தரு தேவர்பி<br>ரான்கனகம்<br>மிக்குயர் சோதியவன் விரும் பும்மிடம்<br>வெண்டுறையே. 10 | ஆடையணியா உடம்புடைய சமணர்களும், மஞ்சட் காவியாடை அணிந்த புத்தர்களும் மெய்ப்பொருளாம் இறைவனைப் பற்றி ஏதும் கூறாது, தோன்றி நின்று அழியும் தன்மையுடைய உலகப் பொருள்கள் பற்றிக் கூறும் உரைகளைப் பொருளெனக் கொள்ளற்க. எம் தலைவனான சிவபெருமான் எல்லாத் திக்குகளிலும் நிறைந்து புகழுடன் விளங்குபவன். தேவர்கட்கெல்லாம் தலைவன். பொன் போன்று மிக்குயர்ந்த சோதியாய் விளங்குபவனான அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவெண்டுறை என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| 3459. திண்ணம ரும்புரிசைத் திரு வெண்டுறை மேயவனைத்<br>தண்ணம ரும்பொழில்சூழ் தரு சண்பையர் தந்தலைவன்<br>எண்ணமர் பல்கலையா னிசை ஞானசம் பந்தன்சொன்ன<br>பண்ணமர் பாடல்வல்லார் வினை யாயின பற்றறுமே. 11 | உறுதியான மதில்களையுடைய திருவெண்டுறை என்னும் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் போற்றி, குளிர்ச்சி பொருந்திய சோலைகள் சூழ்ந்த சண்பை எனப்படும் சீகாழியில் அவதரித்த தலைவனான, பலகலைகளில் வல்ல ஞானசம்பந்தன் அருளிய இப்பண்ணோடு கூடிய திருப்பதிகத்தை ஓத வல்லவர்களின் வினையாவும் நீங்கும். |

## 62. திருப்பனந்தாள்

பண் : பஞ்சமம் — பதிக எண் : 62

| | |
|---|---|
| 3460. கண்பொலி நெற்றியினான் றிகழ் கையிலொர் வெண்மழுவான்<br>பெண்புணர் கூறுடையான் மீகு பீடுடை மால்விடையான்<br>விண்பொலி மாமதிசேர் தரு செஞ்சடை வேதியனூர்<br>தண்பொழில் சூழ்பனந்தாட் டிருத் தாடகை ஈச்சுரமே. 1<br><br>பனைமரத்தைத் தலவிருட்சமாகப் பெற்றிருத்தலின் பனந்தாள் என்ற பெயர் பெற்றது. | சிவபெருமான் நெற்றிக் கண்ணையுடையவன். தூய வெண்மழுவினைக் கையிலேந்தியவன். உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாக உடையவன். மிக்க பெருமையுடைய திருமாலை இடப வாகனமாகக் கொண்டவன். விண்ணிலே விளங்குகின்ற பிறைச்சந்திரனை அணிந்த சிவந்த சடையினையுடைய, வேதங்களை அருளிச் செய்த சிவபெருமானுடைய உறைவிடம் குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகையீச்சரம் என்னும் திருக்கோயிலாகும். |
| 3461. விரித்தவ னான்மறையை மிக்க விண்ணவர் வந்திறைஞ்ச<br>எரித்தவன் முப்புரங்கள் எரிய லேழுல கில்லுயிரும்<br>பிரித்தவன் செஞ்சடைமே னிறை பேரொலி வெள்ளந்தன்னைத்<br>தரித்தவ னூர்பனந்தாட் டிருத் தாடகை யீச்சுரமே. 2<br><br>ஊரின் பெயர் – பனந்தாள்; கோயிலின் பெயர்– தாடகை ஈச்சரம் | சிவபெருமான் நான்கு வேதங்களின் பொருளை விரித்து ஓதியவன். தேவர்களெல்லாம் வந்து வேண்ட முப்புரங்களை எரித்தவன். ஏழுலகங்களிலுமுள்ள உயிர்களைச் சங்கார காலத்தில் பிரித்தவன். சிவந்த சடையின்மேல் நிறைந்த பேரொலியோடு பெருக்கெடுத்து வந்த கங்கையைத் தாங்கியவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் உறைவிடம் திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்தில் திருத்தாடகையீச்சரம் என்னும் திருக்கோயிலாகும். |
| 3462. உடுத்தவன் மானுரிதோல் கழ லுள்கவல் லார்வினைகள்<br>கெடுத்தருள் செய்யவல்லான் கிளர் கீதமொர் நான்மறையான்<br>மடுத்தவ னஞ்சமுதா மிக்க மாதவர் வேள்வியைமுன்<br>தடுத்தவனூர் பனந்தாட் டிருத் தாடகை யீச்சுரமே. 3<br><br>சிவநேசம் பூண்ட தாடகை என்னும் மங்கை ஒருத்தித் தினமும் பூசித்ததால் தாடகை பூசித்த ஈச்சரம் – தாடகையீச்சரமாயிற்று | சிவபெருமான் மான்தோலை ஆடையாக அணிந்தவன். தன் திருவடிகளை நினைத்து வழிபடுபவர்களின் வினைகளைப் போக்குபவன். இனிய இசையுடைய நால்வேதங்களை அருளிச்செய்து அவ்வேதங்களின் உட்பொருளாகவும் விளங்குபவன். பாற்கடலில் தோன்றிய நஞ்சை அமுதம்போல் உட்கொண்டவன். தன்னை மதியாது தக்கன் செய்த வேள்வியைத் தகர்த்தவன். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் உறைவிடம் திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகை யீச்சரம் என்னும் கோயிலாகும். |

3463. **சூழ்தரு வல்வினையு முடல் தோன்றிய பல்பிணியும்**
பாழ்பட வேண்டுதிரேன் மிக வேத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் மனல் பொங்கரவும் புனைந்த
தாழ்சடை யான்பனந்தாட் டிருத் தாடகை யீச்சுரமே. 4

உடல் நோய்க்குக் காரணம் உயிரின் வினைகள்

**பிறவிதோறும் உயிர்களைச் சூழ்ந்து வருகின்ற எளிதில் நீங்காத வினைகளும், அவற்றின் காரணமாக உடலில் தோன்றும் பலவகை நோய்களும் நீங்க வேண்டும் என்று எண்ணுவீராயின்** பாய்கின்ற கங்கையையும், பிளவுபட்ட இளமையான வெண்ணிறச் சந்திரனையும் நெருப்புப்போல் விடம் கக்கும் பாம்பையும் அணிந்த தாழ்ந்த சடையினையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகையீச்சுரம் என்னும் திருக்கோயிலை மிகவும் போற்றி வழிபடுவீர்களாக!

3464. விடம்படு கண்டத்தினா னிருள் வெள்வளை மங்கையொடும்
நடம்புரி கொள்கையினா னவ னெம்மிறை சேருமிடம்
படம்புரி நாகமொடு திரை பன்மணி யுங்கொணரும்
தடம்புனல் சூழ்பனந்தாட் டிருத் தாடகை யீச்சுரமே. 5

இராமாயணத்தில் கூறப் பெற்றிருக்கும் தாடகை வேறு. இவர் வேறு. **தாடகைக்குக் குனிந்தும் வளைந்தும், குங்கிலியக் கலய நாயனார்க்கு நிமிர்ந்தும் அருள் செய்த தலம்.**

சிவபெருமான் விடத்தைத் தேக்கிய கண்டத்தை உடையவன். வெண்ணிற வளையல்களையணிந்த உமாதேவியோடு நள்ளிருளில் திருநடனம் புரிபவன். எங்கள் தலைவனான சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம், படமெடுத்தாடும் பாம்பு கக்குகின்ற நவரத்தினமணிகளோடு, அலைகள் பலவகையான மணிகளை அடித்துக் கொண்டு வந்து சேர்க்கும் பெருமையுடைய மண்ணியாறு சூழ்ந்த திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகையீச்சரம் என்னும் திருக்கோயிலாகும்.

3465. விடையுயர் வெல்கொடியா னடி விண்ணொடு மண்ணுமெல்லாம்
புடைபட வாடவல்லான் மிகு பூதமார் பல்படையான்
தொடைநவில் கொன்றையொடு வன்னி துன்னெருக் கும்மணிந்த
சடையவ னூர்பனந்தாட் டிருத் தாடகை யீச்சுரமே. 6

"மாலைசாத்தும், தாடகை மானங்காப்பான் தாழ்ந்து பூங்கச்சிட்டு ஈர்க்கும், பீடுறு கலையன் அன்பின் நிமிர்ந்த எம்பிரான் ஊர் ஈதால்" – திருவிளையாடற் புராணம். அர்ச்சனைப்படலம்

சிவபெருமான் வெற்றிக் கொடியாக இடபம் பொறித்த கொடி உடையவன். விண்ணுலகமும், மண்ணுலகமும், மற்றுமுள்ள எல்லா உலகங்களும் தன் திருவடி பதியுமாறு விசுவரூபம் எடுத்து ஆடவல்லவன். பலவகையான பூதகணங்களைப் படையாக உடையவன். கொன்றைமாலையோடு, வன்னி, எருக்கம் இவை அணிந்த சடையுடையவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் உறைவிடம் திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகையீச்சுரம் எனும் திருக்கோயிலாகும்.

**3466.** மலையவன் முன்பயந்த மட மாதையொர்
கூறுடையான்
சிலைமலி வெங்கணையாற் புர மூன்றவை
செற்றுகந்தான்
அலைமலி தண்புனலும் மதி யாடர
வும்மணிந்த
தலையவ னூர்பனந்தாட் டிருத் தாடகை
யீச்சுரமே. 7

சிவபெருமான் மலையரசன் பெற்றெடுத்த உமாதேவியைத் தன் திருமேனியின் ஒருபாகமாகக் கொண்டவன். மேரு மலையை வில்லாக்கி, அக்கினியைக் கணையாக்கி முப்புரங்களையும் எரித்துச் சாம்பலாகும்படி அழித்தவன். அலைகளையுடைய குளிர்ந்த கங்கையையும், சந்திரனையும், பாம்பையும் அணிந்த சடைமுடியுடையவன். அப்பெருமான் வீற்றிருந்தருளுவது திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகையீச்சுரம் என்னும் திருக்கோயிலாகும்.

பண்டைக்காலம் முதற்கொண்டே தமிழ்நூல்களையும் பிறநூல்களையும் தன்னகத்தே தாங்கி வந்த பனந்தாளின் (பனையேட்டின்) பெயரைக் கொண்டதே இவ்வூர். தமிழ் வளர்த்தற்குரியது என்பதற்கு அறிகுறியாகும். இன்றும் தமிழ்க்கல்லூரி அமைத்து திருப்பனந்தாள் காசி மடம் பெரும் பணி ஆற்றி வருகிறது.

---

**3467.** செற்றரக் கன்வலியைத் திரு மெல்விர
லாலடர்த்து
முற்றும்வெண் ணீறணிந்த திரு மேனியன்
மும்மையினான்
புற்றர வம்புலியின் னுரி தோலொடு
கோவணமும்
தற்றவ னூர்பனந்தாட் டிருத் தாடகை
யீச்சுரமே. 8

இராவணனது வலிமையைத் தன் மெல்லிய திருக்காற்பெருவிரலை ஊன்றி அழித்தவன். முற்றும் திருவெண்ணீறு அணிந்த திருமேனியுடையவன். உருவம், அருவம், அருவுருவம் என்ற மூவகைத் திருமேனிகளையுடையவன். புற்றில் வாழ்கின்ற பாம்பையும், புலித்தோலையும், கோவணத்தையும் ஆடையாக உடுத்தவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகையீச்சரம் என்னும் திருக்கோயிலாகும்.

செஞ்சடையப்பர் மேற்கு நோக்கியும், அம்பாள் வலப் பக்கத்தில் கிழக்கு நோக்கியும் உள்ளார்கள். இவ்வாறு உள்ளவற்றை உபதேச ஸ்தலம் என்பர். இவ்வூர்ப் பக்கத்தில் ஓடுவது சுப்பிரமணிய நதியாகும். இக்காலத்தில் அது மருவி மண்ணி என வழங்குகிறது.

---

**3468.** வின்மலை நாணரவம் மிகு வெங்கன
லம்பதனால்
புன்மைசெய் தானவர் தம் புரம் பொன்றுவித்
தான்புனிதன்
நன்மலர் மேலயனுந் நண்ணு நாரண
னும்மறியாத
தன்மைய னூர்பனந்தாட் டிருத் தாடகை
யீச்சுரமே. 9

சிவபெருமான் மேருமலையை வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பை நாணாகவும், மிகுந்த வெப்பமுடைய அக்கினியை அம்பாகவும் கொண்டு, தீமை செய்த அசுரர்களின் முப்புரங்களையும் எரித்துச் சாம்பலாகுமாறு அழித்தவன். நல்ல தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் அறியாத தன்மையன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் ஊரானது திருப்பனந்தாள் என்னும் திருத்தலமாகும். அங்குத் திருத்தாடகையீச்சரம் என்னும் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ளான்.

புறத்தே உள்ள உடம்பின் அழுக்கையும், அகத்தே உள்ள பாவ அழுக்கையும் மண்ணுவதாதலின் மண்ணி ? என மருவிற்றோ ?

| | |
|---|---|
| 3469. ஆதர் சமணரொடும் மடை யைந்துகில் போர்த்துழலும்<br>நீத ருரைக்குமொழி யவை கொள்ளன்மி னின்மலனூர்<br>போதவிழ் பொய்கைதனுட் டிகழ் புள்ளிரி யப்பொழில்வாய்த்<br>தாதவி ழும்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரமே. 10 | பயனிலிகளாகிய சமணர்களும், அழகிய துணிகளைப் போர்த்துத் திரிகின்ற புத்தர்களும் உரைக்கின்ற மொழிகளை ஏற்றுக் கொள்ளாதீர்கள். நின்மலனான சிவபெருமானது உறைவிடம் தாமரை மொட்டுகள் மலர்கின்ற பொய்கைகளில் புள்ளினங்கள் ஓடச் சோலைகளிலுள்ள மலர்களின் மகரந்தப் பொடிகள் உதிரும் திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்திலுள்ள திருத்தாடகையீச்சரம் என்னும் திருக்கோயிலாகும். |
| 3470. தண்வயல் சூழ்பனந்தாட் டிருத் தாடகை யீச்சரத்துக்<br>கண்ணய லேபிறையா னவன் றன்னைமுன் காழியர்கோன்<br>நண்ணிய செந்தமிழான் மிகு ஞானசம் பந்தனல்ல<br>பண்ணியல் பாடல்வல்லா ரவர் தம்வினை பற்றறுமே. 11 | குளிர்ந்த வயல்கள் சூழ்ந்த திருப்பனந்தாள் என்னும் திருத்தலத்தில், திருத்தாடகையீச்சரம் என்னும் திருக்கோயிலில், வீற்றிருந் தருளுகின்ற நெற்றிக் கண்ணின் அருகே பிறைச்சந்திரனை அணிந்துள்ள சிவபெருமானைப் போற்றி, சீகாழியில் அவதரித்த தலைவனான ஞானசம்பந்தன் செந்தமிழில் அருளிய நன்மைபயக்கவல்ல பண்ணோடு கூடிய இப்பாடல்களைப் பாட வல்லவர்களின் வினைகள் யாவும் அழியும். |

## 63. திருச்செங்காட்டங்குடி

பண் : பஞ்சமம் பதிக எண் : 63

| | |
|---|---|
| 3471. பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்<br>சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே<br>செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய<br>வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே. 1 | பசுமையான கிளைகளில் மலர்களையுடைய புன்னைமரத்தில் வீற்றிருக்கும் பறவைகளே! தலைவனான சிவபெருமான் என்னைப் பிரிந்ததால் உடம்பு பசலைநிறம் பெற, ஓடி ஆடி உல்லாசமாக இயங்கிய என் மகிழ்ச்சியை நீக்கி எனக்குத் தாங்காத துன்பம் தந்தான். அவன் திருச்செங்காட்டங்குடி என்னும் திருத்தலத்தில் சிறுத்தொண்டர் பணி செய்ய சுடுகாட்டுள், கையில் அனல் ஏந்தி திருநடனம் புரியும் பெருமானாவான். |

3472. பொன்னம்பூங் கழிக்கானற் புணர் துணையோ
டுடன்வாழும்
அன்னங்கா ளன்றில்கா ளகன் றும்போய்
வருவீர்காள்
கன்னவிறோட் சிறுத்தொண்டன் கணபதீச்
சரமேய
இன்னமுத னிணையடிக்கீ ழெனதல்ல
லுரையீரே. 2

ஊர் பெயர் – செங்காட்டங்குடி
கோயிலின் பெயர் – கணபதீச்சரம்
கயமுகாசுரனை விநாயகர் வதம் செய்த போது இரத்தம் வெள்ளமாகப் பெருகி ஓடியதால் செங்காடு என்ற பெயர் பெற்றது.

பொன் போன்ற மகரந்தத்தை உதிர்க்கும் புன்னைப் பூக்களையுடைய கடற்கரைச் சோலையில் தம் துணையோடு சேர்ந்து வாழும் அன்னப் பறவைகளே! அன்றில் பறவைகளே! நீங்கள் இச்சோலையிலிருந்து வெளி இடங்கட்கும் சென்று வரும் இயல்புடையவர்கள். கல் போன்று திண்மையான அழகிய தோள்களையுடைய சிறுத்தொண்டர் பணிசெய்யக் கணபதீச்சரம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்ற இனிய அமுது போன்ற சிவபெருமானின் திருவடிக்கீழ் இருந்து என்னுடைய துன்பத்தைச் சொல்லமாட்டீர்களா?

3473. குட்டத்துங் குழிக்கரையுங் குளிர்பொய்கைத்
தடத்தகத்தும்
இட்டத்தா லிரைதேரு மிருஞ்சிறகின்
மடநாராய்
சிட்டன்சீர்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங்
குடிமேய
வட்டவார் சடையார்க்கென் வருத்தஞ்சென்
றுரையாயே. 3

தடாகம், பொய்கை – மானிடர் ஆக்காத நீர் நிலை

குட்டை, குழி, குளிர்ந்த பொய்கை ஆகிய இடங்களில் விருப்பத்துடன் இரையைத் தேர்கின்ற பெரிய இரு சிறகுகளை உடைய இள நாரையே! புகழ்மிக்க சிறுத்தொண்டர் நியமத்தோடு வழிபடத் திருச்செங்காட்டங் குடியில் வீற்றிருந்தருளுகின்ற நீண்ட அடர்ந்த சடைமுடியுடைய சிவபெருமானிடம் சென்று என் வருத்தத்தை உரைக்க மாட்டாயோ? உரைப்பாயாக என்பது குறிப்பு.

3474. **கானருகும் வயலருகுங் கழியருகுங்
கடலருகும்**
மீனிரிய வருபுனலி லிரைதேர்வெண்
மடநாராய்
தேனமர் தார்ச் சிறுத்தொண்டன் செங்காட்டங்
குடிமேய
வானமருஞ் சடையார்க்கென் வருத்தஞ்சென்
றுரையாயே. 4

கடற்கரைச் சோலையின் அருகிலும், வயல், கழி, கடல் ஆகியவற்றின் அருகிலும் பெரும் நீரில் ஓடுகின்ற மீன்களை இரையாகத் தேரும் வெண்ணிறமான மட நாரையே! தேன் துளிக்கும் மாலைகளையுடைய சிறுத்தொண்டர் பணிசெய்யத் திருச்செங்காட்டங்குடியில் வீற்றிருந்தருளுகின்ற, மாலை வானம் போன்ற சிவந்த சடையுடைய சிவபெருமானிடம் சென்று என் வருத்தத்தை உரைப்பாயாக.

**3475.** ஆரலாஞ் சுறவமேய்ந் தகன்கழினிச்
சிறகுலர்த்தும்
பாரல்வாய்ச் சிறுகுருகே பயிறூவி மடநாராய்
சீருலாஞ் சிறுத்தொண்டன் செங்காட்டங்
குடிமேய
நீருலாஞ் சடையார்க்கென் நிலைமைசென்
றுரையீரே. 5

ஆரல், சுறவம் ஆகியன பாய்கின்ற அகன்ற கழனிகளில் சிறகுகளை உலர்த்துகின்ற நெடிய மூக்கையுடைய சிறிய உள்ளான் பறவையே! அடர்ந்த சிறகுடைய இளநாரையே! புகழ்மிக்க சிறுத்தொண்டர் பணி செய்ய திருச்செங்காட்டங்குடியில் வீற்றிருந் தருளுகின்ற கங்கையைத் தாங்கிய சடைமுடியையுடைய சிவபெருமானிடம் சென்று என்னுடைய நிலையினை உரைப்பீர்களாக.

---

கயமுகாசுரனைக் 'கொன்றதால் ஏற்பட்ட பிரம்மகத்தி தோசம் நீங்க விநாயகர் வழிபட்ட ஈச்சரம் கணபதீச்சரமாயிற்று.

---

**3476. குறைக்கொண்டா ரிடர்தீர்த்தல் கடனன்றே**
குளிர்பொய்கைத்
துறைக்கெண்டை கவர்குருகே துணைபிரியா
மடநாராய்
கறைக்கண்டன் பிறைச்சென்னிக் கணபதீச்
சரமேய
சிறுத்தொண்டன் பெருமான்சீ ரருளொருநாட்
பெறலாமே. 6

தங்களின் குறைகளைத் தீர்க்க வேண்டுபவர்களின் துன்பத்தைப் போக்குதல் தலைவரானவரின் கடமை அன்றோ? குளிர்ந்த குளத்தின் கரையில் கெண்டை மீனைக் கவர்ந்து இரையாகக் கொள்ளும் பறவையே! துணையைப் பிரியாதிருக்கும் மடநாரையே! நீலகண்டரும், பிறைச்சந்திரனைத் தலையிலே சூடியுள்ளவரும், கணபதீச்சரம் என்னும் திருக்கோயிலில் சிறுத்தொண்டரால் வழிபடப்படுபவரும் ஆகிய சிவபெருமானது சீராகிய எப்பிடத்து உதவும் பேரருளை நான் பெறுமாறு தூது சென்றுரைப்பீர்களாக!

---

**3477.** கருவடிய பசுங்கால்வெண் குருகேயொண்
கழிநாராய்
ஒருவடியா ளிரந்தாளென் றொருநாட்சென்
றுரையீரே
செருவடிதோட் சிறுத்தொண்டன் செங்காட்டங்
குடிமேய
திருவடிதன் திருவருளே பெறலாமோ
திறத்தவர்க்கே. 7

கரிய சேற்றில் அளைந்த பசுங்காலையுடைய வெண்குருகே! அழகிய கழியிலுள்ள நாரையே! போர் செய்வதால் வலிமை பெற்ற அழகிய வடிவுடைய தோள்களையுடைய சிறுத் தொண்டர் வழிபடுகின்ற திருச்செங் காட்டங்குடியிலுள்ள திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானின் திருவடிகளை வழிபடும் திறத்தவர்களே அவன் திருவருளைப் பெறலாமோ? ஓர் அடியாள் அவருடைய திருவருளைக் கெஞ்சி வேண்டினாள் என்று ஒரு நாளாவது சென்று அவரிடம் உரைப்பீராக!

---

"செங்காட்டங்குடி மேய சிறுத்தொண்டன் பணிசெய்ய பாண்டிமாதேவி பணிசெய்து பரவ அமர்ந்த குலச்சிறை குலாவி நின்றேத்தும் அடிகள் நக்கன் பரவ" அடியார் பணி சிறக்க இறைவர் இருந்த தன்மையைப் பிள்ளையார் பாடி மகிழ்கிறார். நாமும் பணி செய்து அப்பேற்றைப் பெறுவோம்.

| | |
|---|---|
| **3478.** கூரார லிரைதேர்ந்து குளமுலவி வயல்வாழும்<br>தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே<br>சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங்<br>குடிமேய<br>பேராளன் பெருமான்ற னருளொருநாட்<br>பெறலாமே.<br>8 | கூர்மையான அலகால் இரையைக் கொத்திக் குளங்களிலும், வயல்களிலும் வாழ்கின்ற தாரா என்ற பறவையே! மடநாரையே! என் பொருட்டுச் சிவபெருமானிடம் சென்று ஒரு செய்தியைச் சொல்வீராக! சிறந்த புகழுடைய சிறுத்தொண்டர் வழிபடுகின்ற திருச்செங்காட்டங்குடியில் வீற்றிருந் தருளுகின்ற கீர்த்தியுடைய சிவபெருமான் திருவருளை ஒருநாள் அடியேன் பெறுதல் இயலுமா? |
| **3479.** நறப்பொலிபூங் கழிக்கான னவில்குருகே<br>யுலகெல்லாம்<br>அறப்பலிதேர்ந் துழல்வார்க்கென் னலர்கோட<br>லழகியதே<br>சிறப்புலவான் சிறுத்தொண்டன் செங்காட்டங்<br>குடிமேய<br>பிறப்பிலிபேர் பிதற்றிநின் றிழக்கோவெம்<br>பெருநலமே. 9 | தேனுடைய பூக்கள் நிறைந்த கழியின் கரையிலுள்ள சோலையில் வாழ்கின்ற பறவையே! உலக மக்களெல்லாம் அறத்தைக் கருதி இடுகின்ற பிச்சையை ஏற்று உழல்கின்ற சிவபெருமானுக்குப் பிறர் என்னைத் தூற்றுமாறு செய்வது அழகாகுமா? சிறப்புடைய சிறுத்தொண்டன் வழிபடும் திருச்செங்காட்டங் குடியில் வீற்றிருந்தருளுகின்ற பிறப்பிலியாகிய சிவபெருமானுடைய திருநாமத்தைப் போற்றித் துதிசெய்யும் நான் எல்லாவிதப் பெருமைக்குரிய நலங்களை இழப்பது முறைமையா? |
| **3480.** செந்தண்பூம் புனல்பரந்த செங்காட்டங்<br>குடிமேய<br>வெந்தநீ றணிமார்பன் **சிறுத்தொண்ட**<br>**னவன்வேண்ட**<br>அந்தண்பூங் கலிக்காழி யடிகளையே யடிபரவும்<br>சந்தங்கொள் சம்பந்தன் றமிழுரைப்போர்<br>தக்கோரே. 10<br><br>சிறுத்தொண்டர் திருஞானசம்பந்தரை வேண்டி அவரை அழைத்துச் சென்று பாடியருளியதற்கு இப்பாடலே அகச்சான்று. | சிறந்த, குளிர்ந்த, அழகிய ஆறுபாயும் திருச்செங்காட்டங்குடியில் வீற்றிருந் தருளுகின்ற, திருவெண்ணீறு அணிந்த மார்புடைய சிவனை, சிறுத்தொண்டர் வழிபட்டபடி, அழகிய, குளிர்ந்த ஒலிமிக்க காழியிலுள்ள இறைவனின் திருவடிகளை வணங்கும் ஞானசம்பந்தன் சந்தம் மிகுந்த திருத்தமிழில் அருளிய இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள் மனிதப்பிறவி எடுத்ததன் தகுதியைப் பெற்றவராவர். |

## 64. திருப்பெருவேளூர் ( காட்டூர் ஐயன்பேட்டை )

பண் : பஞ்சமம் | பதிக எண் : 64

| | |
|---|---|
| 3481. அண்ணாவுங் கழுக்குன்று மாயமலை யவைவாழ்வார்<br>விண்ணோரு மண்ணோரும் வியந்தேத்த வருள்செய்வார்<br>கண்ணாவா ருலகுக்குக் கருத்தானார் புரமெரித்த<br>பெண்ணாணாம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 1 | சிவபெருமான் திருவண்ணாமலையும், திருக்கழுக்குன்றமும் ஆகிய மலைகளில் தம்மை அடைந்தோர்க்கு வாழ்வுதரும் பொருட்டு எழுந்தருளியுள்ளார். விண்ணுலகத் தவரும், மண்ணுலகத்தவரும் வியந்து போற்ற அருள்செய்வார். உலகிற்குக் கண்ணாக விளங்குபவர். வழிபடுபவர்களின் கருத்தில் இருப்பவர். முப்புரங்களை எரித்தவர். பெண்ணும், ஆணுமாக விளங்கும் அப்பெருமான் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தைப் பிரியாது வீற்றிருந் தருளுகின்றார். |
| 3482. கருமானி னுரியுடையர் கரிகாட ரிமவானார்<br>மருமானா ரிவரென்று மடவாளோ டுடனாவர்<br>பொருமான விடையூர்வ துடையார்வெண் பொடிப்பூசும்<br>பெருமானார் பிஞ்ஞகனார் பெருவேளூர் பிரியாரே. 2 | சிவபெருமான் கரியமானின் தோலை ஆடையாக உடுத்தவர். சுடுகாட்டில் ஆடுபவர். இமவான் மருமகன் இவர் என்று சொல்லும்படி உமாதேவியை உடனாகக் கொண்டவர். போர் புரிய வல்ல பெருமையையுடைய இடப வாகனத்தில் ஊர்ந்து செல்பவர். திருவெண்ணீற்றினைப் பூசியவர். பிஞ்ஞகன் என்று போற்றப்படும் அச்சிவபெருமான் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |
| 3483. குணக்குந்தென் றிசைக்கண்ணுங் குடபாலும் வடபாலும்<br>கணக்கென்ன வருள்செய்வார் கழிந்தோர்க்கு மொழிந்தோர்க்கும்<br>வணக்கம்செய் மனத்தராய் வணங்காதார் தமக்கென்றும்<br>பிணக்கஞ்செய் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 3<br><br>குணக்கு – கிழக்கு<br>குடபால் – மேற்கு | சிவபெருமான் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என எத்திசையிலுள்ளோர்க்கும் ஒன்றுபோல் அருள்புரிவார். அஞ்ஞானத்தால் நாள்களைக் கழிப்பவர்கட்கும், மெய்ஞ் ஞானத்தால் தம்மைப் போற்றுவார்கட்கும், மனத்தால் சிந்தித்துக் காயத்தால் தம்மை வழிபடும் அடியவர்கட்கும் அருள்புரிபவர். வணங்கிப் போற்றாதவர்கட்கு மாறுபாடாக விளங்குபவர். அப்பெருமான் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |

| | |
|---|---|
| **3484.** இறைக்கொண்ட வாளையாளோ டிருகூறா<br>யொருகூறு<br>மறைக்கண்டத் திறைநாவர் மதிலெய்த<br>சிலைவலவர்<br>கறைக்கொண்ட மிடறுடையர் கனல்கிளருஞ்<br>சடைமுடிமேல்<br>பிறைக்கொண்ட பெருமானார் பெருவேளூர்<br>பிரியாரே. **4** | சிவபெருமான், முன்கையில் வளையலணிந்த உமாதேவி ஒரு கூறாகவும், தாம் ஒரு கூறாகவும் இருகூறுடைய அர்த்தநாரியாய் விளங்குபவர். வேதங்களை அருளிச் செய்த நாவுடையர். மும்மதில்களை எய்த மேருமலையை வில்லாக உடையவர். நஞ்சை அடக்கியதால் கறைகொண்ட கண்டத்தர். நெருப்புப்போல் மிளிரும் ஒளிரும் சிவந்த சடையில் பிறையணிந்த பெருமானாகிய அவர் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |
| **3485.** விழையாதார் விழைவார்போல் விகிர்தங்கள்<br>பலபேசிக்<br>குழையாதார் குறைவார்போற் குணநல்ல<br>பலகூறி<br>அழையாவு மரற்றாவு மடிவீழ்வார் தமக்கென்றும்<br>பிழையாத பெருமானார் பெருவேளூர்<br>பிரியாரே. **5** | உலகப் பொருள்களில் பற்றுக் கொண்டு விழையாமல் இறைவன்பால் விழைந்து பலவாறு போற்றி, உலகியலில் மருள்கொண்டு குழையாது, இறைவனின் திருவருளில் குழைந்து அவன் புகழ்களைப் பலவாறு எடுத்துக்கூறி, "பெருமானே! அருள்புரிவீராக!" என அழைத்தும், அரற்றியும், அவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்குபவர்கட்கு என்றும் தவறாது உடனே அருள்புரியும் சிவபெருமான் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |
| **3486.** விரித்தார்நான் மறைப்பொருளை யுமையஞ்ச<br>விறல்வேழம்<br>உரித்தாரா முரிபோர்த்து மதின்மூன்று<br>மொருகணையால்<br>எரித்தாரா மிகைப்பளவி லிமையோர்க<br>டொழுதிறைஞ்சப்<br>பெருத்தாரெம் பெருமானார் பெருவேளூர்<br>பிரியாரே. **6** | சிவபெருமான் நான்மறைகளை விரித்துப் பொருள் உரைத்தவர். உமாதேவி அஞ்சும்படி யானையின் தோலை உரித்துப் போர்த்திக் கொண்டவர். மும்மதில்களையும் ஓர் அம்பினால் இமைக்கும் அளவில் எரித்தவர். தேவர்கள் வணங்கிப் போற்ற விசுவரூபம் கொண்ட எம்பெருமான் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |
| **3487.** மறப்பிலா வடிமைக்கண் மனம்வைப்பார்<br>தமக்கெல்லாம்<br>சிறப்பிலார் மதிலெய்த சிலைவல்லா<br>ரொருகணையால்<br>இறப்பிலார் பிணியில்லார் தமக்கென்றும்<br>கேடிலார்<br>பிறப்பிலாப் பெருமானார் பெருவேளூர்<br>பிரியாரே. **7** | இறைவர் தம்மை மறவாது தமக்கு அடியவர்களாய் விளங்குபவர்கள் மனத்தில் வீற்றிருப்பவர். சிறப்பில்லாத பகையசுரர்களின் மும்மதில்களை மேருமலையை வில்லாகக் கொண்டு, அக்கினியைக் கணையாக எய்து நெருப்புண்ணும்படி அழித்தவர். அவர் இறப்பற்றவர். நோயில்லாதவர். கேடு இல்லாதவர். பிறப்பில்லாத அப்பெருமான் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |

| பாடல் | பொருள் |
|---|---|
| **3488.** எரியார்வேற் கடற்றானை யிலங்கைக்கோன் றனைவீழ<br>முரியார்ந்த தடந்தோள்க ளடர்த்துகந்த முதலாளர்<br>வரியார்வெஞ் சிலைபிடித்து மடவாளை யொருபாகம்<br>பிரியாத பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 8 | நெருப்புப் போல் சிவந்த வேற்படை உடைய சேனைகளைக் கடல்போல் விரியப் பெற்றுள்ள இராவணன் அலறுமாறு, வலிமை வாய்ந்த அவனுடைய அகன்ற தோள்களை நெரித்துப் பின்னர் அவன் சாமகானம் பாடக் கேட்டுகந்த முதல்வரான சிவபெருமான், கட்டுக்களை யுடைய கொடிய வில்லேந்தி, உமாதேவியைத் தம் திருமேனியின் ஒருபாகமாகப் பிரியாது பெற்று, திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |
| **3489.** சேணியலு நெடுமாலுந் திசைமுகனுஞ் செருவெய்திக்<br>காணியல்பை யறிவிலராய்க் கனல்வண்ண ரடியிணைக்கீழ்<br>நாணியவர் தொழுதேத்த நாணாமே யருள்செய்து<br>பேணியவெம் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 9 | திருவிக்கிரமாவதாரத்தில் வானை அளந்த திருமாலும், பிரமனும் செருக்குற்றுத் தாமே தலைவர் எனக் கருதி இறைவனைத் தேட, அவனைக் காணும் முறையை அறியாதவராய், நெருப்பு வண்ணமாய் நின்ற சிவபெருமானின் திருவடிக்கீழ் நாணமுற்று நின்று தொழுது போற்ற, அவர்களின் நாணத்தைப் போக்கி அருள்செய்து பாதுகாத்த அப்பெருமான் திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதர் ஆவார். |
| **3490.** புற்றேறி யுணங்குவார் புகையார்ந்த துகில்போர்ப்பார்<br>சொற்றேற வேண்டாநீர் தொழுமின்கள் சுடர்வண்ணம்<br>மற்றேரும் பரிமாவு மதகளிறு மிவைபொழியப்<br>பெற்றேறும் பெருமானார் பெருவேளூர் பிரியாரே. 10 | புற்றேறும்படிக் கடுமையான தவத்தால் உடம்பை வாட்டும் சமணர்களும், மஞ்சட்காவியூட்டிய ஆடையை அணியும் புத்தர்களும் இறையுண்மையை உணராது கூறும் சொற்களை நீங்கள் ஏற்க வேண்டா. நெருப்புப் போன்று சிவந்த வண்ணமுடையவனும், தேரும், குதிரையும், யானையும் வாகனமாகக் கொள்ளாது, இடபத்தை வாகனமாகக் கொண்டுள்ள தலைவனுமான, திருப்பெருவேளூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பிரியநாதனை நீவிர் தொழுது வணங்குங்கள். |
| **3491.** பைம்பொன்சீர் மணிவாரிப் பலவுஞ்சேர் கனியுந்தி<br>அம்பொன்செய் மடவரலா ரணிமல்கு பெருவேளூர்<br>நம்பன்றன் கழல்பரவி நவில்கின்ற மறைஞான<br>சம்பந்தன் தமிழ்வல்லார்க் கருவினைநோய் சாராவே. 11 | அழகிய பொன்னையும், சிறந்த மணிகளான இரத்தினங்களையும், பலவகையான கனிகளையும் அடித்துக் கொண்டுவரும் காவிரியில், பொன்னாலாகிய அழகிய ஆபரணங்களை அணிந்த, நீராடும் மகளிர்கள் மிகுந்த திருப்பெருவேளூரில் வீற்றிருக்கும் சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி அருளிய வேதம்வல்ல ஞானசம்பந்தனின் இச்செந்தமிழ்ப் பதிகத்தை ஓத வல்லவர்களை அருவினைகளும், அவற்றால் வரும் பிறவி நோயும் சாரா. |

## 65. திருக்கச்சிநெறிக் காரைக்காடு

பண் : பஞ்சமம் பதிக எண் : 65

3492. வாரணவு முலைமங்கை பங்கினரா
யங்கையினில்
போரணவு மழுவொன்றங் கேந்திவெண்
பொடியணிவர்
காரணவு மணிமாடங் கடைநவின்ற
கலிக்கச்சி
நீரணவு மலர்ப்பொய்கை நெறிக்காரைக்
காட்டாரே. 1

காரைத் தருக்கள் செறிந்திருந்தமையால் காரைக்காடு எனப்பட்டது.

சிவபெருமான் கச்சு அணிந்த மெல்லிய முலையுடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவன். அழகிய கையில் போருக்குரிய மழுவை ஏந்தியவன். திருமேனியில் திருவெண் ணீற்றினைப் பூசியவன். மேகத்தைத் தொடும்படி உயர்ந்துள்ள இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மாளிகைகளையும், பிரளயகாலத்து ஒலியோ என்று சொல்லும் பேரோசையையுமுடைய காஞ்சியில், நீர் நிரம்பிய மலர்கள் பூத்துள்ள குளங்களையுடைய திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளுகின்றான்.

3493. காரூரு மணிமிடற்றார் கரிகாட
ருடைதலைகொண்
டூரூரன் பலிக்குழல்வா ருழைமானி
னுரியதளர்
தேரூரு நெடுவீதிச் செழுங்கச்சி
மாநகர்வாய்
நீரூரு மலர்ப்பொய்கை நெறிக்காரைக்
காட்டாரே. 2

சிவபெருமான் கார்மேகம் போன்ற நீலநிறமுடைய கண்டத்தார். கொள்ளிகள் கரிந்த சுடுகாட்டிலிருப்பவர். பிரமகபாலத்தைக் கையிலேந்தி ஊர்தோறும் சென்று பிச்சை எடுத்துத் திரிவார். மான்தோலை ஆடையாக உடுத்தவர். அப்பெருமான் தேரோடும் நீண்ட வீதிகளையுடைய செழிப்புடைய திருக்கச்சி மாநகரில் நீர் நிறைந்த, மலர்கள் பூத்துள்ள குளங்களையுடைய திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளுகின்றார்.

3494. கூறணிந்தார் கொடியிடையைக் குளிர்சடைமே
லிளமதியோ
டாறணிந்தா ராடரவம் பூண்டுகந்தா
ரான்வெள்ளை
ஏறணிந்தார் கொடியதன்மே லென்பணிந்தார்
வரைமார்பில்
நீறணிந்தார் கலிக்கச்சி நெறிக்காரைக்
காட்டாரே. 3

ஒலிநிறைந்த திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் கொடிபோன்ற இடையுடைய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாதியாகக் கொண்டவர். குளிர்ந்த சடைமீது இளம்பிறைச் சந்திரனோடு, கங்கை, பாம்பு இவற்றை அணிந்து மகிழ்ந்தவர். வெற்றிக் கொடியில் வெண்ணிற இடபத்தைக் கொண்டுள்ளார். மலைபோன்ற மார்பில் எலும்பு மாலையை அணிந்துள்ளார். திருநீற்றையும் அணிந்துள்ளார்.

| | |
|---|---|
| **3495.** பிறைநவின்ற செஞ்சடைகள் பின்றாழப் பூதங்கள்<br>மறைநவின்ற பாடலோ டாடலராய் மழுவேந்திச்<br>சிறைநவின்ற வண்டினங்கள் தீங்கனிவாய்த் தேன்கதுவும்<br>நிறைநவின்ற கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 4 | பிறைச்சந்திரனைச் சூடிய சிவந்த சடைகள் பின்பக்கம் தொங்க, பூதகணங்கள் நால்வேதங்களை ஓதப் பாடலும், ஆடலும் கொண்டு மழுப்படை ஏந்திச் சிவபெருமான் விளங்குகின்றார். அப்பெருமான் சிறகுகளையுடைய வண்டுகள் இனிய கனிகளில் சொட்டும் தேனை உறிஞ்சி உண்ட மகிழ்ச்சியில் இன்னொலி செய்யும் திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந் தருளுகின்றார். |
| **3496.** அன்றாலின் கீழிருந்தங் கறம்புரிந்த வருளாளர்<br>குன்றாத வெஞ்சிலையிற் கோளரவ நாண்கொளுவி<br>ஒன்றாதார் புரமூன்று மோங்கெரியில் வெந்தவிய<br>நின்றாருங் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 5 | சிவபெருமான் அன்று ஆலமரநிழலில் கீழிருந்து சனகாதி முனிவர்கட்கு அறம் உரைத்த அருளாளர். குன்றாத வலிமையுடைய மேருமலையை வில்லாகக் கொண்டு, கொல்லும் தன்மையுடைய பாம்பை நாணாகப் பூட்டி, பகையசுரர்களின் முப்புரங்களை மிக்க நெருப்பில் வெந்தழியும்படி செய்தவர். அப்பெருமான் ஒலிமிகுந்த திருக்கச்சி நெறிக்காரைக் காட்டில் வீற்றிருந் தருளுகின்றார். |
| **3497.** பன்மலர்கள் கொண்டடிக்கீழ் வானோர்கள் பணிந்திறைஞ்ச<br>நன்மையிலா வல்லவுணர் நகர்மூன்று மொருநொடியில்<br>வின்மலையி னாண்கொளுவி வெங்கணையா லெய்தழித்த<br>நின்மலனார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 6 | தேவர்கள் பலவகையான மலர்களைத் தூவி இறைவனின் திருவடிக்கீழ்ப் பணிந்து வணங்க, நன்மைபுரியாது தீமை செய்த வலிய அசுரர்களின் மூன்று நகரங்களையும், ஒரு நொடியில், மேருமலையை வில்லாகக் கொண்டு, வாசுகி என்னும் பாம்பை நாணாகக் கொண்டு அக்கினியாகிய அம்பை எய்து அழித்த, இயல்பாகவே பாசங்களின் நீங்கிய சிவபெருமான் ஒலிமிக்க திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3498.** புற்றிடை வாளரவினொடு புனைகொன்றை மதமத்தம்<br>எற்றொழியா வலைபுனலோ டிளமதிய மேந்துசடைப்<br>பெற்றுடையா ரொருபாகம் பெண்ணுடையார் கண்ணமரும்<br>நெற்றியினார் கலிக்கச்சி நெறிக்காரைக் காட்டாரே. 7 | சிவபெருமான் புற்றில் வாழும் ஒளிமிக்க பாம்பையும், கொன்றை மலரையும், ஊமத்தை மலரையும் அணிந்து, ஓய்தல் இல்லாது அலைவீசும் கங்கையோடு, பிறைச்சந்திரனையும் தாங்கிய சடையையுடையவர். தம் திருமேனியில் ஒருபாகமாக உமாதேவியைக் கொண்டவர். நெற்றிக்கண்ணையுடையவர். அப்பெருமான் ஒலிமிக்க திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளுகின்றார். |

| | | |
|---|---|---|
| **3499.** ஏழ்கடல்சூழ் தென்னிலங்கைக் கோமானை<br>யெழில்வரைவாய்த்<br>தாழ்விரலா லூன்றியதோர் தன்மையினார்<br>நன்மையினார்<br>ஆழ்கிடங்குங் சூழ்வயலு மதில்புல்கி<br>யழகமரும்<br>நீண்டமறுகிற் கலிக்கச்சி நெறிக்காரைக்<br>காட்டாரே. | 8 | ஏழுகடல் சூழ்ந்த இலங்கை மன்னனான இராவணனை அழகிய கயிலையின் கீழ் நொறுங்கும்படி தம் காற்பெருவிரலை ஊன்றி வலியழித்த தன்மையுடையவர் சிவபெருமான். அவர் எவ்வுயிர்க்கும் நன்மையே செய்வார். அப்பெருமான் ஆழ்ந்த அகழியும், சுற்றிய வயல்களும், மதில்களும் நிறைந்த அழகுடன் திகழும், நீண்ட வீதிகளையுடைய ஒலிமிக்க திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3500.** ஊண்டானு மொலிகடனஞ் சுடைதலையிற்<br>பலிகொள்வர்<br>மாண்டார்தம் மெலும்பணிவர் வரியரவோ<br>டெழிலாமை<br>பூண்டாரு மோரிருவ ரறியாமைப்<br>பொங்கெரியாய்<br>நீண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக்<br>காட்டாரே. | 9 | சிவபெருமானின் உணவு ஒலிக்கின்ற கடலில் தோன்றிய நஞ்சு, உடைந்த தலையாகிய பிரமகபாலத்தை ஏந்திப் பிச்சையேற்றுத் திரிவார். இறந்த தேவர்களின் எலும்புகளை மாலையாக அணிந்தவர். வரிகளையுடைய பாம்போடு, அழகிய ஆமையோட்டையும் அணிந்தவர். திருமால், பிரமன் இருவரும் அறியாவண்ணம் ஓங்கிய நெருப்புப் பிழம்பாய் நின்றவர். அப்பெருமான் ஒலிமிக்க திருக்கச்சி நெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3501.** குண்டாடிச் சமண்படுவார் கூறைதனை<br>மெய்போர்த்து<br>மிண்டாடித் திரிதருவா ருரைப்பனகண்<br>மெய்யல்ல<br>வண்டாருங் குழலாளை வரையாகத்<br>தொருபாகம்<br>கண்டாருங் கலிக்கச்சி நெறிக்காரைக்<br>காட்டாரே. | 10 | விதண்டாவாதம் பேசி நல்லூழ் இல்லாமையால் சமண சமயம் சார்ந்தோரும், மஞ்சள் காவியாடையை உடம்பில் போர்த்திய வலிய உரைகளைப் பேசித் திரியும் புத்தர்களும், இறையுண்மையை உணராதவர்கள். ஆதலால் அவர்கள் பேசுவதை விடுத்து, வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவியைத் தன் மலை போன்ற திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டு கண்டவர்கள் மகிழும்படி ஒலிமிக்க திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைப் போற்றி வணங்குங்கள். |
| **3502.** கண்ணாருங் கலிக்கச்சி நெறிக்காரைக்<br>காட்டுறையும்<br>பெண்ணாருந் திருமேனிப் பெருமான<br>தடிவாழ்த்தித்<br>தண்ணாரும் பொழிற்காழித் தமிழ்ஞான<br>சம்பந்தன்<br>பண்ணாருந் தமிழ்வல்லார் பரலோகத்<br>திருப்பாரே. | 11 | கண்ணுக்கு இனிமை தரும் ஒலிமிக்க திருக்கச்சிநெறிக் காரைக்காட்டில் வீற்றிருந்தருளும், தன் திருமேனியின் ஒரு பாகமாக உமாதேவியை வைத்த சிவபெருமான் திருவடிகளை வாழ்த்தி, குளிர்ச்சி பொருந்திய அழகிய சோலைகள் சூழ்ந்த சீகாழியில் அவதரித்த தமிழ் ஞானசம்பந்தன் அருளிய பண்ணோடு கூடிய இத்தமிழ்த் திருப்பதிகத்தை ஓதவல்லவர்கள் இறைவனுலகில் இருப்பதாகிய சாலோக பதவியை அடைவர். |

## 66. திருவேட்டக்குடி

பண் : பஞ்சமம் பதிக எண் : 66

3503. வண்டிரைக்கும் மலர்க்கொன்றை
விரிசடைமேல் வரியரவம்
கண்டிரைக்கும் பிறைச்சென்னிக்
காபாலி கனைகழல்கள்
தொண்டிரைத்துத் தொழுதிறைஞ்சத்
துளங்கொளிநீர்ச் சுடர்ப்பவளம்
தெண்டிரைக்கள் கொணர்ந்தெரியுந்
திருவேட்டக் குடியாரே. 1

வண்டுகள் ஆரவாரிக்கும் கொன்றை மாலையை விரிந்த சடையின்மேல் அணிந்து, வரிகளையுடைய பாம்பைக் கண்டு பயத்தால் ஆரவாரிக்கும் சந்திரனைச் சடையில் சூடியுள்ள சிவபெருமானின் வீரக்கழல்கள் அணிந்த திருவடிகளைத் தொண்டர்கள் ஆரவாரித்துப் போற்றி வணங்க, விளங்குகின்ற ஒளியையுடைய கடலிலுள்ள சுடர்போல் செந்நிறமான பவளத்தை அலைகள் கொணர்ந்து எறியும் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் அவர் வீற்றிருந்தருளுகின்றார்.

இறைவர் வேடர் உருவுடன் அருச்சுனனுக்காக வெளிப்பட்டு அருளிய தலமாதலின் வேட்டக்குடி.

3504. பாய்திமிலர் வலையோடு
மீன்வாரிப் பயின்றெங்கும்
காசினியிற் கொணர்ந்தட்டுங்
கைதல்சூழ் கழிக்கானல்
போயிரவிற் பேயோடும்
புறங்காட்டிற் புரிந்தழகார்
தீயெரிகை மகிழ்ந்தாருந்
திருவேட்டக் குடியாரே. 2

வலைஞர்கள் பாய்ந்து செல்லும் படகுகளில், வலையுடன் கடலில் எப்பக்கமும் திரிந்து வலைவீசி மீன்களைப் பிடித்து வாரி தரைக்குக் கொண்டு வந்து குவிக்கும் தாழை சூழ்ந்த கழியுடைய சோலை விளங்க, நள்ளிரவில் பேய்க் கூட்டங்களோடு சுடுகாட்டில் கையில் நெருப்பேந்தி நடனம் ஆடும் சிவபெருமான் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருள்கின்றான்.

கோயிலின் கிழக்கே கடற்கரையோரம் நாடோறும் இரவில் தீ எரிவது போன்ற காட்சி காணப்படுகிறது. தீயெரிகை அதைக் குறிப்பதாக இருக்கலாம்.

3505. தோத்திரமா மணலிலிங்கந்
தொடங்கியவா னிரையிற்பால்
பாத்திரமா வாட்டுதலும்
பரஞ்சோதி பரிந்தருளி
ஆத்தமென மறைநால்வர்க்
கறம்புரிநூ லன்றுரைத்த
தீர்த்தமல்கு சடையாருந்
திருவேட்டக் குடியாரே. 3

வழிபாடு செய்வதற்காக மணலில் இலிங்கத்தை அமைத்து, தாம் மேய்க்கும் பசுக்கூட்டங்களின் பாலைப் பாத்திரத்தில் பொருந்தக் கொண்டு, அபிடேகம் செய்து வழிபட்ட சண்டேசுரர்க்கு மேலான சோதிவடிவை அருள்புரிந்தவன் சிவபெருமான். தனக்கு அன்பர் என்று வேதங்களில் வல்ல சனகாதி முனிவர் நால்வர்க்கும் அன்று அறம் உரைத்தவன் சிவபெருமான். அப்பெருமான் புனித தீர்த்தமாகிய கங்கையைச் சடையிலே தாங்கித் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான்.

| | |
|---|---|
| **3506.** கலவஞ்சேர் கழிக்கானல்<br>கதிர்முத்தங் கலந்தெங்கும்<br>அலவஞ்சே ரணைவாரிக்<br>கொணர்ந்தெறியு மகன்றுறைவாய்<br>நிலவஞ்சேர் நுண்ணிடைய<br>நேரிழையா ளவளோடும்<br>திலகஞ்சேர் நெற்றியினார்<br>திருவேட்டக் குடியாரே. 4 | மயில்கள் தோகை விரித்து ஆடும் கடற்கரைச் சோலைகளை உடைய, கடல் நண்டுகள் சேர்ந்த குவியல்களை வாரிக்கொணர்ந்து சேர்க்கின்ற காவிரியின் அகன்ற கரையில், ஒளி பொருந்திய குறுகிய இடையை உடைய அழகான அணிகலன்களை அணிந்த உமாதேவியோடு, திலகம் போன்று சுடர்தரும் நெற்றியுடைய சிவபெருமான் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந் தருளுகின்றான். |
| **3507.** பங்கமார் கடலலறப்<br>பருவரையோ டரவுழலச்<br>செங்கண்மால் கடையவெழு<br>நஞ்சருந்துஞ் சிவமூர்த்தி<br>அங்கநான் மறைநால்வர்க்<br>கறம்பொருளின் பயனளித்த<br>திங்கள்சேர் சடையாருந்<br>திருவேட்டக் குடியாரே. 5 | சேறாகும் வண்ணம் கடல்நீர் அலைப்புற, மேருமலையை மத்தாகவும், வாசுகி என்ற பாம்பைக் கயிறாகவும் கொண்டு, சிவந்த கண்களையுடைய திருமால் முன்னின்று கடைய எழுந்த நஞ்சையருந்தியவர் சிவமூர்த்தி. நால் வேதங்களையும், அவற்றின் ஆறங்கங்களையும் உணர்ந்த சனகாதிமுனிவர்கள் நால்வர்க்கும் அறநூற் பொருளின் பயனாகிய அனுபவத்தை உணர்த்தியருளிய பிறை சூடிய சடையையுடைய சிவபெருமான் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3508.** நாவாய பிறைச்சென்னி<br>நலந்திகழு மிலங்கிப்பி<br>கோவாத நித்திலங்கள்<br>கொணர்ந்தெறியுங் குளிர்கானல்<br>ஏவாரும் வெஞ்சிலையா<br>லெயின்மூன்று மெரிசெய்த<br>தேவாதி தேவனார்<br>திருவேட்டக் குடியாரே. 6 | சிவபெருமான் தோணி போன்ற வடிவுடைய பிறைச்சந்திரனைச் சடையிலே தரித்தவர். அழகாய் விளங்கும் சங்குப்பூச்சிகளையும், கோத்தற்குரிய துளையில்லாத நல்முத்துக்களையும் கடலலைகள் கொணர்ந்து சேர்க்கின்ற குளிர்ந்த கடற்கரைச் சோலைகளையுடைய திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் அக்கினியாகிய கணையினால் மேருமலையை வில்லாகக் கொண்டு முப்புரங்களை எரித்த தேவாதி தேவனான அச்சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3509.** பானிலவும் பங்கயத்துப்<br>பைங்கானல் வெண்குருகு<br>கானிலவு மலர்ப்பொய்கைக்<br>கைதல்சூழ் கழிக்கானல்<br>மானின்விழி மலைமகளோ<br>டொருபாகம் பிரிவரியார்<br>தேனிலவு மலர்ச்சோலைத்<br>திருவேட்டக் குடியாரே. 7 | பால்போல் விளங்குகின்ற வெண்தாமரையானது ஒளிர, பசுமை வாய்ந்த கடற்கரைச் சோலைகளில் வெண்ணிறப் பறவைகள் விளங்க, மணம் வீசும் மலர்களையுடைய குளங்களும், தாழைகள் சூழ்ந்த கடற்கரைச் சோலைகளும், தேன்துளிர்க்கும் மலர்ச் சோலைகளும் விளங்கும் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில், மான் போன்ற மருண்ட பார்வையுடைய மலைமகளான உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு பிரிதலில்லாமல் வீற்றிருந்தருளுகின்றார் சிவபெருமான். |

| | | | |
|---|---|---|---|
| 3510. | துறையுலவு கடலோதஞ்<br>சுரிசங்க மிடறிப்போய்<br>நறையுலவும் பொழிற்புன்னை<br>நன்னீழற் கீழமரும்<br>இறைபயிலு மிராவணன்றன்<br>றலைபத்து மிருபதுதோள்<br>திறலழிய வடர்த்தாருந்<br>திருவேட்டக் குடியாரே. | 8 | கரையை வந்தடைகின்ற கடலலைகள் சுரி சங்குகளை வீச, தேன் துளிக்கும் நறுமணமுடைய புன்னை மரங்கள் நிறைந்த சோலைகள் நிழலைத்தரத் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் இலங்கை வேந்தனான இராவணனின் தலைகள் பத்தும் இருபது தோள்களும் வலிமை இழக்குமாறு அடர்த்தவர். |
| 3511. | அருமறைநான் முகத்தானு<br>மகலிடநீ ரேற்றானும்<br>இருவருமா யளப்பரிய<br>வெரியுருவாய் நீண்டபிரான்<br>வருபுனலின் மணியுந்தி<br>மறிதிரையார் சுடர்ப்பவளத்<br>திருவுருவில் வெண்ணீற்றார்<br>திருவேட்டக் குடியாரே. | 9 | அரிய நால்வேதங்களையும் கற்ற பிரமனும், மாவலிச் சக்கரவர்த்தியிடம் மூன்றடி நிலம் வேண்டி நீர் ஏற்ற திருமாலும் ஆகிய இருவரும் அளந்தறிய முடியாவண்ணம் நெருப்புப் பிழம்பாய் ஓங்கி நின்றவர் சிவபெருமான். பெருக்கெடுத்துவரும் காவிரியாற்றின், வீசுகின்ற அலைகள் மணிகளை உந்தித் தள்ளிச் சேர்க்கும் வளமிகுந்த திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில், சுடர்விடும் பவளம் போன்ற தம் திருமேனியில் திருவெண்ணீறு பூசப் பெற்றவராய், சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |
| 3512. | இகழ்ந்துரைக்கும் சமணர்களு<br>மிடும்போர்வைச் சாக்கியரும்<br>புகழ்ந்துரையாப் பாவிகள்சொற்<br>கொள்ளேன்மின் பொருளென்ன<br>நிகழ்ந்திலங்கு வெண்மணலி<br>ணிறைத்துண்டப் பிறைக்கற்றை<br>திகழ்ந்திலங்கு செஞ்சடையார்<br>திருவேட்டக் குடியாரே. | 10 | வேதவேள்வியை நிந்தனை செய்யும் சமணர்களும், பௌத்தர்களும் இறைவனைப் புகழ்ந்துரையாத பாவிகள். ஆதலால் அவர்களுடைய சொற்களைப் பொருளெனக் கொள்ள வேண்டா. வெண்மணலைப் போன்ற ஒளிக்கற்றையுடைய பிறைச்சந்திரனைச் சிவந்த சடையில் கொண்டு திகழும் சிவபெருமான் திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமானைப் போற்றி வழிபடுங்கள். |
| 3513. | தெண்டிரைசேர் வயலுடுத்த<br>திருவேட்டக் குடியாரைத்<br>தண்டலைசூழ் கலிக்காழித்<br>தமிழ்ஞான சம்பந்தன்<br>ஒண்டமிழ்நூ லிவைபத்து<br>முணர்ந்தேத்த வல்லார்போய்<br>உண்டுடுப்பில் வானவரோ<br>டுயர்வானத் திருப்பாரே. | 11 | தெளிந்த நீர் அலைகளையுடைய வயல்கள் நிறைந்த திருவேட்டக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைப் போற்றி, சோலைகள் சூழ்ந்த, திருவிழாக்களின் ஓசை மிகுந்த சீகாழியில் அவதரித்த தமிழ் ஞானசம்பந்தன் ஒண்தமிழில் அருளிய இத்திருப்பதிகத்தை நன்கு பொருளுணர்ந்து ஏத்தியும், ஓதியும் வழிபடுபவர்கள் மானிடர்களைப் போல் **உண்டலும், உடுத்தலும் இல்லாது வேறுபட்ட தன்மையுடைய தேவர்களை ஒத்து உயர் வானுலகில் இருப்பர்.** |

# சாதாரி

இது செவ்வழி யாழ் என்ற பெரும்பண்ணின் நான்காம் திறமாகிய முல்லையில் புறநிலைப் பண்ணாக எண் 98 பெற்றுள்ளது. சாரங்கதேவர் இதைச் சாதாரிதா என்று சொல்வார். இது 22–ஆவது மேளம் கரகரப்பிரியாவில் தோன்றியது எனக் கருதுவர். மதுரைச் சோமசுந்தரக் கடவுளே இப்பூவுலகில் வந்து இதை விறகுசுமந்து பாடிய சிறப்புக் காரணமாக இதற்குத் தேவமனோகரி என்ற ஒரு பெயரும் சொல்வதுண்டு. ஆனால் பொதுவாக இன்று பந்துவராளிக்கு நேரானதென்றே கருதப்படுகிறது. இதற்குச் சுவை வீரமும் வெகுளியும், சம்பந்தர் அப்பர் இருவரும் இப்பண்ணில் பாடியுள்ளனர். சம்பந்தர் திருமுறை 3:67–99: அப்பர் 9ஆம் பதிகம் மட்டும் சம்பந்தர் சில திருவிஇராகப் பதிகங்கள்; முடிந்த இசைபோதும் என்று சொல்லுகின்ற "கோழை மிடறாக கவிகோளும் இலவாக இசைகூடும் வகையால்" என்ற பதிகம், மதுரையில் ஏட்டை நெருப்பிலிட்டுப் பாடிய தளிரிள வளரொளி, அய்யர் சுவாமிகள் பதிகம் "தலையே நீ வணங்காய்" என்பது. இதில் பிற்காலக் கீர்த்தனையின் தொடக்ககால அமைப்பைக் காணமுடிகின்றது என்பது அவர் இசையைப் பேசிய இடத்தில் சொல்லப்பட்டுள்ளது. இது பகற்பண், பகல் நாழிகை 15–18க்குரியது என்றும் சொல்லப்பெறும்.

இனி சாதாரியானது தமிழ் இலக்கிய உலகில் சிறப்பிடம் பெற்ற ஒரு பண். மதுரையில் அயல்நாட்டு இசைவலான் ஒருவன் வந்து பாண்டியன் முன்சென்று "இசையில் என்னை வெல்வார் உன் அரசவையில் உளரோ ?" என்று சவால் விடுத்தான் பாண்டியன் தன் அவை இசைப்புலவராகிய பாணபத்திரனை அழைத்து, "இவனுடைய சவாலை நீ ஏற்று இவனை இசைப்போட்டியில் வெல்ல வல்லாயோ ?" எனக் கேட்டலும், பாணபத்திரன் "சுந்தரேசப் பெருமான் அருளால் வெல்வேன்" என்று அரசவைக்கு ஏற்ப விடை பகர்ந்தானேயன்றி வந்த எதிரியின் இசைப்புலமையைக் கண்டு அஞ்சினான் உத்தம பக்தனாகிய இவன் ஆலயமடைந்து இறைவனிடத்துத் தனது அச்சநிலையைச் சொல்லி முறையிடவும், சுந்தரேசப் பெருமான் வயது முதிர்ந்த விறகுவெட்டியாக மாறித் தலையில் விறகுக்கட்டும் தோளில் கோடாரியும் சுமந்து, வீதியெங்கும் விறகு விலைக்குக் கூறிவந்து அயலான் தங்கியிருந்த வீட்டின் திண்ணையில் விறகுக் கட்டினையும் கோடாரியையும் ஒரு மூலையில் சாத்தி வைத்து ஒரு சாதாரிப் பண்ணைப் பாடினார். அது சாதாரண மானுடனனால் பாடி முடியாத தெய்வ கீதமாதலால், கேட்டு "பதினாலுலகும் உருகின". அயலூர்ப் பாணன் கேட்டு அதிசயித்து வெளிவந்து, நீயாரென்று வினவுதலும், இறைவன் "நான் இசைவல்லேனல்லேன் நான் பாணபத்திரனுக்கு ஏவல் செய்யும் அடிமை" என்றார். கேட்ட அயலான் நடுங்கிப்போய் அடிமையே இவ்வாறு பாடுவானானால் இசைவாணனான பாணபத்திரன் பாட்டு எப்படியிருக்கும் என்று எண்ணி, மறுநாள் போட்டியில் தோற்று அவமானமடைவது நிச்சயம் என்று கருதி இரவோடேயே நகரைவிட்டு ஓடிவிட்டான். இந்தக் கதையைப் பெரும்பற்றப் புலியூர்நம்பி தாம் பாடிய திருவாலவாயுடையார் திருவிளையாடல் என்ற (13–ஆம் நூற்றாண்டு) புராணத்தில் 54 "சாதாரி பாடின திருவிளையாடல்" என்றே பெயரிட்ட படலத்தில் 50 பாடல்களால் விரிவாகப் பாடியிருக்கிறார். இக்கதை சாதாரிக்குக் கிடைத்த சிறப்பு எவ்வளவு பழமையானது என்பதை உணர்த்தும்.

18–ஆம் நூற்றாண்டில் மிகச்சிறந்த கவிஞரும் பக்தருமான பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் என்ற பெயரிட்டு அதே கதைகளை இன்னும் விரிவாகவும் இலக்கியச் சுவைபடவும் ஒரு பெருநூலாகப் பாடினார். அதனுள் இதே வரலாற்றை 41 விறகு விற்ற படலம் என்ற பெயரால் 70 பாடல்களால் பாடியிருக்கிறார்.

இங்கும் இவர் மதுரைப்பெருமான் வேற்றூர்ப் பாணர் தலைவாயிலில் சென்று சாதாரிப் பண்ணாகிய தேவகீதம் பாடவும், முன்சொல்லியதுபோல, அவன் கேட்டு அப்பாடலின் இசைச் சிறப்புக்கு நாணி இரவே ஓடிவிட்டான் என்று சொல்லுகிறார். இவ்வாறு இவ்விரு புராணக்காரரும் சிவபெருமானே வந்து தம் அருள் திறத்தாலே சாதாரி பாடினார் என்று கதை படைத்திருக்கிறார்கள். இவ்விடத்துப் பரஞ்சோதி முனிவர் சிவபெருமான் பாடியதாக, ஒருபொருள்மேல் மூன்றடுக்கி வந்த தாழிசைகளாக மூன்று பாடல்களைத் தருகிறார். இவ்வரலாறுகள் சாதாரிப் பண்ணுக்கு ஒரு தனி ஏற்றம் கற்பிப்பனவாகும்.

பரஞ்சோதி முனிவர் இதனை முல்லைப்பண் என்றும் தேவகீதம் என்றும் சொல்வதால் பின்னோர் இவ்விசை தேவகாந்தாரி என்றும் சொல்லியிருக்கிறார்கள். புராணக்காரர் இருவரும் இசையில்வல்ல பெரும்புலவர்கள் என்பதை அவர்கள் இசைபற்றிச் சொல்லும் விரிவான செய்திகளால் நாம் உணகிறோம்.

**சார்ந்து தரிப்பது - சாதாரி**

**சாதாரிப் பண்ணின் இலக்கணம்**

தாரியாம் வழியிற் சார்ந்து நடைகொள்
ளியலும் வழிமொழிந் தேகுநிலையும்
ஒத்த யாழிசையும் முற்று மோனையும்
சார்தர வமைந்தது சாதாரிப் பண்

**பொருள்**

தாரி என்னும் வாசி, நடைப்பாட்டையில் ஆவளி செல்லுமாறு செய்யும் வழியினைத் தெளிவாக விளக்கி, ஒத்த யாழிசையும், முற்று மோனையும் பொருந்தி அமைந்தது சாதாரிப்பண்ணாகும்.

வாசி (பிராணவாயு) மூக்கின் வழிச் சென்று வீணாகி விடாமல், பிரமரந்திரம் என்னும் சிரத்தின் நடுவே அமைந்திருக்கும் சிறு நுண்துவாரத்தைத் துளைத்து மேலே சென்று பிடரி மார்க்கமாக முன்னந் தண்டின் வழியே கீழ் மூலத்தைச் சார்ந்து, அப்பயிற்சியே நெடுங்காலம் மேற்கொண்டு செய்து மூலக்கனலை எழுப்பி மேல் மண்டலஞ்சார்ந்து, ஆண்டுள்ள சந்திரகலை அமுதஞ் சுரப்பதனை கீழ் மூலத்தின் நிரப்பி அதனை நரம்புத் தாரையிலும், நாடித் தொகுதியிலும் பாயும்படி செய்து நிலைபெறச் செய்யும் வழியினை பண்பாடல் மூலம் சிறந்த கலையாக்கி அழகு பெறக் கூறுதலே சாதாரி என்னும் பண்ணில் கூறப்படும் உட்பொருள் விளக்கமாகும்.

"காயத்துள் அமுது ஊறஊற நீ கண் டுகொள்
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளை தொறு ஏற்றினன்"

என்ற திருவாசக அடிகள் இப்போது நன்கு விளங்கும்.

## 67. திருப்பிரமபுரம் ( வழிமொழித் திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 67

**3514.** சுரருலகு நரர்கள்பயி றரணிதல
முரணழிய வரணமதின்முப்
புரமெரிய விரவுவகை சரவிசைகொள்
கரமுடைய பரமனிடமாம்
வரமருள வரன்முறையி னிரைநிறைகொள்
வருசுருதி சிரவுரையினாற்
பிரமனுய ரரனெழில்கொள் சரணவிணை
பரவவளர் **பிரமபுரமே.** 1

சீகாழிப் பன்னிரு பெயர்களும் வந்த வரலாற்றினை அவ்வாறே மொழியப்படுகிறது.

தேவர்கள் வாழ்கின்ற விண்ணுலகமும், மனிதர்கள் வாழ்கின்ற இப்பூவுலகமும் வலிமை அழியும்படி துன்புறுத்திய, காவலாகக் கோட்டை மதில்களையுடைய முப்புரங்களையும் எரிந்து சாம்பலாகுமாறு ஓர் அம்பை விரைவாகச் செலுத்தும் ஆற்றலுடையவர் சிவபெருமான். எல்லாச் சுரங்களும் வரிசைபெற அமைந்த, வேதசிரமாகிய உபநிடத உரைகளை வரன்முறையோடு ஓதி, அரனாரின் எழில் மிகுந்த புகழை எடுத்துரைத்துச் சரணடைந்து அவர் இணை மலரடியைத் தான் வரம் பெற வேண்டிப் பிரமன் துதித்தலால் புகழால் ஓங்கிய பிரமாபுரம் எனப்பட்டது.

**3515.** தாணுமிகு வாணிசைகொ டாணுவியர்
பேணுமது காணுமளவிற்
கோணுநுத னீணயனி கோணில்பிடி
மாணிமது நாணும்வகையே
ஏணுகரி பூணழிய வாணியல்கொண்
மாணிபதி சேணமரர்கோன்
வேணுவினை யேணிநகர் காணிறிவி
காணநடு **வேணுபுரமே.** 2

பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பைநகர், காழி, கொச்சைவயம், கழுமலம் என்ற 12 பெயர்களையும் வரிசை மாறாமலே மந்திரமாக உச்சரிப்பது மரபு.

வேணு – மூங்கில், ஓரிந்திரன்

தன்னை அன்பால் வழிபடும் தேவர்கள் கயமுகாசுரனால் துன்புற்று அஞ்சி வழிபட, நிலைபெற்ற சிவபெருமான் வலிமைமிகுந்த ஆண்யானையின் வடிவம் கொண்டருளினார். வளைந்த நெற்றியையும், நீண்ட கண்களையுமுடைய உமாதேவி குற்றமில்லாதபடி பெண் யானையின் உருவை எடுத்தாள். மது என்னும் அசுரன் வெட்கப்படும்படியும், வலிமைகொண்டு தீமை செய்த கயமுகாசுரன் அழியுமாறும் ஆற்றல்மிக்க அழகிய விநாயகக் கடவுளைத் தோற்றுவித்த பெருமைக்குரிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பதியாவது, வானுலகிலுள்ள தேவர்களின் தலைவனான இந்திரன் சூரபதுமனுக்கு அஞ்சி ஒளிந்து வாழ்ந்ததால் மூங்கிலை ஏணியாகக் கொண்டு, தான் நேரே காணமுடியாத தேவலோகத்தின் நிலையை ஒளிந்து காணும்பொருட்டு நட்ட வேணுபுரம் ஆகும். சூரபதுமனுக்கு அஞ்சி இந்திரன் வந்து மூங்கிலில் மறைந்திருந்து பூசித்த வரலாற்றால் போந்த பெயர் வேணுபுரம் என்பது.

**3516.** பகலொளிசெய் நகமணியை முகைமலரை
நிகழ்சரண வகவுமுனிவர்க்
ககலமலி சகலகலை மிகவுரைசெய்
முகமுடைய பகவனிடமாம்
பகைகளையும் வகையிலறு முகவிறையை
மிகவருள நிகரிலிமையோர்
புகவுலகு புகழவெழி றிகழநிக
ழலர்பெருகு **புகலிநகரே.** 3

முடுகிய சந்தமுடையதால் ராகம் எனப்படுகிறது. முடுகு – வேகம் (தேவர்கள் புகலடைந்த புகல்)

சூரியனைப் போல் பிரகாசிக்கும் மலையிற் பிறந்த நாகரத்தினத்தையும், அரும்பு விரிந்த செந்தாமரையையும் போன்ற திருவடிகளைச் சரணாக அடைந்த சனகாதி முனிவர்கட்குச் சகல கலைகளையும் நன்கு உணருமாறு விரித்து உபதேசித்தருளிய திருவருள் நோக்கத்தையுடையவர் சிவபெருமான். அத்தகைய பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது பகையசுரர்களை வேர் அறுக்கும் வகையில் அறுமுகக்கடவுளை அருளும்படி ஒப்பற்ற தேவர்கள் சரண்புக அழகுடன் திகழும் புகழ்மிக்க திருப்புகலி என்னும் திருத்தலமாகும். தேவர்கள் புகலடைந்தமையால் புகலி எனப் பெயர் பெற்றது.

**3517.** அங்கண்மதி கங்கைநதி வெங்கணர
வங்களெழி றங்குமிதழித்
துங்கமலர் தங்குசடை யங்கிநிக
ரெங்களிறை தங்குமிடமாம்
வெங்கதிர்வி ளங்குலக மெங்குமெதிர்
பொங்கெரிபு லன்கள்களைவோர்
வெங்குருவி ளங்கியுமை பங்கர்சர
ணங்கள்பணி வெங்குருவதே. 4

வெங்குரு – தவமுனிவர்களுள் பெரியவரான வியாழன்

அழகிய சந்திரனும், கங்கை நதியும், கொடிய பாம்புகளும், அழகிய இதழ்களையுடைய கொன்றை மலரும், நெருப்புப் போன்ற சடைமுடியில் அணிந்தவர், எங்கள் இறைவராகிய சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, சூரியனால் விளங்குகின்ற இவ்வுலகிலுள்ளோர் நல்வழிக்கு மாறாக மிக வருந்துகின்ற மனம் முதலிய அந்தக்கரணங்களின் சேட்டையால் வரும் துன்பத்தைக் களைய விரும்புபவர்கள் பணியும் வெங்குரு ஆகும். அது தேவகுருவாகிய வியாழ பகவான் உமை பங்கராகிய பரமனைப் பணிந்து பேறு பெற்ற தலமாகும்.

**3518.** ஆணியல்பு காணவன வாணவியல்
பேணியெதிர் பாணமழைசேர்
தூணியற நாணியற வேணுசிலை
பேணியற நாணிவிசயன்
பாணியமர் பூணவருண் மாணுபிர
மாணியிட மேணிமுறையிற்
பாணியுல காளமிக வாணின்மலி
தோணிநிகர் தோணிபுரமே. 5

ஒவ்வொரு பாடலிலும் முன்னிரண்டு அடிகள் இறைவரது தன்மையையும், பின்னிரண்டு அடிகள் அத்தலத்திற்கு அப்பெயர் வந்த வரலாறும் கூறுகின்றன.

விசயனுடைய வீரத்தன்மையை உமை காண வனத்தில் வாழும் வேடன் வடிவம் கொண்டு, அவனுக்கு எதிராகப் போர் தொடங்கி, அவன் சொரியும் மழை போன்ற அம்புகளும், அவ்வம்புகள் தங்கிய அம்பறாத்துணியும் நீங்கவும், வில்நாண் அறுபடவும், வளைந்த மூங்கிலால் வடிவமைத்த வில்லைத் துணித்தவர். அதனால் அர்ச்சுனன் நாணமுற்றுக் கையால் அடித்துச் செய்யும் மற்போர் செய்யவர, அவனுக்கு அருள்புரிந்தவர். பிரமாணமான மறைகட்கு வாச்சியமாக (பொருளாக) உள்ள சிவபெருமான், அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது காலாந்தரத்தில் பிரளய கால வெள்ளமானது உலகம் முழுவதையும் மூழ்கச் செய்ய, ஆற்றல் பெருகுமாறு ஊழி வெள்ளத்தில் தோணிபோல் மிதந்த தோணிபுரம் எனப்படும் திருத்தலமாகும். பிரமாணி – பிரமாணமாகிய மறைகட்கு வாச்சியமாக உள்ளவர்.

**3519.** நிராமய பராபர புராதன
பராவுசிவ ராகவருளென்
றிராவுமெ திராயது பராநினை
புராணனம ராதிபதியாம்
அராமிசை யிராதெழி றராயர
பராயண வராகவுருவா
தராயனை விராயெரி பராய்மிகு
தராய்மொழி விராயபதியே. 6

நிராமய – நோயுற்ற; பராபர – உயர்வுடைய பராவு – புகழ்கின்ற; ராக – விருப்பு; அராமிசை – பாம்பின் மேல்; தராய்மொழி – பூந்தராய்; பூ – பூமி; தராய் – தரித்தல்.

இறைவன் நோயற்றவன். அனைத்துப் பொருட்கட்கும் மேலான பரம்பொருள். மிகப் பழமையானவன். பராவுசிவன் என்று இரவும், பகலும் போற்றித் தியானிக்கப்படுகின்ற பழமையானவன். தேவர்கட்கெல்லாம் தலைவனாக விளங்கும் அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, இரணியாக்கனால் கொள்ளப்பட்டுக் கடலில் கிடந்த அழகிய பூமியை, திருமால் பாற்கடலில் அரவணையிலிருந்து எழுந்து வந்து வெள்ளைப் பன்றி உருவெடுத்து இரணியாக்கனைக் கொன்று பூமியைக் கொம்பிலேற்றி அவனை வருத்திய பழிபோகச் சிவனை வழிபட்ட புகழ்மிக்க பூந்தராய் என்னும் திருத்தலமாகும்.

3520. அரணையுறு முரணர்பலர் மரணம்வர
விரணமதி லரமலிபடைக்
கரம்விசிறு விரகனமர் கரணனுயர்
பரனெறிகொள் கரனதிடமாம்
பரவமுது விரவவிடல் புரளமுறு
மரவையரி சிரமரியவச்
சிரமரன சரணமவை பரவவிரு
கிரகமமர் சிரபுரமதே. 7

---

இப்பாடல் நான்கு அடிகளை உடையது. ஒவ்வொரு அடியும் ஐந்து சீர்களை உடையன. 'அரணையுறு' முதலடியின் முதல்சீர். 'கரம் விசிறு' இரண்டாமடியின் முதல்சீர். இம்மாதிரி அனைத்து அடிகளின் அனைத்துச் சீர்களில் இரண்டாமெழுத்து 'ர' சீர்தோறும் ஒன்றி வேகமாய் (முடுகியலாய்) வருவது வழிமொழித் திருவிராகம் எனப்படும். இதே போல் ஆறாவது பாட்டில் 'ரா'வும் எட்டாவது பாட்டில் 'ற'வும் ஒன்றி வருவதைப் படித்து மகிழலாம். எல்லாச் சீர்களும் வழி எதுகையாக வருகின்றன.

மும்மதில்களை அரணாகக் கொண்ட திரிபுரத்தசுரர்களால் பலருக்கு மரணம் ஏற்பட, காயங்கள் முதலான உண்டாக்கித் துன்புறுத்தும் அம்மதிலின் மேல் அரத்தால் அராவப்பட்ட ஆயுதத்தைக் கையினால் ஏவிய சமர்த்தனும், தன்னைச் சரணடைந்தவர்களின் கரணங்களின் சேட்டையை அடக்குவிப்போனும், யாவரினும் உயர்ந்த மேன்மையுடையவனும், உபதேசிக்கும் முறையைக் கொண்ட திருக்கரத்தை உடையவனுமான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, எல்லோராலும் போற்றப்படுகின்ற அமுதத்தைப் பாற்கடலிலிருந்து கடைந்து எடுத்த காலத்தில், தனக்குக் கிடைக்கும்படி பந்தியில் வந்த பாம்பின் சிரத்தினைத் திருமால் அரிந்து வீச, அந்தத் தலையானது சிவபெருமானைச் சரணடைந்து துதித்தலால் இராகு, கேது என்ற இரு கிரகங்களாக நவக்கிரக வரிசையில் பொலியும் சிரபுரம் என்னும் திருத்தலம் ஆகும்.

3521. அறமழிவு பெறவுலகு தெறுபுயவன்
விறலழிய நிறுவிவிரன்மா
மறையினொலி முறைமுரல்செய் பிறையெயிற
னுறவருளு மிறைவனிடமாங்
குறைவின்மிக நிறைதையுழி மறையமரர்
நிறையருள முறையொடுவரும்
புறவனெதிர் நிறைநிலவு பொறையனுடல்
பெறவருளு புறவமதுவே. 8

| பாடல் | ஊர்ப்பெயர் | எல்லாச்சீர் தோறும் வரி எதுகையாக ஒன்றிவரும் இரண்டாம் எழுத்து |
|---|---|---|
| 1. | பிரமபுரம் | ர |
| 2. | வேணுபுரம் | ணு |
| 3. | புகலி | க |
| 4. | வெங்குரு | ங் |
| 5. | தோணிபுரம் | ணி |
| 6. | பூந்தராய் | ரா |
| 7. | சிரபுரம் | ர |
| 8. | புறவம் | ற |
| 9. | சண்பை | ண் |
| 10. | காழி | ழி |
| 11. | கொச்சைவயம் | ச் |
| 12. | கழுமலம் | ழு |

தருமம் அழியுமாறு உலகத்தை துன்புறுத்திய புயவலிமையுடைய இராவணனது வலிமை அழியுமாறு தம் காற்பெருவிரலை ஊன்றி, பின் இராவணன் தவறுணர்ந்து சாமகானம் பாடிப் போற்ற வளைந்த பற்களையுடைய அந்த இராவணனுக்கு நீண்ட வாழ்நாளும், ஒளிபொருந்திய வாளும் அருளியவர் சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, வேதங்கட்கும், தேவர்கட்கும் ஒத்ததாகிய நீதியை வழங்கும்படி, முறையிட்டு வந்த புறாவிற்குரியவனாகிய வேடன் எதிரே, புறாவின் எடைக்குச் சமமாகத் தன் சதையை அறுத்து வைத்தும் நிரம்பாது தான் துலையேறி எடை சமன்பெறுமாறு செய்த சிபிச்சக்கரவர்த்தி குறையில்லா உடம்பைப் பெற அருள் புரிந்ததும், தான் செய்த பழிபோக புறா உருவில் வந்த தீக்கடவுள் பூசித்ததும் ஆகிய புறவம் என்னும் திருத்தலமாகும்.

| | |
|---|---|
| **3522.** விண்பயில மண்பகிரி வண்பிரம<br>னெண்பெரிய பண்படைகொண்மால்<br>கண்பரியு மொண்பொழிய நுண்பொருள்கள்<br>தண்புகழ்கொள் கண்டனிடமாம்<br>மண்பரியு மொண்பொழிய நுண்புசகர்<br>புண்பயில விண்படரவச்<br>சண்பைமொழி பண்பமுனி கண்பழிசெய்<br>பண்புகளை சண்பைநகரே. **9**<br><br>ஊர்ப்பெயரின் இரண்டாமெழுத்தும் அப்பாடலின் அனைத்து அடிகளின் அனைத்துச்சீர்களின் இரண்டாமெழுத்தும் ஒன்றி வருவதைப் படித்து தமிழ்ஞானசம்பந்தன் கழலைப் போற்றிப் பணிவாம். | சிறந்த பிரமன் அன்ன உரு எடுத்து ஆகாயத்தில் சென்றும், மிக்க மதிப்புடைய தகுதியான சக்கராயுதப் படையைக் கொண்ட திருமால் பன்றி உரு எடுத்து மண்ணைப் பிளந்து சென்றும் காணப்பெறாது, கண்ணால் பற்றக்கூடிய ஒளி நீங்க, நுண்ணிய பொருளாக, இனிய கீர்த்தியைக் கொண்ட அகண்டனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், மண்ணின் நுண்புழுதிபோல் அராவிய இரும்பு உலக்கைத்தூள் சண்பைப் புல்லாக முளைக்க அவற்றால் யாதவ குமாரர்கள் ஒருவரையொருவர் அடித்துக்கொண்டு இறந்து விண்ணுலகை அடைய, துருவாச முனிவரை இழிவு செய்து பழிகொண்ட தன் இனத்தவர்கட்கு நற்கதி உண்டாகுமாறும் சண்பை என்னும் கோரையால் உண்டான புண்கள் தீருமாறும் கண்ணபிரான் போற்றி வழிபட்டுச் சாபத்தை நீக்கியதால், சண்பை என்னும் பெயர் பெற்ற திருத்தலமாகும். |
| **3523.** பாழியுறை வேழநிகர் பாழமணர்<br>சூழுமுட லாளருணரா<br>ஏழினிசை யாழின்மொழி யேழையவள்<br>வாழுமிறை தாழுமிடமாங்<br>கீழிசைகொண் மேலுலகில் வாழரசு<br>சூழரசு வாழவரனுக்<br>காழியசில் காழிசெய வேழுலகி<br>லூழிவளர் காழிநகரே. **10**<br><br>பாட்டின் ஒவ்வோர் அடியினும் எல்லாச் சீர்களும் அப்பாட்டில் கூறப்படும் ஊர்ப்பெயர் பற்றிய வழியெதுகையாக அமைந்த செய்யுள் யாப்பமைதியுடையனமாயும் வழிமொழி என்றதனாற் குறிக்கப்பெறும். | பாழியில் தங்கும், யானையை ஒத்த சமணர்களும், கூட்டமாக வாழும் உடலைப் பாதுகாப்போராகிய பௌத்தர்களும் இறைவனை உணராதவர்கள். ஏழிசையும், யாழின் இனிமையும் போன்ற மொழியுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், கீழுலகில் புகழ்கொண்ட அரசர்களும், மேலுலகில் வாழ்கின்ற அரசனாகிய இந்திரனும், மற்றும் சூழ்ந்துள்ளவர்களும் வாழும் பொருட்டு நடனம் புரிந்த இறைவனிடம் ஆடலில் தோற்று, தன் குற்றம் நீங்குமாறு அப்பெருமானை வழிபட்டு காளி அருள் பெற்ற செயல் சப்தலோகங்களிலும் பல ஊழிக்காலமாக பேசப்பட்டு வரும் பெருமையுடைய காழிநகராகும். |
| **3524.** நச்சரவு கச்செனவ சைச்சுமதி<br>யுச்சியின்மி லைச்சொருகையான்<br>மெய்ச்சிர மனைச்சுலகி னிச்சமிடு<br>பிச்சையமர் பிச்சனிடமாம்<br>மச்சமத நச்சிமத மச்சிறுமி<br>யைச்செய்தவ வச்சவிரதக்<br>கொச்சைமுர வச்சர்பணி யச்சுரர்க<br>ணச்சிமிடை **கொச்சைநகரே.** **11** | நஞ்சையுடைய பாம்பைக் கச்சாகக் கட்டி, சந்திரனைத் தலையிலே சூடி, ஒரு கையில் பிரமகபாலத்தைத் தாங்கி, உலகிலே நாடோறும் இடுகின்ற பிச்சையை விரும்பும் பித்தனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், மீன் நாற்றத்தை விரும்பும் மச்சகந்தியை வசமிழந்து ஆற்றினிடையில் புணர்ந்த கொச்சைத் தன்மைக்குக் கதறி அது நீங்க பராசரமுனிவர் வணங்க, தேவர்களும் விரும்பி அணுகும் கொச்சைவயம் எனப்படும் திருத்தலமாகும். |

3525. ஒழுகலரி தழிகலியி லுழியுலகு
பழிபெருகு வழியைநினையா
முழுதுடலி லெழுமயிர்க டழுவுமுனி
குழுவினொடு கெழுவுசிவனைத்
தொழுதுலகி லிழுகுமல மழியும்வகை
கழுவுமுரை கழுமலநகர்ப்
பழுதிலிறை யெழுதுமொழி தமிழ்விரகன்
**வழிமொழிகண்** மொழிதகை யவே. 12

நல்லொழுக்கத்தில் நிற்றல் அரிதாகி அழிகின்ற கலிகாலத்தில் உலகில் பழிபெருகுதலை நினைந்து வருந்தி, உடல் முழுவதும் முடி முளைத்துள்ள உரோமச முனிவர் தம் குழுவினருடன் அங்குத் தங்கி, சிவபெருமானைத் தொழுது, உலக இச்சைக்கு இழுக்கின்ற மலங்கள் நீங்கிச் சிவஞான உபதேசம் பெற்றதால் கழுமலம் எனப் போற்றப்படும் திருத்தலத்தினை வணங்குவோரின் குற்றம் இல்லையாகச் செய்கின்ற தலைவனும், எழுதும் வேதமெனப் போற்றப்படும் தமிழ் வல்லவனுமாகிய ஞானசம்பந்தன் அருளிய இந்த வழிமொழித் திருவிராகப் பாசுரங்கள் பாடிப் பயன்பெறும் தன்மை உடையன.

## 68. திருக்கயிலாயம் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 68

3526. வாளவரி கோளபுலி கீளதுரி
தாளின்மிசை நாளுமகிழ்வர்
ஆளுமவர் வேளநகர் போளயில
கோளகளி றாளிவரவில்
தோளமரர் தாளமதர் **கூளி**யெழ
மீளிமிளிர் தூளிவளர்பொன்
காளமுகின் மூளுமிருள் கீளவிரி
தாளகயி லாயமலையே. 1

இக்கயிலாயம் இமயமலைச் சிகரத்தில் உள்ள வடநாட்டுத் தலங்களுள் ஒன்று. நொடித்தான் மலை இதுவே. இது பூ கயிலாயம் எனவும் சொல்லப்படும். இறைவனது இருப்பிடமான எங்கும் பரவியுள்ள அருவமாகிய கயிலாயம் வேறு. அப்பரும், சுந்தரரும் சென்றது இக்கயிலாயமே.

சிவபெருமான் ஒளிபொருந்திய வரிகளை யுடைய புலியின் தோலை உடுத்தவர். அது பாதத்தில் பொருந்த எக்காலத்திலும் ஆனந்தமாய் இருப்பவர். அடியவர்களை ஆட் கொள்பவர். எதிரிட்ட விலங்குகளைக் கிழிக்கும் கூரிய பற்களையுடைய திரண்ட வடிவுடைய யானையை அடக்கியாண்டவர். சிறந்த வில்லினை ஏந்திய தோளர். பூதங்கள் தாளமிட நடனம் புரிபவர். திருவெண்ணீற்றினை அணிந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் கயிலாய மலையானது கரிய மேகங்களால் மூண்ட இருட்டை ஓட்டும் வெண் பொன்னாலாகிய ஒளியை விரிக்கும் அடிவாரம் உடையதாகும்.

**3527.** புற்றரவு பற்றியகை நெற்றியது
மற்றொருக ணொற்றைவிடையன்
செற்றதெயி லுற்றதுமை யற்றவர்க
ணற்றுணைவ னுற்றநகர்தான்
சுற்றுமணி பெற்றதொளி செற்றமொடு
குற்றமில தெற்றெனவினாய்க்
கற்றவர்கள் சொற்றொகையின் முற்றுமொளி
பெற்றகயி லாயமலையே. **2**

சிவபெருமான் புற்றில் வாழும் பாம்பைப் பற்றிய கையை உடையவர். நெற்றியில் ஒரு கண்ணுடையவர். ஒற்றை இடபத்தை உடையவர். முப்புரத்தை எரித்தவர். உமாதேவியை ஒரு பாகமாக உடையவர். உலகப் பற்றை நீக்கிய அடியவர்கட்கு நல்ல துணையாக விளங்குபவர். அத்தகைய பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, மலையிற் பிறக்கும் மணிகள் ஒளியிழக்குமாறு தன்னொளி மிக்க கயிலாய மலையாகும். கற்றவர்கள் போற்றித் துதிப்பதால் ஞான ஒளி பெற்ற சிறப்புடையது இக்கயிலாய மலையாகும்.

---

திருஞானசம்பந்தர் காளத்தியிலிருந்தே இத்தலத்தைப் பாடுகிறார். அப்பர் திரும்பித் திருவையாறு வருகிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் மூலமாகிய வெள்ளி வெற்புக்குச் சென்று விடுகிறார்.

**3528.** சிங்கவரை மங்கையர்க டங்களன
செங்கைநிறை கொங்குமலர் தூய்
எங்கள் வினை சங்கையவை யிங்ககல
வங்கமொழி யெங்குமுளவாய்த்
திங்களிரு ணொங்கவொளி விங்கிமிளிர்
தொங்கலொடு தங்கவயலே
கங்கையொடு பொங்குசடை யெங்களிறை
தங்குகயி லாயமலையே. **3**

சிங்கங்கள் வாழ்கின்ற மலைகளிலுள்ள வித்தியாதர மகளிர் தங்கள் சிவந்த கைகளால் தேந்துளிக்கும், நறுமணம் கமழும் மலர்களைத் தூவிப் போற்றி, ''எங்கள் வினைகளும், துன்பங்களும் அகலுமாறு அருள்புரிவீராக'' என்று அங்கமாய் மொழியும் தோத்திரங்கள் எங்கும் ஒலிக்க, சந்திரனிடத்துள்ள குறையைப் போக்கி ஒளிமிகும்படி செய்து, மாலையோடு பக்கத்திலே கங்கையையும் மிகுந்த சடையிலே தாங்கி எங்கள் இறைவனான சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருக்கயிலாய மலையாகும்.

**3529.** முடியசடை பிடியதொரு வடியமழு
வுடையர்செடி யுடையதலையில்
வெடியவினை கொடியர்கெட விடுசில்பலி
நொடியமகி ழடிகளிடமாம்
கொடியகுர லுடையவிடை கடியதுடி
யடியினொடு மிடியினதிரக்
கடியகுர னெடியமுகின் மடியவத
ரடிகொள்கயி லாயமலையே. **4**

சிவபெருமான் தலையில் சடைமுடியையும், கையில் கூரிய மழுவையும் உடையவர். வெறுக்கத்தக்க கொலைத் தொழிலை உடைய அசுரர்களை அழித்தவர். பிச்சையேற்றுத் திரியும் அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் இடபத்தின் கனத்த குரலும், யானையின் பிளிறலும் இணைந்து மிகுந்த ஓசையுடன் மேகங்களின் இடிமுழக்கத்தை அடக்கி அடிவாரம்வரை செல்லும் திருக்கயிலாய மலையாகும்.

| | |
|---|---|
| **3530.** குடங்கையி னுடங்கெரி தொடர்ந்தெழ<br>விடங்கிளர் படங்கொளரவம்<br>மடங்கொளி படர்ந்திட நடந்தரு<br>விடங்கன திடந்தண் முகில்போய்த்<br>தடங்கட றொடர்ந்துட னுடங்குவ<br>விடங்கொளமி டைந்தகுரலால்<br>கடுங்கலின் முடங்களை நுடங்கர<br>வொடுங்குகயி லாயமலையே. **5** | உள்ளங்கையில் நெருப்பானது எரிய, படம் கொண்டு ஆடுகின்ற பாம்பானது ஒளிர்ந்து திருமேனியில் படர, நடனம் புரியும் பேரழகரான சிவபெருமான், வீற்றிருந்தருளும் இடமாவது, மேகங்கள் கடல்நீரை முகந்து, மேலே சென்று எல்லா இடங்களிலும் பரவி, இடிமுழக்கத்துடன் மழை பொழிய, அந்த இடியோசை கேட்ட மெலிந்த நாகம் வளைந்த புற்றிலே பதுங்குகின்ற திருக்கயிலாய மலையாகும். |
| **3531.** ஏதமில பூதமொடு கோதைதுணை<br>யாதிமுதல் வேதவிகிர்தன்<br>கீதமொடு நீதிபல வோதிமற<br>வாதுபயி னாதனகர்தான்<br>தாதுபொதி போதுவிட வூதுசிறை<br>மீதுதுளி கூதனலியக்<br>காதன்மிகு சோதிகிளர் மாதுபயில்<br>கோதுகயி லாயமலையே. **6** | குற்றமில்லாத பூதகணங்கள் சூழ்ந்திருக்க, உமாதேவியைத் துணையாகக் கொண்டு, ஆதிமூர்த்தியாகிய சிவபெருமான், வேதங்களை இசையோடு பாடியருளி, அதன் பொருளையும் விரித்து, நீதிக்கருத்துக்கள் பலவற்றையும் ஓதியவன். தேவர்களாலும், முனிவர்களாலும், அடியவர்களாலும் நாள்தோறும் மறவாது வணங்கப்படும் தலைவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, மகரந்தப் பொடிகளைத் தன்னுள் அடக்கிய அரும்பு மலர, தேனை ஊதி உறிஞ்சிய சிறகுகளையுடைய வண்டுகள் தம்மேல் சிதறிய தேன்துளிகளால் குளிர் வருத்த, அன்புமிக, ஒளிர்கின்ற அழகிய குயில்கள் தளிர்களைக் கோதும் திருக்கயிலாய மலையாகும். |
| **3532.** சென்றுபல வென்றுலவு புன்றலையர்<br>துன்றலொடு மொன்றியுடனே<br>நின்றமர ரென்றுமிறை வன்றனடி<br>சென்றுபணி கின்றநகர்தான்<br>துன்றுமலர் பொன்றிகழ்செய் கொன்றைவிரை<br>தென்றலொடு சென்றுகமழக்<br>கன்றுபிடி துன்றுகளி றென்றிவைமுன்<br>னின்றகயி லாயமலையே. **7** | நன்மக்கள் ஐம்புலன்களையும் வென்றவர்களாய் குறுமயிர் பொருந்திய தலைகளையுடைய பூதகணங்களோடு சேர்ந்து, தேவர்களும், உடன் நிற்க எக்காலத்தும், இறைவனின் திருவடிகளை வணங்குகின்ற நகர், கொத்தாக மலரும் பொன்போல் விளங்கும் கொன்றை மலர்களின் நறுமணம் தென்றற்காற்றோடு பரவ, இள யானைக்கன்றுகளும், பெண் யானைகளும், ஆண் யானைகளும் மலையின் முற்பக்கங்களில் உலவுகின்ற திருக்கயிலாய மலையாகும். |

| | |
|---|---|
| **3533.** மருப்பிடை நெருப்பெழு தருக்கொடு<br>செருச்செய்த பருத்தகளிறின்<br>பொருப்பிடை விருப்புற விருக்கையை<br>யொருக்குட னரக்கனுணரா<br>தொருத்தியை வெருக்குற வெருட்டலு<br>நெருக்கென நிருத்தவிரலால்<br>கருத்தில வொருத்தனை யெருத்திற<br>நெரித்தகயி லாயமலையே. 8 | தந்தத்தில் நெருப்புப்பொறி பறக்க, மலையோடு கர்வத்துடன் போர்செய்த பருத்த யானையைப் போல, கயிலை மலையில் சிவபெருமான் வீற்றிருத்தலைப் பொருட்படுத்தாது, இராவணன் அதனைப் பெயர்க்க முயல, ஒப்பற்ற உமாதேவி அஞ்சவும், சிவபெருமான் நடனம்புரியும் தன் காற்பெருவிரலை ஊன்றி அறிவற்ற இராவணனின் கழுத்து முறியும்படி செய்த கயிலாயமலையே சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாகும். |
| **3534.** பரியதிரை யெரியபுனல் வரியபுலி<br>யுரியதுடை பரிசையுடையான்<br>வரியவளை யரியகணி யுருவினொடு<br>புரிவினவர் பிரிவினகர்தான்<br>பெரியவெரி யுருவமது தெரியவுரு<br>பரிவுதரு மருமையதனால்<br>கரியவனு மரியமறை புரியவனு<br>மருவுகயி லாயமலையே. 9 | சிவபெருமான் நெருப்பையும், பெரிய அலைகளையுடைய கங்கையையும் கொண்டவர். வரிகளையுடைய புலித்தோலை ஆடையாக அணிந்தவர். கீற்றுக்களையுடைய வளையல்களை அணிந்த செவ்வரி படர்ந்த கண்களையுடைய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு பிரிவில்லாது விற்றிருந்தருளும் இடமாவது, சிவபெருமான் பெரிய சோதிப்பிழம்பாய் நிற்க அதன் அடியையும், முடியையும் தேடத் தொடங்கிக் காண்பதற்கரியதாய் விளங்கியதால் நீலநிறத் திருமாலும், அருமறைகள் வல்ல பிரமனும் தவறுணர்ந்து மன்னிப்பு வேண்டும் பொருட்டுப் பொருந்திய திருக்கயிலாய மலையாகும். |
| **3535.** அண்டர்தொழு சண்டி பணி கண்டடிமை<br>கொண்டவிறை துண்டமதியோ<br>டிண்டைபுனை வுண்டசடை முண்டதர<br>சண்டவிருள் கண்டரிடமாம்<br>குண்டமண வண்டரவர் மண்டைகையி<br>லுண்டுளறி மிண்டுசமயம்<br>கண்டவர்கள் கொண்டவர்கள் பண்டுமறி<br>யாதகயி லாயமலையே. 10 | தேவர்களும் தொழுது போற்றும் சண்டேசுவர நாயனாரின் சிவவழிபாட்டைக் கண்டு மகிழ்ந்து ஆட்கொண்டவர் சிவபெருமான். பிறைச்சந்திரனை இண்டைமாலையால் அலங்கரிக்கப்பட்ட சடைமுடியில் தரித்தும், மண்டையோட்டை மாலையாக அணிந்தும், கடிய இருள் போன்ற கழுத்தையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், குண்டான சமணர்களும், கையிலேந்திய மண்டையில் உணவு உண்டு திரியும் புத்தர்களும், அச்சமயங்களைக் கண்டவர்களும், அருட்டிப்போர்களும் முன்பு அறியாத திருக்கயிலாய மலையாகும். |

3536. அந்தண்வரை வந்தபுன றந்ததிரை
சந்தனமொ டுந்தியகிலும்
கந்தமலர் கொந்தினொடு மந்திபல
சிந்துகயி லாயமலைமேல்
எந்தையடி வந்தணுகு சந்தமொடு
செந்தமிழி சைந்தபுகலிப்
பந்தனுரை சிந்தைசெய வந்தவினை
நைந்துபர லோகமெளிதே. 11

அழகிய, குளிர்ச்சி பொருந்திய மலையிலிருந்து விழும் நீரின் அலைகள் சந்தனம், அகில் இவற்றை உந்தித் தள்ள, நறுமணம் கமழும் மலர்க் கொத்துக்களோடு குரங்குக் கூட்டங்கள் சிதறும் திருக்கயிலாய மலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி, சந்த இசையோடு செந்தமிழில் திருப்புகலியில் அவதரித்த திருஞானசம்பந்தர் அருளிச்செய்த இத்திருப்பதிகத்தை மனத்தால் சிந்தித்து, வாயால் ஒத வினையாவும் நலியப் பரலோகம் எளிதில் பெறக்கூடும்.

## 69. திருக்காளத்தி ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 69

3537. வானவர்கள் தானவர்கள் வாதைபட
வந்ததொரு மாகடல்விடம்
தானமுது செய்தருள் புரிந்தசிவன்
மேவுமலை தன்னைவினவில்
ஏனமிள மானினொடு கிள்ளைதினை
கொள்ளவெழி லார்கவணினால்
கானவர்த மாமகளிர் கனகமணி
விலகுகா ளத்திமலையே. 1

தேவர்களும், அசுரர்களும் வருந்தித் துன்புறுமாறு பாற்கடலைக் கடைந்தபோது தோன்றிய ஆலகால விடத்தை, தான் அமுது போன்று உண்டு அருள் செய்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை எது என வினவினால், பன்றிகள், இளமான்கள், கிளிகள் இவை தினைகளைக் கவர, வேட்டுவ மகளிர்கள் பொன்னாலும், இரத்தினங்களாலும் ஆகிய ஆபரணங்களைக் கவண்கற்களாக வீசி விரட்டும் சிறப்புடைய திருக்காளத்தி மலையாகும்.

3538. முதுசினவி லவுணர்புர மூன்றுமொரு
நொடிவரையின் மூளவெரிசெய்
சதுரர்மதி பொதிசடையர் சங்கரர்
விரும்புமலை தன்னைவினவில்
எதிரெதிர வெதிர்பிணைய வெழுபொறிகள்
சிதறவெழி லேனமுழுத
கதிர்மணியின் வளரொளிக ளிருளகல
நிலவுகா ளத்திமலையே. 2

மிகுந்த கோபத்துடன் மேருமலையை வில்லாகக் கொண்டு பகையசுரர்களின் முப்புரங்களையும் ஒரு நொடிப் பொழுதில் எரியுண்ணும்படி செய்த சமத்தர் சிவபெருமான். அவர் சந்திரனைத் தரித்த சடையையுடையவர். எல்லா உயிர்கட்கும் நன்மையே செய்பவர். அப்பெருமான் விற்றிருந்தருளும் மலை, எதிரெதிராக உள்ள மூங்கில்கள் உராய்வதால் தோன்றிய நெருப்புப் பொறிகளாலும், பன்றிகள் கொம்பினால் மண்ணைக் கிளறும்போது கிடைத்த மணிகளாலும் இருள் நீங்க விளங்குகின்ற திருக்காளத்தி மலையாகும்.

| | |
|---|---|
| **3539.** வல்லைவரு காளியைவ குத்துவலி<br>யாகிமிகு தாரகனைநீ<br>கொல்லென விடுத்தருள் புரிந்தசிவன்<br>மேவுமலை கூறிவினவில்<br>பல்பலவி ருங்கனி பருங்கிமிக<br>வுண்டவை நெருங்கியினமாய்க்<br>கல்லதிர நின்றுகரு மந்திவிளை<br>யாடுகா ளத்திமலையே. 3 | தாரகன் இழைத்த துன்பம் கண்டு, விரைந்து நீக்கவரும் காளியை நோக்கி, "வலிமை மிகுந்த தாரகன் என்னும் அசுரனை நீ கொல்வாயாக" என்று மொழிந்து அருள்செய்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை, பலவகைச் சுவைமிகுந்த பெரிய கனிகளின் சாற்றை அருந்தி, ஒரே கூட்டமாய் மொய்த்து, மலை அதிரும்படி கருங்குரங்குகள் விளையாடுகின்ற திருக்காளத்தி மலையாகும். |
| **3540.** வேயனைய தோளுமையொர் பாகமது<br>வாகவிடை யேறிசடைமேல்<br>தூயமதி சூடிசுடு காடினட<br>மாடிமலை தன்னைவினவில்<br>வாய்கலச மாகவழி பாடுசெயும்<br>வேடன்மல ராகுநயனம்<br>காய்கணை யினாலிடந் தீசனடி<br>கூடுகா ளத்திமலையே. 4 | மூங்கிலைப் போன்ற தோளுடைய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு, இடப வாகனத்தில் ஏறி, சடைமுடியில் தூய சந்திரனைச் சூடி, சுடுகாட்டில் நடனம் ஆடும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை, வாயே அபிடேக கலசமாக வழிபாடு செய்த வேடராகிய கண்ணப்பர், தம் மலர்போன்ற கண்ணைக் கொடிய அம்பினால் தோண்டி இறைவனுக்கு அப்பி, இறைவனின் திருவடியைச் சார்ந்த சிறப்புடைய திருக்காளத்தி மலையாகும். |
| **3541.** மலையின்மிசை தனின்முகில்போல் வருவதொரு<br>மதகரியை மழைபொலலறக்<br>கொலைசெய்துமை யஞ்சவுரி போர்த்தசிவன்<br>மேவுமலை கூறிவினவில்<br>அலைகொள்புன லருவிபல சுனைகள்வழி<br>யிழியவய னிலவுமுதுவேய்<br>கலகலென வொளிகொள்கதிர் முத்தமவை<br>சிந்துகா ளத்திமலையே. 5 | மலையின்மேல் தவழும் மேகம்போல் வந்த மதம் பொருந்திய யானையானது இடிபோல் பிளிற, அதனைக் கொன்று உமாதேவி அஞ்சும்படி அதன் தோலைப் போர்த்திக் கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை, அலைகளையுடைய நீர் மலைகளிலிருந்து அருவிபோல் இழிந்து, பல சுனைகளின் வழியாக வயல்களில் பாய, அருகிலுள்ள முற்றிய மூங்கில்கள் கலகல என்ற ஒலியுடன், கதிர்போல் ஒளிரும் முத்துக்களைச் சிந்தும் திருக்காளத்தி மலையாகும். |

| | |
|---|---|
| **3542.** பாரகம் விளங்கிய பகீரத<br>னருந்தவ முயன்றபணிகண்<br>டாரருள் புரிந்தலைகொள் கங்கைசடை<br>யேற்றவரன் மலையைவினவில்<br>வாரத ரிருங்குறவர் சேவலின்<br>மடுத்தவ ரெரித்தவிறகில்<br>காரகி லிரும்புகை விசும்புகமழ்<br>கின்றகா ளத்திமலையே. 6 | பாரத பூமியில் சிறந்து விளங்கிய பகீரதன் என்னும் மன்னன், பிதிரர்கட்கு நற்கதி உண்டாகுமாறு அரியதவம் செய்து, வானிலுள்ள கங்கையைப் பூவுலகிற்குக் கொண்டுவர, அவனுக்கு அருள் செய்தவராகிய, பெருக்கெடுத்த கங்கையைத் தன் சடையில் தாங்கிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை, நெடிய வழிகளை உடைய, கானகக் குறவர்கள் தங்கள் குடிசையில் அடுப்பெரித்த, கரிய அகில் கட்டையிலிருந்து கிளம்பிய பெரிய புகையானது, ஆகாயத்தில் மணக்கின்ற திருக்காளத்தி மலையாகும். |
| **3543.** ஆருமெதி ராதவலி யாகிய<br>சலந்தரனை யாழியதனால்<br>ஈரும்வகை செய்தருள் புரிந்தவ<br>னிருந்தமலை தன்னைவினவில்<br>ஊருமர வம்மொளிகொண் மாமணி<br>யுமிழ்ந்தவை யுலாவிவரலால்<br>காரிருள் கடிந்துகன கம்மென<br>விளங்குகா ளத்திமலையே. 7 | தன்னை எதிர்த்துப் போர்செய்ய யாரும் வாராத, வலிமை மிக்க சலந்தராசுரனின் தலையைச் சக்கராயுதத்தால் பிளந்து தேவர்கட்கு அருள்புரிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை, ஊர்ந்து செல்லுகின்ற பாம்புகள் உமிழ்ந்த இரத்தினங்களின் ஒளியால் கரிய இருள் நீங்கப் பெற்று, பொன்மலைபோல் பிரகாசிக்கின்ற திருக்காளத்தி மலையாகும். |
| **3544.** எரியனைய சுரிமயி ரிராவணனை<br>யீடழிய எழில்கொள்விரலால்<br>பெரியவரை யூன்றியருள் செய்தசிவன்<br>மேவுமலை பெற்றிவினவில்<br>வரியசிலை வேடுவர்க ளாடவர்க<br>ணீடுவரை யூடுவரலால்<br>கரியினொடு வரியுழுவை யரியினமும்<br>வெருவுகா ளத்திமலையே. 8 | நெருப்புப்போல் சிவந்த சுருண்ட முடிகளையுடைய இராவணனின் வலிமை அழியுமாறு, தன் அழகிய காற்பெருவிரலை ஊன்றிப் பெரிய கயிலைமலையின் கீழ் அவனை அழுத்தி, பின் அருள்செய்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை, நீண்ட வில்லேந்திய வேடர்கள் நெடிய மலையினூடே வருவதால், யானைகளும், வரிகளையுடைய புலிகளும், சிங்கக் கூட்டங்களும் அஞ்சுகின்ற திருக்காளத்தி மலையாகும். |
| **3545.** இனதளவி லிவனதடி யிணையுமுடி<br>யறிதுமென விகலுமிருவர்<br>தனதுருவ மறிவரிய சகலசிவன்<br>மேவுமலை தன்னை வினவில்<br>புனவர்புன மயிலனைய மாதரொடு<br>மைந்தரு மணம்புணருநாள்<br>கனகமென மலர்களணி வேங்கைக<br>ணிலாவுகா ளத்திமலையே. 9 | குறிப்பிட்ட இந்தக் கால எல்லைக்குள் இவன் திருவடியும், திருமுடியும் அறிய வேண்டும் என்று தமக்குள் மாறுபட்ட திருமாலும், பிரமனும் முனைந்து தேடியும் அறிவதற்கு அரியவனாய் விளங்கியவன் சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருக்கும் மலை, தினைப்புனத்திலுள்ள வேடுவர்கள் மயிலொத்த சாயலுடைய பெண்களை மைந்தர்களுக்கு மணம் செய்விக்கும் நாளில் பொன் போன்ற மலர்களைப் பூத்து அழகிய வேங்கைகள் விளங்கும் திருக்காளத்திமலையாகும். |

| | |
|---|---|
| 3546. நின்றுகவ ளம்பலகொள் கையரொடு<br>மெய்யிலிடு போர்வையவரும்<br>நன்றியறி யாதவகை நின்றசிவன்<br>மேவுமலை நாடிவினவில்<br>குன்றின்மலி துன்றுபொழி னின்றகுளிர்<br>சந்தின்முறி தின்றுகுலவிக்<br>கன்றினொடு சென்றுபிடி நின்றுவிளை<br>யாடுகா ளத்திமலையே. 10 | நின்று கொண்டே கவளமாக உணவு உண்ணும் சமணர்களும், உடம்பில் போர்த்த போர்வையுடைய புத்தர்களும் தனது பேரருளை அறியாவண்ணம் விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் மலை, நெருங்கிய சோலைகளில் உள்ள குளிர்ந்த சந்தனத் தழைகளைத் தம் கன்றுகளுடன் சென்று தின்று பெண் யானைகள் விளையாடுகின்ற திருக்காளத்தி மலையாகும். |
| 3547. காடதிட மாகநட மாடுசிவன்<br>மேவுகா ளத்திமலையை<br>மாடமொடு மாளிகைக ணீடுவளர்<br>கொச்சைவய மன்னுதலைவன்<br>நாடுபல நீடுபுகழ் ஞானசம்<br>பந்தனுரை நல்லதமிழின்<br>பாடலொடு பாடுமிசை வல்லவர்க<br>ணல்லர்பர லோகமெளிதே. 11 | சுடுகாட்டை அரங்காகக் கொண்டு ஆடுகின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற காளத்தி மலையைப் போற்றி, மாடமாளிகைகள் நீண்டு ஓங்கி வளர்ந்துள்ள கொச்சைவயம் என்னும் சீகாழியின் நிலைபெற்ற தலைவனும், பல நாடுகளிலும் பரவிய புகழையுடையவனுமாகிய ஞானசம்பந்தன் நல்ல தமிழில் அருளிய இப்பாடல்களை இசையுடன் ஓத வல்லவர்கள் சிறந்தவர்களாவர். அவர்கள் சிவலோகம் அடைதல் எளிதாகும். |

## 70. திருமயிலாடுதுறை ( மாயூரம் )

### ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 70

| | |
|---|---|
| 3548. ஏனவெயி றாடரவொ டென்புவரி<br>யாமையிவை பூண்டிளைஞராய்க்<br>கானவரி நீடுழுவை யதளுடைய<br>படர்சடையர் காணியெனலாம்<br>ஆனபுகழ் வேதியர்க ளாகுதியின்<br>மீதுபுகை போகியழகார்<br>வானமுறு சோலைமிசை மாசுபட<br>மூசுமயி லாடுதுறையே. 1 | சிவபெருமான் பன்றியின் கொம்பினையும், படமெடுத்து ஆடும் பாம்பினையும், எலும்பினையும், வரிகளையுடைய ஆமையோடும் அணிந்து, இளைஞராய், காட்டில் வாழும், வரிகளையுடைய புலித்தோலை ஆடையாக உடுத்தவர். படர்ந்து விரிந்த சடையுடைய அச்சிவபெருமானைக் கண்டு தரிசிப்பதற்குரிய இடம், புகழ்மிக்க அந்தணர்கள் வளர்க்கும் வேள்வியிலிருந்து எழும் புகை, அழகிய தேவலோகத்திலுள்ள கற்பகச்சோலை மீது அழுக்குப்படப் படியும் திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். |

**3549.** அந்தண்மதி செஞ்சடைய ரங்கணெழில்
கொன்றையொ டணிந்தழகராம்
எந்தமடி கட்கினிய தானமது
வேண்டிலெழி லார்பதியதாம்
கந்தமலி சந்தினொடு காரகிலும்
வாரிவரு காவிரியுளால்
வந்ததிரை யுந்தியெதிர் மந்திமலர்
சிந்துமயி லாடுதுறையே. 2

சிவபெருமான் அழகிய குளிர்ந்த சந்திரனை அணிந்த சிவந்த சடையையுடையவர். அச்சடையிலே அழகிய கொன்றை மாலையை அணிந்த அழகரான எம் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இனிய இடம் திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். அத்திருத்தலமானது மணம் கமழும் சந்தன மரங்களோடு, கரிய அகில் மரங்களையும் வாரிக் கொண்டு வரும் காவிரியின் அலைகள் தம்மேல் நீர்த்திவலை வீசுவதால், அதனைக் கோபித்து அதற்கு எதிராக, கரையோரத்துச் சோலைகளிலுள்ள குரங்குகள் மலர்களை வீசுகின்ற தன்மையுடன் திகழ்வதாகும்.

தக்கனின் மகள் தாட்சாயணி என்ற பெயர் நீங்க அம்மை மயிலுருவில் பூசித்ததலம் இது. மயிலை உருவில் பூசித்த இன்னொரு தலம் மயிலாப்பூர் என்றும் சொல்லுவார்கள்.
மயிலாப்பூர் – வடமயிலை
மயிலாடுதுறை – தென்மயிலை

**3550.** தோளின்மிசை வரியரவ நஞ்சழல
வீக்கிமிகு நோக்கரியராய்
மூளைபடு வெண்டலையி லுண்டுமுது
காடுறையு முதல்வரிடமாம்
பாளைபடு பைங்கமுகு செங்கனி
யுதிர்த்திட நிரந்துகமழ்பூ
வாளைகுதி கொள்ளமடல் விரியமண
நாறுமயி லாடுதுறையே. 3

சிவபெருமான் தோளின்மீது வரிகளையுடைய பாம்பு நஞ்சை உமிழுமாறு, அதனை இறுக அணிந்தவர். எண்ணுதற்கு அரியவராய் விளங்குபவர். மூளை நீங்கிய பிரமகபாலத்தில் பலியேற்று உண்டு சுடுகாட்டில் வசிப்பவர். எப்பொருட்கும் முதல்வரான அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், காவிரியிலுள்ள வாளைமீன்கள் கரையோரங்களிலுள்ள பாளை பொருந்திய பசிய கமுக மரங்களில் பாய, அவை சிவந்த பழங்களை உதிர்க்க, அதனால் பூ இதழ்கள் விரிய நறுமணம் கமழும் திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும்.

மிகவும் அச்சமுற்றுத் தன்னைச் சரணடைந்த ஒரு மயிலுக்கு அபயமளித்துப் பாதுகாத்தமையின் அம்பாள் அபயாம்பிகை எனப்படுகிறாள்.

**3551.** ஏதமில ரரியமறை மலையர்மக
ளாகியவி லங்குநுதலொண்
பேதைதட மார்பதிட மாகவுறை
கின்றபெரு மானதிடமாம்
காதன்மிகு கவ்வையொடு மவ்வலவை
கூடிவரு காவிரியுளால்
மாதர்மறி திரைகள்புக வெறியவெறி
கமழுமயி லாடுதுறையே. 4

சிவபெருமான் எந்தவிதக் குற்றமுமில்லாதவர். அரிய வேதங்களை அருளிச் செய்து அவற்றின் பொருளாகவும் விளங்குபவர். மலையரசன் மகளான, ஒளி பொருந்திய வளைந்த நெற்றியை யுடைய உமாதேவியின் அகன்ற மார்பு தன் இடப்பகுதியாக உறைகின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, ஆரவாரித்து வரும் அலைகள் மூலம் மல்லிகை முதலிய நறுமணமலர்கள் கூடிவரும் காவிரியில் நீராட மாதர்கள் புக, மணமற்ற பொருள்களும் மணம் கமழப்பெறும் திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும்.

ஆண்டுதோறும் ஐப்பசி மாதத்தில் தினமும் மயூரநாதர் அபயாம்பிகையுடன் காவேரிக்கு எழுந்தருளிக் காலையில் தீர்த்தம் அருளுவார். இதைத் துலா ஸ்நானம் என்பார்கள்.

| | |
|---|---|
| **3552.** பூவிரி கதுப்பின்மட மங்கையர<br>கந்தொறு நடந்துபலிதேர்<br>பாவிரி யிசைக்குரிய பாடல்பயி<br>லும்பரமர் பழமையெனலாம்<br>காவிரி நுரைத்திரு கரைக்குமணி<br>சிந்தவரி வண்டுகவர<br>மாவிரி மதுக்கிழிய மந்திகுதி<br>கொள்ளுமயி லாடுதுறையே. 5<br><br>மாயூர வள்ளல்<br>1. துறைகாட்டும் வள்ளல்<br>2. வாக்குக் காட்டும் வள்ளல்<br>3. வழிகாட்டும் வள்ளல்<br>4. கைகாட்டும் வள்ளல் என நாற்றிசை வள்ளலாக விளங்குவதாக மாயூரப் புராணம் சொல்கிறது. | மலர்ந்த பூக்களைக் கூந்தலில் சூடியுள்ள, தாருகாவனத்து முனிபத்தினிகளின் இல்லங்கள்தோறும் சென்று பிச்சையெடுத்துப் பண்ணோடு கூடிய பாடல்களை இசைக்கும் சிவபெருமான் மிகப் பழமையானவர். காவிரியின் அலைகள் இரு கரைகளிலுமுள்ள சோலைகளில் இரத்தினங்களைச் சிதற, அதனால் அஞ்சி மந்திகள் குதிக்க, மரக்கிளைகளில் மோதி, மாமரத்தில் கட்டப்பட்ட தேன் கூடுகள் கிழியத் தேன் சிந்த, அதனை வண்டுகள் கவர்ந்துண்ணும் வளமிக்க திருமயிலாடுதுறையில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3553.** கடந்திகழ் கருங்களி றுரித்துமையு<br>மஞ்சமிக நோக்கரியராய்<br>விடந்திகழு மூவிலைநல் வேலுடைய<br>வேதியர் விரும்புமிடமாம்<br>தொடர்ந்தொளிர் கிடந்ததொரு சோதிமிகு<br>தொண்டையெழில் கொண்டதுவர்வாய்<br>மடந்தையர் குடைந்தபுனல் வாசமிக<br>நாறுமயி லாடுதுறையே. 6<br><br>இக்கோயிலின் எல்லை 1 யோசனை தூரம். அந்த எல்லையில்<br>கால சம்ஹார அட்ட வீரட்டமான கடவூரும்<br>தட்சயாக சம்ஹார அட்ட வீரட்டமான பரசலூரும்<br>வேழ சம்ஹார அட்ட வீரட்டமான வழுவூரும்<br>காமதகன சம்ஹார அட்ட வீரட்டமான குறுக்கையும் அமைந்துள்ளன. | சிவபெருமான் மதம் பொருந்திய கரிய யானையின் தோலை உரித்து உமாதேவி அஞ்சுமாறு போர்த்திக் கொண்டவர். மனத்தால் எண்ணுதற்கு அரியவர். பகைவர்கட்குக் கேடு விளைவிக்கும் மூவிலைச் சூலம் கொண்டவர். வேதங்களை அருளிச் செய்து வேதப் பொருளாகவும் விளங்குபவர். அப்பெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடமாவது ஒளிர்கின்ற மேனியும், கொவ்வைப் பழம் போல் அழகிய சிவந்த வாயும் கொண்ட தேவமகளிர் நீரைக் குடைந்து ஆடுவதால் நீர் நறுமணம் கமழும் சிறப்புடைய திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். |
| **3554.** அவ்வதிசை யாருமடி யாருமுள<br>ராகவருள் செய்தவர்கண்மேல்<br>எவ்வமற வைகலு மிரங்கியெரி<br>யாடுமெம தீசனிடமாம்<br>கவ்வையொடு காவிரி கலந்துவரு<br>தென்கரை நிரந்துகமழ்பூ<br>மவ்வலொடு மாதவி மயங்கிமண<br>நாறுமயி லாடுதுறையே. 7 | அந்தந்தத் திக்குகளிலுள்ள எல்லா அடியவர்களும் நல்ல வண்ணம் வாழும் பொருட்டு அருள்செய்து, அவர்களுடைய வினைகள் நீங்க நாள்தோறும் இரங்கித் தீயேந்தி ஆடுகின்ற எம் இறைவனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், ஆரவாரத்தோடு வரும் காவிரி, மணமிக்க மல்லிகை, மாதவி முதலான மலர்களைத் தள்ளிவர நறுமணம் கமழும் அதன் தென்கரையிலுள்ள திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3555.** இலங்கைநகர் மன்னன்முடி யொருபதினொ<br>டிருபதுதொ ணெரியவிரலால்<br>விலங்கலி லடர்த்தருள் புரிந்தவ<br>ரிருந்தவிடம் வினவுதிர்களேல்<br>கலங்கனுரை யுந்தியெதிர் வந்தகய<br>மூழ்கிமலர் கொண்டுமகிழா<br>மலங்கிவரு காவிரி நிரந்துபொழி<br>கின்றமயி லாடுதுறையே. 8 | இலங்கை மன்னனான இராவணனின் பத்து முடிகளும், இருபது தோள்களும் நெரியும்படி தன்காற் பெருவிரலைக் கயிலை மலையில் ஊன்றி அடர்த்துப் பின் அவனுக்கு அருள்புரிந்தவர் சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம், கலங்களோடு நுரையைத் தள்ளி, எதிரேயுள்ள குளத்தில் பாய்ந்து அங்குள்ள மணமிக்க மலர்களை அடித்துக் கொண்டு களிப்புடன் சுழித்து வருகின்ற காவிரியாறு பாய்வதால் வளமிக்க திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். |
| **3556.** ஒண்டிறலி னான்முகனு மாலுமிக<br>நேடியுண ராதவகையால்<br>அண்டமுற வங்கியுரு வாகிமிக<br>நீண்டவர னாரதிடமாம்<br>கெண்டையிரை கொண்டுகெளி றாருட<br>னிருந்துகிளர் வாயறுதல்சேர்<br>வண்டல்மணல் கெண்டிமட நாரைவிளை<br>யாடுமயி லாடுதுறையே. 9 | மிகுந்த வலிமையுடைய பிரமனும், திருமாலும் தேடியும் உணரமுடியாவண்ணம், ஆகாயம் வரை அளாவி நெருப்புப் பிழம்பாய் நீண்டு நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, கெண்டை மீனை இரையாக உண்டு, கெளிறு, ஆரல் முதலிய மீன்கள் விளங்குகின்ற ஆற்றின் கரையிலுள்ள நாரை, தண்ணீர் அறுத்தலால் உண்டான வண்டல் மண்ணைக் கிளறி விளையாடும் திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். |
| **3557.** மிண்டுதிற லமணரொடு சாக்கியரு<br>மலர்தூற்ற மிக்கதிறலோன்<br>இண்டைகுடி கொண்டசடை யெங்கள்பெரு<br>மானதிட மென்பரெழிலார்<br>தெண்டிரை பரந்தொழுகு காவிரிய<br>தென்கரை நிரந்துகமழ்பூ<br>வண்டவை திளைக்கமது வந்தொழுகு<br>சோலைமயி லாடுதுறையே. 10 | துடுக்காகப் பேசுகின்ற சமணர்களும், புத்தர்களும் பழித்துக்கூற, அவர்கள் அறிவிற்கு அப்பாற்பட்ட ஆற்றலுடையவனும், இண்டைமாலை சூடிய சடைமுடி உடையவனுமான எங்கள் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, தெள்ளிய அலைகள் உடன் பாயும் காவிரியாற்றின் தென்கரையில் மணமிக்க பூக்களில் வண்டுகள் மூழ்கியுண்ண, தேன் வெளிப்பட்டு ஒழுகுகின்ற சோலைகளையுடைய அழகிய திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். |

3558. நிணந்தரு மயானநில வானமதி
யாததொரு சூலமொடுபேய்க்
கணந்தொழு கபாலிகழ **லேத்திமிக**
**வாய்த்ததொரு காதன்மையினால்**
மணந்தண்மலி காழிமறை ஞானசம்
பந்தன்மயி லாடுதுறையைப்
புணர்ந்ததமிழ் பத்துமிசை யாலுரைசெய்
வார்பெறுவர் பொன்னுலகமே. 11

இறந்தார் உடலின் கொழுப்புப் பொருந்திய சுடுகாட்டில், பூவுலகிலும், வானுலகிலும் உள்ள வீரர் எவரையும் பொருட்படுத்தாத சிறப்புடைய சூலப்படையோடு, பேய்க்கூட்டங்கள் தொழ, பிரமகபாலத்தை ஏந்தியுள்ள சிவபெருமானின் திருவடிகளை வணங்கி மிக்க அன்புடன், நறுமணமும், குளிர்ச்சியும் பொருந்திய சீகாழியில் அவதரித்த வேதங்களின் உட்பொருளை நன்குணர்ந்த ஞானசம்பந்தன், திருமயிலாடுதுறையைப் போற்றிப் பாடிய இத்தமிழ்ப்பாக்கள் பத்தினையும் இசையோடு பாடுகிறவர்கள் சொர்க்கலோகம் அடைவர்.

கௌரி தாண்டவம்

மயில் வடிவம் நீங்கி இயற்கையான திருவுருவமுற்ற அம்பிகையின் வேண்டுகோளின்படி சபையொன்றை நிர்மாணித்து அதில் மயூரநாதர் தாண்டவமாடியருளி திருமால் முதலிய தேவர்களின் பிரார்த்தனைப்படி அம்பிகையை இங்கே திருமணம் செய்தருளினார். அந்த சபை ஆதிசபை. தாண்டவம் கௌரி தாண்டவமாகும். இன்றும் ஒவ்வொரு ஆண்டும் பெருந்திருவிழாவின் ஏழாம்நாள் (துலா (ஐப்பசி) மாதத்தில்) மாலையில் இது நடைபெறுகிறது.

மிகவாய்த்ததொரு காதன்மை – பதிகம் அருளிய போது ஏற்பட்ட எல்லையில்லா ஆனந்தம்.

## 71. திருவைகாவூர்

### ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 71

3559. **கோழைமிட றாககவி கோளுமில**
**வாகவிசை கூடும்வகையால்**
**ஏழையடி யாரவர்கள் யாவைசொன**
**சொன்மகிழு மீசனிடமாம்**
தாழையிள நீர்முதிய காய்கமுகின் வீழநிரை
தாறுசிதறி
வாழையுதிர் வீழ்கனிக ளூறிவயல் சேறுசெயும்
வைகாவிலே. 1

சிவனைத் தவிர வேறு பற்றுக்கோடில்லாத ஏழையடியவர்கள், கோழை பொருந்திய கழுத்து உடையவராயினும், பாடும் கவிகளைப் பொருளுணரும்படி நிறுத்திப் பாடாவிடினும், **தங்களால் இயன்ற இசையில், பக்தியுடன் பாடுகின்ற பாடல்கள் எவையாய் இருந்தாலும், அவற்றிற்கு மகிழ்கின்றவன் சிவபெருமான்.** அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது தென்னை மரத்தின் முற்றிய காய்கள் கமுக மரத்தில் விழ, அதன் வரிசையான குலைகள் சிதறி வாழைக்குலையில் விழ, அவ்வாழை மரங்களினின்று உதிர்ந்து வீழ்கின்ற கனிகள் வயலில் ஊறி அதனைச் சேறாகச் செய்யும் வளமிக்க திருவைகாவூர் என்னும் திருத்தலமாகும்.

வேடன் புலிக்கு பயந்து வில்வ இலையைப் பறித்துப் போட்டது பூசையான வரலாறு நிகழ்ந்த தலம்.

| | |
|---|---|
| **3560.** அண்டமுறு மேருவரை யங்கிகணை நாணரவ<br>தாகவெழிலார்<br>விண்டவர்த முப்புரமெ ரித்தவிகிர் தன்னவன்<br>விரும்புமிடமாம்<br>புண்டரிக மாமலர்கள் புக்குவிளை யாடுவயல்<br>சூழ்தடமெலாம்<br>வண்டினிசை பாடவழகார்குயின்மி ழற்றுபொழில்<br>வைகாவிலே. 2 | வானளாவிய பெரிய மேருமலையை வில்லாகவும், அக்கினியைக் கணையாகவும், வாசுகி என்னும் பாம்பை நாணாகவும் கொண்டு, பகையசுரர்களின் அழகிய முப்புரங்களை எரியுண்ணும்படி செய்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, தாமரை மலர்களில் வண்டுகள் புகுந்து தேனுண்டு விளையாடி, வயல்களிலும் அவற்றைச் சுற்றியுள்ள குளங்களிலும் தேனுண்ட மகிழ்ச்சியில் இசைபாட, அதற்கேற்ப அழகிய குயில்கள் கூவுகின்ற சோலைகளையுடைய திருவைகாவூர் என்னும் திருத்தலமாகும். |
| **3561.** ஊனமில ராகியுயர் நற்றவமெய் கற்றவை<br>யுணர்ந்தவடியார்<br>ஞானமிக நின்றுதொழ நாளுமருள் செய்யவல<br>நாதனிடமாம்<br>ஆனவயல் சூழ்தருமல் சூழியரு கேபொழில்க<br>டோறுமழகார்<br>வானமதி யோடுமழை நீண்முகில்கள் வந்தணவும்<br>வைகாவிலே. 3 | மனம், வாக்கு, காயம் ஆகிய திரிகரணங்களால் செய்யப்படும் குற்றங்கள் இல்லாதவர்களாய், நல்ல தவத்தை மேற்கொண்டு, பதிநூல்களை நன்கு கற்று, கேட்டுத் தெளிய உணர்ந்த அடியார்கள் ஞானத்தால் வணங்க, நாடோறும் அருள்செய்யவல்ல சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, நல்ல வயல் வளமும் அழகிய சந்திரனைத் தொடும்படி ஓங்கியுயர்ந்த மதில்களும், மழைதரும் மேகங்கள் தவழும் சோலைகளும் விளங்குகின்ற திருவைகாவூர் என்னும் திருத்தலமாகும். |
| **3562.** இன்னவுரு வின்னநிற மென்றறிவ தேலரிது<br>நீதிபலவும்<br>தன்னவுரு வாமெனமி குத்ததவ னீதியொடு<br>தானமர்விடம்<br>முன்னைவினை போய்வகையி னான்முழு<br>துணர்ந்துமுயல்கின்ற முனிவர்<br>மன்னவிரு போதுமரு வித்தொழுது சேரும்வயல்<br>வைகாவிலே. 4 | சிவபெருமானை இன்ன உருவம் உடையவன்; இன்ன நிறம் உடையவன் என்று உயிர்கள் தம் ஆன்ம போதத்தால் அறிய முடியாது. புண்ணியங்கள் பலவும் தனது உரு என்று சொல்லும்படி மிகுந்த தவக்கோலத்தை உடையவன். அப்பெருமான் அருளோடு வீற்றிருந்தருளும் இடம், முன்னை வினைகளெல்லாம் நீங்க, அவனை வணங்கும் நெறிகளை முறைப்படி முழுவதும் உணர்ந்து நிட்டைகூட முயல்கின்ற முனிவர்கள் காலை, மாலை என்ற இருவேளைகளிலும் சென்று தொழுது போற்றும், வயல்வளம் பொருந்திய திருவைகாவூர் என்னும் திருத்தலமாகும். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **3563.** வேதமொடு வேள்விபல வாயினமி குத்துவிதி யாறுசமயம்<br>ஓதியுமு ணர்ந்துமுள தேவர்தொழ நின்றருள்செ யொருவனிடமாம்<br>மேதகைய கேதகைகள் புன்னையொடு ஞாழலவை மிக்கவழகார்<br>மாதவிம ணங்கமழ வண்டுபல பாடுபொழில் வைகாவிலே. 5 | வேதங்களை ஓதியும், ஓதுவித்தும், வேள்விகள் பல செய்தும், விதிப்படி ஆறு சமயநூல்களைக் கற்றும், உணர்ந்தும் உள்ள பூவுலக தேவர்கள் என்று போற்றப்படும் அந்தணர்கள் தொழ அவர்கட்கு அருள்செய்கின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், சிறந்த தாழைகள், புன்னை, புலிநகக் கொன்றை மிகுந்துள்ளதும், மிக்க அழகுடைய மாதவிக் கொடிகள் நறுமணம் கமழவும், வண்டுகள் பல பாடவும் விளங்கும் சோலைகள் சூழ்ந்ததுமாகிய திருவைகாவூர் என்னும் திருத்தலமாகும். |
| **3564.** நஞ்சமுது செய்தமணி கண்டனமை யாளுடைய ஞானமுதல்வன்<br>செஞ்சடையி டைப்புனல்க ரந்தசிவலோகனமர் கின்றவிடமாம்<br>அஞ்சுடரொ டாறுபத மேழினிசை யெண்ணரிய வண்ணமுளவாய்<br>மைஞ்சரொடு மாதர்பல ருந்தொழுது சேரும்வயல் வைகாவிலேஃ 6 | சிவபெருமான் நஞ்சை அமுது போன்று உட்கொண்டவன். நம்மை ஆட்கொள்கின்ற ஞானமுதல்வன். சிவந்த சடையிலே கங்கையை ஒளித்த சிவலோக நாயகனாகிய அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது அழகிய தீபச்சுடருடன், பிரணவம் முதலாகிய பஞ்சாட்சரத்தைப் பொருளுணர்ந்து உச்சரித்து, ஏழுசுரங்களோடு பாடும் தோத்திரப் பாடல்களைப் பாடி, எண்ண முடியாத விதத்தில் ஆடவர்களோடு மகளிர்கள் பலரும் தொழுது வணங்கும் வயல்வளம்மிக்க திருவைகாவூர் என்னும் திருத்தலமாகும். |
| **3565.** நாளுமிகு பாடலொடு ஞானமிகு நல்லமலர் வல்லவகையால்<br>தோளினொடு கைகுளிர வேதொழும வர்க்கருள்செய் சோதியிடமாம்<br>நீளவளர் சோலைதொறு நாளிபல துன்றுகனி நின்றதுதிர<br>வாளைகுதிகொள்ளமது நாறமலர் விரியும்வயல் வைகாவிலே. 7 | நாள்தோறும் பக்தியோடு தோத்திரப் பாடல்கள் பாடி, ஞானமலர்களான கொல்லாமை, அருள், ஐம்பொறி அடக்கல், பொறை, தவம், வாய்மை, அன்பு, அறிவு இவை கொண்டு தோள்களும், கைகளும் கூப்பித் தொழுபவர்கட்கு அருள் செய்கின்ற சோதிவடிவான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, நீண்டு வளர்ந்த சோலைகளிலுள்ள தென்னைகளிலிருந்து முற்றிய நெற்றுக்கள் உதிர, அதனால் வாளைமீன்கள் துள்ளிப்பாய, அதனால் தேன் மணக்கும் மலர்கள் விரிய வயல்கள் சூழ்ந்த திருவைகாவூர் என்னும் திருத்தலம் ஆகும். |

| | |
|---|---|
| **3566.** கையிருப தோடுமெய்க லங்கிடவி லங்கலையெ<br>டுத்தகடியோன்<br>ஐயிருசி ரங்களையொ ருங்குடனெ ரித்தவழ<br>கன்றனிடமாம்<br>கையின்மலர் கொண்டுநல காலையொடு<br>மாலைகரு திருப்பலவிதம்<br>வையகமெ லாமருவி நின்றுதொழு தேத்துமெழில்<br>வைகாவிலே. 8 | இருபது கைகளும், வலிமையான உடம்பும் துன்புறும்படி பெரிய கயிலைமலையைப் பெயர்த்த தீயோனான இராவணனின் பத்துத் தலைகளையும் ஒருங்கே நெரித்த அழகனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், இவ்வையகத்திலுள்ள அடியவர்கள் பலர் கையில் மலர் கொண்டு, காலையும், மாலையும் தியானித்து, பக்தியுடன் பலவிதத் தோத்திரங்களைப் பாடி வணங்கிப் போற்றுகின்ற அழகிய திருவைகாவூர் என்னும் திருத்தலமாகும். |
| **3567.** அந்தமுத லாதிபெரு மானமரர் கோனையயன்<br>மாலுமிவர்கள்<br>எந்தைபெரு மானிறைவ னென்றுதொழ<br>நின்றருள்செ யீசனிடமாம்<br>சிந்தைசெய்து பாடுமடி யார்பொடிமெய் பூசியெழு<br>தொண்டரவர்கள்<br>வந்துபல சந்தமலர் முந்தியணை யும்பதிநல்<br>வைகாவிலே. 9 | இவ்வுலக ஒடுக்கத்திற்கும், தோற்றத்திற்கும் நிமித்த காரணனான சிவபெருமான், பிரமனும், திருமாலும் தங்கள் செருக்கொழிந்து "எம் தந்தையே! தலைவனே! இறைவனே" என்று தொழுது போற்ற அவர்கட்கு அருள் செய்து விற்றிருந்தருளும் இடமாவது, சிந்தித்துப் பாடும் அடியார்களும், தன் மேனியிலே திருநீற்றைப் பூசியுள்ள தொண்டர்களும் நறுமணம் கமழும் மலர்களை ஏந்தி, வழிபடுவதற்கு ஒருவரையொருவர் முந்துகின்ற, நற்கதிதரும் திருத்தலமாகிய திருவைகாவூர் ஆகும். |
| **3568.** ஈசனெமை யாளுடைய வெந்தைபெரு மானிறைவ<br>னென்றுதனையே<br>பேசுதல்செ யாவமணர் புத்தரவர் சித்தமணை<br>யாவவனிடம்<br>தேசமதெ லாமருவி நின்றுபர வித்திகழ<br>நின்றபுகழோன்<br>வாசமல ரானபல தூவியணை யும்பதிநல்<br>வைகாவிலே. 10 | சிவபெருமானை எம்மை ஆட்கொள்ளும் தந்தை, தலைவன், இறைவன் என்று போற்றுதல் செய்யாத சமணர்கள், புத்தர்கள் இவர்களின் சித்தத்தில் புகாத அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, எல்லா தேசத்தாரும் கூடிநின்று போற்ற, நிலைத்த புகழுடைய அப்பெருமானை நறுமணமிக்க நல்மலர்களைத் தூவி வழிபட நற்கதிதரும் திருத்தலமாகிய திருவைகாவூர் ஆகும். |

**3569.** முற்றுநமை யாளுடைய முக்கண்முதல்
வன்றிருவை காவிலதனை
செற்றமலி னார்சிரபு ரத்தலைவன் ஞானசம்
பந்தனு ரைசெய்
உற்றதமிழ் மாலையீ ரைந்துமிவை வல்லவ
ருருத்திரரெனப்
பெற்றமர லோகமிக வாழ்வர்பிரி யாரவர்பெ
ரும்புகழொடே. 11

முழுவதுமாய் நம்மை ஆட்கொண்ட முக்கண்ணுடைய முதல்வனான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருவைகாவூர் என்னும் திருத்தலத்தைப் போற்றி, தன்னையடைந்தோர் வினைகளை அழிக்கும் சிரபுரத்தில் அவதரித்த தலைவனான ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ்ப்பாக்கள் பத்தினையும் ஓத வல்லவர்கள் உருத்திரர்களாகிய சிவலோகத்தில் முத்தியின்பத்தில் இருந்து பிரியாது புகழுடன் வாழ்வர்.

## 72. திருமாகறல் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 72

**3570.** விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள்
பாடல்விளை யாடலரவம்
மங்குலொடு நீள்கொடிகண் மாடமலி
நீடுபொழின் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர்
திங்களணி செஞ்சடையினான்
செங்கண்விடை யண்ணலடி சேர்பவர்கள்
தீவினைகள் தீருமுடனே. 1

பதிகத்தின் எல்லாப் பாடல்களிலும் பயனாக வினை தீரும் என்று சொல்லப்படுகிறது. வினைதீர மனனம் செய்ய வேண்டிய பதிகம்.

நன்றாக இஞ்சி விளையும் வயலில் பணிசெய்யும் பெண்களின் பாடலும், ஆடலுமாகிய ஓசை விளங்க, மேகத்தைத் தொடும்படி நீண்ட கொடிகளும், உயர்ந்த மாடமாளிகைகளும், அடர்ந்த சோலைகளும் கொண்ட திருமாகறல் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான் சிவபெருமான். நறுமணம் கமழும் கொன்றை மலரும், கங்கையும், பிறைச்சந்திரனும் அணிந்த சிவந்த சடையை உடையவனும், சிவந்த கண்களையுடைய, திருமாலாகிய இடபத்தை உடையவனுமான அப்பெருமானின் திருவடிகளை இடைவிடாது நினைப்பவர்களின் தீவினைகள் உடனே தீரும்.

**3571.** கலையினொலி மங்கையர்கள் பாடலொலி
யாடல்கவி னெய்தியழகார்
மலையினிகர் மாடமுயர் நீள்கொடிகள்
வீசுமலி மாகறலுளான்
இலையின்மலி வேல்நுனைய சூலம்வல
னேந்தியெரி புன்சடையினுள்
அலைகொள்புன லேந்துபெரு மானடியை
யேத்தவினை யகலுமிகவே. 2

வேதாகமக் கலைகளைக் கற்பவர்களின் ஒலியும், பெண்களின் பாடல், ஆடல் ஒலிகளும் சேர்ந்து இனிமை தர, அழகிய மலையை ஒத்த உயர்ந்த மாட மாளிகைகளில் நீண்ட கொடிகள் அசைய, செல்வ வளமிக்க திருமாகறல் என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந் தருளுகின்றான். இலைபோன்ற அமைப்புடைய வேலையும், கூர்மையான நுனியுடைய சூலத்தையும், வலக்கையிலே ஏந்தி, நெருப்புப் போன்ற சிவந்த புன்சடையில் அலைகளை யுடைய கங்கையைத் தாங்கிய அச்சிவபெருமானின் திருவடிகளைப் போற்ற, வினை முற்றிலும் நீங்கும்.

| | |
|---|---|
| **3572.** காலையொடு துந்துபிகள் சங்குகுழல்<br>யாழ்முழவு காமருவுசீர்<br>மாலைவழி பாடுசெய்து மாதவர்க<br>ளேத்திமகிழ் மாகறலுளான்<br>தோலையுடை பேணியதன் மேலொர்சுடர்<br>நாகமசை யாவழகிதாப்<br>பாலையன நீறுபுனை வானடியை<br>யேத்தவினை பறையுமுடனே. **3** | துந்துபி, சங்கு, குழல், யாழ், முழவு முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, காலையும், மாலையும் வழிபாடு செய்து முனிவர்கள் போற்றி வணங்க, மகிழ்வுடன் சிவபெருமான் திருமாகறல் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமான் தோலாடையை விரும்பி அணிந்து, அதன்மேல் ஒளிவிடும் நாகத்தைக் கச்சாகக் கட்டி, அழகுறப் பால்போன்ற திருவெண்ணீற்றைப் பூசி விளங்குகின்றான். அவனுடைய திருவடிகளைப் போற்றி வணங்க, உடனே வினையாவும் நீங்கும். |
| **3573.** இங்குகதிர் முத்தினொடு பொன்மணிக<br>ளுந்தியெழின் மெய்யுளுடனே<br>மங்கையரு மைந்தர்களு மன்னுபுன<br>லாடிமகிழ் மாகறலுளான்<br>கொங்குவளர் கொன்றைகுளிர் திங்களணி<br>செஞ்சடையி னானடியையே<br>நுங்கள்வினை தீரமிக வேத்திவழி<br>பாடுநுகரா வெழுமினே. **4** | ஒளிர்கின்ற முத்து, பொன், மணி இவற்றை ஆபரணங்களாக அணியப்பெற்ற பெண்கள், தங்கள் துணைவர்களுடன் நீராடி மகிழ்கின்ற திருமாகறல் என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமான் நறுமணம் கமழும் கொன்றையையும், குளிர்ந்த சந்திரனையும் சிவந்த சடையில் அணிந்துள்ளான். அவனுடைய திருவடிகளை, உங்கள் வினைதீர மிகவும் போற்றி வழிபட எழுவீர்களாக. |
| **3574.** துஞ்சுநறு நீலமிரு ணீங்கவொளி<br>தோன்றுமது வார்கழனிவாய்<br>மஞ்சுமலி பூம்பொழிலின் மயில்கணட<br>மாடமலி மாகறலுளான்<br>வஞ்சமத யானையுரி போர்த்துமகிழ்<br>வானொர்மழு வாளன் வளரும்<br>நஞ்சமிருள் கண்டமுடை நாதனடி<br>யாரைநலி யாவினைகளே. **5** | நறுமணம் கமழும் நீலோற்பல மலர்கள் இருட்டில் இருட்டாய் இருந்து, இருள்நீங்கி விடிந்ததும் நிறம் விளங்கித் தோன்றுகின்றன. நிறையப் பூக்கும் அம்மலர்கள் தேனை வயல்களில் சொரிகின்றன. அருகிலுள்ள, மேகங்கள் படிந்துள்ள பூஞ்சோலைகளில் மயில்கள் நடனமாடுகின்றன. இத்தகைய சிறப்புடைய திருமாகறல் என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமான் வஞ்சமுடைய மதயானையின் தோலை உரித்துப் போர்த்து மகிழ்கின்றான். ஒப்பற்ற மழுப்படையை உடையவன். நஞ்சையுண்டு மிக இருண்ட கழுத்தையுடையவன். அத்தலைவனான சிவபெருமானின் அடியார்களை வினைகள் துன்புறுத்தா. |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3575.** மன்னுமறை யோர்களொடு பல்படிம<br>மாதவர்கள் கூடியுடனாய்<br>இன்னவகை யாலினிதி றைஞ்சியிமை<br>யோரிலெழு மாகறலுளான்<br>மின்னைவிரி புன்சடையின் மேன்மலர்கள்<br>கங்கையொடு திங்களெனவே<br>உன்னுமவர் தொல்வினைக ளொல்கவுயர்<br>வானுலக மேறலெளிதே. 6 | என்றும் நிலைத்திருக்கும் வேதங்களை நன்கு கற்ற அந்தணர்களும், பலவிதத் தவக்கோலங்கள் தாங்கிய முனிவர்களும் கூடி இறைவனை இனிது இறைஞ்சும் தன்மையில் தேவர்களை ஒத்து விளங்குகின்ற திருமாகறல் என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமான் மின்னல்போல் ஒளிரும் விரிந்த செஞ்சடையின் மேல் மலர்களையும், கங்கையையும், பிறைச்சந்திரனையும் அணிந்துள்ளான். அப்பெருமானை நினைந்து வழிபடுபவர்களின் தொல்வினைகள் நீங்க, உயர் வானுலகை அவர்கள் எளிதில் அடைவர். |
| **3576.** வெய்யவினை நெறிகள்செல வந்தணையு<br>மேல்வினைகள் வீட்டலுறுவீர்<br>மைகொள்விரி கானன்மது வார்கழனி<br>மாகறலு ளானெழிலதார்<br>கையகரி கால்வரையின் மேலதுரி<br>தோலுடைய மேனியழகார்<br>ஐயனடி சேர்பவரை யஞ்சியடை<br>யாவினைக ளகலுமிகவே. 7 | கொடிய வினைகள் தாம் வந்த வழியே செல்லவும், இனி இப்பிறவியில் மேலும் ஈட்டுதற்குரிய ஆகாமிய வினைகளை ஒழிக்க வல்லவர்களே! மேகங்கள் தவழும் ஆற்றங்கரைச் சோலைகளிலுள்ள பூக்களிலிருந்து தேன் ஒழுகும் வயல்களை யுடைய திருமாகறல் என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமான் யானையின் தோலை உரித்துப் போர்த்த அழகிய திருமேனியுடையவன். யாவர்க்கும் தலைவனான அப்பெருமானின் திருவடிகளை நினைந்து வழிபடுபவர்களை வினையானது அடைய அஞ்சி அகன்று ஓடும். |
| **3577.** தூசுதுகி னீள்கொடிகண் மேகமொடு<br>தோய்வனபொன் மாடமிசையே<br>மாசுபடு செய்கைமிக மாதவர்க<br>ளோதிமலி மாகறலுளான்<br>பாசுபத விச்சைவரி நச்சரவு<br>கச்சையுடை பேணியழகார்<br>பூசுபொடி யீசனென வேத்தவினை<br>நிற்றலில போகுமுடனே. 8 | பொன்மயமான மாடங்களின் உச்சியில் கட்டப்பட்டுள்ள வெண்துகிலாலான கொடிகள் கருநிற மேகத்தைத் தொடுகின்ற மாசுபடு செய்கை தவிர வேறு குற்றமில்லாத, பெரிய தவத்தார்கள், வேதங்கள் ஓத விளங்கும் திருமாகறல் என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமான் பாசுபத கோலத்தை விரும்பி, வரிகளையுடைய விடமுடைய பாம்பைக் கச்சாக அணிந்த அழகுடையவன். திருவெண் ணீற்றைப் பூசியவன். அவனைப் போற்றி வழிபட வினையாவும் நில்லாது உடனே விலகிச் செல்லும். |

| | |
|---|---|
| **3578.** தூயவிரி தாமரைக ணெய்தல்கழு<br>நீர்குவளை தோன்றமதுவுண்<br>பாயவரி வண்டுபல பண்முரலு<br>மோசைபயின் மாகறலுளான்<br>சாயவிர லூன்றியவி ராவணன<br>தன்மைகெட நின்றபெருமான்<br>ஆயபுக ழேத்துமடி யார்கள்வினை<br>யாயினவு மகல்வதெளிதே. 9 | தூய்மையான தாமரை, நெய்தல், கழுநீர், குவளை போன்ற மலர்கள் விரிய, அவற்றிலிருந்து தேனைப் பருகும் வரிகளையுடைய வண்டுகள் பண்ணிசையோடு பாடுதலால் ஏற்படும் ஓசை மிகுந்த திருமாகறல் என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அவன் தன் காற்பெருவிரலை ஊன்றி இராவணனின் வலிமை கெடுமாறு செய்தவன். அப்பெருமானின் புகழைப் போற்றி வணங்கும் அடியவர்களின் வினை எளிதில் நீங்கும். |
| **3579.** காலினல பைங்கழல்க ணீண்முடியின்<br>மேலுணர்வு காமுறவினார்<br>மாலுமல ரானுமறி யாமையெரி<br>யாகியுயர் மாகறலுளான்<br>நாலுமெரி தோலுமுரி மாமணிய<br>நாகமொடு கூடியுடனாய்<br>ஆலும்விடை யூர்தியுடை யடிகளடி<br>யாரையடை யாவினைகளே. 10 | பைம்பொன்னாலாகிய வீரக்கழல்களை அணிந்த திருவடிகளையும், நீண்ட சடைமுடியையும் காணவேண்டும் என்ற விருப்பமுடன் முயன்ற திருமாலும், பிரமனும் அறியாவண்ணம் நெருப்புப் பிழம்பாய் ஓங்கி நின்ற சிவபெருமான் திருமாகறலில் வீற்றிருந்தருளுகின்றான். உடம்பில் நாலிடத்து நெருப்பைக் கொண்டும், தோலுரித்து மாணிக்கத்தைக் கக்கும் பாம்பணிந்தும், அசைந்து நடக்கின்ற இடபத்தை வாகனமாகக் கொண்டுள்ள சிவபெருமானின் அடியார்களை வினைகள் அடையா. |
| **3580.** கடைகொணெடு மாடமிக வோங்குகமழ்<br>வீதிமலி காழியவர்கோன்<br>அடையும்வகை யாற்பரவி யரனையடி<br>கூடுசம் பந்தனுரையால்<br>மடைகொள்புன லோடுவயல் கூடுபொழின்<br>மாகறலுளா னடியையே<br>உடையதமிழ் பத்துமுணர் வாரவர்கள்<br>தொல்வினைக ளொல்குமுடனே. 11 | வாயில்களையுடைய மிக உயர்ந்த நீண்ட மாடங்களும், நறுமணம் கமழும் வீதிகளும் உடைய சீகாழியில் வாழ்பவர்கட்குத் தலைவனான திருஞானசம்பந்தன், சிவபெருமானைச் சேர்தற்குரிய நெறிமுறைகளால் துதித்து, மடைகளில் தேங்கிய தண்ணீர் ஓடிப் பாய்கின்ற வயல்களும், நெருங்கிய சோலைகளுமாக நீர்வளமும், நிலவளமுமிக்க திருமாகறல் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அப்பெருமானைப் போற்றி அருளிய இத்தமிழ்ப் பாக்கள் பத்தினையும் உணர்ந்து ஓதவல்லவர்களின் தொல்வினைகள் நீங்கும். |

## 73. திருப்பட்டீச்சரம் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 73

3581. பாடன்மறை சூடன்மதி பல்வளையொர்
பாகமதின் மூன்றொர்கணையால்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல்
கூட்டுபொழில் சூழ்பழைசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசர
மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவிரை வீடுநெறி
காட்டிவினை வீடுமவரே. 1

கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள மழபாடி வேறு. இந்த மழபாடி பழைய பழையாறை வடதளி என்ற பெரும்பகுதியின் ஒரு நகராய் இருந்துள்ளது.

சிவபெருமான் வேதங்களை அருளிச்செய்து, வேதப் பொருளாயும் விளங்குபவர். பிறைச்சந்திரனைச் சூடியவர். பல வளையல்களையணிந்த உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். மதில்கள் மூன்றினையும் ஒரு கணையால் எரித்த வீர அழகைக் காட்டியவர். நிழல் தரும் சோலைகள் சூழ்ந்த **திருப்பழையாறையில், மாடங்களையுடைய திருமழபாடி என்னும் நகரில், திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றார்.** பாம்பைக் கச்சாகக் கட்டியவர். வேடநிலைக்கேற்ப நல்லொழுக்கத்தில் நிற்கும் அடியவர்களின் வினைகளைப் போக்கி முத்திநெறி அருளவல்லவர்.

3582. நீரின்மலி புன்சடையர் நீளரவு
கச்சையது நச்சிலையதோர்
கூரின்மலி சூலமது வேந்தியுடை
கோவணமு மானினுரிதோல்
காரின்மலி கொன்றைவிரி தார்கடவுள்
காதல்செய்து மேயநகர்தான்
பாரின்மலி சீர்பழைசை பட்டிசர
மேத்தவினை பற்றழியுமே. 2

சிவபெருமான் கங்கையைச் சடையில் தாங்கியவர். நீண்ட பாம்பைக் கச்சாகக் கட்டியவர். கூர்மையான இலை போன்ற வடிவுடைய கொம்பு சூலப்படையை ஏந்தியவர். கோவண ஆடை அணிந்தவர். மான் தோலையும் அணிந்தவர். கார்காலத்தில் மலரும் கொன்றையை மாலையாக அணிந்தவர். அத்தகைய கடவுள் விரும்பி வீற்றிருந்தருளும் தலமாவது பூமியில் மிக்க புகழையுடைய திருப்பழையாறை ஆகும். அங்குள்ள திருப்பட்டீச்சரம் என்னும் கோயிலிலுள்ள இறைவனைப் போற்றி வணங்க நம் வினைகள் யாவும் அடியோடு அழியும்.

3583. காலைமட வார்கள்புன லாடுவது
கௌவைகடி யார்மறுகெலாம்
மாலைமண நாறுபழை யாறைமழ
பாடியழ காயமலிசீர்ப்
பாலையன நீறுபுனை மார்பனுறை
பட்டிசர மேபரவுவார்
மேலையொரு மால்கடல்கள் போல்பெருகி
விண்ணுலக மாளுமவரே. 3

பெண்கள் காலையில் நீர்நிலைகளில் நீராடுவதால் உண்டாகும் ஓசையை உடையதாய், மாலையில் பூசை செய்வதால் வீதிகளிலெல்லாம் நறுமணம் கமழ்வதாய் உள்ள திருப்பழையாறை என்னும் தலத்தில் மழபாடி என்னும் பகுதியில், தன் திருமேனி முழுவதும் மிக்க சிறப்புடைய பால்போன்ற திருவெண்ணீற்றைப் பூசிய மார்புடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலை வணங்குவார் இம்மையில் கடல்போல் செல்வம் பெருக, மறுமையில் விண்ணுலகை ஆள்வர்.

| பாடல் | பொருள் |
|---|---|
| **3584.** கண்ணின்மிசை நண்ணியிழி விப்பமுக<br>மேத்துகமழ் செஞ்சடையினான்<br>பண்ணின்மிசை நின்றுபல பாணிபட<br>வாடவல பான்மதியினான்<br>மண்ணின்மிசை நேரின்மழ பாடிமலி<br>பட்டிசர மேமருவுவார்<br>விண்ணின்மிசை வாழுமிமை யோரொடுட<br>னாதலது மேவலெளிதே. 4 | சிவபெருமானின் கண்களை உமாதேவி பொத்த, அதனால் அரும்பிய வியர்வையைக் கங்கையாகச் செஞ்சடையில் தாங்கியவன். அப்பெருமான் பண்ணிசைகளோடு பாடல்களைப் பாடவும், ஆடவும் வல்லவன். பால் போன்ற வெண்ணிறச் சந்திரனைச் சூடியவன். அப்பெருமான் மண்ணுலகில் ஒப்பற்ற பெருமையுடைய திருமழபாடி என்னும் தலத்தில் திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றான். அவனைப் போற்றி வணங்குபவர்களுக்கு விண்ணுலகிலுள்ள தேவர்களுடன் வாழ்வது எளிதாகும். |
| **3585.** மருவமுழ வதிரமழ பாடிமலி<br>மத்தவிழ வார்க்கவரையார்<br>பருவமழை பண்கவர்செய் பட்டிசர<br>மேயபடர் புன்சடையினான்<br>வெருவமத யானையுரி போர்த்துமையை<br>யஞ்சவரு வெள்விடையினான்<br>உருவமெரி கழல்கடொழ வுள்ளமுடை<br>யாரையடை யாவினைகளே. 5 | முழவு முதலிய வாத்தியங்கள் அதிர்ந்து ஒலிக்க, திருமழபாடி என்னும் திருத்தலம் கோயில் உற்சவங்களாலும், விழாக் களியாட்டங்களாலும் ஓசை மிகுந்து விளங்குகின்றது. மலை உள்ளதால் பருவ காலத்தில் மழை பொழிய, வளம் மிகுந்து, கண்டவர் மனத்தைக் கவர்கின்ற திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலில் படர்ந்த செஞ்சடையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமான் அஞ்சத்தக்க மதயானையின் தோலை உமாதேவி அஞ்சுமாறு உரித்துப் போர்த்துக் கொண்டவன். வெண்ணிற இடபத்தை வாகனமாகக் கொண்டவன். நெருப்புப் போன்ற சிவந்த திருமேனியுடைய அச்சிவபெருமானின் திருவடிகளை உள்ளம் ஒன்றித் தொழுபவர்களை வினையால் வரும் துன்பம் சாராது. |
| **3586.** மறையினொலி கீதமொடு பாடுவன<br>பூதமடி மருவிவிரவார்<br>பறையினொலி பெருகநிகழ் நட்டமமர்<br>பட்டிசர மேயபனிகூர்<br>பிறையினொடு மருவியதொர் சடையினிடை<br>யேற்றபுன றோற்றநிலையாம்<br>இறைவனடி முறைமுறையி னேத்துமவர்<br>தீத்தொழில்க ளில்லர்மிகவே. 6 | வேதங்கள் ஓதும் ஒலியும், கீதங்கள் பாடும் ஒலியும், பூதகணங்கள் திருவடிக்கீழ் அமர்ந்து போற்றும் ஒலியும் கலந்து ஒலிக்க, பறை என்னும் வாத்திய ஓசையும் பெருகத் திருநடனம் புரியும் சிவபெருமான் திருப்பட்டீச்சரம் என்னும் கோயிலில் விற்றிருந்தருளுகின்றான். குளிர்ச்சி பொருந்திய சந்திரனை அணிந்த சடையிலே கங்கையையும் தாங்கிய நிலையான தோற்றப் பொலிவு உடையவன். அத்தகைய இறைவனின் திருவடிகளை நாடொறும் முறைமையோடு போற்றி வணங்குபவர்கள் துன்புறும் வினைகளிலிருந்து முற்றிலும் நீங்கியவராவர். |

| | | |
|---|---|---|
| **3587.** பிறவிபிணி மூப்பினொடு நீங்கியிமை<br>யோருலகு பேணலுறுவார்<br>துறவியெனு முள்ளமுடை யார்கள்கொடி<br>வீதியழ காயதொகுசீர்<br>இறைவனுறை பட்டிசர மேத்தியெழு<br>வார்கள்வினை யேதுமிலவாய்<br>**நறவவிரை யாலுமொழி யாலும்வழி<br>பாடுமற வாதவவரே.** | 7 | பிறவியாகிய நோயும், மூப்பும் நீங்கித் தேவலோகத்தில் உள்ளவர்களால் பாராட்டப்படுகின்றவர்களும், உலகப்பற்றைத் துறந்த உள்ளமுடைய ஞானிகளும் வாழ்கின்ற, கொடி அசைகின்ற வீதிகளையுடைய திருப் பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலில் அழகிய சிறப்புடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றான். அக்கோயிலைப் போற்றி வணங்குபவர்கள் வினை சிறிதும் இல்லாதவராகி, தேன் ஒழுகுகின்ற நறுமணம் கமழும் மலர்களாலும், தோத்திரங்களாலும் சிவனை வழிபட மறவாதவர்களாவர். அவர்கள் சிவகணங்களோடு உறைவர் என்பது குறிப்பு. |
| **3588.** நேசமிகு தோள்வலவ னாகியிறை<br>வன்மலையை நீக்கியிடலும்<br>நீசன்விறல் வாட்டிவரை யுற்றதுண<br>ராதநிரம் பாமதியினான்<br>ஈசனுறை பட்டிசர மேத்தியெழு<br>வார்கள்வினை யேதுமிலவாய்<br>நாசமற வேண்டுதலி னண்ணலெளி<br>தாமமரர் விண்ணுலகமே. | 8 | திக்குவிசயம் செய்வதில் விருப்பம் கொண்டுவரும் இராவணன் தன் புய வலிமையினால் சிவபெருமான் வீற்றிருக்கும் கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க, இழி பண்புடைய இராவணனின் வலிமையை வாட்டியவராய், தன்னுடைய எல்லையும், தன்னுடைய நிலைமையும் பிறரால் அறியப்படாது, பிறைச்சந்திரனை அணிந்த அச்சிவபெருமான் வீற்றிருந்தருள்கின்ற திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலைத் தொழுது வணங்குவார்களின் வினை முழுவதும் நீங்க, இனிப் பிறந்திறத்தலும் நீங்க அவர்கள் சிவஞானம் பெறுதலால் விண்ணுலகத்தை எளிதில் அடைவர். |
| **3589.** தூயமல ரானுநெடி யானுமறி<br>யாரவன தோற்றநிலையின்<br>ஏயவகை யானதனை யாரதறி<br>வாரணிகொண் மார்பினகலம்<br>பாயநல நீறதணி வானுமைத<br>னோடுமுறை பட்டிசரமே<br>மேயவன தீரடியு மேத்தவெளி<br>தாகுநல மேலுலகமே. | 9 | தூய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் சிவபெருமானுடைய தோற்றத்தையும், பலவகையான நிலைகளையும் அறியாதவர்களாயின் வேறுயார்தான் அவற்றை அறிவர்? அழகிய அகன்ற மார்பு முழுவதும் திருநீற்றினை அணிந்து உமாதேவியோடு இறைவன் வீற்றிருந்தருளுகின்ற திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலை அடைந்து அவன் இரு திருவடிகளைப் போற்றி வணங்கச் சிவஞானம் பெறுதலும், அதன் பயனால் முக்தியுலகை அடைதலும் எளிதாகும். |

| | |
|---|---|
| 3590. தடுக்கினை யிடுக்கிமட வார்களிடு<br>பிண்டமது வுண்டுழல்தரும்<br>கடுப்பொடி யுடற்கவசர் கத்துமொழி<br>காதல்செய்தி டாதுகமழ்சேர்<br>மடைக்கயல் வயற்கொண்மழ பாடிநகர்<br>நீடுபழை யாறையதனுள்<br>படைக்கொரு கரத்தன்மிகு பட்டிசர<br>மேத்தவினை பற்றறுதலே. 10 | தடுக்கையேந்திப் பெண்கள் இடுகின்ற உணவை உண்டு, சுற்றித் திரிகின்றவர்களும், கடுக்காய்ப் பொடியைத் தின்பவர்களுமான சமணர்களும், உடம்பைப் போர்த்திக் கொள்கின்ற பௌத்தர்களும் கூறும் அன்பற்ற மொழிகளை ஏற்க வேண்டா. மடைகளில் கயல்மீன்கள் பாய வளப்பம் மிகுந்த வயல்களையுடைய நெடிய திருப்பழை யாறையின், திருமழபாடி என்னும் நகர்ப் பகுதியில், திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலில் மழுப்படையைக் கையிலேந்தி வீற்றிருந்தருளும் சிவபெருமானைப் போற்றி வணங்க வினையாவும் முற்றிலும் நீங்கும். |
| 3591. மந்தமலி சோலைமழ பாடிநகர்<br>நீடுபழை யாறையதனுள்<br>பந்தமுயர் வீடுநல பட்டிசர<br>மேயபடர் புன்சடையானை<br>அந்தண்மறை யோரினிது வாழ்புகலி<br>ஞானசம் பந்தனணியார்<br>செந்தமிழ்கள் கொண்டினிது செப்பவல<br>தொண்டர்வினை நிற்பதிலவே. 11 | தென்றல் உலாவும் சோலைகளையுடைய திருமழபாடி என்னும் நகர்ப் பகுதியைத் தன்னுள் கொண்ட நெடிய பழையாறை என்னும் திருத்தலத்தில், தன்னையடைந்தவர்கட்குப் பந்தமும், வீடும் அருளவல்ல நல்ல திருப்பட்டீச்சரம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்ற படர்ந்த சிறுசடை களையுடைய சிவபெருமான். அப்பெருமானைப் போற்றி எவ்வுயிர்களிடத்தும் இரக்கமுள்ள மறையோர்கள் இனிது வாழ்கின்ற திருப்புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன் அழகிய செந்தமிழில் அருளிய இப்பதிகத்தைக் கேட்டதற்கும், உணர்தற்கும் இனிதாகச் சொல்லவல்ல தொண்டர்களின் வினைகள் நீங்கும். |

## 74. திருத்தேவூர் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 74

| | |
|---|---|
| 3592. காடுபயில் வீடுமுடை யோடுகலன்<br>மூடுமுடை யாடைபுலிதோல்<br>தேடுபலி யூணதுடை வேடமிகு<br>வேதியர் திருந்துபதிதான்<br>நாடகம தாடமஞ்ஞை பாடவரி<br>கோடல்கைம் மறிப்பநலமார்<br>சேடுமிகு பேடையன மூடிமகிழ்<br>மாடமிடை தேவூரதுவே. 1<br><br>தேவர்கள் பூசித்து மந்திர உபதேசம் பெற்ற தலமாதலால் தேவூர். தேவகுருவான பிரகஸ்பதியும் வழிபட்டுள்ளார். தேவை என்றும் கூறப்படும். | சிவபெருமான் வசிக்கும் வீடு சுடுகாடாகும். முடைநாற்றம் பொருந்திய மண்டையோடு அவன் உண்கலமாகும். அவனது ஆடை புலித்தோலாகும். உணவு தேடியுண்ணும் பிச்சையாகும். இத்தகைய கோலமுடைய, வேதத்தை அருளிச் செய்த வேதப் பொருளாக விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, சோலைகளில் மயில்கள் ஆட, வண்டுகள் பாட, காந்தள்கள் அசைந்து கைத்தாளமிட, அழகிய இளம் பெண் அன்னம் போன்ற பெண்கள் ஆடவர்களோடு ஊடி, பின் ஊடல் நீங்கி மகிழ்கின்ற மாடங்கள் நிறைந்த திருத்தேவூர் என்பதாகும். |

| | |
|---|---|
| **3593.** கோளரவு கொன்றைநகு வெண்டலையெ<br>ருக்குவனி கொக்கிறகொடும்<br>வாளரவு தண்சலம கட்குலவு<br>செஞ்சடைவ ரத்திறைவனூர்<br>வேளரவு கொங்கையிள மங்கையர்கள்<br>குங்குமம் விரைக்குமணமார்<br>தேளரவு தென்றறெரு வெங்குநிறை<br>வொன்றிவரு தேவூரதுவே. 2<br><br>ஆளுடைய பிள்ளையார் கருகை ஆற்றங்கரை யிலிருந்து பாடினார். "தேவூரதுவே" என்று பாடியது ஆதாரமாகும். மற்ற தலங்களில் இதுவே என்று பாடுவார். | கொல்லும் தன்மையுடைய பாம்பு, கொன்றை, சிரிக்கும் மண்டையோடு, எருக்கு, வன்னி, கொக்கு இறகு, ஒளி பொருந்திய பாம்பு, குளிர்ச்சி பொருந்திய கங்காதேவி, இவை குலவுகின்ற சிவந்த சடையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், மன்மதனும் விரும்பும் கொங்கைகளை உடைய, கணவரோடு கூடிய இள மங்கையர்கட்குக் குங்குமக் குழம்பின் மணத்தை அதிகரிக்கச் செய்யும் தன்மையுடையதும், கணவரைப் பிரிந்த மகளிர்கட்குத் தேள் கொட்டுவது போல் துன்பஞ் செய்கின்ற தன்மையுடையதுமான தென்றல் காற்று தெருவெங்கும் நிறைந்து பெருகும் திருத்தேவூர் ஆகும். |
| **3594.** பண்டடவு சொல்லின்மலை வல்லியுமை<br>பங்கனெமை யாளுமிறைவன்<br>எண்டடவு வானவரி றைஞ்சுகழ<br>லோனினிதி ருந்தவிடமாம்<br>விண்டடவு வார்பொழி லுகுத்தநற<br>வாடிமலர் சூடிவிரையார்<br>செண்டடவு மாளிகை செறிந்துதிரு<br>வொன்றிவளர் தேவூரதுவே. 3 | பண்ணிசை போன்ற இனிய மொழிகளைப் பேசுகின்ற மலைமகளான உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு எம்மையாளும் இறைவன் எண்ணற்ற தேவர்கள் தன் திருவடிகளை வணங்க இனிது வீற்றிருந்தருளும் இடம், வானளாவி உயர்ந்த சோலைகள் உகுக்கும் தேன்துளிக்கும் மலர்களைச் சூடி, அதனால் நறுமணம் கமழ, ஆகாயமளாவிய உயர்ந்த மாளிகைள் நிறைந்த திருமகள்வாசம் செய்யும் திருத்தேவூர் ஆகும். |
| **3595.** மாசின்மன நேசர்தம தாசைவளர்<br>சூலதரன் மேலையிமையோர்<br>ஈசன்மறை யோதியெரி யாடிமிகு<br>பாசுபதன் மேவுபதிதான்<br>வாசமலர் கோதுகுயில் வாசகமு<br>மாதரவர் பூவைமொழியும்<br>தேசவொலி வீணையொடு கீதமது<br>வீதிநிறை தேவூரதுவே. 4<br><br>"தேவூர்த்தென்பால் திகழ்தரு தீவிற்கோவார் கோலம் கொண்ட கொள்கையும்'' திருவாசகம் கீர்த்தித் திருவகவலின் 71–72 அடிகள் இவை. இவ்வரிகளுக்கேற்ப தேவைக்குத் தெற்கே அரை மைல் தொலைவில் பசுபதீச்சரம் என்ற தலம் உள்ளது. | சிவபெருமான் களங்கமற்ற மனமுடைய அடியார்கள் தன்மேல் கொண்ட பக்தி மேன்மேலும் பெருக விளங்குபவன். சூலப்படையை ஏந்தியவன். வானுலகிலுள்ள தேவர்கட்குத் தலைவன். வேதங்களை ஓதியருளி வேதப்பொருளாயும் விளங்குபவன். நெருப்பேந்தி நடனம் ஆடுபவன். வெற்றிதரும் பாசுபத அஸ்திரம் உடையவன். அத்தகைய சிவபெருமான் இனிது வீற்றிருந்தருளும் தலமாவது, நறுமணமிக்க மலர்களை மூக்கால் கோதுகின்ற குயில்களின் கூவலும், நாகணவாய்ப் பறவை போன்று பேசுகின்ற பெண்களின் இனிய மொழியும், அடியவர்கள் இறைவனைப் புகழும் ஒலியும், வீணை மீட்டும் ஒலியும், கீதங்களின் ஒலியும் நிறைந்து விளங்கும் வீதிகளையுடைய திருத்தேவூர் ஆகும். |

| | | |
|---|---|---|
| **3596.** கானமுறு மான்மறிய னானையுரி<br>போர்வைகன லாடல்புரிவோன்<br>ஏனவெயி றாமையிள நாகம்வளர்<br>மார்பினிமை யோர்தலைவனூர்<br>வானணவு சூதமிள வாழைமகிழ்<br>மாதவி பலாநிலவிவார்<br>தேனமுது வுண்டுவரி வண்டுமருள்<br>பாடிவரு தேவூரதுவே. | 5 | சிவபெருமான் காட்டில் வாழ்கின்ற மான்கன்றைக் கரத்தில் ஏந்தியவன். யானையின் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்தியவன். நெருப்பேந்தித் திருநடனம் செய்பவன். பன்றியின் கொம்பு, ஆமை ஓடு, இளம் பாம்பு இவற்றை மார்பில் அணிந்தவன். தேவர்களின் தலைவன், அவன் உகந்தருளிய திருத்தலம் வானளாவிய மா, வாழை, மகிழ், மாதவி, பலா முதலிய மரங்கள் தழைத்து, சொரிகின்ற தேனை உண்டு, வரிகளையுடைய வண்டுகள் தேனுண்ட மயக்கத்தில் பாடும் திருத்தேவூர் ஆகும். |
| **3597.** ஆறினொடு கீறுமதி யேறுசடை<br>யேறனடை யார்நகர்கடான்<br>சீறுமவை வேறுபட நீறுசெய்த<br>நீறனமை யாளுமரனூர்<br>வீறுமல ரூறுமது வேறிவளர்<br>வாயவிளை கின்றகழனிச்<br>சேறுபடு செங்கயல் விளிப்பவிள<br>வாளைவரு தேவூரதுவே. | 6 | சிவபெருமான் சடையிலே கங்கையோடு, பிறைச்சந்திரனையும் அணிந்தவன். இடபவாகனம் ஏறியவன். கோபம்கொண்டு தேவர்களைத் துன்புறுத்தும் பகையசுரர்களின் முப்புரங்களை எரித்துச் சாம்பலாகும்படி செய்தவன். திருமேனியில் திருநீற்றைப் பூசியவன். நம்மையாட்கொள்ளும் அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், செழிப்பான மலர்களிலிருந்து ஊறும் தேன் வயல்களில் பாய்ந்து சேறுபடுத்த, கயல்மீன்கள் விளையாட அழைக்க இள வாளைமீன்கள் வருகின்ற திருத்தேவூர் என்பதாகும். |
| **3598.** கன்றியெழ வென்றிநிகழ் துன்றுபுர<br>மன்றவிய நின்றுநகைசெய்<br>என்றனது சென்றுநிலை யெந்தைதன<br>தந்தையம ரின்பநகர்தான்<br>முன்றின்மிசை நின்றபல வின்கனிக<br>டின்றுகற வைக்குருளைகள்<br>சென்றிசைய நின்றுதுளி யொன்றவிளை<br>யாடிவளர் தேவூரதுவே. | 7 | கோபித்து உலகையழிக்க எண்ணி வெற்றிபெற்ற பகையசுரர்களின் நெருங்கிய மூன்று புரங்களையும், சிவபெருமான் சிரித்துச் சாம்பலாகுமாறு செய்தவன். நான் சென்றடையக் கூடிய பற்றுக்கோடாக விளங்குபவன். என் தந்தைக்குத் தந்தையாகிய அச்சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இனிய தலமாவது, வீட்டின் முன்னால் நின்ற பலாக்கனிகளைத் தின்று கறவைப் பசுக்களின் கன்றுகள் துள்ளி விளையாடி வளர்கின்ற திருத்தேவூர் ஆகும். |

| | | |
|---|---|---|
| 3599. | ஓதமலி கின்றதெனி லங்கையரை<br>யன்மலி புயங்கணெரியப்<br>பாதமலி கின்றவிர லொன்றினில்<br>அடர்த்தபர மன்றனதிடம்<br>போதமலி கின்றமட வார்கணட<br>மாடலொடு பொங்குமுரவம்<br>சேதமலி கின்றகரம் வென்றிதொழி<br>லாளர்புரி தேவூரதுவே. 8 | கடல் அலைகள் மோதுகின்ற தென்னிலங்கை மன்னனான இராவணனின் வலிமை மிகுந்த புயங்கள் நெரிபடத் தன் காற்பெருவிரலை ஊன்றி அடர்த்த சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற தலமாவது, மகிழ்ச்சி மிகுந்த பெண்கள் நடனமாடவும், முழவு ஒலிக்கவும், சேற்றில் பயில்கின்ற கையினால் உழவுத் தொழில் செய்து வறுமைப் பிணியையும், பசிப்பிணியையும் ஓட்டி வெற்றி காணும் வேளாளர்கள் நிறைந்த திருத்தேவூர் ஆகும். |
| 3600 | வண்ணமுகி லன்னவெழி லண்ணலொடு<br>சுண்ணமலி வண்ணமலர்மேல்<br>நண்ணவனு மெண்ணரிய விண்ணவர்கள்<br>கண்ணவ னலங்கொள்பதிதான்<br>வண்ணவன நுண்ணிடையி னெண்ணரிய<br>வன்னநடை யின்மொழியினார்<br>திண்ணவண மாளிகை செறிந்தவிசை<br>யாழ்மருவு தேவூரதுவே. 9 | கருநிற மேகத்தையொத்த அழகிய திருமாலும், மகரந்தப்பொடி நிறைந்த தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனும், அளவற்ற தேவர்களும், இவர் நிலைமையை அறியும்வழி என்ன என்று யோசிக்கும்படி நெருப்புப்பிழம்பாய் நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், அழகிய நிறமும், சிறிய இடையும், அன்ன நடையும், அளவற்ற இனிய மொழிகளுமுடைய பெண்கள், உறுதியாக அமைந்த மாளிகைகளில் யாழிசைக்க விளங்கும் திருத்தேவூர் ஆகும். |
| 3601. | பொச்சமமர் பிச்சைபயி லச்சமணு<br>மெச்சமறு போதியருமா<br>மொச்சைபயி லிச்சைகடி பிச்சன்மிகு<br>நச்சரவன் மொச்சநகர்தான்<br>மைச்சின்முகில் வைச்சபொழில்<br>................................... 10 | பொய்யான துறவு வேடம்கொண்டு பிச்சை யெடுக்கும் சமணர்களும், புகழற்ற புத்தர்களும் கூறும் விருப்பமான உபதேச மொழிகளை விலக்கி, பித்தன் எனப்படுபவனும், விடமுடைய பாம்பை அணிந்தவனும் ஆகிய சிவபெருமானுடைய, மொய்த்த மெய்யடியார்கள் நெருங்கிய தலமாவது, மேகத்தைத் தொடும்படி உயர்ந்துள்ள சோலைகள் சூழ்ந்த திருத்தேவூர் ஆகும். |
| 3602. | துங்கமிகு பொங்கரவு தங்குசடை<br>நங்களிறை துன்றுகுழலார்<br>செங்கயல்கண் மங்கையுமை நங்கையொரு<br>பங்கனமர் தேவூரதன்மேல்<br>பைங்கமல மங்கணிகொள் திண்புகலி<br>ஞானசம் பந்தனுரைசெய்<br>சங்கமலி செந்தமிழ்கள் பத்துமிவை<br>வல்லவர்கள் சங்கையிலரே. 11 | நீண்டு வளர்ந்து படமெடுக்கும் பாம்பைச் சிவந்த சடையில் அணிந்தவர் நம் தலைவரான சிவபெருமான். அவர்அடர்ந்த கூந்தலையும், செவ்விய கயல்மீன் போன்ற கண்களையுமுடைய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். அவர் வீற்றிருந்தருளும் தலம் திருத்தேவூர். அதைப் போற்றிப் பசிய தாமரை மலர்கள் அழகு செய்கின்ற வலிய திருப்புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இச்செந்தமிழ்ப் பாக்கள் பத்தையும் அடியார் கூட்டங்களில் ஓத வல்லவர்கள் குற்றமற்றவர் ஆவர். |

## 75. திருச்சண்பைநகர் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 75

**3603.** எந்தமது சிந்தைபிரி யாதபெரு
மானென விறைஞ்சியிமையோர்
வந்துதுதி செய்யவளர் தூபமொடு
தீபமலி வாய்மையதனால்
அந்தியமர் சந்திபல வர்ச்சனைகள்
செய்யவமர் கின்றவழகன்
சந்தமலி குந்தளநன் மாதினொடு
மேவுபதி சண்பைநகரே. 1

எங்கள் சிந்தையிலிருந்து நீங்காத தலைவனே! என்று தேவர்கள் தொழுது போற்ற, நறுமணம் கமழும் தூபதீபம் முதலிய உபசாரங்களோடு பூசாவிதிப்படி மாலை, முதலிய சந்தியா காலங்களில் அர்ச்சனைகள் செய்ய வீற்றிருக்கும் அழகனான சிவபெருமான், நறுமணம் கமழும் கூந்தலையுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு விளங்குகின்ற தலம் திருச்சண்பைநகர் ஆகும்.

**3604.** அங்கம்விரி துத்தியர வாமைவிர
வாரமமர் மார்பிலழகன்
பங்கய முகத்தரிவை யோடுபிரி
யாதுபயில் கின்றபதிதான்
பொங்குபர வைத்திரை கொணர்ந்துபவ
ளத்திரள் பொலிந்தவயலே
சங்குபுரி யிப்பிதர ளத்திரள்
பிறங்கொளிகொள் சண்பைநகரே. 2

திருமேனியிலே பரந்த புள்ளிகளையுடைய பாம்பையும், ஆமையோட்டையும் கலந்த மாலையாக மார்பிலே விரும்பியணிந்த அழகனாகிய சிவபெருமான், தாமரை மலர் போன்ற முகத்தையுடைய உமாதேவியாரோடு பிரியாது வாழ்கின்ற தலமாவது, பொங்கியெழும் கடலலைகள் அடித்துக்கொண்டு வந்து குவிக்கின்ற பவளத்திரள்களின் பக்கத்திலே, வலம்புரிச் சங்குகளும், சிப்பிகளும் சொரிந்த முத்துக் குவியல்களின் மிகுதியான பிரகாசத்தைக் கொண்ட திருச்சண்பை நகராகும்.

**3605.** போழுமதி தாழுநதி பொங்கரவு
தங்குபுரி புன்சடையினன்
யாழின்மொழி மாழைவிழி யேழையிள
மாதினொ டிருந்தபதிதான்
வாழைவளர் ஞாழன்மகிழ் மன்னுபுனை
துன்னுபொழின் மாடுமடலார்
தாழைமுகிழ் வேழமிகு தந்தமென
வுந்துதகு சண்பைநகரே. 3

வட்டவடிவைப் பிளந்தாற் போன்ற பிறைச் சந்திரனும், கீழே பாய்ந்து ஓடுகின்ற கங்கையாறும், சீறும் பாம்புகளும் தங்குகின்ற முறுக்குண்ட செஞ்சடையுடையவன் சிவபெருமான். யாழ் போன்ற இனிய மொழியையும், மாம்பிஞ்சு போன்ற விழிகளையும் கொண்டு தன்னையே பற்றுக் கோடாகக் கொண்ட உமாதேவியோடு அப்பெருமான் வீற்றிருந்தருளும் தலம், வாழை, புலிநகக் கொன்றை, மகிழ், புன்னை முதலிய மரங்கள் நிறைந்து அடர்ந்த சோலைகளின் பக்கத்தில் மடல்கள் பொருந்திய தாழையின் அரும்பை யானையின் ஒடிந்த தந்தம் என்று சூடாது அலட்சியம் செய்யும் திருச்சண்பை நகராகும்.

**3606.** கொட்டமுழ விட்டவடி வட்டணைகள்
கட்டநட மாடிகுலவும்
பட்டநுதல் கட்டுமலர் மட்டுமலி
பாவையொடு மேவுபதிதான்
வட்டமதி தட்டுபொழி லுட்டமது
வாய்மைவழு வாதமொழியார்
சட்டகலை யெட்டுமரு வெட்டும்வளர்
தத்தைபயில் சண்பைநகரே. 4

முழவு முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, வைத்த பாதங்கள் வட்டணை என்னும் நாட்டிய வகைகளைச் செய்யத் திருநடனம் செய்யும் சிவபெருமான் பட்டத்தை நெற்றியில் அணிந்து, சூடிய மலர்மாலைகளின் நறுமணம் மிகுந்த பாவை போன்ற உமாதேவியாரோடு வீற்றிருந்தருளுகின்ற தலமாவது, எப்போதும் உண்மையே பேசுகின்ற, அறுபத்து நான்கு கலைகளையும் பயில்கின்ற கற்றவர்கள் கூறுவனவற்றை, சந்திரனொளி நுழைய முடியாதவாறு ஓங்கி உயர்ந்து அடர்த்தியாக உள்ள சோலைகளில் வளர்கின்ற கிளிகள் சொல்லும் பான்மையுடன் விளங்கும் திருச்சண்பை நகராகும்.

**3607.** பணங்கெழுவு பாடலினொ டாடல்பிரி
யாதபர மேட்டிபகவன்
அணங்கெழுவு பாகமுடை யாகமுடை
யன்பர்பெரு மானதிடமாம்
இணங்கெழுவி யாடுகொடி மாடமதி
னீடுவிரை யார் புறவெலாந்
தணங்கெழுவி யேடலர்கொ டாமரையி
லன்னம்வளர் சண்பைநகரே. 5

கபில முனிவர் சாபத்தால் தமது குலத்தினன் வயிற்றுதித்த பிள்ளையாகிய இருப்புலக்கையைப் பொடியாக்கிக் கொட்டிய தூள், சண்பைப் புல்லாக முளைக்க, அவற்றையே ஆயுதமாகக் கொண்டு போர் செய்து யாதவ குமரர் மடிய அப்பழி போகும்படி கண்ணனும் அம்முனிவனும் பூசித்த காரணத்தால் சண்பை நகர் என்ற பெயர் போந்தது. சீகாழித்தலத்தின் ஒன்பதாவது பெயர் சண்பை நகர்.

பண்ணிசையோடு கூடிய பாடலும், ஆடலும் நீங்காத பரம்பொருளும், ஐசுவரியம் முதலிய ஆறுகுணங்களை உடையவனும், உமாதேவியைத் தன் திருமேனியில் இடப்பாகமாகக் கொண்டவனும், அன்பர்கட்கு அருள்புரிகின்ற பெருமானுமாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, ஒன்றோடொன்று இணங்கியாடுமாறு நாட்டப்பட்ட கொடிகளையுடைய மாடங்களும், மதில்களும் உடையதும், மணம் பொருந்திய புறவிடங்களிலெல்லாம் குளிர்ச்சி பொருந்திய இதழ்கள் விரிந்த தாமரைமலர்கள் மேல் அன்னங்கள் வளர்கின்ற இயல்பினதும் ஆகிய திருச்சண்பைநகர் ஆகும்.

**3608.** பாலனுயிர் மேலணவு காலனுயிர்
பாறவுதை செய்தபரமன்
ஆலுமயில் போலியலி யாயிழைத
னோடுமமர் வெய்துமிடமாம்
ஏலமலி சோலையின வண்டுமலர்
கிண்டிநற வுண்டிசைசெயச்
சாலிவயல் கோலமலி சேலுகள
நீலம்வளர் சண்பைநகரே. 6

பாலனான மார்க்கண்டேயனின் உயிரைக் கவர வந்த எமனது உயிர் நீங்கும்படி உதைத்த பரமன், ஆடுகின்ற மயில் போன்ற சாயலையுடைய ஆராய்ந்து தேர்ந்தெடுத்த ஆபரணங்களை யணிந்த உமாதேவியோடு வீற்றிருந்தருளும் தலமாவது, ஏலம் முதலிய வாசனைப் பொருள்கள் மிகுந்த சோலைகளில் வண்டுகளின் கூட்டம் மலர்களைக் கிளறி, தேனைக்குடித்து இசைபாட, அழகிய மீன்கள் துள்ளிப்பாய, நீலோற்பல மலர்கள் செழித்து வளர்கின்ற திருச்சண்பை நகர் ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| **3609.** | விண்பொயத னான்மழைவி ழாதொழியி<br>னும்விளைவு தான்மிகவுடை<br>மண்பொயத னால்வளமி லாதொழியி<br>னுந்தமது வண்மைவழுவார்<br>உண்பகர வாருலகி னூழிபல<br>தோறுநிலை யானபதிதான்<br>சண்பைநக ரீசனடி தாழுமடி<br>யார்தமது தன்மையதுவே. | 7 | வானம் பொய்த்து மழை பொய்யாது ஒழிந்தாலும், மிகுந்த விளைச்சலைத் தரும் நிலம் வறண்டதால் வளம் இல்லாமல் போனாலும், அடியவர்கட்கும், மற்றும் பசித்தவர்கட்கும் உணவுதரத் தம் கொடைத் தன்மையில் தவறாதவர்கள், நெடிய உலகத்தில் பல ஊழிகளிலும் நிலையாக இருந்த தலம் திருச்சண்பைநகர் ஆகும். அங்குக் கோயில் கொண்ட சிவபெருமான் திருவடிகளைத் தொழுது வணங்குகின்ற அடியார்களின் தன்மையும் அதுவேயாகும். |
| **3610.** | வரைக்குலம கட்கொரு மறுக்கம்வரு<br>வித்தமதி யில்வலியுடை<br>அரக்கனது ரக்கரசி ரத்துற<br>வடர்த்தருள் புரிந்தவழகன்<br>இருக்கையத ருக்கன்முத லானவிமை<br>யோர்குழுமி யேழ்விழவினிற்<br>றருக்குல நெருக்குமலி தண்பொழில்கள்<br>கொண்டலன சண்பைநகரே. | 8 | கயிலைமலையைப் பெயர்த்து இமயமலை யரசனின் மகளான உமாதேவிக்கு அச்சத்தை உண்டாக்கிய, அறிவற்ற ஆனால் வலிமையுடைய இராவணனின் மார்பு, கைகள், தலைகள் ஆகியவை மலையின்கீழ் நொறுங்கும்படி தன் காற்பெருவிரலை ஊன்றி, பின் அவன் தன் தவறுணர்ந்து இறைஞ்ச ஒளிபொருந்திய வெற்றிவாளும், நீண்ட ஆயுளும் கொடுத்து அருள்புரிந்த அழகனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, சூரியன் முதலான தேவர்கள் ஏழாந் திருவிழாவில் கூடிவந்து வணங்க, தேவலோகத்திலுள்ள கற்பகச்சோலையை நெருங்கும்படி, மேகம் படிந்த குளிர்ச்சி பொருந்திய சோலைகள் சூழ்ந்த வளமிக்க திருச்சண்பைநகர் ஆகும். |
| **3611.** | நீலவரை போலநிகழ் கேழலுரு<br>நீள்பறவை நேருருவமாம்<br>மாலுமல ரானுமறி யாமைவளர்<br>தீயுருவ மானவரதன்<br>சேலுமின வேலுமன கண்ணியொடு<br>நண்ணுபதி சூழ்புறவெலாஞ்<br>சாலிமலி சோலைகுயில் புள்ளினொடு<br>கிள்ளைபயில் சண்பைநகரே. | 9 | நீலமலை போன்ற பெரிய பன்றி உருவம் கொண்ட திருமாலும், பெரிய அன்னப் பறவையின் உருவம் தாங்கிய பிரமனும், அறியாத வகையில் வளர்ந்தோங்கிய நெருப்புப் பிழம்பு வடிவாகிய வணங்குவோர்க்கு வேண்டும் வரங்கள் தருகின்ற சிவபெருமான், சேல்மீனும், வேலும் ஒத்த கண்களையுடைய உமாதேவியோடு வீற்றிருந்தருளும் தலம், சுற்றியுள்ள அயலிடங்களிலெல்லாம் நெற்பயிர்கள் மலிந்ததும், சோலைகளில் குயில்களும், மற்ற பறவைகளோடு கிளிகளும் வசிக்கின்றதுமான திருச்சண்பை நகராகும். |

3612. போதியர்கள் பிண்டியர்கள் போதுவழு
வாதவகை யுண்டுபலபொய்
ஓதியவர் கொண்டுசெய்வ தொன்றுமிலை
நன்றதுணர் வீருரைமினோ
ஆதியெமை யாளுடைய வரிவையொடு
பிரிவிலி யமர்ந்தபதிதான்
சாதிமணி தெண்டிரை கொணர்ந்துவயல்
புகவெறிகொள் சண்பைநகரே. 10

அரசமரத்தை வணங்கும் புத்தர்களும், அசோக மரத்தை வணங்கும் சமணர்களும் நேரம்தோறும் தவறாது உண்டு பொய்ப்பொருளாம் நிலையற்ற உலகப்பொருள்களைப் பற்றிப் பேசுகின்ற, மெய்ப்பொருளாம் இறைவனைப் பற்றிப் பேசாத அவர்கள் உரைகளை மேற்கொண்டு, செய்யத்தக்க பயனுடைய செயல் யாதுமில்லை. பயன்தரும் நெறி எது என்று அறிபவர்களே! முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானும், எங்களை ஆட்கொள்ளும் உமாதேவியும் பிரியாது தங்கி இருக்கும் தலமாவது, உயர்ந்த சாதி இரத்தினங்களைத் தெளிந்த கடலலைகள் அடித்துக்கொண்டு வந்து வயல்களில் விழும்படி செய்கின்ற திருச்சண்பை நகராகும். அதனைப் புகழ்ந்து பேசி அத்தலத்து இறைவனை வழிபடுவீர்களாக.

3613. வாரின்மலி கொங்கையுமை நங்கையொடு
சங்கரன் மகிழ்ந்தமருமூர்
சாரின்முர றெண்கடல் விசும்புற
முழங்கொலிகொள் சண்பைநகர்மேற்
பாரின்மலி கின்றபுகழ் நின்றதமிழ்
ஞானசம் பந்தனுரைசெய்
சீரின்மலி செந்தமிழ்கள் செப்புமவர்
சேர்வர்சிவ லோகநெறியே. 11

கச்சணிந்த கொங்கைகளையுடைய உமைநங்கையோடு எவ்வுயிர்கட்கும் நன்மையைச் செய்கின்ற சங்கரன் என்ற பெயர் கொண்ட சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் தலமாவதும், வீதிகள் முதலிய இடங்களில் கடலோசைபோல் முழங்குகின்ற பேரொலியானது, வானுலகைச் சென்றடையுமாறு, உள்ளதும் ஆகிய திருச்சண்பை நகரைப் போற்றி, இப்பூவுலகில் நிலைத்த புகழுடைய தமிழ் ஞானசம்பந்தன் அருளிய சிறப்புடைய இச்செந்தமிழ்ப் பாக்களைப் பாடுகிறவர்கள் சிவலோகத்தை அடைவர்.

## 76. திருவேதவனம் ( திருவிராகம் )

**(திருமறைக்காடு)**

பண் : சாதாரி

பதிக எண் : 76

3614. கற்பொலிசு ரத்தினெரி கானினிடை
மாநடம தாடிமடவார்
இற்பலி கொளப்புகுது மெந்தைபெரு
மானதிட மென்பர் புவிமேல்
மற்பொலி கலிக்கடன் மலைக்குவ
டெனத்திரை கொழித்தமணியை
விற்பொலி நுதற்கொடி யிடைக்கணிகை
மார்கவரும் வேதவனமே. 1

பருக்கைக் கற்கள் மிகுந்த பாலைவனம் போன்ற வெப்பம் உடைய சுடுகாட்டில் சிவபெருமான் நடனமாடுகின்றார். அவர் மகளிர்களின் இல்லந்தோறும் புகுந்து பிச்சை ஏற்பவர். எம் தந்தையாகிய அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், இப்பூமியில், ஒலிக்கின்ற கடலலைகள் மலைச்சிகரங்களைப் போல உயர்ந்து ஓடிவந்து கரையிலே ஒதுங்குகின்ற இரத்தினங்களை வில்லைப் போன்ற வளைந்த நெற்றியும், பூங்கொடி போன்ற மெல்லிய குறுகிய இடையும் உடைய உருத்திரகணிகையர்கள் வாரிக் கொள்கின்ற வளமிக்க திருவேதவனமாகும்.

திருமறைக் காட்டில் வேதவனம் என்று குறிப்பிடப்பெறும் தலக்கோயில் மறைக்காடர் கோயிலுக்கு வடக்கே உள்ளது.

**3615.** பண்டிரை பயப்புணரி யிற்கனக
மால்வரையை நட்டரவினைக்
கொண்டுகயி றிற்கடைய வந்தவிட
முண்டகுழ கன்றனிடமாம்
வண்டிரை நிழற்பொழிலின் மாதவியின்
மீதணவு தென்றல்வெறியார்
வெண்டிரைகள் செம்பவள முந்துகடல்
வந்தமொழி வேதவனமே. 2

வேதங்களே சிவபரம்பொருளைப் பூசித்த தலம். இராமன் இராவணாதியர்களைக் கொன்ற பாவம் போக பூசித்த தலம். இவ்விடம் ஆதி சேது, கோடிக்கரை என்று வழங்கப்படுகிறது.

முற்காலத்தில் ஒலிக்கின்ற அலைகளையுடைய பாற்கடலில், பொன்மயமான மந்தரமலையை மத்தாக ஊன்றி, வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு தேவர்கள் கடைய எழுந்த ஆலகால விடத்தை, அமுது போன்று உண்டருளிய அழகனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், நிழல்தரும் சோலைகளில் வண்டு ஆரவாரிப்பதாய், மாதவி முதலிய மரங்களின் மீது தவழும் தென்றற் காற்றின் நறுமணமுடையதாய்க் கடலின் வெண்ணிற அலைகள் செம்பவளங்களை உந்தித் தள்ளும், புகழுடைய திருவேதவனம் என்னும் திருத்தலமாகும்.

**3616.** காரியன்மெல் லோதிநதி மாதைமுடி
வார்சடையில் வைத்துமலையார்
நாரியொரு பான்மகிழு நம்பருறை
வென்பர்நெடு மாடமறுகில்
தேரியல் விழாவினொலி திண்பணில
மொண்படக நாளுமிசையால்
வேரிமலி வார்குழனன் மாதரிசை
பாடலொலி வேதவனமே. 3

சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான் பெருமான் நாயனாருடன் வந்து தரிசனம் செய்த தலம். அகத்தியர் திருக்கல்யாண கோலம் கண்ட தலம். பிரம்மன் பூசை செய்து படைப்புத் தொழிலை ஆரம்பித்த தலம். விசுவாமித்திரர் பிரமரிஷியான தலம்.

மேகத்தையொத்த மெல்லிய கூந்தலையுடைய, கங்காதேவியை நீண்ட சடைமுடியில் தாங்கி, மலைமகளைத் தன் திருமேனியின் பாதிப் பாகமாகக் கொண்டு சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற தலமாவது, நீண்ட மாடங்களையுடைய வீதிகளில் தேர் ஓடும் திருவிழாக்களின் ஒலியும், திண்ணிய சங்குகளின் ஒலியும், ஒளி பொருந்திய பேரி அல்லது தம்பட்டம் என்னும் வாத்தியங்களின் ஒலியும், நாடோறும் ஒலிக்க, நறுமணம் கமழும் தொங்கும் கூந்தலையுடைய பெண்கள் இசைக்கருவிகளோடு பாடுகின்ற பாட்டினிசையும் ஒலிக்கின்ற திருவேதவனம் என்னும் திருத்தலமாகும்.

**3617.** நீறுதிரு மேனியின் மிசைத்தொளிபெ
றத்தடவி வந்திடபமே
ஏறியுல கங்கடொறும் பிச்சைநுக
ரிச்சைய ரிருந்தபதியாம்
ஊறுபொரு ளின்றமி ழியற்கிளவி
தேருமட மாதருடனார்
வேறுதிசை யாடவர்கள் கூறவிசை
தேருமெழில் வேதவனமே. 4

கருவறையில் மூலவர் சிவலிங்கத்திற்கு பின் சிவன் – பார்வதி கல்யாணக் கோலம் அமைக்கப்பட்டுள்ளது.

சிவபெருமான் தம் திருமேனியிலே திருநீற்றை ஒளி பொருந்தப் பூசியவர். இடப வாகனத்தில் ஏறியவர். ஊர்கள்தொறும் சென்று பிச்சை எடுத்து உண்பதில் இச்சையுடையவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, இனிய தமிழ்மொழியிலே இயற்சொற்களைத் தேர்ந்தெடுத்துப் பேசும் இளம்பெண்களுடன், வாணிகத்தின் பொருட்டு வேற்றுத் திசைகளிலிருந்து கப்பலில் வந்த ஆண்கள் பேசுவதற்குச் சொற்களைத் தெரிந்து கொள்ளும் அழகிய திருவேதவனம் ஆகும்.

**3618.** கத்திரிகை துத்திரி கறங்குதுடி
தக்கையொ டிடக்கைபடகம்
எத்தனை யுலப்பில்கரு வித்திர
ளலம்பவிமை யோர்கள்பரச
ஒத்தற மிதித்துநட மிட்டவொரு
வர்க்கிடம தென்பருலகில்
மெய்த்தகைய பத்தரொடு சித்தர்கண்
மிடைந்துகளும் வேதவனமே. 5

இது தியாகராஜ சேத்திரம். முசுகுந்தன் இந்திரனிடமிருந்து பெற்ற ஏழு தியாகராச பிம்பங்களுள் ஒன்று இவ்விடத்தில் உள்ளது.

கத்தரிகை, துத்தரி, ஒலிக்கின்ற உடுக்கை, தக்கை, படகம் என்னும் இசைக்கருவிகள் ஒலிக்க, தேவர்கள் துதிக்க, தாளத்திற்கேற்பத் திருத்தாளையூன்றி நடனமாடும் ஒப்பற்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், உண்மைத் தன்மையுடைய பத்தர்களும், சித்து வல்லவர்களும் நெருங்கி மகிழ்ச்சி மீதூரத் துள்ளிக்குதிக்கும் திருவேதவனம் என்னும் திருத்தலமாகும்.

**3619.** மாலைமதி வாளரவு கொன்றைமலர்
துன்றுசடை நின்றுசுழலக்
காலையி லெழுந்தகதிர் தாரகை
மடங்கவன லாடுமரனூர்
சோலையின் மரங்கடொறு மிண்டியின
வண்டுமது வுண்டிசைசெய
வேலையொலி சங்குதிரை வங்கசுற
வங்கொணரும் வேதவனமே. 6

இங்குள்ள மணிகர்ணிகைத் தீர்த்தத்தில் மூழ்கி கங்கை புனிதமாயினாள். தேவ பூடண தீர்த்தத்தில் மூழ்கி காவிரி பரிசுத்த தன்மை எய்தினாள்.

மாலையில் தோன்றும் சந்திரனும், ஒளிபொருந்திய பாம்பும், கொன்றை மலரும் நெருங்கிய சடையில் தங்கிச் சுழன்று புரள, காலையில் தோன்றிய கதிரவன் ஒளியும் விண்மீன்களின் ஒளியும், திருமேனியின் ஒளியும், திருநீற்றுப்பூச்சின் ஒளியும் கண்டு அடங்குமாறு, நெருப்பேந்தி நடனமாடுகின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், சோலைகளிலுள்ள மரங்களின் வண்டினங்கள் தேனைக்குடித்து ஒலி செய்ய, கடலினின்றும் ஒலிக்கும் சங்குகளையும், கப்பல்களை யுடைக்கும் சுறாமீன்களையும் அலைகள் கரைக்குக் கொணரும் திருவேதவனம் என்னும் திருத்தலமாகும்.

**3620.** வஞ்சகம னத்தவுணர் வல்லரண
மன்றவிய வார்சிலைவளைத்
தஞ்சக மவித்தவம ரர்க்கமர
னாதிபெரு மானதிடமாம்
கிஞ்சுக விதழ்க்கனிக ளூறியசெவ்
வாயவர்கள் பாடல்பயில
விஞ்சக வியக்கர்முனி வக்கண
நிறைந்துமிடை வேதவனமே. 7

திருவிளையாடற் புராண ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் அவதாரத்தலம். அவர் எழுதிய தலபுராணம் உள்ளது.

வஞ்சகம் பொருந்திய மனத்தையுடைய அசுரர்களின் மூன்று மதில்களையும் பெரிய மேருமலையை வில்லாக வளைத்து அழகிய உலகில் ஒழித்த தேவதேவனாம், முழுமுதற் கடவுளான சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, முள்முருக்கம் பூவையொத்த உதடுகளால், கனிபோன்ற இனிய மொழிகளைப் பேசும் சிவந்த வாயையுடைய பெண்கள் பாட, வியக்கும் மனத்தையுடைய இயக்கர்களும், முனிவர் கூட்டங்களும் நிறைந்து போற்ற விளங்கும் திருவேதவனம் என்னும் திருத்தலமாகும்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3621.** முடித்தலைகள் பத்துடை முருட்டுரு<br>வரக்கனை நெருக்கிவிரலால்<br>அடித்தலமுன் வைத்தலம ரக்கருணை<br>வைத்தவ னிடம்பலதுயர்<br>கெடுத்தலை நினைத்தற மியற்றுதல்<br>கிளர்ந்துபுல வாணர்வறுமை<br>விடுத்தலை மதித்துநிதி நல்குமவர்<br>மல்குபதி வேதவனமே. **8** | கிரீடம் அணிந்த பத்துத் தலைகளை யுடையனாய், முரட்டுத் தன்மையுடைய அரக்கனான இராவணனைத் தன் காற் பெருவிரலை ஊன்றி மலையின்கீழ் நெருக்கிப் பின் அவனுக்குக் கருணைபுரிந்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், பலவிதத் துன்பங்களும் கெடும்படி அறம் இயற்றும் முயற்சியுடையவர்களாய், புலவர்களின் வறுமையை நீக்கக் கருதித் திரவியங்களைக் கொடுக்கும் கொடையாளிகள் நிறைந்த திருவேதவனம் என்னும் திருத்தலமாகும். |
| **3622.** வாசமலர் மேவியுறை வானுநெடு<br>மாலுமறி யாதநெறியைக்<br>கூசுதல்செ யாதவம ணாதரொடு<br>தேரர்குறு காதவரனூர்<br>காசுமணி வார்கனக நீடுகட<br>லோடுதிரை வார்துவலைமேல்<br>வீசுவலை வாணரவை வாரிவிலை<br>பேசுமெழில் வேதவனமே. **9**<br><br>XXXXXXXXXXXXXXXXXXXXX 10 | நறுமணம் கமழும் தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் அறியாத சிவன் பெருமையைப் பழிப்பதற்குக் கூசாத பயனிலிகளாகிய சமணர்களுடன், பௌத்தர்களும் அடையாத சிவபெருமான் வீற்றிருக்கும் தலமாவது செம்படவர்கள் பெரிய கடலலைகள் ஓடிவரும்போது வலையை வீசி, அவை கொணர்கின்ற இரத்தினங்களையும், மணிகளையும் சிறந்த பொன்னையும் வாரி விலைபேசும் அழகிய திருவேதவனம் என்னும் திருத்தலமாகும். |
| **3623.** மந்தமுர வங்கடல் வளங்கெழுவு<br>காழிபதி மன்னுகவுணி<br>வெந்தபொடி நீறணியும் வேதவன<br>மேவுசிவ னின்னருளினால்<br>சந்தமிவை தண்டமிழி னின்னிசை<br>யெனப்பரவு பாடலுலகில்<br>பந்தனுரை கொண்டுமொழி வார்கள்பயில்<br>வார்களுயர் வானுலகமே. **11** | மந்தமான ஓசையுடைய கடல்வளமிக்க சீகாழிப் பதியில் விளங்கும் கவுணியர் கோத்திரத்தில் அவதரித்த ஞானசம்பந்தன், திருவேதவனத்தில் வீற்றிருந்தருளும் திருவெண்ணீறு அணிந்த சிவபெருமானின் இன்னருளால் அவனைப் போற்றிச் சந்தம் விளங்கும் இன்னிசையால் அருளிய இத்திருப்பதிகத்தைப் பாடுபவர்கள் உயர்ந்த சிவலோகத்தில் வாழ்வர். |

## 77. திருமாணிகுழி (திருவிராகம்)

பண் : சாதாரி

பதிக எண் : 77

3624. பொன்னியல் பொருப்பரையன் மங்கையொரு
பங்கர்புன றங்குசடைமேல்
வன்னியொடு மத்தமலர் வைத்தவிறல்
வித்தகர் மகிழ்ந்துறைவிடம்
கன்னியிள வாளைகுதி கொள்ளவிள
வள்ளைபட ரள்ளல்வயல்வாய்
மன்னியிள மேதிகள் படிந்துமனை
சேருதவி மாணிகுழியே. 1

"உதவி மாணிகுழியே" என்பது பதிக மகுடம்

சிவபெருமான் பொன்மயமான இமயமலை அரசனின் மகளான உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். கங்கைநீர் தங்கிய சடையில் வன்னிப் பத்திரத்துடன் பொன்னூமத்தம் பூவை அணிந்த வலிய அறிவுருவான அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, வரப்பின்மேல் இளவள்ளைக் கொடிகள் படர்ந்த சேற்றையுடைய வயலில், இள வாளை மீன்கள் துள்ளிப்பாய, இள எருமைகள் அதில் படிந்து வீடுசேரும், நீர்வளமும் நிலவளமுமிக்க திருமாணிகுழி ஆகும்.

3625. சோதிமிகு நீறதுமெய் பூசியொரு
தோலுடை புனைந்துதெருவே
மாதர்மனை தோறுமிசை பாடிவசி
பேசுமர னார்மகிழ்விடம்
தாதுமலி தாமரை மணங்கமழ
வண்டுமுர றண்பழனமிக்
கோதமலி வேலைபுடை சூழுலகி
னீடுதவி மாணிகுழியே. 2

வாமனன் – குள்ளன்; வாமனம் – குறள்; திருமால் தசாவதாரத் தொன்று; பதினெண் புராணங்களில் ஒன்று.

ஒளிமிகுந்த திருவெண்ணீற்றினைத் திருமேனியில் உத்தூளணமாகப் பூசி, தோலை ஆடையாக அணிந்து, தெருக்களில் பெண்கள் உள்ள ஒவ்வொரு இல்லமும் சென்று இசைப் பாடல்களைப் பாடி வயப்படுத்தும் பேச்சுக்களைப் பேசும் சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் தலம் மகரந்தப்பொடிகள் மிக்க தாமரை மலர்கள் மணம் வீசுவதும், வண்டுகள் ஒலிக்கின்ற குளிர்ச்சி பொருந்திய வயல்களையுடையதும், கடலலைகள் ஓசை மிகுந்ததும் ஆகி விளங்குகின்ற திருமாணிகுழி என்பதாம்.

3626. அம்பனைய கண்ணுமை மடந்தையவ
ளஞ்சிவெரு வச்சினமுடைக்
கம்பமத யானையுரி செய்தவர
னார்கருதி மேயவிடமாம்
வம்புமலி சோலைபுடை சூழமணி
மாடமது நீடி யழகார்
உம்பரவர் கோனகர மென்னமிக
மன்னுதவி மாணிகுழியே. 3

அம்பு போன்ற கூரிய கண்களையுடைய உமாதேவி அஞ்ச, கோபமுடைய தூணிலே கட்டக்கூடிய மதயானையின் தோலை உரித்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், நறுமணமிக்க சோலைகளையுடையதும், இரத்தினங்கள் பதிக்கப் பெற்ற மாடமாளிகைகள் நிறைந்த அழகிய தேவலோகத்து நகரமாகிய அமராவதியைப் போன்று நிலைபெற்று விளங்குவதும் ஆகிய திருமாணிகுழியாகும்.

**3627. நித்தநிய மத்தொழில னாகிநெடு**
**மால்குறள னாகிமிகவும்**
**சித்தம தொருக்கிவழி பாடுசெய**
நின்றசிவ லோகனிடமாம்
கொத்தலர் மலர்ப்பொழிலி னீடுகுல
மஞ்ஞைநட மாடலதுகண்
டொத்தவரி வண்டுக ளுலாவியிசை
பாடுதவி மாணிகுழியே. 4

மகாபலிச் சக்கரவர்த்தியிடமிருந்து மூவடி மண் கேட்டு மூவுலகங்களையும் பெற்றுக் கொண்ட பழிநீங்குவதற்காக திருமால் பிராமண பிரமசாரியாய், குள்ளவடிவங் கொண்டு நித்தமும் மனமுருகி வழிபாடு செய்த தலமென்பதற்கு அகச்சான்று.

நாள்தோறும் அநுட்டானம் முதலிய நியமம் பூண்டவனாய்த் திருமால் வாமனவடிவங் கொண்டு மனத்தை ஒருமுகப்படுத்தி வழிபாடு செய்யச் சிவலோக நாயகனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், கொத்தாக மலர்ந்துள்ள பூக்களையுடைய சோலைகளில் சிறந்த மயில்கள் நடனமாட அதைப்பார்த்த வரிகளையுடைய வண்டுகள் நடனத்துக்கு ஒத்தவாறு இசைபாடுகின்ற திருமாணிகுழி ஆகும்.

**3628.** மாசின்மதி சூடுசடை மாமுடியர்
வல்லசுரர் தொன்னகரமுன்
நாசமது செய்துநல வானவர்க
ளுக்கருள்செய் நம்பனிடமாம்
வாசமலி மென்குழன் மடந்தையர்கண்
மாளிகையின் மன்னியழகார்
ஊசன்மிசை யேறியினி தாகவிசை
பாடுதவி மாணிகுழியே. 5

சிவபெருமான் குற்றமில்லாத சந்திரனைச் சடையில் சூடியவர். வல்லசுரர்களின் பழமைவாய்ந்த திரிபுரங்களை அழித்து நற்குண நற்செய்கையுடைய தேவர்கட்கு அருள்புரிந்தவர். அப்பெருமான் வீற்றிருந் தருளும் தலம், நறுமணமிக்க மெல்லிய கூந்தலையுடைய பெண்கள், மாளிகைகளில் தங்கி அழகிய ஊஞ்சலில் ஏறியமர்ந்து இனிமையாக ஊசற்பாட்டுப்பாடி ஆடுகின்ற திருமாணிகுழி ஆகும்.

**3629.** மந்தமலர் கொண்டுவழி பாடுசெயு
மாணியுயிர் வவ்வமனமாய்
வந்தவொரு காலனுயிர் மாளவுதை
செய்தமணி கண்டனிடமாம்
சந்தினொடு காரகில் சுமந்துதட
மாமலர்கள் கொண்டுகெடிலம்
உந்துபுனல் வந்துவயல் பாயுமண
மாருதவி மாணிகுழியே. 6

வணிகர் ஒருவருக்கு சுவாமி உதவி செய்த காரணத்தால் உதவி நாயகர் எனப்படுகிறார்.

மலரும் நிலையிலுள்ள மலர்களைக் கொண்டு சிவவழிபாடு செய்த பிரமசாரியான மார்க்கண்டேயனின் உயிரைக் கவரும் மனத்தோடு வந்த காலனின் உயிர் நீங்குமாறு காலால் உதைத்த நீலகண்டனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம், சந்தன மரங்கள், கரிய அகிற் கட்டைகள் இவற்றைச் சுமந்து மலையிலிருந்து விழுந்து, குளங்களில் பூத்துள்ள சிறந்த மலர்களையும் தள்ளிக் கொண்டு வரும் கெடிலநதியின் நீர் வயல்களில் பாய நறுமணம் கமழும் திருமாணிகுழி ஆகும்.

**3630.** எண்பெரிய வானவர்க ணின்றுதுதி
செய்யவிறை யேகருணையாய்
உண்பரிய நஞ்சுதனை யுண்டுலக
முய்யவரு ளுத்தமனிடம்
பண்பயிலு வண்டுபல கெண்டிமது
வுண்டுநிறை பைம் பொழிலின்வாய்
ஒண்பலவி னின்கனி சொரிந்துமண
நாறுதவி மாணிகுழியே. 7

எண்ணற்ற தேவர்கள் வணங்கிநின்று துதிசெய்யப் பேரருளுடையவனாய் எவரும் உண்ணுதற்கரிய நஞ்சை உண்டு உலகம் உய்யும்படி அருள்செய்த உத்தமனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, பண்ணிசை பாடுகின்ற வண்டுகள், பல மலர்களையும் கிளறி, தேனருந்த, வளம்மிக்க பசுமை வாய்ந்த சோலைகளிடத்துச் சிறந்த பலாமரங்களின் இனிய கனிகளிலிருந்து தேனைச் சொரிந்து நறுமணம் கமழ்கின்ற திருமாணிகுழி என்பதாகும்.

உதவித் திருமாணி குழி ஆளுடையார், உதவித் திருமாணிகுழி மகாதேவர், ஊர் செறி உதவி நாயகர் என்று பல கல்வெட்டுகளில் உதவி என்ற சொல் வந்திருப்பதாலும், திருஞானசம்பந்தர் எல்லாப் பதிகங்களிலும் உதவிமாணிகுழி என்று பாடியிருப்பதாலும் உதவி வேண்டுவோர் உதவி நாயகரை அணுகினால் உதவி கண்டிப்பாகக் கிடைக்கும்.

**3631.** எண்ணமது வின்றியெழி லார்கைலை
மாமலை யெடுத்ததிறலார்
திண்ணிய வரக்கனை நெரித்தருள்
புரிந்தசிவ லோகனிடமாம்
பண்ணமரு மென்மொழியி னார்பணை
முலைப்பவள வாயழகதார்
ஒண்ணுதன் மடந்தையர் குடைந்துபுன
லாடுதவி மாணிகுழியே. 8

கயிலைமலையின் பெருமையையும், சிவபெருமானின் அளவற்ற ஆற்றலையும் சிந்தியாது, கயிலைமலையைப் பெயர்த்தெடுத்த வலிய அரக்கனான இராவணனை அம்மலையின்கீழ் நெரித்து, பின் அவன் சாமகானம் பாட அருள்புரிந்த சிவலோக நாயகனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, பண்போன்று மென்மொழி பேசுபவர்களாய்ப் பருத்த கொங்கைகளையும், பவளம் போன்ற வாயையும், அழகிய ஒளிபொருந்திய நெற்றியையுமுடைய பெண்கள் கையாற் குடைந்து நீராடும் திருமாணிகுழி ஆகும்.

சுவாமி எப்போதும் தேவியாருடன் இருப்பதாக ஐதீகமென்பதால் எப்பொழுதும் திரையிடப்பட்டிருக்கும். அத்திரையில் ஏகாதச உருத்திரர்களில் ஏழாவது உருத்திரரான பீம உருத்திரரின் திருவுருவம் காணப்படுகிறது. இவருக்கே முதலில் தீபாராதனை, அர்ச்சனை நடைபெறும். பிறகுதான் மூலவர் தரிசனம். இப்போதும் நடைபெற்றுக்கொண்டிருக்கும் வாமனர் பூசைக்கு பீமருத்திரர் காவலாக இருப்பதாக ஐதீகம்.

**3632.** நேடுமய னோடுதிரு மாலுமுண
ராவகை நிமிர்ந்துமுடிமேல்
ஏடுலவு திங்கண்மத மத்தமித
ழிச்சடையெம் மீசனிடமாம்
மாடுலவு மல்லிகை குருந்துகொடி
மாதவி செருந்திகுரவி
னூடுலவு புன்னைவிரை தாதுமலி
சேருதவி மாணிகுழியே. 9

பிரமனும், திருமாலும் இறைவனின் அடிமுடி தேடியும் உணராவகை நெருப்புப்பிழம்பாய் ஓங்கி நின்றவர் சிவபெருமான். அவர் தம் சடைமுடியில் வெண்தாமரை இதழ் போன்ற பிறைச்சந்திரனையும், ஊமத்தை, கொன்றை ஆகியவற்றையும் அணிந்து விளங்குபவர். எம் இறைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, மகரந்தப்பொடி நிறைந்த மல்லிகை, குருந்து, மாதவி, செருந்தி, குரவம், புன்னை என்ற மணம் கமழும் மலர்கள் நிறைந்த திருமாணிகுழி என்பதாம்.

3633. மொட்டையம ணாதர்முது தேரர்மதி
யில்லிகண் முயன்றனபடும்
முட்டைகண் மொழிந்தமொழி கொண்டருள்செய்
யாதமுதல் வன்றனிடமாம்
மட்டைமலி தாழையிள நீர்முதிய
வாழையில் விழுந்தவதரில்
ஒட்டமலி பூகநிரை தாறுதிர
வேறுதவி மாணிகுழியே. 10

மொட்டைத் தலையுடைய சமணர்களும், பேதைமை முதிர்ந்த புத்தர்களும், இறையுண்மையை உணராதவர்கள். முயன்று செய்த வினைகளே பயன்தரும். அதற்குக் கர்த்தா வேண்டா என்று சொல்பவர்கள் அவர்கள். உருட்டிய வழி உருளும் முட்டைபோல் தமக்கென ஓர் உறுதி இல்லாத, அவர்கள் சொன்ன சொற்களால் அவர்கட்கு அருள்புரியாத சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, மட்டைகளையுடைய தென்னைகளின் இளநீர்கள் வாழையிலும், பாக்கு மரங்களிலும் விழுந்து குலைகள் சிதற விளங்கும் திருமாணிகுழி ஆகும்.

3634. உந்திவரு தண்கெடில மோடுபுனல்
சூழுதவி மாணிகுழிமேல்
அந்திமதி சூடியவெம் மானையடி
சேருமணி காழிநகரான்
சந்தநிறை தண்டமிழ் காழிநகரான்
ஞானசம் பந்தனதுசொல்
முந்தியிசை செய்துமொழி வார்களுடை
யார்கணெடு வானநிலனே. 11

பலபொருள்களை நீர்ப்பெருக்குடன் அடித்து வரும் கெடிலநதி சூழ்ந்த உதவி மாணிகுழியின் மீது, மாலைக்காலப் பிறைச்சந்திரனைச் சூடிய எம் தலைவனான சிவபெருமானின் திருவடிகளை இடைவிடாது தியானிக்கும் அழகிய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் சந்தம் நிறைந்த இன்தமிழில் அறிந்துணர்ந்து அருளிய இத்திருப்பதிகத்தை இசையுடன் பாட முற்படுபவர்கள் உயர்ந்த முத்திப் பேற்றைப் பெறுவர்.

## 78. திருவேதிகுடி

பண் : சாதாரி

பதிக எண் : 78

3635. நீறுவரி யாடரவொ டாமைமன
வென்புநிரை பூண்பரிடபம்
ஏறுவரி யாவரு மிறைஞ்சுகழ
லாதிய ரிருந்தவிடமாம்
தாறுவிரி பூகமலி வாழைவிரை
நாறவிணை வாளைமடுவில்
வேறுபிரி யாதுவிளை யாடவள
மாரும்வயல் வேதிகுடியே. 1

திருநீற்றினையும், வரிகளையுடைய ஆடும் பாம்பையும், ஆமையோட்டையும், அக்குமணியையும், எலும்பு மாலையையும் சிவபெருமான் அணிந்துள்ளார். அவர் இடப வாகனத்தில் ஏறுவார். யாவரும் வணங்கத்தக்க முதல்வராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், பாளைகள் விரிந்த பாக்குமரங்கள் நிறைந்த சோலைகளிலும், பழங்கள் கனிந்த வாழைத் தோட்டங்களிலும் நறுமணம் வீச, மடுக்களில் ஆணும், பெண்ணுமான வாளை மீன்கள் வேறு பிரியாமல் விளையாடும், வயல்வளமிக்க திருவேதிகுடி ஆகும்.

---

வேதங்கள் பூசித்த தலமாதலால் வேதபுரி என்றும் வழங்கப்படும். வேதி – பிரமன். பிரமன் பூசித்த தலம். பிள்ளையாரும் வேதங் கேட்ட தலம். வேதப்பிள்ளையார்.

**3636.** சொற்பிரிவி லாதமறை பாடிநட
மாடுவர்தொ லானையுரிவை
மற்புரி புயத்தினிது மேவுவரெந்
நாளும்வளர் வானவர்தொழத்
துற்பரிய நஞ்சமுத மாகமு
னயின்றவ ரியன்றதொகுசீர்
வெற்பரையன் மங்கையொரு பங்கர்நக
ரென்பர்திரு வேதிகுடியே. **2**

ஐயாறப்பர் சித்திரை மாதத்தில் எழுந்தருளும் ஏழூர்ப் பதிகளுள் இது நான்காவது தலம்.

சிவபெருமான் இசையும், சொல்லின் மெய்ப்பொருளும் பிரிதல் இல்லாத வேதத்தைப்பாடி நடனம் ஆடுவார். முதிர்ந்த யானையின் தோலை உரித்து மல்யுத்தம் புரிய வல்ல தோளில் இனிதாக அணிவார். நாள்தோறும் தேவர்கள் வணங்க, உண்ணுதற்கரிய நஞ்சை அமுதமாக முற்காலத்தில் உண்டருளியவர். பலவற்றானும் புகழ்மிக்க மலையரையன் மகளாகிய உமாதேவியாரை ஒருபாகமாகக் கொண்டருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம் திருவேதிகுடி என்பதாம்.

**3637.** போழுமதி பூரணவு கொன்றைமலர்
துன்றுசடை வென்றிபுகமேல்
வாழுநதி தாழுமரு ளாளிரு
ளார்மிடறர் மாதரிமையோர்
சூழுமிர வாளர்திரு மார்பில்விரி
நூலர்வரி தோலருடைமேல்
வேழவுரி போர்வையினர் மேவுபதி
யென்பர்திரு வேதிகுடியே. **3**

சிவபெருமான் வட்டத்தைப் பிளந்தாலனைய பிறைச்சந்திரனை அணிந்தவர். பாம்பு, கொன்றைமலர் இவற்றைச் சடையிலணிந்து, அதில் தங்கிய கங்காநதியைப் பகீரதன் முயற்சிக்கு வெற்றி உண்டாக உலகிற் பாயச் செய்த அருளாளர். விடம் உண்டதால் கருநிறம் வாய்ந்த கண்டத்தையுடையவர். தேவலோகத்திலுள்ள மகளிரும், ஆடவரும் தங்கள் குறைகளைக் கூறி அவை தீர அருளை வேண்டுபவர். அழகிய மார்பில் முப்புரிநூல் அணிந்தவர். புலித்தோலாடை அணிந்தவர். அதன் மேல் யானைத் தோலைப் போர்த்தவர். அத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம் திருவேதிகுடி ஆகும்.

**3638.** காடர்கரி காலர்கனல் கையரனன்
மெய்யருடல் செய்யர்செவியில்
தோடர்தெரி கீளர்சரி கோவணவ
**ராவணவர்** தொல்லைநகர்தான்
பாடலுடை யார்களடி யார்கண்மல
ரோடுபுனல் கொண்டுபணிவார்
வேடமொளி யானபொடி பூசியிசை
மேவுதிரு வேதிகுடியே. **4**

ஆவணவர் – உயிர்களை ஆவணங் கொண்டு அடிமையாக உடையவர்.

ஆவணம் – ஓலை

சிவபெருமான் சுடுகாட்டில் இருப்பவர். யானையின் தோலை உரித்து அதற்குக் காலனாக ஆனவர். நெருப்பைக் கையில் ஏந்தியவர். நெருப்புப் போன்ற சிவந்த மேனி உடையவர். தூய உடம்பினர். காதில் தோட்டை அணிந்தவர். கிழிந்த ஆடை அணிந்தவர். சரிந்த கோவணத்தை அணிந்தவர். பசுவேறி வரும் கோலத்தையுடையவர். அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் பழமையான நகரானது, தோத்திரம் பாடும் அடியார்கள் புனிதநீரால் அபிடேகம் செய்து, மலரால் அர்ச்சித்து வணங்கி, சிவவேடத்தை நினைப்பூட்டும் திருவெண்ணீற்றினைப் பூசிக் கீர்த்தியுடன் விளங்குகின்ற திருவேதிகுடி என்னும் திருத்தலமாகும்.

| | |
|---|---|
| **3639.** சொக்கர்துணை மிக்கவெயி லுக்கற<br>முனிந்துதொழு மூவர்மகிழத்<br>தக்கவருள் பக்கமுற வைத்தவர<br>னாரினிது தங்குநகர்தான்<br>கொக்கரவ முற்றபொழில் வெற்றிநிழல்<br>பற்றிவரி வண்டிசைகுலாம்<br>மிக்கமரர் மெச்சியினி தச்சமிடர்<br>போகநல்கு வேதிகுடியே. 5 | சிவபெருமான் மிக்க அழகுடையவன். கோபத்தால் சிரித்து மும்மதில்களும், வெந்தழியுமாறு செய்தபோது, அங்கிருந்த மூவர் தன்னை வணங்கிப் போற்ற அவர்கள் மகிழும்படியாகத் தன் பக்கத்திலே இருக்கும்படி அருள்புரிந்தவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் நகராவது, மாமரச் சோலைகளில் மகளிர் விளையாடும் ஆரவாரமும், மகளிரின் மேனி ஒளியானது மாந்தளிர்களை வென்ற வெற்றி பற்றி வரிவண்டுகள் இசைபாடும் ஒலியும், தேவர்கள் போற்றும் ஒலியும் கொண்டு, தன்னைபடைந்து வழிபடுபவர்களின் அச்சமும், துன்பமும் நீங்க நன்மையை அளிக்கும் திருவேதிகுடி என்னும் திருத்தலமாகும். |
| **3640.** செய்யதிரு மேனிமிசை வெண்பொடி<br>யணிந்துகரு மானுரிவைபோர்த்<br>தையமிடு மென்றுமட மங்கையொ<br>டகந்திரியு மண்ணலிடமாம்<br>வையம்விலை மாறிடினு மேறுபுகழ்<br>மிக்கிழி விலாதவகையார்<br>வெய்யமொழி தண்புலவ ருக்குரைசெ<br>யாதவவர் வேதிகுடியே. 6 | சிவபெருமான் தம் சிவந்த திருமேனியில் வெண்ணிறத் திருநீற்றை அணிந்தவர். கரிய யானையின் தோலைப் போர்த்தவர். 'பிச்சையிடுங்கள்' என்று இளமைவாய்ந்த உமாதேவியாரோடு வீடுவீடாகத் திரிகின்றவர். நம் தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, இப்பூமியில் பஞ்சத்தால் பண்டங்களின் விலை ஏறினாலும், மிகுந்த புகழும், குறையாத பண்பாடும் உடையவர்களும், இனிய புலவர்கட்குக் கொடையளிக்கும்போது வன்சொற்கள் சொல்லாத் தன்மையுடையவர்களும் ஆகிய மாந்தர்கள் வாழ்கின்ற திருவேதிகுடி என்னும் திருத்தலமாகும். |
| **3641.** உன்னியிரு போதுமடி பேணுமடி<br>யார்தமிட ரொல்கவருளித்<br>துன்னியொரு நால்வருட னானிழ<br>லிருந்ததுணை வன்றனிடமாம்<br>கன்னியரொ டாடவர்கண் மாமணம்<br>விரும்பியரு மங்கலமிக<br>மின்னியலு நுண்ணிடைநன் **மங்கைய**<br>**ரியற்றுபதி வேதிகுடியே.** 7<br><br>இருபோதும் அடிபேணி – என்று பல இடங்களில் இரண்டு பொழுது வழிபடுவதைப் பற்றிப் பேசுகிறார். "ஏவினையால் எயில் மூன்றெரித்தீர் என்று இரு போதும்" என்று அவ்வினைக்கிவ் வினைப் பதிகத்தில் பாடுகிறார். | காலை, மாலை ஆகிய இருவேளைகளிலும் தியானித்துத் தன் திருவடிகளைப் போற்றும் அடியார்களுடைய துன்பங்கள் நீங்கும்படி அருள் செய்பவன் சிவபெருமான். தன்னையடைந்த சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ற நான்கு முனிவர்கட்கும் கல்லால மரத்தின்கீழ் தட்சிணாமூர்த்தி கோலம் கொண்டு அறம் உரைத்தவன். அனைத்துயிர்கட்கும் பற்றுக்கோடாய் விளங்குபவன். அவன் உறைவிடம் கன்னியர்களும், ஆடவர்களும் சிறப்பான வகையில் திருமணம் செய்து கொள்ளும் மங்கலநாளில் **திருமணத்திற்குரிய மங்கலச் சடங்குகளை மிகச் சிறப்புற நடத்துகின்ற மின்னலைப் போன்ற நுண்ணிடையுடைய மகளிர்கள்** வாழும் திருவேதிகுடி என்னும் திருத்தலமாகும். |

**3642.** உரக்கரநெ ருப்பெழநெ ருக்கிவரை
பற்றியவொ ருத்தன்முடிதோள்
அரக்கனை யடர்த்தவனி சைக்கினிது
நல்கியரு ளங்கணனிடம்
முருக்கிதழ் மடக்கொடி மடந்தையரு
மாடவரு மொய்த்த கலவை
விரைக்குழன் மிகக்கமழ விண்ணிசை
யுலாவுதிரு வேதிகுடியே. 8

வேதங்களும், வேதியரும், விட்டுணுவும் பூசித்த தலம். இத்தலத்தில் நல்லிசைப் புலவரும், புலவரைப் பேணுவோரும், பொதுக்கொடை வள்ளல்களும் மிக்கிருந்தனர்.

கயிலைமலையைப் பெயர்த்து எடுக்க முயன்ற அரக்கனான இராவணனின் தலைகளையும், தோள்களையும், நெஞ்சிலும், கரத்திலும் நெருப்புப்போல் வருத்துமாறு மலையின்கீழ் அடர்த்து, பின் அவன் சாமகானம் இசைக்க அவனுக்கு ஒளி பொருந்திய வெற்றிவாளையும், நீண்ட வாழ்நாளையும் அருளிய பெருங்கருணையாளனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது, கல்யாண முருங்கைப்பூப் போன்ற உதடுகளையுடைய, இளங்கொடி போன்ற பெண்களும், ஆடவர்களும், நறுமணம் கமழும் கலவையைக் கூந்தலில் தடவ, அதன் மணமானது விண்ணுலகிலும் பரவ விளங்கும் திருவேதிகுடி என்னும் திருத்தலமாகும்.

**3643.** பூவின்மிசை யந்தணனொ டாழிபொலி
யங்கையனு நேடவெரியாய்த்
தேவுமிவ ரல்லரினி யாவரென
நின்றுதிகழ் கின்றவரிடம்
பாவலர்க ளோசையியல் கேள்விய
தறாதகொடை யாளர்பயில்வாம்
மேவரிய செல்வநெடு மாடம்வளர்
வீதிநிகழ் வேதிகுடியே. 9

தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனுடன், சக்கராயுதத்தை ஏந்திய அழகிய கையையுடைய திருமாலும் தேட, தீம்பிழம்பாகி, இப்பெருமானை அன்றி வேறு கடவுள் இல்லை என ஏத்தப்பெறும் சிவபெருமானை வீற்றிருந்தருளும் இடமாவது, புலவர்கள் ஓசையினிமையுடைய இயற்றமிழ் நூற்பொருளை உரைக்க, கேள்விச் செல்வத்தினை நீங்காத கொடை வள்ளல்கள் செவிமடுக்குமாறு, செல்வம் மிகுந்த நெடிய மாடமாளிகைகளும், வீதிகளும் திகழ்கின்ற திருவேதிகுடி என்பதாகும்.

**3644.** வஞ்சமணர் தேரர்மதி கேடர்த
மனத்தறிவி லாதவர்மொழி
தஞ்சமென வென்றுமுண ராதவடி
யார்கருது சைவனிடமாம்
**அஞ்சுபுலன் வென்றறு வகைப்பொரு**
**டெரிந்தெழு விசைக்கிளவியால்**
வெஞ்சின மொழித்தவர்கண் மேவிநிகழ்
கின்றதிரு வேதிகுடியே. 10

எண்ணலங்காரம்.
சைவன் – சிவத்துவத்துக்கு இருப்பிடமானவன்.

வஞ்சனையுடைய சமணர்களும், புத்தர்களும் கெட்ட மதியுடையவர்கள். இறைவனை உணரும் அறிவில்லாத அவர்கள் கூறும் மொழிகள் பற்றுக்கோடாகத் தக்கன என்று எந்நாளும் நினையாத அடியார்கள் தியானிக்கின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது ஐம்புலன்களை வென்று, அறுவகைச் சமய நூற்பொருள்களை ஆராய்ந்து, ஏழுவகைச் சுரங்களால் இசைப்பாடல்களைப் பாடி, கோபத்தை ஒழித்த அருளாளர்கள் மேவி விளங்குகின்ற திருவேதிகுடி ஆகும்.

**3645.** கந்தமலி தண்பொழினன் மாடமிடை
காழிவளர் ஞானமுணர்சம்
பந்தன்மலி செந்தமிழின் மாலைகொடு
வேதிகுடி யாதி கழலே
சிந்தைசெய வல்லவர்க ணல்லவர்க
ளென்னநிகழ் வெய்தியிமையோர்
அந்தவுல கெய்தியர சாளுமது
வேசரத மாணைநமதே. 11

சரதம் – நிச்சயம். அரசாள்வர் ஆணை நமதே என்று கோளறு பதிகத்திலும், "காரைகள் கூகை" என்ற பொன்செய் பதிகத்திலும் பதிவு செய்கிறார் ஆணை நமதென்ற பெருமான்.

நறுமணம் கமழும் குளிர்ந்த சோலைகளும், அழகிய மாடங்களும் நெருங்கிய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் பொருட் செறிவுடைய செந்தமிழில் அருளிய இப்பாமாலை கொண்டு திருவேதிகுடியில் வீற்றிருந்தருளும் முதல்வனான சிவபெருமானின் திருவடிகளைச் சிந்தித்துப் போற்றுபவர்கள் நல்லவர்களாய்த் திகழ்வர். மறுமையில் தேவலோகத்தை அடைந்து அரசாள்வர். இது நமது ஆணை.

## 79. திருக்கோகரணம் (திருவிராகம்)

பண் : சாதாரி

பதிக எண் : 79

**3646.** என்றுமரி யானயல வர்க்கிய
லிசைப்பொருள்க ளாகியெனதுள்
நன்றுமொளி யானொளிசி றந்தபொன்
முடிக்கடவு ணண்ணுமிடமாம்
ஒன்றியம னத்தடியர் கூடியிமை
யோர்பரவு நீடரவமார்
குன்றுகணெ ருங்கிவிரி தண்டலை
மிடைந்துவளர் கோகரணமே. 1

கோகர்ணம் – பசுவின் காது. இலிங்கம். பசுவின் காது போலக் குழைந்து நீண்டிருப்பதால் கோகர்ணம்.

சிவபெருமான் அடியார் அல்லாதவர்க்கு எப்பொழுதும் காண்டற்கு அரியவன். இயற்றமிழும், இசைத்தமிழும் ஆகி எனது உள்ளத்தில் நன்கு ஒளியாகி வீற்றிருப்பவன். பொன்போன்று ஒளிரும் சடைமுடியுடைய அக்கடவுள் வீற்றிருந்தருளும் இடமாவது, ஒன்றிய மனமுடைய அடியவர்களுடன் தேவர்களும் கூடியிருந்து பரவுகின்ற குன்றுகளும், சோலைகளும் விளங்கும் திருக்கோகரணம் என்னும் திருத்தலமாகும்.

**3647.** பேதைமட மங்கையொரு பங்கிட
மிகுத்திடப மேறியமரர்
வாதைபட வண்கடலெ ழுந்தவிட
முண்டசிவன் வாழுமிடமாம்
மாதரொடு மாடவர்கள் வந்தடி
யிறைஞ்சிநிறை மாமலர்கடுய்க்
கோதைவரி வண்டிசைகொள் கீதமுரல்
கின்றவளர் கோகரணமே. 2

இராவணன் இலங்கையில் எழுந்தருளுவித்தற் பொருட்டு இலிங்கம் ஒன்றை இறைவனிடம் பெற்றுச் செல்கையில் தேவர்களின் வேண்டுகோளின்படி ஓர் உபாயத்தால் பிள்ளையார் அவனிடமிருந்து வாங்கி வடகன்னட மாவட்டத்தில் (கர்நாடகம் – துளுவ நாடு) ஹீப்ளிக்கு அருகில் பிரதிட்டை செய்த தலம் தான் கோகர்ணம்.

பேதைமைக் குணத்தையுடைய இளம்பெண்ணாகிய உமாதேவியை இடப்பாகமாகக் கொண்டு, இடப வாகனத்தின் மேலேறி, தேவர்கள் துன்பத்தில் அழுந்தியபோது கடலில் தோன்றிய விடத்தை உட்கொண்டு சிவபெருமான் காத்தருளினார். அப்பெருமான் வீற்றிருந்தருள்கின்ற இடமாவது பெண்களோடு ஆடவர்களும் வந்து இறைவனின் திருவடிகளை வணங்கி, சிறந்த மலர்களைத் தூவிப் போற்ற, சாத்திய மாலைகளில் வரி வண்டுகள் மொய்த்து இன்னிசை எழுப்பும் கீர்த்தி மிகுந்த திருக்கோகரணம் என்னும் திருத்தலமாகும்.

**3648.** முறைத்திறமு றப்பொருடெரிந்துமுனி
வர்க்கருளி யாலநிழல்வாய்
மறைத்திற மறத்தொகுதி கண்டுசம
யங்களைவ குத்தவனிடம்
துறைத்துறை மிகுத்தருவி தூமலர்
சுமந்துவரை யுந்திமதகைக்
குறைத்தறை யிடக்கரி புரிந்திடறு
சாரன்மலி கோகரணமே. 3

சமயங்களை வகுத்தவனிடம்.

கல்லால நிழலின் கீழ்ச் சனகாதி முனிவர்கட்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருள்களையும் சிவபெருமான் முறையோடு உபதேசித்தார். வேதத்தின் பொருளாகிய சரியை முதலிய நாற்பாதப் பொருட்களையும் கண்டு அறுவகைச் சமயங்களை வகுத்தவர் சிவபெருமான். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் துறைகள்தோறும் அருவிநீர் தூய்மையான மலர்களைச் சுமந்து கொண்டு, மூங்கில்களைத் தள்ளி, மதகுகளைச் சிதைத்து, யானை பிளிற மோதும் சாரலையுடைய திருக்கோகரணம் என்னும் தலமாகும்.

**3649.** இலைத்தலை மிகுத்தபடை யெண்கரம்
விளங்கவெரி வீசிமுடிமேல்
அலைத்தலை தொகுத்தபுனல் செஞ்சடையில்
வைத்தவழ கன்றனிடமாம்
மலைத்தலை வகுத்தமுழை தோறுமுழை
வாளரிகள் கேழல்களிறு
கொலைத்தலை மடப்பிடிகள் கூடிவிளை
யாடிநிகழ் கோகரணமே. 4

இராவணன் அந்த இலிங்கத்தைப் பெயர்த்தெடுக்க முயன்று இழுத்தபோது அது பசுவின் காது போலக் குழைந்தமையால் கோகரணம் ஆயிற்று. கருவறைக்குள் சென்று எல்லோரும் சுவாமிக்கு அபிடேகம் செய்யலாம்.

சிவபெருமான் இலைபோன்ற நுனியுடைய சூலப்படையை உடையவன். எட்டுக்கரங்களை உடையவன். நெருப்பைக் கையிலேந்தி எண்தோள் வீசி நடனம் ஆடுபவன். தலையிலுள்ள செஞ்சடையில் அலைகளை யுடைய கங்கையைத் தாங்கியவன். அத்தகைய அழகான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது மலைகளிலுள்ள குகைகளில் மான்களும், சிங்கங்களும், பன்றிகளும், யானைகளும், கொம்பாற் கொல்லுதலையுடைய இளம் பெண்யானைகளும் கூடி விளையாடுகின்ற திருக்கோகரணம் என்னும் தலமாகும்.

**3650.** தொடைத்தலை மலைத்திகழி துன்னிய
வெருக்கலரி வன்னிமுடியின்
சடைத்தலை மிலைச்சியத போதனனெ
மாதிபயில் கின்றபதியாம்
படைத்தலை பிடித்துமற வாளரொடு
வேடர்கள் பயின்றுகுழுமிக்
குடைத்தலை நதிப்படிய நின்றுபழி
தீரநல்கு கோகரணமே. 5

சிவபெருமான் தலைமாலை அணிந்தவர். சடையில் கொன்றை, எருக்கு, அலரி, வன்னிப்பத்திரங்களையும் அணிந்தவர். எம் முதல்வரான சிவபெருமான் வீற்றிருந் தருளுகின்ற இடமானது வெற்றி பொருந்திய வாளாயுதத்தை ஏந்திய வீரர்களுடன் வேடர்கள் நட்புக் கொண்டு கூடி அலைகளையுடைய புனித நதியில் குடைந்து மூழ்கி வணங்க அப்பெருமான் அவர்களின் பழிபாவத்தை நீக்கி அருள்புரியும் திருக்கோகரணமாகும்.

| | |
|---|---|
| **3651.** நீறுதிரு மேனிமிசை யாடிநிறை<br>வார்கழல் சிலம்பொலிசெய<br>ஏறுவிளை யாடவிசை கொண்டிடு<br>பலிக்குவரு மீசனிடமாம்<br>ஆறுசம யங்களும்வி ரும்பியடி<br>பேணியர னாகமமிகக்<br>கூறுமனம் வேறிரதி வந்தடியர்<br>கம்பம்வரு கோகரணமே. 6 | சிவபெருமான் திருநீற்றைத் திருமேனியில் பூசியவர். திருக்கழலில் அணிந்த சிலம்பு ஒலி செய்ய இடபத்தில் ஏறி இசைபாடிப் பலி ஏற்று வருவார். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமானது சிவாகம விதிப்படி இறைவனின் திருவடிகளை விரும்பி வழிபடுகின்ற ஆறு சமயத்தவர்களும், மனத்தில் சிவானந்தம் மேலிட உடலில் நடுக்கம் வருகின்ற அடியவர்களாய் வாழ்கின்ற திருக் கோகரணமாகும். |
| **3652.** கல்லவட மொந்தைகுழ றாளமலி<br>கொக்கரைய ரக்கரைமிசை<br>பல்லபட நாகம்விரி கோவணவ<br>ராளுநக ரென்பரயலே<br>நல்லமட மாதரர னாமமு<br>நவிற்றிய திருத்தமுழுகக்<br>கொல்லவிட நோயகல் தரப்புகல்கொ<br>டுத்தருளு கோகரணமே. 7 | ஓசைமிகுந்த கல்லவடம், மொந்தை, குழல், தாளம், வலம்புரிச்சங்கு ஆகிய வாத்தியங்களுக்கு ஏற்ப சிவபெருமான் நடனமாடுவார். அக்குப்பாசி அணிந்த இடுப்பில், நச்சுப்பற்களும், படமும் உடைய பாம்பை அணிந்து கோவணஆடை உடுத்தவர். அத்தகைய சிவபெருமான் ஆளும் நகர் நற்குண, நற்செய்கையுடையவர்களாகிய பெண்கள் சிவபெருமானது திருப்பெயரைச் சொல்லித் தீர்த்தத்தில் முழுக, கொல்லும் விடநோய் போன்ற வினைகளைத் தீர்த்து, காரியம் யாவினும் வெற்றி கொடுத்தருளும் திருக்கோகரணமாகும். |
| **3653.** வரைத்தல நெருக்கிய முருட்டிரு<br>ணிறத்தவன வாய்களலற<br>விரற்றலை யுகிர்ச்சிறிது வைத்தபெரு<br>மானினிது மேவுமிடமாம்<br>புரைத்தலை கெடுத்தமுனி வாணர்பொலி<br>வாகிவினை தீரவதன்மேல்<br>குரைத்தலை கழற்பணிய வோமம்வில<br>கும்புகைசெய் கோகரணமே. 8 | முரட்டுத்தனமும், இருண்ட நிறமுமுடைய இராவணனின் பத்து வாய்களும் அலறும்படி, தன் காற்பெருவிரலை ஊன்றி அவனைக் கயிலைமலையின்கீழ் நெருக்கிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, முனிவர்களும், வேத வல்லுநர்களும் வினைதீர, ஒலிக்கின்ற கழலணிந்த சிவபெருமானின் திருவடிகளைப் பணிந்து, அரநாமத்தினை ஓதி வேள்வி புரிய அப்புகை பரவுகின்ற திருக்கோகரணம் ஆகும். |
| **3654.** வில்லிமையி னால்விற லரக்கனுயிர்<br>செற்றவனும் வேதமுதலோன்<br>இல்லையுள தென்றிகலி நேடவெரி<br>யாகியுயர் கின்றபரனூர்<br>எல்லையில் வரைத்தகடல் வட்டமு<br>மிறைஞ்சிநிறை வாசமுருவக்<br>கொல்லையி லிளங்குறவர் தம்மயிர்<br>புலர்த்திவளர் கோகரணமே. 9 | வில்லாற்றலால் வலிமையுடைய அரக்கனான இராவணனின் உயிரைப் போக்கிய திருமாலும், வேதத்தை ஓதும் பிரமனும், தம்முள் மாறுபட்டு இல்லையென்றும், உள்ளது என்றும் அறிய முடியாதவாறு தேட, நெருப்புவடிவாகி ஓங்கி நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஊர், எல்லையாக அளவுபடுத்திய கடலால் சூழப்பட்ட பூவுலகத்தோரும், தேவலோகத்தவரும் வணங்க, தினைப்புனங்களில் இளங்குறவர்கள் நறுமணம் கமழும் கூந்தலை உலர்த்தும் எழில்மிகுந்த திருக்கோகரணம் ஆகும். |

3655. நேசமின் மனச்சமணர் தேரர்க
ணிரந்தமொழி பொய்களகல்வித்
தாசைகொண் மனத்தையடி யாரவர்
தமக்கருளு மங்கணனிடம்
பாசம தறுத்தவனி யிற்பெயர்கள்
பத்துடைய மன்னனவனைக்
கூசவகை கண்டுபி னவற்கருள்க
ணல்கவல கோகரணமே. 10

உள்ளன்பில்லாத சமணர்களும், புத்தர்களும் கூறும் சொற்களைப் பொய்யென நீங்கி, தன்னிடத்து ஆசைகொள்ளும்படியான மனத்தையுடைய அடியவர்களுக்கு அருளும் அழகிய கருணையையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, இவ்வரிய பூவுலகில் பத்துப்பெயர்களையுடைய அர்ச்சுனனின் பாசத்தைப் போக்கி, அவன் நாணும்படி போர்செய்து பின் அருள் புரிந்த திருக்கோகரணம் ஆகும்.

3656. கோடலர வீனும்விரி சாரன்மு
னெருங்கிவளர் கோகரணமே
ஈடமினி தாகவுறை வானடிகள்
பேணியணி காழிநகரான்
நாடிய தமிழ்க்கிளவி யின்னிசைசெய்
ஞானசம் பந்தன்மொழிகள்
பாடவல பத்தரவ ரெத்திசையு
மாள்வர்பர லோகமெளிதே. 11

காந்தட்செடிகள் பாம்புபோல் மலர்கின்ற அகன்ற மலைச்சாரலையுடைய வளம்பெருகும் திருக்கோகரணத்தை இடமாகக் கொண்டு இனிது வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி, ஆராய்ந்த தமிழ்ச் சொற்களால் சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தன் அருளிய இனிய இசைப்பாடல்களைப் பாடவல்ல பக்தர்கள் அரசராகி எல்லாத் திசையும் ஆள்வர். பின் சிவலோகமும் எளிதில் அடைவர்.

## 80. திருவீழிமிழலை ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 80

3657. சீர்மருவு தேசினொடு தேசமலி
செல்வமறை யோர்கள்பணியத்
தார்மருவு கொன்றையணி தாழ்சடையி
னானமர்ச யங்கொள்பதிதான்
பார்மருவு பங்கயமு யர்ந்தவயல்
சூழ்பழன நீடவருகே
கார்மருவு வெண்கனக மாளிகை
கவின்பெருகு வீழிநகரே. 1

சிறப்புப் பொருந்திய சிவஒளியோடு, தேசங்களிலெல்லாம் புகழ்பெற்ற செல்வன் கழலேத்தும் செல்வத்தை உடைய அந்தணர்கள் வணங்குகின்ற தாழ்ந்த சடையையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் வெற்றிமிகும் பதியாவது, பூமியில் பொருந்திய தாமரை மலர்கள் மலர்ந்த வயல்களும், மேகம் சூழ்ந்த வெண்மையான, செல்வ வளமிக்க மாளிகைகளும் அழகுபெற விளங்குகின்ற திருவீழிமிழலையாகும்.

3658. பட்டமுழ விட்டபணி லத்தினொடு
பன்மறைக ளோதுபணிநல்
சிட்டர்கள்ச யத்துதிகள் செய்யவருள்
செய்தழல்கொண் மேனியவனூர்
மட்டுலவு செங்கமல வேலிவயல்
செந்நெல்வளர் மன்னுபொழில்வாய்
விட்டுலவு தென்றல்விரை நாறுபதி
வேதியர்கள் வீழிநகரே. 2

கொட்டும் முழவின் ஓசையும், ஊதும் சங்கின் ஒலியும், பல வேதங்களை ஓதுகின்ற பணியை மேற்கொள்ளும், சீலமுடைய அந்தணர்கள் வெல்க என்னும் துதிப்பாடல்கள் பாட அருள்செய்பவர் அழல் போன்ற சிவந்த மேனியுடைய சிவபெருமான். அவர் வீற்றிருந்தருளும் ஊரானது நறுமணம் கமழும் செந்தாமரை மலர்கள் வேலி போன்று சூழ்ந்து விளங்குவதும், செந்நெல் பெருகும் வயல்வளமிக்கதும், வளம் பொருந்திய சோலைகள் சூழ்ந்ததும், தென்றலின் நறுமணம் கமழ்வதும் அந்தணர்கள் வசிக்கின்றதுமான திருவீழிநகர் என்னும் பதியாகும்.

---

மிழலை என்பது ஊரின் பெயர்
வீழிச்செடி தலத்திற்குரிய கொடி. எனவே கொடியின் பெயரால் வீழிமிழலை என்று வழங்கப்பெற்றது.

**3659.** மண்ணிழிசு ரர்க்குவள மிக்கபதி
மற்றுமுள மன்னுயிர்களுக்
கெண்ணிழிவி லின்பநிகழ் வெய்தவெழி
லார்பொழி லிலங்கறுபதம்
பண்ணிழிவி லாதவகை பாடமட
மஞ்ஞைநட மாடவழகார்
**விண்ணிழிவி மானமுடை விண்ணவர்பி**
**ரான்**மருவு வீழிநகரே. 3

திருமால் விண்ணிலிருந்து கொண்டுவந்த விண்ணிழி விமானமே கோயிலாயிற்று.

தேவலோகத்திலிருந்து பூவுலகிற்கு வந்த தேவர்கட்கு வளமிக்க பதி, மற்றுமுள்ள மன்னுயிர்கட்கு எண்ணற்ற இன்பங்களைத் தரும் பதி, அழகிய சோலைகளில் வண்டுகள் பாட, இள மயில்கள் நடனமாட, அழகிய தேவலோகத்திலிருந்து கொண்டு வரப்பட்டு வழிபடப்படும் விமானமுடைய கோயிலில் தேவர்களின் தலைவனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் சிறப்புடைய திருவீழிமிழலை என்னும் தலமாகும்.

**3660.** செந்தமிழர் தெய்வமறை நாவர்செழு
நற்கலைதெ ரிந்தவவரோ
டந்தமில்கு ணத்தவர்க ளர்ச்சனைகள்
செய்யவமர் கின்றவரனூர்
கொந்தலர்பொ ழிற்பழன வேலிகுளிர்
தண்புனல்வ ளம்பெருகவே
வெந்திறல்வி ளங்கிவளர் வேதியர்வி
ரும்புபதி வீழிநகரே. 4

சக்கராயுதம் பெற வேண்டி திருமால் தினமும் ஆயிரம் தாமரை மலர்கள் கொண்டு வழிபடும்போது ஒருநாள் ஒரு பூ குறையத் தமது கண்ணையிடந்து சாத்தி சக்கரத்தையும் கண்ணன் என்ற பெயரையும் பெற்றார். கண்ணப்பன் தனக்காக எதையும் எதிர்பாராமல் அன்பிற்காகக் கண்ணைக் கொடுத்து அடியார் ஆனார். எதிர்பார்ப்போடு திருமால் கண் கொடுத்து சக்கரம் பெற்று நம்மைப் போல பிறந்து இறந்து கொண்டிருக்கிறார்.

பக்தியுடன் இனிய செந்தமிழ்ப் பாக்கள் பாடும் அன்பர்களும், தெய்வத் தன்மையுடைய வேதம் ஓதும் நாவையுடைய அந்தணர்களும், சிறந்த நற்பயன் தருவதாகிய கலைகளைத் தெரிந்த அறிஞர்களும், நற்குண, நற்செய்கையுடைய ஞானிகளும் அர்ச்சனைகள் செய்ய, சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் ஊரானது, கொத்தாக மலரும் பூக்கள் நிறைந்த சோலைகளும், வேலி சூழ்ந்த வயல்களும், குளிர்ந்த நீர்நிலைகளும் வளம்பெருகி விளங்க, வேள்வி இயற்றும் வேத விற்பன்னர்கள் விரும்புகின்ற பதியாகிய திருவீழி மிழலையாகும்.

**3661.** பூதபதி யாகியபு ராணமுனி
புண்ணிய**நன் மாதைமருவிப்**
**பேதமதி லாதவகை பாகமிக**
**வைத்தபெரு மான**திடமாம்
மாதவர்க ளன்னமறை யாளர்கள்
வளர்த்தமலி வேள்வியதனால்
ஏதமதி லாதவகை யின்பமமர்
கின்றவெழில் வீழிநகரே. 5

கருவறை மூலவர் இலிங்கத்தின் பின்புறம் சுவாமி அம்பாள் திருமணக் கோலம் உள்ளது. சிவபெருமான் காத்தியாயினை மணந்த கோலத்தில் உற்சவ வடிவினராக விடையுடன் தென்முகமாகக் காட்சியளிக்கிறார்.

நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என விளங்குகின்ற ஐம்பூதங்கட்கும் பதியாகிய சிவபெருமான் பழமையான தவக்கோலம் பூண்டவர். அவர் புண்ணிய தேவியாகிய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது மாதவர்களும், அந்தணர்களும் அழலோம்பி வளர்க்கும் வேள்வியினால் பசி, பிணி, வறுமை, மழையின்மை முதலிய தீங்கு நேராமலும், உண்டி, நோயின்மை, செல்வம், பருவமழை முதலிய நன்மை நிகழவும், மாந்தர் மகிழ்ச்சியடைகின்ற திருவீழிமிழலை ஆகும்.

**3662.** மண்ணின்மறை யோர்மருவு வைதிகமு
மாதவமு மற்றுமுலகத்
தெண்ணில்பொரு ளாயவை படைத்தவிமை
யோர்கள்பெரு மானதிடமாம்
நண்ணிவரு நாவலர்க ணாடொறும்
வளர்க்கநிகழ் கின்றபுகழ்சேர்
விண்ணுலவு மாளிகை நெருங்கிவளர்
நீள்புரிசை வீழிநகரே. 6

காழித் தோற்றம் திருஞானசம்பந்தருக்காக வீழியில் விண்ணிழி விமானத்தில் காட்டப்பட்டது.

இப்பூவுலகில் அந்தணர்கள் ஆற்றி வருகின்ற வைதிக தருமங்களையும், மகா முனிவர் ஒழுகி வருகின்ற தவநெறிகளையும், மற்றும் உலகியல் நெறி பற்றிய பல்வகை அறங்களையும் படைத்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, நாடிவருகின்ற புலவர்கள் நாள்தோறும் வளர்க்க வளர்ந்து வரும் புகழையுடையதும், வானளாவிய மாளிகைகள் நிறைந்து செல்வம் வளர்வதும், ஓங்கிய மதிலையுடையதுமான திருவீழிமிழலை ஆகும்.

**3663.** மந்திரநன் மாமறையி னோடுவளர்
வேள்விமிசை மிக்கபுகைபோய்
அந்தரவி சும்பணவி யற்புத
மெனப்படரு மாழியிருள்வாய்
மந்தரநன் மாளிகை நிலாவுமணி
நீடுகதிர் விட்டவொளிபோய்
வெந்தழல் விளக்கென விரும்பினர்
திருந்துபதி வீழிநகரே. 7

இத்தலத்தில் வேலைப்பாட்டில் மிகச்சிறந்த வௌவால் நெத்தி மண்டபம் ஒன்றுள்ளது. இது தமிழ்நாட்டிலேயே மிகப்பெரிய மண்டபமாகும். அந்தக் காலத்து கோவில் வேலை சிற்பிகள் விலை மதிப்பீடு கொடுக்கும் போது ஆவுடையார் கோவில் கொடுங்கை, நனிப்பள்ளி கருவறை விமானம், வீழிமிழலை, வௌவால் நெத்தி மண்டபம் இவை மூன்றைத் தவிர எதை வேண்டுமானாலும் செய்து தருகிறோம் என்று தான் ஒப்பந்தத்தில் கையெழுத்திடுவார்கள் என்பது செவிவழிச் செய்தி.

வேத மந்திரங்கள் ஓதி வளர்க்கப்படும் வேள்வியின் புகையானது மேலே சென்று ஆகாயத்தில் கலந்து அற்புதம் போன்று பகற்காலத்தே இருள் சூழக் கடலைக் கடைந்த மந்திர மலையைப் போன்ற அழகிய மாளிகைகளில் பதிக்கப்பட்ட இரத்தினங்களின் ஒளியானது நெடுந்தூரம் பாய்ந்து புகையால் விளைந்த இருளைப் போக்கி ஒளிரும். அவ்வொளி வெவ்விய தழலில் ஏற்றிய விளக்கொளிபோல் விளங்கும் இயல்பினதாய் விருப்பமுடையவர்களாய், மனநிறைவோடு மக்கள் வாழ்கின்ற தலம் திருவீழிமிழலையாகும்.

**3664.** ஆனவலி யிற்றசமு கன்றலைய
ரங்கவணி யாழிவிரலால்
ஊனமரு யர்ந்தகுரு திப்புனலில்
வீழ்தரவு ணர்ந்தபரனூர்
தேனமர் திருந்துபொழில் செங்கனக
மாளிகை திகழ்ந்தமதிளோ
டானதிரு வுற்றுவள ரந்தணர்
நிறைந்தவணி வீழிநகரே. 8

இத்தலத்துக்கு திருஞானசம்பந்தர் பதிகம் பதினான்கும் அப்பர் பதிகம் எட்டும் சுந்தரர் பதிகம் ஒன்றுமாக இருபத்தி மூன்று பதிகங்கள் இடம்பெற்றுள்ளன.

தசமுகன் எனப்படும் இராவணன் தன் வலிமையைப் பெரிதாகக் கருதிக் கயிலைமலையைப் பெயர்த்தெடுக்க, அவனது தலைகள் அரைபடும்படி அழகிய திருக்காற் பெருவிரலை ஊன்றி, அவனுடைய உடலிலிருந்து குருதி பெருகுமாறு செய்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஊரானது தேன்மணம் கமழும் சோலைகளும், செம்பொன் மாளிகைகளும், உயர்ந்த மதில்களும் உடையதாய்ச் செல்வம் பெருகி வளரும் அந்தணர்கள் நிறைந்த அழகிய திருவீழிநகராகும்.

**3665.** ஏனவுரு வாகிமணி டந்தவிமை
யோனுமெழி லன்னவுருவம்
ஆனவனு மாதியினோ டந்தமறி
யாதவழன் மேனியவனூர்
வானணவு மாமதிண் மருங்கலர்
நெருங்கிய வளங்கொள்பொழில்வாய்
வேனலமர் வெய்திட விளங்கொளியின்
மிக்கபுகழ் வீழிநகரே. 9

தில்லை அந்தணர்கள், வீழிவேதியர்கள், அழுந்தை மறையோர்கள் என்றிவர்களெல்லாம் வேதம் வளர்த்தவர்கள். வேதியர் 500 பேர்.

பன்றி வடிவம் கொண்டு பூமியைத் தோண்டிய திருமாலும், அழகிய அன்னப்பறவை உருவெடுத்த பிரமனும் தேடத் தன் முடியையும், அடியையும் அறியப்படாத வண்ணம் நெருப்பு வடிவாய் நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஊரானது, வானளாவிய பெரிய மதில்களினருகில் மலர்கள் அடர்ந்த, வளமிக்க சோலையில் மாந்தர் வெயிற்காலத்தில் தங்க விளங்குகின்ற தெய்வத்தன்மை மிக்க புகழுடைய திருவீழிமிழலையாகும்.

**3666.** குண்டமண ராகியொரு கோலமிகு
பீலியொடு குண்டிகைபிடித்
தெண்டிசையு மில்லதொரு தெய்வமுள
தென்பரது வென்னபொருளாம்
பண்டையய னன்னவர்கள் பாவனை
விரும்புபரன் மேவுபதிசீர்
வெண்டரள வாணகைநன் மாதர்கள்
விளங்குமெழில் வீழிநகரே. 10

வடக்கு வீதி கீழ்க்கோடியில் சம்பந்தப் பெருந்தகையாருக்கும், மேல் கோடியில் அப்பர் பெருமானுக்கும் தனிக் கோயில்கள் உள்ளன.

சமணர்கள் முரட்டுத்தன்மை உடையவராய், அழகிய மயிற்பீலியும், குண்டிகையும் ஏந்தி, எட்டுத் திக்கிலும் மிகுந்த ஆற்றலுடைய தெய்வம் ஒன்று உள்ளது என்பதால் என்ன பயன் உள்ளது? வேதத்தை ஓதும் பிரமனைப் போன்ற அறிஞர்கள் விரும்பிப் போற்றும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஊர், வெண்ணிற முத்துப்போன்ற ஒளிபொருந்திய பற்களையுடைய கற்புடைப் பெண்கள் விளங்கும் அழகிய திருவீழிமிழலையாகும்.

**3667.** மத்தமலி கொன்றைவளர் வார்சடையில்
வைத்தபரன் வீழிநகர்சேர்
வித்தகனை வெங்குருவில் வேதியன்
விரும்புதமிழ் மாலைகள்வலார்
சித்திர விமானமமர் செல்வமலி
கின்றசிவ லோகமருவி
அத்தகு குணத்தவர்க ளாகியனு
போகமொடி யோகமவரதே. 11

திருவீழிமிழலை மகாதேவர் கோயிலைப் பொன் வேய்ந்தவர் விசயராஜேந்திர தேவர் அணுக்கியார் பல்லவன் பாட்டாளி நங்கை என்ற கல்வெட்டு உள்ளது. கடந்த ஆண்டு கும்பாபிடேகத்தின் போது பித்தளைத் தகடு வேயப்பட்டுள்ளது. 2026 ஆவது குடமுழுக்கின் போது பொன்வேய வீழிமிழலையார் அருள்வாராக.

பொன்னூமத்தை மலரும், கொன்றை மலரும், நீண்ட சடையிலே அணிந்த பெருமானும், திருவீழிமிழலை நகரில் வீற்றிருந்தருளும் சதுரனுமாகிய சிவபெருமானைப் போற்றி வெங்குரு என்னும் பெயரையுடைய சீகாழியில் அவதரித்த வேத வல்லுநனான ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ் மாலைகளை ஓத வல்லவர்கள், அழகிய கோயிலையுடைய செல்வம் மலிகின்ற சிவலோகத்தை அடைந்து, சத்துவ குணம் உடையவர்களாகி இறைவனோடு பேரின்பம் துய்ப்பதற்குரிய சிவயோகத்தைப் பெறுவர்.

## 81. திருத்தோணிபுரம் ( திருவிராகம் )

பண் : சாதாரி பதிக எண் : 81

3668. சங்கமரு முன்கைமட மாதையொரு
பாலுடன் விரும்பி
அங்கமுடன் மேலுறவ ணிந்துபிணி
தீரவருள் செய்யும்
எங்கள்பெரு மானிடமெ னத்தகுமு
னைக்கடலின் முத்தந்
துங்கமணி யிப்பிகள் கரைக்குவரு
தோணிபுர மாமே. 1

முன்கையில் சங்கு வளையல் அணிந்த உமாதேவியைத் தன்னுடைய உடம்பின் ஒரு பாகமாக விருப்பத்துடன் அமர்த்தி, எலும்பைத் தன் உடம்பில் நன்கு பொருந்தும்படி அணிந்து, தன்னைத் தியானிப்பவரது மும்மலப் பிணிப்பு நீங்கும்படி அருள் புரிகின்ற எங்கள் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது அலை வீசுகின்ற கடலினின்றும் முத்துக்களும், இரத்தினங்களும், சங்குப்பூச்சிகளும் கரைக்கு வந்து சேருகின்ற திருத்தோணிபுரம் ஆகும்.

சீகாழியின் பன்னிரு பெயர்களில் ஐந்தாவது பெயர் தோணிபுரம். முறைமாறாமல் வரிசையாக பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம் என்று உச்சரிப்பதே மந்திரமாகும்.

3669. சல்லரியி யாழ்முழவ மொந்தைகுழ
றாளமதி யம்பக்
கல்லரிய மாமலையர் பாவையொரு
பாகநிலை செய்து
அல்லெரிகை யேந்திநட மாடுசடை
யண்ணலிட மென்பர்
சொல்லரிய **தொண்டர்துதி செய்யவளர்**
தோணிபுர மாமே. 2

சல்லரி, யாழ், முழவம், மொந்தை, குழல், தாளம் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, பெரிய மலையாகிய இமயமலையரசரின் அரிய மகளாகிய உமாதேவியைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகப் பிரியாமல் கொண்டு, கையில் அனலை ஏந்தி இரவில் நடனமாடுகின்ற, சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற இடம், சொல்லுதற்கரிய பெருமையுடைய தொண்டர்கள் போற்ற நாளும் புகழ் வளரும் திருத்தோணிபுரம் ஆகும்.

3670. வண்டரவுகொன்றைவளர் புன்சடையின்
மேன்மதியம் வைத்துப்
பண்டரவு தன்னரையி லார்த்தபர
மேட்டிபழி தீரக்
கண்டரவ வொண்கடலி னஞ்சமமு
துண்டகட வுள்ளூர்
தொண்டரவர் மிண்டிவழி பாடுமல்கு
தோணிபுர மாமே. 3

வண்டுகள் மொய்த்து ஊதுகின்ற கொன்றைமலர் மாலையை அணிந்த வளர்ந்த சிவந்த சடையில் பிறைச்சந்திரனையும் தரித்து, பண்டைக்காலத்தில் இடையில் பாம்பைக் கச்சாகக் கட்டிய மேலான இடத்திலுள்ள சிவபெருமான், திருமால் முதலியோர் தனது அருளின்றி அமுதம் கடையச் சென்ற தோடம் அவரைவிட்டு நீங்குமாறு, திருவருள் செய்து, அலைகளின் ஆரவாரத்தையுடைய சிறந்த பாற்கடலினின்றும் எழுந்த நஞ்சினை அமுதமென உண்ட கடவுளாய் வீற்றிருந்தருளும் ஊர், திருத்தொண்டர்கள் ஒருவரை ஒருவர் முந்திச் செய்கின்ற வழிபாடுகள் மிகுந்த திருத்தோணிபுரம் ஆகும்.

'நீர்ப் பொருவில் திருத்தோணிபுரம்' என்பது சேக்கிழார் வாக்கு. ஊழிநீர்ப் பெருக்குகளில் (சுனாமிகளில்) உலகமெல்லாம் அமிழ்ந்த போது பிரணவமாகிய தோணியாக மிதந்து தன்னகத்து அம்மையப்பர் எழுந்தருளப் பெறுதலால் தோணிபுரம் எனப் பெயர் பெற்றது. சீகாழிக்குரிய 12 பெயர்களில் ஐந்தாவது பெயர்.

| | |
|---|---|
| **3671.** கொல்லைவிடை யேறுடைய கோவணவ<br>**னாவணவு மாலை**<br>ஒல்லையுடை யானடைய லாரரண<br>மொள்ளழல் விளைத்த<br>வில்லையுடை யான்மிக விரும்புபதி<br>மேவிவளர் **தொண்டர்**<br>**சொல்லையடை வாகவிடர் தீர்த்தருள்செய்**<br>தோணிபுர மாமே. 4 | சிவபெருமான் முல்லைநிலத்ததாகிய இடப வாகனத்தையுடையவன். கோவண ஆடை அணிந்தவன். அடியவர்கள் பாடிப் போற்றித் தொழும் பாமாலைகளை உடையவன். தொண்டர்கள் பக்தியுடன் ஒலிக்கும் அரநாமமும், சிவநாமமும் ஓதப்படும் பண்பினன். பகைவரது மதில்கள் எரிந்து சாம்பலாகுமாறு செய்த மேருவை வில்லாக உடையவன். அப்பெருமான் வீற்றிருந்தருளும் பதியாவது, இறைவனையே பற்றுக்கோடாகக் கொண்டு மேன்மேலும் பக்தி செய்கின்ற தொண்டர்களின் வேண்டுகோள்களை ஏற்று, அவர்களின் துன்பங்களைத் தீர்த்து அருள் செய்கின்ற திருத்தோணிபுரம் ஆகும். |
| **3672.** தேயுமதி யஞ்சடையி லங்கிடவி<br>லங்கன்மலி கானிற்<br>காயுமடு திண்கரியி னீருரிவை<br>போர்த்தவனி னைப்பார்<br>தாயென நிறைந்ததொரு தன்மையினர்<br>நன்மையொடு வாழ்வு<br>**தூயமறை யாளர்**முறை யோதிநிறை<br>தோணிபுர மாமே. 5 | கலைகள் தேய்ந்து அழியும் நிலையிலிருந்த சந்திரனைச் சடைமுடியில் தரித்து மீண்டும் விளங்கி ஒளிருமாறு செய்தவர் சிவபெருமான். மலைகள் மிக்க காட்டில் திரிகின்ற சினமுடைய, கொல்லும் தன்மையுடைய வலிய யானையின் தோலை உரித்துப் போர்த்தவர். தம்மையே சிந்தித்திருப்பவர்கட்குத் தாயைப் போலக் கருணை காட்டிப் பாதுகாப்பவர். எங்கும் நிறைந்த தன்மையர். அடியவர்கட்கு நன்மை புரிதலையே தம் கடனாகக் கொண்ட அப்பெருமானார் வீற்றிருந்தருளுகின்ற இடம், தூய்மையுடைய வேதியர்கள் வேதங்களை ஓதி நிறைகின்ற திருத்தோணிபுரம் ஆகும். |
| **3673.** பற்றலர்த முப்புரமெ ரித்**தடிப**<br>**ணிந்தவர்கண் மேலைக்**<br>**குற்றமதொ ழித்தருளு கொள்கையினன்**<br>வெள்ளின்முது கானிற்<br>பற்றவனி சைக்கிளவி பாரிடம<br>தேத்தநட மாடுந்<br>துற்றசடை யத்தனுறை கின்றபதி<br>தோணிபுர மாமே. 6 | சிவபெருமான் பகைவர்களின் முப்புரங்களை எரிந்து சாம்பலாகுமாறு செய்தவர். தம் திருவடிகளைப் பணிந்து வணங்குபவர்களின் குற்றங்களை ஒழித்துத் திருவருள் புரியும் கொள்கையினையுடையவர். பாடைகள் மலிந்த சுடுகாட்டில் பற்றுடையவர். பூதகணங்கள் இசைப்பாடல்களைத் துதிக்கப்பாட நடனமாடுபவர். அடர்ந்து வளர்ந்த சடையையுடைய, அனைத்துயிர்க்கும் தந்தையாகிய சிவபெருமான் வீற்றிருந்து அருளுகின்ற தலம் திருத்தோணிபுரம் ஆகும். |

| | |
|---|---|
| **3674.** பண்ணமரு நான்மறையர் நூன்முறை<br>பயின்றதிரு மார்பிற்<br>பெண்ணமரு மேனியினர் தம்பெருமை<br>பேசுமடி யார்மெய்த்<br>திண்ணமரும் வல்வினைக ளரவருள்<br>செய்தலுடை யானூர்<br>துண்ணென விரும்புசரி யைத்தொழிலர்<br>தோணிபுர மாமே. 7 | சிவபெருமான் பண்ணிசையோடு கூடிய நான்கு வேதங்களை அருளியவர். வேதாகம சாத்திரங்களின் முடிவான கருத்தை, மோனநிலையில் சின்முத்திரையால் தெரிவித்தருளிய திருமார்பையுடையவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டவர். தமது பெருமை பேசும் அடியவர்களின் தீர்ப்பதற்கரிய வல்வினைகளைத் தீர்த்து அருளியவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் ஊரானது சரியையாதி தொழில்களை விரைவுடன் பணி செய்தலில் விருப்புடைய மெய்த்தொண்டர் வாழ்கின்ற திருத்தோணிபுரம் என்னும் திருத்தலமாகும். |
| **3675.** தென்றிசையி லங்கையரை யன்றிசைகள்<br>வீரம்விளை வித்து<br>வென்றிசை புயங்களை யடர்த்தருளும்<br>வித்தகனி டஞ்சீர்<br>ஒன்றிசையி யற்கிளவி பாடமயி<br>லாடவளர் சோலை<br>துன்றுசெய வண்டுமலி தும்பிமுர<br>றோணிபுர மாமே. 8 | தென்திசையில் விளங்கிய இலங்கை மன்னனான இராவணன் எல்லாத் திசைகளிலும் திக்விஜயம் செய்து தனது வீரத்தை நிலைநாட்டி, வெற்றி கொண்ட தோள்களை நெருக்கிப் பின் அருளும் புரிந்த வித்தகனான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், இசையுடன் குயில்கள் பாட, மயில்கள் ஆட, வளம் பொருந்திய சோலைகளின் மலர்களிலுள்ள தேனை உண்ணும்பொருட்டு, வண்டுகளும், மிகுந்த தும்பிகளும் சுருதி கூட்டுவது போல் முரல்கின்ற திருத்தோணிபுரம் ஆகும். |
| **3676.** நாற்றமிகு மாமலரின் மேலயனு<br>நாரணனு நாடி<br>ஆற்றலத னான்மிகவ ளப்பரிய<br>வண்ணமெரி யாகி<br>ஊற்றமிகு கீழுலகு மேலுலகு<br>மோங்கியெழு தன்மைத்<br>தோற்றமிக நாளுமரி யானுறைவு<br>தோணிபுர மாமே. 9 | நறுமணம் கமழும் தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் தேட முயலத் தங்களது ஆற்றலால் அளந்தறிதற்கு அரிதாகும் வண்ணம், நெருப்புப் பிழம்பாகி, கீழுலகு மேலுலகு ஆகியவற்றை வியாபித்து ஓங்கியெழுந்த தன்மையுடைய தோற்றத்தை உடையவனாய் ஒருநாளும் அவர்கள் அறிதற் கரியனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருத்தோணிபுரம் ஆகும். |

| | |
|---|---|
| **3677.** மூடுதுவ ராடையினர் வேடநிலை<br>காட்டுமம ணாதர்<br>கேடுபல சொல்லிடுவ ரம்மொழிகெ<br>டுத்தடைவி னானக்<br>காடுபதி யாகநட மாடிமட<br>மாதொடிரு காதிற்<br>றோடுகுழை பெய்தவர்த மக்குறைவு<br>தோணிபுர மாமே. **10** | உடலை மூடி மறைக்கின்ற துவராடையணிந்த புத்தர்களும், தமது வேடமாகிய ஆடையணியாத் தன்மையினைப் போல தமது அறிவும் உளது எனக் காட்டும் அறிவிலிகளாகிய சமணர்களும் தீமை விளைவிக்கக்கூடிய பல சொற்களை கூறுவர். அத்தீய மொழிகளை நீக்கி, சுடுகாட்டைத் தமது இருப்பிடமாகக் கொண்டு, நடனமாடி, உமாதேவியோடு கூடி, இரு காதுகளிலும் முறையே தோடும், குழையும் அணிந்தவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம் திருத்தோணிபுரம் ஆகும். |
| **3678.** துஞ்சிருளி னின்றுநட மாடிமிகு<br>தோணிபுர மேய<br>மஞ்சனைவ ணங்குதிரு ஞானசம்<br>பந்தனசொல் மாலை<br>தஞ்சமென நின்றிசைமொ ழிந்தவடி<br>யார்கள்தடு மாற்றம்<br>வஞ்சமிலர் நெஞ்சிருளு நீங்கியருள்<br>பெற்றுவளர் வாரே. **11** | அனைத்துலகும் ஒடுங்கிய பிரளயம் எனப்படும் பேரிருளில் நின்று நடனமாடுபவனாய்ப், புகழ்மிகுந்த திருத்தோணிபுரத்தை விரும்பி வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானை வணங்கித் திருஞானசம்பந்தர் அருளிய இச்சொல்மாலைகளே நமக்குப் பற்றுக்கோடாகும் என்ற கருத்தில் நிலைத்து நின்று, அதனை இசையுடன் ஓதும் அடியவர்கள் நெறிதவறுதலும் அதற்குக் காரணமான வஞ்சனையும் இல்லாதவர்கள். அவர்கள் நெஞ்சிலுள்ள அறியாமை என்னும் இருள் நீங்கப் பெற்று, இறைவனது அருள்பெற்றுச் சீலத்துடன் வளர்வர். |

## 82. திருஅவளிவணல்லூர் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 82

| | |
|---|---|
| **3679.** கொம்பிரிய வண்டுலவு கொன்றைபுரி<br>நூலொடுகு லாவித்<br>**தம்பரிசி னோடு**சுடு நீறுதட<br>வந்திடப மேறிக்<br>கம்பரிய செம்பொனெடு மாடமதில்<br>கல்வரைவி லாக<br>அம்பெரிய வெய்தபெரு மானுறைவ<br>தவளிவண லூரே. **1** | இறைவர் வண்டுகள் மொய்க்கும் கொன்றை மாலை அணிந்தவர். முப்புரிநூல் அணிந்த திருமார்பினர். திருவெண்ணீறு பூசியவர். இடப வாகனத்தில் ஏறி வீற்றிருப்பவர். ஆகாயத்தில் திரிந்த பொன், வெள்ளி, இரும்பு ஆகிய கோட்டைகளின் மதில்களை, மேருமலையை வில்லாகக் கொண்டு அம்பு எய்து எரித்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் தலம் திருஅவளிவணல்லூர் ஆகும். |

சுவாமி அவள் இவள் என்று சாட்சி கூறி நிரூபித்த தலம். அவள் + இவள்+நல்லூர் – அவளிவணல்லூர் தலத்து இறைவர். தம் பரிசுடைய நாயனார். (தமக்கே உரித்தான எண்குணங்கள்)

| | |
|---|---|
| **3680.** ஓமையன கள்ளியன வாகையன<br>கூகைமுர லோசை<br>ஈமமெரி சூழ்சுடலை வாசமுது<br>காடுநட மாடித்<br>தூய்மையுடை யக்கொடர வம்விரவி<br>மிக்கொளிது லங்க<br>ஆமையொடு பூணுமடி கள்ளுறைவ<br>தவளிவண லூரே. **2** | ஓமை, கள்ளி, வாகை முதலிய மரங்கள் நிறைந்ததும், கோட்டான்கள் கத்தும் ஓசையும் உடையதும் ஆன கொள்ளி நெருப்புச் சூழ்ந்த சுடலை வாசமுடைய சுடுகாட்டில் திருநடனம் செய்பவர் சிவபெருமான். தூய்மையான எலும்பும், பாம்பும் கலந்து ஒளி துலங்க, ஆமையோட்டினை ஆபரணமாக அணிந்துள்ள சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணல்லூர் என்னும் திருத்தலமாகும். |
| **3681.** நீறுடைய மார்பிலிம வான்மகளொர்<br>பாகநிலை செய்து<br>கூறுடைய வேடமொடு கூடியழ<br>காயதொரு கோலம்<br>ஏறுடைய ரேனுமிடு காடிரவி<br>னின்றுநட மாடும்<br>ஆறுடைய வார்சடையி னானுறைவ<br>தவளிவண லூரே. **3** | சிவபெருமான் திருநீறணிந்த தம் திருமார்பில் இமவான் மகளாகிய உமாதேவியை ஒருபாகமாகக் கொண்டு அர்த்தநாரி என்னும் அழகிய கோலத்தில் இடப வாகனத்தில் வீற்றிருப்பவர். சுடுகாட்டில் இரவில் நடனம் ஆடுபவர். கங்கையை நீண்ட சடையில் தாங்கியவர். அப்பெருமான் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணநல்லூர் என்னும் திருத்தலமாகும். |
| **3682.** **பிணி**யுமிலர் **கேடு**மிலர் **தோற்றமில**<br>ரென்றுலகு பேணிப்<br>பணியுமடி யார்களன பாவமற<br>வின்னருள்ப யந்து<br>துணியுடைய தோலுமுடை கோவணமு<br>நாகமுட றொங்க<br>அணியுமழ காகவுடை யானுறைவ<br>தவளிவண லூரே. **4**<br><br>பிணி, கேடு, தோற்றமிலாமை – இறைமைக் குணங்கள் | பிணியும், இறப்பும், பிறப்பும் இல்லாதவர் என்று உலகத்தவரால் போற்றப்படும் சிவபெருமான் தம்மை வணங்கும் அடியவர்களின் பாவம் யாவும் நீங்குமாறு செய்து, இன்னருள் புரிபவர். கிழிந்த தோலையும், கோவணத்தையும் ஆடையாக உடுத்ததுடன், பாம்பை அழகிய ஆபரணமாக அணிந்து விளங்கும் அவர் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணல்லூர் என்னும் திருத்தலமாகும். |
| **3683.** குழலின்வரி வண்டுமுரன் மெல்லியன<br>**பொன்மலர்கள்** கொண்டு<br>கழலின்மிசை **யிண்டைபுனை வார்கடவு**<br>**ளென்றமரர்** கூடித்<br>தொழலும்வழி பாடுமுடை யார்துயரு<br>நோயுமிலராவர்<br>அழலுமழு வேந்துகையி னானுறைவ<br>தவளிவண லூரே. **5**<br><br>அமரர்கள் தேவலோகத்திலிருந்து கற்பக விருட்சம் தரும் பொன்மலர்களைக் கொணர்ந்து வண்டுகள் மொய்க்கும் பூலோக மலர்களையும் சேர்த்து இண்டை மாலை சூட்டி, சிவபெருமான் திருவடிகளில் சேர்த்தி வழிபடுவர். | குழலின் ஓசைபோல் வண்டுகள் ஒலி எழுப்பி மொய்க்கும் மெல்லிய அழகிய மலர்களைக் கொண்டு இண்டமாலை கட்டி, சிவபெருமான் திருவடிகளில் சார்த்தித் தேவர்கள் எல்லாம் ஒன்றுகூடி "இவரே முழுமுதற் கடவுள்" என்று தொழுது போற்றுவர். அத்தகைய வழிபாட்டைச் செய்பவர்கட்கு, உள்ளத்தால் வரும் துயரும், உடலால் வரும் நோயும் இல்லை. அவ்வாறு அடியவர்கட்கு அருள்புரியும் இறைவன், நெருப்புப்போல் ஒளிவீசும் மழுவேந்திய கையுடையவனாய் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணல்லூர் என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3684.** துஞ்சலில ராயமரா் நின்றுதொழு<br>தேத்தவருள் செய்து<br>நஞ்சுமிட றுண்டுகரி தாய**வெளி**<br>**தாகியொரு நம்பன்**<br>மஞ்சுறநி மிா்ந்துமைந டுங்கவக<br>லத்தொடுவ ளாவி<br>அஞ்சமத வேழவுரி யானுறைவ<br>தவளிவண லூரே. 6 | உறக்கமின்றித் தேவா்கள் இடையறாது தம்மைத் தொழுது போற்ற, நஞ்சினையுண்டு அவா்களைக் காத்து அருள்செய்து, கண்டம் கரியதாகவும் ஏனைய உருவம் படிகம் போல் வெண்மையாகவும் விளங்குபவா் சிவபெருமான். மதம் பிடித்த யானை அஞ்சும்படி, வானளாவ நிமிா்ந்து அதன் தோலை உரித்து, உமை நடுங்கத் தம் மாா்பில் போா்த்தவா். அப்பெருமான் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணல்லூா் என்னும் திருத்தலமாகும். |
| **3685.** கூடரவ மொந்தைகுழல் யாழ்முழவி<br>னோடுமிசை செய்யப்<br>பீடரவ மாகுபட ரம்புசெய்து<br>பேரிடப மோடும்<br>காடரவ மாகுகனல் கொண்டிரவில்<br>நின்றுநட மாடி<br>ஆடரவ மாா்த்தபெரு மானுறைவ<br>தவளிவண லூரே. 7 | மொந்தை, குழல், யாழ், முழவு முதலிய வாத்தியங்கள் ஒலிக்க, எண்தோள்வீசி ஆடும்போது சடையிலுள்ள கங்கைநீா் அம்பு போலப் பாய, பெரிய இடப வாகனத்தோடு, சுடுகாட்டில் ஓசையுடன் எரியும் நெருப்பையேந்தி இரவில் நடனமாடி, படமெடுத்தாடும் பாம்பைக் கச்சாகக் கட்டிய சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணல்லூா் என்னும் திருத்தலம் ஆகும். |
| **3686.** ஒருவரையு மேல்வலிகொ டேனெனவே<br>ழுந்தவிற லோனிப்<br>பெருவரையின் மேலொா்பெரு மானுமுளனோ<br>வெனவெ குண்ட<br>கருவரையு மாழ்கடலு மன்னதிறல்<br>கைகளுடை யோனை<br>அருவரையி லூன்றியடா்த் தானுறைவ<br>தவளிவண லூரே. 8 | எனக்கு மேல் ஒருவரையும் வலிமையுடைய வராகக் காணப்பொறேன் என வீரத்துடன் எழுந்து, இக்கயிலை மலையின்மேல் ஒரு பெருமான் உளனோ என வெகுண்டு, மலையைப் பெயா்த்த பெரியமலை போன்றும், ஆழமான கடல்போன்றும் வலிமையுடைய அரக்கனான இராவணனைத் தன்காற் பெருவிரலை ஊன்றி, அம்மலையின்கீழ் நெரியும்படி செய்த சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணல்லூா் என்னும் திருத்தலமாகும். |
| **3687.** பொறிவரிய நாகமுயா் பொங்கணைய<br>ணைந்தபுக ழோனும்<br>வெறிவரிய வண்டறைய விண்டமலா்<br>மேல்விழுமி யோனும்<br>செறிவரிய தோற்றமொடு வாற்றன்மிக<br>நின்றுசிறி தேயும்<br>அறிவரிய னாயபெரு மானுறைவ<br>தவளிவண லூரே. 9<br><br>உறைவது அவளிவணலூரே என்பது பதிக மகுடம் | புள்ளிகளையுடைய நெடிய பாம்பை உயா்ந்த படுக்கையாகக் கொண்டு விளங்குகின்ற புகழ்மிக்க திருமாலும், வாசனையறிகின்ற கீற்றுகளையுடைய வண்டு ஒலித்து ஊத, அதனால் விரிந்த தாமரைமேல் வசிக்கின்ற பிரமனும், பிறா்க்கு அரிய வலிமையுடைய தோற்றத்தோடு தமது ஆற்றல் முழுவதையும் செலுத்தித் தேடியும், சிறிதளவும் அறிவதற்கு அரியவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது திருஅவளிவணல்லூா் என்னும் திருத்தலமாகும். |

3688. கழியருகு பள்ளியிட மாகவடு
மீன்கள்கவர் வாரும்
வழியருகு சாரவெயி னின்றடிசி
லுள்கிவரு வாரும்
பழியருகி னாரொழிக பான்மையொடு
நின்றுதொழு தேத்தும்
அழியருவி தோய்ந்தபெரு மானுறைவ
தவளிவண லூரே. 10

ஆற்றங்கழி அருகிலிருக்கும் சமணப்பள்ளி இடமாக நின்று, சமைத்து உண்பதற்குரிய மீன்களைக் கவரும் சமணர்களும், தெருக்களில் உச்சிவேளையில் நின்று உணவு ஏற்க வரும் புத்தர்களும் கூறும் பழிக்கு அடுத்துச் சொல்வதாகிய பாவத்தை உடையவர்கள். பக்தியால் தொழுதேத்தும் அடியவர்கள் கண்களில் இருந்து தோன்றும் அருவி போன்ற நீரில் தோய்ந்து விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருஅவளிவணல்லூர் என்னும் திருத்தலமாகும்.

3689. ஆனமொழி யானதிற லோர்பரவு
மவளிவண லூர்மேல்
போனமொழி நன்மொழி களாயபுகழ்
தோணிபுர வூரன்
ஞானமொழி மாலைபல நாடுபுகழ்
ஞானசம் பந்தன்
தேனமொழி மாலைபுகழ் வார்துயர்க
டீயதிலர் தாமே. 11

மொழியை மலராகவும், பதிகங்களை மாலையாகவும் உணர்த்தினமையால் ஞானம் மணமாகிறது.

பொருளுடைய புகழ்மொழிகளால் மெய்ஞ்ஞானிகள் துதிக்கின்ற அவளிவணல்லூர் என்னும் திருத்தலத்தைத் திசைகள் தோறும் பரவிய நன்மொழியால் புகழ்போற்றும் தோணிபுரத்தில் அவதரித்த சிவஞானங் கமழ்கின்ற திருப்பதிகங்களால் நல்ல நாடுகளெல்லாம் புகழ்கின்ற ஞானசம்பந்தன் அருளிய தேன் போன்ற இனிமையான மொழிகளால் ஆன இப்பாமாலையால் புகழ்ந்து போற்றுபவர் துயரற்றவர் ஆவர். அவர்களைத் தீமை அணுகாது.

## 83. திருநல்லூர் ( திருவிராகம் )

பண் : சாதாரி பதிக எண் : 83

3690. வண்டிரிய விண்டமலர் மல்குசடை
தாழவிடை யேறிப்
பண்டெரிகை கொண்டபர மன்பதிய
தென்பரத னயலே
நண்டிரிய நாரையிரை தேரவரை
மேலருவி முத்தம்
தெண்டிரைக்கண் மோதவிரி போதுகம
ழுந்திருந லூரே.

மாடக்கோயில். அமர்நீதிநாயனார் அவதாரத்தலம். திருநாவுக்கரசர் திருவடி தீட்சை பெற்ற தலம். சுவாமி ஒரு நாளைக்கு ஐந்து வர்ணமாகத் தோன்றுகிறார்.

வண்டு அமர விரிந்த மலர்கள் நிறைந்த சடை தொங்கச் சிவபெருமான் இடப வாகனத்திலேறி, பண்டைக் காலந்தொட்டே கையில் நெருப்பேந்தியவனாய் விளங்கும் பதியாவது, பக்கத்தில் நண்டு ஓட, நாரை தேட மலையிலிருந்து விழும் அருவி முத்துக்களை அடித்துக் கொண்டு வந்து சேர்க்க, காவிரியின் தெள்ளிய அலைகள் மோதுவதால் அரும்புகள் மலர நறுமணம் கமழும் திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

**3691.** பல்வளரு நாகமரை யார்த்துவரை
மங்கையொரு பாகம்
மல்வளர்பு யத்திலணை வித்துமகி
ழும்பரம னிடமாம்
சொல்வளரி சைக்கிளவி பாடிமட
வார்நடம தாடிச்
செல்வமறை யோர்கண்முறை யேத்தவள
ருந்திருந லூரே. 2

பிருங்கி முனிவர் பூசித்த தலம். சிவலிங்கத் திருமேனி முழுவதும் துளையிடப்பட்டுள்ளது.

நச்சுப்பல்லுடைய நாகத்தை இடுப்பிலே கச்சாகக் கட்டி, மலைமங்கையாகிய உமாதேவியைத் தன் வலிமையான தோளின் இடப்பாகத்தில் அணைத்து மகிழும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, மகளிர் பொருட்செறிவுடைய பாடல்களைப் பாடி, அவற்றிற்கேற்ப நடனமாடுவதும், வேதம் ஓதவல்ல அந்தணர்கள் நியதிப்படி போற்றி வழிபடுவதும் ஆகிய புகழ்வளரும் திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

**3692.** நீடுவரை மேருவில தாகநிகழ்
நாகமழ லம்பால்
கூடலர்கண் மூவெயிலெ ரித்தகுழ
கன்குலவு சடைமேல்
ஏடுலவு கொன்றைபுன னின்றுதிக
ழுந்நிமல னிடமாம்
சேடுலவு தாமரைக ணீடுவய
லார்திருந லூரே. 3

பெரிய மேருமலையை வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பை நாணாகவும், அக்கினியை அம்பாகவும் கொண்டு, பகைவர்களின் மும்மதில்களை எரித்த அழகனான சிவபெருமானின் சடைமேல் இதழ்களையுடைய கொன்றையும், கங்கையும் விளங்குகின்றன. இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனான அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது பெருமைமிக்க தாமரை மலர்கள் விளங்கும் வயல்வளமுடைய திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

**3693.** கருகுபுரி **மிடறர்**கரி **காடரெ**ரி
கையதனி லேந்தி
அருகுவரு கரியினுரி **யதளர்**பட
**வரவரிடம்** வினவில்
முருகுவிரி பொழிலின்மண நாறமயி
லாலமர மேறித்
திருகுசின மந்திகனி சிந்தமது
வார்திருந லூரே. 4

மிடறர் – காடர் – அதளர் – அரவர் – இறைமைத் தன்மைகள்.

சிவபெருமான் கருகிய கண்டத்தை உடையவர். சுடுகாட்டில் கையில் எரியும் நெருப்பேந்தி நடனமாடுபவர். தம்மைத் தாக்க வந்த மதம் பிடித்த யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவர். படமாடும் பாம்பை ஆபரணமாக அணிந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, சோலைகளிலுள்ள நறுமணத்தை நுகர்ந்த இன்பத்தால் மயில்களாட, அவ்வாடலுக்குப் பொழில் பரிசில் வழங்கிலதே என்று சினந்தவை போல் குரங்குகள் மரத்திலேறி, மயிலாடுதல் கண்ட இன்பத்திற்கு ஈடாகப் பரிசு கொடுப்பனபோல் கனிகளை உதிர்க்கக் கனிச்சாறு பெருகும் திருநல்லூர் எனும் திருத்தலமாம்.

**3694.** பொடிகொடிரு மார்பர்புரி நூலர்புனல்
பொங்கரவு தங்கும்
முடிகொள்சடை தாழவிடை யேறுமுத
லாளரவ ரிடமாம்
இடிகொண்முழ வோசையெழி லார்செய்**தொழி**
**லாளர்விழ மல்கச்**
**செடிகொள்வினை யகலமன மினியவர்கள்**
சேர்திருந லூரே. 5

இடிகொள் முழவோசை – விழாவில் முழவினது இன்றியமையாச் சிறப்பும் அதனை முழக்குதலில் செய்தொழில் விசேடமும் குறித்தது.
முதலாளர் – முதன்மையை ஆள்பவர்.

சிவபெருமான் திருநீறணிந்த அழகிய மார்பை உடையவர். முப்புரிநூல் அணிந்தவர். கங்கையையும், பாம்பையும் தாங்கிய தாழ்ந்த சடைமுடியுடையவர். இடப வாகனத்தில் வீற்றிருந்தருளும் முதற்பொருளானவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது இடி போன்ற முழவோசை ஒலிக்க, **தொழிலாளர்களின் கைத்திறத்தால் அழகுடன் விழாக்கள் சிறந்து விளங்க, அவ்விழாக்களைச் சேவித்தலால் துன்பம்தரும் வினைகள் அகல,** இனிய மனமுடையோர் வசிக்கின்ற திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

**3695.** புற்றரவர் நெற்றியொர்க ணொற்றைவிடை
யூர்வர**டை யாளம்**
**சுற்றமிருள் பற்றியபல் பூதமிசை**
**பாடநசை யாலே**
கற்றமறை யுற்றுணர்வர் பற்றலர்கண்
முற்றுமெயின் மாளச்
செற்றவ ரிருப்பிட நெருக்குபுன
லார்திருந லூரே. 6

அடையாளம் காண கண்ணுக்கு இருள் தடையாதலின் செவிப்புலனால் அறிந்து கொள்ளப் பூதம் பாடும் இசை துணையாகும் என்ற நயம்.

சிவபெருமான் புற்றில் வாழும் பாம்பை அணிந்தவர். நெற்றியில் ஒரு கண் உடையவர். இடப வாகனத்தில் அமர்ந்தவர். இவையே அவரது அடையாளமாகும். அத்தகையவர் அடையாளம் காணமுடியாத இருட்டில் பல **பூதங்கள் இசைபாட** நடனம் புரிபவர். விருப்பத்தோடு வேதங்களைக் கற்ற அந்தணர்களால் உணர்ந்து போற்றப்படுபவர். பகையசுரர்களின் முப்புரங்கள் எரியும்படி சினந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது நீர்வளம் நிறைந்த திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

**3696.** பொங்கரவ ரங்கமுடன் மேலணிவர்
ஞாலமிடுபிச்சை
தங்கரவ மாகவுழி தந்துமெய்து
லங்கியவெண் ணீற்றர்
கங்கையர வம்விரவு திங்கள்சடை
யடிகளிடம் வினவில்
செங்கயல்வ திக்குதிகொ ளும்புனல
தார்திருந லூரே. 7

இறைவன் சினம் பொங்கப் படமெடுத்தாடும் பாம்பை அணிந்துள்ளவர். எலும்பையும் திருமேனியில் அணிந்தவர். பிரமகபாலமேந்திப் பூமியிலுள்ளோர் இடும் பிச்சையேற்க ஆரவாரித்துத் திரிபவர். தம் திருமேனியில் திருவெண்ணீற்றைப் பூசியுள்ளவர். கங்கையையும், பாம்பையும், சந்திரனையும் சடைமுடியிலணிந்துள்ளவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது செய்கயல் மீன்கள் சேற்றில் குதிக்கும் நீர்வளமிக்க திருநல்லூர் என்னும் திருத்தலம் ஆகும்.

**3697.** ஏறுபுகழ் பெற்றதெனி லங்கையவர்
கோனையரு வரையில்
சீறியவ னுக்கருளு மெங்கள்சிவ
லோகனிட மாகும்
கூறுமடி யார்களிசை பாடி**வலம்**
**வந்தயரு மருவிச்**
சேறுகமரானவழி யத்திகழ்த
ருந்திருந லூரே. 8

வலம் வந்து அயர்தல் – வலம் வருதலால் இளைத்தல். கால்களின் வலிமை குறையும் அளவும் வலம் வரும் நிலை குறித்தது.

மிக்க புகழ் பெற்ற தென் இலங்கை மன்னனான இராவணனைக் கயிலைமலையின் கீழ் நெருக்கி அடர்த்துப் பின்னர் அவனுக்கு நீண்ட வாழ்நாளும், வெற்றிதரும் வீரவாளும் அளித்து அருள்செய்தவர் சிவலோக நாதரான சிவபெருமான் ஆவார். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, அடியார்கள் இசைபாடி வலம் வரும்பொழுது, பக்தியால் அவர்கள் கண்களிலிருந்து பெருக்கெடுக்கும் ஆனந்தக் கண்ணீர் அருவியெனப் பாய்ந்து அருகிலுள்ள நிலவெடிப்புக்களில் விழ, வெடிப்புக்கள் நீங்கி நிலம் சேறாகத் திகழும் திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

**3698.** மாலுமலர் மேலயனு நேடியறி
யாமையெரி யாய
கோலமுடை யானுணர்வு கோதில்புக
ழானிடம தாகும்
நாலுமறை யங்கமுத லாறுமெரி
மூன்றுதழ லோம்பும்
சீலமுடை யார்கணெடு மாடம்வள
ருந்திருந லூரே. 9

திருமாலும், தாமரை மலர்மேல் வீற்றிருக்கின்ற பிரமனும் தேடியும் அறியமுடியா வண்ணம் பெருஞ்சோதிவடிவாய் விளங்கியவனும், இயல்பாகவே பாசங்களின் நீங்கி முற்றுணர்வும், இயற்கையுணர்வும் உடையவனும், குற்றமற்ற புகழையுடையவனும் ஆன சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, நான்கு வேதங்களும், ஆறு அங்கங்களும், மூன்று அழலும் ஓம்புகின்ற சீலமுடைய தூய அந்தணர்கள் வாழ்கின்ற நீண்ட மாடமாளிகை களையுடைய திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

**3699.** கீறுமுடை கோவணமி லாமையிலொ
லோவியதவத்தர்
பாறுமுடன் மூடுதுவ ராடையர்கள்
வேடமவை பாரேல்
ஏறுமட வாளொடினி தேறிமுனி
ருந்தவிட மென்பர்
தேறுமன வாரமுடை யார்குடிசெ
யுந்திருந லூரே. 10

கிழித்த துணியும், கோவணமும் இல்லாமையால் ஆடை துவைக்கும் தொழில் நீங்கிய தவத்தவர்களாகிய சமணத் துறவிகளும், அழியக்கூடிய உடலைத் துவராடையில் போர்த்திக் கொள்ளும் புத்தத் துறவிகளும் கொண்ட வேடத்தை ஒரு பொருட்டாக ஏற்க வேண்டா. சிவபெருமான் உமாதேவியை உடனாகக் கொண்டு இடபத்தின் மீது இனிதேறி, தொன்றுதொட்டு வீற்றிருந்தருளும் இடமாவது, சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்ற தெளிந்த உள்ளமும், அன்பும் உடையவர்களான சிவனடியார்கள் வாழ்கின்ற திருநல்லூர் என்னும் திருத்தலமாகும்.

3700. திரைகளிரு கரையும்வரு பொன்னிநில
வுந்திருந லூர்மேல்
பரசுதரு பாணியைந லந்திகழ்செய்
தோணிபுர நாதன்
உரைசெய்தமிழ் ஞானசம்பந்தனிசை
மாலைமொழி வார்போய்
விரைசெய்மலர் தூவவிதி பேணுகதி
பேறுபெறு வாரே. 11

காவிரியின் இருகரைகளிலும் அலைகள் மோதுவதால் செழிப்புடன் விளங்கும் திருநல்லூர் என்னும் திருத்தலத்திலுள்ள மழுவேந்திய கரமுடைய சிவபெருமானை, வயல்வளமிக்க, தோணிபுரநாதனான தமிழ் ஞானசம்பந்தன் போற்றிசைத்த இப்பாமாலையை ஓதுபவர்கள், பிரமனால் நறுமணமிக்க சிறந்த மலர்கள் தூவி வழிபடப்படும் சிவபெருமானுடைய திருவடியைப் பெறும் பேற்றினை அடைவார்கள்.

## 84. திருப்புறவம் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 84

3701. பெண்ணிய லுருவினர் பெருகிய புனல்விர
வியபிறைக்
கண்ணியர் கடுநடை விடையினர் கழறொழு
மடியவர்
நண்ணிய பிணிகெட வருள்புரி பவர்நணு
குயர்பதி
புண்ணிய மறையவர் நிறைபுக ழொலிமலி
புறவமே. 1

காழியின் எட்டாவது பெயர் புறவம். இந்திரன் பருந்தாகவும் தீக்கடவுள் புறாவாகவும் யாகத்தில் பரிசோதிக்க வர சிபிச் சக்கரவர்த்தி புறாவின் எடைக்குத் தன் தசையறிந்திடவும் போதாமை கண்டு துலையேறித் தன் புகழ் நிறுத்திட அப்பாவம் போகப் புறாவாகிய தீக்கடவுள் பூசித்தமையால் வந்த பெயர்.

சிவபெருமான் உமாதேவியைத் தம் இடப்பாகமாகக் கொண்ட வடிவமுடையவர். பெருக்கெடுக்கும் கங்கை நீரோடு, பிறைச்சந்திரனையும் தலை மாலையாக அணிந்தவர். விரைந்த நடையுடைய எருதினை வாகனமாகக் கொண்டவர். தம் திருவடிகளைத் தொழுது போற்றும் அடியவர்களின் நோயைத் தீர்த்து அருள்புரிபவர். அப்பெருமான் வீற்றிருந்தருளுகின்ற உயர்ந்த பதியாவது, புண்ணியம் தரும் மறைகளை ஓதும் அந்தணர்கள் நிறைந்து இறைவனைப் புகழ்கின்ற ஒலி மிகுந்த திருப்புறவம் என்னும் திருத்தலமாகும்.

3702. கொக்குடை யிறகொடு பிறையொடு குளிர்சடை
முடியினர்
அக்குடை வடமுமொ ரரவமு மலரரை
மிசையினில்
திக்குடை மருவிய வுருவினர் திகழ்மலை
மகளொடும்
புக்குட னுறைவது புதுமலர் விரைகமழ்
புறவமே. 2

கொக்கின் இறகோடும், பிறைச்சந்திரனோடும் கூடிய குளிர்ந்த சடைமுடியுடையவர் சிவபெருமான். எலும்பு மாலை அணிந்தவர். பாம்பை அரையில் கச்சாகக் கட்டியவர். திசைகளையே ஆடையாகக் கொண்ட உருவினர். அவர் மலைமகளான உமாதேவியோடு வீற்றிருந்தருளுவது அன்றலர்ந்த மலர்களின் நறுமணம் கமழும் திருப்புறவம் என்னும் திருத்தலமாகும்.

| | |
|---|---|
| **3703.** கொங்கியல் சுரிகுழல் வரிவளை யிளமுலை யுமையொரு<br>பங்கிய திருவுரு வுடையவர் பரசுவொ டிரலைமெய்<br>தங்கிய கரதல முடையவர் விடையவ ருறைபதி<br>பொங்கிய பொருகடல் கொளவதன் மிசையுயர் புறவமே. **3** | வாசனை பொருந்திய சுரிந்த கூந்தலையும், வரிகளையுடைய வளையல்களையும், இளமை வாய்ந்த முலைகளையும் உடைய உமாதேவியைத் தம் ஒருபாகமாகக் கொண்டு அர்த்தநாரீசுவர வடிவில் விளங்குபவர் சிவபெருமான். அவர் மழுவோடு, மானையும் கரத்தில் ஏந்தியவர். இடப வாகனமுடையவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் தலமாவது ஊழிக்காலத்தில் கடல் பொங்கிக் கரையில் மோதி உலகத்தை அழிக்க, அதில் மூழ்காது அக்கடலின்மீது உயர்ந்து மிதந்த சிறப்புடைய திருப்புறவம் என்னும் திருத்தலமாகும். |
| **3704.** மாதவ முடைமறை யவனுயிர் கொளவரு மறலியை<br>மேதகு திருவடி யிறையுற வுயிரது விலகினார்<br>சாதக வுருவியல் கானிடை யுமைவெரு வுறவரு<br>போதக வுரியதண் மருவின ருறைபதி புறவமே. **4** | பெரிய தவம் செய்த மறையவனான மார்க்கண்டேயனின் உயிரைக் கவரவந்த காலனைத் தம் பெருமை பொருந்திய திருவடி சற்றே பொருந்திய மாத்திரத்தில் அவனது உயிர் விலகும்படி செய்தவரும், பூதகணங்கள் உலவும் காட்டில் உமாதேவி அஞ்சும்படியாக வந்த யானையின் தோலை உரித்துப் போர்த்தவருமான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற இடம் திருப்புறவம் என்னும் திருத்தலமாகும். |
| **3705.** காமனை யழல்கொள விழிசெய்து கருதலர் கடிமதில்<br>தூமம துறவிறல் சுடர்கொளு வியவிறை தொகுபதி<br>ஓமமொ டுயர்மறை பிறவிய வகைதனொ டொளிகெழு<br>பூமக னலரொடு புனல்கொடு வழிபடு புறவமே. **5** | சிவபெருமான் மன்மதன் எரியுமாறு நெற்றிக் கண்ணால் விழித்து நோக்கியவர். பகையசுரர்களது காவலுடைய மும்மதில்களும் புகையெழும்படி வலிய நெருப்புப் பற்றும்படி செய்தவர். அவர் வீற்றிருந்தருளும் தலமாவது, வேள்வி வளர்த்து, வேத மந்திரங்கள் ஓதி, பிற வாத்தியங்கள் ஒலிக்க, தீபமேற்றிப் பிரமன், மலரும், நீரும் கொண்டு வழிபட்ட திருப்புறவம் என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3706.** சொன்னய முடையவர் சுருதிகள் கருதிய தொழிலினர்<br>பின்னையர் நடுவுணர் பெருமையர் திருவடி பேணிட<br>முன்னைய முதல்வினை யறவரு ளினருறை முதுபதி<br>புன்னையின் முகைநிதி பொதியவிழ் பொழிலணி புறவமே. **6** | இனிய சொற்களாலமைந்த பொருள் நயமிக்க தோத்திரங்களைச் சொல்பவர்களும், வேதங்கள் கடைப்பிடிக்கும்படிக் கூறிய கர்மாக்களைச் செய்பவர்களும், வேதத்திற் பிற்பகுதியான உடநிடதங்கள் என்னும் ஞானகாண்டத்தைக் கடைப்பிடிப்பவர்களும் வேதத்தின் நடுவில் அதன் உள்ளீடாக விளங்கும் பொருள் சிவனே என்பதை உணர்ந்த பெருமையுடையவர்களும், தம் திருவடிகளைப் போற்றி வழிபட, அவர்களைத் தொன்றுதொட்டுத் தொடர்ந்துவரும் ஆணவம், கன்மம் இவை அறும்படி செய்பவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பதியானது, பொன் முடிப்புப் போன்ற புன்னையரும்பு, பொதியவிழ்வது போல மலர, அதிலிருந்து பொன் போன்ற மகரந்தம் சிந்தும் சோலைவளமுடைய அழகிய திருப்புறவம் என்னும் திருத்தலமாகும். |
| **3707.** வரிதரு புலியத ளுடையினர் மழுவெறி படையினர்<br>பிரிதரு நகுதலை வடமுடி மிசையணி பெருமையர்<br>எரிதரு முருவின ரிமையவர் தொழுவதொ ரியல்பினர்<br>புரிதரு குழலுமை யொடுமினி துறைபதி புறவமே. **7** | சிவபெருமான் வரிகளையுடைய புலியின் தோலை ஆடையாக உடுத்தவர். பகைவர்மேல் வீசும் மழுப்படையையுடையவர். யாகத்திலிருந்து பிரிந்து வந்த நகுதலையைத் திருமுடியின் மீது மாலைபோல் அணிந்து கொண்ட பெருமையுடையவர். எரிபோல் மிளிர்கின்ற சிவந்த மேனியுடையவர். தேவர்களால் தொழப்படும் தன்மையுடையவர். இத்தகைய சிவபெருமான் பின்னிய கூந்தலையுடைய உமாதேவியோடு இனிதே வீற்றிருந்தருளும் பதி திருப்புறவம் என்னும் திருத்தலமாகும். |
| **3708.** வசிதரு முருவொடு மலர்தலை யுலகினை வலிசெயும்<br>நிசிசர னுடலொடு நெடுமுடி யொருபது நெரிவுற<br>ஒசிதர வொருவிர னிறுவின ரொளிவளர் வெளிபொடி<br>பொசிதரு திருவுரு வுடையவ ருறைபதி புறவமே. **8** | வாளேந்திய கோலத்தோடு இடமகன்ற இவ்வுலகத்தைத் தன் வலிமையால் துன்புறுத்திய அரக்கனான இராவணனின் உடலோடு நெடிய தலைகள் பத்தும் நொறுங்கித் துவளும்படி தம் காற்பெருவிரலை ஊன்றியவரும், ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற வெண்ணிறத் திருவெண்ணீற்றைப் பூசிய திருவுருவமுடையவருமான சிவபெருமான் வீற்றிருந்தருளும் பதி திருப்புறவம் என்னும் திருத்தலமாகும். |

**3709.** தேனக மருவிய செறிதரு முளரிசெய்
தவிசினில்
ஊனக மருவிய புலனுகர் வுணர்வுடை
யொருவனும்
வானகம் வரையக மறிகடல் நிலனெனு
மெழுவகைப்
போனக மருவின னறிவரி யவர்பதி
புறவமே. **9**

உள்ளிடத்தில் தேன் பொருந்திய, இதழ்கள் பல செறிந்த தாமரை மலராகிய ஆசனத்தில் அமர்ந்து, சிவபெருமானின் ஆணையினால் மன்னுயிர்கட்குத் தனு, கரண, புவன, போகங்களைப் படைக்கும் பிரமனும், ஏழுவகையாக அமைந்த வானகம், மலை, கடல், நிலன் இவற்றை உணவாக உண்டவனான திருமாலும் அறிதற்கரியவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் பதியானது திருப்புறவம் என்னும் திருத்தலமாகும்.

**3710.** கோசர நுகர்பவர் கொழுகிய துவரன
துகிலினர்
பாசுர வினைதரு பளகர்கள் பழிதரு
மொழியினர்
நீசரை விடுமினி நினைவுறு நிமலர்த
முறைபதி
பூசுரர் மறைபயி னிறைபுக ழொலிமலி
புறவமே. **10**

நீரில் சஞ்சரிக்கின்ற மீன்களை உணவாகக் கொள்பவர்களும், துவர் தோய்க்கப்பட்ட ஆடையணிபவர்களாகிய புத்தர்களும் ஆரியத்தொடு செந்தமிழ்ப் பயனறியாது வெறும் பாட்டைப் பாடுதலாகிய தொழிலையுடைய குற்றமுடையவர்கள். பிறரைப் பழித்துப் புறங்கூறும் மொழிகளையுடையவர்கள் சமணர்கள். இவ்விருவகை நீசர்களை விட்டு, சிவபெருமானைத் தியானியுங்கள். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவனான அப்பெருமான் வீற்றிருந்தருளும் பதியாவது, இப்பூவுலக தேவர்கள் என்று போற்றப்படும் அந்தணர்கள் வேதங்களைப் பயின்று இறைவனைப் புகழும் ஒலிமிகுந்த திருப்புறவம் என்னும் திருத்தலமாகும்.

**3711.** போதியல் பொழிலணி புறவநன் னகருறை
புனிதனை
வேதிய ரதிபதி மிகுதலை தமிழ்கெழு
விரகினன்
ஓதிய வொருபது முரியதொ ரிசைகொள
வுரைசெயும்
நீதிய ரவரிரு நிலனிடை நிகழ்தரு
பிறவியே. **11**

மலர்களையுடைய சோலைகள் சூழ்ந்த திருப்புறவம் என்ற நல்ல நகரில் வீற்றிருந்தருளுகின்ற தூய உடம்பினனான சிவபெருமானைப் போற்றி, அந்தணர்களின் தலைவனும், மிக்க முதன்மையுடைய தமிழ்ச் சமர்த்தனுமாகிய திருஞானசம்பந்தன் அருளிய இப்பத்துப் பாடல்களையும் உரிய இசையுடன் ஓதும் முறைமை தவறாதவர்கள் இப்பெரிய நிலவுலகில் இனி நிகழ்தலாகிய பிறவி இல்லாதவர்களாவர்.

## 85. திருவீழிமிழலை ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 85

| | |
|---|---|
| 3712. மட்டொளி விரிதரு மலர்நிறை சுரிகுழன் மடவரல்<br>பட்டொளி மணியல்கு லுமையமை யுருவொரு பாகமாக்<br>கட்டொளிர் புனலொடு கடியர வுடனுறை முடிமிசை<br>விட்டொளி யுதிர்பிதிர் மதியவர் பதிவிழி மிழலையே. 1 | மலர் விரிய நறுமணம் கமழும், நெளிந்த கூந்தலையுடையவளாய், மடமைப் பண்புடைய பெண்ணானவளாய், பட்டாடையில் ஒளிமிக்க மேகலாபரணத்தை அணிந்தவளான உமாதேவியைத் தம் ஒரு பாகமாகக் கொண்ட சிவபெருமான், சடைமுடியின்கண் கட்டப்பட்டு விளங்கும் பிரகாசிக்கின்ற கங்கை நீரோடு, கடிக்கும் பாம்புசேர வசிக்கின்ற சடைமுடியில் விட்டுவிட்டுப் பிரகாசிக்கும். தேய்ந்த கலைகளையுடைய சந்திரனையும் அணிந்து வீற்றிருந்தருளும் பதி திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |
| 3713. எண்ணிற வரிவளை நெறிகுழ லெழின்மொழி யிளமுலைப்<br>பெண்ணுறு முடலினர் பெருகிய கடல்விட மிடறினர்<br>கண்ணுறு நுதலினர் கடியதொர் விடையினர் கனலினர்<br>விண்ணுறு பிறையணி சடையினர் பதிவிழி மிழலையே. 2 | சிவபெருமான், எண்ணற்ற வரிகளையுடைய வளையல்களையும், சுருண்ட கூந்தலையும் அழகிய மொழியையும், இளமுலைகளையும் உடைய உமாதேவியைத் தம் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டவர். பெருகித் தோன்றிய கடல் விடமுண்ட கண்டத்தினர். நெற்றிக் கண்ணையுடையவர். விரைந்து நடக்கும் இடபத்தை வாகனமாக உடையவர். நெருப்பேந்திய கையினர். விண்ணில் திகழும் பிறைச்சந்திரனை அணிந்த சடையினர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பதி, திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |
| 3714. மைத்தகு மதர்விழி மலைமக ளுருவொரு பாகமா<br>வைத்தவர் மதகரி யுரிவைசெய் தவர்தமை மருவினார்<br>தெத்தென விசைமுரல் சரிதையர் திகழ்தரு மரவினர்<br>வித்தக நகுதலை யுடையவ ரிடம்விழி மிழலையே. 3 | மை பூசிய அழகிய விழிகளையுடைய உமாதேவியை, சிவபெருமான் தன் உடம்பின் இடப்பாகமாக வைத்தவர். மதம் பிடித்த யானையின் தோலை உரித்தவர். தம்மை அடைந்தவர் தாளத்துடன் இசைபாடுகின்ற புகழையுடையவர். பாம்பை அணிந்தவர். அதிசயமான மண்டையோட்டைக் கொண்டவர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |

| | | |
|---|---|---|
| 3715. | செவ்வழ லெனநனி பெருகிய வுருவினர் செறிதரு<br>கவ்வழ லரவினர் கதிர்முதிர் மழுவினர் தொழுவிலா<br>முவ்வழ னிசிசரர் விறலவை யழிதர முதுமதிள்<br>வெவ்வழல் கொளநனி முனிபவர் பதிவிழி மிழலையே. 4 | சிவபெருமான் செந்நிறமான அழல்போன்ற மேனியுடையவர். நெருப்புப் போன்று விடமுடைய, கவ்வும் தன்மையுடைய பாம்பை அரையில் கச்சாக இறுக்கமாகக் கட்டியவர். சுடர் விடும் மழுப்படை உடையவர். தம்மைத் தொழாத, பகைமையுடைய, சினம் மிகுந்த மூன்று அசுரர்களின் வலிமை அழியுமாறு அவர்களின் மதில்களை எரியுண்ணும்படி மிகவும் கோபித்தவர். அத்தகைய பெருமான் வீற்றிருந்தருளும் பதியானது திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |
| 3716. | பைங்கண தொருபெரு மழலைவெ ளேற்றினர் பலியெனா<br>எங்கணு முழிதர்வ ரிமையவர் தொழுதெழு மியல்பினர்<br>அங்கண ரமரர்க ளடியிணை தொழுதெழ வாரமா<br>வெங்கண வரவின ருறைதரு பதிவிழி மிழலையே. 5 | பசிய கண்களையும், சிறு முழக்கத்தையு முடைய பெரிய வெண்ணிற இடபத்தைச் சிவபெருமான் வாகனமாகக் கொண்டவர். எல்லா இடங்களிலும் பிச்சை ஏற்றுத் திரிபவர். தேவர்களால் தொழப்படும் தன்மையர். தேவர்கள் தொழுது எழும் இயல்பினராகிய அடியவர்களாலும் தொழுது போற்றப்படுபவர். கொடிய கண்ணையுடைய பாம்பை அணிந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் பதியானது திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |
| 3717. | பொன்னன புரிதரு சடையினர் பொடியணி வடிவினர்<br>உன்னினர் வினையவை களைதலை மருவிய வொருவனார்<br>தென்னென விசைமுரல் சரிதையர் திகழ்தரு மார்பினில்<br>மின்னென மிளிர்வதொ ரரவினர் பதிவிழி மிழலையே. 6 | இறைவன் பொன் போன்று ஒளிரும் முறுக்கேறிய சடைமுடி உடையவர். திருவெண்ணீறு அணிந்த திருமேனியர். தம்மை நினைந்து போற்றும் அடியவர்களின் வினைகளை வேரோடு களைந்து அருள்புரியும் ஒப்பற்றவர். இனிய இசையுடன் போற்றப்படும் புகழையுடையவர். அழகிய திருமார்பில் மின்னலைப் போல் ஒளிரும் பாம்பணிந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் பதி, திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |
| 3718. | அக்கினொ டரவரை யணிதிக ழொளியதொ ராமைபூண்<br>டிக்குக மலிதலை கலனென விடுபலி யேகுவர்<br>கொக்கரை குழன்முழ விழவொடு மிசைவதொர் சரிதையர்<br>மிக்கவ ருறைவது விரைகமழ் பொழில்விழி மிழலையே. 7 | சிவபெருமான், அக்குப்பாசியோடு பாம்பையும் அரையில் அணிந்தவர். ஒளிரும் ஆமையோட்டை மார்பில் பூண்டவர். கரும்பின் சுவை போன்று இனிய மொழிகளைப் பேசி, தம் கையில் நீங்காது பொருந்திய மண்டையோடாகிய பாத்திரத்தில் இடப்படுகின்ற பிச்சையை ஏற்பவர். கொக்கரை, குழல், முழவு முதலான வாத்தியங்கள் இசைக்க, நிகழும் விழாக்களில் அடியார் செய்யும் சிறப்புக்களை ஏற்று மகிழும் பண்பினர். தம்மினும் மிக்கவரில்லையாக மேம்பட்ட அப்பெருமான் வீற்றிருந்தருளுவது நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |

| | | |
|---|---|---|
| 3719. | பாதமொர் விரலுற மலையடர் பலதலை<br>நெரிதரப்<br>பூதமொ டடியவர் புனைகழ றொழுதெழு<br>புகழினர்<br>ஓதமொ டொலிதிரை படுகடல் விடமுண்ட<br>மிடறினர்<br>வேதமொ டுறுதொழின் மதியவர் பதிவிழி<br>மிழலையே. 8 | தம் பாதத்திலுள்ள ஒரு விரலை ஊன்றி, கயிலை மலையின்கீழ் இராவணனின் பத்துத் தலைகளும் நெரியும்படிச் செய்தவர். பூதகணங்களும் அடியவர்களும் தம்முடைய அழகிய திருவடிகளைத் தொழுது போற்றத்தக்க புகழையுடையவர். ஆரவாரத்தோடு ஒலிக்கின்ற அலைகளை யுடைய கடலில் தோன்றிய விடத்தைத் தேக்கிய கண்டத்தர். அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் பதியாவது, வேதம் ஓதுதலுடன், தமக்குரிய ஆறு தொழில்களையும் செய்கின்ற அறிஞர்களாகிய அந்தணர்கள் வாழ்கின்ற திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |
| 3720. | நீரணி மலர்மிசை யுறைபவ னிறைகட<br>லுறுதுயில்<br>நாரண னெனவிவ ரிருவரு நறுமல<br>ரடிமுடி<br>ஓருணர் வினர்செல லுறலரு முருவினொ<br>டொளிதிகழ்<br>வீரண ருறைவது வெறிகமழ் பொழில்விழி<br>மிழலையே. 9 | நீரில் விளங்கும் தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும், நிறைந்த நீருடைய கடலில் துயிலும் திருமாலும் ஆகிய இவர்கள் இருவரும் இறைவனின் நறுமணம் கமழும் மலர் போன்ற திருவடியையும், மலரணிந்த திருமுடியையும் காண வேண்டும் என்ற ஒரே உணர்வினராய்ச் சென்றும், காணற்கு அரியவராய்ப் பேரொளியாய் ஓங்கி நின்ற வீரம் பொருந்திய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, நறுமணம் கமழும் பூக்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |
| 3721. | இச்சைய ரினிதென இடுபலி படுதலை<br>மகிழ்வதோர்<br>பிச்சையர் பெருமையை யிறைபொழு தறிவென<br>வுணர்விலர்<br>மொச்சைய வமணரு முடைபடு துகிலரு<br>மழிவதோர்<br>விச்சைய ருறைவது விரைகமழ் பொழில்விழி<br>மிழலையே. 10 | பிரமனின் மண்டையோட்டில் இடப்படுகின்ற பிச்சையை இனிதென ஏற்கும் விருப்பமுடைய சிவபெருமானின் பெருமையைச் சிறிதும் அறியும் உணர்வில்லாதவர்கள் சமணர்களும், புத்தர்களும் ஆவர். நீராடாமையால் துர்நாற்றத்தை உடைய சமணர்களும், துவைத்து உடுத்தாமையால் முடை நாற்றமுடைய ஆடையைப் போர்ப்பவர்களாகிய புத்தர்களும் அழிவதற்குக் காரணமான வித்தை செய்பவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது நறுமணம் கமழும் சோலைகளையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| 3722. உன்னிய வருமறை யொலியினை முறைமிகு பாடல்செய்<br>இன்னிசை யவருறை யெழிறிகழ் பொழில்விழி மிழலையே<br>மன்னிய புகலியுண் ஞானசம் பந்தன வண்டமிழ்<br>சொன்னவர் துயரிலர் வியனுல குறுகதி பெறுவரே. 11 | இறைவன் அருளிச்செய்ததாகக் கருதப்படும் அருமறையின் ஒலியினை முறையாக இசையோடு பாடிப் போற்றும் அந்தணர்கள் வசிக்கின்றதும், அழகிய சோலைகள் விளங்குவதுமான திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தைப் போற்றி, நிலைபெற்ற புகலியில் அவதரித்த ஞானசம்பந்தன் வண்தமிழால் அருளிய இத்திருப்பதிகத்தை ஓதுபவர்கள் இம்மையில் துயரற்றவராவர். மறுமையில் வீறுபேறடைவர். |

## 86. திருச்சேறை ( திருவிராகம் )

பண் : சாதாரி　　　　　　　　　　　　　　பதிக எண் : 86

| | |
|---|---|
| 3723. முறியுறு நிறமல்கு முகிழ்முலை மலைமகள் வெருவமுன்<br>வெறியுறு மதகரி யதள்பட வுரிசெய்த விறலினர்<br>நறியுறு மிதழியின் மலரொடு நதிமதி நகுதலை<br>செறியுறு சடைமுடி யடிகடம் வளநகர் சேறையே. 1 | சிவபெருமான், தளிர் போன்ற நிறமும், அரும்பு போன்ற முலையுடைய உமாதேவி அஞ்சுமாறு, மதம் பிடித்த யானையின் தோலை உரித்த வலிமையுடையவர். நறுமணம் கமழும் இதழ்களை உடைய கொன்றைப் பூவோடு, கங்கை நதியையும், பிறைச்சந்திரனையும், மண்டையோட்டையும் நெருங்கிய சடைமுடியில் அணிந்துள்ள அவ்வடிகள் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| 3724. புனமுடை நறுமலர் பலகொடு தொழுவதொர் புரிவினர்<br>மனமுடை யடியவர் படுதுயர் களைவதொர் வாய்மையர்<br>இனமுடை மணியினொ டரசிலை யொளிபெற மிளிர்வதோர்<br>சினமுதிர் விடையுடை யடிகடம் வளநகர் சேறையே. 2 | வனங்களிலுள்ள பல நறுமலர்களைப் பறித்துத் தூவித் தொழுகின்ற அடியவர்கட்கும், மன உறுதிப்பாட்டுடன் அன்பால் உருகித் தியானம் செய்யும் அடியவர்கட்கும் துயர் களைந்து அருள்புரியும் நியமமுடைய சிவபெருமான் கழுத்தில் கட்டப்படும் மணியும், அரசிலை போன்ற அணியும் ஒளிர, மிக்க கோபமுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டவராய் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| 3725. புரிதரு சடையினர் புலியத ளரையினர் பொடிபுல்கும்<br>எரிதரு முருவின ரிடபம தேறுவ ரீடுலா<br>வரிதரு வளையின ரவரவர் மகிழ்தர மனைதொறும்<br>திரிதரு சரிதைய ருறைதரு வளநகர் சேறையே. 3 | சிவபெருமான் முறுக்குண்ட சடைமுடி உடையவர். புலியின் தோலை அரையில் கட்டியவர். நீறுபூத்த நெருப்புப் போன்ற சிவந்த திருமேனியில் வெண்ணிறத் திருநீற்றைப் பூசி விளங்கும் உருவினர். இடப வாகனத்தில் ஏறுபவர். சரிந்த வரிகளையுடைய வளையல்களை அணிந்த, பெருமையுடைய மகளிர் மகிழும்படி வீடுகள்தோறும் திரிந்து பிச்சையேற்கும் இயல்புடையவர். அத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3726.** துடிபடு மிடையுடை மடவர லுடனொரு<br>பாகமா<br>இடிபடு குரலுடை விடையினர் படமுடை<br>யரவினர்<br>பொடிபடு முருவினர் புலியுரி பொலிதரு<br>மரையினர்<br>செடிபடு சடைமுடி யடிகடம் வளநகர்<br>சேறையே. 4 | உடுக்கை போன்று குறுகிய இடையுடைய உமாதேவியைச் சிவபெருமான் தன் ஒரு பாகமாகக் கொண்டவர். இடிமுழக்கம் போன்ற குரலுடைய இடபத்தை வாகனமாகக் கொண்டவர். படமெடுத்தாடும் பாம்பை அணிந்தவர். திருவெண்ணீறு அணிந்த உருவினர். இடையில் புலித்தோலாடை அணிந்தவர். செடிபோன்று அடர்த்தியான சடைமுடி உடையவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| **3727.** அந்தர முழிதரு திரிபுர மொருநொடி<br>யளவினில்<br>மந்தர வரிசிலை யதனிடை யரவரி<br>வாளியால்<br>வெந்தழி தரவெய்த விடலையர் விடமணி<br>மிடறினர்<br>செந்தழ னிறமுடை யடிகடம் வளநகர்<br>சேறையே. 5 | சிவபெருமான், ஆகாயத்தில் சுற்றித் திரிந்த திரிபுரங்களை ஒரு நொடிப்பொழுதில் அழித்தவர். மேரு மலையை வில்லாகவும், அதனிடை வாசுகி என்னும் பாம்பை நாணாகவும் பூட்டி, திருமால், வாயு, அக்கினி இவற்றை அம்பாகவும் கொண்டு எய்து வெந்தழியுமாறு செய்த வீரமிக்க வாலிபர். தேக்கிய விடம் மணி போன்று விளங்கும் கண்டத்தர். செந்தழல் போன்ற மேனியுடைய அவர் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| **3728.** மத்தர முறுதிறன் மறவர்தம் வடிவுகொ<br>டுருவுடைப்<br>பத்தொரு பெயருடை விசயனை யசைவுசெய்<br>பரிசினால்<br>அத்திர மருளுந மடிகள தணிகிளர்<br>மணியணி<br>சித்திர வளநகர் செறிபொழி றமுவிய<br>சேறையே. 6 | மந்தர மலை போன்ற வலிமையுடைய வேட்டுவ வடிவம் தாங்கி வந்து, பத்துப் பெயர்களைச் சிறப்பாகக் கொண்ட விசயனைப் பொருது தளரச்செய்து, அவன் கௌரவர்களைத் தோல்வியடையச் செய்யும் வண்ணம் பாசுபதம் என்னும் அம்பைக் கொடுத்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளுவது இரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட அழகிய வளநகராய், அடர்ந்த சோலைகள் சூழப்பெற்ற திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| **3729.** பாடின ரருமறை முறைமுறை பொருளென<br>வருநடம்<br>ஆடின ருலகிடை யலர்கொடு மடியவர்<br>துதிசெய<br>வாடினர் படுதலை யிடுபலி யதுகொடு<br>மகிழ்தரும்<br>சேடர்தம் வளநகர் செறிபொழி றமுவிய<br>சேறையே. 7 | இறைவன் முறைப்படி வரிசையாக அரிய வேதங்களைப் பாடியருளியவர். ஐந்தொழில்களை ஆற்றும் திருநடனம் செய்பவர். உலகில் அடியவர்கள் மலரும், பூசைக்குரிய பிற பொருள்களும் கொண்டு போற்றித் துதிக்க அருள்செய்பவர். வாட்டமுற்ற பிரமனின் வறண்ட மண்டையோட்டில் பிச்சையேற்று மகிழ்பவர். அப்பெருமான் பெருமையுடன் வீற்றிருந்தருளும் வளநகர், அடர்ந்த சோலைகள் விளங்கும் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3730.** கட்டுர மதுகொடு கயிலைநன் மலைமலி<br>கரமுடை<br>நிட்டுர னுடலொடு நெடுமுடி யொருபது<br>நெரிசெய்தார்<br>மட்டுர மலரடி யடியவர் தொழுதெழ<br>வருள்செயும்<br>சிட்டர்தம் வளநகர் செறிபொழி றழுவிய<br>சேறையே. 8 | தனது உறுதியான உடல்வலிமை கொண்டு கயிலைமலையைத் தன் மிகுதியான கரங்களால் பெயர்த்தெடுக்க முயன்ற கொடியவனான இராவணனின் உடலும், பெரிய தலைகள் பத்தும் நெரித்தவர் சிவபெருமான். அவருடைய நறுமணம் கமழும் மலர் போன்ற திருவடிகளை அடியவர்கள் தொழுது போற்ற அருள் செய்யும் நல்லியல்புடையவர். அவர் வீற்றிருந்தருளும் வளநகர் அடர்ந்த சோலைகள் சூழ்ந்த திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| **3731.** பன்றியர் பறவையர் பரிசுடை வடிவொடு<br>படர்தர<br>அன்றிய வவரவ ரடியொடு முடியவை<br>யறிகிலார்<br>நின்றிரு புடைபட நெடுவெரி நடுவெயொர்<br>நிகழ்தரச்<br>சென்றுயர் வெளிபட வருளிய வவர்நகர்<br>சேறையே. 9 | திருமால் பன்றி உருவெடுத்தும், பிரமன் அன்னப்பறவை உருவெடுத்தும் இறைவனைக் காணமுயல, அவ்விருவரும் தன் அடியையும், முடியையும் அறியாவண்ணம் அவர்கள் நடுவே நெடிய நெருப்புப் பிழம்பாய்த் தோன்றுமாறு, ஓங்கி, தன் மேலாந்தன்மை வெளிப்பட அருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் நகர் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| **3732.** துகடுறு விரிதுகி லுடையவ ரமணெனும்<br>வடிவினர்<br>விகடம துறுசிறு மொழியவை நலமில<br>வினவிடல்<br>முகிடரு மிளமதி யரவொடு மழகுற<br>முதுநதி<br>திகடரு சடைமுடி யடிகடம் வளநகர்<br>சேறையே. 10 | அழுக்கு மிகுந்த ஆடையை உடுத்திக் கொள்ளும் புத்தர்களும், தோற்றத்தாலேயே இவர்கள் அமணர்கள் என்று கண்டு கொள்ளத்தக்க வடிவுடைய சமணர்களும், குறும்புத்தனமாகக் கூறும் அற்ப மொழிகள் நன்மை பயக்காதவை. எனவே அவற்றைக் கேளற்க. அரும்பையொத்த இளம்பிறைச் சந்திரனையும், பாம்பையும் கங்கையையும் அழகுற அணிந்த சடைமுடியுடைய அடிகளான சிவபெருமான் வீற்றிருந்தருளும் வளநகர் திருச்சேறை என்னும் திருத்தலமாகும். |
| **3733.** கற்றநன் மறைபயி லடியவ ரடிதொழு<br>கவினுறு<br>சிற்றிடை யவளொடு மிடமென வுறைவதொர்<br>சேறைமேல்<br>குற்றமில் புகலியு ளிகலறு ஞானசம்<br>பந்தன<br>சொற்றக வுறமொழி பவரழி விலர்துயர்<br>தீருமே. 11 | நன்மை தரும் வேதங்களை ஐயந்திரிபறக் கற்று ஓதும் அடியவர்கள், தன்னுடைய திருவடிகளைத் தொழ, அழகிய குறுகிய இடையுடைய உமாதேவியோடு, சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருச்சேறை என்னும் திருத்தலத்தைப் போற்றிக் குற்றமற்ற புகலியில் அவதரித்த, **எவரோடும் பகைமையில்லாத ஞானசம்பந்தன்** அருளிய இத்திருப் பதிகத்தை முறையோடு ஓதுபவர்கள் அழிவற்றவர்கள். அவர்களின் துன்பங்கள் யாவும் நீங்கும். |

## 87. திருநள்ளாறு

பண் : சாதாரி

பதிக எண் : 87

| | |
|---|---|
| **3734.** தளரிள வளரொளி தனதெழி<br>றருதிகழ் மலைமகள்<br>குளிரிள வளரொளி வனமுலை<br>யிணையவை குலவலின்<br>நளிரிள வளரொளி மருவுநள்<br>ளாறர்தந் நாமமே<br>மிளிரிள வளரெரி யிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. 1 | இளந்தளிர் நாளுக்கு நாள் வளர்ந்து பசுமை அடைதல் போல, வளரும் அருளின் எழில் திகழும் உமாதேவியின், குளிர்ந்த, வளரும் இள ஒளிவீசும் அழகிய முலையை மகிழ்ந்து தழுவப் பெறுதலால், குளிர்ந்த வளரொளி போன்று நள்ளாறர்தம் புகழ்கூறும், 'போகமார்த்த பூண் முலையாள்' என்று தொடங்கும் (தி.1 ப. 49 பா. 1) திருப்பதிகம் எழுதப்பெற்ற ஓலையை, அவர் திருமேனிபோல் பிரகாசிக்கின்ற நெருப்பிலிட்டால் அவை பழுது இல்லாதனவாம் என்பது சத்தியமே. |
| **3735.** போதமர் தருபுரி குழலெழின்<br>மலைமகள் பூணணி<br>சீதம தணிதரு முகிழிள<br>வனமுலை செறிதலின்<br>நாதம தெழிலுரு வனையநள்<br>ளாறர்தந் நாமமே<br>மீதம தெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. 2 | மலர் கொண்டு புனைந்து அலங்கரிக்கப்பட்ட கூந்தலை உடைய அழகிய மலைமகளான உமாதேவியின் ஆபரணம் அணிந்து, குளிர்ச்சி தரும் சந்தனத்தை அணிந்த, அரும்பொத்த இளைய அழகிய முலைகளைத் தழுவுகின்றவரும், நாத தத்துவம் அழகிய உருவாகக் கொண்டவருமான திருநள்ளாறு இறைவரின் புகழ் கூறும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை மேலான அவருருவான நெருப்பிலிட்டால் அவை பழுதில்லாதனவாம் என்பது சத்தியமே. |
| **3736.** இட்டுறு மணியணி யிணர்புணர்<br>வளரொளி யெழில்வடம்<br>கட்டுறு கதிரிள வனமுலை<br>யிணையொடு கலவலின்<br>நட்டுறு செறிவயன் மருவுநள்<br>ளாறர்தந் நாமமே<br>இட்டுறு மெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. 3 | பூங்கொத்துக்களைப் போன்று, இரத்தினங்கள் வரிசையாகக் கோக்கப்பட்ட மாலையணிந்த உமாதேவியின், ஒளிவீசும் இளைய அழகிய முலைகளைத் தழுவும், கதிர்கள் நெருக்கமாக வளர்ந்துள்ள வயல்வளமிக்க திருநள்ளாற்று இறைவனின் புகழ் உரைக்கும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை அனல் வாதத்திற்கென வளர்க்கப்பட்ட நெருப்பிலிட்டால் அவை பழுதில்லாதனவாம் என்பது சத்தியமே. |
| **3737.** மைச்சணி வரியரி நயனிதொன்<br>மலைமகள் பயனுறு<br>கச்சணி கதிரிள வனமுலை<br>யவையொடு கலவலின்<br>நச்சணி மிடறுடை யடிகணள்<br>ளாறர்தந் நாமமே<br>மெச்சணி யெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. 4 | மை பூசப்பெற்ற ஒழுங்கான செவ்வரி படர்ந்த அழகிய கண்களையுடைய தொன்மையாய் விளங்கும் உமாதேவியாரின் பரஞானம், அபரஞானம் ஆகிய பயன்தரும் கச்சணிந்த ஒளிரும் இளைய அழகிய முலையைத் தழுவும் நஞ்சணி கண்டத்தினனான திருநள்ளாற்று இறைவனைப் போற்றும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை அழகிய நெருப்பிலிட்டால் அவை பழுதில்லாதனவாம் என்பது சத்தியமே. |

| | | | |
|---|---|---|---|
| 3738. | பண்ணியன் மலைமகள் கதிர்விடு<br>பருமணி யணிநிறக்<br>கண்ணியல் கலசம தனமுலை<br>யிணையொடு கலவலின்<br>நண்ணிய குளிர்புனல் புகுதுநள்<br>ளாறர்தந் நாமமே<br>விண்ணிய லெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. | 5 | பண்பாடமைந்த மலைமகளின் ஒளிவீசுகின்ற இரத்தினங்கள் பதித்த ஆபரணத்தை அணிந்த, அழகான கலசம் போன்ற இருமுலைகளையும் கூடும், குளிர்ச்சி பொருந்திய நீர் பாயும் திருநள்ளாற்று இறைவனின் நாமத்தைப் போற்றும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை ஆகாயமளாவிய இந்நெருப்பில் இட்டாலும் அவை பழுதில்லாதனவாகும் என்பது சத்தியமே. |
| 3739. | போதுறு புரிகுழன் மலைமக<br>ளிளவளர் பொன்னணி<br>சூதுறு தளிர்நிற வனமுலை<br>யவையொடு துதைதலின்<br>தாதுறு நிறமுடை யடிகணள்<br>ளாறர்தந் நாமமே<br>மீதுறு மெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. | 6 | மலர்களணிந்த பின்னிய கூந்தலையுடைய மலைமகளான உமாதேவியாரின் பொன்னாபரணம் அணிந்த, சூதாடும் வட்டை ஒத்த, தளிர்போன்ற நிறமுடைய அழகிய முலைகளோடு நெருங்கியிருத்தலால், பொன்போலும் நிறம் பெற்ற அடிகளாகிய நள்ளாற்று இறைவனின் திருநாமத்தைப் போற்றும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை மேல்நோக்கி எரியும் இயல்புடைய இந்நெருப்பிலிட்டாலும் அவை பழுதில்லாதனவாகும் என்பது, சத்தியமே. |
| 3740. | கார்மலி நெறிபுரி சுரிகுழன்<br>மலைமகள் கவினுறு<br>சீர்மலி தருமணி யணிமுலை<br>திகழ்வொடு செறிதலின்<br>தார்மலி நகுதலை யுடையநள்<br>ளாறர்தந் நாமமே<br>ஏர்மலி யெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. | 7 | அடர்த்தியான, பின்னப்பட்ட, சுருண்ட கார்மேகம் போன்ற கருநிறமான கூந்தலையுடைய மலைமகளான உமாதேவியின் அழகிய, சிறந்த மணிகள் பதிக்கப்பட்ட ஆபரணம் அணிந்த முலைகளோடு நெருங்கியிருக்கும், மண்டையோட்டை மாலையாக அணிந்துள்ள திருநள்ளாற்று இறைவனின் திருநாமத்தைப் போற்றும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை எழுச்சியுடன் எரியும் இந்நெருப்பிலிட்டால் அவை பழுதில்லாதனவாகும் என்பது சத்தியமே. |
| 3741. | மன்னிய வளரொளி மலைமகள்<br>தளிர்நிற மதமிகு<br>பொன்னியன் மணியணி கலசம<br>தனமுலை புணர்தலின்<br>தன்னியல் தசமுக னெரியநள்<br>ளாறர்தந் நாமமே<br>மின்னிய லெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. | 8 | நிலைபெற்று வளரும் ஞானவொளி பிரகாசிக்கும் மலைமகளான உமாதேவியின் தளிர்நிறத்தனவாய் மான்மதமாகிய கத்தூரியை அணியப்பெற்றனவாய், இரத்தினங்கள் பதிக்கப்பட்ட பொன்னாலான ஆபரணத்தை அணிந்துள்ளனவாய், கலசத்தை ஒத்தனவாய் விளங்கும் இருமுலைகளைப் புணர்கின்றவரும், ஆணவமே இயல்பாக உடைய இராவணனைக் கயிலையின் கீழ் நெரியும்படி செய்தவருமான திருநள்ளாற்று இறைவரின் திருநாமத்தைப் போற்றும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை, மின்னலைப் போன்ற எரியும் இந்நெருப்பிலிட்டாலும் அவை பழுதில்லாதனவாகும் என்பது சத்தியமே. |

| | |
|---|---|
| **3742.** கான்முக மயிலியன் மலைமகள்<br>கதிர்விடு கனமிகு<br>பான்முக மியல்பணை யிணைமுலை<br>துணையொடு பயிறலின்<br>நான்முக னரியறி வரியநள்<br>ளாறர் தந் நாமமே<br>மேன்முக வெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. **9** | காட்டில் விளங்கும் மயில் போன்ற சாயலையுடைய உமாதேவியின், ஒளிவிடுகின்ற கனத்த பால்சுரக்கும் பருத்த இருமுலைகளைக் கூடுகின்றவரும், பிரமனும், திருமாலும் அறிவதற்கு அரியவராக விளங்குகின்ற வருமான திருநள்ளாற்று இறைவரின் திருநாமத்தைப் போற்றும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை மேல்நோக்கி எரியும் இந்நெருப்பிலிட்டாலும் அவை பழுதில்லாதனவாகும் என்பது சத்தியமே. |
| **3743.** அத்திர நயனிதொன் மலைமகள்<br>பயனுறு மதிசயச்<br>சித்திர மணியணி திகழ்முலை<br>யிணையொடு செறிதலின்<br>புத்தரொ டமணர்பொய் பெயருநள்<br>ளாறர்தந் நாமமே<br>மெய்த்திர ளெரியினி லிடிலிவை<br>பழுதிலை மெய்ம்மையே. **10** | அம்பு போன்ற கூர்மையான கண்களையுடைய தொன்மையான மலைமகளான உமாதேவியின் பயன்தரும் அதிசயம் விளைவிக்கும், பலவகையான இரத்தினங்கள் பதிக்கப்பட்ட ஆபரணங்கள் அணியப் பெற்றுள்ள இருமுலைகளோடு நெருங்கியிருப்பவரும், புத்தர்களாலும், சமணர்களாலும் உணரப்படாதவரும் பொய்யினின்று நீங்கியவருமான திருநள்ளாற்று இறைவரின் திருநாமத்தைப் போற்றும் திருப்பதிகம் எழுதப்பட்ட ஏடுகளை, திரண்டு எரியும் இந்நெருப்பில் இட்டாலும் அவை பழுதில்லாதன வாகும் என்பது சத்தியமே. |
| **3744.** சிற்றிடை யரிவைதன் வனமுலை<br>யிணையொடு செறிதரும்<br>நற்றிற முறுகழு மலநகர்<br>ஞானசம் பந்தன<br>கொற்றவ னெதிரிடை யெரியினி<br>லிடவிவை கூறிய<br>சொற்றெரி யொருபது மறிபவர்<br>துயரிலர் தூயரே. **11** | சிறிய இடையினையுடைய உமாதேவியின் அழகிய முலைகளோடு நெருங்கியிருக்கும் திருநள்ளாற்று இறைவனைப் போற்றும் திருப்பதிகம் எழுதிய ஏடுகளை, நன்மைதரும் கழுமலநகரில் அவதரித்த திருஞானசம்பந்தன், பாண்டிய மன்னனின் எதிரில், நெருப்பின் நடுவில் இடுகின்றபோது கூறிய, இத்திருப்பதிகத்தை ஓதும் அன்பர்கள் துயரற்றவர்கள் ஆவர். மும்மலங்களினின்றும் நீங்கித் தூயராய் விளங்குவர். |

## 88. திருவிளமர் ( திருவிராகம் )

பண் : சாதாரி

பதிக எண் : 88

3745. மத்தக மணிபெற மலர்வதொர் மதிபுரை
நுதல்கரம்
ஒத்தக நகமணி மிளிர்வதொ ரரவின
ரொளிகிளர்
அத்தக வடிதொழ வருள்பெறு கண்ணொடு
முமையவள்
வித்தக ருறைவது விரிபொழில் வளநகர்
விளமரே. 1

சிவபெருமான், தலையில் அழகுற விளங்கும் பிறைச்சந்திரனை ஒத்த நெற்றியுடையவர். கரத்தில் விளங்கும் நகங்களைப் போலத் தலையிலுள்ள இரத்தினங்கள் பிரகாசிக்கும் ஐந்தலைப் பாம்பைக் கங்கணமாகக் கட்டியவர். இத்தகைய சிவபெருமானின் திருவடிகளைத் தொழுது யாம் உய்யும்பொருட்டு, அருள்பெருகும் கண்களையுடைய உமாதேவியோடு வித்தகராகிய அப்பெருமான் வீற்றிருந்தருளுவது விரிந்த சோலைகள் சூழ்ந்த வளமை வாய்ந்த திருவிளமர் என்னும் திருத்தலமாகும்.

பதஞ்சலி பூசித்த தலம்

3746. பட்டில கியமுலை யரிவைய ருலகினி
லிடுபலி
ஒட்டில கிணைமர வடியின ருமையுறு
வடிவினர்
சிட்டில கழகிய பொடியினர் விடைமிசை
சேர்வதோர்
விட்டில கழகொளி பெயரவ ருறைவது
விளமரே. 2

சிவபெருமான், உலகில் பட்டாடையால் மூடப்பட்ட முலைகளையுடைய பெண்கள் இடுகின்ற பலிகளை ஏற்க, இசைத்துச் செல்கின்ற மரப்பாதுகைகளை அணிந்த திருவடிகளை உடையவர். உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட கோலத்தர். தூய்மையையும், ஞானத்தையும் உணர்த்தும் திருவெண்ணீற்றினைப் பூசியுள்ளவர். இடப வாகனத்தில் வீற்றிருப்பவர். சொல்லொணாப் பேரழகிய தோற்றப் பொலிவுடன் நடக்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளுவது திருவிளமர் என்னும் திருத்தலமாகும்.

3747. அங்கதி ரொளியின ரரையிடை மிளிர்வதொ
ரரவொடு
செங்கதி ரெனநிற மனையதொர் செழுமணி
மார்பினர்
சங்கதிர் பறைகுழன் முழவினொ டிசைதரு
சரிதையர்
வெங்கதி ருறுமழு வுடையவ ரிடமெனில்
விளமரே. 3

சிவபெருமான் அழகிய ஒளிவீசும் தோற்றப் பொலிவுடையவர். இடையிலே பாம்பைக் கச்சாகக் கட்டியவர். செந்நிற கதிர் போன்ற நிறமுடையவர். அக்கதிர்போல் ஒளிவீசும் இரத்தினங்கள் பதிக்கப்பட்ட ஆபணரங்களை அணிந்துள்ள மார்பினர். சங்குகள் ஒலிக்க, பறை, குழல், முழவு போன்ற வாத்தியங்கள் இசைக்கத் திருக்கூத்து ஆடுபவர். வெண்ணிற ஒளிவீசும் மழுப்படையை உடையவர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவிளமர் என்னும் திருத்தலமாகும்.

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **3748.** மாடம தெனவளர் மதிலவை யெரிசெய்வர்<br>விரவுசீர்ப்<br>பீடென வருமறை யுரைசெய்வர் பெரியபல்<br>சரிதைகள்<br>பாடல ராடிய சுடலையி லிடமுற<br>நடநவில்<br>வேடம துடையவர் வியனக ரதுசொலில்<br>விளமரே. 4 | மாடம் போன்று உயர்ந்து விளங்கிய, தேவர்கட்குத் தீமை செய்த பகையசுரர்களின் மும்மதில்களைச் சிவபெருமான் எரித்தவர். தமது புகழ் பாடுவதையே பொருளாகக் கொண்ட வேதங்களை அருளிச் செய்தவர். தமது வரலாறுகள் அடியவர்களால் பாடலாகப் பாடப்படும் பெருமையுடையவர். சுடுகாட்டை அரங்கமாகக் கொண்டு திருநடனம் செய்யும் கோலத்தர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பெருமை மிக்க நகரானது திருவிளமர் என்னும் திருத்தலமாகும். |
| **3749.** பண்டலை மழலைசெ யாழென மொழியுமை<br>பாகமாக்<br>கொண்டலை குரைகழ லடிதொழு மவர்வினை<br>குறுகிலர்<br>விண்டலை யமரர்கள் துதிசெய வருள்புரி<br>விறலினர்<br>வெண்டலை பலிகொளும் விமலர்தம் வளநகர்<br>விளமரே. 5 | பண்ணின் இசையை ஒலிக்கும் யாழ்போன்ற இனியமொழி பேசும் உமாதேவியைத் தம் திருமேனியின் ஒரு பாகமாகக் கொண்டவர் சிவபெருமான். அவருடைய, அசைகின்ற ஒலிக்கும் வீரக்கழல்களை அணிந்துள்ள திருவடிகளைத் தொழும் அடியவர்களை வினை சாராது. விண்ணுலகிலுள்ள தேவர்கள் தொழுது போற்ற அருள்செய்யும் பெருங்கருணையாளர் பிரமனுடைய மண்டையோட்டில் பிச்சையேற்றுத் திரிபவரும் இயல்பாகவே பாசங்களின் நீங்கியவருமான அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் வளம் மிகுந்த நகர் திருவிளமர் என்னும் திருத்தலமாகும். |
| **3750.** மனைகடொ றிடுபலி யதுகொள்வர் மதிபொதி<br>சடையினர்<br>கனைகட லடுவிட மமுதுசெய் கறையணி<br>மிடறினர்<br>முனைகெட வருமதி ளெரிசெய்த வவர்கழல்<br>பரவுவார்<br>வினைகெட வருள்புரி தொழிலினர் செழுநகர்<br>விளமரே. 6 | சிவபெருமான் தாருகவனத்தில் மனைகள்தொறும் சென்று பிச்சை ஏற்றவர். சந்திரனைத் தரித்த சடையுடையவர். ஒலிக்கின்ற கடலில் தோன்றி உயிர்களைக் கொல்ல வந்த விடத்தை அமுதமாக உண்டு கறை படிந்த அழகிய கண்டத்தர். போர் முனைப்பு உடன் எழுந்த பகையசுரர்களின் மும்மதில்களை எரித்தவர். தம் திருவடிகளை வணங்குபவர்களின் வினைகெடும்படி அருள்புரியும் தொழிலுடையவர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் செழிப்பான நகர் திருவிளமர் என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3751.** நெறிகமழ் தருமுரை யுணர்வினர் புணர்வுறு மடவரல்<br>செறிகமழ் தருமுரு வுடையவர் படைபல பயில்பவர்<br>பொறிகமழ் தருபட வரவினர் விரவிய சடைமிசை<br>வெறிகமழ் தருமல ரடைபவ ரிடமெனில் விளமரே. 7 | சிவபெருமான் சரியை முதலிய நான்கு நெறிகளாலும், ஆகமங்களாலும் மன்னுயிர்கட்கு மெய்யுணர்வு நல்கியவர். தம்மின் வேறாகாத ஞானமே வடிவான உமாதேவியை இடப்பாகமாகப் பொருந்தி விளங்கும் உருவுடையவர். திருக்கரங்களில் படைகள் பல ஏந்தியவர். புள்ளிகளையுடைய படமெடுத்தாடும் பாம்பை அணிந்தவர். கங்கை, பிறைச்சந்திரன், பாம்பு இவை கலந்த சடைமுடியின் மீது அடியவர்கள் புனையும் நறுமணமலர்கள் அடையப் பெற்றவர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருவிளமர் என்னும் திருத்தலமாகும். |
| **3752.** தெண்கடல் புடையணி நெடுமதி லிலங்கையர் தலைவனைப்<br>பண்பட வரைதனி லடர்செய்த பைங்கழல் வடிவினர்<br>திண்கட லடைபுனல் திகழ்சடை புகுவதொர் சேர்வினார்<br>விண்கடல் விடமலி யடிகள்தம் வளநகர் விளமரே. 8 | தெளிவான நீரையுடைய கடல்சூழ்ந்த, அழகிய நீண்ட மதில்களையுடைய இலங்கை அரசனான இராவணன் பண்படையும்படி, கயிலைமலையின் கீழ் அடர்த்த கழலணிந்த திருவடிகளை யுடையவர் சிவபெருமான். கடலையடையும் கங்கையை, சடையில் தாங்கியவர். விண்ணுலகிலுள்ள பரந்த பாற்கடலில் தோன்றிய விடத்தைத் தேக்கிய கண்டத்தர். இத்தகைய தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் வளமை பொருந்திய நகர் திருவிளமர் என்னும் திருத்தலமாகும். |
| **3753.** தொண்டசை யுறவரு துயருறு காலனை மாள்வுற<br>அண்டல்செய் திருவரை வெருவுற வாரழ லாயினார்<br>கொண்டல்செய் தருதிரு மிடறின ரிடமெனி லளியினம்<br>விண்டிசை யுறுமலர் நறுமது விரிபொழில் விளமரே. 9 | **சிவனுக்கு அடிமை பூணும் திருத்தொண்டின் நிலைஅழியும்படி,** மார்க்கண்டேயருக்குத் துன்பம் செய்ய வந்த காலனை மாளும்படி செய்து, பின்னர்தம் ஆணையின்படி ஒழுகுமாறு செய்தவர் சிவபெருமான். பிரமன், திருமால் என்னும் இருவரையும் அஞ்சுவிக்கக் காண்டற்கரிய அழல் வடிவானவர். மேகம் போன்ற கரிய கண்டத்தை உடையவர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், வண்டினங்கள் விரிந்த மலர்களைக் கிண்டி நல்ல தேனை ஒலியுடன் பருகும் சோலைகளை உடைய திருவிளமர் என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3754.** ஒள்ளியர் தொழுதெழ வுலகினி லுரைசெயு<br>மொழிபல<br>கொள்ளிய களவினர் குண்டிகை யவர்தவ<br>மறிகிலார்<br>பள்ளியை மெய்யெனக் கருதன்மின் பரிவொடு<br>பேணுவீர்<br>வெள்ளிய பிறையணி சடையினர் வளநகர்<br>விளமரே. 10 | உலகத்து அறிவுடையார்களால் வணங்கி ஏத்துதற்குரிய மதங்கள் பல உண்டு. வடமொழி, தமிழ் முதலிய பல மொழிகளிலுமுள்ள உயர்ந்த பொருள்களைக் களவுசெய்து தம்மதாகக் காட்டும் திருட்டுத்தனமிக்கவரும், தவம் அறிகிலாதவருமான சமண, புத்தர்தம் பள்ளியினர் கூறும் நெறிகளை மெய்யென்று கருதற்க. வெண்ணிறப் பிறைச்சந்திரனை அணிந்த சடையையுடைய, வளம் மிகுந்த நகரான திருவிளமர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானை அன்போடு போற்றி வழிபடுங்கள். |
| **3755.** வெந்தவெண் பொடியணி யடிகளை விளமருள்<br>விகிர்தரைச்<br>சிந்தையு ளிடைபெற வுரைசெய்த தமிழிவை<br>செழுவிய<br>அந்தணர் புகலியு ளழகம ரருமறை<br>ஞானசம்<br>பந்தன மொழியிவை யுரைசெயு மவர்வினை<br>பறையுமே. 11 | பசுவின் சாணம் வெந்ததாலான திருவெண் நீற்றினை அணிந்த தலைவரை, திருவிளமர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் வேறுபட்டவரை (விகிர்தர்), சிந்தையுள் இடையறாது இருத்தும்படி, அந்தணர்கள் வாழ்கின்ற செழுமையான திருப்புகலியில் அவதரித்த அருமறைவல்ல ஞானசம்பந்தர் போற்றி அருளிச் செய்த தமிழாகிய இத்திருப்பதிகத்தை ஓதுவோர் வினை அழியும். |

## 89. திருக்கொச்சைவயம்

பண் : சாதாரி

பதிக எண் : 89

**3756.** திருந்துமா களிற்றிள மருப்பொடு
திரண்மணிச் சந்தமுந்திக்
குருந்துமா குரவமுங் குடசமும்
பீலியுஞ் சுமந்துகொண்டு
நிரந்துமா வயல்புகு நீடுகோட்
டாறுசூழ் கொச்சைமேவிப்
பொருந்தினார் திருந்தடி போற்றிவாழ்
நெஞ்சமே புகலதாமே.

கொச்சை – துர்நாற்றம்; வயம் – போக்குதல் குறித்த வெற்றி. பராசரர் ஆற்றிடையில் குறிப்பிட்ட காரணத்துக்காக மச்சகந்தியை புணர்ந்ததனால் உண்டாகிய கெட்ட நாற்றமும், பழியும், இகழ்வும் நீங்கும்படி பூசித்து வரம்பெற்றதால் கொச்சைவயம். சீகாழியின் 11 ஆவது பெயர்.

நெஞ்சமே! அழகான இளயானைத் தந்தங்களோடு, திரட்சியான இரத்தினங் களையும், சந்தன மரங்களையும் அடித்துக் கொண்டு, குருந்து, மா, குரவம், குடசம் முதலிய மரவகைகளையும், மயிலின் தோகைகளையும் சுமந்து கொண்டு பரவி, பெரிய வயல்களில் பாய்கின்ற நெடிய கரைகளையுடைய காவிரி நதி சூழும் திருக்கொச்சைவயம் என்னும் இத்திருத்தலத்தை விரும்பி வீற்றிருந்தருளும் சிவபெருமானின் அழகிய திருவடிகளைப் போற்றி வாழ்வாயாக! அத்திருவடியே நமக்குச் சரண்புகும் இடமாகும்.

3757. ஏலமா ரிலவமோ டினமலர்த்
தொகுதியா யெங்குநுந்திக்
கோலமா மிளகொடு கொழுங்கனி
கொன்றையுங் கொண்டுகோட்டா
றாலியா வயல்புகு மணிதரு
கொச்சையே நச்சிமேவும்
நீலமார் கண்டனை நினைமட
நெஞ்சமே யஞ்சனீயே. 2

நெஞ்சமே யஞ்சனீயே என்பது பதிகமாகும்.

மடநெஞ்சமே! மணம் கமழும் ஏலம், இலவங்கம் இவைகளோடு நறுமணம் கமழும் மலர்களையும் தள்ளிக் கொண்டு, அழகிய மிளகுக் கொடிகளோடு, நன்கு பழுத்த கனிகள், கொன்றை மலர்கள் ஆகியவற்றை அலைகள் வாயிலாக அடித்துக் கொண்டு ஆரவாரத்துடன் பாயும் காவிரி நதியின் நீர் வயல்களில் புகுகின்ற அழகிய திருக்கொச்சைவயம் என்னும் இத்திருத்தலத்தை விரும்பி வீற்றிருந்தருளும் நீலகண்டரான சிவபெருமானை நினைப்பாயாக! நீ அஞ்சாதே.

3758. பொன்னுமா மணிகொழித்தெறிபுனற்
கரைகள்வாய் நுரைகளுந்திக்
கன்னிமார் முலைநலங் கவரவந்
தேறுகோட் டாறுசூழ
மன்னினார் மாதொடும் மருவிடங்
கொச்சையே மருவினாளும்
முன்னைநோய் தொடருமா றில்லைகா
ணெஞ்சமே யஞ்சனீயே. 3

நெஞ்சமே! பொன்னையும், பெரிய மணிகளையும் ஒதுக்கிக் கரையில் எறிகின்ற ஆற்றுநீர் நுரைகளைத் தள்ளிக் கொண்டு, கன்னிப்பெண்களின் மார்பில் பூசியிருந்த சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்களை அகற்றிக் கரைசேர்க்கின்ற காவிரி சூழ்ந்திருக்க, உமாதேவியாரோடு நிலைபெற்று இருப்பவராகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் திருக்கொச்சைவயம் என்னும் இத்திருத்தலத்தையே எக்காலத்தும் பொருந்தி வாழ்வாயாக! அவ்வாறு வாழ்ந்தால் தொன்றுதொட்டு வரும் மலநோயானது இனி உன்னைத் தொடராது. நீ அஞ்சல் வேண்டா.

3759. கந்தமார் கேதகைச் சந்தனக்
காடுசூழ் கதலிமாடே
வந்துமா வள்ளையின் பவரளிக்
குவளையைச் சாடியோடக்
கொந்துவார் குழலினார் குதிகொள்கோட்
டாறுசூழ் கொச்சைமேய
எந்தையா ரடிநினைந் துய்யலாம்
நெஞ்சமே யஞ்சனீயே. 4

நெஞ்சமே! மணம் பொருந்திய தாழை, சந்தனக் காடு என்பவற்றைச் சூழ்ந்து, வாழைத் தோட்டங்களின் பக்கமாக வந்து, மா மரத்தையும், வள்ளிக் கொடியின் திரளையும், மொய்க்கும் வண்டுகளையும் குவளையையும் மோதி ஓட, பூங்கொத்துக்கள் அணிந்த நீண்ட கூந்தலையுடைய பெண்கள் குதித்துக் கொண்டு நீராடும் காவிரிநதி சூழ்ந்த திருக்கொச்சைவயம் என்னும் திருத்தலத்தை விரும்பி வீற்றிருந்தருளிய எந்தையாரான, சிவபெருமானின் திருவடிகளைத் தியானித்து நாம் உய்தி பெறலாம். நீ அஞ்சவேண்டா.

| | | |
|---|---|---|
| **3760.** மறைகொளும் திறலினா ராகுதிப்<br>புகைகள்வா னண்டமிண்டிச்<br>சிறைகொளும் புனலணிசெழும்பதி<br>திகழ்மதிற் கொச்சை தன்பால்<br>உறைவிட மெனமன மதுகொளும்<br>பிரமனார் சிரமறுத்த<br>இறைவன தடியிணை யிறைஞ்சிவாழ்<br>நெஞ்சமே யஞ்சனீயே. | 5 | நெஞ்சமே! வேதங்களை அவற்றின் பொருள் உணர்ந்து ஓதும் வன்மை படைத்த அந்தணர்கள் இயற்றுகின்ற வேள்விப் புகை ஆகாயத்தை அளாவி நெருங்குதலால் மழை பொழிய, அந்நீர் தங்கிய கரைகளையுடைய நீர்நிலைகளால் அழகுடன் விளங்கும் செழும்பதியாகிய, மதில்கள் விளங்குகின்ற திருக்கொச்சைவயம் என்னும் திருத்தலத்தை, தாம் எழுந்தருளும் இடமாகக் கொண்ட மனமுடையவரும், பிரமனின் சிரமறுத்தவருமான சிவபெருமானின் இரண்டு திருவடிகளையும் வணங்கி வாழ்வாயாக! நீ அஞ்சவேண்டா. |
| **3761.** சுற்றமு மக்களுந் தொக்கவத்<br>தக்கனைச் சாடியன்றே<br>உற்றமால் வரையுமை நங்கையைப்<br>பங்கமா வுள்கினானோர்<br>குற்றமில்லடியவர் குழுமிய<br>வீதிசூழ் கொச்சைமேவி<br>நற்றவ மருள்புரி நம்பனை<br>நம்பிடாய் நாளுநெஞ்சே. | 6 | நெஞ்சமே! சிவனை நினைபாது செய்த தக்கன் வேள்வியைத் தகர்த்து, அதற்குத் துணையாக நின்ற சுற்றத்தார்களையும், மற்றவர்களையும் தண்டித்து, தன் மனைவி தாட்சாயனி தக்கன் மகளான தோடம் நீங்க இமயமலை அரையன் மகளாதற்கும், தன் திருமேனியில் ஒரு பாகமாதற்கும் நினைத்தருளியவனும், ஒரு குற்றமுமில்லாத அடியவர்கள் குழுமிய வீதிகள் சூழ்ந்த திருக்கொச்சைவயம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்து, திரிகரணங்களும் ஒன்றிச் சிவவழிபாடு செய்பவர்கட்கு அதன் பயனை அளித்து அருள்புரிகின்றவனுமாகிய சிவபெருமானை எந்நாளும் நீ விரும்பி வாழ்வாயாக! |
| **3762.** கொண்டலார் வந்திடக் கோலவார்<br>பொழில்களிற் கூடிமந்தி<br>கண்டவார் கழைபிடித் தேறிமா<br>முகிறனைக் கதுவுகொச்சை<br>அண்டவா னவர்களு மமரரு<br>முனிவரும் பணியவாலம்<br>உண்டமா கண்டனார் தம்மையே<br>யுள்குநீ யஞ்சனெஞ்சே. | 7 | நெஞ்சமே! மேகங்கள் வந்தவுடன், அழகிய நீண்ட சோலைகளிலுள்ள குரங்குகள் கூடி, தங்கட்கு முன்னே காணப்படுகின்ற மூங்கில்களைப் பற்றி ஏறி, அந்தக் கரிய மேகங்களைக் கையால் பிடிக்கின்ற திருக்கொச்சைவயம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, அண்ட வானவர்களும், தேவர்களும், முனிவர்களும் வந்து பணிய, ஆலகால விடத்தினை உண்டு அவர்களைக் காத்த பெருமையுடைய கழுத்தினையுடைய சிவபெருமானையே எப்பொழுதும் நீ நினைத்துத் தியானிப்பாயாக! நீ அஞ்சல் வேண்டா. |

| | | |
|---|---|---|
| **3763.** அடலெயிற் றரக்கனார் நெருக்கிமா<br>மலையெடுத் தார்த்தவாய்கள்<br>உடல்கெடத் திருவிர லூன்றினா<br>ருறைவிட மொளிகொள்வெள்ளி<br>மடலிடைப் பவளமு முத்தமுந்<br>தொத்துவண் புன்னைமாடே<br>பெடையொடுங் குருகினம் பெருகுதண்<br>கொச்சையே பேணுநெஞ்சே. | 8 | நெஞ்சமே! வலிமை வாய்ந்த பற்களையுடைய அரக்கனான இராவணன் பெரிய திருக்கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க, ஆரவாரித்த அவனது வாய்களுடன் உடலும் நெரியும்படித் தன் காற்பெருவிரலை ஊன்றினவனான சிவபெருமான் விற்றிருந்தருளுகின்ற, ஒளிபொருந்திய வெள்ளியைப் போன்ற இதழ்களையுடைய பூக்களின் இடையிடையே பவளம் போன்ற செந்நிறப் பூக்களும், முத்துக்களைப் போன்ற அரும்புகளும், அமைந்த பூங்கொத்துக்களையுடைய செழித்த புன்னைமரங்களின் பக்கத்தில் பறவை இனங்கள் தங்கள் பெடைகளோடு வளர்தலையுடைய திருக்கொச்சைவயம் என்னும் திருத்தலத்தை நீ போற்றி வழிபடுவாயாக! |
| **3764.** அரவினிற் றுயிறரு மரியுநற்<br>பிரமனு மன்றயர்ந்து<br>குரைகழ றிருமுடி யளவிட<br>வரியவர் கொங்குசெம்பொன்<br>விரிபொழி லிடைமிகு மலைமகண்<br>மகிழ்தர வீற்றிருந்த<br>கரியநன் மிடறுடைக் கடவுளார்<br>கொச்சையே கருதுநெஞ்சே. | 9 | நெஞ்சமே! பாம்புப் படுக்கையில் துயிலும் திருமாலும், நல்ல பிரமதேவனும் சோர்வடையும்படி, ஒலிக்கின்ற வீரக்கழல்களை அணிந்த திருவடிகளையும், திருமுடியையும் அளவிடுதற்கு அரியவராய், பூக்களிலுள்ள மகரந்தமானது செம்பொன் துகளைப்போல உதிர்கின்ற சோலைகளுக்கு இடையில், மலைமகளான உமாதேவியார் மகிழும்படி, கரிய, அழகிய கழுத்தினையுடையவராய்ச் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கொச்சைவயம் என்னும் இத்திருத்தலத்தை நீ எப்பொழுதும் தியானிப்பாயாக! |
| **3765.** கடுமலி யுடலுடை யமணருங்<br>கஞ்சியுண் சாக்கியரும்<br>இடுமற வுரைதனை யிகழ்பவர்<br>கருதுநம் மீசர்வானோர்<br>நடுவுறை நம்பனை நான்மறை<br>யவர்பணிந் தேத்தஞாலம்<br>உடையவன் கொச்சையே யுள்கிவாழ்<br>நெஞ்சமே யஞ்சனீயே. | 10 | நெஞ்சமே! கடுக்காய்களைத் தின்னும் சமணர்களும், கஞ்சி உணவை உண்கின்ற புத்தர்களும், சொல்லுகின்ற சமய போதனைகளை இகழ்பவர்களாகிய அடியவர்கள் நினைந்து போற்றும் நம் இறைவனும், தேவர்கள் தன்னைச் சுற்றி நின்று தொழ அவர்கள் நடுவுள் வீற்றிருந்தருளும் நண்பனும், நான்கு வேதங்களையும் நன்கு கற்ற அந்தணர்கள் பணிந்து போற்ற இந்த உலகம் முழுவதையும் தனக்கு உடைமைப் பொருளாக உடையவனுமாகிய சிவபெருமானது திருக்கொச்சைவயம் என்னும் திருத்தலத்தை தியானித்து நல்வாழ்வு வாழ்வாயாக! நீ அஞ்ச வேண்டா. |

**3766.** காய்ந்துதங் காலினாற் காலனைச்
செற்றவர் கடிகொள்கொச்சை
ஆய்ந்துகொண் டிடமென விருந்தநல்
லடிகளை யாதரித்தே
ஏய்த்ததொல் புகழ்மிகு மெழின்மறை
ஞானசம் பந்தன்சொன்ன
வாய்ந்தவிம் மாலைகள் வல்லவர்
நல்லர்வா னுலகின்மேலே. 11

தம் அடியவனான மார்க்கண்டேயனின் உயிரைக் கவரவந்த காலனைக் கோபித்துக் காலால் உதைத்து மாய்த்தவரும், காவலையுடைய திருக்கொச்சைவயம் என்னும் திருத்தலத்தினைத் தாம் வீற்றிருந்தருளுதற்கு ஏற்ற இடமென ஆராய்ந்து எழுந்தருளியுள்ள நம் தலைவருமான சிவபெருமானிடம் பக்தி கொண்டு, பொருந்திய தொன்மையான புகழ்மிகுந்த, அழகிய, மறைவல்ல ஞானசம்பந்தன் போற்றி அருளிய சிறப்புடைய இத்தமிழ் மாலைகளை ஓதவல்லவர்கள் நன்மைதரும் வானுலகில் மேன்மையுடன் வீற்றிருப்பர்.

## 90. திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும்

பண் : சாதாரி பதிக எண் : 90

**3767.** ஓங்கிமே லுழிதரு மொலிபுனற்
கங்கையை யொருசடைமேல்
தாங்கினா ரிடுபலி தலைகல
னாக்கொண்ட தம்மடிகள்
பாங்கினா லுமையொடு பகலிடம்
புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 1

இத்தலம் காவிரியாற்றின் இடையில் இருப்பதால் திருத்துருத்தியெனவும் குத்தாலம் என்னும் ஒருவகை மரத்தை தலவிருட்சமாக உடைமையின் குத்தால மெனவும் வழங்கப்படும்.

சிவபெருமான், மேன்மேலும் ஓங்கி எழுந்து ஓசையுடன் பெருக்கெடுத்து வந்த கங்கையாற்றின் வெள்ளத்தை ஒரு சடையில் தாங்கியவர். இடுகின்ற பிச்சையை ஏற்கத் தலையோட்டையே பாத்திரமாகக் கொண்ட தலைவர். முறைப்படி, பகற்காலத்தில் தங்குமிடமாகப் பசுமையான சோலைகள் சூழ்ந்ததும், நீர்ச்செழிப்பு மிக்கதுமான திருத்துருத்தி என்னும் திருத்தலத்தை உடையவர். அப்பெருமானே இரவில் திருவேள்விக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார்.

**3768.** தூறுசேர் சுடலையிற் சுடரெரி
யாடுவர் துளங்கொளிசேர்
நீறுசாந் தெனவுகந் தணிவர்வெண்
பிறைபுல்கு சடைமுடியார்
நாறுசாந் திளமுலை யரிவையோ
டொருபக லமர்ந்தபிரான்
வீறுசேர் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 2

குத்தாலம் என்பதன் சிதைவே குற்றாலம்

சிவபெருமான், புதர்ச்செடிகள் நிறைந்த சுடுகாட்டில் ஒளிவிடும் நெருப்பேந்தி ஆடுபவர். விளங்கும் ஒளியுடைய திருநீற்றினைக் கலவைச் சந்தனம் போல மகிழ்ச்சியுடன் அணிந்து கொள்பவர். வெண்மையான பிறைச்சந்திரனை அணிந்த சடைமுடி உடையவர். மணம் கமழும் சந்தனக்குழம்பை அணிந்த இளமையான கொங்கைகளையுடைய உமாதேவியோடு பொருள்வளமிக்க திருத்துருத்தியில் பகற்காலத்தில் தங்கியிருப்பவர். இரவில் திருவேள்விக்குடியில் வீற்றிருந்தருள்பவர்.

3769. மழைவள ரிளமதி மலரொடு
தலைபுல்கு வார்சடைமேல்
கழைவளர் புனல்புகக் கண்டவெங்
கண்ணுதற் கபாலியார்தாம்
இழைவளர் துகிலல்கு லரிவையோ
டொருபக லமர்ந்தபிரான்
விழைவளர் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 3

காவிரியின் தென்கரை துருத்தி
காவிரியின் வடகரை வேள்விக்குடி

குளிர்ச்சியான இளம்பிறையும், கொன்றை, ஊமத்தை போன்ற மலர்களையும் ஒரு வெண்தலையும் பொருந்திய நீண்ட சடையின் மீது, கரும்பு முதலிய பயிர்களை வளர்க்கும் கங்கை நதியினைத் தங்கச் செய்த எம் கண்ணுதல் கடவுளாகிய சிவபெருமான் பிரம கபாலம் ஏந்தியவர். அவர் இழைகளால் நெய்யப்பட்ட ஆடையணிந்த அல்குலையுடைய உமாதேவியோடு பகலில், மேன்மேலும் தரிசிக்க ஆசைதரும் திருத்துருத்தியில் வீற்றிருந்தருளுவார். அவரே இரவில் திருவேள்விக்குடியில் வீற்றிருந்தருளுவார்.

3770. கரும்பன வரிசிலைப் பெருந்தகைக்
காமனைக் கவினழித்த
சுரும்பொடு தேன்மல்கு தூமலர்க்
கொன்றையஞ் சுடர்ச்சடையார்
அரும்பன வனமுலை யரிவையொ
டொருபக லமர்ந்தபிரான்
விரும்பிடம் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 4

இறைவர் பகலில் துருத்தியிலும், இரவில் வேள்விக் குடியிலும் எழுந்தருளியுள்ளார்.

இறைவன் கரும்பு வில்லையுடைய பெருந்தகையாகிய மன்மதனின் அழகிய உடலை அழித்தவர். வண்டுகள் மொய்க்கும், தேன் மணம் கமழும் தூய கொன்றை மலரை அழகிய ஒளிமிக்க சடைமுடியில் அணிந்தவர். அவர் தாமரை மொட்டுப் போன்று அழகிய கொங்கைகளை உடைய உமாதேவியோடு பகலில் விரும்பி வீற்றிருந்தருளும் இடம் திருத்துருத்தி என்னும் திருத்தலமாகும். அவரே இரவில் வீற்றிருந்தருளுவது திருவேள்விக்குடி என்னும் திருத்தலமாகும்.

3771. வளங்கிளர் மதியமும் பொன்மலர்க்
கொன்றையும் வாளரவும்
களங்கொளச் சடையிடை வைத்தளங்
கண்ணுதற் கபாலியார்தாம்
துளங்குநூன் மார்பின ரரிவையொ
டொருபக லமர்ந்தபிரான்
விளங்குநீர்த் துருத்தியா ரிரவிடத்
துறைவர்வேள் விக்குடியே. 5

சிவபெருமான் பிரம்மசாரியாய் வேதத்தை தாமே சொன்னதால் சொன்ன வாரறிவார் என்று சொல்லப்படுகிறார்.

அழகு மிளிரும் சந்திரனும், பொன் போன்ற கொன்றைமலரும், வாள்போன்று ஒளிரும் பாம்பும் இருக்குமிடமாகச் சடைமுடியில் வைத்தருளிய, நெற்றிக்கண்ணையுடைய எங்கள் சிவபெருமான் பிரமகபாலம் ஏந்தியவர். அசைகின்ற முப்புரி நூலணிந்த மார்பினர். அவர் உமாதேவியாரோடு பகலில் நீர்வளமிக்க திருத்துருத்தி என்னும் திருத்தலத்திலும், இரவில் திருவேள்விக்குடி என்னும் திருத்தலத்திலும் வீற்றிருந்தருளுவார்.

| | | |
|---|---|---|
| **3772.** பொறியுலா மடுபுலி யுரிவையர்<br>வரியராப் பூண்டிலங்கும்<br>நெறியுலாம் பலிகொளு நீர்மையர்<br>சீர்மையை நினைப்பரியார்<br>மறியுலாங் கையினர் மங்கையொ<br>டொருபக லமர்ந்தபிரான்<br>வெறியுலாந் துருத்தியா ரிரவிடத்<br>துறைவர்வேள் விக்குடியே. | 6 | சிவபெருமான் வரிகளையுடைய கொல்லும் தன்மையுடைய புலித்தோலாடை அணிந்தவர். நெடிய பாம்பை ஆபரணமாகப் பூண்டவர். பிச்சை எடுப்பதை நெறியாகக் கொண்ட தன்மையர். இத்தகைய எளிமை உடையவர் ஆயினும், எவராலும் நினைத்துப் பார்ப்பதற்கும் அரிய பெருமையுடையவர். மான்கன்று ஏந்திய கையினர். அத்தகைய பெருமான் உமாதேவியாரோடு பகலில், நறுமணம் கமழும் திருத்துருத்தி என்னும் திருத்தலத்திலும், இரவில் திருவேள்விக்குடி என்னும் திருத்தலத்திலும் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3773.** புரிதரு சடையினர் புலியுரி<br>யரையினர் பொடியணிந்து<br>திரிதரு மியல்பினர் திரிபுர<br>மூன்றையுந் தீவளைத்தார்<br>வரிதரு வனமுலை மங்கையொ<br>டொருபக லமர்ந்தபிரான்<br>விரிதரு துருத்தியா ரிரவிடத்<br>துறைவர்வேள் விக்குடியே. | 7 | சிவபெருமான் முறுக்குண்ட சடையினை உடையவர். புலியின் தோலை அரையில் உடுத்தவர். திருவெண்நீற்றை அணிந்து கொண்டு திரியும் இயல்பினர். திரியும் புரங்கள் மூன்றையும் தீயால் வளைவித்து எரித்தவர். சந்தனக் கீற்றுக்கள் எழுதப்பெற்ற அழகிய கொங்கைகளையுடைய உமாதேவியோடு பகலில் திருத்துருத்தி என்னும் திருத்தலத்திலும், இரவில் திருவேள்விக்குடி என்னும் திருத்தலத்திலும் வீற்றிருந்தருளுவார். |
| **3774.** நீண்டிலங் கவிரொளி நெடுமுடி<br>யரக்கனிந் நீள்வரையைக்<br>கீண்டிடந் திடுவனென் றெழுந்தவ<br>னாள்வினை கீழ்ப்படுத்தார்<br>பூண்டநூன் மார்பின ரரிவையொ<br>டொருபக லமர்ந்தபிரான்<br>வேண்டிடந் துருத்தியா ரிரவிடத்<br>துறைவர்வேள் விக்குடியே. | 8 | நெடுந்தூரம் விளங்கிப் பிரகாசிக்கும் இரத்தினங்கள் பதிக்கப்பட்ட பெரிய கிரீடத்தை அணிந்துள்ள இராவணன் ''இப்பெரிய கயிலைமலையைப் பெயர்த்தெடுத்து அப்பாலிடுவேன்" என்று ஆணவத்துடன் எழுந்த அவனது முயற்சியை அழித்தருளியவர் சிவபெருமான். அவர் பூணூல் அணிந்த திருமார்பினர். அவர் உமாதேவியோடு பகலில், விரும்பி வீற்றிருந்தருளும் இடம் திருத்துருத்தி என்னும் திருத்தலமாகும். இரவில் திருவேள்விக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுவார். |
| **3775.** கரைகட லரவணைக் கடவுளுந்<br>தாமரை நான்முகனும்<br>குரைகழ லடிதொழக் கூரெரி<br>யெனநிறங் கொண்டபிரான்<br>வரைகெழு மகளொடும் பகலிடம்<br>புகலிடம் வண்பொழில்சூழ்<br>விரைகமழ் துருத்தியா ரிரவிடத்<br>துறைவர்வேள் விக்குடியே. | 9 | ஒலிக்கின்ற கடலில் பாம்புப் படுக்கையில் துயில்கொள்ளும் திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், ஒலிக்கும் வீரக்கழல்களை அணிந்த தம் திருவடிகளை, செருக்கழிந்து தொழுமாறு ஓங்கிய நெருப்பு வடிவாய் நின்றவர் சிவபெருமான். அவர் மலைமகளான உமாதேவியோடு பகலில் வீற்றிருந்தருளும் இடம் வளமை வாய்ந்த சோலைகள் சூழ்ந்த நறுமணம் கமழும் திருத்துருத்தி என்னும் திருத்தலமாகும். இரவில் திருவேள்விக்குடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். |

| | |
|---|---|
| **3776.** அயமுக வெயினிலை யமணருங்<br>குண்டருஞ் சாக்கியரும்<br>நயமுக வுரையினர் நகுவன<br>சரிதைகள் செய்துழல்வார்<br>கயலன வரிநெடுங் கண்ணியொ<br>டொருபக லமர்ந்தபிரான்<br>வியனகர்த் துருத்தியா ரிரவிடத்<br>துறைவர்வேள் விக்குடியே. 10 | பழுக்கக் காய்ச்சிய இரும்பு போல் சுடும் வெயிலில் தவமென்று நிற்றலையுடைய சமணர்களும் குண்டர்களாகிய புத்தர்களும், இன்முகத்தோடு நயமாகப் பேசி, நகைச்சுவை ததும்பும் செயல்களைச் செய்து திரிபவர்கள். ஆதலால் அவர் உரைகளைக் கொள்ளாதீர். கயல்மீன் போன்ற, அழகிய, வரிகளையுடைய நீண்ட கண்களையுடைய உமாதேவியோடு பகலில் அகன்ற நகராகிய திருத்துருத்தியில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் இரவில் திருவேள்விக்குடியில் வீற்றிருந்தருளுகின்றார். அவரை வழிபட்டு உய்வீர்களாக. |
| **3777.** விண்ணுலாம் விரிபொழில் விரைமணற்<br>றுருத்திவேள் விக்குடியும்<br>ஒண்ணுலாம் மொலிகழ லாடுவா<br>ரரிவையொ டுறைபதியை<br>நண்ணுலாம் புகலியு ளருமறை<br>ஞானசம் பந்தன்சொன்ன<br>பண்ணுலா மருந்தமிழ் பாடுவா<br>ராடுவார் பழியிலரே. 11 | ஒளிவிடும், ஒலிக்கின்ற கழல்கள் அணிந்து திருநடனம் செய்யும் சிவபெருமான் உமாதேவியோடு வீற்றிருந்தருளுகின்ற, ஆகாயம்வரை உயர்ந்துள்ள விரிந்த சோலைகள் நிறைந்த, மணம் பொருந்திய மணற் பரப்பையுடைய திருத்துருத்தி, திருவேள்விக்குடி ஆகிய திருத்தலங்களைப் போற்றி அனைவரும் வழிபடும் திருப்புகலியில் அவதரித்த அருமறைவல்ல ஞானசம்பந்தன் பாடிய பண்ணோடு கூடிய இந்த அரிய தமிழ்ப்பதிகத்தைப் பாடுபவர்களும், பரவசமடைந்து ஆடுபவர்களும் எவ்விதமான பழியும், பாவமும் இல்லாதவர்களாவர். |

## 91. திருவடகுரங்காடுதுறை

பண் : சாதாரி

பதிக எண் : 91

**3778.** கோங்கமே குரவமே கொழுமலர்ப்
புன்னையே கொகுடிமுல்லை
வேங்கையே ஞாழலே விம்முபா
திரிகளே விரவியெங்கும்
ஓங்குமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
வீங்குநீர்ச் சடைமுடி யடிகளா
ரிடமென விரும்பினாரே. 1

கோங்கு, குரவம், செழித்த மலர்களைத் தரும் புன்னை, கொகுடி, முல்லை, வேங்கை, புலிநகக் கொன்றை, பாதிரி ஆகிய மரங்களை அடித்துவரும் காவிரியின் வடகரையிலுள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தைச் சிவபெருமான் தமது இருப்பிடமாகக் கொண்டு விரும்பி வீற்றிருந்தருளுபவர்.

அனுமன் இராமேச்சுரத்தில் இழந்த வாலைச் சிதம்பரத்திலும், தென்குரங்காடுதுறையிலும் பெறாமல் இத்தலத்தில் பூசித்துப் பெற்றார்.

| | |
|---|---|
| **3779.** மந்தமா யிழிமதக் களிற்றிள<br>மருப்பொடு பொருப்பினல்ல<br>சந்தமா ரகிலொடு சாதியின்<br>பலங்களுந் தகையமோதி<br>உந்துமா காவிரி வடகரை<br>யடைகுரங் காடுதுறை<br>எந்தையா ரிணையடி யிமையவர்<br>தொழுதெழு மியல்பினாரே. **2** | சிறு அளவில் மதம் சொரியும் யானைக் கன்றுகளின் தந்தங்களையும், நல்ல சந்தனம், அகில், சாதிக்காய் ஆகிய பயன்தரக்கூடிய மரங்களையும் விழும்படி மோதி, அலைகளால் அடித்து வரும் காவிரியின் வடகரையிலுள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் எந்தையாகிய சிவபெருமானின் திருவடிகளைத் தேவர்கள் தொழுது எழும் தன்மையர். |
| **3780.** முத்துமா மணியொடு முழைவள<br>ராரமு முகந்துநுந்தி<br>எத்துமா காவிரி வடகரை<br>யடைகுரங் காடுதுறை<br>மத்தமா மலரொடு மதிபொதி<br>சடைமுடி யடிகடம்மேல்<br>சித்தமா மடியவர் சிவகதி<br>பெறுவது திண்ணமன்றே. **3**<br><br>சிட்டுக்குருவி பூசித்ததால் சிட்டுலிங்கம் | முத்து, மணி, குகைகளின் அருகில் வளரும் சந்தனமரம் இவற்றை வாரி, தள்ளி மோதும் காவிரியின் வடகரையில் உள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பெருமை மிகுந்த பொன்னூமத்த மலரோடு, சந்திரனையும் அணிந்து உள்ள சடைமுடி உடைய தலைவரான சிவபெருமானைச் சித்தத்தால் வழிபடும் அடியவர்கள் சிவகதி பெறுவது உறுதி. |
| **3781.** கறியுமா மிளகொடு கதலியின்<br>பலங்களுங் கலந்துநுந்தி<br>எறியுமா காவிரி வடகரை<br>யடைகுரங் காடுதுறை<br>மறியுலாங் கையினர் மலரடி<br>தொழுதெழ மருவுமுள்ளக்<br>குறியினா ரவர்மிகக் கூடுவார்<br>நீடுவா னுலகினூடே. **4** | உறைக்கும் மிளகுச் செடிகளோடு, வாழையும் கலந்து தள்ளி வரும் காவிரியின் வடகரையில் விளங்கும் குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தில் மான்கன்றை ஏந்திய கையையுடைய சிவபெருமானின் திருவடிகளைத் தொழுது, உள்ளம் உருகப் போற்றுபவர்கள் வானுலகடைந்து மேன்மையுடன் மகிழ்ந்திருப்பர். |
| **3782.** கோடிடைச் சொரிந்ததே னதனொடுங்<br>கொண்டல்வாய் விண்டமுன்னீர்<br>காடுடைப் பீலியுங் கடறுடைப்<br>பண்டமுங் கலந்துநுந்தி<br>ஓடுடைக் காவிரி வடகரை<br>யடைகுரங் காடுதுறை<br>பீடுடைச் சடைமுடி யடிகளா<br>ரிடமெனப் பேணினாரே. **5**<br><br>குரங்கு பூசித்த தலம் குரங்காடுதுறை | மரக்கிளைகளில் சொரிந்த தேனோடு, மேகம் பெய்த முன்னீரும் கலக்கக் காட்டில் வசிக்கும் மயிலின் பீலியும், மலைச்சாரலில் விளையும் பண்டங்களும் உந்தித் தள்ளி ஓடிவரும் காவிரியின் வடகரையிலுள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தை, பெருமையுடைய சடைமுடியுடைய தலைவரான சிவபெருமான் விரும்பி வீற்றிருக்கும் இடமாகக் கொண்டுள்ளார். |

**3783.** கோலமா மலரொடு தூபமுஞ்
சாந்தமுங் கொண்டுபோற்றி
வாலியார் வழிபடப் பொருந்தினார்
திருந்துமாங் கனிகளுந்தி
ஆலுமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
நீலமா மணிமிடற் றடிகளை
நினையவல் வினைகள்வீடே. 6

அழகிய நறுமலர்களுடன், தூபமும், சந்தனமும் கொண்டு போற்றி வாலியார் வழிபட்டதும், இனிய மாங்கனிகளை அடித்து அசைத்துவரும் காவிரியின் வடகரையில் உள்ளதுமான குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற நீலமணி போன்ற கண்டத்தையுடைய சிவபெருமானை நினைந்து போற்ற வல்லவர்களின் வலிய தீவினைகள் யாவும் தீரும்.

XXXXXXXXXXXXXXXXXXXXXX 7

**3784.** நீலமா மணிநிறத் தரக்கனை
யிருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார்
வழிபட மன்னுகோயில்
ஏலமோ டிலையில வங்கமே
யிஞ்சியே மஞ்சளுந்தி
ஆலியா வருபுனல் வடகரை
யடைகுரங் காடுதுறையே. 8

நீலமணி போன்ற கருநிற அரக்கனான இராவணனை, இருபது கரத்தொடும் வாலினாற் இறுகக் கட்டிய **வாலியார் வழிபடப் பெருமை பெற்ற கோயில்**, ஏலம், பச்சிலை, இலவங்கம், இஞ்சி, மஞ்சள் இவற்றை உந்தி, ஒலித்து, ஓடிவரும் காவிரியின் வடகரையிலுள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலமாகும்.

**3785.** பொருந்திறற் பெருங்கைமா வுரித்துமை
யஞ்சவே யொருங்குநோக்கிப்
பெருந்திறத் தநங்கனை யநங்கமா
விழித்ததும் பெருமைபோலும்
வருந்திறற் காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறை
அருந்திறத் திருவரை யல்லல்கண்
டோங்கிய வடிகளாரே. 9

---

தாகத்தால் வருந்திய பெண்ணுக்கு இரங்கி சிவபெருமான் தென்னங்குலையை வளையச் செய்து உதவி செய்ததால் சுவாமிக்கு குலை வணங்குநாதரென்றும், தயாநிதீசுவரர் என்றும் பெயர்.

போர்செய்யும் தன்மையுடைய பெரிய துதிக்கையுடைய யானையின் தோலை, உமாதேவி அஞ்சுமாறு உரித்து வியப்படையும்படி செய்தவர் சிவபெருமான். அவர் பெருந்திறமைமிக்க மன்மதனின் உடல் அழியுமாறு நெற்றிக்கண்ணைத் திறந்து விழித்த பெருமையுடையவர். பலவிதப் பொருட்களை அடித்துவரும் காவிரியின் வடகரையிலுள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அப்பெருமான், பிரமனும், திருமாலும் தம்மைத் தேடித் துன்புறச்செய்து நெருப்பு மலையாய் ஓங்கி ஒளிர்ந்த தலைவராவார்.

**3786.** கட்டமண் டேரருங் கடுக்கடின்
கழுக்களுங் கசிவொன்றில்லாப்
பிட்டர்தம் மறவுரை கொள்ளலும்
பெருவரைப் பண்டமுந்தி
எட்டுமா காவிரி வடகரை
யடைகுரங் காடுதுறைச்
சிட்டனா ரடிதொழச் சிவகதி
பெறுவது திண்ணமாமே. 10

கடுக்காய்களைத் தின்கின்ற கழுக்களான கட்டுப்பாட்டையுடைய சமணர்களும், புத்தர்களும், மனஇரக்கமின்றிக் கூறும் அறவுரைகளை கொள்ளாதீர். பெரிய மலையிலுள்ள பொருள்களைத் தள்ளிப் பாயும் காவிரியின் வடகரையிலுள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சீலமிக்க சிவபெருமானின் திருவடிகளைத் தொழுபவர்கள் சிவகதி பெறுவது உறுதியாகும்.

3787. தாழிளங் காவிரி வடகரை
யடைகுரங்காடுதுறைப்
போழிள மதிபொதி புரிதரு
சடைமுடிப் புண்ணியனைக்
காழியா னருமறை ஞானசம்
பந்தன கருதுபாடல்
கோழையா வழைப்பினுங் கூடுவார்
நீடுவா னுலகினூடே. 11

பள்ளம் நோக்கி ஓடிப்பாயும் காவிரியின் வடகரையிலுள்ள குரங்காடுதுறை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும், பிறைச்சந்திரனை அணிந்த முறுக்குண்ட சடைமுடியுடைய புண்ணிய மூர்த்தியான சிவபெருமானைப் போற்றி, சீகாழியில் அவதரித்த அருமறைவல்ல ஞானசம்பந்தன் அருளிய இப்பாடல்களை அடியவர்கள் கோழை மிடறோடு பாடினாலும் என்றும் அழியாத முக்தியுலகை அடைவர்.

## 92. திருநெல்வேலி

பண் : சாதாரி

பதிக எண் : 92

3788. மருந்தவை மந்திர மறுமைநன்
னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடுமவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே
பொருந்துதண் புறவினிற் கொன்றைபொன்
சொரிதரத் துன்றுபைம்பூஞ்
செருந்திசெம் பொன்மலர் திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே. 1

நெல்லை வெள்ளங் கொள்ளாதவாறு வேலியிட்டு காத்தமையால் நெல்வேலி என்ற பெயர் ஏற்பட்டது. பஞ்ச சபைகளில் ஒன்றாகிய தாமிர சபையை உடையது. தாமிரபரணி நதிக் கரையில் உள்ளது.

நல்ல நெஞ்சமே! இறைவனின் திருநாமத்தைச் சிந்தனை செய்வாயாக. அத்திருநாமமானது மருந்தாக இருந்து நோயைத் தீர்க்கும். **மந்திரமாக விளங்கி அச்சத்தைப் போக்கும்.** மறுமையில் நற்கதி தரும். மற்றும் உயிர்கள் அடைதற்கேற்ற பயன்கள் யாவும் தரும். போக்கமுடியாத துன்பத்தைப் போக்கும். அத்திருநாமத்திற்குரிய இறைவன் குளிர்ச்சிமிக்க சோலையில் கொன்றை மரங்கள் பொன்னிறப் பூக்களை உதிர்க்க, நெருங்கியுள்ள, பசுமையான அழகிய செருந்தி மரங்கள் செம்பொன் போன்ற மலர்களைப் பூக்கின்ற திருநெல்வேலியில் வீற்றிருந் தருள்கிற அருட்செல்வர் ஆவார்.

3789. என்றுமோ ரியல்பின ரெனநினை
வரியவ ரேறதேறிச்
சென்றுதாஞ் செடிச்சியர் மனைதொறும்
பலிகொளு மியல்பதுவே
துன்றுதண் பொழினுழைந் தெழுவிய
கேதகைப் போதளைந்து
தென்றல்வந் துலவிய திருநெல்வேலி
யுறை செல்வர்தாமே. 2

திருநெல்வேலி யுறை செல்வர்தாமே என்பது மகுடமாகும்.

நெருங்கிய குளிர்ந்த சோலையில் நுழைந்து, செழித்து வளர்ந்துள்ள தாழம்பூவில் படிந்து தென்றல் காற்று வந்து வீசுகின்ற திருநெல்வேலியில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான் எப்போதும் ஒரே தன்மையுடையவர் என்று நினைப்பதற்கு முடியாதவர் ஆவர். அவர் இடப வாகனத்திலேறிச் செடிச்சியர் போன்ற தாழ்குலத்தோர் மனைதோறும் சென்று பிச்சை ஏற்கும் இயல்பும் உடையவர். அவரை வழிபடுவீர்களாக.

| | | |
|---|---|---|
| **3790.** பொறிகிள ரரவமும் போழிள<br>மதியமுங்கங் கையென்னும்<br>நெறிபடு குழலியைச் சடைமிசைச்<br>சுலவிவெண் ணீறுபூசிக்<br>கிறிபட நடந்துநற் கிளிமொழி<br>யவர்மனங் கவர்வர்போலும்<br>செறிபொழி றழுவிய திருநெல்வேலி<br>யுறை செல்வர்தாமே. | 3 | புள்ளிகளையுடைய பாம்பையும், ஒரு கூறாகிய இளம்பிறைச் சந்திரனையும் கங்கை என்ற சுருண்ட கூந்தலையுடையவளையும், சடைமீது சுற்றி அணிந்து, வெண்மையான திருநீற்றைப் பூசி, பிறர் மயங்கும் வண்ணம் நடந்து, நல்ல கிளி போலும் இனிமையான சொற்களைப் பேசும் தாருகாவனத்து முனிவர்களின் பத்தினிகளின் மனத்தை வசப்படுத்தும் சிவபெருமான், நெருங்கிய சோலைகள் சூழ்ந்த திருநெல்வேலியில் வீற்றிருந்தருளும் அருட்செல்வர் ஆவார். அவரை வழிபடுவீர்களாக. |
| **3791.** காண்டகு மலைமகள் கதிர்நிலா<br>முறுவல்செய் தருளவேயும்<br>பூண்டநா கம்புறங் காடரங்<br>காநட மாடல்பேணி<br>ஈண்டுமா மாடங்கண் மாளிகை<br>மீதெழு கொடிமதியம்<br>தீண்டிவந் துலவிய திருநெல்வேலி<br>யுறை செல்வர்தாமே. | 4 | நெருங்கிய பெரிய மாடங்களிலும், மாளிகைகளிலும், மேலே கட்டப்பட்ட கொடிகள் சந்திரமண்டலத்தைத் தொட்டு அசைகின்ற திருநெல்வேலியில் வீற்றிருந்தருளுகின்ற அருட்செல்வரான சிவபெருமான், தரிசிப்பதற்கு இனிய மலைமகளான உமாதேவி ஒளிவிடும் பற்களால் புன்முறுவல் செய்து அருகிலிருந்தருளவும், பாம்பை ஆபரணமாக அணிந்து ஊருக்குப் புறம்பேயுள்ள சுடுகாட்டை அரங்கமாகக் கொண்டு நடனமாடுதலை விரும்புபவர். அவரை வழிபடுவீர்களாக. |
| **3792.** ஏனைவெண் கொம்பொடு மெழில்திகழ்<br>மத்தமு மிளவரவும்<br>கூனல்வெண் பிறைதவழ் சடையினர்<br>கொல்புலித் தோலுடையார்<br>ஆனினல் ஐந்துகந் தாடுவர்<br>பாடுவ ரருமறைகள்<br>தேனில்வண் டமர்பொழிற் றிருநெல்வேலி<br>யுறைசெல்வர் தாமே. | 5 | தேன்பருக வண்டுகள் அமர்கின்ற பூக்கள் நிறைந்த சோலைகளையுடைய திருநெல்வேலியில் வீற்றிருந்தருளும் அருட்செல்வரான சிவபெருமான் பன்றியின் கொம்புடன், அழகிய ஊமத்த மலரையும், இளம் பாம்பையும், வளைந்த வெண்ணிறப் பிறைச்சந்திரனையும், அணிந்த சடைமுடி உடையவர். கொல்லும் தன்மையுடைய புலித்தோலை ஆடையாக உடுத்தவர். பசுவிலிருந்து பெறப்படும் பால், தயிர், நெய், கோசலம், கோமயம் ஆகிய பஞ்சகவ்வியத்தால் திருமுழுக்காட்டப்படுபவர். அரிய வேதங்களை அருளியவர். |

| | | |
|---|---|---|
| **3793.** வெடிதரு தலையினர் வேனல்வெள்<br>ளேற்றினர் விரிசடையர்<br>பொடியணி மார்பினர் புலியத<br>ளாடையர் பொங்கரவர்<br>வடிவுடை மங்கையோர் பங்கினர்<br>மாதரை மையல்செய்வார்<br>செடிபடு பொழிலணி திருநெல்வேலி<br>யுறை செல்வர் தாமே. | 6 | புதர்களையுடைய சோலைகள் சூழ்ந்த அழகிய திருநெல்வேலியில் வீற்றிருந்தருளும் அருட்செல்வரான சிவபெருமான், மண்டையோட்டை மாலையாக உடையவர். சினமிகு வெண்ணிற இடபத்தை வாகனமாக உடையவர். விரிந்த சடையுடையவர். திருவெண்ணீறு அணிந்த மார்பினர். புலித்தோலாடை அணிந்தவர். கோபம் பொங்கும் பாம்பை அணிந்தவர். அழகிய உமாதேவியைத் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டுள்ளவர். தாருகாவனத்து முனிவர்களின் பத்தினிகளை மயங்கும்படி செய்தவர். அவரை வழிபடுவீர்களாக. |
| **3794.** அக்குலா மரையினர் திரையுலா<br>முடியின ரடிகளன்று<br>தக்கனார் வேள்வியைச் சாடிய<br>சதுரனார் கதிர்கொள்செம்மை<br>புக்கதோர் புரிவினர் வரிதரு<br>வண்டுபண் முரலுஞ்சோலைத்<br>திக்கெலாம் புகழுறுந் திருநெல்வேலி<br>யுறை செல்வர் தாமே. | 7 | வரிகளையுடைய வண்டுகள் பண்ணிசைக்கின்ற சோலைகளையுடைய, எல்லாத் திசைகளிலும் புகழ் பரவிய திருநெல்வேலியில் வீற்றிருந்தருள்கின்ற அருட் செல்வராகிய சிவபெருமான், சங்குமணிகளைக் கட்டி விளங்கும் இடையினையுடையவர். அலைகளை யுடைய கங்கையைத் தாங்கிய சடைமுடியை உடைய தலைவர். அவரை மதியாது தக்கன் செய்த யாகத்தை அழித்த திறமையை யுடையவர். செவ்வொளி படரும் சடையினர். அவரை வழிபடுவீர்களாக. |
| **3795.** முந்திமா விலங்கலன் றெடுத்தவன்<br>முடிகடோ ணெரிதரவே<br>உந்திமா மலரடி யொருவிர<br>லுகிர்நுதி யாலடர்த்தார்<br>கந்தமார் தருபொழின் மந்திகள்<br>பாய்தர மதுத்திவலை<br>சிந்துபூந் துறைகமழ் திருநெல்வேலி<br>யுறை செல்வர் தாமே. | 8 | நறுமணம் கமழும் சோலைகளில் பெண் குரங்குகள் தாவுதலால் தேன்துளிகள் சிந்துகின்ற, பூக்களைக் கொண்ட நீர்த் துறைகளை உடைய திருநெல்வேலியில் வீற்றிருந்தருளும் அருட்செல்வராகிய சிவபெருமான், பெருமை மிகுந்த கயிலை மலையை அந்நாளில் பெயர்த்தெடுத்த இராவணனின் தலைகளும், தோள்களும் நெரியும் வண்ணம், சிறந்த மலர் போன்ற திருவடியின் ஒரு விரல் நகநுனியை ஊன்ற வருத்தினார். அவரை வழிபடுவீர்களாக. |

| | | |
|---|---|---|
| **3796.** பைங்கண்வா ளரவணை யவனொடு<br>பனிமல ரோனுங்காணா<br>தங்கணா வருளென வவரவர்<br>முறைமுறை யிறைஞ்சநின்றார்<br>சங்கநான் மறையவர் நிறைதர<br>வரிவைய ராடல்பேணத்<br>திங்கணாள் விழமல்கு திருநெல்வேலி<br>யுறை செல்வர் தாமே. | 9 | பசுமையான, வாள்போன்ற ஒளி பொருந்திய கூரிய கண்களையுடைய ஆதிசேடனாகிய பாம்புப் படுக்கையில் பள்ளி கொள்ளும் திருமாலுடன், குளிர்ந்த தாமரைப்பூவில் வீற்றிருக்கின்ற பிரமனும் முழுமுதற்பொருளான இறைவனைக் காணமுடியாமல், அழகிய கண்களையுடைய பெருமானே அருள்புரிக என்று அவரவர் தாம்தாம் அறிந்த முறையில் வணங்கும் வண்ணம் விளங்கும் சிவபெருமானே, அந்தணர்கள் ஒன்றுகூடி நால் வேதங்களைப் பாடவும், பெண்கள் நடனமாடவும், மாத விழாக்களும், நாள் விழாக்களும் நிறைந்துள்ள திருநெல்வேலியில் வீற்றிருந்தருளும் அருட்செல்வராவார். அவரை வழிபடுவீர்களாக. |
| **3797.** துவருறு விரிதுகி லாடையர்<br>வேடமில் சமணரென்னும்<br>அவருறு சிறுசொலை யவமென<br>நினையுமெம் மண்ணலார்தாம்<br>கவருறு கொடிமல்கு மாளிகைச்<br>சூளிகை மயில்களாலத்<br>திவருறு மதிதவழ் திருநெல்வேலி<br>யுறை செல்வர் தாமே. | 10 | மருதந்துவரில் தோய்ந்த மஞ்சட் காவிஆடை அணியும் புத்தர்களும், வேடநெறி நில்லாத சமணர்களும் கூறுகின்ற புன்மொழிகளைப் பயனற்றன என்று நினையுங்கள். எம் தலைவராகிய சிவபெருமான், கண்டார் மனங்களைக் கவர்கின்ற, கொடி விளங்கும் மாளிகையின் நிலா முற்றத்தில் மயில்கள் நடமாட, அதனைக் காணத் தேவர்களும் வருகின்ற, சந்திரன் தவழ்கின்ற திருநெல்வேலியில் வீற்றிருந்தருளும் அருட்செல்வர் ஆவார். அவரை வழிபடுங்கள். |
| **3798.** பெருந்தண்மா மலர்மிசை யயனவ<br>னனையவர் பேணுகல்வித்<br>திருந்துமா மறையவர் திருநெல்வேலி<br>யுறை செல்வர்தம்மைப்<br>பொருந்துநீர்த் தடமல்கு புகலியுண்<br>ஞானசம் பந்தன்சொன்ன<br>அருந்தமிழ் மாலைகள் பாடியாடக்<br>கெடு மருவினையே. | 11 | பெரிய, குளிர்ந்த, சிறந்த தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமனைப் போன்றவர்களான தாம் விரும்பும் கல்வியினால் மனம் பண்பட்ட, சிறந்த வேதங்களை உணர்ந்த அந்தணர்களை உடைய திருநெல்வேலியில் வீற்றிருந்தருளும் அருட்செல்வரான சிவபெருமானைப் போற்றி, பொருந்திய நீர்நிலைகள் நிரம்பிய சீகாழி ஞானசம்பந்தன் பாடிய பாமாலைகளைப் பாடிப் பரவசத்துடன் ஆட, போக்க முடியாத வினைகளெல்லாம் அழிந்து போகும். |

## 93. திருஅம்பர்மாகாளம்

பண் : சாதாரி

பதிக எண் : 93

3799. படியுளார் விடையினர் பாய்புலித்
தோலினர் பாவநாசர்
பொடிகொண்மா மேனியர் பூதமார்
படையினர் பூணுநூலர்
கடிகொண்மா மலரிடு மடியினர்
பிடிநடை மங்கையோடும்
அடிகளா ரருள்புரிந் திருப்பிட
மம்பர்மா காளந்தானே. 1

"காளியேத்தும் அம்பர் மாகாளம்" என்றதால் அம்பன், அம்பாசுரன் என்ற இரண்டு அரக்கர்களைக் கொன்ற பாவம் நீங்கக் காளி வழிபட்ட தலம். வைகாசி மாதம் ஆயில்ய நாளில் சோமாசிமாற நாயனார் உற்சவம் சிறப்பாக நடைபெறுகிறது. கோச்செங்கட்சோழன் பூசித்த தலம். காவிரியின் தென்கரைத்தலம்.

சிவபெருமான் உலகில் பொருந்திய இடப வாகனம் உடையவர். பாய்கின்ற புலித்தோலை அணிந்துள்ளவர். மன்னுயிர்களின் பாவத்தைப் போக்குபவர். திருவெண்ணீறணிந்த திருமேனியர். பூதங்களாகிய படைகளை உடையவர். முப்புரி நூலணிந்த மார்பினர். பூசிக்கும் அடியவர்களால் நறுமணம் கமழும் மலர்கள் இடப்படுகின்ற திருவடிகளை யுடையவர். அத்தகைய பெருமான் பெண்யானை போன்ற நடையுடைய உமாதேவியோடு அன்பர்களுக்கு அருள்புரிந்து வீற்றிருந்தருளும் இடமாவது திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும்.

3800. கையின்மா மழுவினர் கடுவிட
முண்டவெங் காளகண்டர்
செய்யமா மேனிய ரூனம
ருடைதலைப் பலிதிரிவார்
வையமார் பொதுவினின் மறையவர்
தொழுதெழ நடமதாடும்
ஐயன்மா தேவியோ டிருப்பிட
மம்பர்மா காளந்தானே. 2

"இருப்பிடம் அம்பர் மகாளந் தானே" என்பது பதிக மகுடம்

சிவபெருமான் கையில் பெருமையான மழுப்படையை உடையவர். கொடிய விடமுண்டதால் கரிய கண்டத்தை உடையவர். சிவந்த திருமேனியர். ஊன்பொருந்திய உடைந்த மண்டையோட்டில் பிச்சையேற்றுத் திரிபவர். உலகனைத்திற்கும் உரியதான சிற்சபையில் அந்தணர்கள் தொழுது போற்ற நடனமாடும் தலைவர். அப்பெருமான் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம் திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும்.

3801. பரவின வடியவர் படுதுயர்
கெடுப்பவர் பரிவிலார்பால்
கரவினர் கனலன வுருவினர்
படுதலைப் பலிகொடேகும்
இரவினர் பகலெரி கானிடை
யாடிய வேடர்பூணும்
அரவின ரரிவையோ டிருப்பிட
மம்பர்மா காளந்தானே. 3

இறைவர் தம்மை வணங்கிப் போற்றும் அடியவர்கள் படும் துயரத்தைத் தீர்ப்பவர். தம்மிடத்து அன்பில்லாதவர்கள்பால் தோன்றாத நிலையில் மறைந்திருப்பவர். நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமுடையவர். பிரமகபாலம் ஏந்திப் பிச்சை ஏற்றுத் திரிபவர். நண்பகல் போல் சுடுகின்ற முதுகாட்டில் இரவில் நெருப்பேந்தி ஆடும் வேடத்தை உடையவர். பாம்பை அணிந்துள்ளவர். அப்பெருமான் உமாதேவி யோடு வீற்றிருந்தருளும் இடம் திருஅம்பர் மாகாளம் என்னும் திருத்தலமாகும்.

| | | |
|---|---|---|
| **3802.** நீற்றினர் நீண்டவார் சடையினர்<br>படையினர் நிமலர்வெள்ளை<br>ஏற்றின ரெரிபுரி கரத்தினர்<br>புரத்துளா ருயிரைவவ்வும்<br>கூற்றினர் கொடியிடை முனிவுற<br>நனிவருங் குலவுகங்கை<br>ஆற்றின ரரிவையோ டிருப்பிட<br>மம்பர்மா காளந்தானே. | 4 | சிவபெருமான் திருவெண்ணீறணிந்த மேனியர். நீண்டு தொங்கும் சடையினர். கரங்களில் பலவகை ஆயுதங்களை ஏந்தியுள்ளவர். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவர். வெண்ணிற இடபத்தை வாகனமாக உடையவர். நெருப்பேந்திய கரத்தினர். திரிபுர அசுரர்களின் உயிரைக் கவரும் எமனாக விளங்கியவர். கொடி போன்ற இடையுடைய உமாதேவி கோபம் கொள்ளும்படி கங்கையாகிய நங்கையை மகிழ்வுடன் சடையில் தாங்கியவர். அப்பெருமான் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம் திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும். |
| **3803.** புறத்தின ரகத்துளர் போற்றிநின்<br>றழுதெழு மன்பர்சிந்தைத்<br>திறத்தின ரறிவிலாச் செதுமதித்<br>தக்கன்றன் வேள்விசெற்ற<br>மறத்தினர் மாதவர் நால்வருக்<br>காலின்கீ ழருள்புரிந்த<br>அறத்தின ரரிவையோ டிருப்பிட<br>மம்பர்மா காளந்தானே. | 5 | இறைவர் உள்ளும், புறமும் நிறைந்தவர். உள்ளம் உருகிப் போற்றிக் கண்ணீர் மல்கும் அன்பர்களின் சிந்தையில் விளங்குபவர். அறிவில்லாத, அழிதற்கேதுவாகிய புத்தி படைத்த தக்கனின் வேள்வியை அழித்தவர். சனகர், சனந்தரர், சனாதரர், சனற்குமாரர் என்ற நான்கு முனிவர்கட்குக் கல்லாலின் கீழிருந்து அறமுரைத்து அருள்புரிந்தவர். அப்பெருமான் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம் திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும். |
| **3804.** பழகமா மலர்பறித் திண்டைகொண்<br>டிறைஞ்சுவார் பாற்செறிந்த<br>குழகனார் குணம்புகழ்ந் தேத்துவா<br>ரவர்பலர் கூடநின்ற<br>கழகனார் கரியுரித் தாடுகங்<br>காளர்நங் **காளியேத்தும்<br>அழகனா** ரரிவையோ டிருப்பிட<br>மம்பர்மா காளந்தானே. | 6 | இறைவர், தினந்தோறும் மலர் பறித்து மாலை கட்டி வழிபாடு செய்யும் அடியவர்களைவிட்டு நீங்காத இளையர். தம் குணங்களைப் புகழ்ந்து போற்றும் அன்பர்கள் கூட்டத்திலிருக்கும் அழகர். யானைத் தோலை உரித்துப் போர்த்தி ஆடுபவர். எலும்பு மாலை அணிந்துள்ளவர். **காளியால் வணங்கப்பட்ட அழகர்.** அப்பெருமான் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம் திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும். |

| பாடல் | | விளக்கம் |
|---|---|---|
| **3805.** சங்கவார் குழையினர் தழலன<br>வுருவினர் தமதருளே<br>எங்குமா யிருந்தவ ரருந்தவ<br>முனிவருக் களித்துகந்தார்<br>பொங்குமா புனல்பரந் தரிசிலின்<br>வடகரை திருத்தம்பேணி<br>அங்கமா றோதுவா ரிருப்பிட<br>மம்பர்மா காளந்தானே. | 7 | இறைவர் சங்கினாலாகிய குழையைக் காதிலணிந்துள்ளவர். நெருப்புப் போன்ற செந்நிற மேனியர். தமது அருளால் எங்கும் வியாபித்துள்ளவர். அரிய தவம் செய்யும் முனிவர்களுக்குத் தம்மையே அளித்து மகிழ்பவர். அவர் அங்கு, பொங்கும் நீர் பரந்த அரிசிலாற்றினைத் தீர்த்தமாகக் கொண்டு, வேதத்தின் ஆறு அங்கங்களை ஓதுபவராய் வீற்றிருந்தருளும் இடம் ஆற்றின் வடகரையில் உள்ள திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும். |
| **3806.** பொருசிலை மதனனைப் பொடிபட<br>விழித்தவர் பொழிலிலங்கைக்<br>குரிசிலைக் குலவரைக் கீழுற<br>வடர்த்தவர் கோயில்கூறில்<br>பெருசிலை நலமணி பீலியோ<br>டேலமும் பெருகநுந்தும்<br>அரிசிலின் வடகரை யழகம<br>ரம்பர்மா காளந்தானே. | 8 | சிவபெருமான், போர்புரியும் வில்லுடைய மன்மதனை எரித்துச் சாம்பலாகும்படி நெற்றிக்கண்ணைத் திறந்து விழித்தவர். சோலைகளையுடைய இலங்கை மன்னனைக் கயிலை மலையின்கீழ் அடர்த்த அப்பெருமான் வீற்றிருந்தருளும் கோயில், பெரிய மலையினின்றும் நவமணிகளையும், மயிற்பீலி, ஏலம் முதலியவற்றையும் மிகுதியாக அடித்துக் கொண்டு வரும் அரிசிலாற்றின் வடகரையில் அமைந்துள்ள அழகிய திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும். |
| **3807.** வரியரா வதன்மிசைத் துயின்றவன்<br>றானுமா மலருளானும்<br>எரியரா வணிகழ லேத்தவொண்<br>ணாவகை யுயர்ந்துபின்னும்<br>பிரியரா **மடியவர்க் கணியராய்ப்**<br>**பணிவிலா தவருக்கென்றும்**<br>**அரியரா** யரிவையோ டிருப்பிட<br>மம்பர்மா காளந்தானே. | 9 | வரிகளையுடைய பாம்புப் படுக்கையில் பள்ளி கொள்ளும் திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் உணர்ந்து போற்ற முடியாவண்ணம் எரியுருவாய்ச் சிவபெருமான் உயர்ந்து நின்றவர். தம்மிடத்து அன்பு செலுத்தும் அடியவர்கட்கு அணியராகியும், பணிவில்லாதவர்கட்கு அரியராயும் விளங்குபவர். அவர் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம் திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலமாகும். |
| **3808.** சாக்கியக் கயவர்வன் றலைபறிக்<br>கையரும் பொய்யினானூல்<br>ஆக்கிய மொழியவை பிழையவை<br>யாதலில் வழிபடுவீர்<br>வீக்கிய வரவுடைக் கச்சையா<br>னிச்சையா னவர்கட்கெல்லாம்<br>ஆக்கிய வரனுறை யம்பர்மா<br>காளமே யடை மினீரே. | 10 | புத்தர்களாகிய கீழ்மக்களும், தலைமயிர் பறிக்கும் இயல்புடைய வஞ்சகர்களாகிய சமணர்களும், இறைவனை உணராது, பொய்யினால் சிருட்டித்த நூல்களிலுள்ள உபதேசங்கள் குற்றமுடையவை. அவற்றைக் கேட்கவேண்டா. பாம்பைக் கச்சாக அணிந்தவனும், தன்னிடத்துப் பக்தி செலுத்தும் அடியவர்கட்கு அருள்புரிபவனுமான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலத்தை அடைந்து வழிபடுவீர்களாக! |

| | |
|---|---|
| **3809.** செம்பொன்மா மணிகொழித் தெழுதிரை<br>வருபுன லரிசில்சூழ்ந்த<br>அம்பர்மா காளமே கோயிலா<br>வணங்கினோ டிருந்தகோனைக்<br>கம்பினார் நெடுமதிற் காழியுண்<br>ஞானசம் பந்தன்சொன்ன<br>நம்பிநாண் மொழிபவர்க் கில்லையாம்<br>வினைநலம் பெறுவர்தாமே. 11 | செம்பொன்னையும், இரத்தினங்களையும் அடித்துக் கொண்டு அலை வரும் நீரையுடைய அரிசிலாறு சூழ்ந்த திருஅம்பர்மாகாளம் என்னும் திருத்தலத்தில் கோயில் கொண்டுள்ள, உமாதேவியோடு வீற்றிருந்தருளும் சிவபெருமானைப் போற்றி, சங்கு, சுட்ட சுண்ணாம்பு இவற்றால் சுதை பூசப்பட்ட நெடிய மதில்களையுடைய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இத்திருப்பதிகத்தை விரும்பி, நாள்தோறும் பாடுபவர்களுக்கு வினை இல்லை. அவர்கள் எல்லா நலன்களும் பெறுவர். இது உறுதி. |

## 94. திருவெங்குரு ( திருமுக்கால் )

பண் : சாதாரி

பதிக எண் : 94

| | |
|---|---|
| **3810.** விண்ணவர் தொழுதெழு வெங்குரு மேவிய<br>சுண்ணவெண் பொடியணி வீரே<br>சுண்ணவெண் பொடியணி வீரும தொழுகழல்<br>எண்ணவல் லாரிட ரிலரே. 1<br><br>காழித்தலத்தின் நான்காவது பெயர் வெங்குரு. பிரமனால் இகழப்பட்ட அசுர குருவாகிய சுக்கிரன் நாரதருடைய உபதேசத்தின்படி வந்து பூசித்துத் தேவ குருவுக்கு இணையாகப் பெற்றனன். நரகர் தன்னைக் கொடியவன் என்று இகழும் பழி நீங்க இயமன் பூசித்தமையாலும் இப்பெயர் பெற்றது. | தேவர்கள் தொழுது போற்றுகின்ற திருவெங்குரு என்னும் திருத்தலத்தை விரும்பி வீற்றிருந்தருளும், சுண்ணம் போன்ற வெண்மையான திருநீற்றை அணிந்துள்ள சிவபெருமானே! சுண்ணம் போன்ற வெண்மையான திருநீற்றினை அணியும் பெருமானாகிய உம் தொழத்தக்க திருவடிகளைத் தியானிக்க வல்லவர் துன்பம் அற்றவர்கள் ஆவர். |
| **3811.** வேதியர் தொழுதெழு வெங்குரு மேவிய<br>ஆதிய வருமறை யீரே<br>ஆதிய வருமறை யீருமை யலர்கொடு<br>ஓதிய ருணர்வுடை யோரே. 2 | நால்வேதங்களையும் ஐயந்திரிபறக் கற்ற அந்தணர்கள் வழிபடுகின்ற திருவெங்குரு என்னும் திருத்தலத்தை விரும்பி வீற்றிருந்தருளும், முதன்மையான வேதத்தின் பொருளானவரே! முதன்மையான வேதத்தின் பொருளானவரான உம்மை மலர்கள் கொண்டு பூசித்துத், தோத்திரம் செய்பவர்கள் சிவஞானம் உடையவர்கள் ஆவர். |
| **3812.** விளங்குதண் பொழிலணி வெங்குருமேவிய<br>இளம்பிறை யணிசடை யீரே<br>இளம்பிறை யணிசடை யீரும திணையடி<br>உளங்கொள வுறுபிணி யிலரே. 3<br><br>திருமுக்கால் / இடைமடக்கு<br>செய்யுளின் நான்கடிகளுள் இரண்டாவது அடி மூன்றாவது அடியினுள் மீண்டும் மடக்கப்பட்டு விரவி வருதலால் மூன்றடி உள்ளது போது இயல்வது. முதல், நான்காமடிகளில் மடக்கு வராது. இடையின் இரண்டின் வருதலால் இடைமடக்கெனப்பட்டது. | பெருமையுடன் விளங்குகின்ற குளிர்ந்த சோலைகளையுடைய அழகிய திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும், இளம்பிறைச்சந்திரனை அணிந்த சடையினை யுடைய சிவபெருமானே! இளம்பிறைச் சந்திரனைச் சடையில் அணிந்துள்ள உம்முடைய இரண்டு திருவடிகளையும் மனத்தால் நினைத்துத் தியானிப்பவர்கள் உற்ற பிணிகள் இல்லாதவராவர். |

| | | |
|---|---|---|
| **3813.** | விண்டலர் பொழிலணி வெங்குரு மேவிய<br>வண்டமர் வளர்சடை யீரே<br>வண்டமர் வளர்சடை யீருமை வாழ்த்துமத்<br>தொண்டர்க டுயர்பிணி யிலரே. **4** | முறுக்குடைந்து விரிகின்ற மலர்களையுடைய சோலைகளால் அழகுடன் திகழும் திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும், வண்டுகள் விரும்பும் நீண்ட சடையுடைய சிவபெருமானே! வண்டுகள் விரும்பும் சடையினையுடைய பெருமானாகிய உம்மை வாழ்த்தும் சிறப்புடைய தொண்டர்கள் துயரும், பிணியும் அற்றவர்கள் ஆவர். |
| **3814.** | மிக்கவர் தொழுதெழு வெங்குரு மேவிய<br>அக்கினொ டரவசைத் தீரே<br>அக்கினொ டரவசைத் தீரும தடியிணை<br>தக்கவ ருறுவது தவமே. **5** | அன்பின் மிக்கார் தொழுது எழுகின்ற திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, அக்குப்பாசியோடு பாம்பையும் அணிந்துள்ள சிவபெருமானே! அக்குப்பாசியோடு பாம்பையும் அணிந்துள்ள பெருமானாகிய உம் இணையடிகளைத் துதிக்கும் தகுதிபெற்ற அடியவர்கள் பெறுவது சிறந்த தவத்தின் பயனாகும். |
| **3815.** | வெந்தவெண் பொடியணி வெங்குரு மேவிய<br>அந்தமில் பெருமையி னீரே<br>அந்தமில் பெருமையி னீருமை யலர்கொடு<br>சிந்தைசெய் வோர்வினை சிதைவே. **6** | சுடப்பட்ட வெண்ணிறத் திருவெண்ணீற்றினை அணிந்து, திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற அழிவில்லாத புகழுடைய சிவபெருமானே! அழிதல் இல்லாத புகழுடைய உம்மை மலர்கள் கொண்டு வழிபட்டுத் தியானிப்பவர்களின் வினைகள் சிதைந்து போகும். |
| **3816.** | விழமல்கு பொழிலணி வெங்குரு மேவிய<br>அழன்மல்கு மங்கையி னீரே<br>அழன்மல்கு மங்கையி னீருமை யலர்கொடு<br>தொழவல்லல் கெடுவது துணிவே. **7** | திருவிழாக்கள் நிறைந்ததும், சோலைகள் அழகு செய்வதுமான திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் நெருப்பேந்திய அழகிய திருக்கரமுடைய உம்மை மலர்கள் கொண்டு வழிபடுபவர்களின் துன்பங்கள் கெடுவது நிச்சயம். |
| **3817.** | வித்தக மறையவர் வெங்குரு மேவிய<br>மத்தநன் மலர்புனை வீரே<br>மத்தநன் மலர்புனை வீரும தடிதொழுஞ்<br>சித்தம துடையவர் திருவே. **8** | சாமர்த்தியமுடைய, நான்மறைகளைக் கற்றுவல்ல அந்தணர்கள் நிறைந்த திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, ஊமத்த நன்மலரினைச் சூடியுள்ள, சிவபெருமானே! ஊமத்தம் மலர் சூடிய உம் திருவடிகளைத் தொழும் சித்தமுடையவர்கள் எல்லாச் செயல்களும் பெற்றவர் ஆவார். |

**3818.** மேலவர் தொழுதெழு வெங்குரு மேவிய
ஆலநன் மணிமிடற் றீரே
ஆலநன் மணிமிடற் றீரும தடிதொழுஞ்
சீலம துடையவர் திருவே. 9

மேலான பக்தர்கள் தொழுதெழுகின்ற திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, விடம் தங்கிய அழகிய கண்டத்தை உடைய சிவபெருமானே! விடம் தங்கிய அழகிய கண்டத்தையுடையவராகிய உம் திருவடிகளைத் தொழுகின்ற நல்லொழுக்கம் உடையவர்களே பேரின்பம் பெறுவர்.

**3819.** விரைமல்கு பொழிலணி வெங்குரு மேவிய
அரைமல்கு புலியத ளீரே
அரைமல்கு புலியத ளீரும தடியிணை
உரைமல்கு புகழவ ருயர்வே. 10

நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த அழகிய திருவெங்குரு என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, அரையில் கட்டிய புலித்தோல் ஆடையையுடைய சிவபெருமானே! அரையில் கட்டிய புலித்தோலாடையையுடைய பெருமானாகிய உம் இணையடிகளை நிரம்பிய சொற்களால் புகழ்பவர்களே உயர்வு அடைவர்.

XXXXXXXXXXXXXXXXXXXXXX 11

## 95. திருவின்னம்பர் ( திருமுக்கால் )

**பண் : சாதாரி** **பதிக எண் : 95**

**3820.** எண்டிசைக் கும்புகழி ன்னம்பர் மேவிய
வண்டிசைக் குஞ்சடை யீரே
வண்டிசைக் குஞ்சடை யீருமை வாழ்த்துவார்
தொண்டிசைக் குந்தொழி லோரே. 1

"எழுத்தறிவித்தவன் இறைவனாவான்".

சுவாமி எழுத்தறிநாதேசுவரர். அகத்தியர் பூசித்து இலக்கணம் உபதேசிக்கப்பட்ட தலம். சிவபெருமான் கணக்கராய்க் 'கோயிற் கணக்கை' அரசனிடம் ஒப்புவித்த தலம்.

எட்டுத் திசைகளிலும் புகழ்பரப்பும் திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, வண்டு இசைக்கும் மலர்மாலை அணிந்த சடையுடைய சிவபெருமானே! வண்டிசைக்கும் மலர்மாலை அணிந்துள்ள சடையுடைய உம்மை வாழ்த்தும் அடியவர்கள் தொண்டு நெறியில் சிறப்புடன் நின்று மேம்படுவரே.

**3821.** யாழ்நரம் பின்னிசை யின்னம்பர் மேவிய
தாழ்தரு சடைமுடி யீரே
தாழ்தரு சடைமுடி யீருமைச் சார்பவர்
ஆழ்துய ரருவினை யிலரே. 2

ஐராவதம் பூசை செய்த தலம். கஜப் பிரதிட்டை விமானம். இன்னன் – சூரியன். சூரியன் வழிபட்ட தலம். அகத்தியரும் வழிபட்டுள்ளார். இனன் நம்பு ஊர் – இன்னம்பூர் என்றும் சொல்லுவார்கள்.

யாழின் இனிய இசையை உடைய திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற நீண்ட தாழ்ந்த சடைமுடியுடைய சிவபெருமானே! நீண்டு தாழ்ந்த சடைமுடியுடைய உம்மைச் சார்ந்து பக்தியுடன் வழிபடுபவர்கள் பெருந்துன்பத் திலிருந்தும், அதற்குக் காரணமான அரிய வினையிலிருந்தும் நீங்கியவராவர்.

**3822.** இளமதி நுதலியொ டின்னம்பர் மேவிய
வளமதி வளர்சடை யீரே
வளமதி வளர்சடை யீருமை வாழ்த்துவார்
உளமதி மிகவுடை யோரே. 3

சுவாமி எழுத்தறிநாதராக இருப்பதால் இப்பகுதி மக்கள் தங்கள் மழலைக் குழந்தைகளை எடுத்து வந்து கோயிலில் அவர் திருமுன் முதலில் எழுத, படிக்க வைக்கிறார்கள்.

பிறைச்சந்திரனைப் போன்ற நெற்றியையுடைய உமாதேவியோடு திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, குளிர்ச்சி பொருந்திய சந்திரனை அணிந்த நீண்ட சடையுடைய சிவபெருமானே! குளிர்ச்சி பொருந்திய சந்திரனை அணிந்த நீண்ட சடையுடைய உம்மை வாயால் வாழ்த்தி வழிபடுவோர் பேரறிவுடையவராவர்.

**3823.** இடிகுர லிசைமுர லின்னம்பர் மேவிய
கடிகமழ் சடைமுடி யீரே
கடிகமழ் சடைமுடி யீரும கழறொழும்
அடியவ ரருவினை யிலரே. 4

"இடைமடக்கான பன்னுந்தமிழ் தொடை மாலைப்பாடல் புனைந்து பரவி'' என்பது சேக்கிழார் வாக்கு. **இடைமடக்கு** – யாப்பின் விகற்பம். இது திருமுக்கால் எனப் பெயர் பெறும்.

இடிக்குரல் போன்று ஒலிக்கும் முரசு, முழவு போன்ற வாத்தியங்கள் ஒலிக்க, திரு இன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, நறுமணம் கமழும் சடைமுடி உடைய சிவபெருமானே! நறுமணம் கமழும் சடைமுடியுடைய உம் திருவடிகளைத் தொழும் அடியவர்கள் வினைநீக்கம் பெற்றவராவர்.

**3824.** இமையவர் தொழுதெழு மின்னம்பர் மேவிய
உமையொரு கூறுடை யீரே
உமையொரு கூறுடை யீருமை யுள்குவார்
அமைகில ராகில ரன்பே. 5

அன்பே அமைகிலர் ஆகிலர் – அன்பினால் உள்ளம் முற்றுப் பெறாது பெருகுபவர்.

உமையைத் திருமேனியின் ஓர் பாகத்திற் கொண்டவரே, தேவர்கள் தொழுது போற்றும் திரு இன்னம்பரில் எழுந்தருள்பவரே, உமை பாகராகிய உம்மை உள்ளத்தால் நினைந்து ஏத்துபவர் அன்பு அமையப் பெறாதவர் ஆகார்.

**3825.** எண்ணரும் புகழுடை யின்னம்பர் மேவிய
தண்ணருஞ் சடைமுடி யீரே
தண்ணருஞ் சடைமுடி யீருமைச் சார்பவர்
விண்ணவ ரடைவுடை யோரே. 6

நினைத்தற்கரிய அளவில்லாத பெரும்புகழை யுடைய திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, குளிர்ந்த சடைமுடியுடைய சிவபெருமானே! குளிர்ந்த சடைமுடியுடைய உம்மைச் சார்ந்து வழிபடுபவர்கள் தேவர்களுக்குரிய சிறப்பினை அடைவர்.

**3826.** எழிறிக ழும்பொழி லின்னம்பர் மேவிய
நிழறிகழ் மேனியி னீரே
நிழறிகழ் மேனியி னீருமை நினைபவர்
குழறிய கொடுவினை யிலரே. 7

அழகுடன் விளங்கும் சோலைகள் சூழ்ந்த திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, ஒளி விளங்கும் திருமேனியுடைய சிவபெருமானே! ஒளி விளங்கும் திருமேனியுடைய உம்மை நினைப்பவர்களுடைய, வாட்டும் குழம்பிய கொடுவினை கெட்டொழியும்.

| | |
|---|---|
| **3827.** ஏத்தரும் புகழணி யின்னம்பர் மேவிய<br>தூர்த்தனைத் தொலைவுசெய் தீரே<br>தூர்த்தனைத் தொலைவுசெய் தீருமைத் தொழுபவர்<br>கூர்த்தநற் குணமுடை யோரே. **8** | போற்றுதற்கு அரிய புகழுடைய அழகிய திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவரும், தூர்த்தனான இராவணனை அடர்த்தவருமான சிவபெருமானே! தூர்த்தனான இராவணனை அடர்த்த உம்மைத் தொழுபவர் பேரறிவும், நற்குணமும் உடையவராவர். |
| **3828.** இயலுளோர் தொழுதெழு மின்னம்பர் மேவிய<br>அயனுமா லறிவரி யீரே<br>அயனுமா லறிவரி யீரும தடிதொழும்<br>இயலுளார் மறுபிறப் பிலரே. **9** | நல்லியல்புடையோர் தொழுது எழுகின்ற திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் சிவபெருமானே! பிரமனும், திருமாலும் அறிவதற்கரிய உம் திருவடிகளைத் தொழும் இயல்பு உடையவர்கட்கு மறுபிறப்பு இல்லை. |
| **3829.** ஏரமர் பொழிலணி யின்னம்பர் மேவிய<br>தேரமண் சிதைவுசெய் தீரே<br>தேரமண் சிதைவுசெய் தீருமைச் சேர்பவர்<br>ஆர்துய ரருவினை யிலரே. **10**<br>———<br>"எழுதுகீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே" என்பது அப்பர் வாக்கு. | ஏர் எனப்படும் திருத்தலத்திற்கு அருகிலுள்ள சோலைகள் சூழ்ந்த அழகிய திரு இன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றவராய், சமண, புத்த நெறிகளிலுள்ள குறைகளைக் காட்டித் தாழ்ச்சியுறச் செய்த சிவபெருமானே! சமண, புத்த நெறிகள் தாழ்வடையும்படி செய்த உம் திருவடிகளைப் போற்றி வணங்குபவர்கட்குத் துன்பமும், அதற்குக் காரணமான தீவினையும் இல்லை. |
| **3830.** ஏடமர் பொழிலணி யின்னம்பர் ரீசனை<br>நாடமர் ஞானசம் பந்தன்<br>நாடமர் ஞானசம் பந்தன நற்றமிழ்<br>பாடவல் லார்பழி யிலரே. **11** | இதழ்களையுடைய மலர்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த அழகிய திருஇன்னம்பர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானைப் போற்றி, தேசமெல்லாம் விரும்புகின்ற ஞானசம்பந்தன் அருளிய நற்றமிழாலான இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கள் பழியற்றவர் ஆவர். |

## 96. திருநெல்வெண்ணெய் ( திருமுக்கால் )

**பண் : சாதாரி** — **பதிக எண் : 96**

| | |
|---|---|
| **3831.** நல்வெணெய் விழுதுபெய் தாடுதிர் நாடொறும்<br>நெல்வெணெய் மேவிய நீரே<br>நெல்வெணெய் மேவிய நீருமை நாடொறும்<br>**சொல்வண மிடுவது சொல்லே.** **1**<br>———<br>இங்கு தினமும் வெண்ணையாட்டி வழிபடுதல் சிறப்பு. | நல்ல வெண்ணெய் விழுதாகப் பெய்து செய்யப்பட்ட திருமஞ்சனம் நாள்தோறும் கொண்டருளுவீர். திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் சிவபெருமானே! திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் உம்மைத் தினந்தோறும் துதித்துச் சொல்லப்படுகின்ற சொற்களே பயன்தரும் சொற்களாகும். |

| | |
|---|---|
| **3832.** நிச்சலு மடியவர் தொழுதெழு நெல்வெணெய்க்<br>கச்சிள வரவசைத் தீரே<br>கச்சிள வரவசைத் தீருமைக் காண்பவர்<br>அச்சமொ டருவினை யிலரே. 2 | நாள்தோறும் அடியவர்கள் தொழுது எழுகின்ற, நெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, இளமையான பாம்பைக் கச்சாக இடையில் அணிந்துள்ள சிவபெருமானே! அவ்வாறு கச்சாக இளம் பாம்பை அணிந்துள்ள உம்மைத் தரிசிப்பவரே துன்பங்களைக் கண்டு அச்சப்படாதவர். கொடிய வினைகளும் இல்லாதவர். |
| **3833.** நிறைவிரி தொல்புகழ் நெல்வெணெய் மேவிய<br>அரைவிரி கோவணத் தீரே<br>அரைவிரி கோவணத் தீருமை யலர்கொடு<br>**உரைவிரிப் போருயர்ந் தோரே.** 3<br><br>நாமெல்லாம் உயர்ந்தவர்கள் ஆவோம் | வரிசையாக உலகெங்கும் பரந்த தொன்மையான புகழினையுடைய திருநெல்வெண்ணெயில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, இடையில் விரித்துக் கட்டிய கோவணத்தையுடைய சிவபெருமானே! அவ்வாறு கோவணத்தை விரித்துக் கட்டிய உம்மை மலர்களைக் கொண்டு பூசித்து, உமது புகழைப் போற்றிப் பாடுபவர்கள் உயர்ந்தவர்கள் ஆவர். |
| **3834.** நீர்மல்கு தொல்புகழ் நெல்வெணெய் மேவிய<br>ஊர்மல்கி யுறையவல் லீரே<br>ஊர்மல்கி யுறையவல் லீருமை யுள்குதல்<br>பார்மல்கு புகழவர் பண்பே. 4<br><br>அவர் பண்பு பார்மல்கு புகழ் | நீர்வளம்மிக்க தொன்மையான புகழ் பொருந்திய திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தை விரும்பி அவ்வூரில் நிலையாக வீற்றிருந்தருளும் சிவபெருமானே! அவ்வாறு அவ்வூரில் நிலையாக வீற்றிருந்தருளுகின்ற உம்மை எப்போதும் இடையறாது தியானித்தலே உலகின் உயர்ந்த புகழையுடைய சிவஞானிகள் இயல்பாகும். |
| **3835.** நீடிளம் பொழிலணி நெல்வெணெய் மேவிய<br>ஆடிளம் பாப்பசைத் தீரே<br>ஆடிளம் பாப்பசைத் தீருமை யன்பொடு<br>பாடுள முடையவர் பண்பே. 5 | நீண்ட இளமரங்களையுடைய சோலைகள் சூழ்ந்த அழகிய திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, ஆடுகின்ற இளம்பாம்பினைக் கச்சாகக் கட்டியுள்ள சிவபெருமானே! அவ்வாறு ஆடுகின்ற இளம்பாம்பைக் கச்சாக அணிந்த உம்மை அன்போடு பாடுகின்ற உள்ளம் உடையவர்களின் பண்பே சிறந்ததாகும். |
| **3836.** நெற்றியோர் கண்ணுடை நெல்வெணெய் மேவிய<br>பெற்றிகொள் பிறைநுத லீரே<br>பெற்றிகொள் பிறைநுத லீருமைப் பேணுதல்<br>கற்றறி வோர்கள்தங் கடனே. 6 | நெற்றிக்கண்ணை உடையவரும், திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள்பவரும், அடியவர்கட் கருளும் பண்புடைய பிறை போன்ற நெற்றியை யுடைய உமாதேவியை உடையவருமாகிய சிவபெருமானே! அவ்வாறு பிறை போன்ற நெற்றியுடைய உமாதேவியை உடைய உம்மை வழிபடுதலே ஞான நூல்களைக் கற்றறிந்த அறிஞர்களின் கடமையாகும். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3837.** நிறையவர் தொழுதெழு நெல்வெணெய் மேவிய<br>கறையணி மிடறுடை யீரே<br>கறையணி மிடறுடை யீருமைக் காண்பவர்<br>உறைவதும் உம்அடிக் கீழே. 7 | நிறையுடையவர்கள் தொழுது எழுகின்ற திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, விடமுண்ட கறுத்த கண்டத்தையுடைய சிவபெருமானே! அவ்வாறு விடமுண்ட கறுத்த கண்டத்தையுடைய உம்மைத் தரிசிப்பவர்கள் உம் திருவடிக்கீழ் என்றும் வீற்றிருப்பர். |
| **3838.** நெருக்கிய பொழிலணி நெல்வெணெய் மேவியன்<br>றரக்கனை யசைவுசெய் தீரே<br>அரக்கனை யசைவுசெய் தீருமை யன்புசெய்<br>திருக்கவல் லாரிட ரிலரே. 8 | நெருங்கிய சோலைகள் சூழ்ந்து அழகுடன் விளங்கும் திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவரும், அரக்கனான இராவணனை வலிகுன்றச் செய்தவரான உம்மை அன்புடன் வணங்குபவர்கள் துன்பமே இல்லாதவர்கள் ஆவர். |
| **3839.** நிரைவிரி சடைமுடி நெல்வெணெய் மேவியன்<br>றிருவரை யிடர்கள் செய்தீரே<br>இருவரை யிடர்கள் செய்தீருமை யிசைவொடு<br>பரவவல் லார்பழி யிலரே. 9 | வரிசையாக விரிந்த சடைமுடியினை உடையவராய், திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந் தருளுபவராய், அன்று திருமாலும், பிரமனும் உம் அடிமுடி காணாமல் துன்பம் அடையச் செய்த சிவபெருமானே! அவ்வாறு திருமால், பிரமன் என்னும் இருவரைத் துன்பம் அடையச் செய்தவராகிய உம்மை உள்ளும், புறமும் ஒத்து வணங்கிப் போற்றுபவர்கள் பழியில்லாதவர் ஆவர். |
| **3840.** நீக்கிய புனலணி நெல்வெணெய் மேவிய<br>சாக்கியச் சமண் கெடுத் தீரே<br>சாக்கியச் சமண்கெடுத் தீருமைச் சார்வது<br>பாக்கிய முடையவர் பண்பே. 10 | வறுமை, பிணி முதலியவற்றை நீக்கியவரும், திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவரும், புத்தமும், சமணமும் கெடுத்தவருமாகிய சிவபெருமானே! அவ்வாறு புத்தமும், சமணமும் கெடுத்த உம்மைப் பற்றுக்கோடாகச் சார்வது புண்ணியம் செய்தவர்களின் பண்பாகும். |
| **3841.** நிலமல்கு தொல்புகழ் நெல்வெணெ யீசனை<br>நலமல்கு ஞானசம் பந்தன்<br>நலமல்கு ஞானசம் பந்தன் செந்தமிழ்<br>சொலமல்கு வார்துய ரிலரே. 11<br><br>நெல் வெண்ணெய் இறைவரை நாடொறும் வாழ்த்தி வழிபடுவோர் அச்சமும் வினையும் இலராகுவர்; பழியிலர்; புகழும், பாக்கியமும் பண்புமுடையவர். | நிலவுலகெங்கும் நிறைந்த தொன்மையான புகழையுடைய திருநெல்வெண்ணெய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானைப் போற்றி, நன்மைகளைத் தருகின்ற ஞானசம்பந்தன் அருளிய இச்செந்தமிழ்ப் பதிகத்தைப் பாடுவதில் மகிழ்ச்சி மிக்கவர்கள் துன்பம் இல்லாதவர்கள் ஆவர். |

## 97. திருச்சிறுகுடி ( திருமுக்கால் )

பண் : சாதாரி

பதிக எண் : 97

| | |
|---|---|
| **3842.** திடமலி மதிளணி சிறுகுடி மேவிய<br>படமலி யரவுடை யீரே<br>படமலி யரவுடை யீருமைப் பணிபவர்<br>அடைவது மமருல கதுவே. **1** | வலிமைமிக்க மதில்களையுடைய அழகிய திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, படமெடுக்கும் பாம்பை அணிந்துள்ள சிவபெருமானே! அவ்வாறு படமெடுக்கும் பாம்பை அணிந்துள்ள உம்மை வணங்குபவர்கள் சிவலோகம் அடைவர். |
| **3843.** சிற்றிடை யுடன்மகிழ் சிறுகுடி மேவிய<br>சுற்றிய சடைமுடி யீரே<br>சுற்றிய சடைமுடி யீரும தொழுகழல்<br>உற்றவ ருறுபிணி யிலரே. **2** | குறுகிய இடையையுடைய உமாதேவியை உடனாகக் கொண்டு மகிழ்ச்சியுடன் திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற சுற்றிய சடைமுடியுடைய சிவபெருமானே! சுற்றிய சடைமுடியுடைய உம் திருவடிகளைத் தொழுது வணங்குபவர்கட்குப் பிணி எதுவும் இல்லை. |
| **3844.** தெள்ளிய புனலணி சிறுகுடி மேவிய<br>துள்ளிய மானுடை யீரே<br>துள்ளிய மானுடை யீரும தொழுகழல்<br>உள்ளுதல் செயநல முறுமே. **3** | தெளிந்த நீர்வளமுடைய திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, துள்ளிக் குதிக்கும் மானைக் கரத்தில் ஏந்தியுள்ள சிவபெருமானே! துள்ளிக் குதிக்கும் மானை உடைய உம்முடைய திருவடிகளை நினைத்துத் தியானிக்கும் அடியவர்கள் எல்லா நலன்களையும் பெறுவர். |
| **3845.** செந்நெல வயலணி சிறுகுடி மேவிய<br>ஒன்னலர் புரமெரித் தீரே<br>ஒன்னலர் புரமெரித் தீருமை யுள்குவார்<br>சொன்னல முடையவர் தொண்டே. **4** | செந்நெல் விளையும் வயல்வளமிக்க திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, நம்மோடு சேராது பகைமை கொண்ட அசுரர்கள் வாழும் திரிபுரங்களை எரித்த சிவபெருமானே! திரிபுரம் எரித்த உம்மை நினைத்துப் போற்றும் சொல் நலமுடையவர்களே திருத்தொண்டர்கள் ஆவர். (உமது வழிபாட்டின் பலனைப் பற்றிப் பிறருக்கு உபதேசிக்கும் தக்கோர் ஆவர் என்பர்). |
| **3846.** செற்றினின் மலிபுனற் சிறுகுடி மேவிய<br>பெற்றிகொள் பிறைமுடி யீரே<br>பெற்றிகொள் பிறைமுடி யீருமைப் பேணிநஞ்<br>சற்றவ ரருவினை யிலரே. **5** | பாத்திகளில் குன்றாது பாயும் நீர்வளமுடைய திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, முடியில் தங்கும் பேறுபெற்ற பிறைச்சந்திரனை அணிந்த சடைமுடி உடைய சிவபெருமானே! பேறுபெற்ற பிறைச்சந்திரனை அணிந்த திருமுடியுடைய உம்மை மனம் குழைந்து வழிபடுபவர்கள் உலகப் பற்றற்றவர்கள். அதன் காரணமாக மேல்வரும் அருவினையும் இல்லாதவராவர். |

| | | |
|---|---|---|
| 3847. | செங்கயல் புனலணி சிறுகுடி மேவிய<br>மங்கையை யிடமுடை யீரே<br>மங்கையை யிடமுடை யீருமை வாழ்த்துவார்<br>சங்கைய திலர்நலர் தவமே. 6 | செங்கயல்மீன் விளங்கும் நீர்வளமிக்க திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற உமாதேவியைத் தம் இடப்பாகமாகக் கொண்டு விளங்கும் சிவபெருமானே! உமாதேவியைத் தம் இடப்பாகமாகக் கொண்டு விளங்கும் உம்மை வாழ்த்தும் அடியவர்கள் அச்சம் இல்லாதவராவர். நலமிக்கவரும், தவப்பேறு உடையவரும் ஆவர். |
| 3848. | செறிபொழி றழுவிய சிறுகுடி மேவிய<br>வெறிகமழ் சடைமுடி யீரே<br>வெறிகமழ் சடைமுடி யீருமை விரும்பிமெய்ந்<br>நெறியுணர் வோருயர்ந் தோரே. 7 | அடர்ந்த சோலைகள் விளங்கும் திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற நறுமணம் கமழும் சடைமுடியுடைய சிவபெருமானே! நறுமணம் கமழும் சடைமுடியுடைய உம்மை விரும்பி, அடைவதற்குரிய நெறிகளில் சன்மார்க்க நெறியில் நிற்போர் உயர்ந்தோராவர். |
| 3849. | திசையவர் தொழுதெழு சிறுகுடி மேவிய<br>தசமுக னுரநெரித் தீரே<br>தசமுக னுரநெரித் தீருமைச் சார்பவர்<br>வசையறு மதுவழி பாடே. 8 | எல்லாத் திக்குக்களிலுமுள்ளவர்கள் தொழுது போற்றும் திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றவரும், இராவணனின் வலிமை அடங்கும்படி கயிலைமலையின் கீழ் அவனை நெரித்தவருமான சிவபெருமானே! அவ்வாறு இராவணனின் வலிமையை அடக்கிய உம்மைப் பற்றுக்கோடாகக் கொண்டு வழிபடுபவர்களின் குற்றம் யாவும் தீர்ந்து குணம் பெருகும். அது உம்மை வழிபட்டதன் பலனாகும். |
| 3850. | செருவரை வயலமர் சிறுகுடி மேவிய<br>இருவரை யசைவுசெய் தீரே<br>இருவரை யசைவுசெய் தீருமை யேத்துவார்<br>அருவினை யொடுதுய ரிலரே. 9 | வயல்வளமிக்க திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளு கின்றவரும், மாறுபாடு கொண்ட திருமால், பிரமன் இவர்களை வருத்தியவருமான சிவபெருமானே! அவ்விருவரையும் வருத்திய, உம்மைப் போற்றி வழிபடுபவர்கள் நீக்குவதற்குரிய வினையும், அதன் விளைவால் உண்டாகும் துன்பமும் இல்லாதவர்கள் ஆவர். |
| 3851. | செய்த்தலை புனலணி சிறுகுடி மேவிய<br>புத்தரொ டமண்புறத் தீரே<br>புத்தரொ டமண்புறத் தீருமைப் போற்றுதல்<br>பத்தர்கள் தம்முடைப் பரிசே. 10 | வயல்களில் நீர்பாயும் அழகிய சிறுகுடி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றவராய்ப், புத்தர், சமணர்கட்குப் புறம்பாக இருக்கும் சிவபெருமானே! புத்தர் சமணர்கட்குப் புறம்பான உம்மைப் போற்றி வணங்குதலையே பத்தர்கள் தம்முடைய பேறாகக் கொள்வர். |

| | | |
|---|---|---|
| **3852.** தேனமர் பொழிலணி சிறுகுடி மேவிய<br>மானமர் கரமுடை யீரே<br>மானமர் கரமுடை யீருமை வாழ்த்திய<br>ஞானசம் பந்தன தமிழே. | 11 | வண்டுகள் விரும்பும் சோலைகளை உடைய அழகிய திருச்சிறுகுடி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, மான் ஏந்திய கரமுடைய சிவபெருமானே! மான்ஏந்திய கரமுடைய உம்மை வாழ்த்திப் போற்றிய ஞானசம்பந்தனின் இத்தமிழ்ப் பதிகத்தை ஓதவல்லவர்கள் இம்மை, மறுமைப் பலன்களைப் பெறுவர். |

## 98. திருவீழிமிழலை ( திருமுக்கால் )

பண் : சாதாரி

பதிக எண் : 98

| | | |
|---|---|---|
| **3853.** வெண்மதி தவழ்மதில் மிழலையு ளீர்சடை<br>ஒண்மதி யணியுடை யீரே<br>ஒண்மதி யணியுடை யீருமை யுணர்பவர்<br>கண்மதி மிகுவது கடனே. | 1 | விண்ணிலுள்ள வெண்ணிறச் சந்திரனைத் தொடுமளவு உயர்ந்துள்ள மதில்களையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றவரும், சடையில் ஒளி பொருந்திய சந்திரனை அணிந்துள்ள வருமான சிவபெருமானே! ஒளி பொருந்திய சந்திரனை அணிந்துள்ள உம்மை முதற்பொருளாக உணர்ந்து வழிபடுபவர்கள் சிவஞானம் பெறுவர். |
| **3854.** விதிவழி மறையவர் மிழலையு ளீர்நடம்<br>சதிவழி வருவதொர் சதிரே<br>சதிவழி வருவதொர் சதிருடை யீருமை<br>அதிகுணர் புகழ்வது மழகே. | 2 | வேதங்களில் விதிக்கப்பட்ட ஒழுக்க நெறிகளைப் பின்பற்றி வாழும் அந்தணர்கள் நிறைந்த திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள் கின்றவரும், தாளத்துக்கு ஏற்ப அழகாகத் திருநடனம் புரிபவருமான சிவபெருமானே! தாளத்திற்கு ஏற்பத் திருநடனம் புரியும் பெருமையுடைய உம்மைச் சத்துவ குணமுடைய ஞானிகள் போற்றிப் புகழ்வது சிறப்பானது. |
| **3855.** விரைமலி பொழிலணி மிழலையு ளீரொரு<br>வரைமிசை யுறைவதும் வலதே<br>வரைமிசை யுறைவதொர் வலதுடை யீருமை<br>உரைசெயு மவைமறை யொலியே. | 3 | நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த அழகிய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் நீர், பெருமையுடைய கயிலை மலையில் வாழ்வதும் சாமர்த்தியமே. கயிலை மலையில் வாழும் பெருமையுடைய உம்மைப் போற்றிப் புகழ்வன வேதங்கள். |

| | |
|---|---|
| **3856.** விட்டெழில் பெறுபுகழ் மிழலையு ளீர்கையில்<br>இட்டெழில் பெறுகிற தெரியே<br>இட்டெழில் பெறுகிற தெரியுடை யீர்புரம்<br>அட்டது வரைசிலை யாலே. 4 | மிகுந்த அழகும், புகழுமுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றவரும் கையில் ஏந்தப்பட்டதால் அழகுபெற்ற நெருப்பை உடையவருமான சிவபெருமானே! அழகிய நெருப்பேந்திய நீர், திரிபுரத்தை எரித்தது மேருமலையை வில்லாக வளைத்தும் (அக்கினியைக் கணையாக எய்தும்) அல்லவா? |
| **3857.** வேனிகர் கண்ணியர் மிழலையு ளீர்நல<br>பானிக ருருவுடை யீரே<br>பானிக ருருவுடை யீரும துடனுமை<br>தான்மிக வுறைவது தவமே. 5 | வேல் போன்று கூர்மையும், ஒளியுமுடைய கண்களையுடைய பெண்கள் வாழ்கின்ற திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள்கின்ற, நல்ல பால் போன்ற நிறமுடைய சிவபெருமானே! பால் போன்ற நிறமுடைய உம்முடன் உமாதேவி வீற்றிருந்தருளுவது தவச்சிறப்புடையதாகும். |
| **3858.** விரைமலி பொழிலணி மிழலையு ளீர்செனி<br>நிரையுற வணிவது நெறியே<br>நிரையுற வணிவதொர் நெறியுடை யீரும<br>தரையுற வணிவன வரவே. 6 | நறுமணம் கமழும் சோலைகளையுடைய அழகிய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளியுள்ளவரும், மண்டையோட்டால் ஆகிய மாலையை அணிந்துள்ளவருமான ஆளுகையையுடைய சிவபெருமானே! அவ்வாறு தலைமாலை அணிந்து ஆளுகை உடைய நீவிர், உமது அரையில் கச்சாகக் கட்டியது அரவமே. |
| **3859.** விசையுறு புனல்வயன் மிழலையு ளீரர<br>வசையுற வணிவுடை யீரே<br>அசையுற வணிவுடை யீருமை யறிபவர்<br>நசையுறு நாவினர் தாமே. 7 | வேகமாக ஓடிப் புனல் வற்றாத, நீர்வளம் மிக்க, வயல்களை உடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றவரும், அரவம் அசையும்படி ஆபரணமாக அணிந்துள்ளவருமான சிவபெருமானே! அவ்வாறு அசையும் அரவத்தை ஆபரணமாக அணிந்துள்ள உம்மை அறிபவர்களே, தாம் கூறுவனவற்றை அனைவரும் விரும்பிக் கேட்கும்வண்ணம் உண்மைப் பொருளை உபதேசிக்கும் வல்லுநர் ஆவர். |

| | |
|---|---|
| **3860.** விலங்கலொண் மதிளணி மிழலையு ளீரன்றவ்<br>இலங்கைமன் னிடர்கெடுத் தீரே<br>இலங்கைமன் னிடர்கெடுத் தீருமை யேத்துவார்<br>புலன்களை முனிவது பொருளே. 8 | மலைபோன்ற உறுதியான மதிலையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவரும், அன்று இலங்கை மன்னனான இராவணனைக் கயிலையின் கீழ் அடர்த்தபோது, அவன் உம்மைப் போற்றிச் சாமகானம் பாட அவன் துன்பத்தைப் போக்கியவரும்ஆகிய சிவபெருமானே! அவ்வாறு இலங்கை மன்னனின் துன்பத்தைப் போக்கிய உம்மைப் போற்றி வணங்குபவர்களே புலன்களை அடக்கி ஆளும் வல்லமையுடையவர். |
| **3861.** வெற்பமர் பொழிலணி மிழலையு ளீருமை<br>அற்புத னயனறி யானே<br>அற்புத னயனறி யாவகை நின்றவ<br>நற்பத மறிவது நயமே. 9 | மலை போன்ற மாளிகைகளும், சோலைகளுமுடைய அழகிய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றவரும், திருமாலும், பிரமனும் அறியாவண்ணம் நின்றவருமான சிவபெருமானே! அவ்வாறு திருமாலும், பிரமனும் அறியாவண்ணம் நின்ற உம் நல்ல திருவடிகளை இடையறாது நினைப்பதே மானிடப் பிறவி எய்தினோர் அடையும் பயனாகும். |
| **3862.** வித்தக மறையவர் மிழலையு ளீரன்று<br>புத்தரொ டமணழித் தீரே<br>புத்தரொ டமணழித் தீருமைப் போற்றுவார்<br>பத்திசெய் மனமுடை யவரே. 10 | நான்மறைகளைக் கற்றுவல்ல அந்தணர்கள் வாழும் திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றவரும், புத்தமும், சமணமும் வீழுமாறு செய்தவருமான சிவபெருமானே! அவ்வாறு புத்தமும், சமணமும் வீழ்ச்சியடையும்படி செய்த உம்மைப் போற்றுபவர்களே பத்தியுடைய நன்மனம் உடையவர்கள். |
| **3863.** விண்பயில் பொழிலணி மிழலையு ளீசனைச்<br>சண்பையுண் ஞானசம் பந்தன<br>சண்பையுண் ஞானசம் பந்தன தமிழிவை<br>ஒண்பொரு ளுணர்வது முணர்வே. 11 | ஆகாயத்தைத் தொடும்படி உயர்ந்தோங்கிய சோலைகளையுடைய அழகிய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் சிவபெருமானை, திருச்சண்பை என்னும் திருத்தலத்தில் அவதரித்த ஞானசம்பந்தன் போற்றி அருளினான். அவ்வாறு, திருச்சண்பையில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ்ப் பதிகத்தின் சீரிய கருத்தை உணர்ந்து ஓதுதல் நல்லுணர்வு ஆகும். |

## 99. திருமுதுகுன்றம் ( திருமுக்கால் )

பண் : சாதாரி | பதிக எண் : 99

| பாடல் | | உரை |
|---|---|---|
| **3864.** முரசதிர்ந் தெழுதரு முதுகுன்ற மேவிய<br>பரசமர் படையுடை யீரே<br>பரசமர் படையுடை யீருமைப் பரவுவார்<br>அரசர்க ளுலகிலா வாரே. | 1 | பூசை, திருவிழா முதலிய காலங்களில் முரசு அதிர்ந்து பேரோசை எழுப்புகின்ற திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற மழுப்படையை உடைய சிவபெருமானே! மழுப்படையையுடைய உம்மைப் போற்றி வணங்குபவர்கள் உலகினில் அரசர்கள் ஆவர். |
| **3865.** மொய்குழ லாளொடு முதுகுன்ற மேவிய<br>பையர வம்மசைத் தீரே<br>பையர வம்மசைத் தீருமைப் பாடுவார்<br>நைவிலர் நாடொறு நலமே. | 2 | அடர்ந்த கூந்தலையுடைய உமாதேவியோடு திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, பாம்பைக் கச்சாக அரையில் கட்டியுள்ள சிவபெருமானே! பாம்பைக் கச்சாகக் கட்டியுள்ள உம்மைப் பாடுவார் எவ்விதக் குறையும் இல்லாதவர். நாள்தோறும் நன்மைகளையே மிகப்பெறுவர். |
| **3866.** முழவமர் பொழிலணி முதுகுன்ற மேவிய<br>மழவிடை யதுவுடை யீரே<br>மழவிடை யதுவுடை யீருமை வாழ்த்துவார்<br>பழியொடு பகையிலர் தாமே. | 3 | முழவுகள் ஒலிக்கின்றதும், சோலைகளால் அழகு பெற்றதுமான திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, இளமைவாய்ந்த இடபத்தை, வாகனமாகவும் கொடியாகவும் உடைய சிவபெருமானே! இளமைவாய்ந்த இடபத்தை வாகனமாகவும், கொடியாகவும் கொண்ட உம்மை வாழ்த்துபவர்கள் பழியும், பாவமும் இல்லாதவர்கள் ஆவர். |
| **3867.** முருகமர் பொழிலணி முதுகுன்ற மேவிய<br>உருவமர் சடைமுடி யீரே<br>உருவமர் சடைமுடி யீருமை யோதுவார்<br>திருவொடு தேசினர் தாமே.<br><br>XXXXXXXXXXXXXXXXXXXXXX | 4<br><br><br><br>5, 6, 7 | வாசனை பொருந்திய சோலைகள் அழகு செய்கின்ற திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, அழகு பொருந்திய சடைமுடியினையுடையவரே! அழகு பொருந்திய சடைமுடி உடையவராகிய உம்மைப் போற்றி வணங்குபவர்கள் செல்வமும், புகழும் உடையவர். |
| **3868.** முத்தி தருமுயர் முதுகுன்ற மேவிய<br>பத்து முடியடர்த் தீரே<br>பத்து முடியடர்த் தீருமைப் பாடுவார்<br>சித்தநல் லவ்வடி யாரே. | 8 | முத்தியைத் தருகின்ற உயர்ந்த திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றவரும், இராவணனின் பத்துத் தலைகளையும் அடர்த்தவருமான சிவபெருமானே! இராவணனின் பத்துத் தலைகளையும் அடர்த்த உம்மைப் பாடுவார், அழகிய சித்தமுள்ள அடியவர்களாவார்கள். |

| | |
|---|---|
| **3869.** முயன்றவ ரருள்பெறு முதுகுன்ற மேவியன்<br>றியன்றவ ரறிவரி யீரே<br>இயன்றவ ரறிவரி யீருமை யேத்துவார்<br>பயன்றலை நிற்பவர் தாமே. **9** | தவநெறியில் முயல்பவர்கள் அருள்பெறுகின்ற திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, அன்று தம் செருக்கால் காணத் தொடங்கி பிரமன், திருமால் இவர்களால் காண்பதற்கு அரியவராக விளங்கிய சிவபெருமானே! பிரமனும், திருமாலும் அறியவொண்ணாதவராகிய உம்மைப் போற்றி வழிபடுவர்கள் சிறந்த பயனாகிய முத்தியைத் தலைக்கூடுவர். |
| **3870.** மொட்டலர் பொழிலணி முதுகுன்ற மேவிய<br>கட்டமண் டேரைக்காய்ந் தீரே<br>கட்டமண் டேரைக்காய்ந் தீருமைக் கருதுவார்<br>சிட்டர்கள் சீர்பெறு வாரே. **10** | மொட்டுக்கள் மலர்கின்ற சோலைகளையுடைய அழகிய திருமுதுகுன்றத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, கட்டுப்பாட்டினையுடைய சமணர்களையும், புத்தர்களையும் கோபித்தவரான சிவபெருமானே! சமணர்களையும், புத்தர்களையும் கோபித்த உம்மைத் தியானிப்பவர்கள் சிறந்த அடியார்கள், பெறுதற்குரிய முத்திப் பேற்றினைப் பெறுவர். |
| **3871.** மூடிய சோலைசூழ் முதுகுன்றத் தீசனை<br>நாடிய ஞானசம் பந்தன்<br>நாடிய ஞானசம் பந்தன செந்தமிழ்<br>பாடிய அவர்பழி யிலரே. **11** | அடர்ந்த சோலைகள் சூழ்ந்த திருமுதுகுன்றம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் சிவபெருமானைத் திருஞானசம்பந்தர் போற்றி அருளினார். அவ்வாறு திருஞானசம்பந்தர் போற்றியருளிய இச்செந்தமிழ்ப் பதிகத்தைப் பாடுபவர்கள் பழியிலர் ஆவர். |

## பழம்பஞ்சுரம்

இது குறிஞ்சிப் பெரும்பண்ணின் மூன்றாவது திறமாகிய பஞ்சுரத்தில் புறநிலைப் பண்ணாக எண் 46 பெற்று வருகிறது. இப்பண்ணைச் சங்கராபரண இராகத்தில் பாடுவதே வழக்கு. இதன் சுவை மருட்கை அவலம். இப்பண்ணில் மூவரும் பாடியிருக்கிறார்கள். சம்பந்தர் 3:100–116; அப்பர் 4:14–15; சுந்தரர் 47–53 ஆக மொத்தம் 26 பதிகங்கள். சம்பந்தர் "ஞாலம் நின்புகழே மிகவேண்டும்" என்ற பதிகம் "உற்றுமை சேர்வது மெய்யினையே" என்ற திருவியமகம், மடக்கு, அப்பர் "பாவநாசத் திருப்பதிகமான பற்றற்றார் சேர் பழம்பதியை" என்பது, சுந்தரர் ஊர்த்தொகை "காட்டூர்க்கடலே", நமசிவாயப் பதிகமாகிய மற்றுப் பற்றெனக்கின்றி, ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய் என்ற பாடலுடைய பத்திமையும் அடிமையையும் என்ற பதிகம் திருவாலங்காட்டுப் பதிகம் ஆகியன இப்பண்ணில் அமைந்தவை.

இனி, சேக்கிழார் "துஞ்சவருவாரும் தொழுவிப்பாரும்" என்ற திருவாலங்காட்டுப் பதிகத்தை "துஞ்சவருவார் என்றெடுத்துப் பஞ்சுரமாம் பழைய கரம் கிழமைகொளப் பாடினார்" என்று கூறுகிறார். அப்பதிகம் அவர்களிடத்தில் பழம்பஞ்சுரமாக இருந்திருக்க வேண்டும். எப்படியோ மாறி உமாபதி திருமுறைகண்ட புராணத்தில் பண்களைக் கூறுமிடத்துப் பண் மாறி, தக்கராகப் பண்ணாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது.

பஞ்சுரம் பாடி வண்டி யாழ் முரலும் பரிதிந்நியமமே என்று இத்திருமுறையில் 3915–வது பாடலில் திருஞானசம்பந்தர் பதிவுசெய்கிறார். பஞ்சுரம் என்னும் தொடும் பாலையைப் பழமையாக்கி (இல்லாமற்செய்து)

பூவும், கனியும், நிழலும் மலிந்த சோலையாம் நிலையை சீர்வகையின் பண்ணிற்பாடி விளக்குவது பழம் பஞ்சுரம் என்னும் பண்ணின் பாங்காம்.

**பழம்பஞ்சுரப் பண் இலக்கணம்**

பரவலாகப் பரந்து கிடந்து
வெம்மை மிக்கீயும் வெஞ்சுரமான
பஞ்சுரத்தன்மை படரும் வண்ணம்
பூவும் நிழலும் பொருந்த நின்றும்
சார்தரு தாரியிற் றாபந் தணியக்
கனியும் ஈந்து கவின்பெற நின்றும்
பஞ்சுரம் பழமைபடச் சாதாரிச்
சீர்பெற வந்த திறமும் யாழ்முகம்
அவ்வாறாக அமையவும் வந்ததிப்
பழம்பஞ்சுரச் சாதாரி யாம்பண்

**பொருள்**

பஞ்சுரம் என்பது மிகவும் வெப்பந்தரும் பாலை நிலமாகும். பஞ்சு பஞ்சாய்ப் பறக்கும் பாலையின் வெஞ்சுரத் தன்மையை விளைவிப்பது பஞ்சுரம். வெம்மையின் கொடுமையைத் தணிக்கும் வண்ணம் நிழலம் பூவும் நீர்மையின் நல்கி வழியில் செல்வோர்க்கு உண்டாகும் பசியின் கொடுமை நீங்க நல்ல கனிகள் தந்து நிற்பதோடு பழங்காலத்தில் இது கொடிய பாலையாம் பஞ்சுரமாக இருந்தது நீங்கியது. தற்போது குளிர் நிழலும், நறுநிழலும் தந்து பூச்சீரும் பொருந்தியமைதலோடு கனிச்சீரும் விரவிநின்று தாபந்தணிந்து உயிரினங்கள் வாழும் நிலையைக் காட்டுதலின் இது பழம்பஞ்சுரச் சாதாரி ஆகிறது. சாதாரியும், பழம்பஞ்சுரமும் ஒன்றுக்கொன்று தொடர்புடைய பண்கள்.

## 100. திருத்தோணிபுரம்

பண் : பழம்பஞ்சுரம் | பதிக எண் : 100

3872. கரும்பமர் வில்லியைக் காய்ந்து காதற்
காரிகை மாட்டருளி
அரும்பமர் கொங்கை யோர்பான் மகிழ்ந்த
வற்புதஞ் செப்பரிதால்
பெரும்பக லேவந்தென் பெண்மை கொண்டு
பேர்த்தவர் சேர்ந்தவிடஞ்
சுரும்பமர் சோலைகள் சூழ்ந்த செம்மைத்
தோணிபுரந்தானே. 1

சிவபெருமான் கரும்பினை வில்லாகக் கொண்ட மன்மதனைக் கோபித்து நெருப்புக் கண்ணால் எரித்து, பின்னர் அவனது அன்பிற்குரிய மனையாளாகிய இரதி வேண்ட அவள் கண்ணுக்கு மட்டும் உருவம் தோன்றுமாறு செய்து, கோங்கின் அரும்பு போன்ற கொங்கைகளையுடைய உமாதேவியை ஒரு பகுதியாகக் கொண்டு மகிழ்ந்த அற்புதம் செப்புதற்கரியதாகும். நண்பகலிலே வந்து எனது பெண்மை நலத்தைக் கவர்ந்து கொண்டு திரும்பவும் அவர் சென்று சேர்ந்த இடம் வண்டுகள் விரும்பி உறைகின்ற சோலைகள் சூழப்பெற்ற நன்னெறி மிக்க திருத்தோணிபுரம் ஆகும்.

<table>
<tr><td>3873. கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய்க்<br>கோமள மாதுமையாள்<br>பங்கிய லுந்திரு மேனி யெங்கும்<br>பால்வெள்ளை நீறணிந்து<br>சங்கியல் வெள்வளை சோர வந்தென்<br>சாயல்கொண் டார்தமதூர்<br>துங்கியன் மாளிகை சூழ்ந்த செம்மைத்<br>தோணி புரந்தானே. 2</td><td>இயற்கைமணம் பொருந்திய அழகிய கூந்தலையும், கொவ்வைக்கனி போன்ற சிவந்த வாயையுடைய அழகிய உமாதேவியைத் தன் ஒரு பாகமாகப் பொருந்திய, திருமேனி முழுவதும் பால்போன்ற வெண்மையான திருநீற்றை அணிந்துள்ள சிவபெருமான் எனது உள்ளத்தில் புகுந்து என் வளையல் கழன்று விழுமாறு செய்து, எனது தோற்றப் பொலிவினைக் கெடுத்து வீற்றிருந்தருளும் ஊர் உயர்ந்த மாளிகைகள் சூழ்ந்த நன்னெறி மிக்க திருத்தோணிபுரம் என்னும் திருத்தலமாகும்.</td></tr>
<tr><td>3874. மத்தக் களிற்றுரி போர்க்கக் கண்டு<br>மாதுமை பேதுறலுஞ்<br>சித்தந் தெளியநின் றாடி யேறூர்<br>தீவண்ணர் சில்பலிக்கென்<br>றொத்தபடி வந்தென் னுள்ளங் கொண்ட<br>வொருவர்க் கிடம்போலுந்<br>துத்தநல் லின்னிசை வண்டு பாடுந்<br>தோணி புரந்தானே. 3<br><br>XXXXXXXXXXXXXXX 4, 5, 6, 7</td><td>மதம் பிடித்த யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டதைக் கண்ட உமாதேவி அஞ்சவும், அவள் பயம் நீங்கி மனம் தெளியச் சிவபெருமான் திருநடனம் செய்தார். அவர் இடபத்தை வாகனமாக உடையவர். நெருப்புப் போன்ற சிவந்த மேனியர். சிறுபிச்சை ஏற்க அதற்கேற்ற பிட்சாடனர் கோலத்தில் வந்து எனது உள்ளத்தைக் கவர்ந்து கொண்ட ஒப்பற்றவராகிய அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் துத்தம் என்னும் நல்ல இன்னிசையை, வண்டுகள் பாடுகின்ற திருத்தோணிபுரம் என்னும் திருத்தலமாகும்.</td></tr>
<tr><td>3875. வள்ள லிருந்த மலையத னைவலஞ்<br>செய்தல் வாய்மையென<br>உள்ளங் கொள்ளாது கொதித்தெ ழுந்தன்<br>றெடுத்தோ னுரநெரிய<br>மெள்ள விரல்வைத்தெ னுள்ளங் கொண்டார்<br>மேவு மிடம்போலுந்<br>துள்ளொலி வெள்ளத்தின்மேன்மி தந்த<br>தோணி புரந்தானே. 8</td><td>வேண்டுவோர் வேண்டுவதே வரையாது வழங்கும் வள்ளலான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற கயிலைமலையை வலஞ்செய்து செல்லலே உண்மைநெறி என்பதை உள்ளத்தில் கொள்ளாது, தனது திக்விஜயத்திற்கு இடையூறாக உள்ளது என்ற கோபம் கொண்டு அன்று திருக்கயிலை மலையைப் பெயர்த்து எடுக்க முயன்ற இராவணனின் நெஞ்சு நெரியும்படி தன்காற் பெருவிரலை ஊன்றிய, என்னுடைய உள்ளத்தைக் கவர்ந்து கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற இடம், பிரளய காலத்தில் அலைகள் துள்ளி வருவதால் உண்டாகிய ஒலியுடன் கூடிய வெள்ளத்தின்மேல் மிதந்து நிலைபெற்ற திருத்தோணிபுரம் என்னும் திருத்தலமாகும்.</td></tr>
</table>

| | |
|---|---|
| **3876.** வெல்பற வைக்கொடி மாலு மற்றை<br>விரைமலர் மேலயனும்<br>பல்பற வைப்படி யாயுயர்ந்தும் பன்றிய<br>தாய்ப்ப ணிந்துஞ்<br>செல்வறநீண்டெஞ் சிந்தை கொண்ட<br>செல்வ ரிடம்போலுந்<br>தொல்பற வைசுமந் தோங்கு செம்மைத்<br>தோணி புரந்தானே. 9<br><br>"உயர்ந்தும் பணிந்தும் உணரான்" – திருக்கோவையார் | கருடக்கொடியுடைய திருமாலும், நறுமணமிக்க தாமரை மலரில் வீற்றிருந்தருளும் பிரமனும் முறையே பன்றியாய் உருக்கொண்டு கீழே அகழ்ந்து சென்றும், அன்னப் பறவையாய் உருவெடுத்து, உயரப் பறந்து சென்றும் காணாற்கரியராய் நெருப்புருவாய் நீண்டு எம் உள்ளத்தைக் கவர்ந்த செல்வரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், தொன்மையான பறவைகள் சுமந்து ஓங்கியுள்ள நன்னெறி மிக்க திருத்தோணிபுரம் என்னும் திருத்தலமாகும். |
| **3877.** குண்டிகை பீலி தட்டோடு நின்று<br>கோசரங் கொள்ளியரும்<br>மண்டைகை யேந்தி மனங்கொள் கஞ்சி<br>யூணரும் வாய்மடிய<br>இண்டை புனைந்தெரு தேறிவந்தெ<br>னெழில்கவர்ந் தாரிடமாம்<br>தொண்டிசை பாட லறாத தொன்மைத்<br>தோணி புரந்தானே. 10 | கமண்டலம், மயில்தோகை, தடுக்கு ஆகியவற்றுடன் மலைகளில் வசிக்கின்ற சமணர்களும், மண்டை என்னும் உண்கலத்தில் கஞ்சிபெற்றுப் பருகும் புத்தர்களும் பேசுகின்ற வார்த்தைகள் அடங்க, இண்டை மாலை புனைந்து, இடப வாகனத்திலேறி எனது அழகைக் கவர்ந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், தொண்டர்களின் இசைப்பாடல்கள் நீங்காத பழமைவாய்ந்த திருத்தோணிபுரம் என்னும் திருத்தலமாகும். |
| **3878.** தூமரு மாளிகை மாட நீடு<br>தோணி புரத்திறையை<br>மாமறை நான்கினொ டங்க மாறும்<br>வல்லவன் வாய்மையினால்<br>நாமரு கேள்வி நலந்திகழும் ஞான<br>சம்பந் தன்சொன்ன<br>பாமரு பாடல்கள் பத்தும் வல்லார்<br>பார்முழு தாள்பவரே. 11 | தூய்மையான வெண்ணிற மாளிகைகள், மாடங்கள் நிறைந்த திருத்தோணிபுரம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானைப் போற்றி, நான்கு வேதங்களும், அவற்றின் ஆறு அங்கங்களும் வல்லவனும், தானுண்ட ஞானப்பாலை நாவால் மறித்து உண்மையான உபதேச மொழிகளாக நமக்குக் கேள்வி ஞானத்தைப் புகட்டி நன்மையைச் செய்கின்றவனுமான திருஞானசம்பந்தன் அருளிய பாட்டிலக்கணங்கள் பொருந்திய இப்பாடல்கள் பத்தினையும் பக்தியுடன் ஓத வல்லவர்கள் இப்பூவுலகம் முழுவதையும் ஆளும் பேறு பெறுவர். |

## 101. திருஇராமேச்சுரம்

பண் : பழம்பஞ்சுரம் — பதிக எண் : 101

**3879.** திரிதரு மாமணி நாகமாடத்
திளைத்தொரு தீயழல்வாய்
நரிகதிக்க வெரியேந்தி யாடு
நலமே தெரிந்துணர்வார்
எரிகதிர் முத்த மிலங்குகான
லிராமேச் சுரமேய
விரிகதிர் வெண்பிறை மல்குசென்னி
விமலர் செயுஞ்செயலே. 1

அரிய மாணிக்கங்களையுடைய நாகங்களைப் படமெடுத்து ஆடுமாறு தம் உடலில் அணிந்துள்ளவர் சிவபெருமான். அவர் மகாசங்கார காலத்தில் நரிகள் ஊளையிடும் சுடுகாட்டில் நெருப்பேந்தி நடனம் செய்வார். மிக்க ஒளியுடைய முத்துக்கள் விளங்கும் சோலைகள் சூழ்ந்த இராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, ஒளிக்கதிர் வீசும் வெண்மையான பிறைச்சந்திரனைச் சடைமுடியில் தரித்த, இயல்பாகவே பாசங்களின் நீங்கியவரான சிவபெருமானின் அச்செயல், உயிர்கள் இளைப்பாறும் பொருட்டுச் செய்யப்படும் அருட்செயல் என்பதை உணர்ந்தவர்கள் மெய்ஞ்ஞானிகள் ஆவர்.

இராவணனைக் கொன்ற பழிநீங்கும் பொருட்டு இராமபிரானால் எழுந்தருளவித்து வழிபடப்பெற்ற கோயில். இராமன் தொழுத ஈச்சரன் – இராமேச்சுவரர். இராமன் கும்பிட்ட நாதன் – இராமநாதன். இராமனும், சீதையும் மணலால் குவித்துச் செய்த லிங்கம் இராமலிங்கம். மூலவருக்கு வடபால் அனுமன் தாமதமாகக் கொண்டு வந்த இலிங்கம் பிரதிட்டை செய்யப்பட்டு காசி விசுவநாதர் எனத் தொழப்படுகிறார்.

---

**3880.** பொறிகிளர் பாம்பரை யார்த்தயலே
புரிவோ டுமைபாடத்
தெறிகிள ரப்பெயர்ந் தெல்லியாடுந்
திறமே தெரிந்துணர்வார்
எறிகிளர் வெண்டிரை வந்துபேரு
மிராமேச் சுரமேய
மறிகிளர் மான்மழுப் புல்குகையெம்
மணாளர் செயுஞ்செயலே. 2

வெண்ணிற அலைகள் துள்ளிவீசும் கடலுடைய இராமேச்சுரத்தில் விரும்பி வீற்றிருந் தருளுகின்ற, இள மான்கன்றையும், மழுவையும் ஏந்தியுள்ள சிவபெருமான் புள்ளிகளையுடைய பாம்பை இடையிலே கட்டிக்கொண்டு, பக்கத்திலே சுருண்ட கூந்தலையுடைய உமாதேவி பாட, அதற்கேற்ப விரலால் தெறித்துப் பண்ணும் யாழ் முதலியவற்றின் இசை ஒலிக்க, நள்ளிரவில் நடனமாடும் செயலின் உண்மையைத் தெரிந்து உணர்பவர் மெய்ஞ்ஞானிகளாவர்.

பனிரெண்டு ஜோதிர்லிங்கத் தலங்களில் ஒன்று. இலங்கைக்குச் செல்ல இராமபிரான் பாலம் கட்டிய இடம் சேது. அங்கு இராமபிரான் வில்லால் (தனுவால்) தோண்டிய தீர்த்தம் தனுக்கோடியாகும்.

---

**3881.** அலைவளர் தண்புனல் வார்சடைமே
லடக்கி யொருபாகம்
மலைவளர் காதலி பாடவாடி
மயக்கா வருமாட்சி
இலைவளர் தாழை முகிழ்விரியு
மிராமேச் சுரமேயார்
தலைவளர் கோலநன் மாலைசூடுந்
தலைவர் செயுஞ்செயலே. 3

தழைகளை உடைய தாழை மரங்கள் மலர்களை விரிக்கும் திருஇராமேச்சுரத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, அழகிய தலைமாலைகளைச் சூடிய, தலைவராகிய சிவபெருமான் தமது நீண்ட சடைமுடிமேல் அலைபெருகிவரும் கங்கைநீரை அடக்கி, ஒரு பாகமாக அமைந்த மலையிலே வளர்ந்த உமாதேவி பாட, நடனமாடித் தம் தன்மை இதுவென்று பிறர் அறியாதவாறு செய்து வரும் அருஞ்செயலின் மாட்சியை மெய்ஞ்ஞானிகளே உணர்வர்.

36 தீர்த்தங்கள் உள்ளன. தீர்த்தச் சிறப்பு வாய்ந்த தலம்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3882.** மாதன நேரிழை யேர்தடங்கண்<br>மலையான் மகள்பாடத்<br>தேதெரி யங்கையி லேந்தியாடுந்<br>திறமே தெரிந்துணர்வார்<br>ஏதமி லார்தொழு தேத்திவாழ்த்து<br>மிராமேச் சுரமேயார்<br>போதுவெண் டிங்கள்பைங் கொன்றைசூடும்<br>புனிதர் செயுஞ்செயலே. 4 | குற்றமற்ற அடியவர்கள் தொழுது போற்றத் திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, அரும்பு போன்ற இள வெண்ணிறப் பிறைச்சந்திரனையும், கொன்றை மலரையும் சூடியுள்ள புனிதரான சிவபெருமான், பெரிய கொங்கைகளை யுடையவளாய், ஒளிபொருந்திய ஆபரணங்களை அணிந்த, பெரிய கண்களையுடைய, மலையான்மகளான உமாதேவி பாட, ஒளிபொருந்திய நெருப்பை உள்ளங்கையிலேந்தி நடனமாடும் செயலின் திறத்தைத் தெரிந்துணர்வார் சிவஞானிகளாவர். |
| **3883.** சூலமோ டொண்மழு நின்றிலங்கச்<br>சுடுகா டிடமாகக்<br>கோலநன் மாதுடன் பாடவாடுங்<br>குணமே குறித்துணர்வார்<br>ஏல நறும்பொழில் வண்டுபாடு<br>மிராமேச் சுரமேய<br>நீலமார் கண்ட முடையவெங்கள்<br>நிமலர் செயுஞ்செயலே. 5 | ஏலம் முதலிய செடிகளையுடைய நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற நீலகண்டமுடைய, இயல்பாகவே பாசங்களின் நீங்கியவரான எங்கள் சிவபெருமான், சூலம், ஒளி பொருந்திய மழு ஆகியவற்றை ஏந்திச் சுடுகாட்டை இடமாகக் கொண்டு அழகிய உமாதேவி அருகில் நின்று பாட, நடனம் செய்யும் குணத்தைக் குறித்துணர்பவர் சிவஞானிகளாவர். |
| **3884.** கணைபிணை வெஞ்சிலை கையிலேந்திக்<br>காமனைக் காய்ந்தவர்தாம்<br>இணைபிணை நோக்கிநல் லாளோடாடு<br>மியல்பின ராகிநல்ல<br>இணைமலர் மேலன்னம் வைகுகான<br>லிராமேச் சுரமேயார்<br>அணைபிணை புல்கு கரந்தைசூடும்<br>அடிகள் செயுஞ்செயலே. 6 | சிறந்த தாமரை மலர்களில் அன்னங்கள் வாழும் சோலைகள் சூழ்ந்த திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, சேர்த்துக் கட்டப்பெற்ற கரந்தைமாலை சூடிய சிவபெருமான், ஐம்மலர்க்கணைகளைத் தொடுக்க வில்லைக் கையில் ஏந்திய மன்மதனை எரித்தவர். அப்பெருமான் மான் போன்ற மருண்ட கண்களையுடைய உமாதேவியோடு நடனமாடும் இயல்புடையவர். |
| **3885.** நீரினார் புன்சடை பின்புதாழ<br>நெடுவெண் மதிசூடி<br>ஊரினார் துஞ்சிருள் பாடியாடும்<br>உவகை தெரிந்துணர்வார்<br>ஏரினார் பைம்பொழில் வண்டுபாடு<br>மிராமேச் சுரமேய<br>காரினார் கொன்றைவெண் டிங்கள்சூடுங்<br>கடவுள் செயுஞ்செயலே. 7 | வண்டுகள் பாடும் அழகிய சோலைகள் சூழ்ந்த திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, கார்காலத்தில் மலரும் கொன்றையையும், வெண்ணிறப் பிறைச்சந்திரனையும் சூடியவரான சிவபெருமான், கங்கையைத் தாங்கிய புன்சடை பின்புறம் தொங்க, மிக்க வெண்ணிறப் பிறைச்சந்திரனைச் சூடி, உலகமே உறங்கும் நள்ளிரவில் பாடி ஆடும் உவகையின் செயல் தன்மையை உணர்பவர் சிவஞானிகளாவர். |

| | |
|---|---|
| **3886.** பொன்றிகழ் சுண்ணவெண் ணீறுபூசிப்<br>புலித்தோ லுடையாக<br>மின்றிகழ் சோதியர் பாடலாடன்<br>மிக்கார் வருமாட்சி<br>என்றுநல் லோர்கள் பரவியேத்து<br>மிராமேச் சுரமேயார்<br>குன்றினா லன்றரக் கன்றடந்தோ<br>ளடர்த்தார்கொளுங் கொள்கையே. 8 | என்றும் நல்லோர்கள் போற்றி வணங்கும் திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, கயிலை மலையால் அன்று இராவணனின் அகன்ற வலிமையான தோள்களை அடர்த்த சிவபெருமான், நறுமணமிக்க அழகிய திருவெண்ணீற்றினைத் திருமேனியில் பூசி, புலித்தோலாடை அணிந்து, மின்னல் போன்று ஒளிரும் செவ்வண்ணத்தராய், பாடி ஆடி வரும் செயலின் பெருமையை உணர்பவர் சிவஞானிகளாவர். |
| **3887.** கோவல னான்முக னோக்கொணாத<br>குழக னழகாய<br>மேவல னொள்ளெரி யேந்தியாடு<br>மிமையோ ரிறைமெய்ம்மை<br>ஏவல னார்புகழ்ந் தேத்திவாழ்த்து<br>மிராமேச் சுரமேய<br>சேவல வெல்கொடி யேந்துகொள்கையெம்<br>மிறைவர் செயுஞ்செயலே. 9 | அம்பு எய்தலில் வல்ல இராமபிரான் புகழ்ந்து ஏத்திவாழ்த்தும் திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில், விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, இடபம் பொறித்த வெற்றிக் கொடியை ஏந்திய சிவபெருமான், திருமால், பிரமன் இவர்களால் அறியப்படாதவர். இளமையும், அழகும் அமைந்த திருவுருவினர். ஒளி பொருந்திய நெருப்பைத் தம் கையிலேந்தி ஆடுகின்ற, தேவர்கட் கெல்லாம் இறைவனான அப்பெருமானின் அருட்செயலின் மெய்ம்மையை அறிவோர் சிவஞானிகளாவர். |
| **3888.** பின்னொடு முன்னிடு தட்டைச்சாத்திப்<br>பிரட்டே திரிவாரும்<br>பொன்னெடுஞ் சீவரப் போர்வையார்கள்<br>புறங்கூறல் கேளாதே<br>இன்னெடுஞ் சோலைவண் டியாழ்முரலு<br>மிராமேச் சுரமேய<br>பன்னெடு வெண்டலை கொண்டுழலும்<br>பரமர் செயுஞ்செயலே. 10 | முதுகிலும், மார்பிலும் தடுக்கை அணிந்து, ஒதுக்கப்பட்ட இடங்களில் திரியும் சமணர்களும், பொன் போன்ற சீவரம் என்னும் ஆடையைப் போர்த்த புத்தர்களும் கூறும் புறங்கூற்று மொழிகளைக் கேளாமல், யாழிசை போல் வண்டுகள் ஒலிக்கும் சோலைகளை உடைய திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளி, பல்லையுடைய பெரிய மண்டையோட்டில் பலியேற்றுத் திரியும் சிவபெருமான் செய்யும் செயல்களைக் கேட்டு உணர்ந்து, அவரை வழிபட்டு உய்திபெறுங்கள். |
| **3889.** தேவியை வவ்விய தென்னிலங்கை<br>யரையன் றிறல்வாட்டி<br>ஏவியல் வெஞ்சிலை யண்ணல்நண்ணு<br>மிராமேச் சுரத்தாரை<br>நாவியன் ஞானசம் பந்தனல்ல<br>மொழியா னவின்றேத்தும்<br>பாவியன் மாலைவல்லா ரவர்தம்வினை<br>யாயின பற்றறுமே. 11 | சீதாதேவியைக் கவர்ந்த தென்னிலங்கை மன்னனான இராவணனின் வலிமையை அழித்து, அம்பு எய்யும் வில்லேந்திய இராமபிரான் வழிபட்ட திருஇராமேச்சுரம் என்னும் திருத்தலத்தில், விரும்பி வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானை, நாவலராகிய ஞானசம்பந்தர், நல்ல மொழியால் போற்றிப் பாடிய பாட்டின் இலக்கணம் வாய்ந்த இப்பாமாலையை, ஓதி வழிபட வல்லவர்களின் வினைகள் முற்றிலும் அழியும். |

## 102. திருநாரையூர்

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 102

**3890.** காம்பினை வென்றமென் றோளி பாகங்
கலந்தா னலந்தாங்கு
தேம்புனல் சூழ்திகழ் மாமடு விற்றிரு
நாரை யூர்மேய
பூம்புனல் சேர்புரி புன்ச டையான்
புலியின் னுரிதோன்மேல்
பாம்பினை வீக்கிய பண்ட ரங்கன்
பாதம் பணிவோமே. 1

நாரை பூசித்துப் பேறு பெற்றதால் நாரையூர். திருத்தொண்டர் திருவந்தாதி பாடி திருமுறைகளைக் கண்டெடுக்க உதவிய நம்பியாண்டர் நம்பி அவதாரத் தலம்.

சிவபெருமான், மூங்கிலைப் போன்ற தோளையுடைய உமாதேவியைத் தம் ஒரு பாகமாகக் கொண்டவர். நலம் தரும் இனிய நீர் சூழ்ந்த சிறந்த நீர்நிலைகளையுடைய திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவர். அழகிய கங்கையையும், முறுக்குண்ட சிவந்த சடையையுமுடையவர். புலித்தோலாடை அணிந்தவர். பாம்பைக் கச்சாகக் கட்டியவர். பண்டரங்கன் என்னும் திருப்பெயர் உடையவர். அத்தகைய சிவபெருமானின் திருப்பாதங்களை நாம் பணிவோமாக.

**3891.** தீவினை யாயின தீர்க்க நின்றான்
றிருநாரை யூர்மேயான்
பூவினை மேவு சடைமுடி யான்புடை
சூழப் பலபூதம்
ஆவினி லைந்துங்கொண் டாட்டு கந்தா
னடங்கார் மதின்மூன்றும்
ஏவினை யெய் தழித்தான் கழலே
பரவா வெழுவோமே. 2

பொள்ளா (உளியால் செதுக்கப்படாத) பிள்ளையார் உள்ள தலம்.

சிவபெருமான் தம்மை வழிபடுபவர்களின் தீவினைகளைத் தீர்த்தருள்பவர். திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள்பவர். பூமாலையணிந்த சடைமுடி உடையவர். பூதகணங்கள் புடைசூழ விளங்குபவர். பசுவிலிருந்து பெறப்படும் ஐந்து பொருள்களால் (பஞ்சகவ்வியம்) அபிடேகம் செய்து கொள்வதில் விருப்பமுடையவர். அடங்காது திரிந்த பகையசுரர்களின் மும்மதில்களை ஓர் அம்பு எய்து அழித்தவர். அப்பெருமானின் திருவடிகளை நாம் வழிபட்டு உயர்வடைவோமாக!

**3892.** மாயவன் சேயவன் வெள்ளி யவன்
விடஞ்சேரு மைமிடற்றன்
ஆயவ னாகியொ ரந்தர மும்மவ
னென்று வரையாகம்
தீயவ னீரவன் பூமி யவன்றிரு
நாரை யூர்தன்னில்
மேயவ னைத்தொழு வாரவர் மேல்வினை
யாயின வீடுமே. 3

கருநிறமுடைய திருமால், செந்நிறமுடைய உருத்திரன், வெள்ளைத் தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமன் விடமுண்ட நீலகண்டமுடைய மகேசுவரன் ஆகிய மூர்த்தி பேதங்களும், மற்றும் பல வேறுபாடான மூர்த்தி பேதங்களும் தாமேயாகியவர். மலை போன்ற திருமேனி உடையவர். நெருப்பு, நீர், பூமி (உபலட்சணத்தால் காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், உயிர்) இவற்றையும் உடம்பாக உடையவர். திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள்பவர். அப்பெருமானைத் தொழுவாருடைய வினைகள் முழுதும் அவர்களைவிட்டு நீங்கும்.

**3893.** துஞ்சிரு ளாடுவர் தூமுறுவல்
துளங்குமு டம்பினராய்
அஞ்சுட ராரெரி யாடு வரார்அழ
லார்வி ழிக்கண்
நஞ்சுமிழ் நாக மரைக்கசைப் பர்நல
னோங்கு நாரையூர்
எஞ்சிவ னார்க்கடி மைப்படு வார்க்கினி
யில்லை யேதமே. 4

சிவபெருமான் அனைத்தும் ஒடுங்குகின்ற ஊழிக்காலத்தில் திருநடனம் செய்பவர். தூய புன்சிரிப்போடு விளங்கும் திருமேனியர். அழகிய சுடரானது நன்கு எரியும்படி கைகளை வீசி ஆடுவார். நெற்றியில் நெருப்புக் கண்ணுடையவர். நஞ்சைக் கக்கும் நாகத்தை அரையில் கச்சாகக் கட்டியவர். நலம் பெருகச் செய்யும் திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற எம் சிவபெருமானுக்கு அடிமைத் தொண்டு செய்பவர்கட்கு இனி எந்நாளும் துன்பம் என்பதே இல்லை.

**3894.** பொங்கி ளங்கொன் றையினார் கடலில்
விடமுண் டிமையோர்கள்
தங்களை யாரிடர் தீர நின்ற
தலைவர் சடைமேலோர்
திங்களை வைத்தன லாட லினார்திரு
நாரை யூர்மேய
வெங்கனல் வெண்ணீ றணிய வல்லா
ரவரே விழுமியரே. 5

சிவபெருமான், செழித்து விளங்கும் இளங்கொன்றை மலரைச் சூடியவர். பாற்கடலில் தோன்றிய விடத்தை உண்டு தேவர்களின் பெருந்துயரைத் தீர்த்த தலைவர். சடைமேல் ஒரு சந்திரனை அணிந்து நெருப்பைக் கையிலேந்தி ஆடுபவர். திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவர். வெங்கனலால் நீறாக்கப்பட்ட வெண்ணீற்றினை அணியவல்ல அப்பெருமானே யாவரினும் மேலானவர் ஆவர்.

**3895.** பாரு றுவாய் மையினார் பரவும்
பரமேட்டி பைங்கொன்றைத்
தாரு றுமார் புடையான் மலையின்
றலைவன் மலைமகளைச்
சீரு றுமா மறுகிற் சிறைவண்
டறையுந் திருநாரை
யூரு றையெம் மிறைவர்க் **கிவையொன்**
**றொடொன் றொவ்வாவே.** 6

சிவபெருமான், இந்நிலவுலகம் முழுவதும் புகழ் பரவும் மெய்யுணர்வுடையவர்களால் வணங்கப்படும் மேலான பரம்பொருள் ஆவார். பசுமைவாய்ந்த கொன்றை மாலையை அணிந்த மார்புடையவர். கைலைமலையின் தலைவர். மலைமகளைச் சிறப்புடன் ஒரு பாகமாகக் கொண்டவர். வீதிகளில் சிறகுகளையுடைய வண்டுகள் ஒலிக்கின்ற திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள்கின்ற இறைவர் அணிந்துள்ள பொருள்கள் ஒன்றோடொன்று ஒவ்வாதனவாம்.

| | | |
|---|---|---|
| **3896.** கள்ளி யிடுதலை யேந்துகை யர்கரி<br>காடர் கண்ணுதலர்<br>வெள்ளிய கோவண வாடை தன்மேல்<br>மிளிரா டரவார்த்து<br>நள்ளிரு ணட்டம தாடுவர் நன்னல<br>னோங்கு நாரையூர்<br>உள்ளிய போழ்தி லெம்மேல் வருவல்<br>வினையாயின வோடுமே. 7 | | சிவபெருமான் கள்ளிச் செடிகள் நிறைந்த சுடுகாட்டில் இடப்பட்ட மண்டையோட்டை ஏந்திய கையையுடையவர். சுடுகாட்டில் இருப்பவர். நெற்றிக் கண்ணர். வெண்ணிறக் கோவண ஆடையை அணிந்து, அதன்மேல் ஒளிரும், ஆடுகின்ற பாம்பைக் கச்சாகக் கட்டி நள்ளிருளில் நடனமாடுபவர். நல்ல நலன்களை எல்லாம் மேன்மேலும் பெருகத் தருகின்ற திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானை நினைத்த மாத்திரத்தில் எம்மேல் வருகின்ற வலிய வினைகள் யாவும் ஓடிவிடும். |
| **3897.** நாமமெ னைப்பல வும்முடை யான்நல<br>னோங்கு நாரையூர்<br>தாமொம் மெனப்ப றையாழ் குழல்<br>தாளார் கழல்பயில<br>ஈம விளக்கெரி சூழ்சு டலை<br>யியம்பும் மிடுகாட்டில்<br>சாம முரைக்கநின் றாடு வானுந்<br>தழலாய சங்கரனே. 8 | | நலன்களைப் பெருகச் செய்யும் திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான் பல திருப்பெயர்களை உடையவர். பறை, யாழ், குழல் முதலியன தாம் ஓம் என ஒலிக்க, அவற்றொடு ஒத்துத் தம் திருவடிகளில் அணிந்துள்ள கழல்கள் ஒலிக்க, காட்டில், கொள்ளி விளக்கு எரிய, சாமகானம் ஒலிக்க நின்றாடுகின்ற பெருமான் நெருப்புருவான சங்கரனே ஆவார். |
| **3898.** ஊனுடைவெண் டலைகொண் டுழல்வா<br>னொளிர்புன் சடைமேலோர்<br>வானிடைவெண் மதிவைத் துகந்தான்<br>வரிவண் டியாழ்முரலத்<br>தேனுடைமா மலரன்னம் வைகுந்<br>திருநாரை யூர்மேய<br>ஆனிடையைந் துகந்தா னடியே<br>பரவா வடைவோமே. 9 | | சிவபெருமான் ஊனுடை மண்டையோட்டை உண்கலனாகக் கொண்டு, பிச்சையேற்றுத் திரிபவர். ஒளிர்கின்ற சடைமேல், வானத்தில் தவழும் வெண்ணிறச் சந்திரனை அணிந்து, மகிழ்பவர். வரிகளையுடைய வண்டுகள் யாழிசைபோல் ஒலிக்க, தேன் உடைய சிறந்த தாமரை மலரில் அன்னம் தங்க விளங்கும் திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள்பவர். பசுவில் இருந்து பெறப்படும் பஞ்சகவ்வியங்களால் அபிடேகம் செய்யப்படுதலை விரும்புபவர். அப்பெருமானின் திருவடிகளை வணங்கி நற்கதி அடைவோமாக! |
| **3899.** தூசுபு னைதுவ ராடை மேவுந்<br>தொழிலா ருடம்பினிலுள்<br>மாசுபு னைந்துடை நீத்தவர்கண்<br>மயனீர்மை கேளாதே<br>தேசுடை யீர்கள் தெளிந்தடைமின்<br>திருநாரை யூர்தன்னில்<br>பூசுபொ டித்த லைவ ரடியா<br>ரடியே பொருத்தமே. 10 | | மஞ்சட் காவி உடை உடுத்தும் புத்தர்களும், உடம்பிலும், உள்ளத்திலும், அழுக்கினைக் கொண்டு ஆடை உடுத்தலை ஒழித்தவர்களாகிய சமணர்களும் கூறும் மயக்கும் தன்மையுடைய மொழிகளைக் கேளாதீர்கள். மெய்யறிவுடையவர்களே! சிவபெருமானே மெய்ப்பொருள் என்பதைத் தெளிவாக உணர்ந்து, திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, திருவெண்ணீறு பூசிய தலைவராகிய சிவபெருமானின் திருவடிகளையும், அவர் அடியார்களின் திருவடிகளையும் வணங்குவதே பொருந்தும் எனக்கொண்டு அவற்றைச் சரணாக அடையுங்கள். |

3900. தண்மதி தாழ்பொழில் சூழ் புகலித்
தமிழ்ஞான சம்பந்தன்
ஒண்மதி சேர்சடை யானுறையுந்
திருநாரை யூர்தன்மேல்
பண்மதி யாற்சொன்ன பாடல் பத்தும்
பயின்றார் வினைபோகி
மண்மதி யாதுபோய் வான்புகுவார்
வானோ ரெதிர்கொளவே. 11

குளிர்ச்சி பொருந்திய சந்திரன் தவழ்கின்ற சோலைகள் சூழ்ந்த திருப்புகலி என்னும் திருத்தலத்தில் அவதரித்த தமிழ் வல்ல ஞானசம்பந்தன், ஒளி பொருந்திய சந்திரனை அணிந்த சடையையுடைய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் திருநாரையூர் என்னும் திருத்தலத்தின் மேல், பயில்வோருக்கு இசையறிவு உண்டாகும் வண்ணம் பாடியருளிய இப்பாடல்கள் பத்தையும் பயின்று ஓதவல்லவர்கள் மண்ணுலக வாழ்க்கை நிலையற்றதென உணர்ந்து அதனை மதியாது, தேவர்கள் எதிர் கொண்டழைக்க வானுலகை அடைவர்.

## 103. திருவலம்புரம் ( மேலப்பெரும்பள்ளம் )

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 103

3901. கொடியுடை மும்மதி லூடுருவக்
குனிவெஞ் சிலைதாங்கி
இடிபட வெய்த வமரர்பிரா
னடியா ரிசைந்தேத்தத்
துடியிடை யாளையொர் பாகமாகத்
துதைந்தா ரிடம்போலும்
வடிவுடை மேதி வயல்படியும்
வலம்புர நன்னகரே. 1

திருவலஞ்சுழியில் காவிரியில் இறங்கின ஏரண்ட முனிவர் இங்கு கரையேறினார். அவர் முடியில் உண்டான பள்ளம் போல சுவாமி முடியிலும் பள்ளம் உள்ளது.

கொடிகளையுடைய மூன்று மதில்களையும் ஊடுருவிச் செல்லுமாறு மேருமலையை வில்லாக வளைத்துத் தாங்கி, பேரொலியுடன் அம்மதில்கள் அழியும்படி அம்பெய்த தேவர்களின் தலைவரான சிவபெருமான், அடியார்களெல்லாம் மனமொன்றிக் கூடிப்போற்ற உடுக்கை போன்று குறுகிய இடையுடைய உமாதேவியைப் பிரிவில்லாமல் தம் உடம்பில் ஒரு பாகமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்ற இடமாவது அழகிய எருமைகள் வயலிலே படியும் திருவலம்புரம் என்னும் நன்னகராகும்.

3902. கோத்தகல் லாடையுங் கோவணமுங்
கொடுகொட்டி கொண்டொருகைத்
தேய்த்தன் றநங்கனைத் தேசழித்துத்
திசையார் தொழுதேத்தக்
காய்த்தகல் லாலதன் கீழிருந்த
கடவுள் ளிடம்போலும்
வாய்த்தமுத் தீத்தொழி னான்மறையோர்
வலம்புர நன்னகரே. 2

மூவரும் பாடிய தலம். "வலம்புர நன்னகரே" என்பது மகுடம். விட்டுணு பூசித்துச் சங்கு பெற்றார்.

சிவபெருமான் காவியுடையும், கோவணமும் அணிந்தவர். ஒரு கையில் கொடுகொட்டி என்னும் வாத்தியத்தை ஏந்தி வாசிப்பவர். மன்மதனை அன்று உருவழியும்படி எரித்தவர். எல்லாத் திசைகளிலும் உள்ளவர்கள் தொழுது வணங்கும்படி, காய்கள் நிறைந்த கல்லால மரத்தின் கீழ்த் தட்சிணாமூர்த்தி திருக்கோலத்தில் வீற்றிருந்தவர். அக்கடவுள் விரும்பி வீற்றிருந்தருளும் இடம், முத்தீ வளர்த்து, நான்கு வேதங்களையும் நன்கு பயின்ற அந்தணர்கள் வாழ்கின்ற திருவலம்புரம் என்னும் நன்னகராகும்.

| | |
|---|---|
| **3903.** நொய்யதொர் மான்மறி கைவிரலின்<br>னுனைமே னிலையாக்கி<br>மெய்யெரி மேனிவெண் ணீறுபூசி<br>விரிபுன் சடைதாழ<br>மையிருஞ் சோலை மணங்கமழ<br>இருந்தா ரிடம்போலும்<br>வைகலு மாமுழ வம்மதிரும்<br>வலம்புர நன்னகரே. **3** | இலேசான உடம்பையுடைய மான்கன்றைத் தன் கைவிரல் நுனிமேல் நிலையாக நிற்குமாறு செய்து, நெருப்புப் போன்ற சிவந்த மேனியில் திருவெண்ணீற்றினைப் பூசி, விரிந்த சிவந்தசடை தாழ விளங்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், நாள்தோறும் நித்திய பூசையே திருவிழாப்போல் முழவதிரச் சிறப்புடன் நடக்கும், இருளடர்ந்த பெரிய சோலைகளின் நறுமணம் கமழும் திருவலம்புரம் என்னும் நன்னகராகும். |
| **3904.** ஊனம ராக்கை யுடம்புதன்னை<br>உணரிற் பொருளன்று<br>தேனமர் கொன்றையி னானடிக்கே<br>சிறுகாலை யேத்துமினோ<br>ஆனம ரைந்துங்கொண் டாட்டுகந்த<br>வடிக ளிடம்போலும்<br>வானவர் நாடொறும் வந்திறைஞ்சும்<br>வலம்புர நன்னகரே. **4**<br><br>திருநாவுக்கரசரை சுவாமி வா வா எனத் தாமே அழைத்து அருள் பாலித்த பதி. | தசை முதலியவற்றால் கட்டப்பட்ட இவ்வுடம்பு நிலையற்றது என்பதை உணர்ந்து, அதனைப் பேணுதலையே பொருளாகக் கொள்ளாது, தேன்மணம் கமழும் கொன்றைமாலை அணிந்த சிவபெருமான் திருவடிகளையே சிறுவயது முதல் போற்றி வழிபடுங்கள். பசுவிலிருந்து பெறப்படும் பஞ்சகவ்வியங்களால் அபிடேகம் செய்யப்படுவதால் மகிழும் தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற இடம் தேவர்கள் நாள்தோறும் வந்து வழிபடுகின்ற திருவலம்புரம் என்னும் நன்னகராகும். |
| **3905.** செற்றெறியுந் திரையார் கலுழிச்<br>செழுநீர்கிளர் செஞ்சடைமேல்<br>அற்றறியா தனலாடு நட்ட<br>மணியார் தடங்கண்ணி<br>பெற்றறிவா ரெருதேற வல்ல<br>பெருமா னிடம்போலும்<br>வற்றறியாப் புனல்வாய்ப் புடைய<br>வலம்புர நன்னகரே. **5** | கரைகளில் மோதி வீசுகின்ற அலைகளை யுடைய கங்கை நதியினை, ஒளி பொருந்திய சிவந்த சடையின்மீது நீங்காது தங்கவைத்த சிவபெருமான் நெருப்பைக் கையிலேந்தி நடனம் செய்பவர். அழகு பொருந்திய அகன்ற கண்களையுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவர். இடபத்தை வாகனமாக ஏற்றவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம், வற்றுதலை அறியாத நீர்பெருகும் வாய்ப்புடைய திருவலம்புரம் என்னும் நன்னகர் ஆகும். |
| **3906.** உண்ணவண் ணத்தொளி நஞ்சமுண்டு<br>உமையோ டுடனாகிச்<br>சுண்ணவண் ணப்பொடி மேனிபூசிச்<br>சுடர்ச்சோதி நின்றிலங்கப்<br>பண்ணவண் ணத்தன பாணிசெய்யப்<br>பயின்றா ரிடம்போலும்<br>வண்ணவண் ணப்பறை பாணியறா<br>வலம்புர நன்னகரே. **6** | தேவர்கள் அமுதுண்ணும் பொருட்டு, கருநிறமும் ஒளியுமுடைய நஞ்சைத் தாம் உண்டவர் சிவபெருமான். உமாதேவியை உடனாகக் கொண்டவர். மணம் பொருந்திய திருவெண்ணீற்றைத் திருமேனியில் பூசியவர். சுடர்விடும் சோதியாய் விளங்குபவர். பல்வேறு பண்களில் சிவபூதங்கள் நடனம் செய்பவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, பலவகைப்பட்ட பறை முதலிய வாத்தியங்களின் முழக்கு நீங்காத திருவலம்புரம் என்னும் நன்னகர் ஆகும். |

| | | |
|---|---|---|
| **3907.** புரிதரு புன்சடை பொன்றயங்கப்<br>புரிநூல் புரண்டிலங்க<br>விரைதரு வேழத்தி னீருரிதோன்<br>மேன்மூடி வேய்புரைதோள்<br>அரைதரு பூந்துகி லாரணங்கை<br>அமர்ந்தா ரிடம்போலும்<br>வரைதரு தொல்புகழ் வாழ்க்கையறா<br>வலம்புர நன்னகரே. | 7 | முறுக்குண்ட மென்மையான சடை பொன்போல் ஒளிர, முப்புரிநூல் மார்பில் புரண்டு விளங்க, மிக வேகமாகச் செல்லக்கூடிய யானையின் இழுத்து உரிக்கப்பட்ட தோலை உடலின் மேல் போர்த்தி, மூங்கிலையொத்த தோளையுடைய வளாய், இடையில் அழகிய ஆடையை அணிந்துள்ள உமாதேவியை உடனாகக் கொண்டு சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், புலவர்களால் போற்றப்படும் பழம் புகழுடைய, குடிமக்களின் செல்வ வாழ்க்கை என்றும் குறையாத திருவலம்புரம் என்னும் நன்னகர் ஆகும். |
| **3908.** தண்டணை தோளிரு பத்தினொடுந்<br>தலைபத் துடையானை<br>ஒண்டணை மாதுமை தானடுங்க<br>வொருகால் விரலூன்றி<br>மிண்டது தீர்த்தருள் செய்யவல்ல<br>விகிர்தர்க் கிடம்போலும்<br>வண்டணை தன்னொடு வைகுபொழில்<br>வலம்புர நன்னகரே. | 8 | தண்டு முதலிய ஆயுதங்களையுடைய இருபது தோள்களும், பத்துத் தலைகளுமுடைய இராவணன் கயிலையைப் பெயர்த்த போது, தம் உடம்போடு ஒன்றாக அணைந்துள்ள உமாதேவி நடுங்க, சிவபெருமான் தம்காற் பெருவிரலை ஊன்றி அவ்வரக்கனின் செருக்கை அடக்கி, பின் அவன் தன் தவறுணர்ந்து துதித்தபோது, அருளும் செய்த மாறுபட்ட தன்மையுடையவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் ஆண் வண்டுகள் தம் பெடை வண்டுகளைத் தழுவித் தங்கும் சோலைகளை உடைய திருவலம்புரம் என்னும் நன்னகர் ஆகும். |
| **3909.** தாருறு தாமரை மேலயனுந்<br>தரணி யளந்தானும்<br>தேர்வறி யாவகை யாலிகலித்<br>திகைத்துத் திரிந்தேத்தப்<br>பேர்வறி யாவகை யானிமிர்ந்த<br>பெருமா னிடம்போலும்<br>வாருறு சோலை மணங்கமழும்<br>வலம்புர நன்னகரே. | 9 | மாலையாக அமைதற்குரிய தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், உலகை இரண்டடிகளால் அளந்த திருமாலும் உண்மையை உணரமுடியாது, தம்முள் யார் பெரியவர் என்று மாறுபாடு கொண்டு, முழுமுதற் பொருளின் அடிமுடி காணமுடியாது திகைத்துத் திரிந்து, பின் தம் குற்றம் உணர்ந்து இறைவனைப் போற்றி வணங்க, அசைக்க முடியாத நெருப்புப் பிழம்பாய் நிமர்ந்து நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், நீண்ட சோலைகளையுடைய நறுமணம் கமழும் திருவலம்புரம் என்னும் நன்னகர் ஆகும். |

| | |
|---|---|
| **3910.** காவிய நற்றுவ ராடையினார்<br>கடுநோன்பு மேல்கொள்ளும்<br>பாவிகள் சொல்லைப் பயின்றறியாப்<br>பழந்தொண்ட ருள்ளுருக<br>**ஆவியு ணின்றருள் செய்யவல்ல**<br>**வழக ரிடம்போலும்**<br>வாவியி னீர்வயல் வாய்ப்புடைய<br>வலம்புர நன்னகரே. 10<br><br>ஆவியுள் நின்று அருள் செய்யவல்ல அழகர் – உயிருக்கு உயிராய் நீங்காமல் இருந்து அருள் செய்வார். | காவி நிறத்தைத் தருவதாகிய துவர்நீரில் தோய்த்த ஆடையினையுடைய புத்தர்களும், கடுமையான நோன்புகளை மேற்கொள்ளும் பாவிகளாகிய சமணர்களும் கூறும் சொற்களைச் சிறிதும் கேளாத, வழிவழியாகச் சிவனடிமை செய்யும் தொண்டர்கள் உள்ளம் உருகி ஏத்த, அவர்களின் உயிர்க்குள்ளுயிரா யிருந்து அருள் செய்யவல்ல அழகர் சிவபெருமான் ஆவார். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம், குளங்களிலிருந்து வயல்கட்குப் பாயும் நீர்வளமுடைய திருவலம்புரம் என்னும் நன்னகர் ஆகும். |
| **3911.** நல்லிய னான்மறை யோர்புகலித்<br>தமிழ்ஞான சம்பந்தன்<br>வல்லியந் தோலுடை யாடையினான்<br>வலம்புர நன்னகரைச்<br>சொல்லிய பாடல்கள் பத்துஞ்சொல்ல<br>வல்லவர் தொல்வினைபோய்ச்<br>செல்வன சேவடி சென்றணுகிச்<br>சிவலோகஞ் சேர்வாரே. 11 | நல்லொழுக்கமுடைய, நான்கு வேதங்களையும் நன்கு கற்று வல்லவர்கள் வாழ்கின்ற திருப்புகலி என்னும் திருத்தலத்தில் அவதரித்த தமிழ் ஞானசம்பந்தன், புலியின் தோலை ஆடையாக உடுத்திய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருவலம்புரம் என்னும் நன்னகரைப் போற்றிப் பாடிய இப்பாடல்கள் பத்தையும் சொல்ல வல்லவர்கள், தொல்வினை நீங்கிச் சிவலோகம் சென்றணுகி முத்திச் செல்வத்தைத் தருகின்ற சிவபெருமானின் சேவடிகளைச் சேர்ந்திருப்பர். |

## 104. திருப்பரிதிநியமம்

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 104

| | |
|---|---|
| **3912.** விண்கொண்ட தூமதி சூடிநீடு<br>விரிபுன் சடைதாழப்<br>பெண்கொண்ட மார்பில்வெண் ணீறுபூசிப்<br>பேணார் பலிதேர்ந்து<br>கண்கொண்ட சாயலொ டேர்**கவர்ந்த**<br>கள்வர்க் கிடம்போலும்<br>பண்கொண்ட வண்டினம் பாடியாடும்<br>பரிதிந் நியமமே. 1<br><br>சூரியன் பிரதி வருடம் பங்குனி மாதம் 19 ஆம் நாள் சுவாமியைப் பூசிக்கிறார். நியமம் – கோயில். பரிதி – சூரியன். சூரியன் வழிபட்டதால் பரிதிநியமம் எனப்படுகிறது. | ஆகாயத்தை இடமாகக் கொண்ட வெண்ணிறப் பிறைச்சந்திரனைச் சூடிய நீண்ட விரிந்த சிவந்த சடைதாழ, உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டு தம் திருமார்பில் திருவெண்ணீற்றினைப் பூசி, பெருமைக்கு ஒவ்வாமல் பிச்சை ஏற்று, கண்ணைக் கவரும் தோற்றப்பொலிவோடு வந்து என் அழகைக் கவர்ந்த கள்வரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், வண்டுகள் பண்ணிசையோடு பாடியாடும் திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலம் ஆகும். |

| | |
|---|---|
| **3913.** அரவொலி வில்லொலி யம்பினொலி<br>யடங்கார் புரமூன்றும்<br>நிரவவல்லார் நிமிர்புன் சடைமே<br>னிரம்பா மதிசூடி<br>இரவில் புகுந்தெ னெழில்**கவர்ந்த**<br>விறைவர்க் கிடம்போலும்<br>பரவவல் லார்வினை பாழ்படுக்கும்<br>பரிதிந் நியமமே. 2<br><br>"என்னுள்ளங் கவர்கள்வன்" என்று முதற் பதிகத்தில் வருவதை ஒத்துப் பாட்டு தோறும் இப்பதிகத்தில் "கவர்ந்த" என்ற சொல்லடைவு வருகிறது.<br>பசுத்தன்மையைக் கவர்ந்து சிவத்தன்மையை விளக்குதல். | வாசுகி என்னும் பாம்பாகிய நாணின் ஓசையும், மேருமலையாகிய வில்லின் ஓசையும், காற்று, திருமால், நெருப்பு ஆகிய அம்பின் ஓசையும் எழ, பகையசுரர்களின் மூன்று புரங்களையும் அழித்துத் தரையோடு தரையாக்கியவர் சிவபெருமான். நிமிர்ந்த மெல்லிய சடைமேல் கலைநிரம்பாத சந்திரனைச் சூடி இரவில் வந்து என் எழிலைக் கவர்ந்த இறைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, தன்னை வணங்கிப் போற்றுவார்களின் வினையை அழிக்கும் திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |
| **3914.** வாண்முக வார்குழல் வாணெடுங்கண்<br>வளைத்தோண் மாதஞ்ச<br>நீண்முக மாகிய பைங்களிற்றின்<br>னுரிமே னிகழ்வித்து<br>நாண்முகங் காட்டி நலங்**கவர்ந்த**<br>நாதர்க் கிடம்போலும்<br>பாண்முக வண்டினம் பாடியாடும்<br>பரிதிந் நியமமே. 3 | ஒளிபொருந்திய திருமுகத்தையும், நீண்ட கூந்தலையும், வாள்போன்று ஒளியும் கூர்மையும் மிக்க நீண்ட கண்களையும் மூங்கில் போன்ற மென்மை வாய்ந்த தோள்களையும் உடைய உமாதேவி அஞ்சும்படி, நீண்ட துதிக்கையை யுடைய யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவர் சிவபெருமான். அவர் நான் நாணம் கொண்டு விளங்குமாறு செய்தவர். என் பெண்மை நலத்தை இழந்து அவரையே பற்றுமாறு செய்தவர். அத்தலைவர் வீற்றிருந்தருளும் இடம் வண்டுகள் முரன்று பாடியாடும் திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |
| **3915.** வெஞ்சுரஞ் சேர்விளை யாடல்பேணி<br>விரிபுன் சடைதாழத்<br>துஞ்சிருண் மாலையும் நண்பகலுந்<br>துணையார் பலிதேர்ந்து<br>அஞ்சுரும் பார்குழல் சோரவுள்ளங்<br>**கவர்ந்தார்க்** கிடம்போலும்<br>பஞ்சுரம் பாடிவண்டி யாழ்முரலும்<br>பரிதிந் நியமமே. 4<br><br>வண்டுகள் பஞ்சுரப் பண்ணில் பாடுவதாகப் பதிவு செய்கிறார். | சிவபெருமான் கொடிய பாலைவனம் போன்ற சுடுகாட்டில் நடனம் செய்பவர். விரிந்த சிவந்த சடை தொங்க அனைவரும் உறங்குகின்ற இரவிலும், மாலையிலும், நண்பகலிலும், பூதகணங்கள் துணைவரப் பிச்சை ஏற்பவர். அழகிய வண்டுகள் ஒலிக்கக் கூந்தல் சரிய என் உள்ளத்தைக் கவர்ந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், வண்டுகள் யாழொலி போன்று பஞ்சுரம் முதலிய பண்ணிசைத்துப் பாடும் திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |

| | | |
|---|---|---|
| **3916.** | நீர்புல்கு புன்சடை நின்றிலங்க<br>நெடுவெண் மதிசூடித்<br>தார்புல்கு மார்பில்வெண் ணீறணிந்து<br>தலையார் பலிதேர்வார்<br>ஏல்புல்கு சாய லெழில்**கவர்ந்த**<br>விறைவர்க் கிடம்போலும்<br>பால்புல்கு தொல்புக ழால்விளங்கும்<br>பரிதிந் நியமமே. 5 | சிவபெருமான் மென்மையான சடையில் கங்கை நதியைத் தாங்கியதோடு, இளம்பிறைச் சந்திரனையும் சூடியவர். மலர்மாலை அணிந்த திருமார்பில் திருவெண்ணீறும் அணிந்தவர். பிரம கபாலம் ஏந்திப் பிச்சையேற்றுத் திரிபவர். என் தோற்றப் பொலிவையும், அழகையும் கவர்ந்த அச்சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், உலகம் முழுவதும் பரவிய பழம் புகழையுடைய திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |
| **3917.** | வெங்கடுங் காட்டகத் தாடல்பேணி<br>விரிபுன் சடைதாழத்<br>திங்கள் திருமுடிமேல் விளங்கத்<br>திசையார் பலிதேர்வார்<br>சங்கொடு சாய லெழில்**கவர்ந்த**<br>சைவர்க் கிடம்போலும்<br>பைங்கொடி முல்லை படர்புறவிற்<br>பரிதிந் நியமமே. 6 | சிவபெருமான் மிகுந்த வெப்பமுடைய சுடுகாட்டில் திருநடனம் செய்பவர். விரிந்த சிவந்த சடைதொங்கச் சந்திரனைத் திருமுடிமேல் சூடியவர். எல்லாத் திசைகளிலும் சென்று பிச்சையேற்றுத் திரிபவர். நான் அணிந்துள்ள சங்காலாகிய வளைகள் சோர, என் தோற்றப் பொலிவைக் கவர்ந்த சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், பசுமையான முல்லைக்கொடி படர்ந்துள்ள திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |
| **3918.** | பிறைவளர் செஞ்சடை பின்றயங்கப்<br>பெரிய மழுவேந்தி<br>மறையொலி பாடிவெண் ணீறுபூசி<br>மனைகள் பலிதேர்வார்<br>இறைவளை சோர வெழில்**கவர்ந்த**<br>விறைவர்க் கிடம்போலும்<br>பறையொலி சங்கொலி யால்விளங்கும்<br>பரிதிந் நியமமே. 7 | சிவபெருமான் பிறைச்சந்திரனை அணிந்த சிவந்த சடை பின்புறம் விளங்கித் தொங்க, பெரிய மழுப்படையைக் கையிலேந்தி, வேதங்களைப் பாடி, திருவெண்ணீற்றினைப் பூசி வீடுகள்தோறும் பிச்சையேற்றுத் திரிவார். அவர், என் முன்கையில் அணிந்துள்ள வளையல்கள் கழன்றுவிழ, என் தோற்றப் பொலிவைக் கவர்ந்த இறைவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம், பறையொலியும், சங்கொலியும் விளங்கத் திருவிழாக்கள் நிகழும் திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |
| **3919.** | ஆசடை வானவர் தானவரோ<br>டடியா ரமர்ந்தேத்த<br>மாசடை யாதவெண் ணீறுபூசி<br>மனைகள் பலிதேர்வார்<br>காசடை மேகலை சோரவுள்ளங்<br>**கவர்ந்தார்க்** கிடம்போலும்<br>பாசடைத் தாமரை வைகுபொய்கைப்<br>பரிதிந் நியமமே. 8 | அனைத்துயிர்கட்கும் பற்றுக்கோடாக விளங்கும் சிவபெருமான் தேவர்களும், வித்தியாதரர்களும் உடன் திகழ, அடியவர்கள் அமர்ந்து ஏத்தி வழிபடப்படுபவர். அவர், பாவத்தை அடைவிடாது நீக்க வல்ல திருவெண்ணீற்றினைப் பூசி வீடுகள்தோறும் சென்று பிச்சை ஏற்றுத் திரிபவர். அவர் மணிகள் பதிக்கப்பெற்ற மேகலை நழுவி விழுமாறு என்னை மெலியச்செய்து, என் உள்ளம் கவர்ந்தவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம், பசுமையான இலைகளையுடைய தாமரைகள் விளங்கும் பொய்கையுடைய திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |

| | |
|---|---|
| **3920.** நாடினர் காண்கிலர் நான்முகனுந்<br>திருமா னயந்தேத்தக்<br>கூடல ராடல ராகிநாளுங்<br>குழகர் பலிதேர்வார்<br>ஏடலர் சோர வெழில்**கவர்ந்த**<br>இறைவர்க் கிடம்போலும்<br>பாடல ராடல ராய்வணங்கும்<br>பரிதிந் நியமமே. 9 | தேடிக் காணாதவர்களாகிய பிரமனும், திருமாலும் பணிந்து ஏத்த அவர்களிடத்துக் காணக் கூடாதவராகி எம்மிடத்து விளையாடுதலை உடையவராய் நாடோறும் இளமையும், அழகுமுடையவராய்ப் பிச்சையேற்றுத் திரிபவர், சிவபெருமான். அவர் இதழ்களையுடைய தாமரை போன்ற என்முகம் சோர்வடைய என் அழகைக் கவர்ந்த கள்வர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம் அடியவர்கள் பக்திப் பாடல்களைப் பாடி, ஆடி வணங்கும் திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். |
| **3921.** கல்வள ராடையர் கையிலுண்ணுங்<br>கழுக்க ளிழுக்கான<br>சொல்வள மாக நினைக்கவேண்டா<br>சுடுநீ றதுவாடி<br>நல்வளை சோர நலங்**கவர்ந்த**<br>நாதர்க் கிடம்போலும்<br>பல்வளர் முல்லையங் கொல்லைவேலிப்<br>பரிதிந் நியமமே. 10 | காவிக்கல்லால் துவர்நிறம் பெற்ற ஆடையணிந்த புத்தர்களும், கையில் உணவு வாங்கி உண்ணும் கழுக்களான சமணர்களும் கூறும், குற்றமுடைய சொற்களைப் பொருளென நினைக்க வேண்டா. சுட்ட திருவெண்ணீறு அணிந்து, என் நல்வளையல்கள் கழல, என் பெண்மை நலத்தைக் கவர்ந்த தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், பெண்களின் பற்களைப் போல அரும்பு அடர்ந்த முல்லைவனமே வேலியாக உடைய திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலமாகும். அப்பெருமானை வழிபட்டு உய்வீர்களாக என்பது குறிப்பு. |
| **3922.** பைபர வம்விரி காந்தள்விம்மு<br>பரிதிந் நியமத்துத்<br>தையலொர் பாக மமர்ந்தவனைத்<br>தமிழ்ஞான சம்பந்தன்<br>பொய்யிலி மாலை புனைந்தபத்தும்<br>பரவிப் புகழ்ந்தேத்த<br>ஐயுற வில்லை பிறப்பறுத்தல்<br>அவலம் அடையாவே. 11 | படத்தையுடைய பாம்பு போல மலர் விரிந்த காந்தட்செடிகள் செழித்துள்ள திருப்பரிதிநியமம் என்னும் திருத்தலத்தில் உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டு வீற்றிருந்தருளும் பொய்யிலியாகிய சிவபெருமானைப் போற்றி, தமிழ்வல்ல ஞானசம்பந்தன் உண்மையன்போடு அருளிய இப்பத்துப் பாட்டுக்களாலாகிய பாமாலையால் புகழ்ந்து வணங்குபவர்களின் பிறப்பு அறும் என்பதில் ஐயமில்லை. அவர்கட்கு இம்மையில் துன்பம் எதுவும் இல்லை. |

## 105. திருக்கலிக்காமூர் ( அன்னப்பன்பேட்டை )

பண் : பழம்பஞ்சுரம் | பதிக எண் : 105

| பாடல் | பொருள் |
|---|---|
| 3923. மடல்வரை யின்மது விம்முசோலை<br>வயல்சூழ்ந் தழகாருங்<br>கடல்வரை யோதங் கலந்துமுத்தஞ்<br>சொரியுங் கலிக்காமூர்<br>உடல்வரை யின்னுயிர் வாழ்க்கையாய<br>வொருவன் கழலேத்த<br>இடர்தொட ராவினை யானசிந்தும்<br>மிறைவன் னருளாமே. 1 | பூ இதழ்களில் அளவற்ற தேன் பெருகுகின்ற சோலைகளும், வயல்களும் சூழ, மலைபோன்று வரும் அலைகளில் கலந்து முத்துக்களைக் கடல் சொரிகின்ற திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றவனும், உடல் எல்லையில் தங்கும் உயிர் வாழ்வதற்குக் காரணமான உயிராகிய ஒப்பற்றவனுமாகிய சிவபெருமான் திருவடிகளை வணங்கித் துதிக்கத் துன்பங்கள் தொடரமாட்டா. அத்துன்பங்கட்குக் காரணமான, அநுபவித்துக் கழிந்தவை போக எஞ்சியுள்ள வினைகளும் அழிந்துபோகும் இறைவனின் திருவருட்சக்தி பதியும் பேரின்பம் பெறுவர். |
| 3924. மைவரை போற்றிரை யோடுகூடிப்<br>புடையே மலிந்தோதங்<br>கைவரை யால்வளர் சங்கமெங்கும்<br>மிகுக்குங் கலிக்காமூர்<br>மெய்வரை யான்மகள் பாகன்றன்னை<br>விரும்ப வுடல்வாழும்<br>ஐவரை யாசறுத் தாளுமென்பர்<br>அதுவுஞ் சரதமே. 2 | மேகம் படியும் மலை போன்ற அலைகளோடு கூடிவரும் கடல், கரையின் கண்ணே பருத்த சங்குகளை எங்கும் மிகுதியாகக் குவிக்கும் திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, மலையரசன் மகளான உமாதேவியைத் தம் இடப்பாகமாகக் கொண்டவரான சிவபெருமானை விரும்பி அடைய, அப்பெருமான் நமது உடலில் வாழும் ஐந்து இந்திரியங்களையும் குற்றமறுத்து நம்மை ஆட்கொள்வர் என்று அறிஞர்கள் கூறுவர். அஃது உண்மையேயாம். |
| 3925. தூவிய நீர்மல ரேந்திவையத்<br>தவர்க டொழுதேத்தக்<br>காவியி னேர்விழி மாதரென்றுங்<br>கவினார் கலிக்காமூர்<br>மேவிய வீசனை யெம்பிரானை<br>விரும்பி வழிபட்டால்<br>ஆவியுள் நீங்கல னாதிமூர்த்தி<br>யமரர் பெருமானே. 3 | அபிடேகம் செய்யும் பொருட்டுத் தூய நீரையும், பூசிக்கும் பொருட்டு மலர்களையும் ஏந்தி வந்து இவ்வுலகத்தவர்களும், நீலோற்பல மலர்போன்ற கண்களை உடைய பெண்களும் வணங்கிப் போற்ற, என்றும் அழகுடன் திகழும் திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, எம் தலைவனான சிவபெருமானை விரும்பி வழிபட்டால், ஆதிமூர்த்தியும் தேவர்கட்கெல்லாம் தலைவனுமான அப்பெருமான் உயிரினுள் நீங்கலாகாத தன்மையோடு விளங்குவான். |

**3926.** குன்றுகள் போற்றிரை யுந்தியந்தண்
மணியார் தரமேதி
கன்றுடன் புல்கியா யம்மனைசூழ்
கவினார் **கலிக்காமூர்**
**என்றுண ரூழியும் வாழுமெந்தை**
பெருமா னடியேத்தி
நின்றுணர் வாரை நினையகில்லார்
நீசர் நமன்றமரே. 4

தொன்மையான தலம் கலிக்காமூர்.

குன்றுகளைப் போன்ற உயர்ந்த கடலலைகள் அழகிய குளிர்ச்சி பொருந்திய முத்துக்களைத் தள்ளிக் கொண்டு வந்து சேர்த்தலும், எருமைக் கூட்டங்கள் கன்றுகளோடு கூடித் தத்தம் மனைகளைச் சென்று சேர்தலுமுடைய அழகு பொருந்திய திருக்கலிக்காமூர் என்ற திருத்தலத்தில் ஊழிக்காலத்திலும் வீற்றிருந்தருளும் எந்தையாகிய சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி நின்று வழிபடுகின்ற அடியவர்களை நினையாதவர்கள் கீழ்மக்கள் ஆவர். அவர்கள் இயமனது சுற்றத்தாரும் ஆவர்.

**3927.** வானிடை வாண்மதி மாடந்தீண்ட
மருங்கே கடலோதங்
கானிடை நீழலிற் கண்டல்வாழுங்
கழிசூழ் கலிக்காமூர்
ஆனிடை யைந்துகந் தாடினானை
யமரர் தொழுதேத்த
நானடை வாம்வண மன்புதந்த
நலமே நினைவோமே. 5

அன்பு தந்த நலம்.

வானத்தில் ஒளிரும் சந்திரனைத் தொடுமளவு உயர்ந்த மாடங்களும், பக்கங்களில் கடலலைகள் மோதச் சோலைகளில் நிழலில் செழித்து வளரும் தாழைகளும் கொண்டு உப்பங்கழிகள் சூழ்தலுமுடையது திருக்கலிக்காமூர். இத்திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றவரும், பசுவிலிருந்து பெறப்படும் பஞ்ச கவ்வியங்களால் அபிடேகம் செய்யப்படுகின்றவரும் ஆய சிவபெருமானைத் தேவர்கள் தொழுது போற்ற அவர்கள் அடையாத நலன்களை அடியேன் அடையும் வண்ணம் அன்புடன் அவன் அருள்புரிந்த சிறப்பினை என்றும் நினைந்து போற்றுவோமாக!

**3928.** துறைவளர் கேதகை மீதுவாசஞ்
சூழ்வான் மலிதென்றல்
கறைவள ருங்கட லோதமென்றுங்
கலிக்குங் கலிக்காமூர்
மறைவள ரும்பொரு ளாயினானை
மனத்தா னினைந்தேத்த
நிறைவள ரும்புக ழெய்தும்வாதை
நினையா வினைபோமே. 6

கடற்கரையில் வளர்ந்துள்ள தாழையின் பூவின் நறுமணத்தைக் கவர்ந்து வீசுகின்ற தென்றலோடு, மிக்க கருநிறமுடைய கடலலைகள் எக்காலத்திலும் ஒலிக்கின்ற திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற, நால்வேதங்களின் உட்பொருளாக விளங்கும் சிவபெருமானை மனத்தால் நினைந்து போற்ற எக்காலத்தும் அழியாத புகழ் வந்து சேரும். துன்பம் வந்து சேர நினையாது. அத்துன்பத்திற்குக் காரணமான வினைகளும் நீங்கும்.

**3929.** கோலநன் மேனியின் மாதர்மைந்தர்
கொணர்மங் கலியத்திற்
காலமும் பொய்க்கினுந் தாம்வழுவா
தியற்றுங் கலிக்காமூர்
ஞாலமுந் தீவளி ஞாயிறாய
நம்பன் கழலேத்தி
ஓலமி டாதவ ரூழியென்று
முணர்வைத் துறந்தாரே. 7

சிவன் – மங்கலகரமானவன். ஆகவே அவனைச் சார்ந்த் பொருட்களும், உரிய பொருட்களும் மங்களகரமாம். ஆதலால் மங்கலியம் என்பதற்கு சிவனைப் பூசித்தற்குரிய பொருள் என்று பெயர்.

அழகிய நல்ல மேனியுடைய மகளிரும், ஆடவரும், காலமழை பொய்த்தாலும், பூசைக்குரிய மங்கலப் பொருள்களை வழுவாது கொண்டுவந்து சேர்த்துப் பூசை நடத்தும் சிறப்புடையது திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலமாகும். அங்கு வீற்றிருந்தருளுகின்ற நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், ஞாயிறு, திங்கள், ஆன்மா என்னும் அட்டமூர்த்தமாகிய சிவபெருமானின் திருவடிகளை வணங்கி, உள்ளம் உருகி ஓலமிடாதவர்கள் ஊழிக்காலம் வரை வாழ்ந்தாலும் சிவஞானம் கைவரப் பெறாதவர் ஆவர்.

**3930.** ஊரர வந்தலை நீண்முடியா
னொலிநீ ருலகாண்டு
காரர வக்கடல் சூழவாழும்
பதியாங் கலிக்காமூர்
தேரர வல்குலம் பேதையஞ்சத்
திருந்து வரைபேர்த்தான்
ஆரர வம்பட வைத்தபாத
முடையா னிடமாமே. 8

ஊருகின்ற பாம்பைத் தலையிலுள்ள நீண்ட முடியில் அணிந்து, ஒலிக்கின்ற நீரையுடைய இவ்வுலகம் முழுமையும் ஆண்டு, கறுத்த ஆரவாரமுடைய கடல்சூழச் சிவபெருமான் வீற்றிருந்தருளும்பதி திருக்கலிக்காமூர் என்பதாம். அது தேர் போன்ற அகன்ற அல்குலையுடைய உமாதேவி அஞ்சும்படி திருக்கயிலை மலையைப் பெயர்த்த இராவணன் அதன்கீழ் நசுக்குண்டு அலறும்படி தம் திருப்பாத விரலை ஊன்றிய சிவபெருமானுடைய இருப்பிடமாகும்.

**3931.** அருவரை யேந்திய மாலுமற்றை
யலர்மே லுறைவானும்
இருவரு மஞ்ச வெரியுருவா
யெழுந்தான் கலிக்காமூர்
ஒருவரை யான்மகள் பாகன்றன்னை
யுணர்வாற் றொழுதேத்தத்
திருமரு வுஞ்சிதை வில்லைச்செம்மைத்
தேசுண் டவர்பாலே. 9

கோவர்த்தன மலையைக் குடையாகத் தூக்கிய திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் ஆகிய இருவரும் அஞ்சும்படி பெருஞ்சோதி வடிவாய் நின்றவரும், திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருள்கின்றவரும், ஒப்பற்ற மலை அரசன் மகளை ஒரு பாகமாக உடையவருமான சிவபெருமானை மெய்யுணர்வால் தொழுது போற்றுபவர்களைச் செல்வம் வந்தடையும். அவர்கட்கு எவ்விதக் குறைவும் இல்லை. மேலும் அவர்களிடம் செம்மையான சிவஞானம் உண்டாகும். அச்சிவஞானத்தால் முத்தி பெறுவர் என்பது குறிப்பு.

**3932.** மாசு பிறக்கிய மேனியாரு
மருவுந் துவராடை
மீசு பிறக்கிய மெய்யினாரு
மறியா ரவர்தோற்றங்
காசினி நீர்த்திரண் மண்டியெங்கும்
வளமார் கலிக்காமூர்
ஈசனை யெந்தை பிரானையேத்தி
நினைவார் வினைபோமே. 10

நீராடாததால் அழுக்கு உடலையுடைய சமணர்களும், மஞ்சட் காவியாடையைப் போர்த்திய உடலையுடைய புத்தர்களும் சிவபெருமானது பெருமையை அறியாதவர்கள். எனவே அவர்களைப் பின்பற்றாது இந்நிலவுலகில் நீர்ப்பெருக்கு எங்கும் நிறைந்து நல்லவளம் பொருந்திய திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற எம் தந்தையும் தலைவனுமான சிவபெருமானைப் போற்றித் தியானிப்பவர்களுடைய வினைகள் நில்லாதுபோம்.

**3933.** ஆழியு ணஞ்சமு தாரவுண்டன்
றமரர்க் கமுதுண்ண
ஊழிதொறும்முள ராவளித்தா
னுலகத் துயர்கின்ற
காழியுண் ஞானசம் பந்தன்சொன்ன
தமிழாற் கலிக்காமூர்
வாழி யெம்மானை வணங்கியேத்த
மருவா பிணிதானே. 11

பாற்கடலில் தோன்றிய நஞ்சை அமுதமாகத் தாம் உண்டு அன்று தேவர்கட்கு அமுதத்தை அளித்து ஊழிதோறும் நிலைத்திருக்குமாறு அருள்செய்தவர் சிவபெருமான். இவ்வுலகில் உயர்ச்சியடைகின்ற சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ்ப் பாமாலையால், திருக்கலிக்காமூர் என்னும் திருத்தலத்தில் வாழும் எம் தந்தையாகிய சிவபெருமானை வணங்கிப் போற்ற, அவ்வாறு வணங்குபவர்களை நோய்கள் வந்து அணுகா.

## 106. திருவலஞ்சுழி

**பண் : பழம்பஞ்சுரம்** **பதிக எண் : 106**

**3934.** பள்ளம தாய படர்சடைமேற்
பயிலுந் திரைக்கங்கை
வெள்ளம தார விரும்பிநின்ற
விகிர்தன் விடையேறும்
வள்ளல் வலஞ்சுழி வாணனென்று
மருவி நினைந்தேத்தி
உள்ள முருக வுணருமின்க
ளுறுநோ யடையாவே. 1

பள்ளம் போன்ற உட்குழிவுடைய படர்ந்த சடைமீது அலைகளையுடைய கங்கை நீர்ப் பெருக்கை விரும்பித் தாங்கி நின்ற வேறுபட்ட தன்மையுடையவர் சிவபெருமான். அவர் இடப வாகனத்தில் ஏறும் வள்ளல். திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவர். அப்பெருமானை நினைந்து போற்றி உள்ளம் உருக உணருமின்கள். உறுநோய் உங்களை அணுகாது.

| | |
|---|---|
| **3935.** காரணி வெள்ளை மதியஞ்சூடிக்<br>கமழ்புன் சடைதன்மேல்<br>தாரணி கொன்றையுந் தண்ணெருக்குந்<br>தழைய நுழைவித்து<br>வாரணி கொங்கைநல் லாள்தனோடும்<br>வலஞ்சுழி மேவியவர்<br>ஊரணி பெய்பலி கொண்டுகந்த<br>வுவகை யறியோமே. 2 | சிவபெருமான், கருமேகத்திற்கு அழகு செய்கின்ற வெண்ணிறச் சந்திரனைச் சூடி, இயற்கை மணம் கமழும் சிவந்த சடைமேல் அழகிய கொன்றைமாலையையும், குளிர்ச்சி பொருந்திய எருக்கம் பூ மாலையையும் நிரம்ப அணிந்துள்ளவர். கச்சணிந்த அழகிய கொங்கைகளை உடைய உமாதேவியோடு திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவர். ஊர்கள்தோறும் சென்று அவர் பிச்சையேற்று மகிழ்ந்த பெருமையைச் சிற்றறிவுடைய யாம் எங்ஙனம் அறிவோம்? அறிய இயலவில்லை. |
| **3936.** பொன்னிய லுந்திரு மேனிதன்மேற்<br>புரிநூல் பொலிவித்து<br>மின்னிய லுஞ்சடை தாழவேழ<br>வுரிபோர்த் தரவாட<br>மன்னிய மாமறை யோர்கள்போற்றும்<br>வலஞ்சுழி வாணர்தம்மேல்<br>உன்னிய சிந்தையி னீங்ககில்லார்க்<br>குயர்வாம் பிணிபோமே. 3 | சிவபெருமான் பொன்போன்ற அழகிய திருமேனி மீது முப்புரிநூல் அழகுற விளங்குமாறு அணிந்துள்ளவர். மின்னலைப் போல ஒளிவீசும் சடைதாழ, யானையின் தோலை உரித்துப் போர்த்தவர். ஆடும் பாம்பை அணிந்தவர். நிலைபெற்ற, பெருமையுடைய வேதங்களில் வல்ல அந்தணர்கள் போற்றும் திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானை இடையறாது சிந்தித்து வழிபடும் அடியவர்கட்கு எல்லா நலன்களும் உண்டாகும். நோய் நீங்கும். |
| **3937.** விடையொரு பாலொரு பால்விரும்பு<br>மெல்லியல் புல்கியதோர்<br>சடையொரு பாலொடு பாலிடங்கொள்<br>தாழ்குழல் போற்றிசைப்ப<br>நடையொரு பாலொரு பால்சிலம்பு<br>நாளும் வலஞ்சுழிசேர்<br>அடையொரு பாலடை யாதசெய்யுஞ்<br>செய்கை யறியோமே. 4 | சிவபெருமானுக்கு இடபவாகனம் ஒரு பக்கம். விரும்பிச் சேர்த்த மெல்லியல்புடைய கங்காதேவி ஒரு பக்கம். விரிந்து பரந்த சடை ஒரு பக்கம். தாழ்ந்த கூந்தலையுடைய உமாதேவி ஒரு பக்கம். ஏறுபோல் பீடுநடை பயிலும் திருவடி ஒரு பக்கம். சிலம்பு அணிந்த திருவடி ஒரு பக்கம். திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை நாளும் வழிபடுக. முற்கூறியவை வேறெங்கும் சென்றடையாது சிவனையே அடையும் சிறப்பைச் சிற்றறிவுடைய நாம் அறியோம். |

| | |
|---|---|
| **3938.** கையம ரும்மழு நாகம்வீணை<br>கலைமான் மறியேந்தி<br>மெய்யம ரும்பொடிப் பூசிவீசுங்<br>குழையார் தருதோடும்<br>பையம ரும்மர வாடவாடும்<br>படர்சடை யார்க்கிடமாம்<br>மையம ரும்பொழில் சூழும்வேலி<br>வலஞ்சுழி மாநகரே. 5 | இறைவன் கையில் மழு, பாம்பு, வீணை, கலை மான்கன்று என்பனவற்றை ஏந்தியுள்ளவர். திருமேனியில் திருவெண்ணீற்றைப் பூசியுள்ளவர். ஒளியை வீசி அசைகின்ற குழையும் தோடும் காதில் அணிந்துள்ளவர். படமாடும் பாம்பை அணிந்து நடமாடுபவர். படர்ந்த சடையையுடைய அப்பெருமான் வீற்றிருந்தருளும் இடம், நாற்புறமும் வேலி போன்று, இருளடர்ந்த சோலைகள் சூழ்ந்த திருவலஞ்சுழி என்னும் மாநகரமாகும். |
| **3939.** தண்டொடு சூலந் தழையவேந்தித்<br>தையலொருபாகம்<br>கண்டிடு பெய்பலி பேணிநாணார்<br>கரியி னுரிதோலர்<br>வண்டிடு மொய்பொழில் சூழ்ந்தமாட<br>வலஞ்சுழி மன்னியவர்<br>தொண்டொடு கூடித் துதைந்துநின்ற<br>தொடர்பைத் தொடர்வோமே. 6 | சிவபெருமான் தண்டு, சூலம் இவற்றை ஒளிமிக ஏந்தியுள்ளவர். உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டுள்ளவர். இடப்படுகின்ற பிச்சையை விரும்பி ஏற்பதில் வெட்கப்படாதவர். யானையின் தோலை உரித்துப் போர்த்துக் கொண்டவர். வண்டுகள் மொய்க்கின்ற சோலைகள் சூழ்ந்த மாடங்களையுடைய திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருள்பவர். அப்பெருமான் திருத்தொண்டர்களோடு கூடி நெருங்கி நின்று அருள்வதை உணர்ந்து, நாமும் அவருடைய தொடர்பைத் தொடர்வோமாக! |
| **3940.** கல்லிய லும்மலை யங்கைநீங்க<br>வளைத்து வளையாதார்<br>சொல்லிய லும்மதின் மூன்றுஞ்செற்ற<br>சுடரா னிடர்நீங்க<br>மல்லிய லுந்திர டோளெம்மாதி<br>வலஞ்சுழி மாநகரே<br>புல்கிய வேந்தனைப் புல்கியேத்தி<br>யிருப்பவர் புண்ணியரே. 7 | சிவபெருமான் கல்லின் தன்மை பொருந்திய மேருமலையை அதன் கடினத்தன்மை நீங்க வளைத்து, செருக்குற்ற திரிபுர அசுரர்களின், பழிச்சொல்லுக்கு இடமாகிய மும்மதில்களையும் அழித்தவர். ஒளிவடிவானவர். அடியவர்களின் இடர் நீங்க, மற்போர் பயின்ற திரண்ட தோளையுடைய எம் முதல்வராய்த் திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந் தருளுகின்றார். மன்னுயிர்களை ஆளும் அரசரான அச்சிவபெருமானைச் சார்ந்து போற்றி வழிபடுபவர்கள் புண்ணியர்கள் ஆவர். |
| **3941.** வெஞ்சின வாளரக்கன் வரையை<br>விறலா லெடுத்தான்றோள்<br>அஞ்சுமொ ராறிரு நான்குமொன்று<br>மடர்த்தா ரழகாய<br>நஞ்சிருள் கண்டத்து நாதரென்று<br>நணுகு மிடம்போலும்<br>மஞ்சுல வும்பொழில் வண்டுகெண்டும்<br>வலஞ்சுழி மாநகரே. 8 | கடுஞ்சினமுடைய கொடிய அசுரனான இராவணன் தன் வலிமையால் கயிலை மலையைப் பெயர்க்க, அவன் இருபது தோள்களையும் அடர்த்தவர் சிவபெருமான். அவர் நஞ்சுண்டு இருண்ட அழகிய கண்டத்தையுடைய தலைவர். அவர் விரும்பி வீற்றிருந்தருளும் இடம் மேகத்தைத் தொடும்படி உயர்ந்துள்ள சோலைகளிலுள்ள மலர்களை வண்டுகள் காலால் கிண்டும் திருவலஞ்சுழி என்னும் திருத்தலமாகும். |

| | | |
|---|---|---|
| **3942.** ஏடிய னான்முகன் சீர்நெடுமா<br>லெனநின் றவர்காணார்<br>கூடிய கூரெரி யாய்நிமிர்ந்த<br>குழக ருலகேத்த<br>வாடிய வெண்டலை கையிலேந்தி<br>வலஞ்சுழி மேயவெம்மான்<br>பாடிய நான்மறை யாளர்செய்யுஞ்<br>சரிதை பலபலவே. | 9 | இதழ்களையுடைய தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் காணமுடியாத வண்ணம் நெருப்புப் பிழம்பாய் ஓங்கி நின்றவர் சிவபெருமான். அவர் உலகோர் போற்றி வணங்குமாறு, வற்றிய பிரமகபாலத்தைக் கையிலேந்தி திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந் தருளுகின்றார். எம் தலைவரான அவரை நான்கு வேதங்களையும் நன்கு கற்றுவல்லவர்கள் பாடிப் போற்றும் தன்மையில் அவர் புரியும் திருவிளையாடல்கள் பலபல வாகும். |
| **3943.** குண்டரும் புத்தருங் கூறையின்றிக்<br>குழுவா ருரைநீத்துத்<br>தொண்டருந் தன்றொழில் பேணநின்ற<br>கழலா னழலாடி<br>வண்டம ரும்பொழின் மல்குபொன்னி<br>வலஞ்சுழி வாணனெம்மான்<br>பண்டொரு வேள்வி முனிந்துசெற்ற<br>பரிசே பகர்வோமே. | 10 | தீவினைக்கஞ்சாத சமணர்கள், ஆடையின்றிக் கூட்டமாயிருப்பவர்கள், அவர்களும் புத்தர்களும் இறைவனை உணராது கூறும் மொழிகளைத் தள்ளிவிடுங்கள். தொண்டர்கள் சரியைத் தொழிலில் விரும்பி வழிபட்டு நிற்க, கழலணிந்த திருவடிகளையுடைய சிவபெருமான் அழல் ஏந்தி ஆடுபவன். வண்டுகள் விரும்புகின்ற சோலைகளை யுடையதும், காவிரியாறு வலஞ்சுழித்துப் பாய்கின்றதுமான திருவலஞ்சுழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான் முன்னொரு காலத்தில் அவனை நினையாது தக்கன் செய்த வேள்வியைக் கோபித்து அழித்த தன்மையைப் பகர்வோமாக. (நீவிர் அவனை நினைந்து வழிபட்டு உய்மின் என்பது குறிப்பு) |
| **3944.** வாழியெம் மானெனக் கெந்தைமேய<br>வலஞ்சுழி மாநகர்மேல்<br>காழியுண் ஞானசம் பந்தன்சொன்ன<br>கருத்தின் றமிழ்மாலை<br>ஆழியிவ் வையகத் தேத்தவல்லா<br>ரவர்க்குந் தமருக்கும்<br>ஊழி யொருபெரு மின்பமோக்கும்<br>உருவும் முயர்வாமே. | 11 | எம் தலைவனும், தந்தையுமான, சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருவலஞ்சுழி என்னும் மாநகரை வாழ்த்தி, சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய சிறந்த பயனைத்தரும் கருத்துக்கள் அடங்கிய தமிழ்மாலையாகிய இத்திருப்பதிகத்தை ஏத்த வல்லவர்களும், அவர்களுடைய சுற்றத்தார்களும் கடல் சூழ்ந்த இவ்வையகத்திலேயே பேரின்பம் துய்ப்பர். ஊழிக் காலத்திலும் நனி விளங்கும் உயர்ந்த புகழுடைவர். |

## 107. திருநாரையூர்

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 107

3945. கடலிடை வெங்கடு நஞ்சமுண்ட
கடவுள் விடையேறி
உடலிடை யிற்**பொடிப் பூசவல்லா**
னுமையோ டொருபாகன்
அடலிடை யிற்சிலை தாங்கியெய்த
வம்மா னடியார்மேல்
நடலைவி னைத்தொகை தீர்த்துகந்தானிட
நாரை யூர்தானே. 1

பொடி பூச வல்லான். நீறணிந்த கோலம். நெஞ்சம் பிணிக்கும் எழில் உடைமையான் அக்கோலம் தொழுவார் உள்ளத்து நீங்காது நிற்றலின் ஆண்டுள்ள வினை நீறு ஆம் – திருக்கோவையார்.

கடலில் தோன்றிய வெப்பம் மிகுந்த கடுமையான நஞ்சையுண்ட கடவுள் இடப வாகனத்தில் ஏறி, திருமேனியில் திருவெண்ணீற்றினைப் பூசி, உமாதேவியைத் தம் ஒரு பாகமாகக் கொண்டவர். முப்புர அசுரர்களுடன் போரிடும் சமயத்தில் மேரு மலையாகிய வில்லைத் தாங்கிக் கணைஎய்த பெருமான், தம்முடைய அடியார்கள் மேல் வரும் துன்பம்தரும் வினைத் தொகுதிகளைத் தொலைத்து மகிழ்பவர். இத்தகைய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம் திருநாரையூர் என்னும் திருத்தலமாகும்.

3946. விண்ணின்மின் னேர்மதி துத்திநாகம்
விரிபூ மலர்க்கொன்றை
பெண்ணின்முன் னேமிக வைத்துகந்த
பெருமா னெரியாடி
நண்ணிய தன்னடி யார்களோடுந்
திருநாரை யூரானென்
றெண்ணுமி னும்வினை போகும்வண்ண
மிறைஞ்சுந் நிறைவாமே. 2

ஆகாயத்தில் விளங்கும், மின்னல் போன்ற ஒளியுடைய சந்திரனையும், படப்புள்ளிகளை யுடைய பாம்பினையும், விரிந்த கொன்றை மலரையும், கங்காதேவிக்கு முன்னே சடையிலணிந்து மிகவும் மகிழ்ந்த பெருமான், நெருப்பேந்தி ஆடுபவர். திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருள்கின்ற அச்சிவபெருமானை மனம், வாக்கு, காயத்தால் வழிபடுகின்ற அடியார்கள் கூட்டத்தோடு நீங்களும் சேர்ந்து தியானம் செய்யுங்கள். உங்கள் வினைகள் தொலைந்துபோகும் வண்ணம் வணங்குங்கள். எல்லா நலன்களும் நிறையக் குறைவில்லா இன்பம் உண்டாகும்.

3947. தோடொரு காதொரு காதுசேர்ந்த
குழையா னிழைதோன்றும்
பீடொரு கால்பிரி யாதுநின்ற
பிறையான் மறையோதி
நாடொரு காலமுஞ் சேரநின்றதிரு
நாரை யூரானைப்
பாடுமி னீர்பழி போகும்வண்ணம்
பயிலு முயர்வாமே. 3

சிவபெருமான் இடக்காதில் தோடும், வலக் காதில் குழையும் அணிந்துள்ளவர். மார்பில் பூணூல் அணிந்துள்ளவர். ஒரு காலத்திலும் பெருமை நீங்காமல் நிலைத்து நிற்பவர். பிறைச் சந்திரனை அணிந்துள்ளவர். வேதங்களை ஓதுபவர். ஒவ்வொரு காலத்திலும் நாட்டிலுள்ள அடியார்கள் வணங்குதற்கு வந்து சேரும்படி வீற்றிருந்தருளுகின்ற திருநாரையூர்ப் பெருமானைப் பாடுவீர்களாக. உங்கள் பழிகள் நீங்கும் வண்ணம் இடைவிடாது வணங்குங்கள். உங்கட்கு உயர்வு உண்டாகும்.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3948.** வெண்ணில வஞ்சடை சேரவைத்து<br>விளங்குந் தலையேந்திப்<br>பெண்ணி லமர்ந்தொரு கூறதாய<br>பெருமா னருளார்ந்த<br>அண்ணன் மன்னியுறை கோயிலாகு<br>மணிநாரை யூர்தன்னை<br>நண்ணல மார்ந்துற வாக்குமின்கள்<br>நடலை கரிசறுமே. 4 | வெண்ணிறப் பிறைச்சந்திரனைத் தலையிலே அணிந்து, விளங்குகின்ற பிரமகபாலத்தைக் கையிலேந்தி, உமாதேவியைத் தன்னுடம்பில் ஒரு கூறாகக் கொண்ட பெருமானும், அருள் நிறைந்த தலைவனுமாகிய சிவபெருமான் நிலையாக வீற்றிருந்தருளும் கோயிலுள்ள அழகிய திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் சேர்ந்து இறைவனிடம் அன்பு செலுத்துங்கள். உங்கள் துன்பங்கள் நீங்கும். |
| **3949.** வானமர் தீவளி நீர்நிலனாய்<br>வழங்கும் பழியாகும்<br>ஊனம ரின்னுயிர் தீங்குகுற்ற<br>முறைவாற் பிறிதின்றி<br>நானம ரும்பொரு ளாகிநின்றான்<br>றிருநாரை யூரெந்தை<br>கோனவ னைக்குறு கக்குறுகா<br>கொடுவல் வினைதானே. 5 | ஆகாயம், நெருப்பு, காற்று, நீர், நிலம் ஆகிய ஐம்பூதங்களின் தொடர்பாய் விளங்குகின்ற, பழிக்கு இடமாகிய தசையாகிய இவ்வுடம்பில் தங்குகின்ற இனிய உயிர் தீமை பயக்கும் குற்றம் புரியும் இயல்பாயுள்ளது. அக்குற்றங்களிலிருந்து உய்தி பெறப் பிறிதொரு வழியின்றி, அடியேன் விரும்பிச் சார்தற்குப் பற்றுக்கோடாக விளங்கும் பெருமான் திருநாரையூரில் வீற்றிருந் தருளுகின்ற என் தந்தையும், தலைவனுமாவான். அப்பெருமானைச் சரணடையக் கொடிய வல்வினைகள் நம்மை வந்து சாரா. |
| **3950.** கொக்கிற குங்குளிர் சென்னிமத்தங்<br>குலாய மலர்சூடி<br>அக்கர வோடரை யார்த்துகந்த<br>வழகன் குழகாக<br>நக்கம ருந்திரு மேனியாளன்றிரு<br>நாரை யூர்மேவிப்<br>புக்கம ரும்மனத் தோர்கடம்மைப்<br>புணரும் புகறானே. 6 | சிவபெருமான் தலையில் கொக்கின் இறகையும், குளிர்ந்த பொன்னூமத்தையின் செழித்த மலரையும் சூடியவர். எலும்பைப் பாம்போடு சேர்த்து இடுப்பில் கட்டி, மகிழும் அழகர். இளமையாய்த் திகம்பரராய்த் திகழும் திருமேனியுடையவர். அப்பெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருநாரையூர் என்னும் திருத்தலத்தை அடைந்து, அவரை விரும்பி வழிபடும் மனத்தையுடையவர்களிடத்துத் திருவருட்சத்தி பதியும். |
| **3951.** ஊழியு மின்பமுங் காலமாகி<br>யுயருந் தவமாகி<br>ஏழிசை யின்பொருள் **வாழும்வாழ்க்கை**<br>**வினையின் புணர்ப்பாகி**<br>நாழிகை யும்பல ஞாயிறாகிநளிர்<br>நாரை யூர்தன்னில்<br>வாழியர் மேதகு மைந்தர்செய்யும்<br>வகையின் விளைவாமே. 7<br>———<br>சிவபரத்துவம் விளக்கப்பட்டுள்ளது. | சிவபெருமான் ஊழிக்காலமும், இன்பமும், காலங்களும் ஆகியவர். உயர்ந்த தவம் ஆகியவர். ஏழிசையின் பயனாக விளங்குபவர். வாழ்கின்ற வாழ்க்கையில் உயிர்கள் செய்கின்ற வினையின் பயன்களை உயிர்கட்குச் சேர்ப்பிப்பவர். நாழிகை முதலிய சிறு காலங்களின் அளவுகளாகிப் பலவாகிய நாள்களும் ஆகியவர். இவைகளெல்லாம் குளிர்ச்சி பொருந்திய திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானின் அருள் விளையாடல்களின் விளைவுகளேயாகும். |

| | |
|---|---|
| **3952.** கூசமிலா தரக்கன் வரையைக்<br>குலுங்க வெடுத்தான்றோள்<br>நாசம தாகி யிறவடர்த்த<br>விரலான் கரவாதார்<br>பேசவி யப்பொடு பேணநின்ற<br>பெரியோ னிடம்போலும்<br>தேசமு றப்புகழ் செம்மைபெற்ற<br>திருநாரை யூர்தானே. 8 | கூசுதல் இல்லாது திருக்கயிலாய மலையைக் குலுங்க எடுத்த இராவணனுடைய தோள்கள் நெரியும்படி அடர்த்த திருப்பாத விரலையுடையவர் சிவபெருமான். நெஞ்சில் வஞ்சமில்லாத உண்மையடியார்கள் மிகவும் வியப்போடு பேசும்படியும், இடைவிடாது தியானிக்கும்படியும் நின்ற பெருமையுடையவர். இத்தகைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், தேசம் முழுவதும் புகழுகின்ற சிறப்புடைய திருநாரையூர் என்னும் திருத்தலமாகும். |
| **3953.** பூமக னும்மவ னைப்பயந்த<br>புயலார் நிறத்தானும்<br>ஆமள வுந்திரிந் தேத்திக்காண்ட<br>லறிதற் கரியானூர்<br>பாமரு வுங்குணத் தோர்களீண்டிப்<br>பலவும் பணிசெய்யும்<br>தேமரு வுந்திகழ் சோலைசூழ்ந்த<br>திருநாரை யூர்தானே. 9 | தாமரைப் பூவில் வீற்றிருந்தருளும் பிரமனும், அவனைப் பெற்ற மேகம் போன்ற நிறத்தையுடைய திருமாலும், தங்களால் இயன்ற அளவு திரிந்து தேடியும், ஏத்தியும் காண்பதற்கு அரியவனாக விளங்கிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஊர், நீதி நூல்களில் சொல்லிய நற்குண, நற்செய்கை உடையவர்கள் கூடி, திருத்தொண்டுகள் பலவும் செய்யும், தேன்மணம் கமழும் சோலைகள் சூழ்ந்த திருநாரையூர் என்னும் திருத்தலமாகும். |
| **3954.** வெற்றரை யாகிய வேடங்காட்டித்<br>திரிவார் துவராடை<br>உற்றரை யோர்க ளுரைக்குஞ்சொல்லை<br>யுணரா தெழுமின்கள்<br>குற்றமி லாததோர் கொள்கையெம்மான்<br>குழகன் றொழிலாரப்<br>பெற்றர வாட்டிவரும் பெருமான்றிரு<br>நாரை யூர்சேர்வே. 10 | ஆடையற்ற கோலத்துடன் திரியும் சமணர்களும், மஞ்சட் காவியாடை போர்த்துத் திரியும் புத்தர்களும் உரைக்கின்ற சொற்களை ஏற்க வேண்டா. குற்றமில்லாத கொள்கை உடைய எம் தலைவரும், இளமையானவரும், அடியவர்கட்கு அருள்புரியும் தொழிலை யுடையவரும், அரவம் அணிந்துள்ளவருமான சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருநாரையூர் என்னும் திருத்தலத்தைச் சேர்ந்து, வழிபட்டு உய்வீர்களாக. |
| **3955.** பாடிய லுந்திரை சூழ்புகலித்<br>திருஞான சம்பந்தன்<br>சேடிய லும்புக ழோங்குசெம்மைத்<br>திருநாரை யூரான்மேல்<br>பாடிய தண்டமிழ் மாலைபத்தும்<br>பரவித் திரிந்தாக<br>வாடிய சிந்தையி னார்க்குநீங்கு<br>மவலக் கடல்தானே. 11 | அலை ஓசையுடைய கடல்சூழ்ந்த சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தன், பெருமை பொருந்தியதும் ஓங்கும் புகழ் உடையதும், சிவத்தன்மை உடையதுமான திருநாரையூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமான் மீது பாடிய பத்துப் பாடல்களாலாகிய இத்தண்டமிழ் மாலையாகிய பதிகத்தைப் பாடித் துதிக்கும் சிந்தையுடைய அடியார்களின் கடல் போன்ற பெருந்துன்பம் நீங்கும். |

## 108. திருஆலவாய் ( நாலடி மேல் வைப்பு )

பண் : பழம்பஞ்சுரம் | பதிக எண் : 108

3956. வேத வேள்வியை நிந்தனை செய்துழல்
ஆத மில்லியமணொடு தேரரை
வாதில் வென்றழிக் கத்திரு வுள்ளமே
பாதி மாதுட னாய பரமனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 1

உமாதேவியைத் தன் உடம்பில் ஒரு பாதியாக வைத்துள்ள பரமனே! தென் ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! வேதத்தையும், வேள்வியையும், பழித்துத் திரியும் பயனற்றவர்களாகிய சமணர்களையும், புத்தர்களையும் வாதில் வென்றழிக்க உம்மை வேண்டுகின்றேன். உமது திருவுள்ளம் யாது? உலகனைத்தும் உமது புகழே மிக வேண்டும். திருவருள்புரிவீராக!

3957. வைதி கத்தின் வழியொழு காதவக்
கைத வம்முடைக் காரமண் தேரரை
எய்தி வாதுசெ யத்திரு வுள்ளமே
மைதி கழ்தரு மாமணி கண்டனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 2

மான்கன்றையும், மழுவையும் கைகளில் ஏந்தியுள்ள சிவபெருமானே! வேத நெறிப்படி ஒழுகாத கொடிய பாவிகளாகிய, கையினால் முடி பறிக்கப்பட்ட தலையோடு பாயை உடுத்தித் திரியும் சமணர்கள் தோல்வியுறும்படி அவர்களோடு வாது செய்ய உமது திருவுளம் யாது? தென் ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் முதல்வரே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள்புரிவீராக!

3958. மறைவ ழக்கமி லாதமா பாவிகள்
பறித லைக்கையர் பாயுடுப் பார்களை
முறிய வாதுசெ யத்திரு வுள்ளமே
மறியு லாங்கையின் மாமழு வாளனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 3

மான்கன்றையும், மழுவையும் கைகளில் ஏந்தியுள்ள சிவபெருமானே! வேத நெறிப்படி ஒழுகாத கொடிய பாவிகளாகிய, கையினால் முடி பறிக்கப்பட்ட தலையோடு பாயை உடுத்தித் திரியும் சமணர்கள் தோல்வியுறும்படி அவர்களோடு வாது செய்ய உமது திருவுளம் யாது? தென் ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் முதல்வரே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள்புரிவீராக!

3959. அறுத்த வங்கமா றாயின நீர்மையைக்
கறுத்த வாழமண் கையர்கள் தம்மொடும்
செறுத்து வாதுசெயத்திரு வுள்ளமே
முறித்த வாண்மதிக் கண்ணி முதல்வனே
ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயி லுறையுமெம் மாதியே. 4

ஒளிபொருந்திய பிறைச்சந்திரனை அணிந்த முதல்வனே! வரையறுக்கப்பட்ட வேதத்தின் ஆறு அங்கம் வகுக்கும் கொள்கைகளை வெறுக்கும் சமணர்களாகிய கீழோர்களைத் தடுத்து அவர்களோடு அடியேன் வாது செய்ய உமது திருவுள்ளம் யாது? தென் ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! உலகனைத்தும் உம் புகழே மிகவேண்டும். திருவருள்புரிவீராக!

| | |
|---|---|
| **3960.** அந்த ணாளர் புரியு மருமறை<br>சிந்தை செய்யா அருகர் திறங்களைச்<br>சிந்த வாதுசெ யத்திரு வுள்ளமே<br>வெந்த நீற தணியும் விகிர்தனே<br>ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்<br>ஆல வாயி லுறையுமெம் மாதியே. **5** | நெருப்பில் வெந்த திருவெண்ணீற்றினை அணியும் வேறுபட்ட இயல்புகளையுடைய சிவபெருமானே! அந்தணர்கள் செய்யும் அரிய வேதக்கிரியைகளை நினைத்துப் பார்க்காத சமணர்களின் வலிமைகள் சிதறும்படி அடியேன் வாது செய்ய உமது திருவுள்ளம் யாது? அழகிய திருஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள் புரிவீராக! |
| **3961.** வேட்டு வேள்விசெ யும்பொரு ளைவிளி<br>மூட்டு சிந்தை முருட்டமண் குண்டரை<br>ஓட்டி வாதுசெ யத்திரு வுள்ளமே<br>காட்டி லானை யுரித்தவெங் கள்வனே<br>ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்<br>ஆல வாயி லுறையுமெம் மாதியே. **6** | காட்டில் வாழும் யானையின் தோலை உரித்துப் போர்த்த என் உள்ளங் கவர்ந்த கள்வரே! அந்தணர்கள் விரும்பிச் செய்கின்ற வேள்விச் செயல்களை இகழ்ந்து பேசும் வன்னெஞ்சினராகிய அமண்குண்டர்களை அடியேன் வாது செய்து விரட்ட உமது திருவுள்ளம் யாது? அழகிய ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள்புரிவீராக! |
| **3962.** அழலு தோம்பு மருமறை யோர்திறம்<br>விழல தென்னு மருகர் திறத்திறம்<br>கழல வாதுசெ யத்திரு வுள்ளமே<br>தழலி லங்கு திருவுருச் சைவனே<br>ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்<br>ஆல வாயி லுறையுமெம் மாதியே. **7** | நெருப்புப் போன்று விளங்கும் சிவந்த திருமேனியுடைய சிவபெருமானே! அழலோம்பி அருமறையாளர்கள் செய்யும் காரியங்களைப் பயனற்றவை என்று கூறும் சமணர்களின் பலவகைத் திறமைகளும் விலக வாது செய்ய எண்ணுகின்றேன். உமது திருவுள்ளம் யாது? அழகிய ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள்புரிவீராக! |
| **3963.** நீற்று மேனிய ராயினர் மேலுற்ற<br>காற்றுக் கொள்ளவு நில்லா வமணரைத்<br>தேற்றி வாதுசெ யத்திரு வுள்ளமே<br>ஆற்ற வாள ரக்கற்கு மருளினாய்<br>ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்<br>ஆல வாயி லுறையுமெம் மாதியே. **8** | சிறந்த வாள்வீரனான இராவணனுக்கு மிக்க அருள்புரிந்தவரே? திருநீறு பூசியவர் மேல் பட்டு வீசும் காற்றடிக்கும் இடத்திலும் நில்லாத வன்கண்மை பொருந்திய உள்ளமுடைய சமணர்களின் பிழையைத் தெளிவித்து வாது செய்ய, உமது திருவுள்ளம் யாது? அழகிய ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள்புரிவீராக! |

| | |
|---|---|
| **3964.** நீல மேனி யமணர் திறத்துநின்<br>சீலம் வாதுசெ யத்திரு வுள்ளமே<br>மாலு நான்முக னுங்காண் பரியதோர்<br>கோல மேனிய தாகிய குன்றமே<br>ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்<br>ஆல வாயி லுறையுமெம் மாதியே. 9 | திருமாலும், பிரமனும் காணுதற்கரியவராய், அழகிய திருமேனியோடு நெருப்பு மலையாய் ஓங்கி நின்ற சிவபெருமானே! கரிய உடலையுடைய சமணர்களோடு உமது உயர்வினை வெளிப்படுத்தும் வண்ணம் வாது செய்ய உமது திருவுள்ளம் யாது? அழகிய திருஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள் புரிவீராக! |
| **3965.** அன்று முப்புரஞ் செற்ற வழகநின்<br>துன்று பொற்கழல் பேணா வருகரைத்<br>தென்ற வாதுசெ யத்திரு வுள்ளமே<br>கன்று சாக்கியர் காணாத் தலைவனே<br>ஞால நின்புக ழேமிக வேண்டுந்தென்<br>ஆல வாயி லுறையுமெம் மாதியே. 10 | சினந்து பேசும் இயல்புடைய சமண, புத்தர்களால் காண இயலாத தலைவரே! முன்னொரு காலத்தில் முப்புரங்களை எரித்த அழகரே! உம்முடைய பொன்போன்ற திருவடிகளைப் போற்றாத சமணர்கள் தோற்றோட வாதம் செய்ய, உமது திருவுள்ளம் யாது? அழகிய ஆலவாயில் வீற்றிருந்தருளும் எம் ஆதிமூர்த்தியே! உலகனைத்தும் உம் புகழே மிக வேண்டும். திருவருள்புரிவீராக! |
| **3966.** கூட லாலவாய்க் கோனை விடைகொண்டு<br>வாடன் மேனி யமணரை வாட்டிட<br>மாடக் காழிச்சம் பந்தன் மதித்தவிப்<br>பாடல் வல்லவர் பாக்கிய வாளரே. 11 | நான்கு மாடங்கள் கூடும் திரு ஆலவாயில் வீற்றிருந்தருளும் இறைவரை வணங்கி, உண்ணா நோன்புகளால் வாடிய உடலை உடைய சமணர்களோடு வாது செய்து, அவர்களைத் தோல்வியுறும்படி செய்ய இறைவரது இசைவும், அருளும் பெற்ற, மாடங்களையுடைய சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் பாடிய இப்பதிகப் பாடல்களை ஓத வல்லவர்கள் பாக்கியவான்களாவர். |

## 109. திருக்கயிலாயமும் - திருவானைக்காவும், திருமயேந்திரமும் - திருவாரூரும் ( கூடற்சதுக்கம் )

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 109

| | |
|---|---|
| **3967.** மண்ணது வுண்டரி மலரோன்காணா<br>வெண்ணாவல் விரும்புமயேந்திரரும்<br>கண்ணது வோங்கிய கயிலையாரும்<br>அண்ணலா ரூராதி யானைக்காவே. 1 | மண்ணுண்ட திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் காணமுடியாதபடி, திருமயேந்திர மலையில் எழுந்தருளி யிருப்பவரும், காட்சிமிக்க திருக்கயிலையில் எழுந்தருளி இருப்பவரும், திருவாரூரில் வீற்றிருப்பவரும், வெண்ணாவல் மரத்தின்கீழ் எழுந்தருள விரும்புபவரும் ஆகிய தலைவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் தலம் திருவானைக்காவேயாகும். |

ஒவ்வொரு பாடலிலும் திருமாலும், பிரமனும் காண முடியாதவர் சிவன் என்று இயம்புகிறார்.

ஆரூர் ஆதி ஆனைக்காவே – பதிக மகுடம்.

| பாடல் | எண் | விளக்கம் |
|---|---|---|
| **3968.** வந்துமா லயனவர் காண்பரியார்<br>வெந்தவெண் ணீறணி மயேந்திரரும்<br>கந்தவார் சடையுடைக் கயிலையாரும்<br>அந்தணா ரூராதி யானைக்காவே. | 2 | சிவபெருமான், திருமாலும், பிரமனும் காண்பதற்கு அரியவர். அவர் வெந்த திருவெண்ணீற்றினை அணிந்தவராய்த் திருமயேந்திரத்திலும், நறுமணம் கமழும் சடையுடையவராய்த் திருக்கயிலையிலும், அழகிய, குளிர்ச்சிமிக்க திருவாரூரிலும், பழமை வாய்ந்த திருவானைக்காவிலும் விளங்குபவர். |
| **3969.** மாலயன் றேடிய மயேந்திரரும்<br>காலனை யுயிர்கொண்ட கயிலையாரும்<br>வேலைய தோங்கும்வெண் ணாவலாரும்<br>ஆலையா ரூராதி யானைக்காவே. | 3 | திருமாலும், பிரமனும் தேடிய சிவபெருமான் திருமயேந்திரத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அவரே மார்க்கண்டேயருக்காகக் காலனை மாய்த்த கயிலைநாதர். பஞ்சபூதத் தலங்களுள் அப்புத் (நீர்) தலமாக விளங்கும் திருஆனைக்காவில் வெண்ணாவல் மரத்தின்கீழ் வீற்றிருந்தருளுபவர். கருப்பங்கழனிகளை உடைய திருவாரூரில் வீற்றிருந்தருளுபவரும் அவரே. |
| **3970.** கருடனை யேறரி யயனோர்காணார்<br>வெருள்விடை யேறிய மயேந்திரரும்<br>கருடரு கண்டத்தெங் கயிலையாரும்<br>அருளனா ரூராதி யானைக்காவே. | 4 | கருடவாகனம் கொண்ட திருமாலும், பிரமனும் காணமுடியாதவராகிய சிவபெருமான், பகைவர் அஞ்சத்தக்க இடப வாகனத்தில் விளங்குகின்ற திருமயேந்திரர், கருநிறக் கண்டத்தையுடைய திருக்கயிலைநாதர். அருளே திருமேனியாகக் கொண்ட திருஆரூரர். அவரே ஆதியாகிய திருவானைக்காவில் வீற்றிருந்தருளுபவர். |
| **3971.** மதுசூதன் நான்முகன் வணங்கரியார்<br>மதியது சொல்லிய மயேந்திரரும்<br>கதிர்முலை புல்கிய கயிலையாரும்<br>அதியனா ரூராதி யானைக்காவே. | 5 | மது என்ற அசுரனைக் கொன்றவனாகிய திருமாலும், பிரமனும் வணங்குதற்கு அரியராய் விளங்குபவர் சிவபெருமான். ஆகமங்களை உபதேசித்தருளிய திருமகேந்திர மலையில் வீற்றிருந்தருளுபவர். ஒளி பொருந்திய கொங்கைகளையுடைய உமாதேவியைத் தழுவிய திருக்கயிலைநாதர், எவர்க்கும் மேம்பட்டவர். திருவாரூரில் வீற்றிருந்தருளுபவர். அவரே ஆதியாகிய திருவானைக்காவில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3972.** சக்கரம் வேண்டுமால் பிரமன்காணா<br>மிக்கவர் கயிலை மயேந்திரரும்<br>தக்கனைத் தலையரி தழலுருவர்<br>அக்கணி யவராரூ ரானைக்காவே. | 6 | சக்கராயுதத்தை வேண்டிப் பெற்ற திருமாலும், பிரமனும் காணாத வண்ணம் விளங்கிய, யாவரினும் மேம்பட்டவரான சிவபெருமான், திருக்கயிலைமலையிலும், திரு மயேந்திரத்திலும் வீற்றிருந்தருளுகின்றார். அவர் தக்கனின் தலையை அரிந்தவர். நெருப்புருவானவர். உருத்திராக்கமாலை அணிந்தவர். திருவாரூரிலும், திருவானைக்காவிலும் வீற்றிருந்தருளுபவர். |

| | | | |
|---|---|---|---|
| **3973.** | கண்ணனு நான்முகன் காண்பரியார்<br>வெண்ணாவல் விரும்பு மயேந்திரரும்<br>கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள்<br>அண்ணலா ரூராதி யானைக்காவே. | 7 | கருநிறத் திருமாலும், பிரமனும் காண்பதற்கு அரியவரான சிவபெருமான் திருமயேந்திரத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அவர் கண்ணப்பர்க்கு அருள்செய்த கயிலைநாதர். எங்கள் தலைவரான திருவாரூரர். அவர் வெண்ணாவல் மரத்தின்கீழ் வீற்றிருக்க விரும்பும் திருவானைக்காவிலுள்ள ஆதிமூர்த்தி ஆவார். |
| **3974.** | கடல்வண்ணன் நான்முகன் காண்பரியார்<br>தடவரை யரக்கனைத் தலைநெரித்தார்<br>விடமது வுண்டவெம் மயேந்திரரும்<br>அடல்விடையா ரூராதி யானைக்காவே. | 8 | கடல்போலும் கருநிறமுடைய திருமாலும், பிரமனும் காண்பதற்கரிய சிவபெருமான், பெரிய கயிலைமலையின் கீழ் இராவணனின் தலையை நெரித்த கயிலைநாதர். விடமுண்ட திருமயேந்திரர். வலிய இடபத்தில் ஏறும் திருவாரூரர். அவரே திருவானைக்காவில் வீற்றிருந்தருளும் ஆதிமூர்த்தி ஆவார். |
| **3975.** | ஆதிமா லயனவர் காண்பரியார்<br>வேதங்கள் துதிசெயு மயேந்திரரும்<br>காதிலொர் குழையுடைக் கயிலையாரும்<br>ஆதியா ரூரெந்தை யானைக்காவே. | 9 | தொன்றுதொட்டுத் திருமாலும், பிரமனும் காண்பதற்கு அரியவராய் ஓங்கிய சிவபெருமான், வேதங்களால் துதிக்கப்பெறும் மயேந்திரரும், காதில் குழையணிந்த கயிலைநாதரும், ஆதியாகிய திருவாரூர் எந்தையும் ஆவர். அவரே திருவானைக்காவில் வீற்றிருந்தருளுகின்றார். |
| **3976.** | அறிவி லமண்புத்த ரறிவுகொள்ளேல்<br>வெறியமான் கரத்தாரூர் மயேந்திரரும்<br>மறிகட லோனயன் றேடத்தானும்<br>அறிவரு கயிலையோ னானைக்காவே. | 10 | இறைவனைப் பற்றி எதுவுமே கூறாத அறிவிலிகளாகிய சமணர்களும், புத்தர்களும் கூறும் உரைகளைக் கொள்ள வேண்டா. மடங்கிவீசும் அலைகளையுடைய பாற்கடலில் பள்ளி கொள்ளும் திருமாலும், பிரமனும் அறிவதற்கரியவரான கயிலை மலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானே, மருண்ட பார்வையுடைய மான்கன்றைக் கையிலேந்தித் திருவாரூரிலும், திருமயேந்திரத்திலும், திருவானைக்காவிலும் வீற்றிருந் தருளுகின்றார். |
| **3977.** | ஏனமா லயனவர் காண்பரியார்<br>கானமார் கயிலைநன் மயேந்திரரும்<br>ஆனவா ரூராதி யானைக்காவை<br>ஞானசம் பந்தன் றமிழ்சொல்லுமே. | 11 | பன்றி உருவமெடுத்த திருமாலும், பிரமனும் காண்பதற்கு அரியவராய் ஓங்கிய சிவபெருமான், சோலைகள் சூழ்ந்த திருக்கயிலையிலும், நல்ல திரு மயேந்திரத்திலும், திருவாரூரிலும், திருவானைக்காவிலும் வீற்றிருந் தருளுகின்றார். அத்தகைய சிவபெருமானைப் போற்றி ஞானசம்பந்தர் அருளிய இத்தமிழ்மாலையை ஓதவல்லவர்கள் பெறலரும் பிறவிப் பயனைப் பெறுவார்கள். |

## இப்பதிகத்திற்கான பெரியபுராண உரை

| உண்மை தோன்றும் | மயேந்திரத்திலும் |
|---|---|
| சிறப்புடைய அழகு நீடியிருக்கும் | திருக்கயிலையிலும் |
| செல்வத் | திருவாரூரிலும் |
| | திருவானைக்காவிலும் |

எழுந்தருளியுள்ள சுவாமியைப் புகழ்ந்து பாடி எல்லையில்லாத இன்பம் பெற்றார்.

| திருக்கயிலை | நொடித்தான் மலை | சங்காரம் |
|---|---|---|
| திருவாரூர் | பிருதிவித்தலம் | படைப்பு |
| ஆனைக்கா | நீர்த்தலம் | காத்தல் |
| மயேந்திரம் | உண்மை தோன்றும் பொருள் | தெரிவிக்கும் நிலை |

<u>**பெரிய புராணப் பாடல் எண் 345**</u>

நாரணன் நான்முகன் காணாஉண்மை வெண்நாவல் உண்மை மயேந்திரமுஞ்
சீரணி நீடுந்திருக்கயிலை செல்வத் திருவாரூர் மேய பண்பும்
ஆரணத்துட் பொருள் ஆயினாரை ஆனைக்காவின்கட் புகழ்ந்துபாடி
ஏரணியும் பொழில்சூழ்ந்த சண்பை யேந்தலார் எல்லையில் இன்பமுற்றார்

### சீரணி நீடும் திருக்கயிலை

எல்லாத் தலங்களின் சீரும் இத்தலத்திற்குச் சென்று அடங்குதலானும் என்றும் அழியாது இருத்தலானும் சீர்நீடும் என்றார்.

### செல்வத் திருவாரூர்

செல்வச் செல்வியாகிய திருமகளுக்குச் செல்வங் கொடுத்தலும், செல்வத் தியாகேசர் வீற்றிருத்தலும் குறிப்பு.

### உண்மை மயேந்திரம்

உண்மைப் பொருளாகிய ஆகமங்களை வெளிப்படுத்திய இடம் என்பது குறிப்பு. உண்மைப்பொருள் பதி, பசு, பாச இயல்பும், பயனும்.

"மன்னும் மாமலை மகேந்திரமதனிற் சொன்ன ஆகமம் தோற்று வித்த ருளியும்"

"மற்றவை தம்மை மகேந்திரத்து இருந்து உள்ள ஐம்முகங்களாற் பணித்து அருளியும்" – திருவாசகம்

| மயேந்திரம் | இமயத்தின் ஒரு சிகரம் என்பாரும்<br>தென்கடலில் இருந்து நீரினுள் மூழ்கிய மலை என்பாரும்<br>இரண்டிடங்களிலும் ஆகமம் வெளிப்படுத்தினார் என்பாரும்<br>என பல திறத்து ஆராய்ச்சியாளர்கள் உள்ளனர். |
|---|---|

### ஆனைக்காவின் கண்

இப்பதிகம் கூடற்சதுக்கம் எனப் பெயர்பெற்றுப் பாட்டுத்தோறும் இந்நான்கு தலங்களிலும் இறைவர் வெளிப்பட அருளுந்திறம் போற்றப்படினும் இது திருவானைக்காவில் இருந்து பாடியருளப் பெற்றது என்பதாம்.

## 110. திருப்பிரமபுரம் (ஈரடி)

பண் : பழம்பஞ்சுரம் | பதிக எண் : 110

3978. வரமதேகொளா வுரமதேசெயும்
புரமெரித்தவன் பிரமநற்புரத்
தரனனாமமே பரவுவார்கள்சீர்
விரவுநீள் புவியே. 1

பனிரெண்டு பாடல்களில் காழிப்பதியின் பனிரெண்டு பெயர்களையும் அந்நகரில் வீற்றிருந்து அருள்புரியும் சிவபெருமானையும் போற்றுகின்றார்.
1. ர – பிரமபுரம். பிரமன் பூசித்தது

தவம் செய்து பெற்ற வரத்தை நன்முறையில் பயன்படுத்தாது, தமது வலிமையைப் பயன்படுத்தித் தீமை செய்த அசுரர்களின் முப்புரங்களை எரித்தவர் சிவபெருமான். **திருப்பிரமபுரம்** என்னும் நன்னகரில் வீற்றிருந்தருளும் அச்சிவபெருமானின் புகழைப் போற்றி வணங்கும் அடியார்களின் பெருமை இவ்வகன்ற பூமி முழுவதும் பரவும்.

3979. சேணுலாமதில் வேணுமண்ணுளோர்
காணமன்றலார் வேணுநற்புரத்
தாணுவின்கழல் பேணுகின்றவ
ராணியொத் தவரே. 2

இந்திரன் மூங்கில் (வேணு) வடிவில் சூரர்களுக்கு பயந்து ஒளிந்து பூசை செய்தது.
2. ணு – வேணுபுரம்.

ஆகாயத்தை அளாவிய மதில் விண்உலகத்தவர் இறங்குவதற்கு வைத்த மூங்கில் ஏணி என மண்ணுலகத்தவர் காணும்படி அமைந்த, நறுமணம் கமழும் **திருவேணுபுரம்** என்னும் நன்னகரில் வீற்றிருந்தருளும் தாணுவாகிய சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி வழிபடுகிறவர்கள் ஆணிப்பொன் போன்று சிறந்தவர்கள் ஆவர்.

3980. அகலமார்தரைப் புகலுநான் மறைக்
கிகலியோர்கள்வாழ் புகலிமாநகர்ப்
பகல்செய்வோனெதிர்ச் சகலசேகர
னகிலநா யகனே. 3

3. க – புகலி

விரிந்த இப்பூமியிலுள்ளவர்களால் சிறப்பித்துச் சொல்லப்படுகின்ற நான்கு வேதங்களிலும் வல்லவர்கள் வாழ்கின்ற **திருப்புகலி** என்னும் பெரிய நகரத்தில் வீற்றிருந்தருள்கின்றவரும், சூரியனுக்கு எதிரான கலையோடு கூடிய சந்திரனை முடியில் அணிந்தவருமான சிவபெருமானே அகில உலகத்திற்கும் தலைவர் ஆவார்.

3981. துங்கமாகரி பங்கமாவடுஞ்
செங்கையானிகழ் வெங்குருத்திகழ்
அங்கணானடி தங்கையாற்றொழத்
தங்குமோ வினையே. 4

4. ங் – வெங்குரு

உயர்ந்ததும், பெரியதுமான யானை துன்புறும்படி கொன்று அதன் தோலையுரித்த சிவந்த கைகளையுடையவனும், புகழுடன் விளங்கும் **திருவெங்குரு** என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற அழகிய கண்களை உடையவனுமான சிவபெருமான் திருவடிகளைத் தங்கள் கைகளால் தொழுபவர்களிடம் வினைகள் தங்கா.

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **3982.** காணியொண்பொருட் கற்றவர்க்கீகை<br>யுடைமையோரவர் காதல்செய்யுநற்<br>றோணிவண்புரத் தாணியென்பவர்<br>தூமதி யினரே. 5<br><br>5. ணி – தோணிபுரம் | நிலங்களையும், அறவழியில் ஈட்டிய பொருள்களையும் கற்றவர்கட்குக் கொடையாகக் கொடுப்போர் விரும்பி வாழ்கின்ற திருத்தோணிபுரம் என்னும் நல்ல வளமைமிக்க நகரில் வீற்றிருந்தருளுகின்ற ஆணிப்பொன் போன்று அரிய பொருளாய் விளங்கும் சிவபெருமானைத் துதிப்பவர்கள் தூய சிவஞானம் பெறுவர். |
| **3983.** ஏந்தராவெதிர் வாய்ந்தநுண்ணிடைப்<br>பூந்தணோதியாள் சேர்ந்தபங்கினன்<br>பூந்தராய்தொழு மாந்தர் மேனிமேற்<br>சேர்ந்திரா வினையே. 6<br><br>6. தராய் – பூந்தராய் | படம் விரிக்கும் பாம்பிற்கு ஒப்பான நுண்ணிய இடையை உடையவளாய்ப் பூ அணிந்த குளிர்ந்த கூந்தலையுடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்ட சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருப்பூந்தராய் என்னும் திருத்தலத்தைத் தொழும் மக்கள்மேல் பிணி முதலிய துன்பங்கள் உடம்பைப் பற்றி நில்லாமல் விலகிவிடும். |
| **3984.** சுரபுரத்தினைத் துயர்செய்தாரகன்<br>துஞ்சவெஞ்சினக் காளியைத்தருஞ்<br>சிரபுரத்துளா னென்னவல்லவர்<br>சித்திபெற் றவரே. 7<br><br>7. ர – சிரபுரம் | தேவருலகத்தைத் துன்புறுத்திய தாரகாசுரனைக் கொல்லும்படி வெஞ்சினம் கொண்ட காளியை அம்பிகையின் அம்சமாகத் தோற்றுவித்தருளிய திருச்சிரபுரத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைப் போற்றி வழிபடுபவர்கள் அட்டமாசித்திகள் அனைத்தும் பெறுவர். |
| **3985.** உறவுமாகியற் றவர்களுக்குமா<br>நெதிகொடுத்துநீள் புவியிலங்குசீர்ப்<br>புறவமாநகர்க் கிறைவனேயெனத்<br>தெறகிலா வினையே. 8<br><br>8. ற – புறவம் | வறியவர்கட்கு உறவினராகி அவர்கட்கு மாபெருஞ் செல்வத்தைக் கொடுத்து அருள்செய்கின்ற, இந்த நீண்டபூமியில் மக்கள் புகழுடன் விளங்குகின்ற திருப்புறவம் என்னும் மாநகரில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானே என்று போற்றி வணங்குபவர்களை வினைகள் துன்பம் செய்யா. |
| **3986.** பண்புசேரிலங் கைக்குநாதனன்<br>முடிகள்பத்தையுங் கெடநெரித்தவன்<br>சண்பையாதியைத் தொழுமவர்களைச்<br>சாதியா வினையே. 9<br><br>9. ண் – சண்பை | பெருமைகள் பலவுடைய இலங்கைக்கு அரசனான இராவணன் முடிகள் பத்தையும் நெரித்த, திருச்சண்பை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற ஆதியாகிய சிவபெருமானைத் தொழுபவர்களை வினைகள் துன்புறுத்தா. வலியிழந்துபோம். |

| | |
|---|---|
| **3987.** ஆழியங்கையிற் கொண்டமாலய<br>றைிவொணாததோர் வடிவுகொண்டவன்<br>காழிமாநகர்க் கடவுணாமமே<br>கற்றல்நற் றவமே. 10<br><br>10. ழி – காழி | சக்கரப்படையை அழகிய கையில் கொண்ட திருமாலும், பிரமனும் அறியவொண்ணாதபடி நெருப்புப் பிழம்பு வடிவாய் நின்றவனும், சீகாழி என்னும் மாநகரில் வீற்றிருந்தருளுகின்ற கடவுளுமான சிவபெருமானின் புகழ்களையே கற்றல் நல்ல தவமாகும். |
| **3988.** விச்சையொன்றிலாச் சமணர்சாக்கியப்<br>பிச்சர்தங்களைக் கரிசறுத்தவன்<br>கொச்சைமாநகர்க் கன்புசெய்பவர்<br>குணங்கள் கூறுமினே. 11<br><br>11. ச் – கொச்சைவயம் | மெய்யுணர்வு தரும் கல்வியறிவு இல்லாத சமணர், புத்தர்களாகிய பித்தர்களின் குற்றங்களை நீக்கிய சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்ற திருக்கொச்சை மாநகரிடத்து அன்பு செய்பவர்களுடைய குணங்களை எடுத்துக் கூறுங்கள். |
| **3989.** கழுமலத்தினுட் கடவுள்பாதமே<br>கருதுஞானசம் பந்தனின்தமிழ்<br>முழுதும்வல்லவர்க் கின்பமேதரு<br>முக்கணெம் மிறையே. 12<br><br>12. மு – கழுமலம் | திருக்கழுமலம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்ற கடவுளாகிய சிவபெருமானின் திருவடிகளையே தியானிக்கின்ற ஞானசம்பந்தனின் இத்தமிழ் மாலையை முழுமையாக ஓதவல்லவர்கட்கு முக்கண் இறையாகிய அச்சிவபெருமான் அனைத்து இன்பங்களையும் தந்தருள்வான். |

## 111. திருவீழிமிழலை ( ஈரடி )

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 111

| | |
|---|---|
| **3990.** வேலினேர்தரு கண்ணினாளுமை<br>பங்கனங்கணன் மிழலைமாநகர்<br>ஆலநீழலின் மேவினானடிக்<br>கன்பர்துன் பிலரே. 1 | வேல் போன்று கூர்மையும், ஒளியுமுடைய கண்களை உடைய உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவர் அழகிய கண்களையுடைய சிவபெருமான். அவர் திருவீழிமிழலை என்னும் மாநகரில் வீற்றிருந்தருளுகின்றார். ஆலமரநிழல் கீழிருந்து அறம் உரைத்தவர். அப்பெருமானின் திருவடிகளை அன்புடன் வணங்குபவர்கட்குத் துன்பம் இல்லை. |
| **3991.** விளங்குநான்மறை வல்லவேதியர்<br>மல்குசீர்வளர் மிழலையானடி<br>உளங்கொள்வார்தமை யுளங்கொள்வார்வினை<br>யொல்லை யாசறுமே. 2 | நான்கு வேதங்களையும் நன்கு கற்றுவல்ல அந்தணர்கள் வசிக்கின்ற, புகழ்மிக்க திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளை உள்ளத்தால் தியானிப்பவர்கள் சிவனடியார்கள். அவ்வடியார்களை வழிபடும் அன்பர்களின் வினையான குற்றம் விரைவில் நீங்கும். |

| | | |
|---|---|---|
| **3992.** விசையினோடெழு பசையுநஞ்சினை<br>யசைவுசெய்தவன் மிழலைமாநகர்<br>இசையுமீசனை நசையின்மேவினான்<br>மிசைசெயா வினையே. **3** | | வேகமாகப் பரவும் கொல்லும் தன்மையுடைய விடத்தை உண்டு சிவபெருமான் திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான். நஞ்சுண்டும் சாவாது புகழுடன் விளங்கும் அப்பெருமானை நாடி வணங்கினால் வினையானது துன்பம் செய்யாது. |
| **3993.** வென்றிசேர்கொடி மூடுமாமதிண்<br>மிழலைமாநகர் மேவிநாடொறும்<br>நின்றவாதிதன் னடிநினைப்பவர்<br>துன்பமொன் றிலரே. **4** | | சிவபெருமானின் வெற்றிக்கொடிகள் வானத்தை மூடும்படி விளங்கும். உயர்ந்த மதில்களையுடையது திருவீழிமிழலை என்னும் மாநகர். அப்பெருமாநகரினை விரும்பி ஆங்கு வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடிகளை நாள்தோறும் நினைத்து வழிபடுபவர்கட்குத் துன்பம் சிறிதும் இல்லை. |
| **3994.** போதகந்தனை யுரிசெய்தோன்புய<br>னோ்வரும்பொழின் மிழலைமாநகர்<br>ஆதரஞ்செய்த வடிகள்பாதம்<br>அலாலொர்பற் றிலமே. **5** | | செருக்குடன் முனிவர்களால் கொடுவேள்வியினின்றும் அனுப்பப்பட்ட மதங்கொண்ட யானையின் தோலை உரித்த சிவபெருமான், மேகம்படியும் சோலைகளையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமானின் திருவடிகளைத் தவிர வேறு பற்று எதுவும் எமக்கு இல்லை. |
| **3995.** தக்கன்வேள்வியைச் சாடினார்மணி<br>தொக்கமாளிகை மிழலைமேவிய<br>நக்கனாரடி தொழுவர் மேல்வினை<br>நாடொறுங் கெடுமே. **6** | | சிவபெருமான், தக்கன் வேள்வியைத் தகர்த்தவர். இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற மாளிகைகளையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் திகம்பரரான சிவபெருமானின் திருவடிகளை நாள்தோறும் தொழுபவர்கட்கு மேல்வினை உண்டாகாது. |
| **3996.** போரணாவுமுப் புரமெரித்தவன்<br>பொழில்கள்சூழ்தரு மிழலைமாநகர்ச்<br>சேருமீசனைச் சிந்தைசெய்பவர்<br>தீவினை கெடுமே. **7** | | போர்க்குணத்தை விரும்பி அதனை மேற்கொண்ட அசுரர்களின் முப்புரங்களை எரித்த சிவபெருமான், சோலைகள் சூழ்ந்த திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமானைச் சிந்தித்து வழிபடும் அடியவர்களின் தீவினை அழிந்துவிடும். |

| | |
|---|---|
| **3997.** இரக்கமிஃறொழி லரக்கனாருட<br>நெருக்கினான்மிகு மிழலையானடி<br>சிரக்கொள்பூவென வொருக்கினார்புகழ்<br>பரக்குநீள் புவியே. **8** | இரக்கம் அற்ற தொழில்புரியும் அரக்கனான இராவணனின் உடல் நெரியும்படி கயிலைமலையின் கீழ் அடர்த்த சிவபெருமான் திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமானின் திருவடிக் கமலங்களை சிரசின்மேல் வைத்த மலர்போலக் கொண்டு, சிந்தையை ஒருமுகப்படுத்தி வழிபடுபவர்கள், உலகில் புகழுடன் விளங்குவர். |
| **3998.** துன்றுபூமகன் பன்றியானவ<br>னொன்றுமோர்கிலா மிழலையானடி<br>சென்றுபூம்புன னின்றுதூவினார்<br>நன்றுசேர் பவரே. **9** | இதழ் நெருங்கிய தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பிரமனும், பன்றி உருவெடுத்த திருமாலும் உணர்தற்கரியவனான சிவபெருமான், திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றான். அப்பெருமானின் திருவடிகளை, பூவும், நீரும் கொண்டு பூசிப்பவர்கள், முத்தி பெறுவர். |
| **3999.** புத்தர்கைச்சமண் பித்தர்பொய்க்குவை<br>வைத்தவித்தகன் மிழலைமாநகர்<br>சித்தம்வைத்தவ ரித்தலத்தினுண்<br>மெய்த்தவத் தவரே. **10** | புத்தர்களும், சமணர்களும் கூறும் பொய்க் குவியல்களாகிய உபதேசங்களைத் தோற்க வைத்த ஞானசொரூபரான சிவபெருமான், திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமான் மீது சித்தம் வைத்து வழிபடுபவர்கள் இப்பூவுலகில் மெய்யான தவத்தைப் புரிந்தவராவர். |
| **4000.** சந்தமார்பொழின் மிழலையீசனைச்<br>சண்பைஞானசம் பந்தன்வாய்நவில்<br>பந்தமார் தமிழ் பத்தும் வல்லவர்<br>பத்தரா குவரே. **11** | சந்தன மணம் கமழும் சோலைகளையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானைப் போற்றி, சண்பையில் அவதரித்த ஞானசம்பந்தர் அருளிய திருவருளால் பிணிக்கப்படும் இத்தமிழ்ப்பதிகத்தை ஓத வல்லவர்கள் பத்தர்கள் ஆவர். |

## 112. திருப்பல்லவனீச்சரம் ( ஈரடி )

**பண் : பழம்பஞ்சுரம்** **பதிக எண் : 112**

| | |
|---|---|
| **4001.** பரசுபாணியர் பாடல்வீணையர்<br>பட்டினத்துறை பல்லவனீச்சரத்<br>தரசுபேணி நின்றார்<br>**இவர்தன்மை யறிவாரார்.** **1**<br><br>இவர் தன்மை அறிவாரார் என்பது இப்பதிகத்தின் மகுடமாகும். | சிவபெருமான் மழுப்படையைக் கையில் ஏந்தியவர். வீணையில் பாட்டிசைப்பவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் ஆட்சிபுரிந்து அருள்புரிபவர். இவரது தன்மை எத்தகையது என்பதை யார் அறிவார்? ஒருவரும் அறியார். |

| பாடல் | விளக்கம் |
|---|---|
| **4002.** பட்டநெற்றியர் நட்டமாடுவர்<br>பட்டினத்துறை பல்லவனீச்சரத்<br>திட்டமா யிருப்பார்<br>இவர்தன்மை யறிவாரார். 2<br><br>பல்லவ அரசனால் கட்டப்பெற்ற கோயிலாதலின் இப்பெயர் பெற்றது. | தலைமைப் பட்டத்திற்குரிய அடையாள அணிகலன் அணிந்த நெற்றியர். திருநடனம் செய்பவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விரும்பி வீற்றிருந் தருளுபவர். இவரது தன்மை எத்தன்மையது என்பதை யாவரே அறிவார்? |
| **4003.** பவளமேனியர் திகழுநீற்றினர்<br>பட்டினத்துறை பல்லவனீச்சரத்<br>தழகரா யிருப்பார்<br>இவர்தன்மை யறிவாரார். 3<br><br>பட்டினத்தடிகள் இயற்பகை நாயனார் அவதாரத்தலம் | சிவபெருமான் பவளம் போன்ற சிவந்த மேனியுடையவர். ஒளிபொருந்திய திருவெண்ணீற்றினை அணிந்துள்ளவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் அழகர். இவரது தன்மை எத்தன்மையது என்பதை யாவரே அறிவார்? |
| **4004.** பண்ணில்யாழினர் பயிலுமொந்தையர்<br>பட்டினத்துறை பல்லவனீச்சரத்<br>தண்ணலா யிருப்பார்<br>இவர்தன்மை யறிவாரார். 4 | இறைவன் பண்ணிசைக்கும் யாழினை உடையவர். மொந்தை என்னும் வாத்தியத்தை வாசிப்பவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் தலைவர். இவரது தன்மை எத்தகையது என்பதை யார் அறிவார்? |
| **4005.** பல்லிலோட்டினர் பலிகொண்டுண்பவர்<br>பட்டினத்துறை பல்லவனீச்சரத்<br>தெல்லியாட் டுகந்தார்<br>இவர்தன்மை யறிவாரார். 5 | சிவபெருமான் பற்களே இல்லாத மண்டையோட்டில் பிச்சையேற்று உண்பவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவர். இரவில் நடனம் ஆடுதலை விரும்புபவர். இவர் தன்மை யார் அறிவார்? |
| **4006.** பச்சைமேனியர் பிச்சைகொள்பவர்<br>பட்டினத்துறை பல்லவனீச்சரத்<br>திச்சையா யிருப்பார்<br>இவர்தன்மை யறிவாரார். 6 | சிவபெருமான் பச்சைநிறம் கொண்ட திருமேனி உடையவர். பிச்சையேற்று உண்பவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவர். இவர் தன்மை யார் அறிவார்? |
| **4007.** பைங்கணேற்றினர் திங்கள்சூடுவர்<br>பட்டினத்துறை பல்லவனீச்சரத்<br>தெங்குமா யிருப்பார்<br>இவர்தன்மை யறிவாரார். 7 | இறைவன் பசிய கண்களையுடைய எருதின்மேல் ஏறுபவர். பிறைச்சந்திரனை சூடியுள்ளவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விரும்பி வீற்றிருந்தருளினாலும், எங்கும் வியாபித்துள்ளவர். இவர் தன்மை யார் அறிவார்? |

4008. பாதங்கைதொழ வேதமோதுவார்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தாதியா யிருப்பார்
இவர்தன்மை யறிவாரார். 8

வழக்கமான இராவணன் பாட்டாக அமையவில்லை

இறைவன் பசிய கண்களையுடைய எருதின்மேல் ஏறுபவர். பிறைச்சந்திரனை சூடியுள்ளவர். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் விரும்பி வீற்றிருந்தருளினாலும், எங்கும் வியாபித்துள்ளவர். இவர் தன்மை யார் அறிவார்?

4009. படிகொண்மேனியர் கடிகொள்கொன்றையர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
தடிகளா யிருப்பார்
இவர்தன்மை யறிவாரார். 9

படி – உலகம், படிகொண் மேனியர் – விசுவரூபி முறைமை. அடிமுடிதேடிய படலமில்லை.

இறைவன் உலகம் முழுவதையும் தம் திருமேனியாகக் கொண்டவர். நறுமணம் கமழும் கொன்றை மாலையை அணிந்துள்ளவன். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் தலைவனாய் விரும்பி வீற்றிருந்தருளுபவன். இவன் தன்மை யார் அறிவார்?

4010. பறைகொள்பாணியர் பிறைகொள்சென்னியர்
பட்டினத்துறை பல்லவனீச்சரத்
திறைவரா யிருப்பார்
இவர்தன்மை யறிவாரார். 10

சமண் பாட்டல்ல

இறைவன் பறை என்னும் இசைக்கருவியை உடையவன். பிறைச்சந்திரனைத் தலையிலே அணிந்துள்ளவன். காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் யாவர்க்கும் தலைவனாய் விரும்பி வீற்றிருந்தருளுபவன். இவர் தன்மை யார் அறிவார்?

4011. வானமாள்வதற் கூனமொன்றிலை
மாதர்பல்லவ னீச்சரத்தானை
ஞானசம்பந்தன் நற்றமிழ்
சொல்லவல்லவர் நல்லவரே. 11

அழகிய காவிரிப்பூம்பட்டினப் பல்லவனீச்சரத்து இறைவனைப் போற்றி, ஞானசம்பந்தன் அருளிய இந்நற்றமிழ்த் திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள் நற்குணங்கள் வாய்க்கப் பெறுவர். அவர்கள் மறுமையில் வானுலகை ஆள்வதற்குத் தடையொன்றுமில்லை.

## 113. திருக்கழுமலம் ( திருவியமகம் )

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 113

4012. உற்றுமை சேர்வது **மெய்யினையே**
உணர்வது நின்னருண் **மெய்யினையே**
கற்றவர் காய்வது **காமனையே**
கனல்விழி காய்வது **காமனையே**
அற்ற மறைப்பது **முன்பணியே**
அமரர்கள் செய்வது **முன்பணியே**
பெற்று முகந்தது **கந்தனையே**
பிரம புரத்தை **யுகந்தனையே.** 1

ஒரே சொல் ஒரே அடியில் ஒன்றுக்கு மேற்பட்ட முறைகளில் பல பொருள்களில் வருமாறு பாடுவது இயமகம்.

இறைவரே! உமாதேவியார் பிரியாது பொருந்தி இருப்பது உம் திருமேனியையே. சிவஞானிகள் உணர்ந்து போற்றுவது உமது பேரருளையே. கற்றுணர்ந்த துறவிகள் வெறுப்பது மனைவி முதலிய குடும்பத்தையே. நெற்றிக்கண் எரித்தது மன்மதனையே. உமது திருமேனியை மறைப்பது பாம்பே. தேவர்கள் செய்வது உமது பணிவிடையே. நீர் பெற்றெடுத்து விரும்பி அணைத்தது முருகப்பெருமானையே. நீர் திருப்பிரமபுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றீர்.

4013. சதிமிக வந்த சலந்தரனே
தடிசிர நேர்கொள் சலந்தரனே
அதிரொளி சேர்திகி ரிப்படையா
லமர்ந்தன ரும்பர்து திப்படையால்
மதிதவழ் வெற்பது கைச்சிலையே
மருவிட மேற்பது கைச்சிலையே
விதியினி லிட்டவி ரும்பரனே
வேணு புரத்தை விரும்பரனே. 2

மிறைக்கவிகள் பாடுமிடங்களில் முடிந்த அளவு தம்பதியான சீகாழியை இணைக்கும் சிறந்த மண்ணின் மைந்தர் திருஞானசம்பந்தர். இப்பதிகத்தில் பிரமபுரம், வேணுபுரம், புகலி என்று 12 பாடல்களில் 12 பெயர்களைக் குறிப்பிடுகிறார்.

வஞ்சனை செய்து வந்தவன் சலந்தரன் என்னும் அசுரனே. அவன் தலையை வெட்டியவன் கங்கையைத் தாங்கிய அரன். கண்டவர்கள் நடுங்கத்தக்க ஒளிபொருந்திய சக்கராயுதத்தால் சலந்தரனைக் கொல்லத் தேவர்கள் துதித்து மகிழ்ந்தனர். சந்திர மண்டலத்தை அளாவிய மேருமலை, கையிலேந்திய வில்லாம். பொருந்திய நஞ்சை உணவாக ஏற்பதில் வெறுத்திலீர். விதிக்கப்பட்ட அறவழியில் உலகவர் ஒழுகுவதில் விருப்பத்தையுடைய பெரிய மேலான கடவுளே. வேணுபுரம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் அரனே!

4014. காதம ரித்திகழ் தோடினனே
கானவ னாய்க்கடி தோடினனே
பாதம தாற்கூற் றுதைத்தனனே
பார்த்த னுடலம் புதைத்தனனே
தாதவிழ் கொன்றை தரித்தனனே
சார்ந்த வினைய தரித்தனனே
போத மமரு முரைப்பொருளே
**புகலி** யமர்ந்த பரம்பொருளே. 3

இறைவர் காதில் தோட்டை அணிந்தவர். வேடுவனாகி மிக விரைந்து சென்றவர். யமனைக் காலால் உதைத்தவர். அர்ச்சுனனது உடலைக் கவசம் போல் மூடினவர். மகரந்தத்தோடு மலர்ந்த கொன்றையை அணிந்தவர். அன்பர்களின் வினைகளை அழித்தவர். சிவஞானக் கருத்தடங்கிய உபதேச மொழியின் பொருளாயுள்ளவர். அவரே திருப்புகலி என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளும் பரம்பொருள்.

4015. மைத்திகழ் நஞ்சுமிழ் மாசுணமே
மகிழ்ந்தரை சேர்வது மாசுணமே
மெய்த்துடல் பூசுவர் மேன்மதியே
வேதம தோதுவர் மேன்மதியே
பொய்த்தலை யோடுறு மத்தமதே
புரிசடை வைத்தது மத்தமதே
வித்தக ராகிய வெங்குருவே
விரும்பி யமர்ந்தனர் **வெங்குருவே.** 4

"சாந்தமும் வெண்ணீறு" திருவிசைப்பா

கருநிறமுடைய நஞ்சைக் கக்கும் பாம்பை மகிழ்ந்து இடுப்பில் அணிந்துள்ளவர். திருநீற்றினையே சந்தனம் போல் உடம்பில் பூசியவர். அவர் தலைமேல் விளங்குவது சந்திரனே. அவர் வேதம் அருளியது உயிர்கட்கு மேலான ஞானம் அருளவே. மண்டையோடு ஏந்தி மயானத்தில் விளங்குபவர். முறுக்குண்ட சடையில் அவர் அணிந்துள்ளது ஊமத்த மலரே. வித்தகராகிய அப்பெருமான் எம் குரு ஆவார். அவர் விரும்பி வீற்றிருந்தருளுவதும் திருவெங்குரு என்னும் திருத்தலமாகும்.

**4016.** உடன்பயில் கின்றனன் மாதவனே
உறுபொறி காய்ந்திசை மாதவனே
திடம்பட **மாமறை கண்டனனே**
திரிகுண மேவிய கண்டனனே
படங்கொ ளரவரை செய்தனனே
பகடுரி கொண்டரை செய்தனனே
தொடர்ந்த **துயர்க்கொரு நஞ்சிவனே**
**தோணி புரத்துறை** நஞ்சிவனே. 5

மாமறை கண்டனனே – உம்பரின் நாயகன் திருவாக்கிற் பிரளயம் உதித்தது. அதனிடம் வேதம் பிறந்தன – திருஞானசம்பந்தர். துன்பத்துக்கு நஞ்சு இவனே.

இறைவனே! திருமாலைத் தம்முடன் இடப் பாகத்தில் இருக்கும்படி செய்கின்றவர். தம்வழிச் செல்லும் இயல்புடைய இந்திரியங்களை அடக்கும் பெரிய தவம் செய்தவர். உறுதி பயக்கும் சிறந்த வேதங்களை அருளியவர். முக்குண வயப்பட்டுச் செய்த புறச்சமயக் கொள்கைகளைக் கண்டனம் செய்பவர். படமெடுக்கும் பாம்பை இடுப்பில் அணிந்தவர். யானையின் தோலை உரித்து அதைக் கொன்றவர். தொடர்ந்த துன்பங்களை அழிப்பதில் இவர் விடம் போன்றவர். இவரே திருத்தோணிபுரம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் நம் சிவபெருமான் ஆவார்.

**4017.** திகழ்கைய தும்புகை தங்கழலே
தேவர் தொழுவதுந் தங்கழலே
இகழ்பவர் தாமொரு மானிடமே
யிருந்தனு வோடெழின் மானிடமே
மிகவரு நீர்கொளு மஞ்சடையே
மின்னிகர் கின்றது மஞ்சடையே
தகவிர தங்கொள்வர் சுந்தரரே
தக்க தராயுறை சுந்தரரே. 6

மும்மலமுடைய சகலர்களாகிய நம் போன்றோர்க்கு மானுடச் சட்டை தாங்கி குருவடிவில் அருளுவார்.

இறைவன் அழகிய கையில் ஏந்தியுள்ளது பகைகொண்டு எழும் நெருப்பே. தேவர்கள் போற்றுவது அவருடைய திருக்கழல்களையே. தம்மை இகழ்ந்த தாருகவனத்து முனிவர்கள் ஏவிய மானை இடக்கரத்தில் ஏந்தியுள்ளார். பக்குவான்மாக்கட்கு ஞானோபதேசம் செய்ய அவர் காட்சி தந்தது மானிட உடம்பில். பெருக்கெடுக்கும் கங்கையைத் தாங்கியது அழகிய சடையிலே. மின்னலைப் போன்று ஒளிரும் அழகிய சடையை உடையவர். தகுந்த விரதம் கொள்ளும் சுந்தர வடிவினர். அவர் எக்காலத்திலும் அழியாது நிலைத்து நிற்கும் பூந்தராய் என்னும் திருப்பதியில் வீற்றிருந்தருளும் அழகர்.

**4018.** ஓர்வரு கண்க ளிணைக்கயலே
யுமையவள் கண்க ளிணைக்கழலே
ஏர்மரு வுங்கழ னாகமதே
யெழில்கொளு தாசன நாகமதே
நீர்வரு கொந்தள கங்கையதே
நெடுஞ்சடை மேவிய கங்கையதே
சேர்வரு யோக தியம்பகனே
சிரபுர மேய தியம்பகனே. 7

இறைவனையும், அடியாரையும் காணாத கண்கள் புறம்பானவை. உமாதேவியின் கண்கள் இரு கயல்மீன்கட்கு ஒப்பானவை. அழகிய திருவடிகளில் கட்டியிருப்பது நாகத்தையே. அவருடைய திருமேனியானது நெருப்பு வண்ணம் உடையது. நீர்மயமான கொத்தான கூந்தல் ஒழுங்காய் உள்ளது. நெடுஞ்சடையில் தங்கியுள்ளது, கங்கையே. சேர்தற்கரிய யோகநிலையைக் காட்டிய மூன்று கண்களையுடையவரே. நெருப்பாகிய அம்பைக் கையின் இடத்துக்கொண்டு சிரபுரம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்து அருளுகின்றார்.

| | |
|---|---|
| **4019.** ஈண்டு துயிலம ரப்பினனே<br>யிருங்க ணிடந்தடி யப்பினனே<br>தீண்டல ரும்பரி சக்கரமே<br>திகழ்ந்தொளி சேர்வது சக்கரமே<br>வேண்டி வருந்த நகைத்தலையே<br>மிகைத்தவ ரோடு நகைத்தலையே<br>பூண்டனர் சேர லுமாபதியே<br>**புறவ** மமர்ந்த வுமாபதியே. 8 | பாற்கடலில் துயில் கொள்ளும் திருமால், தமது பெரிய கண்ணைத் தோண்டிச் சிவபெருமானின் திருவடிகளில் அர்ச்சித்தனர். தீண்டுதற்கரிய தன்மையுடைய அந்தக் கரத்தில் ஒளியுடையதாய் விளங்குவது சக்கரமே. தாருகாவனத்து முனிவர்கள் விரும்பி யாகம் செய்து சிரமப்படச் சிவனைக் கொல்ல வந்தது நகுவெண்டலை. அம்முனிவர்களைப் பரிகசிப்பது போல வெண்டலைகளை மாலையாக அணிந்து கொண்டனர். அவர் சேர்வது எவற்றிலும் சிறந்த அடியார் உள்ளமாகிய இடமாம். புறவம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவரும் அந்த உமாபதியே ஆவார். |
| **4020.** நின்மணி வாயது நீழலையே<br>நேசம தானவர் நீழலையே<br>உன்னி மனத்தெழு சங்கமதே<br>யொளியத னோடுறு சங்கமதே<br>கன்னிய ரைக்கவ ருங்களனே<br>கடல்விட முண்டக ருங்களனே<br>மன்னிவ ரைப்பதி **சண்பை**யதே<br>வாரி வயன்மலி சண்பையதே. 9 | சிவபெருமானே! மணிகட்டிய உன் கோயில் வாசலின் நிழலையே அருளிடமாகக் கொண்ட நேசமுடைய அடியவர்களிடமிருந்து நீங்கமாட்டாய். அவர்களின் அடிச்சுவட்டை எண்ணி மனத்தில் தொழுகின்ற அடியவர்கள் விளங்குகின்ற இடமே அடியவர் திருக்கூட்டம் எனத்தகும். அவர் தாருகாவனத்தில் வாழும் மகளிர் உள்ளத்தைக் கவர்ந்த கள்வர். கடலில் எழுந்த விடத்தை உண்ட கரிய கண்டத்தர். அப்பெருமான் நிலையாக விரும்பி வீற்றிருந்தருளும் வரையறுத்தலை உடையபதி சண்பைப்புல்லாலே அழகாகச் சூழப்பட்டதாகிய கடல்வளமும், வயல்வளமும் உடைய சண்பை நகராகும். |
| **4021.** இலங்கை யரக்கர் தமக்கிறையே<br>யிடந்து கயிலை யெடுக்கிறையே<br>**புலன்கள் கெடவுடன் பாடினனே**<br>**பொறிகள் கெடவுடன் பாடினனே**<br>இலங்கிய மேனி யிராவணனே<br>யெய்து பெயரு மிராவணனே<br>கலந்தருள் பெற்றது மாவசியே<br>காழி யரனடி மாவசியே. 10<br><br>புலன்கள் கெடவுடன் பாடினனே – கயிலையை இடந்து எடுக்க முயன்றபோது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்ற புலன்கள் கெடப் பாடினான். பொறிகள் கெடவுடன் பாடினனே. பழைய செருக்குநிலை கெட்டு பத்தி நிலையில் செல்ல மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகள் கெடவுடன் பாடினான். தமிழையும், பொருளையும் அனுபவிக்க வேண்டும். | இலங்கை அரக்கர்கட்கு அரசனான இராவணன் கயிலையைப் பெயர்த்து எடுக்க, இறைவன் திருப்பாத விரலை ஊன்றக் கயிலையின் கீழ் நடுக்குண்டு, இந்திரியங்கள் மயங்கச் சோர்ந்து தான் பிழைக்கும் வண்ணம் இறையருளை வேண்டி உடனே பாடினன். பழைய செருக்கு நீங்கி, பொறிகள் பக்தி நிலையில் செல்ல அவனுடைய பாடலுக்கு இறைவன் உடன்பட்டு அருளினன். இரவு போன்ற கரிய நிறத்தை உடைய அவன் கயிலைமலையின் கீழ் நடுக்குண்டு அழுததனால் உண்டான பெயரே இராவணன் என்பதாம். இறைவனின் அருளில் கலந்து அவன் பெற்றது சிறந்த வாளாயுதம். சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருவடி சிறந்த வசீகரத்தை உடையதாகும். |

4022. கண்ணிகழ் புண்டரி கத்தினனே
கலந்திரி புண்டரி கத்தினனே
மண்ணிக ழும்பரி சேனமதே
வானக மேய்வகை சேனமதே
நண்ணி யடிமுடி யெய்தலரே
நளிர்மலி சோலையி லெய்தலரே
பண்ணியல் **கொச்சை பசு**பதியே
பசுமிக வூர்வர் பசுபதியே. 11

உரோமச முனிவர் அடைந்து பூசித்ததனால் ஞானோபதேசம் பெற்று உலகில் உயிர்களது மலங் கழுவும் வரம் பெற்றனர். பெயர் அதனால் கழுமலம் எனப் போந்தது. 12 ஆவது பெயர்

தாமரை போன்ற கண்களையுடைய திருமாலும், அவனோடு சேர்ந்து திரிந்த உந்திக் கமலத்தில் தோன்றிய பிரமனும், பூமியைத் தோண்டும் பன்றியாகவும், வானத்தில் பறக்கும் பருந்தாகவும் அடி, முடி தேட முயன்று அடையாதவர் ஆயினர். குளிர்ச்சி மிக்க சோலைகளில் உள்ள மலர்கள் சிவபூசை பண்ணப் பயன்படத் திருக்கொச்சை வயம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந் தருளுகின்றார். உயிர்கட்கெல்லாம் தலைவரான பசுபதி எனப்படும் சிவபெருமான். அவர் ஆனேற்றில் ஏறுவதால் பசுபதி என்னும் பெயர் படைத்தவரும் ஆவார்.

4023. பருமதில் மதுரைமன் னவையெதிரே
பதிகம தெழுதிலை யவையெதிரே
வருநதி யிடைமிசை வருகரனே
வசையொடு மலர்கெட வருகரனே
கருதலி லிசைமுர றருமருளே
கழுமல மமரிறை தருமருளே
மருவிய தமிழ்விர கனமொழியே
வல்லவர் தம்மிடர் திடமொழியே. 12

அவர் செய்த புனல் வாதத்துக்கு அகச்சான்றான பாட்டாகும்.

பெரிய மதில்களையுடைய மதுரை நகரின்கண் அரசனது அவைமுன்னர்த், திருப்பதிகத்தை ஓலையில் எழுதி வைகை நதியின் மீது செலுத்த, அதனை எதிர்நோக்கிச் செல்லுமாறு செய்த கரத்தையுடையவர் சிவபெருமான், அவர் சைவர்கட்கு வந்த பழியும், பழிதூற்றலும் கெடுமாறு சமணர்களை அழித்தவர். நினைக்கவும் முடியாதபடி சைவர்களின் புகழ் உலகம் முழுவதும் ஒலிக்கும்படி செய்த வியப்பான செயல். திருக்கழுமலத்தில் வீற்றிருந்தருளும் இறைவனின் அருளே. அவ்வருளைப் பெற்ற முத்தமிழ் விரகரது பாடல்களை ஓதவல்லவர்கள் இடர் ஒழிதல் நிச்சயம்.

## 114. திருவேகம்பம் ( காஞ்சிபுரம் )
### ( திருவியமகம் )

பண் : பழம்பஞ்சுரம் | பதிக எண் : 114

4024. பாயுமால்விடை மேலொரு பாகனே
பாவைதன்னுரு மேலொரு பாகனே
தூயவானவர் வேதத் துவனியே
சோதிமாலெரி வேதத் துவனியே
ஆயுநன்பொரு ளுண்பொரு ளாதியே
யாலநீழ லரும்பொரு ளாதியே
காயவின்மதன் பட்டது கம்பமே
கண்ணுதற்பர மற்கிடங் கம்பமே.

கச்சி ஏகம்பம். மாமரத்தைத் தலமரமாகக் கொண்டுள்ளமையின் இப்பெயர் பெற்றது. ஏகாம்பரம் என்பது ஏகம்பம் என்றும், கம்பம் என்றும் மருவிற்று. காஞ்சிபுரத்திற்குப் பழம் பெயர் கச்சிப்பேடு என்பதாகும்.

இறைவர் பாய்ந்து செல்லும் பெருமையுடைய இடபத்தைச் செலுத்துபவர். உமாதேவியைத் தம் திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டவர். தேவர்கள் போற்றுகின்ற வேதத்தின் தொனியானவர். சுடர்விட்டு எரியும் வெம்மையுடைய வேள்வித்தீ ஆனவர். ஆராயத்தக்க நல்ல கருத்துக்கள் எல்லாவற்றிலும் நுட்பமான கருத்தாக விளங்குபவர். ஆலநிழலின் கீழ் தட்சிணாமூர்த்தியாக விளங்கிச் சனகாதி முனிவர்கட்கு அரும்பொருள் உரைத்த முதல்வர். போர்புரிய வந்த வில்லையுடைய மன்மதன் முதற்கண் அடைந்தது நடுக்கமேயாம். நெற்றிக் கண்ணுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் திருக்கச்சியேகம்பமே.

4025. சடையணிந்ததும் வெண்டலை மாலையே
தம்முடம்பிலும் வெண்டலை மாலையே
படையிலங்கையிற் சூலம தென்பதே
பரந்திலங்கையிற் சூலம தென்பதே
புடைபரப்பன பூதக ணங்களே
போற்றிசைப்பன பூதக ணங்களே
கடைகடோறு மிரப்பது மிச்சையே
கம்பமேவி யிருப்பது மிச்சையே. 2

சிவபெருமான் சடையில் அணிந்திருப்பது வெண்டலை மாலை ஆகும். உடம்பிலும் தலைமாலை அணிந்துள்ளார். அழகிய கையில் சூலப்படை ஏந்தி உள்ளவர். பரந்து விளங்கும் கையைப் படை போன்று கொண்டு தோண்டிய அழகு செய்வதாகிய அணிகலன் திருமாலின் கண் ஆகும். பக்கத்தில் சூழ்ந்து விளங்குவனவும், போற்றிசைப்பனவும் பூதகணங்களே. அப்பெருமான் வாயில்கள் தோறும் சென்று இரப்பது உணவே. அவர் திருக்கச்சியேகம்பம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றார்.

மூவரில் ஒருவரான உருத்திரர் மச்சவதாரத்தின் செருக்கையடக்க திருமாலின் கண்ணைக் கைவிரலால் தோண்ட அது விரலுக்கு அணிகலனான கணையாழியாயிற்று.

4026. வெள்ளெருக்கொடு தும்பை மிலைச்சியே
வேறுமுன்செலத் தும்பை மிலைச்சியே
அள்ளிநீறது பூசுவ தாகமே
யானமாசுண மூசுவ தாகமே
புள்ளியாடை யுடுப்ப துகத்துமே
போனவூழி யுடுப்ப துகத்துமே
கள்ளுலாமலர்க் கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 3

சிவபெருமான் வெள்ளெருக்கமும், தும்பையும் சூடியுள்ளவர். தும்புக் கயிற்றைக் கொண்டு இடபத்தைக் கட்டியுள்ளவர். திருநீற்றினை உடம்பிலே பூசியுள்ளவர். உடம்பைப் பாம்புகளால் மூடியுள்ளவர். புள்ளிகளையுடைய புலித்தோல், மான்தோல் ஆடைகளை விரும்பி அணிபவர். ஊழிக்காலத்தில் உயிர்கள் இளைப்பாறும் பொருட்டுத் தம்முள் ஒடுக்கிக் கொள்வார். ஒவ்வொரு யுகத்திலும், தேன் பொருந்திய மலர்களை அணிந்துள்ள, உலகைத் தாங்கும் தூண் போன்ற சிவபெருமான் காஞ்சி மாநகரிலுள்ள திருவேகம்பம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்து அருளுகின்றார்.

முத்தி தரும் தலங்களுள் முதன்மையானது. சுந்தரமூர்த்தி நாயனார் ஏலவார் குழலாள் உமைநங்கை என்றும் ஏத்தி வழிபட்ட காலகாலனை வணங்கி இடக்கண் பெற்ற தலம். சேத்திர வெண்பா பாடிய ஐயடிகள் காடவர் கோன் திருக்குறிப்புத் தொண்ட நாயனார், சாக்கியநாயனார் இவர்கள் அருள் பெற்ற பதி.

4027. முற்றலாமை யணிந்த முதல்வரே
மூரியாமை யணிந்த முதல்வரே
பற்றிவாளர வாட்டும் பரிசரே
பாலுநெய்யுகந் தாட்டும் பரிசரே
வற்றலோடு கலம்பலி தேர்வதே
வானினோடு கலம்பலி தேர்வதே
கற்றிலாமனங் கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 4

சிவபெருமான் ஆமையோட்டை அணிந்த முதல்வர். வலிய ஆனேற்றை அழகு செய்து ஏறிய முதல்வர். ஒளி பொருந்திய பாம்பைப் பிடித்து ஆட்டும் தன்மையர். பாலாலும், நெய்யாலும் திருமுழுக்காட்டப்படும் பெருமையுடையவர். வற்றிய மண்டையோட்டைப் பாத்திரமாகக் கொண்டு பிச்சையேற்றுத் திரிபவர். தேவர்களாலும், ஏனைய உலகிலுள்ள அடியவர்களாலும் போற்றிப் பூசை செய்யப்படுபவர். அவரைப் போற்றாதவர்கள் மனம் இரும்புத்தூண் போன்றது. அப்பெருமான் திருவேகம்பம் என்னும் திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுகின்றார்.

பிரம்மா பூசித்தது – வெள்ளக்கம்பம்
திருமால் பூசித்தது – கள்ளக் கம்பம்
உருத்திரர் பூசித்தது – நல்லகம்பம்
உமை பூசித்தது – திருவேகம்பம் / தழுவக் குழைந்த நாதர்

**4028.** வேடனாகி விசையற் கருளியே
வேலைநஞ்ச மிசையற் கருளியே
ஆடுபாம்பரை யார்த்த துடையதே
யஞ்சுபூதமு மார்த்த துடையதே
கோடுவான்மதிக் கண்ணி யழகிதே
குற்றமின்மதிக் கண்ணி யழகிதே
காடுவாழ்பதி யாவது மும்மதே
கம்பமாவதி யாவது மும்மதே. 5

சிவபெருமான் வேட்டுவ வடிவம் தாங்கி அர்ச்சுனனுக்கு அருள்புரிந்தவர். கடலில் தோன்றிய நஞ்சை உண்டு கண்டம் கறுத்தவர். ஆடும் பாம்பை அரையில் கச்சாகக் கட்டி அதன்மேல் ஆடை அணிந்தவர். பிரளயகாலத்தில் ஐம்பூதங்களால் ஆகிய உலகம் அவரால் அழிக்கப்பட்டது. வளைந்த ஆகாயத்தில் விளங்கும் பிறையைத் தலைமாலையாக அழகுற அணிந்தவர். களங்கமில்லாத மெய்யடியார்களின் பக்தியாகிய வலை உணர்தற்கு இனிமையானது. சுடுகாடே அவர் வாழும் இருப்பிடம். திருக்கச்சியேகம்பத்தையும் தாம் விரும்பும் திருத்தலமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றார்.

**4029.** இரும்புகைக்கொடி தங்கழல் கையதே
யிமயமாமக டங்கழல் கையதே
அரும்புமொய்த்த மலர்ப்பொறை தாங்கியே
யாழியான்றன் மலர்ப்பொறை தாங்கியே
பெரும்பகனட மாடுதல் செய்துமே
பேதைமார்மனம் வாடுதல் செய்துமே
கரும்புமொய்த்தெழு கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 6

கங்காளம் – உடல் எலும்புக்கூடு. திருமாலின் திருவிக்கிர அவதாரத்தின் செருக்கை அடக்கி அதற்கு அறிகுறியாக அவன் உடல் எலும்பை சிவபெருமான் தாங்குவார்.

இறைவர் கொடிபோன்று பெரிய புகையுடன் எழும் நெருப்பைக் கையிலேந்தியவர். இமய மலையரசனின் மகளான உமாதேவியின் கைகளால் அவருடைய திருவடிகள் வருடப்படுவன. அடியவர்களால் பூசிக்கப்படும் அரும்புகளையும், மலர்களையும் பாரமாகத் தாங்குபவர். சக்கரப் படையுடைய திருமாலின் பெரிய உடலெலும்பாகிய கங்காளத்தைச் சுமப்பவர். பகலில் திருநடனம் செய்பவர். தாருகாவனத்து முனிபத்தினிகளின் மனம் வாடச் செய்பவர். கருப்பங்கழிகள் நிறைந்து கம்பம் போலப் பருத்துக் காணப்படும் திருக்கச்சியேகம்பம் என்ற திருத்தலத்தில் விரும்பி வீற்றிருந்தருளுபவர்.

**4030.** முதிரமங்கை தவஞ்செய்த காலமே
முன்புமங்கை தவஞ்செய்த காலமே
வெதிர்களோடகில் சந்தமு ருட்டியே
வேழமோடகில் சந்த முருட்டியே
அதிரவாறு வரத்தழு வத்தொடே
யானையாடு வரத்தழு வத்தொடே
கதிர்கொள்பூண்முலைக் கம்ப மிருப்பதே
காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 7

கச்சியேகம்பத்திற்கு மூவரும் பாடிய 12 பதிகங்கள் உள்ளன.

மேகம் போலும் நிறத்தையுடைய அம்பிகை முற்காலத்தில் இமயமலையில் சிவபெருமானைக் கணவராக அடையத் தவம் செய்தாள். பின் அம்பிகை கம்பையாற்றில் தவம் செய்யும் இக்காலத்திலும் மூங்கில், அகில், சந்தனம் மற்றும் ஏனைய முருட்டு மரங்களையும், யானை முதலிய மிருகங்களையும் ஓட முடியாதவாறு ஆரவாரத்தோடு கம்பையாறு அடித்துக் கொண்டு வர, பஞ்சகவ்வியங்களால் அபிடேகம் செய்யப்படும் சிவபெருமானைத் தழுவுவதால் முலைத்தழும்பு தம்பம்போல் உறுதியான அவர் மார்பில் விளங்குகின்றது. அப்பெருமான் காஞ்சிமாநகரிலுள்ள திருவேகம்பத்தில் வீற்றிருந்தருளுகின்றார்.

**4031.** பண்டரக்க னெடுத்த பலத்தையே
பாய்ந்தரக்க னெடுத்த பலத்தையே
கொண்டரக்கிய துங்கால் விரலையே
கோளரக்கிய துங்கால் விரலையே
உண்டுழன்றது முண்டத் தலையிலே
யுடுபதிக்கிட முண்டத் தலையிலே
கண்டநஞ்ச மடக்கினை கம்பமே
கடவுணீயிடங் கொண்டது கம்பமே.

சிவபெருமான், இராவணன் கைலைமலையை எடுத்த வலிமையை, மேற்சென்று சிதறுவித்தலால், அவன் வலிமையற்றவன் என்பதை உணர்த்தும் வகையில் தம் திருப்பாத விரலை ஊன்றியவர். தாருகவனத்து முனிவரேவலால் கொலை செய்ய வந்த மானை ஏந்தியுள்ளவர். அவர் பிச்சையெடுத்துத் திரிந்தது தலை மண்டையோட்டிலே. சந்திரனுக்கு இடம் கொடுத்தது அவர் தலையிலே. நஞ்சைக் கண்டத்தில் அடக்கிய, உலகைத் தாங்கும் தூண் போன்றவன் சிவபெருமானே. கடவுளாகிய அப்பெருமான் விரும்பி வீற்றிருந்தருளுவது திருக்கச்சியேகம்பமே.

பஞ்சபூதத் தலங்களில் மணல் லிங்கமுள்ள இத்தலம் பிருதிவித்தலம். மூலத்தானம் மணலால் ஆனதால் அதற்கு அபிடேகம் இல்லை. புனுகுச்சட்டமே சாத்தப் பெறுவது.

**4032.** தூணியான சுடர்விடு சோதியே
சுத்தமான சுடர்விடு சோதியே
பேணியோடு பிரமப் பறவையே
பித்தனான பிரமப் பறவையே
சேணினோடு கீழுழி திரிந்துமே
சித்தமோடு கீழுழி திரிந்துமே
காணநின்றன ருற்றது கம்பமே
கடவுணீயிட முற்றது கம்பமே.

அம்பறாத் தூணியாகிய நெற்றிக் கண்ணிலிருந்து சுடர்விடும் நெருப்புப் பொறிகளை உடையவரே. அவற்றிலிருந்து தோன்றியவரே இயல்பாகவே பாசங்களின் நீங்கிய சுடர்விடு ஞானமயமான முருகக் கடவுளாவார். தம் வலிமையைப் பாராட்டி முடி காண்பான். சென்ற பிரமன் அன்னப்பறவை வடிவு தாங்கி ஆகாயத்திலும், திருமால் பன்றி உருவில் பாதாளத்திலும் செருக்கோடும், கீழ்மைத்தன்மையோடும் இறைவனைக் காண முயன்று ஊழிக்காலம் வரை திரிந்தும் அவர்கள் கண்டது அக்கினித் தம்பமாகிய உமது வடிவத்தையே. பரம்பொருளாகிய நீ விரும்பி வீற்றிருந்தருளுவது திருக்கச்சியேகம்பமே ஆகும்.

காஞ்சிபுரத்தில்
1. கச்சியேகம்பம் 2. கச்சிமேற்றளி 3. கச்சி ஓண காந்தன்றளி 4. கச்சிநெறிக் காரைக்காடு 5. கச்சியநேக தங்காவதம் என்ற 5 பாடல் பெற்ற தலங்களும் 6. கச்சிமயானம் என்னும் ஒருவைப்புத்தலமுமாக ஆறு தலங்கள் உள்ளன. கச்சிமயானம் கச்சி ஏகம்பத்தினுள் கொடிமரத்தின் முன்னுள்ளது.

**4033.** ஒருடம்பினை யீருரு வாகவே
யுன்பொருட்டிற மீருரு வாகவே
ஆருமெய்தற் கரிது பெரிதுமே
யாற்றவெய்தற் கரிது பெரிதுமே
தேரரும்மறி யாது திகைப்பரே
சித்தமும்மறி யாது திகைப்பரே
கார்நிறத்தம ணர்க்கொரு கம்பமே
கடவுணீயிடங் கொண்டது கம்பமே.

இறைவரே! யானையின் உடம்பினை உரித்ததாகிய தோலை உடம்பில் போர்வையாக அணிந்துள்ளீர். உம்முடைய உண்மைத்தன்மை சக்தி, சிவம் என இரண்டு திறத்தது. உமது பாகத்திலுள்ள அம்பிகையின் கரிய நிறம் ஒளிவாய்ந்தது. உயிர்கள் ஆன்ம முயற்சியினால் உம் திருவடிகளை அடைதல் அரிது. புத்தர்களும் உம்மை அறியாது திகைப்பர். அவர்கள் அறிவும் தம் நிலைமை மாறமாட்டாதா தலால் உம்மைத் துதிப்பதை வெறுப்பர். கருநிறமுடைய சமணர்கள் உம்மைக் கண்டு நடுங்குவர். பரம்பொருளாகிய நீர் விரும்பி வீற்றிருந்தருளுவது திருக்கச்சியேகம்பமே.

காமாட்சி அம்மையார் இருநாழி நெல் கொண்டு 32 அறமும் வளர்க்கிறார்.

4034. கந்தமார்பொழில் சூழ்தரு கம்பமே
காதல்செய்பவர் தீர்த்திடு கம்பமே
புந்திசெய்வது விரும்பிப் புகலியே
பூசுரன்றன் விரும்பிப் புகலியே
அந்தமில்பொரு ளாயின கொண்டுமே
யண்ணலின்பொரு ளாயின கொண்டுமே
பந்தனின்னியல் பாடிய பத்துமே
பாடவல்லவ ராயின பத்துமே. 11

நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்து விளங்குவது திருவேகம்பம் என்னும் திருத்தலம். அதனை விரும்பி வழிபடுபவர்கள் பழவினையால் வரும் துன்பங்கட்கு வருந்திச் சொரியும் துன்பக் கண்ணீரைத் தீர்த்திடும். எல்லாம் சிவன் செயல் என்பதை நிச்சயித்து, புகலியில் அவதரித்த பூசுரனான திருஞானசம்பந்தன், அந்தமில் பொருளாந்தன்மையை உட்கொண்டு, சிவபெருமானின் புகழையே பொருளாகக் கொண்டு அருளிய இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கள் பக்தியில் மேம்பட்டு எல்லாம் கைகூடப்பெறுவர்.

**காஞ்சியின் தலப்பெருமைகளைக் கூறும் நூல்கள்**

1. மாதவச்சிவஞான யோகிகள் அருளிய காஞ்சிப்புராணம்
2. கச்சியப்ப முனிவர் அருளிய காஞ்சிப்புராண இரண்டாங்கண்டம்
3. கச்சியப்ப முனிவர் இயற்றிய கச்சி ஆனந்த ருத்திரேசர் வண்டு விடு தூது
4. இரட்டையர்கள் பாடிய ஏகாம்பர நாதர் உலா
5. பட்டினத்துப்பிள்ளையார் அருளிய திருவேகம்பமுடையார் திருவந்தாதி
6. மாதவச்சிவஞான யோகிகள் அருளிய கச்சி ஆனந்தருத்திரேசர் பதிகம்
7. மாதவச்சிவஞான யோகிகள் அருளிய திருவேகம்பர் ஆனந்தக் களிப்பு
8. மாதவச்சிவஞான யோகிகள் அருளிய திருவேகம்பர் யமக அந்தாதி
9. மூவர் முதலிகள் பாடிய 12 பதிகங்கள்
10. திருத்தொண்டர் புராணத்தில் திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணம்

இந்த நூல்களையெல்லாம் இப்பிறவியில் ஒரு முறை தொடுவதற்காகவும், புரட்டிப் பார்ப்பதற்காகவும் இறைவன் திருவருள் கூட்டட்டும்.

## 115. திருஆலவாய் ( திருவியமகம் )

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 115

4035. ஆலநீழ லுகந்த திருக்கையே
யானபாட லுகந்த திருக்கையே
பாலினேர்மொழி யாளொரு பங்கனே
பாதமோதலர் சேர்புர பங்கனே
கோலநீறணி மேதகு பூதனே
கோதிலார்மன மேவிய பூதனே
ஆலநஞ்சமு துண்ட களத்தனே
யாலவாயுறை யண்டர் களத்தனே. 1

சிவபெருமான் கல்லால நிழலை விரும்பி இருப்பிடமாகக் கொண்டவர். அவருக்கு விருப்பமான பாடல் இருக்கு வேதமாகும். அவர் பால் போன்று இனிய மொழி பேசும் உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவர். தம் திருவடிகளைப் போற்றாத அசுரர்களின் முப்புரங்களை அழித்தவர். அழகிய திருநீற்றைப் பூசிய சிறந்த பூதகணங்களைப் படையாக உடையவர். குற்றமற்றவர்களின் உள்ளத்தில் தங்கிய உயிர்க்கு உயிரானவர். ஆலகால விடமுண்ட கண்டத்தையுடையவர். தேவர்கட்கெல்லாம் தலைவரான அவர் திருவாலவாய் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுகின்றார்.

| | |
|---|---|
| 4036. பாதியாவுடன் கொண்டது மாலையே<br>பாம்புதார்மலர்க் கொன்றைநன் மாலையே<br>கோதினீறது பூசிடு மாகனே<br>கொண்டநற்கையின் மானிட மாகனே<br>நாதனாடொறு மாடுவ தானையே<br>நாடியன்றுரி செய்தது மானையே<br>வேதநூல்பயில் கின்றது வாயிலே<br>விகிர்தனூர்திரு வாலநல் வாயிலே. 2 | சிவபெருமான் தம் உடம்பில் பாதியாகக் கொண்டது திருமாலை. பாம்பும், கொன்றை மலரும் அவருக்கு நன்மாலைகளாகும். குற்றமற்ற திருநீறு பூசிய மார்பை உடையவர். இடத் திருக்கரத்தில் மானை ஏந்தியுள்ளவர். அவர் நாள்தோறும் அபிடேகம் கொள்வது பஞ்ச கவ்வியத்தால். அவர் உரித்தது யானையை. வேத நூல்களை அருளுவது அவரது திருவாய். விகிர்தரான அவர் விரும்பி வீற்றிருந்தருளுவது திரு ஆலவாய். |
| 4037. காடுநீட துறப்பல கத்தனே<br>காதலால்நினை வார்தம கத்தனே<br>பாடுபேயொடு பூதம சிக்கவே<br>பல்பிணத்தசை நாடிய சிக்கவே<br>நீடுமாநட மாடவி ருப்பனே<br>நின்னடித்தொழ நாளுமி ருப்பனே<br>ஆடனீள்சடை மேவிய வப்பனே<br>யாலவாயினின் மேவிய வப்பனே. 3 | இறைவர், பெரிய சுடுகாட்டில் எல்லாவற்றிற்கும் கர்த்தாவாயிருப்பவர். தம்மைப் பத்தியால் நினைவார்தம் உள்ளத்தில் இருப்பவர். பாடுகின்ற பேய் மற்றும் பூதகணங்களுடன் குழைந்திருப்பவர். அக்கணங்கள் பிணத்தசைகளை விரும்பியுண்ண நடனம் ஆடுபவர். திருவடிகளைத் தொழுபவர்கட்கு நாளும் அருள்புரிபவர். அசைகின்ற சடைமீது கங்கையைத் தாங்கியுள்ளவர். திருஆலவாயில் வீற்றிருந்தருளும் தந்தை அவரே. |
| 4038. பண்டயன்றலை யொன்று மறுத்தியே<br>பாதமோதினர் பாவ மறுத்தியே<br>துண்ட வெண்பிறை சென்னி யிருத்தியே<br>தூயவெள்ளெரு தேறியி ருத்தியே<br>கண்டுகாமனை வேவ விழித்தியே<br>காதலில்லவர் தம்மை யிழித்தியே<br>அண்டநாயக னேமிகு கண்டனே<br>யாலவாயினின் மேவிய கண்டனே. 4 | முற்காலத்தில் நீர் பிரமனின் தலை ஒன்றை அறுத்தீர். உம் திருவடிகளை வணங்கும் அன்பர்களின் பாவங்களை அறுப்பீர். பிறைச்சந்திரனைச் சடையில் அணிந்துள்ளீர். தூய வெண்ணிற இடபத்தின் மீது ஏறி இருப்பீர். மன்மதன் சாம்பலாகுமாறு நெற்றிக்கண்ணால் விழித்தீர். அன்பில்லாதவரை இகழ்வீர். தேவர்கட்குத் தலைவரே! குற்றங்களை நீக்குபவரே. திருஆலவாயின்கண் வீற்றிருந்தருளும் அளவிடமுடியாத பரம்பொருளே. |
| 4039. சென்றுதாதை யுகுத்தனன் பாலையே<br>சீறியன்பு செகுத்தனன் பாலையே<br>வென்றிசேர்மழுக் கொண்டுமுன் காலையே<br>வீழவெட்டிடக் கண்டுமுன் காலையே<br>நின்றமாணியை யோடின கங்கையால்<br>நிலவமல்கி யுதித்தன கங்கையால்<br>அன்றுநின்னுரு வாகத் தடவியே<br>யாலவாயர னாகத் தடவியே. 5<br><br>முழுப் பாடலையும் சண்டீசர் வரலாற்றுக்காகவே பயன்படுத்துகிறார். | தந்தையாகிய எச்சதத்தன் சிவபூசைக்குரிய பாலைக் கவிழ்த்துவிட, புதல்வராகிய விசாரசருமர் சினந்து அருகிலுள்ள கோலை எடுத்து ஓச்ச அது மழுவாக மாறித் தந்தையின் முன்காலை வெட்டிற்று. ஆங்குச் சிவபூசை ஆற்றிய பிரமசாரியான அவ்விசாரசருமருக்குக் கங்கை முதலானவற்றை அணிந்த திருக்கோலத்தோடு தோன்றிக் காட்சி நல்கியவர் சிவபெருமான். அப்பெருமான், தந்தையாகிய எச்சதத்தனை வீழ்த்திய அடியவரின் பாவத்தைப் போக்கித் தம் திருக்கையால் வருடிச் சிவசாரூபம் பெறத் தடவிச் சண்டீச பதம் தந்து அருளினார். அப்பெருமான் திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அரன் ஆவார். |

| | |
|---|---|
| **4040.** நக்கமேகுவர் நாடுமோ ரூருமே<br>நாதன்மேனியின் மாசுண மூருமே<br>தக்கபூமனைச் சுற்றக் கருளொடே<br>தாரமுய்த்தது பாணற் கருளொடே<br>மிக்கதென்னவன் றேவிக் கணியையே<br>மெல்லநல்கிய தொண்டர்க் கணியையே<br>அக்கினாரமு துண்கல னோடுமே<br>யாலவாயர னாருமை யோடுமே. 6<br><br>"திருவியகத்தினுள்ளும் திருநீலகண்ட<br>பாணர்க்கருளும் திறமும் போற்றி"<br>– சேக்கிழார் தி.ஞா.ச. புராணம் 870 | சிவபெருமான் நாடுகளிலும், ஊர்தோறும் ஆடையில்லாக் கோலத்தோடு பிச்சைக்குச் செல்வார். அவர் திருமேனியில் பாம்பு ஊர்ந்து கொண்டிருக்கும். திருநீலகண்ட யாழ்ப்பாணரை அழைத்து வரும்படி அடியார்களுக்குக் கனவில் ஏவ, அவ்வாறே வந்து **அப்பாணர் பாடும்போது பொற்பலகை அருளி அமரச் செய்தார்.** தென்னவன் தேவியாகிய மங்கையர்க்கரசி யாருக்கு மங்கலியம் முதலான மங்களகரமான அணிகளை அருளியவர். திருத்தொண்டர்க்கு அண்மையாய் விளங்குபவர். எலும்புமாலை அணிந்துள்ளவர். மண்டையோட்டை உண்கலனாகக் கொண்டவர். அப்பெருமான் திருஆலவாயில் உமாதேவியை உடனாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றார். |
| **4041.** வெய்யவன்பல் லுகுத்தது குட்டியே<br>வெங்கண்மாசுணங் கையது குட்டியே<br>ஐயனேயன லாடிய மெய்யனே<br>யன்பினால்நினை வார்க்கருண் மெய்யனே<br>வையமுய்யவன் றுண்டது காளமே<br>வள்ளல்கையது மேவுகங் காளமே<br>ஐயமேற்ப துரைப்பது வீணையே<br>யாலவாயரன் கையது வீணையே. 7 | சிவபெருமான் சூரியனுடைய பல்லை உதிர்த்தது கையால் குட்டி. அவர் கையிலிருப்பது கொடிய கண்களையுடைய பாம்புக்குட்டி. அவரே தலைவர். அனலில் ஆடும் திருமேனியுடையவர். அன்பால் நினைந்து வழிபடும் அடியவர்கட்கு அருள் வழங்கும் மெய்யர். உலகமுய்ய அன்று அவர் உண்டது விடமே. வேண்டுவார்க்கு வேண்டுவன ஈயும் வள்ளலான அவர் கையில் விளங்குவது எலும்புக்கூடே. அவர் பிச்சை ஏற்பதாக உலகோர் உரைப்பது வீண் ஆகும். திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அரனார் கையிலுள்ளது வீணையே. |
| **4042.** தோள்கள்பத்தொடு பத்து மயக்கியே<br>தொக்கதேவர் செருக்கை மயக்கியே<br>வாளரக்க னிலத்துக் களித்துமே<br>வந்தமால்வரை கண்டு களித்துமே<br>நீள்பொருப்பை யெடுத்தவுன் மத்தனே<br>நின்விரற்றலை யான்மத மத்தனே<br>ஆளுமாதி முறித்தது மெய்கொலோ<br>வாலவாயர னுய்த்தது மெய்கொலோ. 8 | வாளைக் கையிலேந்திய இராவணன் தன் இருபது தோள்களின் வலிமையையும் சேர்த்துக் கொண்டு திக்குவிசயம் செய்து, தன்னை எதிர்க்க வந்த தேவர்களின் வலிமையை மயங்கச் செய்து, இப்பூவுலகில் களித்து நிற்க, தன் தேரைத் தடுத்த கயிலை மலையைக் கண்டு வெகுண்டு பாய்ந்து சென்று அதனைப் பெயர்த்து எடுத்து உன்மத்தன் ஆயினன். அந்நிலையில் இறைவர் தம் திருப்பாத விரலை ஊன்ற, இராவணனின் தலை நெரிய, அவன் செருக்கு அழிந்தவன் ஆயினான். உலகனைத்தும் ஆளுகின்ற முதல்வராகிய தாம் அவ்வரக்கனின் உடலை முறியச் செய்தது மெய்கொல்? திருஆலவாயில் வீற்றிருந்தருளும் அரனே! பின்னர் அவனது பாடலைக் கேட்டு அருள்செய்ததும் உண்மையான வரலாறு தானோ? |

| | |
|---|---|
| **4043.** பங்கயத்துள நான்முகன் மாலொடே<br>பாதநீண்முடி நேடிட மாலொடே<br>துங்கநற்றழ லின்னுரு வாயுமே<br>தூயபாடல் பயின்றது வாயுமே<br>செங்கயற்கணி னாரிடு பிச்சையே<br>சென்றுகொண்டுரை செய்வது பிச்சையே<br>அங்கியைத்திகழ் விப்ப திடக்கையே<br>யாலவாயர னார திடக்கையே. 9 | செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமன் திருமாலோடு இறைவனின் அடியையும், முடியையும் தேட, அவர்கள் மயங்க, உயர்ந்த நல்ல அக்கினி உருவாய் நின்றான். பின்னர்த் தங்கள் பிழைகளை மன்னித்து அருளுமாறு தூய பாடல்களைப் பாடின. அவர்கள் வாய், சிவந்த கயல்மீன்கள் போன்ற கண்களை யுடைய முனிபத்தினிகள் இறைவருக்கு இட்டது பிச்சையே. அதனை ஏற்று அவர் உரைசெய்தது அவர்கட்குப் பித்து உண்டாகும் வண்ணமே. அவர் நெருப்பேந்தியுள்ளது இடத் திருக்கரத்திலே. திருஆலவாய் சிவபெருமான் திடமாக வீற்றிருந்தருளும் இடம் ஆகும். |
| **4044.** தேரரோடம ணர்க்குநல் கானையே<br>தேவர்நாடொறுஞ் சேர்வது கானையே<br>கோரமட்டது புண்டரி கத்தையே<br>கொண்டநீள்கழல் புண்டரி கத்தையே<br>நேரிலூர்க ளழித்தது நாகமே<br>நீள்சடைத்திகழ் கின்றது நாகமே<br>ஆரமாக வுகந்தது மென்பதே<br>யாலவாயர னாரிட மென்பதே. 10 | சிவபெருமான் தம்மைப் போற்றாத புத்தர்கட்கும், சமணர்கட்கும் அருள்புரியாதவர். தேவர்கள் நாள்தோறும் சென்று வணங்குவது அவர் எழுந்தருளியிருக்கும் கடம்பவனத்தை. அவர் வெற்றிகொண்டு வீழ்த்தியது புலியையே. திருமால் இறைவனைப் பூசித்துத் திருவடியில் சேர்த்தது தாமரை மலர் போன்ற கண்ணையே. பகைமை கொண்ட மூன்று புரங்களை அழித்தது மேருமலை வில்லே. பெருமானின் நீண்ட சடைமுடியில் விளங்குவது நாகமே. இறைவன் மாலையாக விரும்பி அணிவது எலும்பே. அப்பெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம் திருஆலவாய் என்பதே. |
| **4045.** ஈனஞானிக டம்மொடு விரகனே<br>யேறுபல்பொருண் முத்தமிழ் விரகனே<br>ஆனகாழியுண் ஞானசம்பந்தனே<br>யாலவாயினின் மேயசம் பந்தனே<br>ஆனவானவர் வாயினு ளத்தனே<br>யன்பரானவர் வாயினு ளத்தனே<br>நானுரைத்தன செந்தமிழ் பத்துமே<br>வல்லவர்க்கிவை நற்றமிழ் பத்துமே. 11 | தேவர்களால் துதிக்கப்படும் தலைவரே. அடியவர்களின் இனிய உள்ளத்தில் இருப்பவரே! நல்லறிவு அற்றவர்கள்பால் பொருந்தாத கொள்கையுடையவரே. பல பொருள்களை அடக்கிய, முத்தமிழ் விரகரான சீகாழியுள் அவதரித்த ஞானசம்பந்தர், திருஆலவாய் இறைவரிடம் உரிமை யுடையவராய் அவரைப் போற்றிப் பாடிய இச்செந்தமிழ்ப் பாடல்கள் பத்தும் ஓதவல்லவர்கட்கு எல்லா நன்மைகளும் உண்டாகும். |

## 116. திருவீழிமிழலை ( திருவியமகம் )

பண் : பழம்பஞ்சுரம் பதிக எண் : 116

4046. துன்றுகொன்றைநஞ் சடையதே
தூய கண்டநஞ் சடையதே
கன்றின் மானிடக் கையதே
கல்லின் மானிடக் கையதே
என்று மேறுவ திடவமே
யென்னி டைப்பலி யிடவமே
நின்ற தும்மிழலை யுள்ளுமே
நீரெனைச் சிறிது முள்ளுமே. 1

சிவபெருமான் நெருங்கிய கொன்றை மலரைச் சூடியுள்ளது சடையில். அவருடைய தூயகழுத்து நஞ்சை அடக்கியுள்ளது. மான்கன்றை ஏந்தி உள்ளது இடக்கை. இமய மலையரசன் மகளான மான் போன்ற உமாதேவியைக் கொண்டுள்ளது இடப்பக்கம். அவர் என்றும் ஏறும் வாகனம் இடபமே. பிச்சாடனரான நீர் நான் பிச்சையிட என்னிடத்து வருவீராக. நீர் வீற்றிருந்தருளுவது திருவீழி மிழலை என்னும் திருத்தலத்தில். அதுபோல அடியேன் உள்ளத்திலும் எழுந்தருள நினைப்பீராக!

4047. ஓதி வாயதும் மறைகளே
யுரைப்ப தும்பல மறைகளே
பாதி கொண்டதும் மாதையே
பணிகின் றேன்மிகு மாதையே
காது சேர்கனங் குழையரே
காத லார்கனங் குழையரே
வீதி வாய்மிகும் வேதியா
மிழலை மேவிய வேதியா. 2

சிவபெருமான் ஓதுவன வேதங்களே. உரைப்பது பிறர் எவர்க்கும் தெரிவதற்கரிய பொருள்களே. திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டது உமாதேவியை. வழிபடுகின்றேன் அவ்வழகிய கோலத்தை. காதிலே அணிந்திருப்பது கனவிய குழை. அவர் தம்மிடத்து அன்பு செலுத்துபவர்களிடத்துக் குழைந்து நிற்பர். வீதியிலே மிகுவது வேதஒலி. வேதங்களை அருளிச் செய்த அப்பெருமான் வீற்றிருந்தருளுவது திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில்.

4048. பாடு கின்றபண் டாரமே
பத்த ரன்னபண் டாரமே
சூடு கின்றது மத்தமே
தொழுத வென்னையுன் மத்தமே
நீடு செய்வதுந் தக்கதே
நின்ன ரைத்திகழ்ந் தக்கதே
நாடு சேர்மிழலை யூருமே
நாக நஞ்சழலை யூருமே. 3

சிவபெருமான் ஊழி இறுதியில் பாடுகின்ற பண் தாரம் என்னும் இசை ஈறாகிய எழுவகை இசையுமே. பக்தர்கட்கு ஞானக்கருவூலமாய் விளங்குபவர். அவர் சூடுவது ஊமத்த மலர். அவரை வணங்கும் என்னைப் பித்த னாக்கினார். அவரையே நீளத் தியானித்துப் போற்றுமாறு செய்தார். இது தகுமோ? அவருடைய இடுப்பில் விளங்குவது அக்குப்பாசியே. அப்பெருமான் மிழலை நாட்டிலுள்ள திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளுகின்றார். அவருடைய திருமேனியில் நாகமும், கண்டத்தில் நஞ்சும், கரத்தில் நெருப்பும் விளங்குகின்றன.

---

பண்டாரம் – சைவ அடியார்; நிதி நிலை.

| | |
|---|---|
| **4049.** கட்டு கின்றகழ னாகமே<br>காய்ந்ததும் மதன னாகமே<br>இட்ட மாவதிசை பாடலே<br>யிசைந்த நூலினமர் பாடலே<br>கொட்டுவான் முழவம் வாணனே<br>குலாயசீர் மிழலை வாணனே<br>நட்ட மாடுவது சந்தியே<br>நானுய்தற் கிரவு சந்தியே. 4 | சிவபெருமான் திருவடிகளில் வீரக்கழலாக அணிந்துள்ளது நாகத்தையே. அவர் எரித்தது மன்மதனது உடம்பையே. அவர் விரும்புவது அடியவர்கள் பாடும் இசைப்பாடலே. பொருந்திய நூலின் அமைதிக்கு ஏற்றதாயிருப்பது அவர் ஆடலே. அவ்வாடலுக்கு முழவங் கொட்டுபவன் வாணனே. இவை திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமானின் சிறப்புக்கள். அவர் நடனமாடுவது சந்தி என்னும் நாடக உறுப்பின்படி, நான் காம வாதையினின்றும் பிழைப்பதற்கு இராக்காலம் தக்க சமயமாகும். |
| **4050.** ஓவி லாதிடுங் கரணமே<br>யுன்னு மென்னுடைக் கரணமே<br>ஏவு சேர்வுநின் னாணையே<br>யருளி னின்னபொற் றாணையே<br>பாவி யாதுரை மெய்யிலே<br>பயின்ற நின்னடி மெய்யிலே<br>மேவி னான்விறற் கண்ணனே<br>மிழலை மேயமுக் கண்ணனே. 5 | மிழலையை உகந்தருளியிருக்கும் முக்கண் இறைவரே படைப்புக் காலமுதல் மகாசங்கார காலம் வரை ஓய்வின்றித் தொழிலாற்றும் கரணபூதர். மனம் முதலிய அகக்கருவிகள் உம்மையே நினைக்கும். மன்மதபாணம் என்மேல் தைப்பதும் உம் ஆணையால். உன் பொன்போன்ற திருவடிகளை நீர் அருளினால் துன்பம் எனக்கு நேருமோ? உம்மைக் கருதாது உரைப்பன மெய்ம்மையாகாது. வலியோனாகிய திருமால் உம்முடைய திருவடியை உண்மையாகவே பொருந்தப் பெற்றான். |
| **4051.** வாய்ந்த மேனியெரி வண்ணமே<br>மகிழ்ந்து பாடுவது வண்ணமே<br>காய்ந்து வீழ்ந்தவன் காலனே<br>கடுநடஞ் செயுங் காலனே<br>போந்த தெம்மிடை யிரவிலே<br>யும்மிடைக் கள்வ மிரவிலே<br>வேய்ந்ததும் மிழலை யென்பதே<br>விரும்பியே யணிவ தென்பதே. 6 | சிவபெருமானின் திருமேனி நெருப்புப் போன்ற சிவந்த வண்ணமுடையது. அவர் மகிழ்ந்து பாடுவது பல வண்ணப் பாடல்களையே. அவரால் உதைக்கப்பட்டு வீழ்ந்தவன் காலன். அவர் அழகிய திருநடனம் செய்யும் கால்களை உடையவர். அவர் எங்கள் வீட்டிற்குப் பிச்சை யேற்க வந்தது இரவில். எம் உள்ளம் புகுந்து கவர்ந்தது இரவில். அப்பெருமான் வீற்றிருந்தருளுவது திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். அவர் விரும்பி அணிவது எலும்பு மாலையே. |

| | |
|---|---|
| **4052.** அப்பி யன்றகண் ணயனுமே<br>யமரர் கோமகனு மயனுமே<br>ஒப்பி லின்றமரர் தருவதே<br>யொண்கையா லமரர் தருவதே<br>மெய்ப்ப பயின்றவ ரிருக்கையே<br>மிழலை யூரும திருக்கையே<br>செப்புமின் னெருது மேயுமே<br>சேர்வுமக் கெருது மேயுமே. **7** | பாற்கடலில், துயிலும் கண்ணுடைய திருமாலும், தேவேந்திரனும், பிரமனும் கேட்டவற்றை ஒப்பின்றி உமது திருக்கரம் வழங்கி வருதலால் அது கற்பக விருட்சம் ஆகும். மெய்த்தவம் செய்பவர்களின் உள்ளக்கோயில் உமது இருப்பிடமாகும். திருவீழிமிழலை என்னும் திருத்தலமும் நீர் வீற்றிருந்தருளும் இடமாகும். உமக்கென்றுள்ள விளைநிலமாகிய என் மனநிலத்தில் எருது புகுந்து கேடு விளைவித்தல் தகுமோ? அதை ஓட்டி என்னை ஆட்கொள்ள அங்கு வருவதற்கு உமக்கு எருதும் இருக்குமே. |
| **4053.** தான வக்குலம் விளக்கியே<br>தாரகைச் செல விளக்கியே<br>வான டர்த்த கயிலாயமே<br>வந்து மேவு கயிலாயமே<br>தானெ டுத்தவல் லரக்கனே<br>தடமுடித் திரள ரக்கனே<br>மேன டைச்செல விருப்பனே<br>மிழலை நற்பதி விருப்பனே. **8** | சிவபெருமான், பகைத்து நிற்கும் அசுரர் அழிவர் என்பதை விளக்கியவர். தாரகை முதலான ஒளிதரும் பொருள்களின் ஒளியைத் தம் பேரொளியால் குன்றச் செய்தவர். வானை முட்டும் உயர்ந்த கயிலை மலையைத் தம் வல்லமையால் எடுத்த அரக்கனான இராவணனின் பெரிய முடிகளை நெரித்தவர். மனைகள் தோறும் சென்று பிச்சை எடுத்தலில் விருப்பமுடையவர். திருவீழிமிழலை என்னும் நற்பதியில் விரும்பி வீற்றிருந்தருளுபவர். |
| **4054.** காய மிக்கதொரு பன்றியே<br>கலந்து நின்னவுரு பன்றியே<br>ஏய விப்புவி மயங்கவே<br>யிருவர் தாமன மயங்கவே<br>தூய மெய்த்திர ளகண்டனே<br>தோன்றி நின்றமணி கண்டனே<br>மேய வித்துயில் விலக்கணா<br>மிழலை மேவிய விலக்கணா. **9** | பன்றி உருவெடுத்த திருமால், பிரமன் ஆகிய இருவரும் சேர்ந்து தேடவும், உம் உருவத் திருமேனியைக் காண்பதற்கு இயலாதவராய், இப்புவியில் மயங்கி நின்று, மனம் கலங்கிய நிலையில், தூய சோதித் திரளாய் அகண்ட திருமேனியராய்த் தோன்றி நின்ற நீலகண்டத்தை உடையவரே. எம் தலைவரே! அடியேனின் தூக்கம் பிடிக்கா நிலையை விலக்குவீராக! திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் அழகரே. |

| | |
|---|---|
| 4055. கஞ்சியைக் குலவு கையரே<br>கலக்கமா ரமணர் கையரே<br>அஞ்ச வாதிலருள் செய்யநீ<br>யணைந்திடும் பரிசு செய்யநீ<br>வஞ்சனே வரவும் வல்லையே<br>மதித்தெ னைச்சிறிதும் வல்லையே<br>வெஞ்ச லின்றிவரு வித்தகா<br>மிழலைசே ரும்விறல் வித்தகா. 10 | சிவபெருமானே! கஞ்சி உண்ணும் கையையுடைய பௌத்தர்களும், சமணர்களும் அஞ்சுமாறு, அடியேன் வாதில் வெற்றி கொள்ள அருள்செய்தீர் நீவிர். பிறர் செய்யும் சூழ்ச்சியை அறிய வல்லீரும் நீவிர். அடியவரின் துயர் நீக்கிட வருவதற்கு வல்லீர். நீவிர் என் உரையைச் சிறிதளவேனும் மதித்து விரைவில் வரவும் இல்லையே. குறைதலில்லாமல் மேன்மேலும் வருகின்ற இத்துயரங்கள் எனக்குத் தகா. திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருக்கும் வலிமை மிக்க வித்தகரே. |
| 4056. மேய செஞ்சடையி னப்பனே<br>மிழலைமே வியவெ னப்பனே<br>ஏயு மாசெய விருப்பனே<br>யிசைந்த வாசெய விருப்பனே<br>காய வர்க்கசம் பந்தனே<br>காழி ஞானசம் பந்தனே<br>வாயுரைத்த தமிழ் பத்துமே<br>வல்லவர்க்கு மிவை பத்துமே. 11 | சிவபெருமான் சிவந்த சடையில் கங்கையை அணிந்தவர். திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் என் அப்பர். முத்தொழிலையும் அவருடைய சந்நிதியில் அவரவர் செய்ய வாளா இருப்பவர். தம்மைப் போற்றி வழிபடும் பக்தர்கட்கு விருப்பமானவர். பஞ்ச பூதங்களோடும், தோய்ந்தும் தோயாமல் இருப்பவர். அப்பெருமானைப் போற்றி, சீகாழியில் அவதரித்த ஞானசம்பந்தன் அருளிய இத்தமிழ்த் திருப்பதிகத்தை ஓத வல்லவர்களுக்கு, இவை ஞானத்தின் படிநிலைகள் பத்தாய் அமையும். (இறுதியில் சிவபோகம் பெறுவர் என்பது குறிப்பு). |

## 117. சீகாழி ( திருமாலைமாற்று )

பண் : கௌசிகம் — பதிக எண் : 117

4057. யாமாமாநீ யாமாமா யாழீகாமா காணாகா
காணாகாமா காழீயா மாமாயாநீ மாமாயா.

ஆன்மாக்களாகிய நாங்கள் கடவுளென்றால் அது பொருந்துமா? நீயே ஒப்பில்லாத கடவுளென்றால் அது முற்றிலும் தகும். பேரியாழ் என்னும் வீணையை வாசிப்பவனே! யாவரும் விரும்பத்தக்க கட்டழகனே! பகைப் பொருள்களும் சிவனைச் சாரின் பகை தீர்ந்து நட்பாகும் என்ற உண்மையினை யாவரும் காணுமாறு பாம்புகளை உடையவனே. கை, கால் முதலிய அவயவங்கள் காணா வண்ணம் காமனை அருவமாகச் செய்தவனே. சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவனே. இலக்குமியின் கணவனான திருமாலாகவும் வருபவனே! மாயை முதலிய மலங்களிலிருந்து எம்மை விடுவிப்பாயாக!

---

மாலை மாற்று என்பது முதலிலிருந்து இறுதி வரை படித்தால் அமையும் பாடலே, இறுதியிலிருந்து முதல் வரை படிப்பினும் அமைவது. முதலடியை முதலிலிருந்து படிப்போம். அது இரண்டாமடியை இறுதியிலிருந்து படித்தாலும் ஒரே மாதிரி அமைவதைப் பார்க்கலாம். அடுத்ததாக முதலடியை இறுதியிலிருந்து படிப்போம். அது இரண்டாமடியின் முதலிலிருந்து படிப்பதற்கு ஒப்பாகும். முற்றிலும் நெடில் எழுத்துக்கள் எல்லாவற்றுக்கும் பொருள் உண்டு.

| | |
|---|---|
| **4058.** யாகாயாழீ காயாகா தாயாரார்ரா தாயாயா<br>யாயாதாரா ராயாதா காயாகாழீ யாகாயா. 2<br><br>இதைச் சிறுவர்கட்குக் குடகு, விகடகவி என்று கூறிக் காட்டுவர். எளிதில் பொருள் காண முடியாதது என்பது இதன் பொருள். | வேள்வி வடிவினனே. யாழ் வாசிப்பவனே. அடியார்கட்கு அருள வரும்பொழுது உருவத் திருமேனி கொள்பவனே. சங்கார கருத்தாவே. அனைத்துயிர்க்கும் தாயானவனே. ஆத்திப்பூ மாலை அணிந்துள்ளவனே. தாருகாவனத்து முனிபத்தினிகளாகிய மகளிர் கூட்டத்தை வேட்கையுறும்படி செய்தவனே. சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவனே. துன்பங்கள் எவற்றினின்றும் எம்மைக் காப்பாயாக. |
| **4059.** தாவாமூவா தாசாகா ழீநாதாநீ யாமாமா<br>மாமாயாநீ தாநாழீ காசாதாவா மூவாதா. 3<br><br>மாதவச் சிவஞான சுவாமிகள் – காஞ்சிப் புராணத்திலும்<br>மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை – திருநாகைக்காரோண புராணத்திலும்<br>இவை போன்ற கவிதைகளை அமைத்துள்ளனர். | அழியாது மூப்பிலாத தசகாரியத்தால் அடையும் பொருளாக உள்ளவனே. சீகாழி என்னும் திருத்தலத்து முதல்வனே. எல்லோரும் அஞ்சி நீங்குகின்ற சுடுகாட்டில் நள்ளிரவில் நடனமாடும் நாதனே. மாண்புமிக்கவனே. ஐராவணம் என்னும் யானையின் மேல் ஏறி வருபவனே. கொடையில் கடல் போன்றவனே. சாவினின்றும் எங்களைக் காத்தருள்வாயாக. ஒளியுடைய மாணிக்கம் போன்றவனே. வேண்டும் வரங்களைத் தந்தருள்வாயாக. எங்கள்முன் எழுந்தருள்வாயாக. முன்னைப் பழம்பொருளே. காற்று முதலான ஐம்பூதங்களின் வடிவானவனே! |
| **4060.** நீவாவாயா காயாழீ காவாவானோ வாராமே<br>மேராவானோ வாவாகா ழீயாகாயா வாவாநீ. 4<br><br>எல்லாம் ஒரெழுத்து ஒரு மொழிகள். ஒற்றையெழுத்தே சொல்லாகி அது பல பொருள்களைத் தருவது தமிழின் சிறப்பம்சமாகும். இவையெல்லாம் அனுபவிக்கப்பட வேண்டும். மற்ற அனுபவங்கள் எல்லாம் உடல் அனுபவங்கள். இது உயிர் அனுபவங்கள். | என்றும் மாறுதலில்லாத மெய்ப் பொருளானவனே. தாங்கிய வீணையை உடையவனே. கொடிய பிறவித் துன்பம் எங்களை அடையாவண்ணம் வந்து காத்தருள்வாயாக. விண்ணிலுள்ள தேவர்கள் துன்பம் அடையாதவாறு மேருமலையை வில்லாக ஏந்தி முப்புரங்களை அழித்தவனே. சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருள்பவனே, ஆகாய சொரூபியே! நீ விரைந்து வருவாயாக! அருள் புரிவாயாக. |
| **4061.** யாகாலாமே யாகாழீ யாமேதாவீ தாயாவீ<br>வீயாதாவீ தாமேயா ழீகாயாமே லாகாயா. 5<br><br>கா – அசைச்சொல்; காத்தல்; காவடி; சோலை; துலை; தோட்சுமை; பூந்தோட்டம்; வருத்தம்; வலி; பாதுகாப்பு; பூங்காவனம்; காவடித்தண்டு; துலாக்கோல்; கலைமகள்; நிறை; பாதுகா; காப்பாற்று; காவல்செய் | யாவற்றுக்கும் கால கர்த்தாவாக விளங்குபவனே. எப்பொருளிலும் எள்ளில் எண்ணெய் போன்று உள்ளும், புறம்பும் ஒத்து நிறைந்திருப்பவனே! சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருள்பவனே! அறிவில் மேம்பாடு உடையவனே! அவனைத்துயிர்கட்கும் தாயாகவும், உயிராகவும் உள்ளவனே! என்றும் அழிவில்லாதவனே! இன்குரல் எழுப்பும கின்னரம் முதலிய பறவைகள் தன்னருகின் வந்து விழும்படி வீணைவாசிப்பவனே. யாங்கள் மேற்கொண்டு ஆவனவற்றிற்கு ஆராயாதவாறு எங்களைக் காத்தருள்வாயாக. |

**4062.** மேலேபோகா மேதேழீ காலாலேகா லானாயே
யேனாலாகா லேலாகா ழீதேமேகா போலேமே. **6**

மார்க்கண்டேயரின் உயிரைக் கவர வந்த காலனைக் கடுங்குரலால் கண்டித்தவரே. உம் திருவடியால் அவனை உதைத்து அக்காலனுக்குக் காலன் ஆகியவரே. பொருந்திய சனகர் முதலிய நால்வர்க்கும் சிவகுருவாகிக் கல்லால மரத்தின் கீழ் உபதேசித்து மெய்யுணர்வு பெறச் செய்தவரே. சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பரம்பொருளே. மேகத்தை வாகனமாகக் கொண்டருளியவரே. அடியேங்கள் உம் திருக்கூட்டத்தில் ஒருவர் போல் ஆவோம்.

---

**4063.** நீயாமாநீ யேயாமா தாவேழீகா நீதானே
நேதாநீகா ழீவேதா மாயாயேநீ மாயாநீ. **7**

மா – அசைச்சொல்; அழகு; அழைத்தல்; அளவு; அறிவு; ஆணி; இடித்தமா; இடை; இலக்குமி; எதிர்மறை யுபசருக்கம்; ஓர் எண்; மரம்; கட்டு; கறுப்பு; குதிரை, பன்றி, யானை இவற்றின் ஆண்; சரசுவதி; செல்வம், தாய்; துகள்; நஞ்சுக்கொடி; நிறம்; பரி; பெரிய; பெருமை; மகத்துவம்; மரணம்; மிகுதி; மேன்மை; வண்டு; வயல்; வலி; விலங்கு; வெறுப்பு.

உன்னைவிட்டு நீங்குதலில்லாத உமாதேவியை உடையவனே! ஒப்பற்ற தாயானவனே! ஏழிசை வடிவானவனே! நீயே வலிய எழுந்தருளி எங்களைக் காத்தருள்வாயாக! பேரன்பு வாய்ந்த நெஞ்சத்தை இடமாக உடையவனே. சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும், வேதங்களை அருளிச்செய்து வேதங்களின் உட்பொருளாக விளங்குபவனே. எங்களைக் கொல்லவரும் துன்பங்களை நீ கொன்று அருள்செய்யாயோ?

---

**4064.** நேணவராவிழ யாசைழியே வேகதளேரிய
ளாயுழிகா
காழியுளாயரி ளேதகவே யேழிசையாழவி
ராவணனே. **8**

இறைவரின் திருவடிகளில் பேரன்பு செலுத்தும் அடியவராம் பசுக்கள் தன்வயமற்றுக் கிடக்க, கட்டிய ஆசை என்று சொல்லப்படும் பெருங்கயிற்றைத் தண்ணளியால் அவிழ்த்தருள்பவரே. மிக வேகமாக ஓடும் மானின் தோலை அணிந்துள்ள பேரழகு வாய்ந்தவரே. பொறுக்கலாகாத் தீவினைத் துன்பங்கள் தாக்க வரும்போது காத்தருள்வீராக! மன்னித்தற்கரிய குற்றங்கள் எங்களின் சிறுமைத் தன்மையால் செய்தனவாகலின் அவற்றைப் பெரியவாகக் கொள்ளாது சிறியவாகக் கொண்டு பொறுத்தருள்வீராக! ஏழிசைவல்ல இராவணன் செருக்கினால் செய்த பெரும்பிழையைத் தேவரீர் மன்னித்து அருளினீர் அல்லவா? (அடியேம் சிறுமையால் செய்த பிழையையும் மன்னித்தருளும் என்பது குறிப்பு).

| | |
|---|---|
| **4065.** காலேமேலே காணீகா ழீகாலேமா லேமேபூ<br>பூமேலேமா லேகாழீ காணீகாலே மேலேகா. 9 | காற்றாகி எங்கும் கலந்தருள்பவனே. மறைப்பாற்றலின் வழி எவ்வுயிர்க்கும் மயக்கம் செய்து பின் அருள்புரிபவனே. பூக்களில் சிறந்த தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் முறையே திருமுடியையும், திருவடியையும் காணுதலை ஒழித்த வைரத் தன்மையுடையவனே! சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுபவனே. எங்களைக் கடைக்கணித்தருள்வாயாக. உன் திருவடியைத் தந்தருளுவாயாக! |
| **4066.** வேரியுமேணவ காழியொயே யேனைநிணேமட<br>ளோகரதே<br>தேரகளோடம ணேநினையே யேயொழிகாவண<br>மேயுரிவே. 10 | நறுமணமும், தெய்விக மணமும், பெருமையும், புதுமையும் கலந்து விளங்கும் சீகாழி என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருள்பவனே! துன்பங்களை நீக்கி அருள்பவனே. பேரருள் உடையவனே. அதனை அள்ளிக்கொள்ளல் அகத்தவத்தாராகிய சிவயோகிகளின் செய்கையே. புத்தர், சமணர்களின் மொழிகளை எண்ணுதலையும், நண்ணுதலையும் ஒழித்தருள்வாயாக! இப்புறச் சமயத்தார் பன்னெறிகளில் புகாமல் காத்தருளும் திறம் நின் திருவடிக்கே உரியதாகும். |
| **4067.** நேரகழாமித யாசழிதா யேனனியேனனி ளாயுழிகா<br>காழியுளானின யேனியே தாழிசயாதமி<br>ழாகரனே.<br>11 | நேர்மையை அகழ்ந்து எறிவதாகிய, நெஞ்சத்தில் நிலைத்து எவரையும் துன்புறுத்தும் காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் அழித்தருள வல்லவனே. உலகுக்கெல்லாம் தாயாம் தன்மையை ஏற்றருளுத்தக்கவன். ஒப்பில்லாத நீ ஒருவனே. நன்மை புரிந்தருளுவதில் உயர்ந்தவனே! நாங்கள் தளர்ந்த இடத்து எங்களைக் காத்தருள்வாயாக! என்று நற்றமிழுக்கு உறைவிடமாகவுள்ள திருஞானசம்பந்தப் பெருமான் சிவபெருமானைப் போற்றி அருளிய, பாடுவோர்களையும், கேட்போர்களையும் உள்ளம் குழையச் செய்யும் இத்திருப்பதிகத்தை ஓதவல்லவர்கட்கு எந்தக் குறைவும் உண்டாகாது. |

# புறநீர்மை

இது பாலையாழ் என்ற பெரும்பண்ணின் இரண்டாவது திறமான நோதிறத்தின் அகநிலைப்பண் 21 என்ற எண்ணுக்குரியது. இப்பண் காலைப்பண், அதிகாலை, பள்ளியுணர்த்தும் பண் இக்காலம் பூபாளம் என்று சொல்லப்படும். பழைய ஏட்டில் ஸ்ரீகண்டி என்று சொல்லப்பட்டுள்ளது. இதன்சுவை உவகையும் மருட்கையும் இதற்கு ஒரே கட்டளைதான் சொல்லப்பட்டுள்ளது. அப்பர் சுவாமிகள் பதிகம் இப்பண்ணில் இல்லை. மற்ற இருவர் பதிகங்களில் உள்ளது. சம்பந்தர் 3:118–123, சுந்தரர் 83–85 ஆக 9 பதிகங்கள். சம்பந்தர் திரு ஆலவாய்க் கோயிலில் சென்று மங்கையர்க்கரசியாரையும் குலச்சிறையாரையும் சிறப்பித்துப் பாடிய "மங்கையர்க்கரசி வளவர் கோன்பாவை" என்ற பதிகம் மிக்க பிரசித்திபெற்றது. சுந்தரரின் "அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி" நன்கு தெரிந்த பதிகம். அப்படியே "தொண்டாடித் தொழலும்".

இவையன்றி வேறுசில சிறப்புக்களும் இப்பண்ணுக்கு உரியன. திருவிசைப்பாவாகிய ஒன்பதாந் திருமுறையில் இப்பண்ணுக்கு மூன்று பதிகங்கள் உள்ளன. கருவூர்த்தேவர் பாடிய கோயில் திருக்களந்தை, ஆதித்தேசுரம் வேணாட்டடிகள் பாடிய கோயில்.

மற்றொன்று இதன் பெயர் பற்றியது. இதன் பெயர் நோதிறம் என்றே 21–ஆம் பண்ணுக்குச் சொல்லப்பட்டுள்ளது. இது மிகவும் பழமையான பண். சாலாபாணிபோல இதன் பெயரையும் ஏட்டில் படித்தவர்கள் நேர்திறம் என்று படித்திருக்கிறார்கள்.

இப்பண்ணின் பெயர் ஐந்து நூல்களில் வருகிறது. அவை காலமுறைப்படி பின்வருவன 1. சங்க நூலாகிய கலித்தொகை 2. சங்கநூலாகிய பரிபாடல் 3. முதல் பெருங்காப்பியமாகிய சிலப்பதிகாரம் 4. அடியார்க்குநல்லார் சிலப்பதிகாரத்துக்கு உரை எழுதுவதற்கு ஆதாரமான இலக்கண நூல்களுள் ஒன்றாய் மிகவும் சமீபகாலத்தில் (1973–இல்) அச்சாகி வெளிவந்த பஞ்சமரபு என்ற இசை இலக்கண நூல் 5. யாப்பருங்கல விருத்தியுரையில் காணப்படும் பெயர்.

### புறநீர்மைப் பண்ணின் இலக்கணம்

பூச்சீர் இரண்டோர், புறமாய் நிற்க
தொகையொரு புறமாய்த் தோன்றும் பூவொடு
யாத்துக் கோவை கொண்ட தனாலது புற
நீர்மைப் பண்ணென நிகழ்த்தப் பெற்றது

### பொருள்

இரண்டு பூச்சீர்கள் ஓர் புறத்தே நிற்க, இவை இரண்டையும் தன்னகத்துக் கொண்டு தோன்றும் பூச்சீர் ஒன்றினொடு பொருந்தி மாச்சீரினால் கோவை கொள்ளப்படுதலின் இது புறநீர்மைப் பண் என்றாகிறது. பூச்சீர் மூன்றும் யாழாகிறது. இவற்றைக் கோவையாகக் கோக்கும் மாச்சீர் யாப்பாகிறது. இதுவே புறநீர்மைப் பண்ணின் இலக்கணமாகிறது.

மூலதாரத்தில் தோன்றுகின்ற ஆவளி என்னும் வாசி (பிராணவாயு) இடகலை, பிங்கலை என்னும் பெயர் பெற்று உட்புறம் செல்லுதல், வெளியே வருதல் என்ற நிலைகளிலிருந்து யோகத்தால் மேம்பட்டு மூக்கின் மேலிடமாகிய சிரத்திற்குச் செல்லும் சுழிமுனை என்னும் நாடியில் ஒன்றி உயர்ந்த தன்மை (அமுதம் ஊறுதல்) அடைதலால் ஆவளி என்னும் பூவின் நிலை முந்நீர்மைத்தாகிறது.

இங்ஙனம் உயிரின் புறத்தே தோன்றி நிகழ்தலின் புறநீர்மை என்றும் பெயர் பெறுகிறது. இத்தகைய தன்மை அடைவைப் பண்ணில் பாடியுள்ளமையால் இது புறநீர்மைப் பண் என்று கொள்ளப் பெறுகிறது.

## 118. திருக்கழுமலம்

பண் : புறநீர்மை

பதிக எண் : 118

4068. மடன்மலி கொன்றை துன்றுவா ளெருக்கும்
வன்னியு மத்தமுஞ் சடைமேற்
படலொலி திரைகண் மோதிய கங்கைத்
தலைவனார் தம்மிடம் பகரில்
விடலொளி பரந்த வெண்டிரை முத்த
மிப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக்
கடலொலி யோத மோதவந் தலைக்குங்
கழுமல நகரென லாமே. 1

"கழுமல நகரெனலாமே" – பதிக மகுடம்

இதழ்கள் நிறைந்த கொன்றை மாலையும், நெருங்கிய ஒளியுடைய வெள்ளெருக்க மாலையும், வன்னி, ஊமத்தம் பூ மாலையும் அணிந்த சடையின்மேல், ஒலி அடங்கிய அலை மோதும்படியான கங்கைக்குத் தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம் எது என்றால், ஒலி மிகுந்த வெள்ளிய அலைகள் முத்துக்களையும், சிப்பிகளையும் அடித்துக் கொணர்ந்து ஒதுக்கும் கடலினொலி தன் வெள்ளப் பெருக்கைக் கரைமோதச் செய்யும் திருக்கழுமலநகர் எனக் கூறலாம்.

4069. மின்னிய வரவும் வெறிமலர் பலவும்
விரும்பிய திங்களுந் தங்கு
சென்னிய துடையான் றேவர்தம் பெருமான்
சேயிழை யொடுமுறை விடமாம்
பொன்னியன் மணியு முரிகரி மருப்புஞ்
சந்தமு முந்துவன் றிரைகள்
கன்னிய ராடக் கடலொலி மலியுங்
கழுமல நகரென லாமே. 2

மின்னும் பாம்பும், நறுமணம் கமழும் மலர்களும், இறைவனின் திருவடியைச் சரணடைந்த பிறைச்சந்திரனும் தங்கிய தலையுடையவர் சிவபெருமான். அவர் தேவர்கட்கெல்லாம் தலைவர். அப்பெருமான் செம்மையான ஆபரணமணிந்த உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இடம், பொன், மணி, யானையின் வளைந்த தந்தம், சந்தனக்கட்டை இவற்றை உந்தித் தள்ளுகின்ற வலிய அலைகளையுடையதும், கன்னிப் பெண்கள் கடற்கரையில் விளையாடுதலை யுடையதும், கடலொலி மிகுதலையுடையதுமான திருக்கழுமலநகர் எனலாம்.

4070. சீருறு தொண்டர் கொண்டடி போற்றச்
செழுமலர் புனலொடு தூபந்
தாருறு கொன்றை தம்முடி வைத்த
சைவனார் தங்கிட மெங்கும்
ஊருறு பதிக ளுலகுடன் பொங்கி
யொலிபுனல் கொளவுடன் மிதந்த
காருறு செம்மை நன்மையான் மிக்க
கழுமல நகரென லாமே. 3

பெருமை மிக்க சிவதொண்டர்கள் நறுமலரும், நீரும், தூபமுங் கொண்டு திருவடிகளைப் பூசிக்கும்படி, கொன்றை மாலையினைத் தமது திருமுடிமேல் வைத்தருளிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது பலவூர்களைத் தம்பாற் கொண்டுள்ள பதிகளை உலகுடன் கொள்ளும்படி கடல் பொங்கி எழுந்தபோது திருவருளால் தோணிபோல் மிதந்து மழையினாற் பெறும் நன்மைகள் குறைவறச் சிறந்துள்ள திருக்கழுமலநகர் எனலாம்.

| | |
|---|---|
| **4071.** மண்ணினா ரேத்த வானுளார் பரச<br>வந்தரத் தமரர்கள் போற்றப்<br>பண்ணினா ரெல்லாம் பலபல வேட<br>முடையவர் பயில்விட மெங்கும்<br>எண்ணினான் மிக்கா ரியல்பினா னிறைந்தா<br>ரேந்திழை யவரொடு மைந்தர்<br>கண்ணினா லின்பங் கண்டொளி பரக்குங்<br>கழுமல நகரென லாமே. 4 | மண்ணுலக மெய்யன்பர்கள் போற்றி வணங்கவும், வானத்திலுள்ள தேவர்கள் துதிக்கவும், பிரமன், திருமால் முதலியோர்கள் போற்றவும் விளங்கி, எல்லாவற்றையும் ஆக்கியருளியவரும், பலபல சிவமூர்த்தங் களாக விளங்குபவருமான சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, இறைவனின் திருவடி மறவா நினைவால் சிறந்த உள்ளம் உடையவர்களும், செவ்விய அணிகலன்கள் அணிந்துள்ள மகளிரும் அவரொடு நீங்காது ஒன்றித்து வாழும் ஆண்மை மிக்க ஆடவர்களும், காணுந்தோறும் இன்பம் நுகரத் திருவருள் ஒளியைப் பரப்புகின்ற திருக்கழுமலநகர் எனக் கூறலாம். |
| **4072.** சுருதியான் றலையும் நாமகண் மூக்குஞ்<br>சுடரவன் கரமுமுன் னியங்கு<br>பரிதியான் பல்லு மிறுத்தவர்க் கருளும்<br>பரமனார் பயின்றினி திருக்கை<br>விருதினான் மறையு மங்கமோ ராறும்<br>வேள்வியும் வேட்டவர் ஞானங்<br>கருதினா ருலகிற் கருத்துடை யார்சேர்<br>கழுமல நகரென லாமே. 5 | பிரமனது தலையையும், சரஸ்வதியின் மூக்கையும், தீக்கடவுளின் கையையும், காலம் காட்டி முன் செல்லும் சூரியனின் பல்லையும் இறுத்து, பின் உமாதேவி வேண்ட அவர்கட்கு அருளும் புரிந்த சிவபெருமான் பயின்று இனிதாக வீற்றிருந்தருளும் இடமாவது, வழிவழிக் கேட்கும் தொழிலாகப் பயின்று வரும் புகழுடைய நான்கு வேதங்களையும், ஆறு அங்கங்களையும் அறிந்து, அவற்றின்படி வேத வேள்விகளைச் செய்பவர்களும், ஞான வேட்கை உடையவர்களும், உலகில் பிறந்ததன் பெரும்பயனை அடைய விரும்பும் கருத்துடையவர்களும் வசிக்கின்ற திருக்கழுமலநகர் எனக் கூறலாம். |
| **4073.** புற்றில்வா ளரவு மாமையும் பூண்ட<br>புனிதனார் பனிமலர்க் கொன்றை<br>பற்றிவான் மதியஞ் சடையிடை வைத்த<br>படிறனார் பயின்றினி திருக்கை<br>செற்றுவன் றிரைக ளொன்றொடொன் றோடிச்<br>செயிர்த்துவண் சங்கொடு வங்கங்<br>கற்றுறை வரைகள் கரைக்குவந் துரைக்குங்<br>கழுமல நகரென லாமே. 6 | புற்றில் வாழுந் தன்மையுடைய ஒளிமிக்க பாம்பையும், ஆமையோட்டையும் ஆபரணமாகப் பூண்ட புனிதரும், குளிர்ச்சி பொருந்திய கொன்றை மலருடன், வானத்திலுள்ள சந்திரனையும் சடையில் வைத்த எம் உள்ளம் கவர் கள்வருமான சிவபெருமான் பயின்று இனிதாக வீற்றிருந்தருளும் இடம், வலிய அலைகள் ஒன்றோடொன்று மோதிப் பொரும் கடலானது வளமையான சங்குகளோடு, கப்பல்களையும் கொண்டு வந்து மலைகள் போலக் கரை வந்து சாரச் செய்யும் திருக்கழுமலநகர் எனக் கூறலாம். |

| பாடல் | விளக்கம் |
| --- | --- |
| **4074.** அலைபுனற் கங்கை தங்கிய சடையா<br>ரடனெடு மதிலொரு மூன்று<br>கொலையிடைச் செந்தீ வெந்தறக் கண்ட<br>குழகனார் கோயில தென்பர்<br>மலையின்மிக் குயர்ந்த மரக்கலஞ் சரக்கு<br>மற்றுமற் றிடையிடை யெங்குங்<br>கலைகளித் தேறிக் கானலில் வாழுங்<br>கழுமல நகரென லாமே. 7 | அலைகளோடு கூடிய கங்கையைத் தாங்கிய சடையை உடையவர் சிவபெருமான். நீண்ட மூன்று மதில்களும் கொலை நிகழ்வதாகிய போரினிடையே செந்தீயினால் வெந்தழியும்படி செய்தவர். இளமையும், அழகுமுடைய சிவபெருமான் ஆவார். அவர் வீற்றிருந்தருளும் கோயிலையுடைய திருத்தலமாவது, மலைகளை விட மிக்குயர்ந்த சரக்கு மரக்கலங்கள் கடற்கரையில் நிற்க, கடற்கரைச் சோலைகளில் மான்கள் மகிழ்ந்து ஓடி வாழ்தலுடைய திருக்கழுமலநகர் எனக் கூறலாம். |
| **4075.** ஒருக்கமுன் னினையாத் தக்கன்றன் வேள்வி<br>யுடைதர வுழறிய படையார்<br>அரக்கனை வரையா லாற்றலன் றழித்த<br>வழகனா ரமர்ந்துறை கோயில்<br>பரக்கும்வண் புகழார் பழியவை பார்த்துப்<br>பலபல வறங்களே பயிற்றிக்<br>கரக்குமா றறியா வண்மையார் வாழுங்<br>கழுமல நகரென லாமே. 8 | இறைவனை நினையாது முற்காலத்தில் தக்கன் செய்த யாகமாவது ஒருங்கே அழியும்படி கலக்கிய பூதப்படைகளை உடையவரும், அரக்கனான இராவணனது ஆற்றலை மலையைச் சற்றே கால்விரலால் ஊன்றி நெருக்குதலால் அழித்த அழகருமான சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் கோயிலுள்ள திருத்தலமாவது பரவுதலையுடைய மெய்ம்மையான புகழையுடையவரும், குற்றங்கள் வாராவண்ணம் நன்கு ஆராய்ந்து ஒல்லும் வகையான் ஓவாது அறம்புரியும் மிக்க பயிற்சியுடையாரும், கனவிலும் கரக்கும் எண்ணம் இல்லாத வள்ளன்மையுடையாரும் ஆகிய செந்நெறிச் செல்வர்கள் வாழும் கழுமலநகரெனக் கூறலாம். |
| **4076.** அருவரை பொறுத்த வாற்றலி னானு<br>மணிகிளர் தாமரை யானும்<br>இருவரு மேத்த வெரியுரு வான<br>விறைவனா ருறைவிடம் வினவில்<br>ஒருவரிவ் வுலகில் வாழ்கிலா வண்ண<br>மொலிபுனல் வெள்ளமுன் பரப்பக்<br>கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங்<br>கழுமல நகரென லாமே. 9 | கோவர்த்தன மலையைக் குடையாகத் தாங்கிய ஆற்றலுடைய திருமாலும், அழகிய செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனும் ஏத்தித் துதிக்கும்படியாகத் தீப்பிழம்பின் உருவாய் நின்ற சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடம், ஒருவரும் இவ்வுலகில் வாழ இயலா வண்ணம், பேரூழிக் காலத்தில் பெருவெள்ளம் பெருக்கெடுக்க, அப்பரப்பில் கருவரை போன்ற திருமால் கிடந்து அறிதுயில் கொள்ளும் கடலிடைத் திருத்தோணி போன்று மிதந்த சிறப்பு வாய்ந்த திருக்கழுமலநகர் எனக் கூறலாம். |

| | |
|---|---|
| 4077. உரிந்துய ருருவி லுடைதவிர்ந் தாரு<br>மத்துகில் போர்த்துழல் வாருந்<br>தெரிந்துபுன் மொழிகள் செப்பின கேளாச்<br>செம்மையார் நன்மையா லுறைவாங்<br>குருந்துயர் கோங்கு கொடிவிடு முல்லை<br>மல்லிகை சண்பகம் வேங்கை<br>கருந்தடங் கண்ணின் மங்கைமார் கொய்யுங்<br>கழுமல நகரென லாமே. 10 | உயர்ந்த தமது உடலின்றும் உடையினை நீக்கிய சமணர்களும், மிக்க ஆடையினை உடல் முழுவதும் போர்த்துத் திரியும் புத்தர்களும் ஆராய்ந்துணரும் அறிவிலாது ஏனைச் செந்நெறியாளர்களை இழிமொழிகளால் இகழ்ந்துரைப்பர். அப்புன்மொழிகளைப் 'புறம் கேளோம்' என்ற மறையின்படி ஒரு பொருளாகக் கொள்ளாத செம்மையாளர்க்கு நன்மை புரியும் சிவபெருமான் வீற்றிருந்தருளும் இடமாவது, குருந்து, கோங்கு, முல்லை, மல்லிகை, சண்பகம், வேங்கை ஆகிய மலர்களைக் கரிய அகன்ற கண்களையுடைய மங்கையர்கள் கொய்கின்ற திருக்கழுமலநகர் எனக் கூறலாம். |
| 4078. கானலங் கழனி யோதம்வந் துலவுங்<br>கழுமல நகருறை வார்மேல்<br>ஞானசம் பந்த னற்றமிழ் மாலை<br>நன்மையா லுரைசெய்து நவில்வார்<br>ஊனசம் பந்தத் துறுபிணி நீங்கி<br>யுள்ளமு மொருவழிக் கொண்டு<br>வானிடை வாழ்வர் மண்மிசைப் பிறவார்<br>மற்றிதற் காணையும் நமதே. 11 | கடற்கரைச் சோலைகளை அடுத்த வயல்களில் கடல்நீர் வந்து பாய்தலையுடைய திருக்கழுமலம் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் இறைவனைப் போற்றிப் பாடிய ஞானசம்பந்தனுடைய நல்ல தமிழ்மாலைகளைப் பத்தியோடு பொருள் உணர்ந்து பாடித் துதிப்பவர்கள் உடலுடன் தொடர்பு கொண்டதான பிறவிப் பிணி நீங்கி, உள்ளம் ஒருமைப்பாட்டினையுடைய சிவலோகத்தில் வாழ்வர். மீண்டும் நிலவுலகில் வந்து பிறவார். இதற்கு ஆணையும் நம்முடையதே ஆகும். |

## 119. திருவீழிமிழலை

பண் : புறநீர்மை

பதிக எண் : 119

| | |
|---|---|
| 4079. புள்ளித்தோ லாடை பூண்பது நாகம்<br>பூசுசாந் தம்பொடி நீறு<br>கொள்ளித்தீ விளக்குக் கூளிகள் கூட்டங்<br>காளியைக் குணஞ்செய்கூத் துடையோன்<br>அள்ளற்கா ராமை யகடுவான் மதிய<br>மேய்க்கமுட் டாழைக ளானை<br>வெள்ளைக் கொம்பீனும் விரிபொழில் வீழி<br>மிழலையா னெனவினை கெடுமே. 1 | சிவபெருமான் புலித்தோல் ஆடை உடுத்தவர் பாம்பை ஆபரணமாக அணிந்தவர். நறுமணம் கமழும் திருநீற்றைப் பொடியாகப் பூசியவர். சுடுகாட்டில் கொள்ளி நெருப்பை விளக்காகக் கொண்டு பூதகணங்கள் சூழக் காளியுடன் நடனம் புரிந்தவர். சேற்றில் விளங்கும் ஆமையின் வயிறு போன்ற சந்திரனும், யானையின் கொம்பு போன்ற தாழையும் விளங்கும் சோலைகளையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந் தருளுகின்றார். அப்பெருமானின் திருநாமத்தை ஓத வினையாவும் கெடும். |

4080. இசைந்தவா றடியா ரிடுதுவல் வானோ
ரிழுகுசந் தனத்திளங் கமலப்
பசும்பொன்வா சிகைமேற் பரப்புவாய் கரப்பாய்
பத்திசெய் யாதவர் பக்கல்
அசும்புபாய் கழனி யலர்கயன் முதலோ
டடுத்தரிந் தெடுத்தவான் சும்மை
விசும்புதூர்ப் பனபோல் விம்மிய வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 2

அடியவர்கள் பக்திப் பெருக்குடன் மலர்தூவிப் போற்றவும், தேவர்கள் நறுமணம் கமழும் பொற்றாமரை மாலைகளைச் சாத்தவும் அவர்கட்கு அருள்வாய். பக்தி செய்யாதவர்கட்கு ஒளிந்திருப்பாய். ஊற்று நிர் பாயும் கழனிகளில் மலர்களும், கயல்களும் திகழ, அரிந்த கதிர்களிலிருந்து தூற்றும் நெல்லானது வானத்திலிருந்து உதிர்வன போன்று வளமுடன் விளங்குவது திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். அங்கு வீற்றிருந்தருளும் சிவபெருமானின் திருநாமத்தை ஓத வினை யாவும் நீங்கும்.

4081. நிருத்தன்ஆ றங்கன் நீற்றன்நான் மறையன்
நீலமார் மிடற்றன்நெற் றிக்கண்
ஒருத்தன்மற் றெல்லா வுயிர்கட்கு முயிரா
யுளனிலன் கேடிலி யுமைகோன்
திருத்தமாய் நாளு மாடுநீர்ப் பொய்கை
சிறியவ ரறிவினின் மிக்க
விருத்தரை யடிவீழ்ந் திடம்புகும் வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 3

சிவபெருமான் திருநடனம் செய்பவர். வேதத்தின் அங்கமாக விளங்குபவர். திருநீறு பூசியுள்ளவர். நால்வேதங்களை அருளிச்செய்து அவ்வேதங்களின் பொருளாய் விளங்குபவர். நீலகண்டத்தர். நெற்றிக் கண்ணுடையவர். ஒப்பற்றவர். எல்லா உயிர்கட்கும் உயிராய் விளங்குபவர். பதிஞானத்தால் உணர்பவர்க்கு உளராவார். பசு ஞானத்தாலும், பாச ஞானத்தாலும் அறிய முற்படுபவர்கட்கு இலராவார். உயிர்களின் தீமையைப் போக்குபவர். உமாதேவியின் கணவர். புனித தீர்த்தத்தால் நாள்தோறும் அபிடேபிக்கப் படுபவர். வயதில் சிறியோர் அறிவுசால் சான்றோரின் திருப்பாதத்தை அட்டாங்க நமஸ்காரமாக வணங்கிப் போற்றச் சீலம் மிக்கவர்கள் வாழும் திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளுபவர். அவருடைய திருநாமத்தை ஓத வினை நீங்கும்.

4082. தாங்கருங் காலந் தவிரவந்திருவர்
தம்மொடுங் கூடினா ரங்கம்
பாங்கினாற் றரித்துப் பண்டுபோ லெல்லாம்
பண்ணிய கண்ணுதற் பரமர்
தேங்கொள்பூங் கமுகு தெங்கிளங் கொடிமாச்
செண்பகம் வண்பலா விலுப்பை
வேங்கைபூ மகிழால் வெயிற்புகா வீழி
மிழலையா னெனவினை கெடுமே. 4

மகாசங்கார காலத்தில் திருமால், பிரமன் ஆகிய இருவரின் எலும்புகளை அழகுற அணிந்து, பின் முன்பு போல் மீண்டும் எல்லாம் படைத்துத் தொழிலாற்றும் நெற்றிக் கண்ணுடையவர் சிவபெருமான். அவர் கமுகு, தென்னை, மா, செண்பகம், பலா, இலுப்பை, வேங்கை, மகிழ், ஆல் முதலியன சேர்ந்த வெயில்புகாத சோலைகள் சூழ்ந்த திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளுவார். அப்பெருமானுடைய திருநாமத்தை ஓத வினை யாவும் நீங்கும்.

| | |
|---|---|
| **4083.** கூசுமா மயானங் கோயில்வா யிற்கட்<br>குடவயிற் றனசில பூதம்<br>பூசுமா சாந்தம் பூதிமெல் லோதி<br>பாதிநற் பொங்கர வரையோன்<br>வாசமாம் புன்னை மௌவல்செங் கழுநீர்<br>மலரணைந் தெழுந்தவான் தென்றல்<br>வீசுமாம் பொழிற்றேன் றுவலைசேர் வீழி<br>மிழலையா னெனவினை கெடுமே. 5 | எவரும் அடைவதற்குக் கூச்சப்படுகின்ற மயானத்தில் பெரிய வயிற்றையுடைய பூதங்கள் சூழ நறுமணம் கமழும் சாந்து போலத் திருநீறு பூசிப், பார்வதிபாகராய், ஆடுகின்ற பாம்பை இடுப்பில் அணிந்து விளங்குபவர். சிவபெருமான் அவர் நறுமணம் கமழும் புன்னை, முல்லை, செங்கழுநீர் மலர் ஆகிய மணங்கமழும் மலர்களில் கலந்து தென்றல் வீசும் சோலைகளிலிருந்து தேன்துளிகள் சிதறும் திருவீழிமிழலையில் வீற்றிருந் தருளுவார். அப்பெருமானின் திருநாமத்தை ஓத வினையாவும் நீங்கும். |
| **4084.** பாதியோர் மாதர் மாலுமோர் பாகர்<br>பங்கயத் தயனுமோர் பாலர்<br>ஆதியாய் நடுவா யந்தமாய் நின்ற<br>வடிகளா ரமரர்கட் கமரர்<br>போதுசேர் சென்னிப் புரூரவாப் பணிசெய்<br>பூசுரர் பூமக னனைய<br>வேதியர் வேதத் தொலியறா வீழி<br>மிழலையா னெனவினை கெடுமே. 6 | இறைவன் உமாதேவியைத் திருமேனியில் ஒருபாகமாகக் கொண்டு விளங்குபவர். திருமாலையும், பிரமனையும் தம்பாகமாகக் கொண்டு ஏகபாத திரிமூர்த்தியாகத் திகழ்பவர். அவர் உலகத் தோற்றத்திற்கும், நிலை பெறுதலுக்கும், ஒடுக்கத்திற்கும் நிமித்த காரணராய் விளங்கும் தலைவர். தேவர்கட்குக் கடவுள். மலரணிந்த தலையையுடைய புரூரவச் சக்கரவர்த்தியால் திருப்பணி செய்யப் பெற்றுப் பிரமனையொத்த வேதியர்கள் ஓதுகின்ற வேத ஒலி இடையறாது ஒலிக்கின்ற திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் வீற்றிருந் தருளுகின்றார். அப்பெருமானின் திருநாமத்தை ஓத வினை யாவும் நீங்கும். |
| **4085.** தன்றவம் பெரிய சலந்தர னுடலந்<br>தடிந்தசக் கரமெனக் கருளென்<br>றன்றரி வழிபட் டிழிச்சிய விமானத்<br>திறையவன் பிறையணி சடையன்<br>நின்றநாள் காலை யிருந்தநாண் மாலை<br>கிடந்த**மண் மேல்வரு கலியை**<br>**வென்றவே தியர்கள்** விழாவறா வீழி<br>மிழலையா னெனவினை கெடுமே. 7<br><br>மூலவர் கருவறை விமானம் விண்ணிழி விமானம் எனப்படுவதற்கு அகச் சான்றான பாடல். இவ்விமானம் விண்ணிலிருந்து திருமால் கொண்டு வந்து இறக்கியது. திருமுறை ஓதுவதற்கு திருக்கை கொட்டி மண்டபம் கட்டப் பெற்றதாக சான்று உள்ளது. | சிவபெருமான் திருவருளால் தோன்றிய சக்கரப்படை சலந்தராசுரனை அழித்ததைக் கண்ட திருமால், அத்தகைய சக்கரப்படையைத் தனக்கு அருள வேண்டித் தேவலோகத் திலிருந்து விமானத்தைக் கொண்டு வந்து சிவனைப் பூசித்தார். சிவபெருமான் சந்திரனை அணிந்த சடையையுடையவர். அவர் வீற்றிருந்தருளும் இடமாவது எல்லாக் காலத்திலும் மண்ணுலகத்தின் சேர்க்கையால் உண்டாகும் துன்பத்தை வென்ற அந்தணர்கள் வாழ்கின்ற, திருவிழாக்கள் நீங்காத திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். அத்திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் இறைவனுடைய திருநாமத்தை ஓத, வினை யாவும் நீங்கும். |

| | |
|---|---|
| **4086.** கடுத்தவா ளரக்கன் கைலையன் றெடுத்த<br>கரமுரஞ் சிரநெரிந் தலற<br>அடுத்ததோர் விரலா லஞ்செழுத் துரைக்க<br>வருளினன் றடமிகு நெடுவாள்<br>படித்தநான் மறைகேட் டிருந்தபைங் கிளிகள்<br>பதங்களை யோதப்பா டிருந்த<br>விடைக்குலம் பயிற்றும் விரிபொழில் வீழி<br>மிழலையா னெனவினை கெடுமே. 8 | கோபமுடைய, வாளேந்தியுள்ள அரக்கனான இராவணன் முன்பு கயிலை மலையைப் பெயர்த்தெடுக்க, அவன் கரமும், சிரமும் நெரிபட்டு அலறும்படி தம் திருப்பாதவிரலை ஊன்றியவர் சிவபெருமான். பின் இராவணன் தன் தவறுணர்ந்து அஞ்செழுத்தை யாழில் மீட்ட நீண்ட வாளை அவனுக்குக் கொடுத் தருளினார். அத்தியயனம் செய்த நான்மறை களைக் கற்றுணர்ந்த வேதியர்கள் ஓதக்கேட்ட கிளிகள் அப்பதங்களை ஓத, அருகிலிருந்து கேட்ட பசுக் கூட்டங்களும் அவற்றைக் கேட்கத் தம் செவிகளைப் பழக்கும், விரிந்த சோலைகளையுடைய திருவீழிமிழலை என்னும் திருத்தலமாகும். அங்கு வீற்றிருந்தருளும் இறைவனின் திருநாமத்தை ஓத, வினையாவும் கெடும். விடைக்குலம் – வேதம் பயிலும் சிறுவர் குழாமுமாம். |
| **4087.** அளவிட லுற்ற வயனொடு மாலு<br>மண்டமண் கெண்டியுங் காணா<br>முளையெரி யாய மூர்த்தியைத் தீர்த்த<br>முக்கணெம் முதல்வனை முத்தைத்<br>தளையவிழ் கமலத் தவிசின்மே லன்னந்<br>தன்னிளம் பெடையொடும் புல்கி<br>விளைகதிர்க் கவரி வீசவீற் றிருக்கு<br>மிழலையா னெனவினை கெடுமே. 9 | பிரமனும், திருமாலும் முடியையும், அடியையும் தேட முற்பட்டு, அண்டங்கட்கு மேலெல்லாம் பறந்து சென்றும், பூமி மண்ணை இடந்து கீழே பாதாளலோகம் முழுவதும் சென்றும் காண முடியாவண்ணம் நெருப்புப் பிழம்பாய் விளங்கியவர் முக்கண் உடைய முதல்வரான சிவபெருமான். முத்துத் தரும் இதழ் விரிந்த தாமரைச் சிம்மாசனத்தில் அன்னப்பறவை யானது தனது பெடையுடன் இருக்க, நெற்கதிர்கள் கவரிவீசுவதைப் போன்று விளங்கும் வயல்களை உடைய திருவீழிமிழலையில் வீற்றிருந்தருளும் பெருமானுடைய திருநாமத்தை ஓத வினை தீரும். |
| **4088.** கஞ்சிப்போ துடையார் கையிற்கோ சாரக்<br>கலதிகள் கட்டுரை விட்டு<br>அஞ்சித்தே விரிய வெழுந்தநஞ் சதனை<br>யுண்டம ரர்க்கமு தருளி<br>இஞ்சிக்கே கதலிக் கனிவிழக் கமுகின்<br>குலையொடும் பழம்விழத் தெங்கின்<br>மிஞ்சுக்கே மஞ்சு சேர்பொழில் வீழி<br>மிழலையா னெவினை கெடுமே. 10 | கஞ்சியைக் கையில் வாங்கி உண்பவர்களும், ஆடையணியாத் துறவிகளுமான சமணர்கள், உரைக்கும் மொழிகளை ஏற்க வேண்டா. தேவர்கள் அஞ்சும்படி எழுந்த நஞ்சைத் தாம் உண்டு அவர்கட்கு அமுதம் அருளியவர் சிவபெருமான். உயர்ந்த கமுகின் பழக்குலை விழ, அதனால் வாழையின் கனிகள் மதில்மேல் உதிரும். மிக உயர்ந்த தென்னை மரங்களின் உச்சியில் மேகம் படியும். இத்தகைய வளம் பொருந்திய சோலைகள் சூழ்ந்த திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். அப்பெருமான் திருநாமத்தை ஓத வினையாவும் நீங்கும். |

4089. வேந்தர்வந் திறைஞ்ச வேதியர் வீழி
மிழலையுள் விண்ணிழி விமானத்
தேய்ந்ததன் **றேவி யோடுறை கின்ற**
**வீசனை** யெம்பெரு மானைத்
தோய்ந்தநீர்த் தோணி புரத்துறை மறையோன்
றூமொழி ஞானசம் பந்தன்
வாய்ந்தபா மாலை வாய்நவில் வாரை
வானவர் வழிபடு வாரே. 11

இறைவன் திருமணக் கோலத்தோடு வீற்றிருக்கும் தன்மை

இந்திரன் முதலான தேவர்கள் வந்து வழிபட, வேதங்களைக் கற்ற அந்தணர்கள் வாழ்கின்ற திருவீழிமிழலை என்னும் திருத்தலத்தில் விண்ணிழி விமானத்தில் உமாதேவியோடு வீற்றிருந்தருளும் இறைவனான எங்கள் சிவபெருமானை, நீர்வளம் மிகுந்த தோணிபுரத்தில் அவதரித்த மறைவல்ல தூயமொழி பேசும் ஞானசம்பந்தன், போற்றி உரைத்த இத்திருப்பதிகத்தை ஓத வல்லவர்கள் வானவர்களால் வணங்கப்படுவார்கள்.

## 120. திருஆலவாய்

பண் : புறநீர்மை

பதிக எண் : 120

4090. மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகன்நால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த
ஆலவா யாவது மிதுவே. 1

இப்பதிகத்தின் முதல் பாடலில் மங்கையர்க் கரசியாரைப் பாடுகிறார். அடுத்த பாடலில் குலச் சிறையாரைப் பாடுவார். இவ்வாறாக ஒரு பாடல் அரசியாருக்கும் அடுத்த பாடல் அமைச்சருக்குமென்று (5+5) பாடல்களைப் பாடிவிட்டு நிறைவும் பாடலில் இருவரையும் வைத்துப் பாடுகிறார். திருஞானசம்பந்தர் பூமியில் பிறந்த இருவருக்கு இவ்வாறாக நிகழ்காலத்தில் ஒரு பதிகமே ஒதுக்கவில்லை.

மங்கையர்க்கரசியார் சோழ மன்னரின் புதல்வி. கைகளில் வரிகளையுடைய வளையல்களை அணிந்தவர். பெண்மைக்குரிய மடம் என்னும் பண்புக்குரிய பெருமையுடையவர். தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளுக்கு ஒப்பானவர். பாண்டிய மன்னனின் பட்டத்தரசி. சிவத்தொண்டு செய்து நாள்தோறும் சிவபெருமானைப் போற்றி வழிபடும் தன்மையுடையவர். அச்சிவபெருமான் ஓங்கி எரியும் நெருப்புப் போன்று சிவந்த வண்ணமுடைய தூய உருவினர். உயிர்கட்கெல்லாம் தலைவர். நான்கு வேதங்களையும், அவற்றின் பொருள்களையும் அருளிச் செய்தவர். அப்பெருமான் அங்கயற் கண்ணி உடனாக வீற்றிருந்தருளும் திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவேயாகும்.

4091. வெற்றவே யடியா ரடிமிசை வீழும்
விருப்பினன் வெள்ளைநீ றணியும்
கொற்றவன் றனக்கு மந்திரி யாய
குலச்சிறை குலாவிநின் றேத்தும்
ஒற்றைவெள் விடைய னும்பரார் தலைவ
னுலகினி லியற்கையை யொழித்திட்
**டற்றவர்க் கற்ற சிவனுறை கின்ற**
**வாலவா யாவது மிதுவே.** 2

பற்றற்ற உள்ளத்தோடு, சிவனடியார்களைக் காணும்போது கீழே விழுந்து அவர் திருவடிகளை வணங்கும் பக்தியுடையவரும், திருவெண்ணீறு திருஞானசம்பந்தரால் பூசப்பெறும் புண்ணியப் பேறுடையவனாகிய பாண்டிய மன்னனுக்கு அமைச்சருமாகிய குலச்சிறை நாயனார் மகிழ்வோடு வணங்கித் துதிக்கும் சிவபெருமான் ஒப்பற்ற வெண்ணிற இடபத்தை வாகனமாக உடையவர். தேவர்களின் தலைவர். உலகியல்புகளை வெறுத்து அகப்பற்று, புறப்பற்று ஆகியவற்றைக் கைவிட்டுத் தம்மையே கருதும் அன்பர்க்கு அன்பராய் விளங்குபவர். அப்பெருமான் வீற்றிருந்தருளும் திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவேயாகும்.

| | |
|---|---|
| **4092.** செந்துவர் வாயாள் சேலன கண்ணாள்<br>சிவன்றிரு நீற்றினை வளர்க்கும்<br>பந்தணை விரலாள் பாண்டிமா தேவி<br>பணிசெயப் பாரிட நிலவும்<br>சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந்<br>தண்ணெருக் கம்மலர் வன்னி<br>அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ண<br>லாலவா யாவது மிதுவே. 3 | மங்கையர்க்கரசியார் சிவந்த பவளம் போன்ற வாயையுடையவர். சேல் மீன் போன்ற கண்களை உடையவர். சிவபெருமானது திருநீற்றின் பெருமையை வளர்ப்பவர். விரல்நுனி பந்து போன்ற திரட்சியுடைய பாண்டிமா தேவியார் சிவத்தொண்டு செய்ய, உலகில் சிறந்த நகராக விளங்குவதும், அழகிய முத்துக்கள், பாம்பு, கங்கை, ஊமத்தை, குளிர்ச்சி பொருந்திய எருக்க மலர், வன்னி மலர், மாலைநேரத்தில் தோன்றும் பிறைச்சந்திரன் இவற்றை சடைமுடியில் அணிந்துள்ள தலைவரான சிவபெருமான் வீற்றிருந்தருளுவதும் ஆகிய திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவேயாகும். |
| **4093.** கணங்களாய் வரினுந் தமியராய் வரினு<br>மடியவர் தங்களைக் கண்டால்<br>குணங்கொடு பணியுங் குலச்சிறை குலாவுங்<br>கோபுரஞ் சூழ்மணிக் கோயில்<br>மணங்கமழ் கொன்றை வாளரா மதியம்<br>வன்னிவன் கூவிள மாலை<br>அணங்குவீற் றிருந்த சடைமுடி யண்ண<br>லாலவா யாவது மிதுவே. 4 | சிவனடியார்கள் கூட்டமாக வந்தாலும், தனியராக வந்தாலும், அவர்களைக் காணும் போது அவர்களின் குணச்சிறப்புக்களைக் கூறி, வழிபடும் தன்மையுடைய குலச்சிறையார் வழிபாடு செய்யும், கோபுரங்கள் சூழ்ந்த அழகிய கோயிலைக் கொண்டதும், மணம் கமழும் கொன்றை, பாம்பு, சந்திரன், வன்னி, வில்வம், கங்கை இவை விளங்கும் சடைமுடியுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுவதும் ஆகிய திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவே யாகும். |
| **4094.** செய்யதா மரைமே லன்னமே அனைய<br>சேயிழை திருநுதற் செல்வி<br>பையரா வல்குற் பாண்டிமா தேவி<br>நாடொறும் பணிந்தினி தேத்த<br>வெய்யவேற் சூலம் பாசமங் குசமான்<br>விரிகதிர் மழுவுடன் றரித்த<br>ஐயனா ருமையோ டின்புறு கின்ற<br>வாலவா யாவது மிதுவே. 5 | சிவந்த தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் இலக்குமி போன்று அழகுடையவரும், சிறந்த ஆபரணங்களை அணிந்துள்ளவரும், அழகிய நெற்றியையும், பாம்பின் படம் போன்ற அல்குலையும் உடையவருமான பாண்டிமாதேவியாராகிய மங்கையர்க்கரசியார் நாள்தோறும் மனமகிழ்வோடு வழிபாடு செய்து போற்ற, வேல், சூலம், பாசம், அங்குசம், மான், மழு ஆகியவற்றைத் தாங்கியுள்ள சிவபெருமான் உமாதேவியோடு இன்புற்று வீற்றிருந்தருளுகின்ற திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவே. |

| | |
|---|---|
| **4095.** நலமிக ராக நலமதுண் டாக<br>நாடவர் நாடறி கின்ற<br>குலமில ராகக் குலமதுண் டாகத்<br>தவம்பணி குலச்சிறை பரவும்<br>கலைமலி கரத்தன் மூவிலை வேலன்<br>கரியுரி மூடிய கண்டன்<br>அலைமலி புனல்சேர் சடைமுடி யண்ண<br>லாலவா யாவது மிதுவே. 6 | நல்ல குணங்களை உடையவராயினும், அவை இல்லாதவராயினும், எந்த நாட்டவராயினும், நாடறிந்த உயர்குடியிற் பிறந்தவராயினும், பிறவாதாராயினும் அடியவர்களைக் காணும் போது அவர்களை வணங்கி வழிபடுதலையே தவமாகக் கொண்டவர் குலச்சிறையார். அத்தகைய குலச்சிறையார் வழிபடுகின்ற, மான் ஏந்திய கையினரும், மூவிலைச் சூலத்தவரும், வேலரும், யானைத் தோலைப் போர்த்த நீலகண்டரும், கங்கையைத் தாங்கிய சடைமுடியை உடையவருமான சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவே. |
| **4096.** முத்தின்றாழ் வடமுஞ் சந்தனக் குழம்பு<br>நீறுந்தன் மார்பினின் முயங்கப்<br>பத்தியார் கின்ற பாண்டிமா தேவி<br>பாங்கொடு பணிசெய நின்ற<br>சுத்தமார் பளிங்கின் பெருமலை யுடனே<br>சுடர்மர கதமடுத் தாற்போல்<br>அத்தனா ருமையோ டின்புறு கின்ற<br>வாலவா யாவது மிதுவே. 7 | முத்துமாலையும், சந்தனக் குழம்பும், திருநீறும் தம் மார்பில் விளங்கப் பக்தியோடு பாண்டிமாதேவியாரான மங்கையர்க்கரசியார் வழிபடுகின்ற, தூய பளிங்குமலை போன்ற சிவபெருமானும், சுடர்விடு மரகதக் கொடி போன்ற உமாதேவியும் மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருஆலவாய் இதுவே. |
| **4097.** நாவணங் கியல்பா மஞ்செழுத் தோதி<br>நல்லராய் நல்லியல் பாகும்<br>கோவணம் பூதி சாதனங் கண்டாற்<br>றொழுதெழு குலச்சிறை போற்ற<br>ஏவணங் கியல்பா மிராவணன் றிண்டோ<br>ளிருபது நெரிதர வூன்றி<br>ஆவணங் கொண்ட சடைமுடி யண்ண<br>லாலவா யாவது மிதுவே. 8 | நாவிற்கு அழகு செய்யும் இயல்பினதாகிய திருவைந்தெழுத்தை ஓதி, நல்லவராய், நல்லியல்புகளை அளிக்கும் கோவணம், விபூதி, உருத்திராக்கம் முதலிய சிவ சின்னங்கள் அணிந்தவர்களைக் கண்டால் வணங்கி மகிழ்பவர் குலச்சிறை நாயனார். அவர் வழிபாடு செய்கின்ற, பகைவரது அம்புகள் பணிந்து அப்பாற்செல்லும் பெருவலிமை படைத்த இராவணனின் இருபது தோள்களும் நெரியுமாறு தம் திருப்பாதவிரலை ஊன்றிப் பின் அவனைச் சிவபக்தனாகும்படி செய்தருளிய சடைமுடியுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவே. |

| | |
|---|---|
| 4098. மண்ணெலா நிகழ மன்னனாய் மன்னு<br>மணிமுடிச் சோழன்றன் மகளாம்<br>பண்ணினேர் மொழியாள் பாண்டிமா தேவி<br>பாங்கினாற் பணிசெய்து பரவ<br>விண்ணலா ரிருவர் கீழொடு மேலு<br>மளப்பரி தாம்வகை நின்ற<br>அண்ணலா ருமையோ டின்புறு கின்ற<br>வாலவா யாவது மிதுவே. 9 | உலகம் முழுவதும் தனது செங்கோல் ஆட்சி நிகழ் மன்னனாய் விளங்கிய மணிமுடிச் சோழனின் மகளார், மங்கையர்க்கரசியார், பண்ணிசை போன்ற மொழியுடையவர். பாண்டிய மன்னனின் பட்டத்தரசியார். அத்தேவியார் அன்போடு வழிபாடு செய்து போற்றுகின்ற, விண்ணிலுள்ள திருமாலும், பிரமனும் கீழும் மேலுமாய்ச் சென்று இறைவனின் அடிமுடி தேட முயன்று காண முடியாவண்ணம் அனற்பிழம்பாய் நின்ற சிவபெருமான் உமாதேவியோடு மகிழ்ந்து வீற்றிருந்தருளும் திருஆலவாய் என்னும் திருத்தலம் இதுவே. |
| 4099. தொண்டரா யுள்ளார் திசைதிசை தோறுந்<br>தொழுதுதன் குணத்தினைக் குலாவக்<br>கண்டுநா டோறு மின்புறு கின்ற<br>குலச்சிறை கருதி நின்றேத்தக்<br>குண்டரா யுள்ளார் சாக்கியர் தங்கள்<br>குறியின்க ணெறியிடை வாரா<br>அண்டநா யகன்றா னமர்ந்துவீற் றிருந்த<br>வாலவா யாவது மிதுவே. 10 | சிவத்தொண்டர்கள் எல்லாத் திசைகளிலும் சிவபெருமானைத் தொழுது, அவர் அருட்குணத்தைப் போற்றி, அருட்செயல்களை மகிழ்ந்து கூறக்கேட்டு இன்புறும் தன்மையுடையவர் குலச்சிறையார். அவர் பக்தியுடன் வழிபடுகின்ற, புத்த, சமணத்தைப் பின்பற்றுபவர் கொள்ளும் குறியின்கண் அடங்காத நெறியுடைய, இவ்வண்டத்துக் கெல்லாம் நாயகனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருத்தலம் இதுவேயாகும். |
| 4100. பன்னலம் புணரும் பாண்டிமாதேவி<br>குலச்சிறை யெனுமிவர் பணியும்<br>அந்நலம் பெறுசீ ராலவா யீசன்<br>றிருவடி யாங்கவை போற்றிக்<br>கன்னலம் பெரிய காழியுண் ஞான<br>சம்பந்தன் செந்தமி ழிவைகொண்<br>டின்னலம் பாட வல்லவ ரிமையோ<br>ரேத்தவீற் றிருப்பவ ரினிதே. 11 | பலவகைச் செல்வ நலன்களும் வாய்க்கப் பெற்ற பாண்டிமா தேவியாராகிய மங்கையர்க் கரசியாரும், குலச்சிறையார் என்னும் மந்திரியாரும் வழிபட்டுப் போற்ற அவ்விருவர் பணிகளையும் ஏற்றருளும் சிறப்புடைய திருஆலவாய் இறைவன் திருவடிகளைப் போற்றி, கருப்பங் கழனிகளையுடைய சீகாழிப் பதியில் அவதரித்த ஞானசம்பந்தர் அருளிய செந்தமிழ்ப் பாமாலையாகிய இத்திருப் பதிகத்தை இன்னிசையோடு ஓதவல்லவர்கள் தேவர்கள் வணங்கச் சிவலோகத்தில் வீற்றிருப்பர். |

## 121. திருப்பந்தணைநல்லூர்

பண் : புறநீர்மை | பதிக எண் : 121

4101. இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை
யிவைசொல்லி யுலகெழுந் தேத்தக்
கடறினா ராவர் காற்றுளா ராவர்
காதலித் துறைதரு கோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம்போய்க்
கோவணங் கொண்டுகூத் தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. 1

திருப்பந்தணைநல்லூர் என்ற திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பசுபதியாராகிய சிவபெருமான் காலனை உதைத்து அழித்தவர். அசுரர்களின் முப்புரங்கள் பொடியாகும்படி எரித்தவர், என்பன போன்ற புகழ்மொழிகளாகிய இவற்றைச் சொல்லி உலகத்தவர் மிகவும் துதிக்கும்படியாகக் காட்டில் உள்ளவராவர். காற்றில் எங்கும் கலந்துள்ளார். உறுதிப்பாடுடையவர். எதனாலும் குறைவில்லாதவர். கோவணம் தரித்துக் கூத்தாடும் மனத்தினை உடையவரும் ஆவார்.

4102. கழியுளா ரெனவுங் கடலுளா ரெனவுங்
காட்டுளார் நாட்டுளா ரெனவும்
வழியுளா ரெனவு மலையுளா ரெனவு
மண்ணுளார் விண்ணுளா ரெனவும்
சுழியுளா ரெனவுஞ் சுவடுதா மறியார்
தொண்டர்வாய் வந்தன சொல்லும்
பழியுளார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. 2

இறைவன் கடற்கழியில் உள்ளார். கடலிலே உள்ளார். காடுகளில் உள்ளார். நாடுகளில் உள்ளார். விண்ணுலகத்திலே உள்ளார். நீர்ச்சுழிகளில் உள்ளார். இவ்வாறு அவர் எல்லா இடத்திலும் இருப்பவர் என்று சொல்லப் பெற்றாலும், அவ்வாறு இருக்கும் அடையாளம் பிறர் எவராலும் அறியப்படாத தன்மையர் ஆவார். இவ்வாறு தொண்டர்களின் போற்றுதலுக்கும், வணக்கத்திற்குமுரிய சிவபெருமான், திருப்பந்தணைநல்லூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பசுபதியார் ஆவார்.

4103. காட்டினா ரெனவு நாட்டினா ரெனவுங்
கடுந்தொழிற் காலனைக் காலால்
வீட்டினா ரெனவுஞ் சாந்த வெண்ணீறு
பூசியோர் வெண்மதி சடைமேல்
சூட்டினா ரெனவுஞ் சுவடுதா மறியார்
சொல்லுள சொல்லுநால் வேதப்
பாட்டினார் போலும் பந்தணை நல்லூர்
நின்றவெம் பசுபதி யாரே. 3

இறைவர் காட்டில் வசிப்பவர். நாட்டில் உள்ளவர். கொடுந்தொழில் செய்யும் இயமனைக் காலால் உதைத்தவர். நறுமணம் கமழும் திருவெண்ணீற்றைப் பூசியுள்ளவர். வெண்ணிறப் பிறைச்சந்திரனைச் சடைமேல் அணிந்துள்ளவர். இவ்வாறு எத்தனை புகழ்ச் சொற்கள் உண்டோ அத்தனையும் சொல்லப் பெற்ற நால்வேதங்களாகிய பாட்டின் பொருளானவர். அப்படித் தாம் எல்லாமாய் இருக்கின்ற அடையாளம் பிறரால் அறியப்படாத தன்மையர்.

| | | |
|---|---|---|
| 4104. | முருகினார் பொழில்சூ ழுலகினா ரேத்த<br>மொய்த்தபல் கணங்களின் துயர்கண்<br>டுருகினா ராகி யுறுதிபோந் துள்ள<br>மொண்மையா லொளிதிகழ் மேனி<br>கருகினா ரெல்லாங் கைதொழு தேத்தக்<br>கடலுணஞ் சமுதமா வாங்கிப்<br>பருகினார் போலும் பந்தணை நல்லூர்<br>நின்றவெம் பசுபதி யாரே. 4 | இறைவன் அழகிய சோலைகள் சூழ்ந்த உலகத்தார் போற்றி வணங்க, நெருங்கிய பலவகைக் கணங்களின் துயரினைக் கண்டு உருகி, உள்ள உறுதியோடு, ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்ற தங்கள் உடல்கள் கருநிறம் அடையப் பெற்றாராகிய திருமால் முதலிய தேவர்களெல்லாம் கைதொழுது வணங்க, அவரது துன்பத்தினைப் போக்கக் கடலுள் எழுந்த நஞ்சினை அமுதம்போல் வாங்கிப் பருகினவர். அப்பெருமான், திருப்பந்தணை நல்லூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பசுபதியார் ஆவார். |
| 4105. | பொன்னினார் கொன்றை யிருவடங் கிடந்து<br>பொறிகிளர் பூணநூல் புரள<br>மின்னினா ருருவின் மிளிர்வதோ ரரவ<br>மேவுவெண் ணீறுமெய் பூசித்<br>துன்னினார் நால்வர்க் கறமமர்ந் தருளித்<br>தொன்மையார் தோற்றமுங் கேடும்<br>பன்னினார் போலும் பந்தணை நல்லூர்<br>நின்றவெம் பசுபதி யாரே. 5 | இறைவர் பொன்போன்ற பெரிய கொன்றை மாலையை வண்டுகள் கிளர்ந்து ஒலிக்கும்படி மார்பில் அணிந்துள்ளவர். அத்துடன் முப்புரி நூலும் அணிந்துள்ளவர். மின்னல் போன்று ஒளியுடைய பாம்பை அணிந்துள்ளவர். திருவெண்ணீற்றினைப் பூசியுள்ளவர். தம்மை வந்தடைந்த சனகாதி முனிவர்கள் நால்வர்க்கும் அறப்பொருள் உபதேசித்தவர். தொன்மைக் கோலம் உடையவர். மாறி மாறி உலகைப் படைத்தலும், அழித்தலும் செய்பவர். அப்பெருமான், திருப்பந்தணைநல்லூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பசுபதியார் ஆவார். |
| 4106. | ஒண்பொனா ரனைய வண்ணல்வாழ் கெனவு<br>முமையவள் கணவன்வாழ் கெனவும்<br>அண்பினார் பிரியா ரல்லுநன் பகலு<br>மடியவ ரடியிணை தொழவே<br>நண்பினா ரெல்லா நல்லரென் றேத்த<br>அல்லவர் தீயரென் றேத்தும்<br>பண்பினார் போலும் பந்தணை நல்லூர்<br>நின்றவெம் பசுபதி யாரே. 6 | அன்பர்கள் இறைவனை, 'ஒளிமிக்க பொன் போன்ற தலைவரே வாழ்க' எனவும், 'உமையவள் கணவனே வாழ்க' எனவும் போற்றுவர். அவரை நெருங்கி அணுகப்பெற்று, இரவும், பகலும் பிரியாராகித் திருவடிகளைத் தொழுவர். பத்தர்களெல்லாரும் அவர் நன்மையைச் செய்பவர் என்று போற்ற, மற்றவர்கள் தீமையைச் செய்பவர் என்று சொல்லும் தன்மையினை யுடையவர். அப்பெருமான், திருப்பந்தணை நல்லூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பசுபதியார் ஆவர். |

| | | |
|---|---|---|
| 4107. | எற்றினா ரேது மிடைகொள்வா ரில்லை<br>யிருநிலம் வானுல கெல்லை<br>தெற்றினார் தங்கள் காரண மாகச்<br>செருமலைந் தடியிணை சேர்வான்<br>முற்றினார் வாழு மும்மதில் வேவ<br>மூவிலைச் சூலமு மழுவும்<br>பற்றினார் போலும் பந்தணை நல்லூர்<br>நின்றவெம் பசுபதி யாரே. 7 | தமக்கு எத்தகைய துன்பமும் செய்யாத தேவர்களையும், மண்ணுலக மாந்தர்களையும் துன்புறுத்தி, மோதி அழித்தலைச் செய்த பகைவர்கள் காரணமாகப் போர் செய்து, தம் திருவடிகளைச் சேரும் பொருட்டுத் தவம் முற்றினார்களாகிய மூவர்கள் வாழ்கின்ற முப்புரங்களும் (அம்மூவர் தவிர) வேகும்படி செய்து மூவிலைச் சூலமும், மழுவாயுதமும் ஏந்தியவர். அப்பெருமான், திருப்பந்தணை நல்லூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் சிவபெருமான் ஆவார். |
| 4108. | ஒலிசெய்த குழலின் முழவம தியம்ப<br>வோசையா லாடல றாத<br>கலிசெய்த பூதங் கையினா லிடவே<br>காலினாற் பாய்தலு மரக்கன்<br>வலிகொள்வர் புலியி னுரிகொள்வ ரேனை<br>வாழ்வுநன் றானுமோர் தலையில்<br>பலிகொள்வர் போலும் பந்தணை நல்லூர்<br>நின்றவெம் பசுபதி யாரே. 8 | குழலும், முழவும் ஒலிக்க அவற்றின் ஓசையோடு ஆடலும் நீங்காத மகிழ்ச்சியுடைய திருக்கயிலாய மலையைப் பெயர்க்க இராவணன் அதன் கீழ்க் கையைச் செலுத்த, அது கண்டு இறைவன் தம் காற்பெருவிரலை ஊன்றி இராவணனின் வலிமையை அழியுமாறு செய்தார். அவர் புலியின் தோலை ஆடையாக உடுத்தவர். நல்ல வாழ்வு உடையவர். எனினும் பிரம கபாலத்தைக் கையிலேந்திப் பிச்சை ஏற்பவர். அப்பெருமான், திருப்பந்தணைநல்லூர் என்னும் திருத்தலத்தில் வீற்றிருந்தருளும் பசுபதியார் ஆவார். |
| 4109. | சேற்றினார் பொய்கைத் தாமரை யானுஞ்<br>செங்கண்மா லிவரிரு கூறாத்<br>தோற்றினார் தோற்றத் தொன்மையை யறியார்<br>துணைமையும் பெருமையுந் தம்மில்<br>சாற்றினார் சாற்றி யாற்றலோ மென்னச்<br>சரண்கொடுத் தவர்செய்த பாவம்<br>பாற்றினார் போலும் பந்தணை நல்லூர்<br>நின்றவெம் பசுபதி யாரே. 9<br><br>XXXXXXXXXXXXXXXXXXXXXX 10 | சேறு நிறைந்த பொய்கையில் மலரும் தாமரை மேல் வீற்றிருக்கும் பிரமனும், சிவந்த கண்களையுடைய திருமாலும் முறையே அன்ன உருவெடுத்து மேல்நோக்கி வானிலும், பன்றி உருவெடுத்துக் கீழ்நோக்கிப் பாதாளத்திலும் இறைவனின் முடியையும், அடியையும் தேடிச் செல்ல, அறியாது தோற்றனர். இறைவனின் தொன்மைத் தோற்றத்தை அறியாது துணையையும், பெருமையையும் தமக்குள் பேசித் தாமே பரம் எனப் பேசினர். பின் இறைவனிடம் யாம் வலியில்லோம் என்று முறையிட்டுத் தம் பிழையை மன்னிக்க வேண்ட, அவர் அவர்கட்குச் சரண் கொடுத்து அவர்களது பாவத்தை மாற்றியருளினார். அப்பெருமான், திருப்பந்தணை நல்லூரில் வீற்றிருந்தருளும் பசுபதியார் ஆவார். |

| | | |
|---|---|---|
| 4110. | கல்லிசை பூணக் கலையொலி யோவாக்<br>கழுமல முதுபதி தன்னில்<br>நல்லிசை யாளன் புல்லிசை கேளா<br>நற்றமிழ் ஞானசம் பந்தன்<br>பல்லிசை பகுவாய்ப் படுதலை யேந்தி<br>மேவிய பந்தணை நல்லூர்<br>சொல்லிய பாடல் பத்தும்வல் லவர்மேல்<br>தொல்வினை சூழகி லாவே. 11 | கற்கும் ஓசைகள் நிறைந்து கலைகளின் ஒலி நீங்காத திருக்கழுமலம் என்னும் பழமையான நகரில் அவதரித்த நல்ல பெருமையினை யுடையவனும், நல்லிசையாளனும், மோசமான இசையைக் கேளாதவனும், அற்பர்களான புறச்சமயிகளின் மொழியைக் கேளாதவனுமாகிய நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன் பற்களுடன் கூடிய பிளந்த வாயினையுடைய மண்டை ஓட்டை ஏந்தியவனான சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற திருப்பந்தணைநல்லூர் என்னும் திருத்தலத்தைப் போற்றி அருளிய பாடல்கள் பத்தினையும் ஓதவல்லவர்களைத் தொல்வினை வந்து சூழாது. |

## 122. திருஓமாம்புலியூர்

பண் : புறநீர்மை

பதிக எண் : 122

| | | |
|---|---|---|
| 4111. | பூங்கொடி மடவா ளுமையொரு பாகம்<br>புரிதரு சடைமுடி யடிகள்<br>வீங்கிரு ணட்ட மாடுமெம் விகிர்தர்<br>விருப்பொடு முறைவிடம் வினவில்<br>தேங்கமழ் பொழிலிற் செழுமலர் கோதிச்<br>செறிதரு வண்டிசை பாடும்<br>ஓங்கிய புகழா ரோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. 1 | இறைவன் பூங்கொடி போன்ற உமாதேவியை ஒருபாகமாக உடையவர். முறுக்குண்ட சடைமுடியையுடைய அடிகள். உலகம் சங்கரிக்கப்பட்டு ஒடுங்கிய ஊழிக்காலத்தில் நடனமாடும் விகிர்தர். அப்பெருமான் விருப்பத்துடன் வீற்றிருந்தருளுகின்ற இடம் எது என வினவில், தேன்மணம் கமழும் சோலைகளிலுள்ள செழுமையான மலர்களைக் குடைந்து நெருங்கிக் கூட்டமாயமைந்த வண்டுகள் இசைபாடுகின்ற, ஓங்கிய புகழையுடைய அந்தணர்கள் வாழ்கின்ற ஓமமாம்புலியூரில் அப்பெருமானுக்குரிய உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும். |
| 4112. | சம்பரற் கருளிச் சலந்தரன் வீயத்<br>தழலுமிழ் சக்கரம் படைத்த<br>எம்பெரு மானா ரிமையவ ரேத்த<br>வினிதினங் குறைவிடம் வினவில்<br>அம்பர மாகி யழலுமிழ் புகையி<br>னாகுதி யான்மழை பொழியும்<br>உம்பர்க ளேத்து மோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளியதுவே. 2 | சம்பரன் என்னும் அசுரனுக்கு அருள்செய்தவரும், சலந்தரன் என்னும் அசுரன் அழியும்படி நெருப்பினை உமிழ்கின்ற சக்கரத்தைப் படைத்தவருமான எம் சிவபெருமானார் தேவர்களெல்லாம் வணங்கிப் போற்ற இனிதாக வீற்றிருந்தருளும் இடம், வேள்வி ஆற்ற அதன் புகைமண்டலமானது ஆகாயத்தினை அடைந்து மழை பொழிவதும், தேவர்களால் போற்றப்படுகின்றதுமான திரு ஓமமாம்புலியூரில் உள்ள உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும். |

| | | |
|---|---|---|
| 4113. | பாங்குடைத் தவத்துப் பகீரதற் கருளிப்<br>படர்சடைக் கரந்தநீர்க் கங்கை<br>தாங்குத றவிர்த்துத் தராதலத் திழித்த<br>தத்துவ னுறைவிடம் வினவில்<br>ஆங்கெரி மூன்று மமர்ந்துட னிருந்த<br>வங்கையா லாகுதி வேட்கும்<br>ஓங்கிய மறையோ ரோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. 3 | சிறந்த குணமுடைய பகீரதனுடைய தவத்திற்கு அருள்செய்து, தனது படர்ந்த சடையில் மறைத்தருளிய கங்கை நதியினைத் தாங்குதலைத் தவிர்த்துப் பூமியில் சிறிதளவு பாயும்படி செய்த தத்துவனாகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற இடம், மூன்று எரி வளர்த்துத் தம் அழகிய கைகளால் நெய், சமித்து போன்றவைகளை வார்த்து வேள்விகள் செய்கின்ற, ஓங்கிய புகழையுடைய அந்தணர்கள் வாழ்கின்ற திருஓமமாம்புலியூரில் உள்ள உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும். |
| 4114. | புற்றர வணிந்து நீறுமெய் பூசிப்<br>பூதங்கள் சூழ்தர வூரூர்<br>பெற்றமொன் றேறிப் பெய்பலி கொள்ளும்<br>பிரானவ னுறைவிடம் வினவில்<br>கற்றநால் வேத மங்கமோ ராறுங்<br>கருத்தினா ரருத்தியாற் றெரியும்<br>உற்றபல் புகழா ரோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. 4 | சிவபெருமான் புற்றில் வசிக்கும் இயல்புடைய பாம்பை அணிந்தவர். திருநீற்றினைத் தன் மேனி முழுவதும் பூசியவர். பூதகணங்கள் சூழ்ந்து வர, இடபத்தின் மேலேறி ஊரூராகச் சென்று பிச்சையேற்பவர். அப்பெருமான் இனிதாக வீற்றிருந்தருளும் இடம், தாங்கள் கற்ற நான்கு வேதங்கள், ஆறு அங்கங்கள் இவற்றின் கருத்தை உணர்ந்தவர்களாய், அன்பும், புகழுமுடைய அந்தணர்கள் வாழும் திருஓமமாம்புலியூர் உடையவர் வடதளியே. |
| 4115. | நிலத்தவர் வான மாள்பவர் கீழோர்<br>துயர்கெட நெடியமாற் கருளால்<br>அலைத்தவல் லசுர ராசற வாழி<br>யளித்தவ னுறைவிடம் வினவில்<br>சலத்தினாற் பொருள்கள் வேண்டுதல் செய்யாத்<br>தன்மையார் நன்மையான் மிக்க<br>உலப்பில்பல் புகழா ரோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. 5 | மண்ணுலகத்தவர்கள், வானுலகை ஆள்பவர்கள், பாதாள உலகத்தினர் ஆகியோரது துன்பம் கெடக் கொடிய அசுரர்கள் புரியும் தீமைகளை அழிக்குமாறு, நெடிய திருமாலுக்குச் சக்கராயுதத்தை அளித்த சிவபெருமான் இனிதாக வீற்றிருந்தருளும் இடம், தீய செயல்களால் பொருள் சேர்த்தலைச் செய்யாத நல்லொழுக்க சீலர்களும், பெரும்புகழ் மிக்க செயல் செய்யும் சான்றோர்களும் வாழ்கின்ற திருஓமமாம்புலியூரிலுள்ள உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும். |
| 4116. | மணந்திகழ் திசைக ளெட்டுமே ழிசையு<br>மலியுமா றங்கமை வேள்வி<br>இணைந்தநால் வேத மூன்றெரி யிரண்டு<br>பிறப்பென வொருமையா லுணரும்<br>குணங்களு மவற்றின் கொள்பொருள் குற்ற<br>மற்றவை யுற்றது மெல்லாம்<br>உணர்ந்தவர் வாழு மோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. 6<br><br>XXXXXXXXXXXXXXXXXXXXXX 7 | எட்டுத் திசைகளும், புகழ்மணங் கமழ்கின்றதும், ஏழிசைகள் மலிந்துள்ளதும், ஆறங்கங்கள், ஐந்து வேள்விகள், நான்கு வேதங்கள், மூன்று எரிகள், இரண்டு பிறப்புக்கள் என இவற்றை ஒருமை மனத்தால் உணரும் குணங்களும், அவற்றின் பொருளும், குற்றமற்றவை, குற்றமுள்ளவை இவற்றை உணர்ந்து தெளிந்தவர்களும் ஆன அந்தணர்கள் வாழ்கின்ற திருஓமமாம்புலியூரில் உடையவரான சிவபெருமான் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்றார். |

| | | | |
|---|---|---|---|
| 4117. | தலையொரு பத்துந் தடக்கைய திரட்டி<br>தானுடை யரக்கனொண் கயிலை<br>அலைவது செய்த வவன்றிறல் கெடுத்த<br>வாதியா ருறைவிடம் வினவில்<br>மலையென வோங்கு மாளிகை நிலவு<br>மாமதின் மாற்றல ரென்றும்<br>உலவுபல் புகழா ரோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. | 8 | பத்துத் தலைகளும், நீண்ட இருபது கைகளும் உடைய அரக்கனான இராவணன் ஒளி பொருந்திய திருக்கயிலை மலையினை அசைக்கத் தொடங்க, அவனது வலிமையைக் கெடுத்த ஆதியாராகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம் எதுவென வினவில், மலைபோல் ஓங்கியுயர்ந்த மாளிகையும், அதனுடன் விளங்கும் பெரிய மதிலும் கூடிய, செல்வநிலை என்றும் மாறாதவராய் விளங்குகின்ற பல்வகையான புகழ்களை யுடைய அந்தணர்கள் வசிக்கின்ற திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும். |
| 4118. | கள்ளவிழ் மலர்மே லிருந்தவன் கரியோ<br>னென்றிவர் காண்பரி தாய<br>ஒள்ளெரி யுருவ ருமையவ ளோடு<br>முகந்தினி துறைவிடம் வினவில்<br>பள்ளநீர் வாளை பாய்தரு கழனிப்<br>பனிமலர்ச் சோலைசூ ழாலை<br>ஒள்ளிய புகழா ரோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. | 9 | தேனுடைய தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் பிரமனும், கருநிறமுடைய திருமாலும் இருவரும் காண்பதற்கு அரியவனாய் நெருப்புப் பிழம்பாய் நின்ற சிவபெருமான் உமாதேவியோடு இனிது வீற்றிருந்தருளும் இடம், பள்ளத்தை நோக்கிப் பாயும் நீரோடு வாளை மீன்கள் பாயும் வயல்களும், குளிர்ச்சி பொருந்திய மலர்ச் சோலைகள் சூழ்ந்த கரும்பு ஆலைகளும் உடைய, மிக்க புகழுடைய அந்தணர்கள் வாழ்கின்ற திருஓமமாம்புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும். |
| 4119. | தெள்ளிய ரல்லாத் தேரரோ டமணர்<br>தடுக்கொடு சீவர முடுக்கும்<br>கள்ளமார் மனத்துக் கலதிகட் கருளாக்<br>கடவுளா ருறைவிடம் வினவில்<br>நள்ளிருள் யாம நான்மறை தெரிந்து<br>நலந்திகழ் மூன்றெரி யோம்பும்<br>ஒள்ளியார் வாழு மோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யதுவே. | 10 | தெளிந்த அறிவில்லாத காவியாடை போர்த்திய புத்தர்களும், தடுக்கினை உடுக்கும் சமணர்களும் ஆகிய கள்ள உள்ளத்துடன் விளங்கும் கீழ் மக்கட்கு அருள்புரியாத கடவுளாகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளும் இடம், நள்ளிருள், யாமம் முதலிய அவ்வக் காலங்கட்கு ஏற்ப, நான்கு வேதங்களிலும் கூறியபடி தெய்வ மந்திரங்களை ஓதி நன்மை தரும் மூன்று அக்கினிகளை வளர்த்து வேள்வி செய்யும் மாசற்ற அறிவுடைய அந்தணர்கள் வாழும் திருஓமமாம் புலியூர் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலாகும். |
| 4120. | விளைதரு வயலுள் வெயில்செறி பவள<br>மேதிகண் மேய்புலத் திடறி<br>ஒளிதர மல்கு மோமமாம் புலியூ<br>ருடையவர் வடதளி யரனைக்<br>களிதரு நிவப்பிற் காண்டகு செல்வக்<br>காழியுண் ஞானசம் பந்தன்<br>அளிதரு பாடல் பத்தும்வல் லார்க<br>ளமரலோ கத்திருப் பாரே. | 11 | நல்ல விளைச்சலைத் தருகின்ற வயல்களில் ஒளிமிக்க பவளங்கள், எருமைகள் மேய்கின்ற இடங்களில் அவைகளால் இடறப்பட்டு மேலும் ஒளியைத் தருகின்ற திருஓமமாம் புலியூரில் உடையவர் வடதளி என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளுகின்ற சிவபெருமானை, களிப்பை உண்டாக்கும் உயர்ந்த காணத்தக்க செல்வத்தையுடைய சீகாழிப்பதியில் அவதரித்த திருஞானசம்பந்தர் போற்றிய, அருளை விளைவிக்கும் இத்திருப்பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர்கள் சிவலோகத்தில் வீற்றிருப்பர். |

## 123. திருக்கோணமலை ( ஈழநாட்டுத்தலம் )

பண் : புறநீர்மை

பதிக எண் : 123

4121. நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு
நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழு மகளோர் பாகமாப் புணர்ந்த
வடிவினர் கொடியணி விடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு
மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங்
கோணமா மலையமர்ந் தாரே. 1

இராமேச்சுவரத்திலிருந்து அதை நோக்கிப் பாடியது.

சிவபெருமானின் வலத் திருவடியில் வீரக்கழலும், இடத் திருவடியில் சிலம்பும் ஒலிக்கின்றன. அவர் பாம்பணிந்தவர். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவர். திருநீறு அணிந்த திருமேனியர். மலைமகளை ஒரு பாகமாகக் கொண்டவர். இடபக்கொடி உடையவர். சந்தனக் கட்டைகளும், கரிய அகில் கட்டைகளும், மாணிக்கக் கற்களும் அளவின்றிக் கரையில் சேர, ஒலிக்கின்ற கடலின் அலைகள் முத்துக்களைக் கொழிக்கும் திருக்கோண மாமலையில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார்.

---

4122. கடிதென வந்த கரிதனை யுரித்து
அவ்வுரி மேனிமேற் போர்ப்பர்
பிடியன நடையாள் பெய்வளை மடந்தை
பிறைநுத லவளொடு முடனாய்க்
கொடிதெனக் கதறுங் குரைகடல் சூழ்ந்து
கொள்ளமு னித்திலஞ் சுமந்து
குடிதனை நெருங்கிப் பெருக்கமாய்த்
தோன்றுங்
கோணமா மலையமர்ந் தாரே. 2

விரைவாகப் பாய்ந்து வந்த யானையின் தோலை உரித்துத் திருமேனிமேல் போர்த்திக் கொண்டவர் சிவபெருமான். அவர் பெண் யானை போன்ற நடையை உடையவளாய், வளையல்களை அணிந்தவளாய்ப் பிறை போன்ற நெற்றியையுடைய உமாதேவியை ஒரு பாகமாக உடையவர். பிறர் கொடிது என்று அஞ்சத்தக்க அலைகளையுடைய ஒலிக்கின்ற கடல், முத்துக்களைச் சுமந்து மக்களுக்கு வழங்கும் வளமைமிக்க திருக்கோண மாமலையில் சிவபெருமான் வீற்றிருந் தருளுகின்றார்.

---

4123. பனித்திளந் திங்கட் பைந்தலை நாகம்
படர்சடை முடியிடை வைத்தார்
கனித்திளந் துவர்வாய்க் காரிகை பாக
மாகமுன் கலந்தவர் மதின்மேல்
தனித்தபே ருருவ விழித்தழ னாகந்
தாங்கிய மேருவெஞ் சிலையாக்
குனித்ததோர் வில்லார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரே. 3

சிவபெருமான் குளிர்ச்சியான இளமையான சந்திரனையும், பசுமையான தலையையுடைய பாம்பையும், படர்ந்த சடைமுடியில் அணிந்துள்ளார். கனிபோன்ற சிவந்த வாயையுடைய உமாதேவியைச் சிவபெருமான் ஒரு பாகமாக உடையவர். மேரு மலையை வில்லாகக் கொண்டு, வாசுகி என்னும் பாம்பை நாணாகக் கொண்டு, அக்கினியைக் கணையாகக் கொண்டு முப்புரத்தை அழித்த ஆற்றலுடையவர். அப்பெருமான் ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த திருக்கோணமலையில் வீற்றிருந்தருளுகின்றார்.

| | |
|---|---|
| **4124.** பழித்திளங் கங்கை சடையிடை வைத்துப்<br>பாங்குடை மதனனைப் பொடியா<br>விழித்தவன் தேவி வேண்டமுன் கொடுத்த<br>விமலனார் கமலமார் பாதர்<br>தெழித்துமுன் னரற்றுஞ் செழுங்கடற் றரளஞ்<br>செம்பொனு மிப்பியுஞ் சுமந்து<br>கொழித்துவன் றிரைகள் கரையிடைச் சேர்க்குங்<br>கோணமா மலையமர்ந் தாரே. **4** | இறைவர் பெருக்கெடுத்து வந்த கங்கை நதியின் வேகத்தைக் குறைத்து அதனைச் சடையில் தாங்கியவர். அழகிய மன்மதன் சாம்பலாகுமாறு நெற்றிக் கண்ணால் விழித்தவர். பின் அவன் தேவி வேண்ட அவனை உயிர்ப்பித்து அவளுக்கு மட்டும் தெரியும்படி அருள்செய்தவர். இயல்பாகவே பாசங்களின் நீங்கியவர். தாமரை போன்ற திருவடிகளை உடையவர். ஆரவாரத்துடன், செழுமையான முத்துக்கள், செம்பொன், இப்பி இவற்றைத் திரளாக அலைகள் கரையிலே சேர்க்கத் திருக்கோணமலை என்னும் திருத்தலத்தில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |
| **4125.** தாயினு நல்ல தலைவரென் றடியார்<br>தம்மடி போற்றிசைப் பார்கள்<br>வாயினும் மனத்தும் மருவிநின் றகலா<br>மாண்பினர் காண்பல வேடர்<br>நோயிலும் பிணியுந் தொழிலர்பா னீக்கி<br>நுழைதரு நூலினர் ஞாலம்<br>கோயிலுஞ் சுனையும் கடலுடன் சூழ்ந்த<br>கோணமா மலையமர்ந் தாரே. **5** | தாயைவிட நல்ல தலைவர் என்று அடியார்கள் சிவபெருமானின் திருவடிகளைப் போற்றிப் பாடுவர். அவர் அடியார்களின் வாயிலும், மனத்திலும் நீங்காத மாண்புடையவர். பல கோலங்களை உடையவர். தம்மை வழிபடும் தொழிலுடைய அடியவர்கள்பால் நோய், பிணி முதலியன தாக்காவண்ணம் காப்பவர். மார்பில் முப்புரிநூல் அணிந்தவர். இவ்வுலகில், திருக்கோயிலும், சுனையும் கடலுடன் சூழ விளங்கும் திருக்கோணமாமலையில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார். |
| **4126.** பரிந்துநன் மனத்தால் வழிபடுமாணி<br>தன்னுயிர் மேல்வரும் கூற்றைத்<br>திரிந்திடா வண்ண முதைத்தவற் கருளுஞ்<br>செம்மையார் நம்மையா ளுடையார்<br>விரிந்துயர் மௌவன் மாதவி புன்னை<br>வேங்கைவண் செருந்திசெண் பகத்தின்<br>குருந்தொடு முல்லை கொடிவிடும் பொழில் சூழ்<br>கோணமா மலையமர்ந் தாரே. **6**<br><br>XXXXXXXXXXXXXXXXXXXXXX **7** | பக்தி பெருகும் நல்ல மனத்தால் அன்பு பெருக வழிபடும் மார்க்கண்டேயரின் உயிரைக் கவர வந்த காலனை, இறைவழிபாடு வினைப்பலனைச் சாராமல் காக்கும் என்ற சைவக் கொள்கைக்கு முரண்படாவண்ணம் உதைத்துப் பாலனுக்கு அருள் புரிந்த செம்மைக்கு திறமுடையவர் சிவபெருமான். ஆன்மாக்கள் ஆகிய நம்மை ஆட்கொள்பவர். அப்பெருமான் விரிந்துயர்ந்த மல்லிகை, மாதவி, புன்னை, வேங்கை, செருந்தி, செண்பகம், முல்லை ஆகியவை விளங்கும் சோலைகள் சூழ்ந்த திருக்கோணமலையில் வீற்றிருந்தருளுகின்றார். |

**4127.** எடுத்தவன் றருக்கை யிழித்தவர் விரலா
லேத்திட வாத்தமாம் பேறு
தொடுத்தவர் செல்வந் தோன்றிய பிறப்பு
மிறப்பறி யாதவர் வேள்வி
தடுத்தவர் வனப்பால் வைத்ததோர் கருணை
தன்னருட் பெருமையும் வாழ்வும்
கொடுத்தவர் விரும்பும் பெரும்புகழாளர்
கோணமா மலையமர்ந் தாரே. 8

கயிலைமலையை எடுத்த இராவணனின் செருக்கைத் தம் திருப்பாதவிரலை ஊன்றி அழித்தவர் சிவபெருமான். பின் அவன் ஏத்திப் போற்ற விருப்பத்துடன் வெற்றி வாளும், நீண்ட வாழ்நாளும் அருளியவர். செல்வத்தோடு கூடிய பிறப்பும், இறப்பும் அறியாதவர். சிவனை நினையாது தக்கன் செய்த வேள்வியைத் தடுத்தவர். வனப்பு மிகுந்த உமாதேவியை ஒரு பாகமாக வைத்தவர். உயிர்களிடத்துக் கருணைகொண்டு தன்னருட் பெருமையும், வாழ்வும் கொடுத்தவர். அத்தகைய பெரும்புகழையுடைய சிவபெருமான் திருக்கோணமலையில் வீற்றிருந்தருளுகின்றார்.

**4128.** அருவரா தொருகை வெண்டலையேந்தி
யகந்தொறும் பலியுடன் புக்க
பெருவரா யுறையு நீர்மையர் சீர்மைப்
பெருங்கடல் வண்ணனும் பிரமன்
இருவரு மறியா வண்ணமொள் ளெரியா
யுயர்ந்தவர் பெயர்ந்தநன் மாற்கும்
குருவராய் நின்றார் குரைகழல் வணங்கக்
கோணமா மலையமர்ந் தாரே. 9

அருவருப்பு இல்லாமல் பிரமனின் வெண் தலையைக் கையிலேந்தி வீடுகள்தோறும் சென்று பிச்சை ஏற்று உண்ணும் பெருமையுடையவர். சீர்மை பொருந்திய பெருங்கடலில் துயில்கொள்ளும் திருமாலும், பிரமனும் ஆகிய இருவரும் அறியாவண்ணம் ஒளியுடைய பெரிய நெருப்புப் பிழம்பாய் உயர்ந்து நின்றவர். திருமால் சிவபெருமானை ஆயிரம் தாமரை மலர்கள் கொண்டு அர்ச்சிக்க, ஒரு பூக்குறைய, அதற்காகத் தாமரை போன்ற தம் கண்ணையே இடந்து அர்ச்சனை செய்யக் குருவாய் விளங்கியவர். அடியவர்கள், ஒலிக்கின்ற வீரக்கழல்கள் அணிந்த தம் திருவடிகளை வணங்கும் வண்ணம் திருக்கோணமலையில் வீற்றிருந்தருளுகின்றார்.

**4129.** நின்றுணுஞ் சமணுமிருந்துணுந் தேரு
நெறியலா தனபுறங் கூற
வென்றுநஞ் சுண்ணும் பரிசின ரொருபான்
மெல்லிய லொடுமுட னாகித்
துன்றுமொண் பௌவ மவ்வலுஞ் சூழ்ந்து
தாழ்ந்துறு திரைபல மோதிக்
குன்றுமொண் கானல் வாசம்வந் துலவுங்
கோணமா மலையமர்ந் தாரே. 10

நின்றுண்ணும் சமணர்களும், இருந்துண்ணும் புத்தர்களும், சிவபெருமானைப் பற்றி நெறியல்லாதவனவற்றைப் புறங்கூறுகின்றனர். சிவபெருமானோ நஞ்சுண்டு தேவர்களைக் காத்த பெருமையுடையவர். மெல்லியலான உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டவர். கடல் சூழ்ந்த அம்மலையில் மணம் வீசும் மல்லிகைச் சோலை விளங்கக் கடலலைகள் கரையில் மோதுகின்றன. கடற்சோலைகளின் மணம்வீசும் திருக்கோண மலையில் சிவபெருமான் வீற்றிருந்தருளுகின்றார்.

4130. குற்றமி லாதார் குரைகடல் சூழ்ந்த
கோணமா மலையமர்ந் தாரைக்
கற்றுணர் கேள்விக் காழியர் பெருமான்
கருத்துடை ஞானசம் பந்தன்
உற்றசெந் தமிழார் மலையீ ரைந்து
முரைப்பவர் கேட்பவ ருயர்ந்தோர்
சுற்றமு மாகித் தொல்வினை யடையார்
தோன்றுவர் வானிடைப் பொலிந்தே. 11

குற்றமில்லாத குடிமக்கள் வாழ்கின்ற ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த திருக்கோணமலையில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை, கற்றுணர் ஞானமும், கேள்வி ஞானமும் உடைய சீகாழி வாழ் மக்களின் தலைவரான சிவஞானக் கருத்துடைய ஞானசம்பந்தர் செந்தமிழில் அருளிய இப்பதிகத்தை உரைப்பவர்களும், கேட்பவர்களும் உயர்ந்தோர் ஆவர். அவர்களுடைய சுற்றத்தாரும் எல்லா நலன்களும் பெற்றுத் தொல்வினையிலிருந்து நீங்கப் பெறுவர். சிவலோகத்தில் பொலிவுடன் விளங்குவர்.

## அந்தாளிக்குறிஞ்சி

இப்பண்ணில் திருஞானசம்பந்தர் மட்டுமே இரு பதிகங்கள் பாடியிருக்கிறார். அவை மூன்றாந்திருமுறையில் கடைசி இரண்டுமாகும். எண் 124, 125 கடைசி பதிகம்.அவர் தம் திருமணமானதும் நல்லூர்ப் பெருமணத்தில் தோன்றிய சோதியில் எல்லோரையும் புகச்சொல்லியபோது அவர்களுக்கு வாசக தீட்சையாக, நமச்சிவாயத்திருப்பதிகம் பாடி, பின் சோதியுட் கலந்தபோது பாடிய, கல்லூர்ப் பெருமணம் வேண்டா என்ற இறுதிப்பதிகம் . இது குறிஞ்சிப்பெரும்பண்ணில் நைவளம் என்ற திறத்தின் புறநிலைப் பண்ணாய், பண் வரிசையில் 38 அந்தாளி என்ற பண்ணாகும். பெரும்பண் காரணமாக குறிஞ்சி என்று ஒட்டப்பட்டது. திருவாவடுதுறை ஏட்டின்படி இதற்கு நேரான இராகம் சைலதேசாட்சி. இது காலை வேளைக்குரியது என்று சொல்லப்பட்ட போதிலுங்கூட இது இராப்பண்ணில் சேர்ந்தது. இது இன்று சாமா இராகத்தில் பாடப்படுகிறது.. இதற்குரியது சாந்த ரசம் (சமநிலை). இந்தப்பண்ணைக் கேட்டனுபவித்துத்தான், தியாகராச சுவாமிகள் தம் மனைவியின் உபதேசத்தால் சாந்தமுலேக சௌக்கிய முலேது என்ற கீர்த்தனத்தை மனமுருகிப் பாடினார் என்று ஆன்றோர் சொல்வார்கள்.

## 124. திருக்குருகாவூர் வெள்ளடை

பண் : அந்தாளிக்குறிஞ்சி — பதிக எண் : 124

4131. சுண்ணவெண் ணீறணி மார்பில் தோல்புனைந்
தெண்ணரும் பல்கண மேத்தநின் றாடுவர்
விண்ணமர் பைம்பொழில் வெள்ளடை மேவிய
பெண்ணமர் மேனியெம் பிஞ்ஞக னாரே. 1

சிவபெருமான் பொடியாகிய வெண்ணிறத் திருநீற்றினை அணிந்த மார்பில் யானைத் தோலைப் போர்த்திக் கொண்டு எண்ணுதற்கரிய பல கணங்களும் போற்ற நடனம் செய்வார். அத்தகைய சிவபெருமான் தேவர்களும் விரும்பும் பசுமையான சோலைகள் சூழ்ந்த திருக்குருகாவூரில் வெள்ளடை என்னும் கோயிலில், உமாதேவியை ஒரு பாகமாகக் கொண்டு விரும்பி வீற்றிருந்தருளும் தலைக்கோலமுடையவர்.

| | | |
|---|---|---|
| 4132. | திரைபுல்கு கங்கை திகழ்சடை வைத்து<br>வரைமக ளோடுட னாடுதிர் மல்கு<br>விரைகமழ் தண்பொழில் வெள்ளடை மேவிய<br>அரைமல்கு வாளர வாட்டுகந் தீரே. 2 | நறுமணம் கமழும் குளிர்ச்சி பொருந்திய சோலைகளையுடைய திருக்குருகாவூரில் வெள்ளடை என்னும் கோயிலில் வீற்றிருந்தருளுகின்ற பெருமானே! இடுப்பில் விளங்கும் ஒளிமிக்க பாம்பை ஆட்டுதலை விரும்பி நின்றீர். அலைகளையுடைய கங்கையை ஒளிமிக்க சடையில் வைத்துக் கொண்டு மலைமகளோடு ஆடுகின்றீர். |
| 4133. | அடையலர் தொன்னகர் மூன்றெரித் தன்ன<br>நடைமடை மங்கையொர் பாக நயந்து<br>விடையுகந் தேறுதிர் வெள்ளடை மேவிய<br>சடையமர் வெண்பிறைச் சங்கர னீரே. 3 | திருக்குருகாவூரில் வெள்ளடை என்னும் திருக்கோயிலில் விரும்பி வீற்றிருந் தருளுகின்ற, சடையில் வெண்ணிறப் பிறைச்சந்திரனை அணிந்துள்ள சங்கரராகிய நீர் பகைவருடைய தொன்மையான மூன்று நகரங்களையும் எரித்தீர். அன்னம் போன்ற நடையையுடைய உமாதேவியை ஒரு பாகத்தில் மகிழ்ந்து வைத்துள்ளீர். எருதின்மீது விருப்பத்துடன் ஏறுகின்றீர். |
| 4134. | வளங்கிளர் கங்கை மடவர லோடு<br>களம்பட ஆடுதிர் காடரங் காக<br>விளங்கிய தண்பொழில் வெள்ளடை மேவிய<br>இளம்பிறை சேர்சடை யெம்பெரு மானே. 4 | குளிர்ச்சி பொருந்திய சோலைகள் நிறைந்த திருக்குருகாவூரில் வெள்ளடை என்னும் திருக்கோயிலில் விரும்பி வீற்றிருந் தருளுகின்ற, இளம்பிறைச் சந்திரனை அணிந்த சடையையுடைய எம் பெருமானே! வளங்களைப் பெருக்குகின்ற கங்கையாளொடு சுடுகாட்டு அரங்கமே இடமாகக் கொண்டு ஆடுகின்றீர். |
| 4135. | சுரிகுழ னல்ல துடியிடை யோடு<br>பொரிபுல்கு காட்டிடை யாடுதிர் பொங்க<br>விரிதரு பைம்பொழில் வெள்ளடை மேவிய<br>எரிமழு வாட்படை யெந்தை பிரானே. 5 | விரிந்த பசுமையான சோலைகள் நிறைந்த திருக்குருகாவூரில் வெள்ளடை என்னும் கோயிலில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, நெருப்பு, மழு, வாள் முதலிய படைகளை ஏந்தியுள்ள எம் தந்தையாகிய பெருமானே! நீர் அழகிய கரிந்த கூந்தலையும், உடுக்கை போன்ற இடையினையுமுடைய உமாதேவி யோடு, வெப்பத்தின் மிகுதியால் மரங்கள் முதலியவை பொரிகின்ற சுடுகாட்டில், உலகுமீள உளதாக, ஆடுகின்றீர். |

| | |
|---|---|
| **4136.** காவியங் கண்மட வாளொடுங் காட்டிடைத்<br>தீயக லேந்திநின் றாடுதிர் தேன்மலர்<br>மேவிய தண்பொழில் வெள்ளடை மேவிய<br>ஆவினி லைந்துகொண் டாட்டுகந் தீரே. 6<br><br>XXXXXXXXXXXXXXX 7, 8, 9, 10, 11 | தேன் நிறைந்த மலர்கள் பொருந்திய குளிர்ச்சிமிக்க திருக்குருகாவூரில் வெள்ளடை என்னும் திருக்கோயிலில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, பசுவிலிருந்து பெறப்படும் பஞ்சகவ்வியங்களால் அபிடேகம் செய்யப்படுதலை விரும்பும் பெருமானே! குவளை மலர் போன்ற அழகிய கண்களையுடைய உமாதேவியோடு சுடுகாட்டில் கையில் தீ அகல் ஏந்தி நின்று ஆடுகின்றீர். |

## 125. திருநல்லூர்ப் பெருமணம்

பண் : அந்தாளிக்குறிஞ்சி பதிக எண் : 125

| | |
|---|---|
| **4137.** கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்<br>பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில<br>சொல்லூர்ப் பெருமணம் சூடல ரேதொண்டர்<br>நல்லூர்ப் பெருமண மேயநம் பானே. 1 | அடியார்கள் சூழ, திருநல்லூர் என்னும் திருத்தலத்தில் பெருமணம் என்னும் கோயிலில் வீற்றிருந்தருளும் சிவபெருமானே! மிக்க மணமாகிய பொருள்கள் பொருந்திய பாடல்களாகிய மலர்களைச் சூடுதலை உடையீர். அம்மிக்கல் மிதித்துச் செய்யும் சடங்குகள் பலவுடைய திருமணம் எனக்கு வேண்டா. கழுமலம் முதலாகிய பல திருத்தலங்களிலும் சென்று நான் பாடிய திருப்பதிகங்கள் வாயிலாக என்னுடைய விருப்பம் மெய்யாகத் தெரியவில்லையா? என இறைவனிடம் வினவுகின்றார். |
| **4138.** தருமண லோதஞ்சேர் தண்கட னித்திலம்<br>பருமண லாக்கொண்டு பாவைநல் லார்கள்<br>வருமணங் கூட்டி மணஞ்செயு நல்லூர்ப்<br>பெருமணத் தான்பெண்ணோர் பாகங்<br>கொண்டானே. 2 | கடலலைகள் அழித்துவிடாமல் வைத்துள்ள இயற்கைக் கரையிலுள்ள மணலோடு, பதுமை போன்ற சிறுமியர் அலைகள் வீசிக்குவித்த, குளிர்ச்சி பொருந்திய கடலில் விளைந்த முத்துக்களையே, பருத்த மணலாகக் கொண்டு சிற்றில் இழைத்து, சிறுசோறிட்டு, நறுமணம் கமழும் மலர்களை வைத்துக் கொண்டு, பாவைகட்கு மணம் செய்து விளையாடுகின்ற சிறப்பினையுடையது நல்லூர்ப் பெருமணம். அப்பெருமணத் திருக்கோயிலின்கண் வீற்றிருந்தருளும் சிவபெருமான் தன்னிற் பிரிவில்லா உமாதேவியை இடப்பாகமாகக் கொண்டருளினான். |

| | |
|---|---|
| **4139.** அன்புறு சிந்தைய ராகி யடியவர்<br>நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்<br>றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்<br>துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே. **3** | மெய்யடியார்கள் சிவபெருமானிடம் கொண்ட பத்தி காரணமாக, அனைத்துயிர்களிடத்தும் நீங்காத அன்பு நிறைந்த சிந்தையராவர். அவர்கள் சிவத்தை வழிபடுகின்ற நற்றவத்தைச் செய்வர். அவர்கள் திருநல்லூர் என்னும் திருத்தலத்தில், பெருமணம் என்னும் கோயிலில் விரும்பி வீற்றிருந்தருளுகின்ற, அனைத்துயிர் கட்கும் இன்பம் தருகின்ற எம் தந்தையாகிய சிவபெருமானின் திருவடிகளைப் போற்றி வணங்குவார்கள். அத்தகைய வழிபாடு செய்பவர்கட்கு எக்காலத்திலும் துன்பம் இல்லை. அவர்கள் நாளும் நல்லின்பத்தை மிகுவிக்கும் சிவத்தொண்டு செய்வர். |
| **4140.** வல்லியந் தோலுடை யார்ப்பது போர்ப்பது<br>கொல்லியல் வேழத் துரிவிரி கோவணம்<br>நல்லிய லார்தொழு நல்லூர்ப் பெருமணம்<br>புல்கிய வாழ்க்கையெம் புண்ணிய னார்க்கே. **4** | சிவபெருமான் வலிமையான புலியின் தோலை ஆடையாக உடுத்துள்ளவர். கொல்லும் தன்மையுடைய யானையின் தோலைப் போர்வையாகப் போர்த்தவர். விரிந்த கோவணத்தை அணிந்தவர். அப்பெருமான் சிவநெறி ஒழுகும் நற்பண்பாளர்களால் தொழப்படும் வண்ணம் திருநல்லூர் என்னும் திருத்தலத்தில் பெருமணம் என்னும் திருக்கோயிலில் விரும்பி வீற்றிருந்தருளும் வாழ்க்கையுடையவர். இதுவே புண்ணியரான சிவபெருமானின் இயல்பாகும். |
| **4141.** ஏறுகந் தீரிடு காட்டெரி யாடிவெண்<br>ணீறுகந் தீர்நிரை யார்விரி தேன்கொன்றை<br>நாறுகந் தீர்திரு நல்லூர்ப் பெருமணம்<br>வேறுகந் தீருமை கூறுகந் தீரே. **5** | இறைவனே! நீவிர் இடபத்தை விரும்பி வாகனமாகக் கொண்டுள்ளீர். நெருப்பேந்திச் சுடுகாட்டில் ஆடுகின்றீர். திருவெண்ணீற்றினை விரும்பிப் பூசியுள்ளீர். வரிசையாக அழகுடன் விளங்கும் தேன் துளித்து நறுமணம் கமழும் கொன்றை மாலையை அணிந்துள்ளீர். செல்வம் பெருகும் திருநல்லூர் என்னும் திருத்தலத்தில், பெருமணம் என்னும் திருக்கோயிலில் விரும்பி வீற்றிருந்தருளும் நீர் உமாதேவியை ஒரு கூறாகக் கொண்டு உகந்துள்ளீர். |

| | | |
|---|---|---|
| **4142.** | சிட்டப்பட்ட டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்<br>பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது<br>நட்டக்கொட் டாட்டறா நல்லூர்ப் பெருமணத்<br>திட்டப்பட் டாலொத்தி ராலெம் பிரானிரே. **6** | சிவபெருமான் நியமம் தவறாது வழிபடுபவர்கட்கு எளியர். வேடுவக் கோலத்தில் நெறிப்பட்டம் கட்டிய தலையினை உடையவர். அவர் விரும்பி வீற்றிருந்தருளும் இடமாவது நாட்டியங்களின் கொட்டு வாத்திய ஓசையும், திருவிழா முதலிய கொண்டாட்டங்களின் ஓசையும் ஒழியாத, திருநல்லூர் என்னும் திருத்தலத்தில் பெருமணம் என்னும் கோயிலாகும். எம் தலைவராகிய நீர் ஏனைய தலங்களிலும் விரும்பி வீற்றிருக்கின்றீர். |
| **4143.** | மேகத்த கண்டன்எண் தோளன்வெண் ணீற்றுமை<br>பாகத்தன் பாய்புலித் தோலொடு பந்தித்த<br>நாகத்தன் நல்லூர்ப் பெருமணத் தான்நல்ல<br>போகத்தன் யோகத்தை யேபுரிந் தானே. 7 | இறைவன் மழைமேகம் போன்ற இருண்ட திருநீல கண்டத்தன். எட்டுத் திருத்தோள்களை உடையவன். வெண்ணீற்று உமையாள் என்னும் திருநாமம் தாங்கிய அம்பிகையை ஒரு பாகமாகக் கொண்டவன். பதுங்கியிருந்து பாயும் தன்மையுடைய புலியினை உரித்து அதன் தோலினை ஆடையாக உடுத்தவன். அதன்மேல் பாம்பைக் கச்சாக இறுகக் கட்டியவன். அப்பெருமான் திருநல்லூர் என்னும் திருத்தலத்தில் பெருமணம் என்னும் திருக்கோயிலில், உயிர்கள் போகம் துய்க்கும் பொருட்டுப் போகவடிவில் விளங்குகின்றான். மேலும் மன்னுயிர்கள் நற்றவம் புரிந்து திருவடிப் பேறெய்தும் பொருட்டு யோகத்தையே புரிந்தருள்வான். |

| | | |
|---|---|---|
| **4144.** | தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை<br>உக்கிருந் தொல்க வுயர்வரைக் கீழிட்டு<br>நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்<br>புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே. 8 | இறைவனே! யாண்டும் உம்முடைய சிறந்த முழுமுதல் தன்மைக்கேற்ப வீற்றிருந் தருளுகின்றீர். முன்னாளில் இலங்கையை ஆண்ட அசுரனான இராவணன் கயிலையைப் பெயர்த்தெடுக்க முயன்றபோது, உயர்ந்த அம்மலையின்கீழ் அவன் உடல் குழைந்து நொறுங்கும்படி சிரித்துக் கொண்டிருந்தீர். இந்நாளில் திருமணநல்லூர் என்னும் திருத்தலத்தில் பெருமணம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்து அருள்புரிகின்றீர். அடியார்களாகிய நாங்கள் உம் திருவடிகளைச் சேர்வதற்கு அருள்புரிவீராக! |
| **4145.** | ஏலுந்தண் டாமரை யானு மியல்புடை<br>மாலுந்தம் மாண்பறி கின்றிலர் மாமறை<br>நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்<br>போலுந்தங் கோயில் புரிசடை யார்க்கே. 9 | குளிர்ச்சி பொருந்திய செந்தாமரையில் வீற்றிருக்கும் பிரமனும், திருமாலும் சிவபெருமானுடைய மாண்பை ஒரு சிறிதும் அறிந்திலர். இறைவனின் அடிமுடியைத் தேட முயன்றும் காண்கிலர். நால்வேதங்களை அருளிச் செய்த சிவபெருமானே அவ்வேதங்களின் உட்பொருளாய் விளங்குகின்றார் என நல்லோர் நுவல்வர். அப்பெருமான் திருநல்லூர் என்னும் திருத்தலத்தில், பெருமணம் என்னும் திருக்கோயிலில் நிலையாக வீற்றிருந்தருளுகின்றார். |
| **4146.** | ஆத ரமணொடு சாக்கியர் தாஞ்சொல்லும்<br>பேதமை கேட்டுப் பிணக்குறு வீர்வம்மின்<br>நாதனை நல்லூர்ப் பெருமண மேவிய<br>வேதன தாள்தொழ வீடெளி தாமே. 10 | இறைவனை உணரும் அறிவில்லாத சமணர்கள், பௌத்தர்கள் ஆகியோர் கூறும் புன்னெறியைக் கேட்டு, நன்னெறியாம் சித்தாந்தச் சிவநெறிக்கண் இணங்காது பிணங்கி நிற்கும் பெற்றியீர்! வாருங்கள். அனைத்துயிர்க்கும் தலைவன் சிவபெருமான். திருநல்லூர் என்னும் திருத்தலத்தில் பெருமணம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருள்கின்ற வேதங்களின் பொருளான சிவபெருமானின் திருவடிகளை வழிபடுங்கள். அவ்வாறு வழிபட்டால் வீடுபேறு எளிதில் கிட்டும். |

| | | |
|---|---|---|
| 4147. | நறும்பொழிற் காழியுண் ஞானசம் பந்தன்<br>பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை<br>உறும்பொரு ளாற்சொன்ன வொண்டமிழ் வல்லார்க்<br>கறும்பழி பாவ மவல மிலரே. 11 | நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தன், பெறுதற்கரிய முத்திப்பேற்றை அருளும், திருமணநல்லூர் என்னும் திருத்தலத்தில், பெருமணம் என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் சிவபெருமானை, அவர் திருவடியில் இரண்டறக் கலக்கும் கருத்தோடு பாடிய சிறந்த பயனைத் தரவல்ல இத்தமிழ்த் திருப்பதிகத்தைப் பக்தியுடன் ஓதவல்லவர்கட்குப் பழியும், பாவமும் அற்றொழியும். பிறப்பு இறப்புக்களாகிய துன்பம் நீங்கப் பேரின்பம் வாய்க்கும். |

## 126. திருவிடைவாய்

பண் : கொல்லி — பதிக எண் : 126

| | | |
|---|---|---|
| 4148. | மறியார் கரத்தெந்தை யம்மா துமையோடும்<br>பிறியாத பெம்மான் உறையும் இடமென்பர்<br>பொறிவாய் வரிவண்டு தன்பூம் பெடைபுல்கி<br>வெறியார் மலரில் துயிலும் விடைவாயே. 1 | மானைக் கரத்தில் ஏந்திய எந்தையாகிய பெருமான் உமையம்மையோடு பிரியாதவராய் உறையும் இடம், புள்ளிகளை உடைய இசைவண்டு, தன் பெண் வண்டைக் கூடி, மணம் பொருந்திய மலரில் துயிலும், திருவிடைவாய் என்பர். 'பிரியாத' என்பது எதுகை நோக்கி வல்லெழுத்தாகத் திரிந்தது. |
| 4149. | ஒவ்வாத என்பே யிழையா வொளிமௌலிச்<br>செவ்வான் மதிவைத் தவர்சேர் விடமென்பர்<br>எவ்வா யிலுமே டலர்கோ டலம்போது<br>வெவ்வா யரவம் மலரும் விடைவாயே. 2 | யாவரும் ஏலாத என்பையே மாலையாகப் பூண்டு இளம்பிறையைச் சிவந்த ஒளி பொருந்திய சடைமுடி மீது, செவ்வான் மீது பிறை தோன்றுமாறு போலச் சூடிய, சிவபிரானது இடம், எவ்விடத்தும் இதழ் விரிந்து விளங்கும் காந்தள் மலர்கள் கொடிய வாயினை உடைய பாம்புகளின் படங்கள் போல மலரும் திருவிடைவாய் என்பர். |
| 4150. | கரையார் கடல்நஞ் சமுதுண் டவர்கங்கைத்<br>திரையார் சடைத்தீ வண்ணர்சேர் விடமென்பர்<br>குரையார் மணியுங் குளிர்சந் தமுங்கொண்டு<br>விரையார் புனல்வந் திழியும் விடைவாயே. 3 | கரையின் கட்டுப்பாட்டிலடங்கிய கடலில் தோன்றிய நஞ்சை அமுதாக உண்டவரும், கங்கையாற்றைச் சூடியவரும், தீவண்ணருமாகிய சிவபெருமானது இடம், ஒலிக்கும் நவமணிகளையும் சந்தன மரங்களையும் கொண்டு விரைந்து வரும் ஆற்றின் நீர் நிறையும், திருவிடைவாய் என்பர். |

| | | |
|---|---|---|
| 4151. | கூசத் தழல்போல் விழியா வருகூற்றைப்<br>பாசத் தொடும்வீ ழுவுதைத் தவர்பற்றாம்<br>வாசக் கதிர்ச்சா லிவெண்சா மரையேபோல்<br>வீசக் களியன் னமல்கும் விடைவாயே. 4 | கண்டார் கண்கூசுமாறு தழல் போல் விழித்துவந்த கூற்றுவனை, பாசக் கயிற்றோடும் உதைத்த சிவபெருமானது இடம், மணம் பொருந்திய கதிர்களை உடைய நெற்பயிர் வெண்சாமரை போல வீச, அன்னம் மகிழ்வோடு உறையும் திருவிடைவாய் என்பர். |
| 4152. | திரியும் புரமூன் றையுஞ்செந் தழலுண்ண<br>வெரியம் பெய்தகுன் றவில்லி யிடமென்பர்<br>கிரியுந் தருமா ளிகைச்சூ ளிகைதன்மேல்<br>விரியுங் கொடிவான் விளிசெய் விடைவாயே. 5 | வானகத்தே திரிந்த திரிபுரங்கள் செந்தழலுண்ணுமாறு அம்பெய்த, குன்ற வில்லியாகிய சிவபெருமானது இடம், மலை போன்ற மாளிகைகளின் சூளிகைகளில் கட்டப்பெற்று விரிந்தசையும் கொடிகள் வானவரை அழைப்பது போலசையும் திருவிடைவாய் என்பர். |
| 4153. | கிள்ளை மொழியா ளையிகழ்ந் தவன்முத்தீத்<br>தள்ளித் தலைதக் கனைக்கொண் டவர்சார்வாம்<br>வள்ளி மருங்குல் நெருங்கும் முலைச்செவ்வாய்<br>வெள்ளைந் நகையார் நடஞ்செய் விடைவாயே. 6 | சிவபெருமானை விலக்கி, பார்வதிதேவியை இகழ்ந்த, தக்கனது தலையைக் கொய்து, பின் அருள் செய்த பெருமானது இடம், வள்ளிக் கொடி போன்ற இடையையும், நெருங்கிய தனபாரங்களையும், சிவந்த வாயையும், வெள்ளிய பற்களையும் உடைய, மகளிர் நடஞ்செய்யும், திருவிடைவாய் என்பர். |
| 4154. | பாதத் தொலிபா ரிடம்பாட நடஞ்செய்<br>நாதத் தொலியர் நவிலும் இடமென்பர்<br>கீதத் தொலியுங் கெழுமும் முழவோடு<br>வேதத் தொலியும் பயிலும் விடைவாயே. 7 | திருவடிப்புகழைப் பூதகணங்கள் பாட, தான் நடனம் செய்யும் ஒளிவடிவாய நாத தத்துவத்தி னிடமாகத் திகழும் சிவபெருமானது இடம், இசைப்பாடல்களின் ஒலியும், முழவொலியும் வேதஒலியும் நிறைந்த, திருவிடைவாய் என்பர். |
| 4155. | எண்ணதஅரக் கனுரத் தைநெரித்துப்<br>பண்ணார் தருபா டலுகந் தவர்பற்றாங்<br>கண்ணார் விழவிற் கடிவீ திகள்தோறும்<br>விண்ணோர் களும்வந் திறைஞ்சும் விடைவாயே. 8 | தம்மை மதியாத இராவணனது வலிமையைக் கெடுத்து, பின் அவன் பண்ணோடு யாழிசை கூட்டிப் பாடிய பாடல் கேட்டு உகந்த சிவபெருமானது இடம், இடமகன்ற வீதிகள் தோறும் திருவிழாக் காலங்களில் விண்ணவர்களும் வந்திறைஞ்சும் சிறப்பினதாகிய திருவிடைவாய் என்பர். |
| 4156. | புள்வாய் பிளந்தான் அயன்பூ முடிபாதம்<br>ஒள்வான் நிலந்தே டும்ஒரு வர்க்கிடமாந்<br>தெள்வார் புனற்செங் கழுநீர் முகைதன்னில்<br>விள்வாய் நறவுண் டுவண்டார் விடைவாயே. 9 | திருமால் பிரமன் ஆகியோர், அடியையும் முடியையும் நிலத்திலும் வானத்திலும் சென்று தேடுமாறு, உயர்ந்து நின்ற ஒப்பற்ற சிவபெருமானுக்குரிய இடம், தெளிந்த நீரோடைகளில் பூத்த செங்கழுநீர் மலர்களில் உள்ள தேனை, வாய்திறந்து உண்டு வண்டுகள் பாடும் திருவிடைவாய் என்பர். |

| | | |
|---|---|---|
| 4157. உடைஎ துமிலார் துவராடை யுடுப்போர்<br>கிடையா நெறியான் கெழுமும் இடமென்பர்<br>அடையார் புரம்வே வமுவர்க் கருள்செய்த<br>விடையார் கொடியான் அழகார் விடைவாயே. | 10 | ஆடையின்றியும் துவராடை உடுத்தும் திரியும் சமண புத்தர்களால் அறிய முடியாத, மேலான சைவநெறிக்குரிய அப்பெருமான் விரும்பி உறையும் இடம், வானில் இயங்கிய திரிபுரங்களை அழித்து அவற்றின் தலைவர்களாய மூன்று அசுரர்களுக்கு அருள் செய்த விடைக் கொடியுடையவனாகிய சிவபெருமானது அழகிய திருவிடைவாய் என்பர். |
| 4158. ஆறும் மதியும் பொதிவே ணியானூரா<br>மாறில் பெருஞ்செல் வம்மலி விடைவாயை<br>நாறும் பொழிற்கா ழியர்ஞா னசம்பந்தன்<br>கூறுந் தமிழ்வல் லவர்குற் றமற்றோரே. | 11 | கங்கை, பிறை ஆகியவற்றைச் சூடிய சடைமுடியை உடைய சிவபெருமானது ஊராகிய செல்வம் நிறைந்த திருவிடைவாயை, பொழில் சூழ்ந்த காழியில் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றிப் பரவிய இத்தமிழ் மாலையை ஓதி வழிபட வல்லவர் குற்றமற்றவராவர். |

## 127. திருக்கிளியன்னவூர்

பண் : கௌசிகம் — பதிக எண் : 127

| | | |
|---|---|---|
| 4159. தார் சிறக்கும் சடைக்கு அணி வள்ளலின்<br>சீர் சிறக்கும் துணைப்பதம் உன்னுவோர்<br>பேர் சிறக்கும்; பெரு மொழி உய் வகை<br>ஏர் சிறக்கும் – கிளியன்னவூரனே.. | 1 | கொன்றை மலர்களால் ஆன சிறந்த மாலையினைச் சூடிய அருள்வள்ளலாக விளங்குபவன் சிவபெருமான். அவனது திருவடிகளை நினைப்போருக்குத் திருவருள் என்றும் குறைவில்லாமல் சிறக்கும். அப்பெருமானே, ஏர்வளம் சிறந்து விளங்குகின்ற திருக்கிளியன்னவூரனாக விளங்கியருள்கின்றான். |
| 4160. வன்மை செய்யும் வறுமை வந்தாலுமே,<br>தன்மை இல்லவர் சார்பு இருந்தாலுமே,<br>புன்மைக் கன்னியர் பூசல் உற்றாலுமே,<br>நன்மை உற்ற கிளியன்னவூரனே. | 2 | துன்பம் தருகின்ற வறுமை ஏற்பட்டபோதிலும், அத்துன்பத்தைத் தீர்ப்பதற்கு இயலாத, பண்பில்லாதவரின் இழிநட்பே அமைகின்ற போதிலும், மாதர்தம் மையல் வலைப்பட்டுத் துன்புறநேர்கின்ற போதிலும், திருக்கிளியன்னவூரில் வீற்றிருந்தருள்கின்ற பெருமானே, திருவருள் துணையாகிய பெரு நன்மையைத் தரவல்லவன். |
| 4161. பன்னி நின்ற பனுவல் அகத்தியன்<br>உன்னி நின்று உறுத்தும் சுகத்தவன்<br>மன்னி நாகம் முகத்தவர் ஓதலும்,<br>முன்னில் நின்ற கிளியன்னவூரனே. | 3 | அகத்திய மாமுனியின் சொல்லாய், சொல்லின் சுவைதரு பொருளாய் நின்று இனிமையுற விளங்குபவன்; பாம்பினை விரும்பி அணிபவன்; வேதத்தை விளங்க உரைப்பவன்; பிச்சை ஏற்கின்ற பெருமானாக, இல்லங்கள்தோறும் எழுந்தருள்கின்றவன், திருக்கிளியன்னவூரனே. |

| | |
|---|---|
| **4162.** அன்பர் வேண்டுமவை அளி சோதியான்,<br>வன்பர் நெஞ்சில் மருவல் இல்லா முதல்,<br>துன்பம் தீர்த்துச் சுகம் கொடு கண்ணுதல்<br>இன்பம் தேக்கும் கிளியன்னவூரனே. 4 | தம்மை வேண்டுகின்ற அடியவர்கள், வேண்டியவற்றை வேண்டியவாறே தந்தருள்கின்ற சோதி உருவினன்; உண்மையான அன்புடைய அடியவர்கள் உள்ளத்தில் மறைதல் இன்றித் தோன்றி நின்று விளங்குவோன்; தீராத பிறவித் துன்பத்தை நீக்கி, பிறவாமையாகிய இறவாத பேரின்பத்தை நாளும் குறைவின்றி வழங்கியருள்பவன், திருக்கிளியன்னவூரில் வீற்றிருந்தருளுகின்ற பெருமானே. |
| **4163.** செய்யும் வண்ணம் சிரித்துப் புரம்மிசை<br>பெய்யும் வண்ணப் பெருந்தகைஆனது ஓர்<br>உய்யும் வண்ணம் இங்கு உன் அருள் நோக்கிட,<br>மெய்யும் வண்ணக் கிளியன்னவூரனே. 5 | முப்புரங்களையும் சிரித்தழித்து, அவ் அசுரர்கள் உய்யும்வண்ணம், அவர்களைத் தம் அடியவராகவும் ஏற்றருளி, மறக்கருணையும் செய்தருளிய பெருந்தகையோன், சிவபெருமான். அவனே, தனது அருள்வண்ணத்தை அடியார்கள் கண்டுய்கின்ற வண்ணம், திருக்கிளி யன்னவூரில் வீற்றிருந்தருள்கின்றான். |
| **4164.** எண் பெறா வினைக்கு ஏது செய் நின் அருள்<br>நண்பு உறாப் பவம் இயற்றிடில், அந் நெறி<br>மண் பொறா முழுச்செல்வமும் மல்குமால்<br>புண் பொறாத கிளியன்னவூரனே. 6 | எண்ணிச் சொல்லுவதற்கும் இயலாத வகையில், பேரெண்ணிக்கையில் அமைவன, உயிர்களின் தீவினைகள். ஆயினும், திருவருளின் முன்பாக நிற்கவல்ல, தீவினைகள் ஏதுமில்லை; பெருமானது திருவருளைப் பெறுகின்ற வகையே, பெருந்தவமாக அமைவது. அவ்வகையில், அவனை வழிபடுவதே உயர்வானது; மண்ணுலகினை ஆள்கின்ற பேற்றினைக் காட்டிலும், திருவருளாகிய பெருஞ்செல்வத்தை அதுவே தரவல்லது. அவ் உயர்நெறிக்கு உரியனவாக, திருக்கிளியன்னவூர் பெருமானே விளங்கி யருள்கின்றான். |
| **4165.** மூவர் ஆயினும் முக்கண்ண! – நின் அருள்<br>மேஉறாது விலக்கிடல்பாலரோ ?<br>தாஉறாது உனது ஐந்துஎழுத்து உன்னிட,<br>தேவர் ஆக்கும் கிளியன்னவூரனே! 7 | பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவராயினும், மற்றுமுள்ள யாவராயினும், சிவபெருமானின் திருவருள் துணையின்றி இயங்கார். அத் திருவருள் துணைக்குக் கருவியாவதும் திருவைந்தெழுத்தே ஆகும். அவனது திருவைந்தெழுத்தை ஓதுகின்ற அடியவர்களைத் தேவர்களாக்குகின்ற அருளாளனாகிய பெருமான், திருக்கிளி யன்னவூரில் வீற்றிருந்தருளுகின்றான். |

| | | |
|---|---|---|
| **4166.** திரம் மிகுத்த சடைமுடியான் வரை<br>உரம் மிகுத்த இராவணன் கீண்டலும்,<br>நிரம் மிகுத்து நெரித்து, அவன் ஓதலால்,<br>வரம் மிகுத்த கிளியன்னவூரனே. | 8 | இராவணன், 'தான்' என்கின்ற, தன்முனைப்பு மிகக் கொண்டான். அனைத்துக்கும் மூலமாய், முதலாய் விளங்கவல்ல சிவபெருமானை நினைய மறந்தான். பெருமான் வீற்றிருந்தருள்கின்ற கயிலை மலையினையும் பெயர்த்தெடுக்க முனைந்தான். பேராற்றல் கொண்ட, கங்கையையும் அடக்கித் தனது சடைமுடியில் வைத்தருளிய பெருமான், தனது கால்விரலால் ஊன்றி அவனை நெரித்து அருளினார். அவ்வேளையில், நரம்பையே வீணையாக்கி அவன் பாடியதால், அவனுக்கு வாள் முதலானவையும் தந்தருளிய பெருமான், திருக்கிளியன்னவூரில் வீற்றிருந்தருளுகின்றான். |
| **4167.** நீதி உற்றிடும் நான்முகன், நாரணன்,<br>பேதம் உற்று, பிரிந்து அழல்ஆய் நிமிர்<br>நாதன் உற்றன நல்மலர் பாய் இருக்<br>கீதம் ஏற்ற கிளியன்னவூரனே. | 9 | சிவபெருமானே, தமக்கும், யாவர்க்கும் முழு முதல் என்னும் பரத்துவ உண்மையினை மறந்தவர்களாக, தாமே 'பரம்' எனத் தருக்கிய நான்முகனுக்கும், திருமாலுக்கும் அளவரிய பெருமானாகி, அழல் உருவாக நின்ற பெருமான், திருக்கிளியன்னவூரில் வீற்றிருந்தருளுகின்றான். |
| **4168.** மங்கையர்க்கு அரசோடு குலச்சிறை,<br>"பொங்கு அழல்சுரம் போக்கு!" என, பூழியன்<br>சங்கை மாற்றி, சமணரைத் தாழ்த்தவும்<br>இங்கு உரைத்த கிளியன்னவூரனே. | 10 | பாண்டிமாதேவியாகிய மங்கையர்க்கரசியாரும், அமைச்சராகிய குலச்சிறையாரும் வேண்டியபடி, பாண்டியனின் கொடிய வெப்பு நோயினை, திருவெண்ணீற்றுப் பதிகத்தால் தீர்த்தருளவும், சமணரின் வலிவினை அழித்தொழிக்கவும் அருளிய பெருமானே, திருக்கிளியன்னவூரில் வீற்றிருந்தருள்கின்றான். |
| **4169.** நிறைய வாழ் கிளியன்னவூர் ஈசனை<br>உறையும் ஞானசம்பந்தன் சொல் சீரினை<br>அறைய நின்றனபத்தும் வல்லார்க்குமே<br>குறை இலாது, கொடுமை தவிர்வரே. | 11 | திருவருளின் பொலிவாக, திருக்கிளியன்னவூரில் நிறைவாக வீற்றிருந்தருள் கின்றவன் சிவபெருமான்; ஞானசம்பந்தனாகிய யாம் அவனை, அருள்நிறை உயர்மொழி கொண்டு, பத்துத் திருப்பாடல்களால் பாடிப் பரவியுள்ளோம். இத் திருப்பாடல்களைப் பாடவல்ல அடியவர்கள், பிறவியென்னும் கொடுமை நீங்கப் பெறுவர். அப் பெருநிலைக்குத் துணையாகின்ற திருவருளாகிய செல்வம் நிறையப் பெறுவர். |

## மூன்றாம் திருமுறை
# பாட்டு முதற்குறிப்பகராதி

| பாடல் | பாடல் எண் |
|---|---|
| காரினாரமர் | 3166 |
| காருலாவிய | 2818 |
| காரூருமணி | 3493 |
| கார்மலிகொன் | 3443 |
| கார்மலிநெறி | 3740 |
| கார்வணன் | 3039 |
| காலமுஞாயி | 3026 |
| காலனையோருதையில் | 3450 |
| காலன்றன் | 3263 |
| காலினல | 3579 |
| காலேமேலே | 4065 |
| காலைமட | 3583 |
| காலையார் | 3096 |
| காலையொடு | 3572 |
| காவியங்கண் | 4136 |
| காவியங்கருங் | 2813 |
| காவியநற் | 3910 |
| கானணவும் | 3444 |
| கானமார்கரியின் | 3164 |
| கானமார்வாழ்க்கையான் | 3157 |
| கானமுறு | 3596 |
| கானருகும் | 3474 |
| கானலங்கழ | 4078 |
| கானலில்வி | 3030 |
| கானலைக்கும் | 3176 |
| கானல்வந்து | 3265 |
| கான்முக | 3742 |
| **கி** | |
| கிளருந்திங் | 3250 |
| கிள்ளைமொழி | 4153 |
| **கீ** | |
| கீதமுன்னிசை | 2977 |
| கீறுமுடைகோவ | 3699 |
| **கு** | |
| குடங்கையி | 3530 |
| குட்டத்துங் | 3473 |
| குணக்குந் | 3483 |

| பாடல் | பாடல் எண் |
|---|---|
| குண்டமணரா | 3666 |
| குண்டரும் | 3944 |
| குண்டாடிச் | 3501 |
| குண்டாடுஞ் | 3392 |
| குண்டிகைக்கையினர் | 3148 |
| குண்டிகைக்கையுடைக் | 3179 |
| குண்டிகை | 3877 |
| குரக்கினம் | 2863 |
| குருந்தமேறிக் | 3281 |
| குருந்தொடு | 3013 |
| குலையினார் | 2858 |
| குவளைகண் | 2859 |
| குழலின்வரி | 3683 |
| குறைக்கொண்டார் | 3476 |
| குறைவளைவது | 3058 |
| குற்றநீகு | 3352 |
| குற்றமிலா | 4130 |
| குன்றுகள் | 3926 |
| **கூ** | |
| கூசத்தழல் | 4151 |
| கூசமிலாத | 3952 |
| கூசுமாம | 4083 |
| கூடரவ | 3685 |
| கூடலால | 3966 |
| கூட்டினார் | 3215 |
| கூராரலிரைத் | 3478 |
| கூருமாலை | 3367 |
| கூறணிந்தார் | 3494 |
| கூற்றுதைத் | 3225 |
| **கே** | |
| கேள்வியர் | 2889 |
| **கை** | |
| கையதுவீழி | 2838 |
| கையமரும் | 3938 |
| கையார்வெண்மழுவா | 3386 |
| கையிருபதோடு | 3566 |
| கையிலுண்ணூங் | 3370 |

## மூன்றாம் திருமுறை
# தல அட்டவணை

| வ.எண் | தலம் | பதிக எண் | பதிக தொடக்கம் |
|---|---|---|---|
| 1. | அம்பர் | 19 | எரிதரவனல் |
| 2. | அம்பர்மாகாளம் | 93 | படியுளார் |
| 3. | அரதைப்பெரும்பாழி | 30 | பைத்தபாம்பு |
| 4. | அவளிவணல்லூர் | 82 | கொம்பிரிய |
| 5. | ஆரூர் | 45 | அந்தமாய் |
| 6. | ஆலவாய் | 47 | காட்டுமா |
| 7. | ,, | 51 | செய்யனே |
| 8. | ,, | 52 | வீடலாலவாய் |
| 9. | ,, | 108 | வேதவேள்வி |
| 10. | ,, | 115 | ஆலநீழலு |
| 11. | ,, | 39 | மானினேர்விழி |
| 12. | ,, | 120 | மங்கையர்க்கரசி |
| 13. | ஆவடுதுறை | 4 | இடரினுந் |
| 14. | ஆனைக்கா | 53 | வானைக்காவில் |
| 15. | இராமேச்சுரம் | 10 | அலைவளர் |
| 16. | ,, | 101 | திரிதருமா |
| 17. | இன்னம்பர் | 95 | எண்டிசைக்கும் |
| 18. | உசாத்தானம் | 33 | நீரிடைத் |
| 19. | ஏடகம் | 32 | வன்னியுமத் |
| 20. | ஒற்றியூர் | 57 | விடையவன் |
| 21. | ஓமமாம்புலியூர் | 122 | பூங்கொடி |
| 22. | கச்சி ஏகம்பம் | 41 | கருவார் |
| 23. | ,, | 114 | பாயுமால் |
| 24. | கச்சிநெறிக்காரைக்காடு | 65 | வாரணவுமுலை |
| 25. | கடவூர் | 8 | சடையுடை |
| 26. | கண்டியூர் | 38 | வினவினேனறி |
| 27. | கயிலாயம் | 68 | வாளவரிகோள |
| 28. | கயிலாயமும், ஆனைக்காவும் மயேந்திரமும், ஆரூரும் | 109 | மண்ணது |
| 29. | கருக்குடி | 21 | நனவிலும் |
| 30. | கருகாவூர் | 46 | முத்திலங்கு |
| 31. | கலிக்காமூர் | 105 | மடல்வரை |
| 32. | கழிப்பாலை | 44 | வெந்தகுங்கிலிய |
| 33. | காட்டுப்பள்ளி | 29 | வாருமன்னும் |
| 34. | காழி | 43 | சந்தமார் |
| 35. | காழி ,, | 117 | யாமாமா |
| 36. | ,, கொச்சைவயம் | 89 | திருந்துமா |
| 37. | ,, கழுமலம் | 24 | மண்ணில்நல்ல |
| 38. | ,, ,, | 113 | உற்றுமை |

| வ.எண் | தலம் | பதிக எண் | பதிக தொடக்கம் |
|---|---|---|---|
| 39. | ,, ,, | 118 | மடல்மலி |
| 40. | „ சண்பைநகர் | 75 | எந்தமது |
| 41. | „ தோணிபுரம் | 81 | சங்கமரு |
| 42. | ,, ,, | 100 | கரும்பமர் |
| 43. | „ புறவம் | 84 | பெண்ணிய |
| 44. | „ வெங்குரு | 94 | விண்ணவர் |
| 45. | „ பிரமபுரம் | 37 | கரமுனம்மல |
| 46. | ,, ,, | 56 | இறையவன் |
| 47. | ,, ,, | 67 | சுரர்உலகு |
| 48. | ,, ,, | 110 | வரமதே |
| 49. | „ புகலி | 7 | கண்ணுதலானும் |
| 50. | ,, ,, | 3 | இயலிசை |
| 51. | „ பூந்தராய் | 2 | பந்துசேர் |
| 52. | ,, ,, | 5 | தக்கன்வேள்வி |
| 53. | ,, ,, | 13 | மின்னனவெயிறு |
| 54. | காளத்தி | 36 | சந்தமார் |
| 55. | ,, ,, | 69 | வானவர்கள் |
| 56. | கானப்பேர் | 26 | பிடியெலாம் |
| 57. | குடமூக்கு | 59 | அரவிரிகோடல் |
| 58. | குரங்காடுதுறை | 91 | கோங்கமே |
| 59. | குருகாவூர்வெள்ளடை | 124 | சுண்ணவெண் |
| 60. | கொள்ளம்புதூர் | 6 | கொட்டமேகமழு |
| 61. | கொள்ளிக்காடு | 16 | நிணம்படுசுடலை |
| 62. | கோகரணம் | 79 | என்றுமரி |
| 63. | கோட்டாறு | 12 | வேதியன்விண் |
| 64. | கோணமலை | 123 | நிரைகழல் |
| 65. | கோயில் | 1 | ஆடினாய்நறு |
| 66. | சக்கரப்பள்ளி | 27 | படையினார் |
| 67. | சாத்தமங்கை | 58 | திருமலர்க் |
| 68. | சிற்றேமம் | 42 | நிறைவெண் |
| 69. | சிறுகுடி | 97 | திடமலிமதி |
| 70. | செங்காட்டங்குடி | 63 | பைங்கோட்டு |
| 71. | சேறை | 86 | முறியுறுநிற |
| 72. | தண்டலைநீணெறி | 50 | விரும்புந் |
| 73. | திருந்துதேவன்குடி | 25 | மருந்துவேண்டில் |
| 74. | துருத்தியும், வேள்விக்குடியும் | 90 | ஓங்கிமேல் |
| 75. | தென்குடித்திட்டை | 35 | முன்னைநான் |
| 76. | தேவூர் | 74 | காடுபயில் |
| 77. | நல்லூர் | 83 | வண்டிரிய |
| 78. | நல்லூர்பெருமணம் | 125 | கல்லூர்ப் |
| 79. | நள்ளாறு | 87 | தளிரிள |
| 80. | நாரையூர் | 102 | காம்பினை |

| வ.எண் | தலம் | பதிக எண் | பதிக தொடக்கம் |
|---|---|---|---|
| 81. | | 107 | கடலிடை |
| 82. | நெல்வெண்ணெய் | 96 | நல்வெணெய் |
| 83. | நெல்வேலி | 92 | மருந்தவை |
| 84. | பட்டீச்சரம் | 73 | பாடன்மறை |
| 85. | பந்தணைநல்லூர் | 121 | இடறினார் |
| 86. | பரிதிநியமம் | 104 | விண்கொண்ட |
| 87. | பல்லவனீச்சரம் | 112 | பரசுபாணி |
| 88. | பனந்தாள் | 62 | கண்பொலி |
| 89. | புனவாயில் | 11 | மின்னியல் |
| 90. | பூவணம் | 20 | மாதமர்னே |
| 91. | பெருவேளூர் | 64 | அண்ணாவும் |
| 92. | பைஞ்ஞீலி | 14 | ஆரிடம்பாடிலர் |
| 93. | மயிலாடுதுறை | 70 | ஏனவெயி |
| 94. | மயேந்திரப்பள்ளி | 31 | திரைதருபவள |
| 95. | மழபாடி | 28 | காலையார் |
| 96. | ,, | 48 | அங்கையார் |
| 97. | மறைக்காடு | 76 | கற்பொலி |
| 98. | மாகறல் | 72 | விங்குவிளை |
| 99. | மாணிகுழி | 77 | பொன்னியல் |
| 100. | முதுகுன்றம் | 34 | வண்ணமா |
| 101. | ,, | 99 | முரசதிர்ந் |
| 102. | வக்கரை | 60 | கறையணி |
| 103. | வலஞ்சுழி | 106 | பள்ளமதாய |
| 104. | வலம்புரம் | 103 | கொடியுடை |
| 105. | வான்மியூர் | 55 | விரையார்கொ |
| 106. | விசயமங்கை | 17 | மருவமர் |
| 107. | விளமர் | 88 | மத்தக |
| 108. | விற்கோலம் | 23 | உருவினார் |
| 109. | வீழிமிழலை | 9 | கேள்வியர் |
| 110. | ,, | 80 | சீர்மருவு |
| 111. | ,, | 85 | மட்டொளி |
| 112. | ,, | 98 | வெண்மதி |
| 113. | ,, | 111 | வேலினேர்தரு |
| 114. | ,, | 116 | துன்றுகொன்றை |
| 115. | ,, | 119 | புள்ளித்தோல் |
| 116. | வெண்காடு | 15 | மந்திரமறை |
| 117. | வெண்டுறை | 61 | ஆதியன் |
| 118. | வேட்டக்குடி | 66 | வண்டிரைக்கும் |
| 119. | வேதிகுடி | 78 | நீறுவரி |
| 120. | வைகல் | 18 | துளமதியுடை |
| 121. | வைகாவூர் | 71 | கோழைமிடறு |
| 122. | விடைவாய் | 126 | மறியார் |
| 123. | பொது | 22 | துஞ்சலும் |
| 124. | ,, | 49 | காதலாகி |
| 125. | ,, | 54 | வாழ்க அந்தணர் |
| 126. | ,, | 40 | கல்லானீழல் |



இடரினும் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்
கடல்தனில் அமுதொடு கலந்தநஞ்சை
மிடறினில் அடக்கிய வேதியனே

இதுவோஎமை ஆளுமா றீவதொன்றெமக் கில்லையேல்
அதுவோவுன தின்னருள் ஆவடுதுறை அரனே.



அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்
றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே


பன்னிரு திருமுறை ஆய்வு மையம்,
கற்பகம் பல்கலைக்கழகம், கோயமுத்தூர்.